அதாவது - களவிலேதகணேறினபடி. இவள் கட்டிவைத் தடிச்கப்புக்கவாறே, "தொழுகையும்" என்கிறபடியே தொழத் தொடங்குமே. எல்லாரையும் தொழுவித்துக்கொள்ளு மவனிறே தொழுகிறான்.

இத்தசையில் அபிமதஸித்திக்கு அநுசலியேஸாதநம்" என் றறியுமவனிறே [அதிசஞ்சலசேஷ்டித - அதிசஞ்சலசேஷ்டித] துருதுருக் கையாகக்கொண்டு ஊர்பூசல்விளைத்தவனல்லையோ. [இத்யுக்த்வா - இத் யுக்த்வா] ஒருசொல்லாலே விலங்கிட்டுவைத்து. [அதநிஜம்கர்மஸாசகார - அதநிஜம்கர்மஸாசகார] அவள்தான் கறப்பது கடைவதாகத் தொடங்கினாள். [குடும்பிநீ - குடும்பிநீ] இவனைப்போலே நியமிக்க வேண்டுவது அநேகமுண்டிறே.

---

என்கிறபடியே-எட்டுமிரண்டும் பத்தாய்-பக்தியைச் சொன்னபடி. "எட்டு" என்று - திருவஷ்டாக்ஷரமாய் அத்தாலேயாதல், "இர ண்டு" என்று - வாக்யத்வயமாய் அத்தாலே யாதல் வசீகரித்தெ ன்னவுமாம். அல்லது, எட்டுமிரண்டுமறியாதாருக்குக்கட்டப்போ காதே. (பெருமாயன்) அவன் நினைக்கவொண்ணாத ஆச்சாயசேஷ் டிதங்களை யுடையவன். அதாவது - * அழுகையு மஞ்சிநோக்கு மந்நோக்கும் தொழுகையுமான விச்சேஷ்டிதங்கள்; [அழுகையும்] உரலோடே கட்டிவைத்தவாறேயழ, அவள் வாய்வாயென்றவா றேஅஞ்சி, பேதைத்தனந்தோற்ற அவளைப்பார்க்கும்; [அந்நோக் கும்] "தொடுவேசெய்திளவாய்ச்சியர் கண்ணினுள் விடவேசெ ய்து விழிக்கும்" என்கிறபடியே-பெண்களுடையத் திரண்டுவருகை க்காகக் களவாகிற ஸாதநத்தை யநுஷ்டித்து, கள்ளனைக்காண்கை

---

அடித்தாலும் கள்ளனென்றடித்தால் நமககிஷ்டம், அத்தால் நம க்குபயமில்லையென்றிருந்தானென்றபடி. "தொழுகையுமிவை கண் டவசோதை" என்கிறபடியே-தாயைத்தொழத்தொடங்கினு னெ ன்கிறார் (இவளித்யாதி.)

தொழுதாலடியாரோவென்ன (இத்தசையிலித்யாதி.) இவற் றையெல்லாம் நினைத்து, "அதிசஞ்சலசேஷ்டிதன்" என்கிறானென் றுகருத்து. பலிதார்த்தம் (துருதுருக்கையித்யாதி.) "இத்யுக்த்வா" என்று - நிஜம்கர்மகரணத்துக்கு ஹேதுவாக அநுவதிக்கையாலே அத்தையு மொருபந்தமாக அருளிச்செய்கிறார் (ஒருசொல்லாலே யித்யாதி.) இப்படி யிவன்சொல்லுக்குப் பரதந்த்ரனு யிருக்கையா லே தானே கட்டுண்ணப்பண்ணினான் என்றுகருத்து. கட்டாதே அடியாதே அவனுடைய அண்டையிலேதானே யிருக்க வொண் ணாதோவென்ன; அருளிச்செய்கிறார் (இவனையித்யாதி.)

(பெருமாயன்) நிரதிசயாஶ்சர்யயுக்தன். இத்தால் - அவாப்த ஸமஸ்தகாமனுக்கு 'ஒருகுறை யுண்டாய், அதுதன்னை க்ஷுத்ர ரைப்போலே களவாகிற வழியல்லாவழியிலேயிழிந்து, ஸர்வ சக்தியானவவன்றான் அதுதன்னையும்தலைக்கட்டமாட்டாதேவாய துகையதாக அகப்பட்டுக்கட்டுண்டிடியுண்டு, "பையவேநிலையும்" என்றுஉடம்புவெளுத்து நின்றநிலையளவுஞ்செல்லநினைக்கிறார்.

(என்னப்பனில்) ஆழ்வார்இவர்க்குத்தேஶ்யராய்நிற்க, இங்ங னேசொல்லுவானென்னென்னில்; பகவத்ஸம்பந்தமறவார்த்தை சொன்னாராகில்,ஆழ்வாரோட்டைஸம்பந்தத்தையறுத்துக்கொண் டாராவரிறே; அத்தாலேசொல்லுகிறார். அதவா, "పుంసాంద్దృష్టిచిత్తాప హారిణమ్""பும்ஸாம்த்ருஷ்டிசித்தாபஹாரிணம்" என்கிறபடியே-அவ் வருகே போவாரையும் துவக்கவல்ல விஷயமாகையாலே, துவக் குண்டு சொல்லுகிறானென்னவுமாம்.

---

எல்லார்க்கும் அஸாதாரணமாகையாலே ஒத்தபருவத்திற்பெண்க ளெல்லாரும்வந்துதிரள, அவர்கள்முகத்திலே தௌர்த்யகர்ப்ப மானகடாக்ஷத்தைப் பண்ணுநிற்கும். இசையாதவர்களை இசையும் படி பார்த்தும், இசைந்தவர்களை அறவிலைசெய்து தரும்படி பார் த்தும், தான்பண்டுசெய்த மறத்தாலே மாலிந்ய முடையவர்க ளை * அமலங்களாக விழித்தும், இப்படி நேக்கேயாய்ச்செல்லும். [தொழுகையும்] மககள் மனம்மாதர்க்குத். தெரியு மாகையாலே இவனுடைய தௌர்த்யத்தை யறிந்து அவள்அசசமுறுத்த,தொ ழுகையும்-அவளைப்பார்த்து அஞ்சலிபண்ணும். பொடிந்தவர்களு க்கு ப்ரஸாதமாவது அஞ்சலியே யென்றிருக்கும். "క్షిప్రందేవప్రసా దీ" "అన్తరేణాఞ్జలింబద్ధ్వా లక్ష్మణస్యప్రసాదనాత్" "க்ஷிப்ரம்தேவப்ரஸாதி நீ" "அந்தரேணாஞ்ஜலிம்பத்வாலக்ஷ்மணஸ்யப்ரஸாதநாத்" என்கி றபடியே. [இவைகண்டவசோதை தொல்லையின்பத்திறுதிகண்டா ள்] ஆத்மாநுபந்தியானஸுகத்தினுடையஎல்லையைக் கண்டாள். நித்யமுக்தர் ஜ்ஞாநசக்த்யாதிகளைக்கண்டு அநுபவித்தவர்கள்; இவள் ஸௌசில்யாதிகளைக்கண்டநுபவித்தவள்.

---

கட்டுண்கைமுதலானவை ஆஶ்சர்யங்களானபடியை உப பாதிக்கிறார் (இத்தாலித்யாதி.) அவரப்பனில் என்று ஸம்பந்த மறச்சொல்லாதே "என்னப்பனில்" என்னக்கூடுமோவெனகிற சங்கையை யநுவதிக்கிறார் ( ஆழ்வாரித்யாதி. ) ( ஸம்பந்த மறவார்த்தை சொன்னாராகில்) என்று பரிஹார வாக்யத்திலே யிருக்கையாலே இப்படிதாத்பர்யம் கொள்ளவேணும். ஸம்பந்தம றச்சொன்னாராகில் ஆழ்வாருக்குவைமுக்யம் வருமென்றுபரிஹரிக் கிறார் (பகவதித்யாதி.) அவரப்பனில் - என்றுசொல்ல வந்தவரோ யாகிலும் அவசமாகச் சொன்னொன்று பரிஹாராந்தர மருளிச் செய்கிறார்( அதவேத்யாதி.)

(என்னப்பனில்நண்ணி) பகவத்விஷயத்தில்நின்றும் ஆழ்வார்பக்கலிலேகிட்டி. சப்தாதிவிஷயப்ராவண்யங்களைவிட்டு பகவத்விஷயத்தைக் கிட்டுகையிலுண்டான அருமைபோரும், ப்ரதமாவதியான பகவத்விஷயத்தைவிட்டுப் புருஷார்த்தத்தில் சரமாவதியான ததீயசேஷத்வத்தைக கிட்டுகை; சப்தாதிவிஷயங்களை விடலாம் அதின்தோஷதர்ஶநத்தாலே, இங்கு அங்ஙனொரு தோஷங்காண விரகில்லையாகையாலே இது அதிலுமரிது.

(தென்குருகூர்நம்பி) "நல்கியென்னைவிடான் நம்பிநம்பி" என்று ஆழ்வார்தாம் உத்தேஶ்யமாகப்பற்றினவிஷயத்தின் பூர்த்தியளவன்றிறே இவர்பற்றினவிஷயத்தின்பூர்த்தி. எங்ஙனேயென்னில்; பகவத்விஷயத்தைப்பற்றினால் அதினெல்லையான ஆழ்வாரளவும் வரவேண்டியிருக்கும், ஆழ்வாரைப்பற்றினால் அவ்வருகுகந்தவ்யபூமி யில்லையிறே. "ஆசார்யர்களை 'நம்பி' என்னக்கற்பித்தார் ஸ்ரீமதுரகவிகளிறே" என்று ஜீயரருளிச்செய்வர். (என்றக்கால்) மநோவாக்காயங்கள்மூன்றும் வேண்டியிருக்கும் பகவத்விஷயத்துக்கு, ஒருக்திமாத்ரமேயமையும் இவ்விஷயத்துக்கு. பூர்த்தியால்வந்த ஏற்றமேயன்று, ஸௌலப்யத்தாலு மேற்றமுண்டென்கை.

(என்னப்பனில்) என்னுயனில். (பெருமாயனென்னப்பனில்) இப்போதை இவருடையபதாஸ்யதை, "[Grantha]" "குணைர்த்தாஸ்யமுபாகத:" என்கிறபடியே அத்தலையில் குணசேஷ்டிதங்களுக்குததோற்றதாய்த்து;இவரையுமுட்படத் தோற்பிக்கிறதிறே இவ்வபதாநம். இனி ஆழ்வாரைப்போலே இளநெஞ்சல்லாமையாலே மீண்டாரித்தனே. (என்னப்பனில்நண்ணி) அவனிற் காட்டில் ஆழ்வார்பக்கலிலே நெஞ்சைவைத்து. சப்தாதி விஷயங்களின் போக்யதையையறுத்துத தன்பக்கலிலேயாக்கிக்கொள்ளும்-பகவத்வைலக்ஷண்யம்; பகவத்விஷயபோக்யதையில்நின்றும் மீட்டுத் தன்பககலிலே யாக்கிகொண்டது ஆழ்வார்வைலக்ஷண்யம்.

---

"என்னப்பனில்-தென்குருகூர்" என்றால போதாதோ"நண்ணி" என்பானென்னென்ன; அருமைதோற்றச் சொல்லுகிறுரென்று, அவ்வருமையை தர்ஷ்டாநதமுகேந உபபாதிக்கிறார் (சப்தாதீத்யாதி.) கீழ் - சப்தாதிகளோடேஸாம்யந்தோன்ற வருளிச்செய்து, ஆதிக்யந்தோன்ற அர்த்தாந்தர மருளிச்செய்கிறார் (சப்தாதிவிஷயங்களித்யாதி.)

"என்னப்பனில் - அமுதூறும்" என்கிறபடியேகுருகூர்ச்சடகோபன் என்னுமல், "குருகூர்நம்பி" என்பானென்னென்ன; அருளிச்செய்கிறார் (நல்கிஇத்யாதி.) கற்பித்தார் - அப்யஸிப்பித்தார். ஸௌலப்யமென்றது-ஏககரண ஸாத்யத்வத்தாலே வந்த ஸௌலப்யமென்றபடி.

(அண்ணிக்கும்) தித்திக்கும். பகவத்விஷயத்தை யநுபவித்தால் ஆழ்வார்க்குப்பிறக்குமாநந்தமெல்லாம் இவ்விஷயத்திலே ஒருக்திமாத்ரத்தாலே யெனக்கு வித்தித்தது.

(அமுதூறும்) அமுதூற்றுமாறுதே நிற்கும். "ஸசபுநராவர்த்ததே" "நசபுநராவர்த்ததே" என்று - அவ்விஷயம் ஆழ்வார்க்கு தத்ப்ரஸாதத்தாலே நித்யமாய்ச் செல்லுமாப்போலே, எனக்கு ஆழ்வார் ப்ரஸாதத்தாலே நித்யாபூர்வமாய்ச் செல்லப்பெற்றேன்.

(என்னாவுக்கே) இதுபின்னை எங்களுக்கு ரஸிக்கிறதில்லையீ! என்னில; முதலடியான பகவத்விஷயமுங்கூட ரஸியாதிருக்கிற வுங்களுக்கு, அதினெல்லையிலேநிற்கிற வெனக்குரஸிக்குமாப்போலே ரஸிக்குமோ. (என்னாவுக்கே) அநாதிகாலம்விஷயாந்தரங்கள் ரஸித்துப்போந்த என்னாவுக்கே இவ்விஷயம் ரஸிக்கிறதென்றுமாம். ... ... ... ... ... (க)

---

(தென்குருகூர்நம்பியென்றக்கா லண்ணிக்கும்) குறுங்குடிநம்பியைக்காட்டில் குருகூர்நம்பியைவ்யாவர்த்திக்கிறது. அவனுக்குப் பூர்த்தி ஜ்ஞாந சக்த்யாதிகளாலே; இவருக்குப்பூர்த்தி ஜ்ஞாநபக்த்யாதிகளாலே. ஜகத்தைத்தனக்காக்கும்படியான குணங்கள் அவனது; அவன்றன்னைத் தனக்காக்கும்படியான குணங்கள் இவரது. (நண்ணித்தென்குருகூர்நம்பியென்றக்கால்) ஆழ்வார் பக்கலிலே நெஞ்சைவைத்து ஆழ்வார்திருநாமத்தைச்சொன்னால்.

(அண்ணிக்குமமுதூறுமென்னாவுக்கே) நினைத்தநெஞ்சும் தித்தித்து, சொன்ன நாக்கும்தித்தித்து வாராநின்றது. (என்றக்காலமுதூறும்) உச்சாரணம் ஸகர்த்தாய், ஸாரஸ்யம்ஸதாகால வர்த்தியாநின்றது. இனி, பகவத்விஷயத்தை நினைக்கைக்கு நெஞ்சுமில்லை, சொல்லுகைக்கு நாக்குமில்லை. இந்தஸாரஸ்யம் எங்களுக்குப் பிறக்கக் காண்கிறிலோமீயென்னில் (என்னாவுக்கே) உங்களைப்போலே பகவத்விஷயமும்ரஸித்து ஆழ்வாரும் ரஸிக்கும் நாவன்றே என்னது, அடியேபிடித்து ஆழ்வாருடைய ஸாரஸ்யத்திலேபழகினநாவன்றோ. (என்னாவுக்கே) இவ்வம்சத்தில் கரணியானஎன்னோடு கரணங்களோடு வாசியில்லை. (என்னாவுக்கே) அவர்தாம், "என்னெஞ்சினால் நோக்கிக்காணீர்" என்றாப்போலே இவரும் "என்னாவுக்கே" என்கிறார். ... ... ... (க)

---

"ஊறும்" என்றவிடத்தில் வர்த்தமாநதாத்பர்ய மருளிச்செய்கிறார் (அமுதூற்றித்யாதி.) இத்தைஸ்லோகமாக உபபாதிக்கிறார் (நசேத்யாதி.) "என்னா" என்றதுக்கு இரண்டுதாத்பர்யம்; பாகவத நிஷ்டனென்றும், விஷயாந்தரப்ரவணனென்றும்; முந்தின வர்த்தத்தை சங்காபூர்வகமாக அருளிச்செய்கிறார் (இதுபின்னையித்யாதி;) இரண்டாவது (அநாதிகாலமித்யாதி) விரோதிவ்யஸநத்தை அநுபவிக்கிறஎன்னாவுக்கு இதுரஸிக்கும் படியென்னென்று வித்தராகிறாரென்றுகருத்து. ... ... ... (க).

அ.—இரண்டாம்பாட்டு. முதற்பாட்டில் - "ஆழ்வார்" என்ருல் தமக்கு ரஸிக்கிறபடிசொன்ஞர்;இப்பாட்டில்-அவருடையபாசுரமே தேஹயாத்ராயாமபடி தாரகமானபடியைச்சொல்லுகிருர்.

அ.—இரண்டாம்பாட்டு. (நாவிஞலிதயாதி) ஆழ்வார்கள் பகவத்விஷயத்திலே ஆசார்யப்ரதிபத்தி பண்ணிப் போந்தார்கள்; இவர் ஆசார்யவிஷயத்திலே பகவத்ப்ரதிபத்திபண்ணிப்போருகிறவராய்த்து. பகவதவிஷயத்திலும் ஆழ்வார்க்குண்டானவாசி;-"యది శక్నోషిగన్తుం త్వం సఖిచఞ్చల చేష్టిత। ఇత్యుక్త్వాత్ర నిజం కర్మ సాసకారకుటుమ్బినీ" "யதிசக்நோஷிகச்சத்வமதிசஞ்சல சேஷ்டித। இத்யுக்த்வாதநிஜம் கர்மஸாசகாரகுடும்பிநீ" என்கிறபடியே இடைச்சிகட்ட, வல்வல்லையாகில நான்கட்டினகட்டை யவிழ்த்துப் போய்க்காணும்,உன்துரு துருக்கைத்தனத்திலே யறப்பட்டதீ! என்றுகையாலும்வாயாலும்கட்டி, கறப்பனகடைவன குவாலாகையாலேபெரியதிருநாளிலும்ஸந்த்யாவந்தநம் முட்டாமல் நடத்துவாரைப்போலே, அவள்தன்கார்யத்திலேபோஞளென்றுசொல்லுகையாலே,ஓரபலேகட்ட அது அவிழ்க்கமாட்டாம விருந்தான்; கட்டினவர்களே இரங்கி யவிழ்க்கவேணுமென்றிறே அவன் நினைவு. அப்படியே ஆழ்வாரும், இவனுடைய ஸௌசீல்ய குணத்தாலே கட்டுண்டு, "எத்திறம்" என்று போகமாட்டாமலிருந்தார்; இவர் அப்படியன்றிக்கே ஆழ்வாரீடுபட்ட அபதாநத்தை யநுஸந்தித்திருக்கச்செய்தேயும் அதில் ஆழங்கால் படாதே அத்தைவிட்டு ஆழ்வாருடைய போக்யதையிலே நின்றவராய்த்து.

கீழிற்பாட்டிலே, "நண்ணித்தென் குருகூர் நம்பியென்றக்கால் அண்ணிக்கு மமுதூறுமென்னாவுக்கே" என்று - ஆழ்வார்பக்கல் ஸ்மர்திஸாரஸ்யத்தையும் ஸங்கீர்த்தந ஸாரஸ்யத்தையும் சொல்லக்கேட்டவர்கள், நாட்டாரடைய பகவத்விஷயத்தையே ஸ்மர்த்தவ்யமாகவும் ஸங்கீர்த்தநீயமாகவும் சொல்லாநிற்க, நீர் ஆழ்வாரை இவையிரண்டுமாக வநுஸந்திப்பானென், பகவத்விஷயத்திலேயும் அந்வயிக்கப்பார்த்தாலோ வென்ன; அதுக்கு இப்பாட்டாலே உத்தரஞ்சொல்லுகிருர்.

---

அ.—ஸங்கத்யர்த்தம வ்ர்த்தவர்த்திஷ்யமாண கீர்த்தநம்(முதற்பாட்டிலித்யாதி.) கீழ்ப்பாட்டில் ஆழ்வாருடைய போக்யதையையும், அநந்தரம் தத்ஸம்பந்தத்தையுடைய ப்ரபந்தமே தமக்குதாரகமென்கையையும் சொல்லுகிருரென்று கருத்து. (அவருடைய பாசுரம்) என்று திருவாய்மொழியும் கண்ணிநுண் சிறுத்தாம்பும், ஸம்பந்தஸாமாந்ய ஷஷ்டியாகையாலே, "தேஹயாத்ராயாம்படி" என்றத்தை விவரிக்கிருர் (தாரகமானபடியை என்றவிதில்.)

நாவினால்நவிற்றின்பமெய்தினேன்;
மேவினேனவன்பொன்னடிமெய்ம்மையே
தேவுமற்றறியேன்குருகூர்நம்பி
பாவினின்னிசைபாடித்திரிவனே. (௨)

ப - ரை.—நவிற்று - பகவத் விஷயத்தில் உபகாரகனை ஸ்தோத்ரம் பண்ணக்கடவ, நாவினால் - நாவைக்கொண்டு, இன்பம் - நிரதிசயாநந்தத்தை, எய்தினேன் - பெற்றேன்; அவன் பொன் அடி - ஆழ்வாருடைய ஸ்ப்ருஹணீயமான திருவடிகளை, மேவினேன் - பொருந்தினேன், மெய்ம்மையே - ஸத்யமாக; மற்று - ஆழ்வாரொழிய வேறொரு, தேவு - தெய்வத்தை, அறியேன் - அறிகிலேன்; குருகூர் - திருநகரிக்கு, நம்பி - நிர்வாஹகரான ஆழ்வாருடைய, பாவின் - திருவாய்மொழியோடு கூடிய, இன் - இனிய, இசை - கானத்தை, பாடி - பாடிக்கொண்டு, திரிவன - திரியாநிற்பனென்கிறார்.

வ்யா.—(நாவினால்நவிற்றின்பமெய்தினேன்) "என்றக்காலண்ணிக்கும்" என்று ப்ரஸ்துதமானத்தையநுபாஷிக்கிறார் அதிலுண்டான ஆதராதிசயத்தாலே; மநஸ்ஸஹகாரமில்லாத வுக்திமாத்ரமடியாக நிரதிசயஸுகம் ப்ரயோஜநமானால் பின்னாட்டுகை தவிராதிறே. (நாவினால்நவிற்று) மநஸ்ஸஹகாரமில்லையென்கிறார். பகவத்விஷயத்திலுபகாரகனை ஸ்தோத்ரம்பண்ணக்கடவ நாவைக்கொண்டு, அந்தக்கார்யத்தைக் கொள்ளப்பெற்றேனென்னவுமாம்.

---

தாந்தாம்பற்றினவிஷயத்தைவிட்டுப் புறம்புசிலபோகவேண்டுவது அவ்விஷயம் இஹலோக ஸுகஜநகமல்லவாயாதல், பரலோக ஸுகத்துக்கு ஸாதநமன்றாயாதல், பற்றினவர்கள் இவ்விஷயத்தை யொழிய வேறேயொரு ஸ்வாமியுண்டாக நினைத்திருத்தல், காலக்ஷேபவிஷய மல்லாமையாலே யாதலன்றோ; அதில் எனக்கு இஹலோக ஸுகஜநகமுமாழ்வாரே, பரலோகஸுகத்துக்குஸாதநமும் ஆழ்வாரே, எனக்குஸ்வாமியும் ஆழ்வாரே, காலக்ஷேபவிஷயமும் ஆழ்வாரே. ஆனபின்பு பகவத்விஷயத்திலே அந்வயிக்கவேண்டுகிறதென்னென்கிறார்.

வ்யா.—(நாவினால் நவிற்றின்பமெய்தினேன்) நான்பெற்ற பேற்றைப் பார்க்கமாட்டீர்களோ.

---

"பாடித்திரிவனே" என்றத்தைப்பற்ற, "என்றக்கால்" என்றத்தோடு புநருக்தமன்றோவென்ன; அருளிச்செய்கிறார் (என்றக்காலித்யாதி.) ஆதராதிசயத்துக்கு அடியருளிச்செய்கிறார் (மநஸ்ஸஹகாரமித்யாதி.) நிரதிசயஸுகம் என்றது - "என்னப்பனில்-அண்ணிக்கும்" என்றத்தைக்கடாக்ஷித்து. "நவிற்று" என்று விடுகையாலே நா அர்த்தஸித்தமாயிருக்க, "நாவினால்" என்றுசொல்லுவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (மநஇத்யாதி.) நைரபேக்ஷ்யம் சொல்லுகையன்றிக்கே, "நாவினால்" என்று ஶ்லாக்யார்த்தமென்கிறார் (பகவதித்யாதி.)

"ప్రత్యక్షగురవస్తుత్యాః" "ப்ரத்யக்ஷகுரவஸ்துத்யாஃ" என்னக்கடவதிறே. ஈஶ்வரஸ்ருஷ்டிக்கு ப்ரயோஜநங்கொள்ளப்பெற்றேன் நானொருவனுமேயென்கிறார். (இன்பமெய்தினேன்) "வீவிலின்பம்மிக வெல்லைநிகழ்ந்தனன் மேவி" என்று ஆழ்வார் அவ்விஷயத்திற்பெற்றபேற்றை இவ்விஷயத்திலே பெற்றேனென்கிறார். "சிந்தையாலும் சொல்லாலும் செய்கையினாலும்" என்று கரணத்ரயத்தாலும் அவ்விஷயத்தை யாஶ்ரயித்தவர் பெற்றபேற்றை உக்திமாத்ரத்தாலே பெற்றேன். அநாதிகாலம் நரகத்திலேஸ்ருஷ்டியும் நரகத்திலே ஸம்ஹாரமுமாம்படி பாபத்தைப்பண்ணிப் போந்தநாவாலே நிரதிசயாநந்தத்தை ப்ராபித்தேனென்னவுமாம்.

---

(நாவினால்) நவிற்றும்போது நாவேண்டியிருக்கச்செய்தே, "நாவினால் நவிற்று" என்கைக்கடி மநஸ்ஸஹகாரம் வேண்டாதபடி, "అవశేనాపియన్నామ్ని కీర్తితే" "அவசேநாபியந்நாமநிகீர்த்ததே" என்கிறபடியே வாங்மாத்ரோச்சாரணத்தாலே ஆநந்தம் ஸித்தித்ததென்கைக்காக. (நாவினால் நவிற்றின்பமெய்தினேன்) இப்படியேயன்றிக்கே பகவத்விஷயத்தில புறம்புள்ள இந்த்ரியங்களை மநஸ்ஸிலேயடக்கி, மநஸ்ஸைக்கொண்டுபோய சுபாச்ரயத்திலேவைத்து, பின்பு அநவரதபாவனையுண்டாய், அதுதானேபோய் ஸமாதிபர்யந்தமானாலிறே, "నవేదాత్మనోగాత్రం తస్మ్యాహ్లాదసంస్థితః" "நவிவேதாத்மநோகாத்ரம் ததஸ்மர்த்யாஹ்லாதஸம்ஸ்திதஃ" என்று ஆநந்தம் ஸித்திப்பது; ஆழ்வார்தமக்கு, "அடியையடைந்துள்ளந்தேறி யீறிலின்பத்திருவெள்ளம் யான் மூழ்கினன்" என்று இத்தனைசெய்யவேண்டிற்று.

---

உபகாரகனை ஸ்துதிக்கவேணுமோவென்ன; அருளிச்செய்கிறார் (ப்ரத்யக்ஷத்யாதி.) நாப்படைத்தப்ரயோஜநம் பெற்றவர்கள்வேறில்லையோவென்ன; "విచిత్రా దేహసంపత్తిః" "விசித்ராதேஹஸம்பத்திஃ" இத்யாதிவசநத்தை யுட்கொண்டருளிச்செய்கிறார் (ஈஶ்வரேத்யாதி.) * நாவினால் நவிற்று இன்பம் பெற்றாருண்டோவென்ன; "இசைமாலைகளேத்திமேவப்பெற்றேன்" என்றத்தைக் கடாக்ஷித்து, "நாவினால் நவிற்றின்பமெய்தினேன்" என்று ஸமுதாயதாத்பர்யமருளிச்செய்கிறார் (வீவிலின்பமித்யாதி.) கீழ் உக்திமாத்ரத்தால்வந்த ஆநந்தம் ஆழ்வார்க்கு ஸமமென்றருளிச்செய்து, அவருக்கு கரணத்ரயம் வேண்டிற்று, இவருக்கொன்றேயமைந்ததென்று தாத்பர்யாந்தர மருளிச்செய்கிறார் (சிந்தையாலுமித்யாதி.) "நாவினால்" என்றதுக்கு நைரபேக்ஷ்யஸ்லாகோத்யோதந மன்றிக்கே தாத்பர்யாந்தரமருளிச்செய்கிறார் (அநாதிகாலமித்யாதி.)

(இன்பம்) "இன்னவகைப்பட்ட வின்பமென்னுமையாலே பஹுவிதமான ஆநந்தத்தை, எய்தினேன் - எய்தப்பெற்றேன். எனக்கு "[Grantha]" என்னவேண்டிற்றில்லை (நவிற்றின்பமெய் தினேன்) (எய்தினேன்) பகவத்விஷயத்தைப்பற்றினார்க்கு ஆநந்தம் காலாந்தரபாவி; இங்கு அப்படியன்றிக்கே எய்திவிட்டேன். (நாவினால் நவிற்றின்பமெய்தினேன்) அநவரதபாவனையாலும் ஆநந்தமுண்டாக வேண்டிற்றில்லை, அநுபவத்தாலுமாநந்தமுண் டாகவேண்டிற்றில்லை.

ஆனால் இப்போதன்றோ இந்த இன்பத்தை விரும்பினீர், சரீர வியோக ஸமநந்தரம் பிறக்கு மாநந்தஸித்திக்கு ஒருஸாதநத்தைப் பற்றவேணும், அதுக்கு ஸாதநமாக * லோகவிக்ராந்த சரணங் களை ஆச்ரயிக்கவேண்டாவோவென்ன; (மேவினேனவன் பொன் னடி) அதுவாகில் அதுக்கும் ஆழ்வாரதம்முடையதிருவடிகளை உபாயமாகப் பற்றினேன். (அவனபொன்னடி) யாதொருவிஷயத் தை நாவினால் நவிற்றின்பமெய்தினேன், அவனுடைய திருவடி களே. ப்ராப்யமானதுதானே ப்ராபகமுமாயத்து. (அவன்பொன் னடி) அதுபோலே * உலகமளந்த பொன்னடியாய் ஊர்ப்பொது வாய் எல்லார்தலையிலு மிருக்கு மதன்றிக்கே, இதிருவடிகள், * [Grantha] - த்ரைவித்யவ்ர்த்தஜநமூர்த்த விபூஷண மாயிருக்கும். வ்ர்த்தஜநங்களாகிறார் - உத்தரபாக நிஷ்டரானவர் கள். (பொன்னடி) நாள் தொட்டுப்பரிமாறினாலும் தோஷம் வாராத திருவடிகள். (மேவினேன)பகவத்விஷயத்தை ஆச்ரயிக்கு மிடத்தில், "நாகணைமிசை நம்பிரான சரணே சரண் நமக்கென்று நாடொறுமெகிழ்ந்தையனாய்" என்று வர்த்தமாநநிர்தேசம பண் ணவேண்டிற்று; இங்கு அப்படியனறிககே ஸக்ருத்ஸமாச்ரயண மமைந்தது.

(அவன்பொன்னடிமேவினேன்)பகவத்விஷயத்தில்போலே, "[Telugu-script Sanskrit]" "த்வமேவோபாயபூதோமேபவ" "[Telugu-script Sanskrit] [Telugu-script Sanskrit]" "த்வத்பாதமூலம்சரணம்ப்ரபத்யே" "உன் னடிக்கீழமர்ந்து புகுந்தேனே" என்று அபரோக்ஷித்து ஆச்ரயிக்க வேண்டாதபடி, எங்கேனுமிருந்து ஆச்ரயிக்கலாம்படியான அவ னுடைய திருவடிகளை. (அவன்பொன்னடி - மேவினேன்) ஒரு புருஷகார புரஸ்ஸரமாக வன்றிககே தந்திரபேக்ஷமாக வாச்ரயித் தேன். இங்கே, ஜீயர்வார்த்தையை யநுஸந்திப்பது.(மேவினேன்) அத்தோடே பொருந்திவிட்டேன். இனி வேறொருகால் இருக கைக்கு இடமில்லாதபடி பொருந்திவிட்டேன்.

(நாவினால் நவிற்றின்பமெய்தினேன் மேவினேனவன்பொன் னடி) இத்தைப் பின்சென்றிறே ஆளவந்தாரும், ஆசார்யவிஷயத் தை "[Telugu-script Sanskrit]" "அத்ரபரத்ரசாபி நித்யம்யதீயசரணௌ ஶரணம்மதீயம்" என்றது.

(மேவினேனவன் பொன்னடி) ஆழ்வாருடைய ஸ்ப்ருஹணீய மான திருவடிகளை உத்தேஶ்யமாகப் பொருந்தினேன். ''தாநஹம்'' ''க்ஷிபாமி'' என்று ஈச்வரனுங் கூட வுபேக்ஷித்ததசையிலே விஷயீகரித்த ஆழ்வாருடைய விலக்ஷணமான திருவடிகளோடே பொருந்தப்பெற்றேன்.

நீர் செய்ததிதுவாகில்,பேற்றி லூறுதிப்பாடிருந்தபடியென்னென்ன (மெய்ம்மையே மேவினேன்) உபகாரகவிஷயத்திலே நிற்கிறவளவிலே வேறொருவிஷயமுத்தேஶ்யமாய, அதுகிட்டினவாறே அதிலே தோள்மாறும்படி யன்றிக்கே, ஐஹிகாமுஷ்மிகங்களிரண்டும் ஆழ்வார்திருவடிகளேயாகப பொருந்தினேன். இங்கிருந்தநாள் அஜ்ஞாதஜ்ஞாபநத்தாலே யுபகாரகராகவும், பகவல்லாபத்துக்கு புருஷகாரமாகவும், நித்யவிபூதியில [illegible] ''யத்ரபூர்வேஸாத்யாஸ்ஸந்திதேவா:'' என்கிறபடியே-ப்ராப்யமாகவும் இவர்தம்மையேபற்றினேன. ஆளவந்தார் ''[illegible]'' ''அத்ரபரத்ரசாபி'' என்கைக்குமடி இவரிறே.

* அநந்தகலேஶபாஜநமான ஸம்ஸாரத்திலிருக்கிற நாளெல்லாம் ஈஶ்வரனுபேக்ஷித்தானென்றும், அவ்வளவில் ஆழ்வார் தம்மைக்கடாக்ஷித்தாரென்றும திருவுள்ளமாகக்கருதி தாத்பர்யகதநமுகேந வாக்யவிவரணம (க்ஷிபாமித்யாதி.) பரமகாருணிகரானகயாலும் அநாதியான ஸம்ஸாரத்தில யாத்ர்ச்சிகாதிகள் ஸம்பாவிதங்களானகயாலும, சேதநருக்கு ''தாநஹம்'' ''க்ஷிபாமி'' என்று அவன்சொன்னது அஹ்ருதயோக்தியாய் அச்சமுறுத்தினனித்தனையென்று திருவுள்ளம்பற்றி (உபேக்ஷித்ததசையென்றது.) உபகாரகரொன்று ஆழ்வாரை நீர்பற்றினீராகிலும உமக்குப்புருஷார்த்தமேதென்கிற சங்கையையநுவதித்து,நான் இவரை யுபகாரகத்வேநபற்றிவேறுபலங்களிலேபோகிறவனன்றிக்கே, நியதமாக ஸகலபுருஷார்த்தங்களும் ஆழ்வாரதிருவடிகளாகவே பற்றினேனென்கிறாரென்றருளிசசெய்கிறார்(நீரசெய்ததித்யாதி.) மெய்ம்மையே-ஸத்யமாக. ''மெய்ம்மை'' என்றத்தோடு, ''அவன்பொனனடிமேவினேன்''என்றத்தை யநுஷங்கிததாரொனறு கண்டுகொள்வது. ''ஸர்வம் யதேவ நியமேந'' ''ஸர்வம்யதேவநியமேந'' என்கிறபடியே ஸகல பலங்களும் திருவடிகளேயென்று கீழருளிச்செய்து, ப்ராப்யப்ராபகங்களாக யோஜநாந்தரம் (இங்கிருந்தஇத்யாதி.) இத்தைப்பற்றியிறே அபியுக்தருமருளிச் செய்தாரொன்று ப்ரமாணம் காட்டுகிறார் (ஆளவந்தாரித்யாதி.) மெய்ம்மையென்றது - இரண்டாம் யோஜனையில்.

6

(தேவுமற்றறியேன்)ப்ராப்யமும்ப்ராபகமுமானவேறொருவஸ்துவுண்டென்றிரேன். "மெய்ம்மையே"என்றவிடம்-அந்வயத்தாலேசொன்னார்; "தேவுமற்றறியேன்" என்று வ்யதிரேகத்தாலே சொல்லுகிறாரிறே-தம்முடைய அத்யவஸாயந் தோற்றுகைக்காக. "மற்றறியேன்" என்று-புருஷார்த்தாந்தரங்களோபாதிபகவத்விஷயத்தையுங் கழிக்கிறாரிறே - அதினெல்லையான ஆழ்வார்திருவடிகளளவும் வந்தவராகையாலே. சாஸ்த்ரவாஸனையாலேயாதல், ஆசார்யோபதேசத்தாலேயாதல் சொல்லுகிறாரல்லர், உபகாரகரான ஆழ்வார்திருவடிகளில் பாவபந்தத்தாலே சொல்லுகிறார்.

---

"மேவினேனவன் பொன்னடி" என்றீர், அந்த ஆச்ரயணத்தை, "ஸாதேவேஸ்மிந் ப்ரயுஜ்யதாம்" "ஸாதேவேஸ்மிந் ப்ராயுஜ்யதாம்" என்கிறபடியே ஸர்வஸ்வாமியான ஈச்வரவிஷயத்திலே ப்ரயோகிக்கவேண்டாவோவென்ன; (தேவுமற்றறியேன்) நான் அப்படியிருப்பதொரு ஸ்வாமியுண்டாகவ்யுத்பத்திபண்ணிவைக்கிலன்றோ வேண்டுவது. (தேவுமற்றறியேன்) தேவறிவன், ஆழ்வாரையொழிய வேறறியேன். சாஸ்த்ரம் காட்டித் தந்ததன்றோ தைவமாவது, அதுதானே, "ஆசார்யதேவோபவ" "ஆசார்யதேவோபவ" என்று விதித்ததே.(தேவுமற்றறியேன்) தேவதாவ்யுத்பத்தியுள்ளவிடத்தே யன்றோ தேவதாப்ரதிபத்தியுள்ளது.ஆகையாலே நான் தேவதையாக வ்யுத்பத்திபண்ணிற்று ஆழ்வார்க்குமேற்படவில்லை.

ஆனால், "என்னப்பன்" என்று - கீழே பகவத்விஷயத்தை ஸ்வாமியாக வநுஸந்தித்தீரேயென்ன; அது ஆழ்வார் ஆதரித்த விஷயமென்று ஆதரித்தேனித்தனைபோக்கி, தேவதாப்ரதிபத்தி

---

ப்ராப்யமும் ப்ராபகமுமென்றுசொல்லி யிருக்க, புந: "தேவுமற்றறியேன்" என்று சொல்லவேணுமோ வென்கிற சங்கையைப் பரிஹரிக்கிறார் (மெய்ம்மையேயென்றவிடமித்யாதி.) (ஸகல பலங்களு மாழ்வார்திருவடிகளாகப் பற்றினேன்) என்ற ப்ரதமயோஜநாநுகுணமாக தாத்பர்யாந்தரமருளிச்செய்கிறார் (மற்றறியேனென்றித்யாதி.)முந்தினயோஜனையில் ப்ராப்யப்ராபகஸாதாரண்யேந "தேவு" என்று-ஸமாஶ்ரயணீயவஸ்துவைச்சொல்லுகிறது; இரண்டாம்யோஜனையில் ப்ராப்யவஸ்துவைச் சொல்லுகிறது. சாஸ்த்ரங்கள் எம்பெருமானை ப்ராப்ய ப்ராபகமாகச்சொல்லி ஆசார்யோபதேசமு மப்படியேயிருக்க, இவர்இப்படிகழிக்கைக்கு ஹேதுவேதென்ன; அருளிச்செய்கிறார் (சாஸ்த்ரேத்யாதி.)

(குருகூர்நம்பி) இவரையும்பற்றி வேறொரு விஷய்த்தையும் பற்ற வேண்டும்படியோ இவருடைய பூர்த்தியிருப்பது; "குருகூர் நம்பிபா" என்கிறது - ஆழ்வார்திருவாயாலே யருளிச்செய்ததென்றாய்த்துத்திருவாய்மொழி தன்னையு மாதரிப்பது. அதிலே "குருகூர்ச்சடகோபன்" என்றருளிச்செய்தாரிறே; அவ்வழியாலே யாயிற்று திருவாய்மொழியிலாதரம். ஆழ்வார் ப்ரதிபாத்யராகையாலே, "குருகூர்நம்பிபா" என்று-கண்ணிநுண் சிறுத்தாம்பைச் சொல்லுகிறதென்னவுமாம்.

---

பூர்வகமாகச் சொன்னேனன்று, "అనన్యదైవత్వమియం క్షమా చ" "அநந்ய தைவத்வமியம்க்ஷமாச" என்று அநந்யதைவத்வத்தையுடைய பிராட்டி பெருமாளுக்கு எடுத்துக் கைநீட்ட, பெரியபெருமாள்பாடு புகுமாப்போலே. இவ்வர்த்தம் நாங்கள் விச்வஸிக்கும்படி யென்னென்ன; (மெய்ம்மையே) இது ஸத்யமே. (மேவினேனவன் பொன்னடிமெய்ம்மையே தேவுமற்றறியேன்) ஸ்ரீசடகோபனைத் தலையிலேகொண்டிருந்து பொய்சொல்லுவாருண்டோ.

ஆனாலும் காலக்ஷேபத்துக்கு பகவத்விஷயத்தைப் பற்றிக்காலம்போக்கவேணுங்காணுமென்ன (குருகூர்நம்பிபாவினின்னிசைபாடித்திரிவனே) எனக்கு காலக்ஷேபவிஷயம் உங்களைப்போலே ஒன்றிரண்டா யிருந்ததோ, ஆயிரம்ப்ரகாரமில்லையோ. (குருகூர்நம்பி) கவிபாடுகைக் கீடாம்படி, "వాల్మీకిర్భగవానృషిః" "வால்மீகிர்ப்பகவாந்ரிஷி:" என்கிறபடியே பூர்ணரானவாழ்வார். "ஏற்கும்பெரும்புகழ் வானவரீசன் கண்ணன்றனக்கு ஏற்கும்பெரும்புகழ்வண் குருகூர்ச்சடகோபன்" என்கிறபடியே - ஸ்துத்யவிஷயத்துக்கு பரத்வஸௌலப்யபூர்த்தி, ஸ்தோத்ரவிஷயத்துக்கு ஜ்ஞாநபக்தி பூர்த்தி.

---

நீராழ்வாரையொழிய "தேவுமற்றறியேன்" என்றிருக்கிறவராகில், முகில்வண்ணனடிமேற்சொன்ன சொன்மாலையாயிரமான திருவாய்மொழி அப்யஸிப்பானென்னென்கிற சங்கையிலேயருளிச்செய்கிறார் (இவரையென்று தொடங்கி, திருவாய்மொழியிலாதரமென்னுமளவும்.) "பூர்த்தியிருப்பது" என்றவநந்தரம் "ஆகையாலே" என்றுகூட்டி, "ஆதரிப்பது" என்றத்தோடே அந்வயிப்பது. ஆழ்வார் திருவாயாற்சொன்னதுக்கு ப்ரமாணம் (அதிலேயித்யாதி.) இதுக்கு "பரனடிமேற்குருகூர்ச்சடகோபன்சொல்" இத்யாதிகளிலேநோக்கு. "என்முன்சொல்லும்" என்றும் "தன்னைத்தானே துதித்து" என்றும் எம்பெருமான் சொல்லாகத்தோற்றுகையாலே ஆழ்வார் சொல்லென்று அர்த்தம் சொல்லக்கூடுமோவென்ன; குருகூர்நம்பி விஷயமான பா என்று அர்த்தாந்தரமருளிச்செய்கிறார். (ஆழ்வாரித்யாதி.)

('பாவினின்னிசை) பாவோடே கூடப் புணர்ப்புண்ட இனிய இசை. (பாடித்திரிவனே) உம்முடைய தேஹயாத்ரை நடத்திப் போரும்படி யென்னென்ன, ப்ரீதிப்ரேரிதனுய்க் கொண்டுசொல்லி இதுவேதாரகமாக ஸஞ்சரிப்பன். "உண்டுதிரிவன்" என்னுமாப்போலே "பாடித்திரிவன்" என்கிறார். "நமன்றமர் தலைகள் மீதே - நாவலிட்டுழிதருகின்றோம்" என்னுமாப்போலே இதுவே யாத்ரையாயிருக்கிற என்னுடைய கதிநிவ்ர்த்தியைப்பண்ணவல்லாருண்டோவென்றுமாம். ப்ராக்தநகர்மபலாநுபவத்தைப் பண்ணுவிக்கும்யமனுர் கதிபங்கம்பண்ணவோ, அதுக்கடியான விஷயாந்தரங்கள் கதிபங்கம்பண்ணவோ. ... ... ... (௨)

---

* கண்டுகொண்டேன் கண்ணிணையாரக்களித்திறே * தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள் சொல்லிற்று. (இன்னிசைபாடி) திரிகிறபோதே கூடசதிரம்பின்நல்லிசையைப்பாடி. அநுபவித்துக் கொண்டுபாடி.

(குருகூர்நம்பி-இன்னிசைபாடி) பகவத்ப்ரதிபாதகமென்றன்று இவர் திருவாய்மொழியைப் பாடிற்று, ஆழ்வாரருளிச்செய்த தென்றாய்த்து. "உயர்வறவுயர்நலமுடையவன்" "வண்புகழ் நாரணன்" "மலர்மகள்விரும்பும் நமரும்பெறலடிகள்" "என்செய்ய தாமரைக்கட்பெருமானார்" என்று பாடாநிற்கச்செய்தேயும் பகவத்விஷயத்தோடு உறவற்றிறே இவர்பாடுகிறது. (திரிவனே) அங்குப்போனாலன்றோ "ஸ்ராமகாயந்நாஸ்தே" "ஏதத்ஸாமகாயந்நாஸ்தே" என்றிருக்கவேண்டுவது, இங்கு அப்படியன்றிக்கே விச்ராங்கலமாகத்திரியாநிற்கும். (திரிவனே) இது எனக்கு காலயாத்ரை. ஆகையாலே ஸுகபூதரும், ஸாதநபூதரும், ஸ்வாமியும், காலக்ஷேபவிஷயமும் எனக்கு ஆழ்வாரே யென்று பகவத் விஷயத்தோடே அந்வயிக்கத்தேடினவர்களுக்கு உத்தரஞ்சொன்னாராய்நின்றது.

---

'பா' என்று சந்தஸ்ஸையுடைத்தான ப்ரபந்தமாயிது கருச். சேர்ந்ததுருபமான மநோஹரமான காநமென்றர்த்தமருளிச்செய்கிறார் (பாவோடுஇத்யாதி.) "பாடித்திரிவன்" என்றதுக்கு இரண்டுதாத்பர்யம். பாடுகைதிரிகைக்கு ஹேதுவாக்தாரகமாகவும், பாடுகையாலே அப்ரதிஹதஸஞ்சாரமாகவும். அதில் முந்தினத்தை சங்காபரிஹாரமுகேந வருளிச்செய்கிறார் (உம்முடையஇத்யாதி.) இரண்டாம்தாதபர்யம் (நமன்தமரித்யாதி.) நமன்-யமன்; தமர் அவனுடைய தூதர். நாவலிடுகை-ஜயித்தவர்கள் தோற்றவர்கள்வாசலிலே சென்று அறை கூறுகை. உழிதருகை-ஸஞ்சரிக்கை. யாத்ரையாக-வ்யாபாரமாக. கதிநிவ்ருத்தியைப்பண்ணவல்லாருண்டோ வென்றத்தை விவரிக்கிறார் (ப்ராக்தநேத்யாதி.) அதுக்கு-கர்மத்துக்கு. ... ... ... ... ... ... ... (௨)

அ.—மூன்றாம்பாட்டில், "தேவுமற்றறியேன்" என்று-புருஷார்த்தாந்தரங்களோடேகூட பகவத்விஷயத்தையும் காற்கடைக்கொள்ளக்கடவீரோவென்ன; "எனக்கு அபுருஷார்த்தம்" என்னுமளவாய்த்துக் காற்கடைக்கொண்டது, "ஆழ்வாருகந்தவிஷயம்" என்னுமிவ்வழியாலே தேவுமற்றறியிலுமறிவனென்கிறார். சூர்ப்பணகையைப்போலேகிடந்தானைகண்டேறுமதிறேதவிர்த்துக்கொண்டது. "விட்டுசித்தர் தங்கள்தேவரை வல்லபரிசுவருவிப்பரேலதுகாண்டும்" என்று பெரியாழ்வார்முன்னாகப்பற்றும் ஆண்டாளைப்போலே, ஆழ்வார்முன்னாகப் பற்றும்பற்றுத் தவிர்ந்திலரிறே; ஆழ்வார் முன்னாகவருமுத்தேஸ்யதை தவிர்ந்திலரிறே, "భవతః పరమో మతః" "பவத: பரமோமத:" என்றுகேட்க, "ధర్మాధిగతమో మతః" "தர்மாதிகதமோமத:" என்றாப்போலே, ஆசார்யருசிபரிக்ருஹீதமாய்வருமது ஆதரணீயமிறேயிவர்க்கு.

---

அ.—மூன்றாம்பாட்டு. (திரிதந்தித்யாதி) இவர், "தேவுமற்றறியேன்" என்றாரிறே - கீழிற்பாட்டில்; இங்கு - ஈச்வரன்றான் இவர்பக்கலிலேமண்டினபடியைச்சொல்லுகிறது. பகவத்விஷயப்ரீணநமாக ஆசார்யவிஷயத்திலே ப்ரவணனாகக்கடவன்: ஆசார்யப்ரீணநமாக பகவத் விஷயத்திலே ப்ரவணனாகக் கடவன். "ప్రియోహి జ్ఞానినోత్యర్థ మహం స చ మమ ప్రియః" "ப்ரியோ ஹிஜ்ஞாநிநோத்யர்த்த மஹம்ஸசமமப்ரிய:" என்கிறபடியே ஒருவர்க்கொருவர் ப்ரியவிஷயமாயிருக்குமிறே. ஒருவனை ஒருவனுகந்தானாவது - அவனுகந்தாரையுமுகக்கையாயது. இவர், கீழே - "தேவுமற்றறியேன்" என்று நம்மையுமறந்து ஆழ்வார்பக்கலிலே ப்ரவணரானுரோ, எல்லாங்கூட நம்மையறிவித்தவரொன்றிறே ஆழ்வார்பக்கல் இவர்க்கு ஆதரம், இப்படி நம்மையுகந்தார்க்கும் இவர்க்கும் ப்ரீதராமிடத்தில * மமமத்பக்தபக்தேஷு ப்ரீதிரப்யதிகையாகையாலே நாம் கொடுக்கும் பரிசிலேதென்று பார்த்து, ஆழ்வார்பக்கல் பக்திபூர்ணமான இவர்திருவுள்ளத்திலே, நீர்வெள்ளத்திலே நெய்தல் பாரித்தாப்போலே தன்னுடைய வடிவைகொண்டுவந்து பாரிக்க,

---

மூன்றாம்பாட்டு. கீழ்ப்பாட்டில் - "தேவுமற்றறியேன்" என்றும், இப்பாட்டில் - "தேவபிரானுடைக்கரிய கோலத்திருவுருக்காண்பன்" என்றும் சொல்லக்கூடுமோ வென்கிறவிரோதி பரிஹாரார்த்தமாக சங்காந்தர பரிஹாரமுகேந ஸங்கதி யருளிச்செய்கிறார் (தேவித்யாதி.) (பகவத்விஷயத்தையும்) தமக்குத்தேஸ்யரான ஆழ்வாருக்குத்தேஸ்யமான பகவத்விஷயத்தையும் காற்கடைக்கொண்ட ப்ரகாரத்தை த்ர்ஷ்டாந்தமுகேந விவரிக்கிறார் (சூர்ப்பணகேத்யாதி) இத்தால்-அத்வாரகமாகப்பற்றுகை அநர்த்தஹேது வென்று கருத்து. ஆழ்வாருகந்தவிஷயமென்று பற்றினப்ரகாரத்துக்கு அநுகுத்ர்ஷ்டாந்தங்களை யருளிச்செய்துகொண்டு விவரிக்கிறார் (விட்டுசித்தரித்யாதி, மீண்டுபோந்தாரொன்னுமளவும்.) கீழ்வாக்ய விவரணம் (ஆழ்வாரித்யாதி.) இவருக்கு-மதுரகவிகளுக்கு.

ஸ்ரீபுராதேவியார், "வடகீழ் மூலையில் தத்வத்தையும் 'ஆச்ரயணீயம்' என்று உடையவ ரருளிச்செய்தாராகில் என க்கும் அதுவாமத்தனையன்றோ" என்றாள்; குணமலைப்பாடியுடை யார்; காங்கேயன் தெற்கே யெடுத்துவிட்டபோது; பிள்ளையாத் தானங்கே குறைவறுப்புச் சமைக்க, அவர் "உமக்குவேண்டு வதென்" என்று கேட்க, இவர் "உம்மைக்கொண்டுபண்டே யுப காரங்கொண்டோங்காணும்" என்ன; "ஆவதென், என்னையறியா தேவருவதோருபகாரமுண்டோ" என்ன; "எங்களாசார்யர், நான் கோயிலில் மண்பெற்றது அவ்வேளாளனாலே" என்றருளிச்செய் யக் கேட்டிருந்தோம், இதுக்குமேற்பட்டதோ ருபகாரமுண்டோ நமக்கு" என்றார்; உடையவர் வெள்ளைசாத்தியெழுந்தருளின கா லத்திலே, திருவடிகளில் ஸம்பந்த முடையாரை "பெருமாளை த்திருவடித்தொழவேண்டா" என்றுவிலக்க, ஆழ்வானை "நீராரோ னுக்கும் விரோதியோ, நீர்புக்குத்திருவடித்தொழலாகாதோ என்ன; "ஆத்மகுணம் மோக்ஷஹேதுவென்றிருந்தோம், அதுபந்தஹேது வானபின்பு எம்பெருமானார்திருவடிகளில் ஸம்பந்தத்தை யறுத் துக்கொள்ளவோ" என்று மீண்டுபோந்தார்.

---

இத்தைக்கண்டு ப்ரீதரான விவர், இதுக்கு நிமித்தமென்னென்று ஆராய்ந்து பார்த்து, அது பகவச்சேஷத்வ ஜ்ஞாநத்தாலும் வந்த தன்று, பாகவதசேஷத்வமாதரத்தாலும் வந்ததல்ல, பகவதாச்ர யணத்தாலும் வந்ததல்ல, எல்லாங்கூட நான் ஆழ்வார்க்கு அநந் யாராஹசேஷபூதனாய்ப்பெற்றபேறிறேயிதுவென்றுஸ்வகதமாக ப்ரீ தராகிறார். ஆசார்யவிஷயத்தைப்பற்றி யிருப்பானொருவனை பகவத் விஷயம் தானேமேல்விழுமென்னு மிடத்துக்கு உதாஹரணமிதி றே. பிராட்டியைப்பற்றினாலும் அவள் அவனோடே சேர்க்கையா லே அவன்கைபார்த்திருக்கவேணும்; இங்கு அவன்றானே வந்து மேல்விழுந்து தன்னை இவனுக்குக்கொடுக்கும்.

---

குணமலைப்பாடி-க்ராமவிசேஷம். "காங்கேயன்" என்று - ஒருவே ளாளனுக்குப் பேர். எடுத்துவிட்டபோது-ஸேனையைத்திரட்டிக் கொண்டு போனபோது. பிள்ளையாத்தான்-ஒரு ஸ்ரீவைஷ்ணவர், சமைக்க - அமைக்க. மண்பெற்றது - திருமாளிகைலபித்தது; இவ் வைதிஹ்யத்தால் ஆசார்யாபிமதன் என்றனக்கு மபிமதனென்று தோற்றுகிறது. "காலத்திலே" என்றவநந்தரம் "அவர்" என்று சேஷம். (வேண்டாவென்று) என்றவநந்தரம் "கோயிலிலேக்ரிமி கண்டன்மநுஷ்யர் விலக்க" என்று கூட்டுவது. ஆத்மகுணமென் றது – ஆரோனுக்கும் விரோதியாகாதபடியான சமமும் தமமுமிவ் விடத்தி லாத்மகுணங்களில் ப்ரதாநம். "சமமும்தமமும்" இத் யாதிவாக்யங்கள் அநுஸந்தேயங்கள்.

திரிதந்தாகிலுந்தேவபிரானுடைக்
கரியகோலத்திருவுருக்காண்பனென்
பெரியவண்குருகூர்நகர்நம்பிக்கா
ளுரியனாயடியேன்பெற்றநன்மையே.

ப-ரை.—திரிதந்தாகிலும் - மீண்டாகிலும், தேவபிரானுடை - நித்ய ஸூரி நிர்வாஹகனான ஈஶ்வரனுடைய, கரிய-நீலமேகநிபச்யாமமாய், கோலம்-ஸுந்தரமாய், திரு-பிராட்டியோடே கூடியிருக்கிற, உரு-திருமேனியை, நான்-பகவத்விஷயத்தை விட்ட நான், காண்பன் - ஸாக்ஷாத்கரிப்பன்; பெரியவண்-மஹோதாரராய், குருகூர்நகர்-திருநகரியிலேயெழுந்தருளியிருக்கிற, நம்பிக்கு-ஆழ்வார்க்கு, ஆளுரியனாய-உரியவடியனாய், அடியேன்-அடியேன், பெற்ற-லபித்த, நன்மை - பகவல்லாபம் ... ... ... ... ... ... *

வ்யா.—(திரிதந்தாகிலும்) திரிதருகையாவது-மீளுகை. மீண்டாகிலும். திரிதலென்றது - கடைக்குறையானசொல்லாய், திரிதந்தாகிலும்-போனவழியெல்லாம் மீண்டாகிலும். அதாவது-திருவாயமொழிப்பாவைவிட்டு, இசைகளைவிட்டு, ஆழ்வாரைவிட்டு, "அவருகந்தவிஷயம்" என்று ப்ரதமாவதியிலேவந்து. (தேவபிரானுடைக் கரியகோலத் திருவுருக்காண்பன்)(தேவபிரான்)நித்யஸூரிகளுக்குத் தன்னை முற்றூட்டாக அநுபவிக்கக்கொடுத்துக்கொண்டிருக்கு முபகாரகன்.

---

வ்யா.—(திரிதந்தாகிலும்) திரியாநிற்கச்செய்தேயும். இங்ஙனே ஸஞ்சரியாநிற்கச்செய்தேயும். "மெய்ம்மையேதேவு மற்றறியேன்" என்று-ப்ரத்யயம பண்ணலாம்படி பகவத்விஷயத்தோடு ஒட்டற்றுத்திரியாநிற்கச்செய்தேயும் இப்பேற்றைப்பெற்றேன்.

(தேவபிரானுடை) இவர்திருவுள்ளத்தில் ஈச்வரன் கொண்டுவந்து பாரித்துக்காட்டினவடிவு நித்யஸூரிகளுக்குப்படிவிடும் வடிவாய்த்து. அவர்களையும் இவர்களையும்பார்த்தால் அவர்கள் நமக்கே நல்லவர்கள்; இவர் ஆழ்வார்க்கே நல்லவர். இவருக்கன்றோ இவ்வடிவை நாம் ப்ரகாசிப்பிப்பதென்று இவருக்குக்கொடுவந்து அநுபவிப்பித்தான். "[illegible]" "பக்தாநாம் த்வம் ப்ரகாசஸே" என்கிறவிடத்தில், பக்தராகிறார் - இவராய்த்து.

---

கீழிரண்டுபாட்டிலும், "என்னப்பன" என்றும், "பெருமான்" என்றும், நம்பியென்றக்காலாழ்வாரையும், "குருகூர்நம்பி பாவினின்னிசை" என்றவிடத்தில் திருவாய்மொழியையும் அதின் காநத்தையும்பற்றினக்ரமத்தைத்திருவுள்ளம்பற்றி மீண்டபடியை விவரிக்கிறார் (அதாவதித்யாதி.) "கரியகோலத்திருவுருக்காண்பன்" என்கையாலே,"தேவபிரான்"என்றதுக்கும்தம்மையநுபவிப்பித்தாப்போலே அவர்களை யநுபவிப்பித்தானென்று திருவுள்ளமென்று தாத்பர்யமருளிச்செய்கிறார் (நித்யஸூரிகளித்யாதி.)

இவர்நின்றநிலைகுலைந்து பகவத்விஷயத்திலே நிற்கும்போதும், அதினெல்லையான நித்யஸூரிகள்யாத்ரையாயாய்த்திருப்பது. (தேவபிரானுடைக் கரியகோலத்திருவுரு) நித்யஸூரிகளுக்குப் படிவிடும்வடிவு,காளமேகநிபஶ்யாமமாய், அழகுதான் ஒருவடிவுகொண்டாப்போலேயிறே யிருப்பது; "கோலமேதாமரைக்கண்ணதோ ரஞ்சநநீலமே" என்று - ஆழ்வார் வாயபுலத்தக் கேட்டிருக்குமவராகையாலே பேசுகிறார். பரமயோகிகள், யோகம் கைப்புகுந்தால்ஊர்வசியுடையவடிவை வாணிக்குமாப்போலே, இவரும்இவ்விஷயத்தை வர்ணிக்கிறாரிறே-"கரியகோலம"என்று, ஸ்பர்ஶைஹபண்ணுமபடி ஆழ்வார் வர்ணிக்கக் கேட்டிருந்தபடியாலே.

(கரிய) இவ்வடிவு நித்யஸூரிகளநுபவிக்கிறபோதும், "கண்கள் சிவந்து"என்று தொடங்கி, "அடியேனுள்ளான" என்று ஆழ்வார் தாம் அநுபவிக்கிறபோதும் வெளிறு இருந்தது; இவர் அநுபவித்தவாறே தன்னிற மிட்டதாயத்து. "என்னுள்மிசை ரம்மானுக்கு-செம்பொன் திருவுடம்பு" என்று ஆழ்வாரநுபவிந்த போதும் பொற்கொன்ற வளவிததனையொழிந்த கறுத்த தில்லையே. (கோலம்) ஆனைக்கு உதவவந்தாப்போலே இருந்தபடியே, வருகையன்றிக்கே இங்கு அநுபாவ்யமாய வருகிறவருகையாமல், சாந்தின திருவாபரணமுந் தானுமாயாயத்து வந்தது. அபிமத விஷயத்தின் பாடு போவார் ஆபரணம் பூண்டிறேபோவது. (திருவுரு) கழற்றவொண்ணாதிருப்பதோ ராபரணத்தையுங் கொண்டுவந்தார். அவ்விருண்டவடிவுக்கு மின்போலே ப்ரகாசகையாயிருக்குமவளாய,இவளைக்கண்டாலாயத்து அவ்வடிவையும காணலாவது. "திருக்கண்டேன்பொன்மேனிகண்டேன்" என்கிறபடியே. ஸ்வரூபத்தாலே ஸ்வரூபத்துக்குப்ரகாசகையாயிருக்கும; விக்ரஹத்தாலே விக்ரஹத்துக்கு ப்ரகாசகையாயிருக்கும அவள்தான்.

இவர் மீண்டாரகில் "என்னப்பனில" என்ற கண்ணனையன்றேபற்றுவது, "தேவபிரான்" என்பானென்னென்ன; அருளிச்செய்கிறார் (இவர் நின்றநிலை யித்யாதி.) நின்ற நிலைஎன்றது-திருவாய்மொழி யிசையிலே நின்றநிலை யென்றபடி. அதினெல்லையானவென்றது - பகவத்விஷயத்தின் மேலெல்லையானபடி. நித்யஸூரிக ளநுபவிக்கும் வடிவு கரியதிருவுருவா யிருக்குமோ வென்ன; அருளிச்செய்கிறார் (நித்யஸூரிகளுக்கு இத்யாதி.) இறே என்றது-ப்ரமாணப்ரஸித்தியைச்சொல்லுகிறது. இது இருந்தபடியென்னென்ன (கோலமே யித்யாதி.) பகவத்ப்ரவணரன்றிக்கேயிருக்கிறதாம் அவன்றிருமேனியை வர்ணித்துக்காணக் கடவேனென்று ஸ்வார்த்தமாக ப்ரார்த்திப்பானெனென்ன; அருளிச்செய்கிறார் (பரமயோகிகளித்தியாதி.)

(பெரியவண்குருகூர்நகர்நம்பிக்கு) மஹோதாரராய்க்கொண்டு திருநகரியிலே திருவவதரித்த ஆழ்வார்க்கு. ஸர்வேஶ்வரனுடைய ஔதார்யம் ஜீவியாதகாலத்திலே தன்வாசியறிவித்த ஔதார்யமிறே. "குருகூர்நகர்" என்று - *வைகுந்தமாநகரை வ்யாவர்த்திக்கிறது. "பரமபதம்" என்பது, "அமரர்கள் அதிபதி" என்பதாய் ஆழ்வார்படுமதெல்லாம், இவரும "திருநகரி" என்றாலும், "ஆழ்வார்" என்றாலும் அப்படியேயாயத்து அநுபவிப்பது.

(நம்பிக்கு) "நாமென்னைப்பற்றினேன், ஒன்றைவிட்டேன்" என்னலாம்படியோ, ஆழ்வாருடைய பூர்த்தியிருப்பது. அதாவது-ஆழ்வாரை யநுபவிக்குமநுபவத்திலே பகவத்விஷயமுமந்தர்ப்பூதமாயிருக்கை. (ஆளுரியனாய) உரியவடியனாய். உரியவடியார்க்கு "தந்தாமுக்கு" என்ன ஒரு ப்ரியாப்ரியங்களின்றிக்கே ஸ்வாமி யுகந்தத்தையே பற்றி, அவன்கைவிட்டத்தை விட்டிருக்குமதிறே ஸ்வரூபம்.

(ஆளுரியனாய்) ஆளாக ப்ராப்த னாய. பகவச்சேஷத்வத்துக்கு ஆளற்றிருக்க ஆழ்வார்க்குசேஷபூதராகை பெறாப்பேறிறே. அன்றிக்கே, உரியவடியனாய. "தேவுமற்றறியேன" என்னும்படி ஸர்வசேஷிபாடும்போகாதபடி ஆழ்வார்க்கு அநந்யார்ஹனாய.

(நமபிக்கு) வேறுபகவத்விஷயம் தேடிப்போகவேண்டும்படியோ. ஆழ்வாருடைய பூர்த்தியிருப்பது. அந்தஸர்வரக்ஷகனானவனுக்கும் ஆளாகாத வென்னையும் ரக்ஷித்து ஆளாக்கிக்கொண்ட பூர்த்தியன்றோ ஆழ்வாரது. (நம்பிக்கு ஆளுரியனாய) இவருடைய, * [illegible] - குணைர்த்தாஸ்ய முபாகத: இருக்கிறபடி. (நம்பிக்காளுரியனாய்) இவருடைய ப்ரணவார்த்தாநுஸந்தாநமிருக்கிறபடி.

(குருகூர்நம்பி) இந்த நம்பி, "[illegible]" "வாஸுதேவோஸி பூர்ண:" என்று பரமபதநிலயனுதல், அவதார மநுஸந்தித்த திருக்குறுங்குடிநம்பியாதலன்றிக்கே, திருநகரியிலே வர்த்திக்கிறநம்பி. இவருக்கு பூர்த்திக்கு ஊற்றுவாய் இத்தேசமென்கிருக்கிறார்.

---

பெருமையை வண்மைக்குவிசேஷணமாக்கி அதனைவிசேஷிக்கிறார் (ஸர்வேச்வரனுடையவித்யாதி.) குருகூர்பதவ்யாவ்ர்த்யர்த்தம் (குருகூரித்யாதி.) வ்யாமோஹத்தாலே ஆழ்வாரையும் திருநகரியையும் வர்ணித்ததுக்குத்ருஷ்டாந்தமுகேநதாத்பர்யம் (பரமபதமித்யாதி.) குருகூர்நகரானென்னாதே "நம்பி" என்றதுக்கு தாத்பர்யத்தை யெல்லையளவு மருளிச்செய்கிறார் (நான் ஒன்றையித்யாதி வாக்யத்வயத்தாலே.) உரியனாய் - ஆளாய் என்று விசேஷிக்கைக்கு ப்ரயோஜநமருளிச்செய்வதாக உரியவடியார் நிலையைக்காட்டுகிறார் (உரியஇத்யாதி.)

அ.—நாலாம்பாட்டில், "என்னப்பனில்" என்று - காற்கடைக்கொண்டவிஷயத்தை, "ஆழ்வாருகந்தார்" என்றுவிரும்புகைக்கடியென்னென்னில்; என்றன்மை பாராதே என்னை விஷயீகரித்தநீர்மையை யநுஸந்தித்தால், அவருகந்தவிஷயத்தை யுகவாதொழிவனோவென்ன; உம்முடைய தன்மையேது, அதுபாராதே அவர் விஷயீகரித்தபடி யென்னென்ன, அத்தைப்பேசுகிறார்.

---

(நம்பிக்கித்யாதி) அவனுக்கு சேஷபூதராயிருந்துவைத்தே அவர் அலமராநிற்க, நான் ஆழ்வார்தமக்கே சேஷபூதனாயிருந்து வைத்து இன்னன்மையைப்பெறுவதே!. வைஷ்ணவஸம்ச்ரயராலே *"ప్రయాస్యన్తి""ப்ரயாஸ்யந்தி" என்றுபோய்ப் பெறவேண்டாதேஇருந்தவிடத்திலேவந்திருப்பதே!."ஏத்தியிருப்பாரை வெல்லுமே மற்றவரைச் சாத்தியிருப்பார் தவம்" என்ற வார்த்தை என்னளவிலே பலித்ததென்று ஸ்வாநுஸந்தாநத்தாலே ஸந்துஷ்டராகிறார். ... ... ... ... ... (௩)

அ.—நாலாம்பாட்டு. (நன்மையித்யாதி) "தேவுமற்றறியேன்" "பெரியவண்குருகூர் நகர் நம்பிக்காளுரியனா யடியேன் பெற்ற நன்மை" என்று இவர் சொல்லக்கேட்டவர்கள், "సర్వేషామేవలోకానాం పితామాతాచమాధవః" "ஸர்வேஷாமேவலோகாநாம்பிதாமாதாசமாதவ:" "పితాహమస్యజగతోమాతా" "பிதாஹமஸ்யஜகதோமாதா" "உலகுக்கோர்முந்தைத் தாய்தந்தையே" என்கிறபடியே - ரிஷிகளும் ஆழ்வார்களும் அவன்றானும் ஏககண்டமாக ஸர்வலோகங்களுக்கும் மாதா பிதாவாக ஸர்வேச்வரனைச் சொல்லாநிற்க, நீரும் அந்தலோகத்திலேயொருவராயிருக்க,இப்படிபந்துவானவவனை ஆச்ரயித்தல், அதுவு மன்றிக்கே,"వాసుదేవస్సర్వమితిసమహాత్మా" "வாஸுதேவஸ்ஸர்வமிதிஸமஹாத்மா" "பெருமக்கள்" "சிறுமாமனிசர்"

---

நாலாம்பாட்டு. கீழ்ப்பாட்டுக்கு மிப்பாட்டுக்கும் சங்காபரிஹாரரூபேணஸங்கதியருளிச் செய்கிறார் (என்னப்பனிலித்யாதி.) என்னப்பனில் என்றது - "தேவுமற்றறியேன்" என்றதுக்குஉபலக்ஷணம். (உகந்தார்) என்ற அநந்தரம் 'ஆகிலும்' என்றத்யாஹார்யம். ஆகையால் ஆழ்வாருகக்கை விரும்புகைக்கடியாயிருக்க (அடியென்னென்னில்) என்கிற சங்கை உதியாதென்கிறது பரிஹர்த. "புன்மையாகக் கருதுவராதலில்" என்றத்தைக்கடாக்ஷித்து என்னுடைய நிகர்ஷமேபற்றாசாக அங்கீகரித்தவாழ்வாருடையஸௌலப்யம் அவருகந்த விஷயமென்றாகிலும் பற்றுகைக்கு ஹேதுவென்று பரிஹரிக்கிறார் (என்தன்மையித்யாதி.) (என்தன்மை பாராதே) அதுவே பற்றாசாக என்று கூட்டுவது. ஒழிவேனோவென்ன என்றது-இப்படி உத்தரமருளிச்செய்யவென்றபடி.

**ஒருத்தனுக்கு நன்மையாவது - தோஷகுணங்கள் ஏகாஶ்ரயஸ்தங்களாயிருந்தால், தோஷத்தைவிட்டு குணாம்சத்தை ஸ்வீகரிக்கை; அதில் மிகுதியாவது. - "குணம்" என்று பேரிடலாவதொன்றின்றிக்கே தோஷமேயாயிருந்தால், அதுதானே பற்றாசாகக்கொள்ளுகை.**

---

ஒருவனுக்கு, "దురాచారః" "துராசாரஃ" என்கிறபடியே - நன்மை கலசாத பொல்லங்காவது - "మనసానిష్టచిన్తనమ్" "மநஸாநிஷ்டசிந்தநம்" என்றும், "கோடியமனத்தால் சினத்தொழில் புரிந்து" என்றும், "சினத்தினாற்செற்றம்நோக்கி - வாளா-தீவிளிவிளிவன்" என்றும் சொல்லுகிறபடியே - நிர்நிபந்தநமாக பகவத்விபூதிபூதரோடே சீறுபாறென்று போருகை. நன்மையாவது- அவர்கள்பக்கல் அபகார விபரீதனாயிருக்கையும், தன்பக்கலிலே நிர்நிபந்தநமாக அபகாரராளவில் உபேக்ஷித்திருக்கையும், நன்மையால் மிகுதியாவது - "అపకారిష్వపిసదా సాధుస్సాధ్వేవవర్తతే" "அபகாரிஷ்வபிஸதா ஸாதுஸ்ஸாத்வேவவர்த்ததே" என்கிறபடியே-அந்த அபகாரபரராளவிலும் உபகாரகனாய்ப் போருகை. அதாகிறது-அவர்களளவில் குறைகாணாதொழிகையிறே. இப்படி யிருக்கிறவர்களாகிறார்-பிராட்டி, கூரத்தாழ்வான்போல்வார்களிறே. ஏகாக்ஷி, ஏககர்ணி தொடக்கமான ராக்ஷஸிவர்க்கம் ஓவாமலிருந்து தர்ஜநபத்ஸநாதிகள் பண்ணியிருக்கச்செய்தேயும், "இவர்களை நலியவேணும்" என்ற திருவடியோடே மறுதலைத்து, "కార్యంకరుణమార్యేణ, கார்யம்கருணமார்யேண"என்றாப்போலே ஐந்த்ர வ்யாகரணபண்டிதனானநீ,பின்னையும் உன்ஜந்மம்விடாமல்வார்த்தைசொன்னாய், இவர்களுடையகண்ணநீர்கண்டால்கற்றவனால்கருணைபண்ணவன்றோவடுப்பது,நாட்டில்குற்றம்செய்யாமலிருக்கிறாரோனுமுண்டோ, இவர்கள்தாம் குற்றஞ்செய்யி லன்றோ இவ்விசாரம் வேண்டுவது, அவர்கள் ஏதேனும் வித்யதிக்ரமம்பண்ணினார்களோ,நீகற்ற பரப்பில் 'நாயன் சொன்னது அடியான்செய்கைகுற்றம்' என்றுஒருவசநங்கிடந்ததோ, இவர்கள் ராவணன் பரிகரமாய் அவனுக்குக் கைவழி மண்ணான வடியாருமாய் அவனுடைய ஆஜ்ஞாபரிபாலநசீலைகளுமாகா நின்றால் அவன் சொன்னத்தை மறுக்கலாமோ, பெருமாள் உன்னை என்னைக்கண்டுவாவென்றுவிட்டாரோ, ஸ்த்ரீவதம்பண்ணிவாவென்று விட்டாரோ; அப்படியே சொன்னாராகில்

---

நான்மறையாளர்களெல்லாரும். "நன்மையால் மிக்க" என்றத்தைவிவரிக்கிறார் (ஒருத்தனுக்கு இத்யாதிவாக்யத்வயத்தாலே.) பற்றாசாக-ஹேதுவா॥ க.

(நான்மறையாளர்கள்) அதுக்கடியாக ஹிதாநுசாஸநம் பண்ணக்கடவ வேதங்களிலே அவகாஹித்திருக்குமவர்கள். நாலுவகைப்பட்டவேதங்களுக்கும் வ்யாஸபதம் செலுத்தவல்லவர்கள்; அவர்களாகிறார் - ஸ்ரீஜநகராஜன் திருமகளாதல், கூரத்தாழ்வானாதல். இத்தால்சொல்லிற்றாயிற்று - வேதார்த்த தாத்பர்யம் கைப்படுகை. அதாவது-ஆந்ருஸம்ஸ்ய ப்ரதாநராகை யென்றபடி.

---

அவர்குற்றமாகிறது, நீ சொன்னாயாகில் அந்த வித்யதிக்ரமம் உன்னதாகிறது'' என்று குணக்ரஹணம்பண்ணி ராக்ஷஸிகளை ரக்ஷித்தாளிறே பிராட்டி. ஆகையாலிறே இவள்கோஷ்டியைப்பற்ற ராமகோஷ்டி லகுதரையாய்த்து. அவயவங்களிலே ஹாநி பிறக்கும்படி அபசாரம்பண்ணின நாலூரானும், "நான் புக்கலோகம் புகவேணும்'' என்றிறே ஆழ்வானபேக்ஷித்தது. இப்படிக்கு ப்ரஹ்லாதனும் க்ர்த்யோபாதாநம்பண்ணி தன்னை நலியவிட்ட புரோஹிதவர்க்கத்தைமறித்தும் அந்தகர்த்யை போய் நலிய,ஸர்வேச்வரனை அபேக்ஷித்து அவர்களைநோக்கியும், "మత్పితుస్త్వత్కృతంపాపం దేవతస్య ప్రణశ్యతు''
"மத்பிதுஸ்த்வத்க்ர்தம்பாபம் தேவதஸ்யப்ரணச்யது'' என்று-ஹிரண்யாபராதத்தை க்ஷமிப்பித்தும், இப்படி அபகாரிகள் பக்கல் உபகாரகனாய்ப்போந்தான். 45630.

(நான்மறையாளர்கள்) நாலுவகைப்பட்ட வேதங்களை ஆண்டுபோருமவர்கள். இப் ப்ரமாணவாக்யங்களை, தத்வஹிதபுருஷார்த்த ப்ரதிபாதகமான வாக்யங்களோடே சேர்த் தநுஸந்திக்கும்படி வேதநிர்வாஹகரானவர்கள். (நன்மையால் மிக்க நான்மறையாளர்கள்) இவர்களுக்கு இவ்வாத்மகுணமுண்டாகைக்கூற்றுவாய் வேதஸம்பந்தமாய்த்து. "మాతాపితృసహస్రేభ్యో వత్సలతరం శాస్త్రమ్''
"மாதாபித்ர்ஸஹஸ்ரேப்யோவத்ஸலதரம் சாஸ்த்ரம்'' என்றும், "நலங்களாய நற்கலைகள்'' என்றும் - குற்றம்செய்தாரை எவ்வளவிலும் கைவிடமாட்டாத இத்தோட்டை ஸம்பந்தமாய்த்து - இதுக்கடி. இக்கலைகளைக் கல்லாதவர்களிறே - இந்நன்மை பெறாதவர்கள். "கற்றிலேன் கலைகள்-பெற்றிலே னதனால் பேதையேன்நன்மை'' என்கிறபடியே இதடியாகவிறே * பெருநிலத்தாருயிர்க்கெல்லாம் செற்றமே வேண்டித் திரிந்தது.

---

தாத்பர்யார்த்தம். (அதுக்கித்யாதி.) அதுக்கு – பற்றாசாகக் கொள்ளுகைக்கு. சப்தார்த்தகதநமுகேந "ஆளர்கள்''என்றதுக்கு தாத்பர்யமருளிச் செயகிறார் (நாலுவகையித்யாதி.) வ்யாஸபதம் அகண்டமானவேதத்தை அர்த்தத்தின்படியே சாகாகாண்டாதிரூபேணவிபஜிக்கிற வ்யாஸருடைய அதிகாரம். அவர்களாகிறார் என்றது-நன்மையால்மிக்கநான்மறையாளர்களாகிறார் என்றபடி. உக்தார்த்த நிகமநம் (இத்தாலித்யாதி.) வேதார்த்த தாத்பர்யத்தின்படியே யநுஷ்டிக்க வல்லவர்களாயிருக்கை என்றபடி. ஆந்ருசம்ஸ்யம்-ஸர்வபூதாநுகூலாசரணம்.

(புன்மையாகக்கருதுவர்) புன்மையென்று ஒரு தர்மமும், அதுக்குஆஶ்ரயமான தர்மியுமாயிருக்கையன்றிக்கே, புன்மைதான் ஒரு வடிவுகொண்டதென்றிருப்பர்கள். புன்மையாவது - துக்கமாதல், பொல்லாங்காதல், விஷயாந்தர ப்ராவண்யமாதல், துர்மாநமாதல். இதுதான்-மேலிற்பாட்டிலே ப்ரஸக்தமாகககடவது.

இதுகல்லாதவர்களாகையாலேலங்காவாஸிகளானராக்ஷஸர் *[illegible]-ரிபூணாமபிவத்ஸலரான பெருமாளோடே வெறுப்புக்கொண்டது. * கல்லாதவரிலங்கையிறே. இதுகற்றவர்களுக்குபலம் அபகாரிகள்பக்கலிலே உபகாரம்பண்ணுகை;இதுகல்லாதவர்களுக்கு பலம்உபகாரிகள்பக்கலிலே அபகாரம் பண்ணுகை.இதுதான் மறையாகையாலேதுஷ்ப்ரக்ருதிகளுக்குஸ்வார்த்தத்தைபோதிப்பியாதிறே. "நனமையால மிக்க, நான்மறையாளர்கள்" என்கிறவிரண்டாலும்-"శ్రోత్రియంబ్రహ్మనిష్ఠమ్" "ச்ரோதரியம்ப்ரஹ்மநிஷ்டம்" என்கிற விரண்டையும் சொல்லுகிற தாய்த்து. அன்றிக்கே, (நன்மையால் மிக்கநான்மறை)நித்யதையாலும்நிர்த்தோஷதையாலும் அஜ்ஞரானவர்களுக்கு ஜ்ஞாதவ்யார்த்தங்களை யடைய ப்ரமாணாந்தர நிரபேக்ஷமாக அறிவிக்குமதாகையாலும், "వేదైశ్చసర్వైరహమేవవేద్యః" "வேதைஶ்சஸர்வைரஹமேவவேத்ய:" என்கிறபடியே ஸர்வாதிகவஸ்துவையே ப்ரதிபாதிக்கிறதாகையாலும், ப்ரமாணாந்தரங்களிற்காட்டில் ப்ராமாண்யஶ்ரீயால் அதிசயிதயான வேதார்த்தஜ்ஞாநமுடைய மஹாத்மாக்களெனனவுமாம்.

(புன்மையாகக் கருதுவர்) அப்படி பிறருடைய குறைகாணமாட்டாதவர்களுட்பட என்னுடைய தோஷாதிசயத்தாலே என்னை யநாதரிக்கும்படியாய்த்து. (புனமையாககருதுவர்) நன்மையால் மிக்கவாகள், என்னுடைய புன்மையின் மிகுதியாலே புறக்கணித் திருப்பர்கள். (நான்மறையாளர்கள் புன்மையாகக் கருதுவர்) அந்தவேதார்த்தங்களைத் திருத்தி அநுஸந்திக்கிறவர்களுக்கு, என்னுடைய குற்றததின் மிகுதியாலே ஒருகுணங்கண்டு திருத்தப்போச்சுதில்லை. (நான்மறையாளர்க ளித்யாதி) அவர்களிலே ஒருவர்க்கு ஆளாகப் பெற்றிலேன. (புன்மையாககருவா)"புன்மை" என்றும், "நான்" எனறும் வேறின்றிக்கே,"என தாவி யென்னும் வல்வினை" என்கிறபடியே புன்மைதானாகவே நினைப்பர்கள். தர்மப்ராசுர்யத்தாலே தர்மியை தர்மவ்யபதேசம்பண்ணக்கடவதிறே.

---

* புன்மைசப்தார்த்தமான துக்கமாதல் பொல்லாங்காதல்இவ்விடத்துக்கு விவக்ஷிதமன்று, மேல்பாட்டில் துக்கத்தையுபபாதியாமையாலே, பொல்லாங்கு - பாபம்.

(ஆதலிலன்னையாயத்தனு[illegible]யென்னை யாண்டிடுந்தன்மையான்) அப்புன்மையேஹேதுவாக "இவ்வளவில் நாமல்லது ரக்ஷகரில்லை" என்றுஎனக்கு ஸர்வவிதபந்துவுமானவர். "[illegible]" "த்ரீந்லோகாந்ஸம்பரிக்ரம்ய" என்கிறபடியே, காக த்தோபாதி இவனுக்கும் புறம்பொருபற்றுசில்லை என்றதுவே ஹேதுவாக ஸர்வவிதரக்ஷகரானவா. ப்ரியமே செய்யக்கடவ மாதா செய்யுமதுவும், ஹிதமேசெய்யக்கடவபிதாசெய்யுமதுவும், ஸ்வரூபாநுரூபமான அடிமைகொள்ளும்நாயன் செய்யுமதுவும் செய்யுமவர். "தாயாய்த்தந்தையா யறியாதனவறிவித்தவத்தா" என்று-பகவத்விஷயத்தில் ஆழ்வார்சொல்லுமதெல்லாம் ஆழ்வார் விஷயத்திலே சொல்லுகிறார் இவர்.

---

(கருதுவர்) நம்முடைய புன்மையன்றிகே அவர்களுடைய அநா தரங்காணும இவரை வருத்துகிறது. "[illegible]" "ஹதோஸ்ம்யதிமாமேவம் பகவாநபிமந்யதே" என்ற ஸ்ரீபரதாழ்வானைப்போலேயும், "[illegible]" "திகஸ்து தஜ்ஜந்மயத்ஸாது பஹிஷ்கர்தம்ஸ்யாத்" என்ற அக்ரூ ரனைபபோலேயும, "[illegible]" "மஹாத்மபிர்மாம வலோகயதாந்ய" என்கிறபடியே அவர்களுடைய அங்கீகாரம் புருஷார்த்தமாய், அத்தால அநாதரமும் அப்படியேயிறே.(கருது வா) அவர்களுக்கு வாசி- வாய்விட்டுச் சொல்லாமை. (நான்ம றையாளாகள புன்மையாக கருதுவர்) அவாகள்ஸர்வஜ்ஞராகை யாலே வஸ்துகதியையபதாவாக அறிந்திருப்பர்களிறே.

(ஆதலில் அன்னையாயித்யாதி) கீழ்-ஸாத்விகவர்க்கம் கைவிட்டப டிசொல்லிற்று; மேல்- ஆழ்வாரைக்கொண்டபடி சொல்லுகிறது. இப்படி எல்லாரும் கைவிட்டவனை, "நம்மையொழியக்கைக்கொள் ளுவாரில்லை" என்றுஎன்பக்கலிலே மாத்ருவத்வத்ஸலரானர். "[illegible]" "யதவாமராண்யமமராண்யஜநஸ்யபுண்யம்" என்றிறே ஆழ்வாரைச் சொல்லிறறு. (அன்னையாயத்தனும்) "அத்தனுகியன்னையாகி" என்று-பகவத்விஷயம்போலே முற்பட ஹிதபரனுய்ப் பின்பு ப்ரியபரனுகையன்றிக்கே, முறபட ப்ரியபர ராய் பினபு ஹிதபரராஞா. அப்படியே ஆளவந்தாருமுற்பட, "[illegible]" "மாதாபிதா" என்று-மாதாத்வத்தையாய்த்து அநு ஸந்தித்தது.

---

தாத்பர்யார்த்தம (அப்புன்மையே யிதயாதி.) எல்லாருக்கும் த்யாகஹேதுவானபுன்மை இவருக்கு ரக்ஷிக்கைக்கு ஹேதுவான படியை யுபபாதிக்கிறார் ([illegible] - த்ரீந்லோகாநித்யாதி.) "அன்னை" இத்யாதிக்கு கௌணவ்ருத்தியாலேசப்தார்த்தம் (ப்ரிய மேயித்யாதி.) நாயன்-ஸர்வேஸ்வரன். வ்யாக்யாதாவீடுபடுகிறார் (தாயாயித்யாதி.)

(தன்மையான்) அக்நிக்கு ஔஷ்ண்யம்போலேயும், ஜலத்துக்கு சைத்யம்போலேயும் இஸ்ஸ்வபாவங்களை நிரூபகமாகவுடையவர். அதாகிறது - "இவனுக்குபகரித்தோம்" என்றுதான் நினைத்தல், இவன்றனக்கு ப்ரத்யுபகாரத்தி லிழியவேண்டியிருத்தல் செய்யாதொழிகை.

(சடகோபன்) என்பக்கல சாட்யத்தைபபோககினவர். கீழ் மூன்றுபாட்டிலும்-"தென்குருகூர் நம்பி"என்றுசொன்னவர், இப்பாட்டில் - "சடகோபன்"என்றாரிறே-ஸ்வதோஷததைப்போக்கினபடியாலே.

---

(அன்னையாய் அத்தனாய்) முற்பட பகவதப்ரபாவததை உபதேசித்து, அநந்தரம் அதிகாரிவேஷத்தை உபதேசித்தார். "உம்முயிர்வீடுடையான்" "பத்துடையடியவர்க்கெளியவன்" "பரிவதிலீசனைப்பாடி விரிவது மேவலுறுவீர் - நன்னீர்தூய்ப் புரிவதுவும் புகைபூவே" என்று உபதேசித்திறே, "கழிமின்தொண்டர்கள்கழித்துத்தொழுமின்" என்றது. (அன்னையாய் அத்தனாய்) "ஸர்வேஷா மேவ லோகாநாம்" "குருர்பிதாகுருர்மாதா" என்று - லாக்ஷணிகமாய் வருவதன்றிக்கே, என்னுடையபுன்மையில் புரையிலலாதாப்போலே அவருடைய மாதா பித்ர்த்வத்திலும்புரையில்லை.

(என்னையாண்டிடுந்தன்மையான்) ஸ்வாமித்வமு மநுஷ்டித்தார்.பகவத்விஷயத்தை, "அத்தனாகியவன்னையாகி யாளுமெம்பிரானுமாய்" என்று அநுஸந்தித்தாப்போலே, இவரும் ஆழ்வார் விஷயத்திலே அவற்றை யநுஸந்திக்கிறார். (என்னையாண்டிடுந்தன்மையான்) திருவாய்மொழி யருளிச்செய்கிறபோது என்னைப்பட்டோலை யெழுதச்சொல்லி அருளிச்செய்தார். உசிதமான கைங்கர்யத்தைக்கொண்டார. (என்னையாண்டிடும்) ''பொலிந்து நின்ற பிரான்பக்கலிலும் ஒருக்கால் போயவாரீர்' என்று உபதேசித்தார்" என்று பிள்ளையருளிச்செய்வர். "கட்டுண்ணப்பண்ணிய பெருமாயனென்னப்பனில் நண்ணி" என்று நான்விட்டுப்போந்த விஷயத்தை, "நீள்குடக்கூத்தனுக்காள்செய்வதே - உறுவது" என்று - பொலிந்துநின்ற பிரானுக்கும் ஓரருசலிநேரும்படி பண்ணினார். (தன்மையான்) இது ஸஹஜஸ்வபாவமாய்த்து ஆழ்வார்க்கு. ஆழ்வாரடியாக அடிமைகொள்ளுகையாலே பகவத் விஷயத்துக்கு ஔபாதிகம். (சடகோபன்) என்னுடைய சாட்யத்தைப்போககி என்னை ரக்ஷித்தவர்.

---

"தன்மையான்" என்றத்தைக்கீழ்ச்சொன்ன மூன்றுபதங்களிலுங்கூட்டிதாத்பர்யம் (அக்நிக்கித்யாதி.) இஸ்ஸ்வபாவங்களை நிரூபகமாகச்சொன்னத்தால் பலிதம் (அதாகிறதித்யாதி.) சாட்யத்தைப்போக்கினதுக்கு ஜ்ஞாபகமென்னென்ன ;அருளிச்செய்கிறார் (கீழித்யாதிவாக்யத்வயத்தாலே.)

(என்னம்பி) தாய் செய்வது தமப்பன் செய்யமாட்டான், அவன் செய்வதுஇவள செய்யமாட்டாள், ஆசார்யன் செய்யுமதுஇருவரும் செய்யமாட்டார்கள், நாயன் செய்யுமது அடியான் செய்யமாட்டான், எல்லார்செய்வதும்செய்யவல்லபூர்த்தியையுடையவர். (என்னம்பியே) என்னுடைய தண்மையாகிற பாழ்ந்தாறு நிரம்பும்படியான பூர்த்தியை யுடையவரென்று பிரிததனே. இவர்க்குக் கீழ்ச்சொன்ன தர்ஷ்டாந்தங்கள் ஸர்வதீரஸாம்யமல்ல, கர்மௌபாதிகமாகவந்த ஸம்பந்தமாகையாலும் அபூர்ணஸ்தலமாகையாலும். (ச)

---

(என்னை யாண்டிடுந் தன்மையான் சடகோபன்) அவனடியார், "சிறுமாமனிசராயென்னையாண்டார்" என்று ஆழ்வார் தம்மையாண்டுபோருமவர் ததியராம்படியானால், என்னை ஆழ்வார் ஆண்டுபோரசசொல்லவேண்டாவிறே. (என்னை யாண்டிடுந்தன்மையான் சடகோபன்) என்னை ரக்ஷிதது "சடகோபன்" என்கிற பட்டப்பெயர் சூடினவர்.

(என்னம்பியே) அவரேயன்றோ என்குறைவை நிறைக்கும்படியான நிறைவை யுடையவர் என்குறைவாகிற பாழ்ந்தாறு நிறையும்போது அவருடைய பூர்த்தியே வேண்டாவோ. ஸத்வநிஷ்டர்கருபஹிஷ்டனான வென்னைத்தாமஅங்கீகரித்தும், அப்ரியங்களிலும் அஹிதங்களிலும் கைவளர்ந்து போந்தவென்னைப்ரியஹிதங்களிலேமூட்டியும், அநுபகாரகனான வென்னை கைங்கர்யங்கொண்டு போநத பூாத்தியை யுடையவர் ஆழ்வாரேயன்றோவென்று ஸ்வஹித்தாந்தத்தை த்ருடீகரிக்கிறார். ... ... (ச)

---

பதாந்தரஞ்சொல்லாதே "நம்பி" என்றதுக்குதாத்பர்யமருளிச்செய்கிறார் (தாயென்றுதொடங்கி அருசுவாக்யததாலே.) (ஆசார்யன) என்கிறவாகயத்துக்கு, சடகோபன் என்றது-என் அஜ்ஞாநத்தைப்போக்கினவரென்கையாலேயென்றுகருதது. "நம்பி" என்றதுக்கு கீழ்சசொனனவர்களோடு ஸாம்யஞ்சொன்னார்; அவர்களிலும் ஆதிக்யமாக வர்த்தாந்தரம் (எனனுடையவித்யாதி.) பாழ்ந்தாறு-படுகுழி, அதாவது-தம்முடைய தோஷஙகளாகிற வஞ்சகமான படுகுழியைத்துற்றப்பொகடுகைக்கீடான க்ருபாதிகுணபூர்த்தியை யுடையவரென்கை. ஆதிக்யத்தை யுபபாதிக்கிறார் (இவருக்கித்யாதி.) "நன்மையான்மிக்க நான்மறையாளர்கள்- என்னை-புன்மையாகக் கருதுவராதலில்-சடகோபனென்னம்பியே - என்னையாயத்தனுய் என்னையாண்டிடுந்தன்மையான்" என்று அந்வயம். ஆக, காம்கடைக்கொண்ட பகவத்விஷயத்தையும் ஸர்வப்ரகாரோபகாரகரான ஆழ்வாரையிட்டுஉகவாதொழிவேனோ வென்று கருத்து.

(அருள்கொண்டு) இவர்தாம் ஸ்வபுத்தியாலே யருளிச்செய்தாரன்று, "மயர்வறமதிநலமருளினன்" என்கிறபடியே - ப்ரஸாதலப்தஜ்ஞாநத்தை முதலாகக்கொண்டு,தத்ப்ரேரிதராய்க்கொண்டாய்த்து அருளிச்செய்தது."என்னாகியேதப்புதலின்றித்தனைகவிதான் சொல்லி" என்கிறபடியே- பிறரோபாதி, கவிபாடுகிறதாமும் விஸ்மிதராம்படி நிரவத்யமாகவிறே கவிபாடுவித்துக்கொண்டது.

(ஆயிரமின்றமிழ்பாடினன்) "[Telugu-script Sanskrit quotation]" "சதுர்விம்ஶத்ஸஹஸ்ராணி ஶ்லோகாநா முக்தவாந் ருஷி:" என்றாப்போலே ஆயிரமாகவாய்த்துப்பாடிற்று. ஓராத்மாவுக்கு ஹிதாம்சத்துக்கு ஒருபாட்டேயமையும்படியிறே இவர் பாடிற்று. (இன்றமிழ்பாடினன்) துரவகாஹமானவர்த்தத்தை, "[Telugu-script Sanskrit quotation]" "பாட்யேகேயேசமதுரம்" என்கிறபடியே ரஸகமாகவும் ஸர்வாதிகாரமாம்படியாகவும்பாடினர்.

(அ-அரும்-பொருளை - அருளினன்)ப்ரவர்த்திசிலர்க்குப்பாடவரிதான வர்த்தத்தை நிர்த்தோஷரான ஸத்துக்களுக்கருளினன். அதுதான் ஸ்வார்த்தத்தை போதிப்பியாநிற்க இவர் வெளியிட வேண்டிற்றென்னென்ன (மறை) ரஜஸ்தமப்ரசுரர்க்கு ஸ்வார்த்தத்தை மறைத்து ஸத்வப்ரசுரர்க்கு போதிக்கும்படி, * மறையாய நால்வேதமாகையாலே அவ்வர்த்தத்தை வெளியிட்டார்.

இவர் இவ்வர்த்தத்தை வெளியிடுகிறவிடத்தில் என்ன சப்தமுகத்தாலே வெளியிட்டதென்ன; (அருள்கொண்டாயிரமின்றமிழ்பாட்டினன்) அநந்தஸஹஸ்ர சாகாப்ரதிபாதிதமான அர்த்தத்தை ஸஹஸ்ரகாதாமுகத்தாலேவெளியிட்டார். (தமிழ்பாடினன) "[Telugu-script Sanskrit quotation]" "துர்ப்போதாவைதிகாஶ்ஶப்தா:" என்று துர்ப்போதமான வேதசப்தம்போலன்றிக்கே த்ராவிடபாஷையாலே வெளியிட்டார்.

பகவதர் ஆநந்த ஹேதுத்வேந ஆநந்த இதிவ்யபதேசாச் சேதி ஸூத்ரார்த்த:. * அருமறையின்பொருளை யருளினப்ரகாரமேதென்னு மாகாங்க்ஷையிலே, "அருள்கொண்டு" என்றருளிச்செய்தாரென்று திருவுள்ளம்பற்றிவ்யாவர்த்யபூர்வகமாகபகவத்க்ர்பைமூலமென்று தாத்பர்யமருளிச்செய்கிறார் (இவர்தாமித்யாதி.) அவனேப்ரேரித்தானென்ன; அருளிசெய்கிறார் (என்னாகியேஇத்யாதி.) அநந்தமானவேதார்த்தத்தை ஸங்க்ரஹித்தது ஸஹஸ்ரஸங்க்யையாக ப்ரபந்தீகரித்தாருண்டோவென்ன; அருளிச்செய்கிறார் (சதுர்விம்ஶதித்யாதி.) ஸ்ரீராமாயணத்தோடு ஸமமாக இருபத்துநாலாயிரமாகப்பாடாதே ஆயிரமாகப் பாடுவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (ஓராத்மாவுக்கித்யாதி.)

(பாடினனருள்கண்டீர்) "மயர்வறமதிநலமருளினன்" என்னும்படியான அருளல்ல, அதுதன்னையும் விளாக்குலைகொண்டிருக்குமருளிறே ஆழ்வாரருள். ஈஶ்வரன்கைவிட்ட ஆத்மாக்களிலும், அவர்களுடையதுர்க்கதியைக் கண்டு திருத்த வொருப்பட்டபடியாலே இவரருள் ப்ரத்யக்ஷமன்றேயென்கை. (இவ்வுலகினில்மிக்கதே) சிதசிதீஶ்வரதத்த்வத்ரயத்தையும் கபளீகரித்திருக்கை. "அதனில் பெரியவென்னவா" என்று - பகவத்விஷயத்தில் தமக்குண்டான அபிநிவேசத்தளவும் போருமாய்த்துஎன்னளவில் க்ருபையும். ()

---

(ஆயிரமின்தமிழ்பாடினன்) ப்ரணவம்போலே அதிஸங்க்ரஹமாதல், மஹாபாரதம்போலே அதிவிஸ்த்ரமாதலன்றிக்கே ஆயிரமின்றமிழாகப்பாடினர். (இன்தமிழ்பாட்டினன்) அவனைச் சொன்ன துயிரிதையாயிருக்கச்செய்தே அதுவறை முறுகலாயிருக்கும்; இது செவிக்கினிய செஞ்சொல்லாயிருக்கும். (பாடினன்) "வேட்கையால் சொன்னபாடல்" என்கிறபடியே தம்முடைய அநுபவாநந்த ஸாகரத்துக்குப் பரீவாஹ சுபவசநங்களைப் பண்ணினர். ஆனல் ஒருபுருஷபுத்திமூலமாக வந்த விது ப்ரமாணமாம்படி யென்னென்ன; தாம்சொன்னராகிலன்றே அது சொல்லவேண்டுவது, அவனுடைய அருள்மூலமாகச்சொன்னவராகையாலே அதுசொல்லப்போகாது, "[illegible]" "மோஹஶாஸ்த்ராணிகாரய" என்கிற அந்த நிக்ரஹமடியாகவந்ததன்றே யிது, *தெரியச்சொன்னவாயிரமாகையாலே அருளடியாகவந்ததாய்த்து. "ஆமுதலவனிவனென் றுதற்தேற்றி, என்னுமுதல்வந்து புகுந்து நல்லின்கவி, தூமுதல்பத்தர்க்குத் தான் தனனைச் சொன்னவென் வாய்முதலப்பனை" என்று ஆழ்வார் தாமேயருளிச்செய்தாரிறே. (அருளித்யாதி) "தன்புகழேத்த வருளினன்" என்று ஆழ்வாரருள்கொண்டு அவருடைய புகழை ஏத்தினைப்போலே யாய்த்து-ஆழ்வாரும் அவனுடைய வருள்கொண்டு * ஏற்கும் பெரும்புகழாயிரத்தைப்பாடிற்று. இவர்தாம் * நெடியானருள் சூடுமடியானகையாலே அருளொழிய இவர்க்குக் கைம்முதலில்லையே.

---

"சடகோபனருள்" என்றுபபோலே "பாடினனருள்" என்றதுக்கு ஹார்த்ததாத்பர்யம் (மயர்வறவித்யாதி.) 'கண்டீர்' என்றதுக்கு தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஈஶ்வரனித்யாதி.) "[illegible]" என்கிறவ்யுத்பத்தியையுட்கொண்டு அருளிச்செய்கிறார் (சிதசிதீஶ்வரேத்யாதி.) தம்முடையபக்கல் பண்ணின க்ருபையை த்ருஷ்டாந்தமுகேந விவரிக்கிறார் (அதனிலித்யாதி.) "அருள்கொண்டாடுமடியவரின்புற-அவ்வருமறையினுடைய பொருளையருளினன்; அருள்கொண்டாயிர மின்றமிழ்ப்பாடினனுடையவருளிவ்வுலகினில்மிக்கதே-கண்டீர்" என்றந்வயம் ... ... (அ)

(அருள்கண்டீரிவ்வுலகினில் மிக்கதே) அவருடைய அருளன்றோ இந்தலோகத்தில் அதிசயிதமாய்த்து. (பாடினு னருள்கண்டீ ரிவ் வுலகினில்மிக்கது) பாட்டுமன்று, பாடினவருமன்று, பாட்டுக்கடியான வருளுமன்று, இவரருளாய்த்து. (இன்றமிழ்ப்பாடினு னித்யாதி)வறைமுறுகலான ஸ்ரீகீதைசொன்னவனுடையவருளன்று, அவன் * நெறியெல்லாமெடுத்துப்பாடினவிடத்திலும் பட்டாரும் படாதாருமாய்த்து. இவரருள் அப்படியன்றியிலே, "ஊரும் நாடுமுலகமும் தன்னைப்போலவனுடைய, பெருந்தார்களுமே பிதற்றப் பண்ணிற்றாய்த்து. (அருளித்யாதி) "நெறியெல்லா மெடுத்துரைத்த நிறைஞானத்தொருமூர்த்தி" "நெறியுள்ளியுரைத்த - அம்பகவன்" என்று தான்றோன்றியான தன்னுடைய ஜ்ஞாநங்கொண்டு சொன்னதன்றிக்கே அவனுடைய வருள்கொண்டு பாடினதன்னேற்றமுண்டே இவரருளுக்கு.

(இன்றமிழ்பாடினனருள்கண்டீ ரில்வுலகினில் மிக்கது) "கேட்டாரார்வானவர்கள் செவிக்கினிய செஞ்சொல்" என்று அந்தலோகத்தில் இவருடைய பாட்டுமிக்காப்போலே இந்தலோகத்தில் அருள் மிக்கது. இங்த அருள்மிக்கு அங்குபோகம் மிகும்படியிறே லோகஸ்வபாவங்களிருப்பது. (இவ்வுலகினில்மிக்கதே) அவனுடைய வருள் ஆழ்வாரளவிலே சுவறிவிட்டது, இவருடைய வருள் ஸாம்ராஜ்யம் பண்ணுகின்றது. அவனுடைய அருளைகொண்டாடுமவர்கள் அடியவர்களாய், இவரருளைலோகமடங்கக் கொண்டாடும்படி தேஜிஷ்டமாய்த்து. (ஆயிரமித்யாதி) ஸ்ரீகீதைசொன்ன க்ர்ஷ்ணனென்றால் கையெடுப்பாரில்லை, திருவாய்மொழிபாடின ஆழ்வாருடைய வூரின்பேரைக்கேட்க இருந்ததேகுடியாகக் கையெடாநின்றது. திருவாய்மொழிகேட்டால் ஈசவராபிமாநிகளைக் கையெடார்களிறே. (கண்டீர்) இவ்வம்சம் நான் சொல்லவேண்டியிருந்ததோ, ப்ரத்யக்ஷமன்றோ. (கண்டீர்) அவனுடைய அருள் சாஸ்த்ரகம்யம்; இது ப்ரத்யக்ஷஸித்தம். (இவ்வுலகினில்-கண்டீர்) இப்போது இவ்வுலகத்திலேகண்டிகோளே, அந்த லோகத்திலே போனால் அங்குக் காணுகிறிகோள். (இவ்வுலகினில்மிககது) இந்த லோகத்தையும் ஆழ்வாருடையவருளையும் சீர்தூக்கிப் பார்த்தால் அதிலும் விஞ்சியிருப்பது இவரருளன்றோ. *கடல்மண்ணெல்லாம்விலையோவெனமிளிரும்படியிறே இவருடைய கண்ணுடைமையிருப்பது. ... ... ... ... (௮)

௮.—ஒன்பதாம்பாட்டு. (மிக்கவேதியரித்யாதி) கீழே .. ஆழ்வாருடைய குணகீர்த்தநம் பண்ணும்படி அவர் தமக்கு க்ர்பைபண்ணினபடியைச்சொல்லி இதுக்குத் தண்ணீர்த்துரும்பான அநாதிகர்மங்களை ஆழ்வார்தம்முடையபார்வையாலே பாறவடித்தபடி சொல்லி,

அ.—ஒன்பதாம்பாட்டில், “ஆழ்வாருடையவருள் “உலகினில் மிக்கது” என்கைக்கடியென்னென்னில்; என்னுடைய தண்மை பாராதே ஸகலவேதங்களினுடைய ரஹஸ்யார்த்தத்தைப்பாடி, அத்தையெனக்குபகரித்தாரென்றார்-கீழ்; “நீசனேன் நிறைவொன்றுமிலேனென்கண் பாசம்வைத்த பரஞ்சுடர்ச்சோதி” என்று அவ்விஷயத்தில் ஆழ்வாரருளிச்செய்தத்தை, ஆழ்வார்திருவடிகளிலே இவரருளிச்செய்கிறார்.

மிக்கவேதியர்வேதத்தினுட்பொருள்
நிற்கப்பாடியென்னெஞ்சுள்நிறுத்தினான்;
தக்கசீர்ச்சடகோபனென்னம்பிக்காட்
புக்ககாதலடிமைப்பயனன்றே.

---

அப்படியான ஆழ்வாருடைய க்ருபாவைபவத்தை திக்குக்கள் தோறும் அறிவிக்கக்கடவேனென்று தம்முடைய வாசாவிசேஷத்தைச்சொல்லி, “कृपया पर्यपालयत्” “க்ருபயாபர்யபாலயத்” என்றும், “அருளினன்” என்று தொடங்கி, “ஆழியானருள்தருவானமைகின்றான்” என்றது முடிவாக ரிஷிகளும் ஆழ்வார்தாமுமாக பகவத்க்ருபையை ஆதரித்துப்போகாநிற்க, நீர் ஆழ்வாருடைய க்ருபாப்ரஸித்தியாலே ப்ரவணரானபடியென்னென்ன; பகவத்க்ருபையிற்காட்டில ஆழ்வாருடைய க்ருபை இந்தலோகத்திலே அபிவிர்த்தமாகையாலேயென்றுசொல்லி நின்றது - கீழ்; இதில்-கீழே ஆழ்வாருடைய ஜ்ஞாநப்ரதாநம் ப்ரஸ்துதமாகையாலே, அவர்ஸகலவேதாந்த தாத்பர்யமான அர்த்தவிசேஷத்தைத்தமக்கு அறிவித்த ப்ரகாரத்தைச்சொல்லி, அதுக்கீடான குணங்களையுடையராகையாலே பூர்ணரான ஆழ்வார்விஷயத்தில் சேஷபூதன் ப்ரேமமேயன்றோ அவர்க்கடிமைசெய்கையில் ப்ரயோஜநமென்று உபகாரஸ்ம்ருதியாலே அவர்க்கு சேஷபூதனென்று ப்ரேமபூர்வகமாகப் பிறக்குமாதரமன்றோ அடிமையில்முடிந்தநிலமென்கிறார்.

கீழ்நாலாம்பாட்டிலே - ஆசார்யவிச்வாஸஞ் சொன்னார்; மேலிரண்டுபாட்டாலே - ஆசார்யவைபவமும் அவனுடைய உபகாரவைபவமும் சொன்னார்; இதில் - உபகாரப்ரகாரோபபாதநம்பண்ணுநின்றுகொண்டு தம்முடைய க்ருதஜ்ஞதையைச் சொல்லுகிறார். ஆசார்யனுக்குக்ருபையேவிஷயமாய் சிஷ்யனுக்கு க்ருதஜ்ஞதையே விஷயமாயிருக்கும்.

---

ஒன்பதாம்பாட்டு. மிக்கதென்கைக்கு என்றது-மிக்கதென்றறிகைக்கென்றபடி. ஸ்ரீமதுரகவிகள் கங்காதீரத்தினின்றும் ஆழ்வாருடைய திவ்யதேஜஸ்ஸை ஸாக்ஷாத்கரித்துவந்த மஹாயோகிகளாகையாலே இவருக்கொரு தண்மையுமுண்டோவென்ன; வ்யாக்யாதா த்ருஷ்டாந்தமுகேந நைச்யமென்றருளிச்செய்கிறார் (நீசனேனித்யாதி.)

ப-ஊா.—மிக்கவேதியர்- அதிசயித்தப்ராஹ்மணர்களுடைய, வேதத்தின்-வேதத்தினுடைய, உட்பொருள்-சூஹ்மமான அர்த்தத்தை,நிற்க-நிற்கும்படி,பாடி-ப்ரபந்தவிஷயமாகப்பாடி,என்னெஞ்சுள்-என்மனஸ்ஸிலே,நிறுத்தினான்-ஸுப்ரதிஷ்டிதமாம்படி பண்ணினார்; தகவு-தகுதியான, சீர்-ஜ்ஞாநாதிபூர்த்தியையுடைய, சடகோபனென்னம்பிக்கு-என்னுடைய-பூர்ணரான ஆழ்வார்க்கு,ஆட்புக்ககாதல்-தாஸ்யத்திலே ப்ரவேசத்தாலுண்டானகாதல், அடிமை-தாஸ்யத்தைக்கு, பயனன்றே-ப்ரயோஜநமதுவே. ... ... ... ... *

வ்யா.—(மிக்கவேதியர்) ப்ரமாணச்ரேஷ்டமான வேதத்தையே நிரூபகமாகவுடையவர்கள். "உளஞ்சுடர்மிகுசுருதியுள்" என்று ஆழ்வாரருளிச்செய்யக் கேட்டிருக்கையாலே, ப்ரமாணச்ரேஷ்டமென்கிறார். அநேகசாகாத்யயநம் பண்ணினவர்களென்றுமாம்.

வ்யா.—(மிக்கவேதியரித்யாதி) ஆழ்வார் தமக்கு அறிவித்த அர்த்தத்தின் சீர்மையை யருளிச்செய்கிறார். (வேதியர்) வேதியராகிறார்-பாஹ்யசாஸ்த்ரங்களை, "காண்பரோகேட்பரோதான்" என்று கண்ணாலும்பாராதே செவியாலும்கேளாதே நித்யநிர்த்தோஷமானவேதப்ரமாணநிஷ்டரானவர்கள். "[Grantha/Telugu script]" "வேதசாஸ்த்ராத்பரம்நாஸ்தி" என்றும், "வேதநூலோதுகின்றதுண்மையல்லதில்லை" என்றும் சொல்லுகிறபடியே வேதத்துக்கவ்வருக்குப்ரமாணமில்லையென்றிருக்குமவர்கள். (மிக்கவேதியர்) அவ்வேதத்திலும், "[Grantha/Telugu script]" "வேதவாதரதா:" என்றும், "[Grantha/Telugu script]" "த்ரைவித்யாமாம்ஸோமபா: பூதபாபா:" என்றும் சொல்லியபடியே ஆபாத ப்ரஸித்தமான அல்பாஸ்திரங்களான ஸ்வர்க்காதி புருஷார்த்தங்களையும் தத்ஸாதநங்களான ஜ்யோதிஷ்டோமாதிகளையும புருஷார்த்த ஸாதநங்களாக அறுதியிட்டிருக்கையன்றிக்கே, உத்தமபுருஷார்த்தமான் பகவத்ப்ராப்தியே புருஷார்த்தமென்றும், தத்ஸாதநமும், "[Grantha/Telugu script]" "ப்ரஹ்மவிதாப்நோதிபரம்" இத்யாதிவாக்யோக்தமான வேதநமாதல், "[Grantha/Telugu script]" "முமுக்ஷுர்வைசரண மஹம்ப்ரபத்யே" என்கிற சரணாகதிரூபமான சரமஸாதநமாதலென்று * வேதாந்த விஜ்ஞாநத்திலே ஸுநிச்சிதார்த்தரா யிருக்குமவர்கள். (மிக்கவேதியர்) "மிககார்வேதவிமலர்" என்று - ஆழ்வார்பாடே கேட்கையாலே "மிக்கவேதியர்" என்கிறார். அன்றிக்கே, "மிக்கவேதியர்" என்று - "சுடர்மிகுசுருதி" என்கிறபடியே ப்ரத்யக்ஷாதிகளில் அதிசமான வேதப்ரமாண நிஷ்டரென்றுமாம். (வேதியர் வேதம்) "[Grantha/Telugu script]" "ப்ராஹ்மணாநாம்தநம் வேதம்" என்றும், "அந்தணர்மாடு" என்றும் சொலலுகிறபடியே அவர்களுக்கு பரமதநமானவேதம். (வேதியர்வேதம்) வேதத்தையே தங்களுக்கு நிரூபகமாகவும் தநமாகவுமுடையராயிருப்பர்கள்.

(வேதத்தினுட்பொருள்) அந்த வேதத்திலுண்டான அர்த்தவிசேஷத்தை.

'மிக்க' என்றதுக்குச்ரேஷ்டதையும் பஹுத்வமும என்றிரண்டர்த்தம். முந்தினதையருளிச்செய்கிறார் (ப்ரமாணேத்யாதி.) ப்ரமாணச்ரைஷ்ட்யமபௌருஷேயத்வாதிகளாலே. இப்படி விசேஷணமிட்டுச் சொல்ல வேண்டுமோவென்ன; ஆழ்வார் விசேஷணமிட்டாப்போலேயருளிச்செய்தாரென்கிறார் (உளனித்யாதி;) இரண்டாமர்த்தம் (அநேகேத்யாதி.)

(வேதத்தினுட்பொருள்) ஸகலவேதங்களினுடைய ரஹஸ்யார்த்தத்தை. வேதாந்தரஹஸ்யம்-ததியசேஷத்வ பர்யந்தமான பகவச்சேஷத்வ மென்றிறே வைதிகசாஸ்த்ரம் நிர்ணயித்தது.

(நிற்கப்பாடி) துர்க்ரஹமான இந்த ரஹஸ்யார்த்தத்தைக் கேட்பார்க்கு ப்ரதிபத்திவிஷயமாம்படிபாடி. "பரமனைப்பயிலும் திருவுடையார் யவரேலும்" என்றும் "எம்மையாளும் பரமர்" என்றுமருளிச்செய்தாரிறே.

---

(வேதத்தின் - பொருள்) அதாவது - "வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்ய:" "வேதைஶ்ச ஸர்வை ரஹமேவவேத்ய:" என்றும், "வேதபபொருளேயென்வேங்கடவா" என்றும், "வேதாந்தவிழுப்பொருள்" என்றும் சொல்லுகிறபடியே - ஸகலவேதங்களும் ஒருமிடறாகவோதித் தலைகட்டுவது பகவத்ஸ்வரூபாதிகளையிறே. (உட்பொருள்) அதில் தத்விஷயப்ரதிபாதகமான அம்சம் புறப்பொருளாய், ததீயப்ரதிபாதகமான அம்சம் உட்பொருளாயிருக்கும். அதில புறப்பொருளையே சொல்லிவிடுகையே யன்றிக்கே அதுக்கு ஹ்ருதயமான ததீயவைபவத்தை, * பயிலுஞ்சுடரொளி, * நெடுமாற்கடிமை, இரண்டாலும் அருளிச்செய்தார்.

(நிற்கப்பாடி) துர்க்ரஹமானவேதார்த்தத்தைப்ரதிபத்திவிஷயமாம்படிபாடி. (நிற்கப்பாடி) கேட்டவர்கள் நெஞ்சிலே ஊற்றிருக்கும்படி பாடியென்றுமாம. (வேதத்தினுட்பொருள் நிற்கப்பாடி) அது * நிற்குமாறமறையாளுப்போலே அதில் அர்த்தரூபமான விஷ்ணுவும் ஸர்வகாலமும அழிவின்றிக்கே நிற்கும்படியாகப் பாடியென்றுமாம். (வேதியர் வேதத்தினுடபொருள நிற்கப்பாடி) வைதிகரானவர்கள் அதுக்கு ஹ்ருதயமான அர்த்த தாத்பர்யத்தையறிந்து அதிலே நிஷ்டராம்படி பாடி.

(என்னெஞ்சுள் நிறுத்தினன்) அதுதன்னை என்னெஞ்சிலே ப்ரதிஷ்டிதமாம்படி பண்ணினூர. (என்னெஞ்சுள் - நிற்கபாடி-நிறுத்தினன்) பாடுகிறபோதே என்னெஞ்சிலே தொங்கும்படிக் கீடானவிரகிட்டுப்பாடி நிறுத்தினன். (நெஞ்சுள நிறுத்தினன்) அது தன்னிலும்மேலெழச்சொலலிவிடுகையன்றிக்கே அந்தரங்கமாக உபதேசித்தார்.

---

வேதார்த்தம பகவசசேஷத்வமன்றே, உட்பொருளைத் தந்நெஞ்சில் நிறுத்துகையாவதென்னென்ன; அருளிச்செய்கிறூர் (வேதாந்தரஹஸ்யமென்றுதொடங்கி ஸ்திரமாக்கிறூ ரென்னுமளவும்.) ஆழ்வார் ஏவிக்கொள்ளத் தாம் இங்கே யடிமைசெய்கையாலே தமக்கு இங்கே ஸித்தித்தவடிமை ஆழ்வாருக்கு அர்ச்சாவதாரம் ஏவிக்கொள்ளமாட்டாமையாலே பரமபதத்திலேஸித்தித்ததென்றபடி. வேதாந்தரஹஸ்யம்-ப்ரணவத்தில் சதுர்த்த்யர்த்தம்.

(என்னெஞ்சுள் நிறுத்தினன்) பகவச்சேஷத்வத்துக்குங்கூட மேட்டுமடையான என்னெஞ்சிலே இத்தைஸ்திரமாக்கினர். கல்லைத்துளைத்து அதிலேநீரைநிறுத்துவாரைப்போலே, நிர்விவரமான என்னெஞ்சுக்குமிதுவே விஷயமாம்படி பண்ணினர். இதிறே-என்தண்மையைப்பாராதே என்றிறத்திற்பண்ணின வுபகாரம்.

(தக்கசீர்ச்சடகோபன்) இதுதொடங்கி உபகாரஸ்ம்ருதியாலே தமக்குப்பிறந்த அபிநிவேசத்தைப்பேசுகிறர். (தக்கசீர்ச்சடகோபன்) ஸர்வேஶ்வரன்கவிகள்" என்றால் தகுதியான கல்யாணகுணங்களையுடைய ஆழ்வார்.

---

(என்னெஞ்சுள் நிறுத்தினன்) புன்மையே வேஷமான என்னெஞ்சிலே படுத்தினர். (நிறுத்தினன்)உபதேசித்தவர் தாமே குலைக்கிலும் குலையாதபடி த்ருடாத்யவஸாயமாக வுபதேசித்தார். (என்னெஞ்சுள்நிறுத்தினன்) தத்விஷயமுமுட்பட ஓடுபோகாத வென்னெஞ்சிலே தத்தீயவைபவமுட்பட நடையாடும்படி பண்ணினர். (மிக்கவேதியர்வேதத்தினுட்பொருள் நிற்கப்பாடியென்னெஞ்சுள் நிறுத்தினன்) வேதார்த்தங்களைவகுத்து அதுக்குப்பாசுரமிட்டுத் திருவாய்மொழி பாடினப்போலேயோ அப்பரமார்த்தங்களை என்னெஞ்சிலே படுத்தினவருமை. வேதார்த்தங்களைத் திருவாய்மொழியிலே சேர்த்து அத்திருவாய்மொழியார்த்தங்களை என்னெஞ்சிலே சேர்த்தார். ஆசார்யவைபவம் கைப்பட்டவனுக்காய்த்து ஸகலவேதார்த்தங்களும் கைப்படுவது. (மிக்கவித்யாதி) ப்ரமாணவைபவத்தையும், ப்ரமாத்ருவைபவத்தையும், ப்ரமேயமான தத்வவைபவத்தையும் அபிமதவைபவத்தையும இவர்நெஞ்சிலே பூர்ணேபதேசம் பண்ணினராய்த்து.

(தக்கசீர்ச்சடகோபனென்னம்பி) இப்படி உபதேசிக்கவல்ல ஜ்ஞாநாதிபூர்த்தியைக் காட்டி என்னுடையசாட்யத்தைப் போக்கித்தம்முடைய பூர்த்தி நிலைநின்றவர். குறைவாளனைக்குறைவறுக்கையிறே ஒருவன்பூர்த்திக்குமேலெல்லை.

---

உக்தார்த்தத்துக்கு த்ருஷ்டாந்தமுகேந விவரிக்கிறர்(கல்லைத்துளைத்தித்யாதி.) நிர்விவரமான - பகவச்சேஷத்வம்கூடப் புகுராதபடியான. கீழோடேயிவ்வர்த்தத்துக்குச் சேர்த்தியாகையாலே ப்ரக்ருதார்த்தோப ஸம்ஹாரம் பண்ணுகிறர் (இதிறேயித்யாதி.)

இதுதொடங்கி என்றது - இந்த அர்த்தமும் மேற்பாட்டும். "தக்க" என்றதுக்கு ஒன்றுசொல்லவேண்டுகையாலே, "ஸர்வேஶ்வரன்கவி" என்று சொல்லுகைக்குத்தக்கவொன்றர்த்த மருளிச்செய்கிறர் (ஸர்வேஶ்வரனித்யாதி.)

"அயர்வறுமமரர்களதிபதி" என்றால் ஸர்வேஶ்வரத்வத்துக்குப்போரும்படி யிருக்குமாப்போலே, "ஸர்வேஶ்வரன்கவிகள்" என்றால் போரும்படியாயாய்த்து ஆழ்வாரிருக்கும்படி; "ஏற்கும் பெரும்புகழ் வானவரீசன்கண்ணன்றனக் கேற்கும் பெரும்புகழ் வண்குருகூர்ச்சடகோபன்" என்று தாமேயருளிச்செய்தாரிறே. (என்னம்பிக்கு) அதுக்குமேலே யொருபௌஷ்கல்யப்ரேமயிறு. என்னைவிஷயீகரிக்கைக்குத் தகுதியான சீலாதிகுண பௌஷ்கல்யத்தை யுடையவரானவர்க்கு.

(ஆள்புக்ககாதல்) அநந்யார்ஹ சேஷமாக்கினருசி.

---

(நம்பி) விபூதிக்காக வுபதேசித்தாலும் தம்முடைய ஜ்ஞாநாதிகளைக் கரைகாணவொண்ணாதவர். (என்னம்பி) அவருபதேசித்த வர்த்தங்களிலும் அவருடையபூர்த்தியிலேயாய்த்து இவர்தோற்றது. (தக்கசீர்ச்சடகோபனென்னம்பி) * தக்க கீர்த்தித் திருக்குருங் குடி நம்பியானவவருடைய நம்பியன்று இவருடையநம்பி. அப்பூர்த்தி என்னளவிலே வந்ததில்லையே.

(ஆட்புக்ககாதல்) அவர்க்கடிமைபுக்கதாலுண்டான வாதரம். (அடிமைப்பயனன்றே) அடிமையே ப்ரயோஜநமாகவுடையதன்றே. முற்பட அடிமைபுக்கு, அநந்தரம்ஆதரம்நடந்து, பின்பு அடிமைசெய்யுமதுவே அவர்க்குப்ரத்யுபகாரம். முற்படசேஷபூதனாய், பின்பு ப்ரேமம்நடந்து ப்ரேமாநுரூபமான கிஞ்சித்காரமும் நடக்கவேணும். ஆசார்யபவ்யதையும் ஆசார்யப்ரேமமும், ஆசார்யகிஞ்சித்காரமும் இமமூன்றும் அபேக்ஷிதமிறே சிஷ்யனுக்கு. அவர், பகவச்சேஷத்வத்தையும் பகவத்ப்ரேமத்தையும் பகவச்சேஷவ்ருத்தியையும் உபதேசித்தார்; இவர், ஆழ்வார்க்கு சேஷமாய் அவர்க்கேஸ்நிக்தராய் அவர்க்கேகிஞ்சித்கரிக்கத்தேடுகிறாரயின்றது; இவர் கற்றது இதிலேயாய்த்து. அவர் புறப்பொருளைவிட்டு உட்பொருளைக் கொடுத்தார்; இவர் உட்பொருளானபகவத்விஷயந் தன்னைப் புறப்பொருளாக்கி, அதிலுமுட்பொருளான ஆழ்வார் திருவடிகளிலே சேஷபூதராய் ப்ரேமபூர்வகமான கைங்கர்யத்திலே இழிகிறாராய்த்து.

---

கண்ணன் தனக்குக்கவியென்றால் "ஏற்கும்பெரும்புகழ்"என்று கருதிப்ரமாணமருளிச்செய்கிறார் (ஏற்குமித்யாதி.) "தக்கசீர்" என்றபோதே கல்யாணகுணங்களைச் சொல்லியிருக்க"நம்பி" என்பானென்னென்ன; அருளிச்செய்கிறார் (அதுக்குமேலே யித்யாதி வாக்யத்வயத்தாலே.) ஆள்புக்ககாதல் - ஆள்புக்குப்பண்ணினகாதல். இத்தையருளிச்செய்கிறார் (அநந்யேத்யாதி.)

(அடிமைப்பயனன்றே)இந்தருசியன்றோ அப்போதேதாஸ்யமான ப்ரயோஜநத்தோடே வ்யாப்தமாயிருப்பது. பகவத்விஷயத்தில் ருசியடியாகப்பிறந்ததாஸ்யம், சரீரவிஸ்லேஷம் பிறந்து அர்ச்சிராதிமார்க்கத்தாலே ஒருதேசவிசேஷத்திலேசென்றால் பெறக்கடவதாயிறேயிருப்பது; அங்ஙனன்றிக்கே, ஆழ்வார்பக்கல் பிறந்தருசி, இச்சரீரத்தோடேயிங்கேயாழ்வார்திருவடிகளிலேயெல்லாவடிமையுஞ் செய்யலாம்படிபண்ணும். "துயராறுசுடரடிதொழுதெழு" என்றுமுதலிலே அபிநிவேசித்த ஆழ்வார்க்கு * முனியே நான்முகனுக்கவ்வருகேயிறே பேறாய்த்து; இவ்விஷயத்தில் ருசிபிறந்தால் அத்தனைவிளம்பியாதென்கிறது. அன்றேயென்றது - ஆமென்றுமாம் ... ... ... ... ... (கூ)

(அடிமைப்பயனன்றே) அடிமை ப்ரயோஜநமென்னுமிடம் ஆழ்வார்ஸ்ரீபாதத்திலே கற்றார். (அன்றே) அதுவேயன்றோ அர்த்தம். அந்த * வழுவிலாவடிமை செயகிறதிற்காட்டில் இதுவன்றோவுறுவது. ... ... ... ... (கூ)

அ.—பத்தாம்பாட்டு. (பயனன்றாகிலுமித்யாதி) கீழ்ப்ரபந்தத்திலோடின தாத்பர்யம் - ஆழ்வாருடைய ஸர்வப்ரகாரவைலக்ஷண்யமும், இப்படிவிலக்ஷணரானவாழ்வார் தம்பக்கல் பண்ணின உபகாரவைபவமுமிறே. தம்முடைய தோஷத்துக்கு எதிர்த்தட்டான ஆழ்வார்வைலக்ஷண்யமும், தம்முடைய குறைக்கெதிர்த்தட்டான உபகாரகத்வமும், இவ்விரண்டையும் சொலலிக்கொண்டு போந்தார்-கீழ்; இப்பாட்டில்-அவ்வுபகாரத்துக்குப்ரத்யுபகாரம் தேடிக்காணாமையாலேதெருடாடுகிறார்."வேதத்தினுட்பொருள்நிற்கப்பாடியென்னெஞ்சுள்நிறுத்தினான்" "[Telugu/Grantha script text]" "யோமாததாதிஸ இதேவமாவா:" என்று முமுக்ஷுதசையோடு முக்ததசையோடுவாசியற உபகாரஸ்ம்ருதி நடக்குமதுபோக்கிப்ரத்யுபகாரம் பண்ணித் தலைக்கட்டப்போகாதிறே. ப்ரத்யுபகாரநிரபேக்ஷத்வம்ஆசார்யலக்ஷணமாய் ப்ரத்யுபகாரஸாபேக்ஷத்வம் சிஷ்யலக்ஷணமாகையாலே, அதுக்குவழிதேடிக்காணாமையாலே அலமர்கிறார். உபகாரம்அதுக்குப்ரத்யுபகாரந்தேடுகையிலேமூட்டும்;உபகாரகௌரவம் ப்ரத்யுபகாரமில்லாதபடிபண்ணும். அதுக்கு ஸத்ருசப்ரத்யுபகாரமாகவேணும்; அதுண்டாகிலிறேஇவன்பண்ணலாவது

---

அடிமையை,பயனாக-பலமாக வுடைத்தானதென்று அர்த்தமருளிச்செய்கிறார் (அப்போதேயித்யாதி.) வ்யாவர்த்யபூர்வகம் விவரணம்பண்ணுகிறார் (பகவதித்யாதி.) இத்ஸை மூதலிக்கிறார் (துயராறுசுடரித்யாதி.) முந்தினவர்த்தத்தில்"அன்றே-அடிமைப்பயன்" என்றந்வயம்; இரண்டாமர்த்தத்துக்கு யதாக்ரமமந்வயம். (கூ)

அ.—பத்தாம்பாட்டில், ஆழ்வார் தமக்கு உபகரித்தவுபகாரத்தையநுஸந்தித்தவாறே, தாம்இதுக்குமுன்பு ஆழ்வார்விஷயத்தில் நின்றநிலையடங்க முதலடியிட்டிலராகத்தோற்றுகையாலே, அவர் பண்ணின வுபகாரத்தைப்பேசுகிறார். அவன் பண்ணின உபகாரத்துக்குப்ரத்யுபகாரமில்லையோவென்னில்; "[illegible]" "க்ர்த்ஸ்நாம்வாப்ர்திவீமதத்யாந் நதத்துல்யம் கதஞ்சந" என்று - பஞ்சாசத்கோடி விஸ்தீர்ணையான பூமியும்ஸத்ர்ஶமன்றென்றதிறேசாஸ்த்ரம். அவன் இவனுக்குஉபகரித்தது ஸர்வாதிகமாயிருப்பதொரு மிதுநத்தையானால், அப்படியேயிருப்பதொரு மிதுநத்தையுபகரித்தாலிறே இவன் ப்ரத்யுபகாரம்பண்ணினானாவது; ஆகையாலே ஆசார்யவிஷயத்திலெல்லாம் செய்தாலும் அவன்பண்ணின வுபகாரத்தைப்பார்த்தால் ஒன்றும் செய்திலனாய்என்று மொகுகக்குறைவாளனாய்ப் போருமித்தனை.

பயனன்றாகிலும்பாங்கலராகிலும்
செயல்நன்றாகத்திருத்திப்பணிகொள்வான்
குயில்நின்றார்பொழில்சூழ்குருகூர்நம்பி
முயல்கின்றேனுன்றன் மொய்கழற்கன்பையே.

ப-ரை.—பயனன்றாகிலும் - ப்ரயோஜநமில்லாதபோனாலும், பாங்கலராகிலும் - பாங்கற்றவர்களாகிலும், செயல்-தமசெயலாலே, நன்றாக - அநுஷ்டாநபர்யந்தமாக, திருத்தி - சிக்ஷித்து, பணிகொள்வான் - பகவத்பாகவத கைங்கர்யத்தில் அந்வயிப்பிக்குமவராய, குயில் நின்று - கோகிலங்கள்நின்று ஆர்-நிறைந்த, பொழில்-சோலைகளாலே, சூழ் - சூழப்பட்ட, குருகூர் நம்பி - ஆழ்வீர், உன்றன் - உம்முடைய, மொய் கழற்கு - அழகிய திருவடிகளில், அன்பையே - ப்ரீதியையே, முயல்கின்றேன் - ஸம்பாதிக்கிறேன்.

ஈ.—பத்தாம்பாட்டில், "அவன் பண்ணின உபகாரத்தின்படியே ஒன்றும் செய்திலேன்" என்கிறார்.

பயனன்றாகிலும் - ப்ரயோஜநமில்லாதபோனாலும். பாங்கலராகிலும் - பாங்கற்றவர்களாகிலும், செயல்-தமசெயலாலே, நன்றாக - அநுஷ்டாநபர்யந்தமாக, திருத்தி - சிக்ஷித்து, பணிகொள்வான் - பகவத்பாகவத கைங்கர்யத்தில் அந்வயிப்பிக்குமவராய், குயில் நின்று-கோகிலங்கள் பரிஸரத்திலே

இனி "எத்தைச்செய்வோம்" என்கிறதலேசிய்ப்போடே காலம்போமித்தனை. இவன் திருத்தித்தருகையாலே பகவத்விஷயத்துக்கு ஆத்மஸமர்ப்பணம் பண்ணலாம், இவன்றானே திருத்தினவத்தை இவனுக்குக் கொடுக்கைஸத்ர்சமன்றே.

---

பத்தாம்பாட்டு. "ஆட்புக்ககாதலடிமைப்பயனன்றே" என்று-தாம் அநுகூலராய்கைங்கர்யங்களைப்பண்ணிக்கொண்டிருக்க, "பயனன்றாகிலும்பாங்கலராகிலும்" என்று அநுஸந்திக்கக்கூடுமோவென்கிற சங்கையிலே அதுதன்னெஞ்சிற்படாமையாலேயருளிச்செய்கிறாரொன்று அவதாரிகையருளிச்செய்கிறார் (ஆழ்வாரித்யாதி.) தமக்கு-மதுரகவிகளுக்கு. உபகாரத்தை என்றது-"என்னெஞ்சுள்நிறுத்தினான்" என்றத்தைக்கடாக்ஷித்து. இதுக்குமுன்பு என்றது-"பயனன்றாகிலும்" இத்யாத்யநுஸந்தாநத்துக்கு முன்பென்றபடி. "அவன் பண்ணின உபகாரம்" என்றது-தன்பக்கலொன்றுமின்றிகே யிருக்கஅவன் பண்ணினஉபகாரமென்றபடி. முதலடியிட்டிலராகத்தோற்றுகைக்குஹேது தாம்பண்ணின அநுகூலாசரணம் ஸத்ர்சமல்லாமையாலே அத்தைப்பண்ணக்கூடாதென்று கருத்து. ப்ரத்யுபகாரம்-ஸத்ர்சோபகாரம். ப்ரத்யுபகாரமில்லாமைக்கு சாஸ்த்ரங்காட்டினவநந்தரம் உபபத்தியுங்காட்டுகிறார் (அவனிவனுக்கித்யாதி.)

யிருக்கிற குயில்களுங்கூட நின்று, ஆர்-திருவாய்மொழியைப்பாடுகிற ஸமர்த்தியையுடைய, பொழில - பொழிலாலே, சூழ்-சூழப்பட்ட, குருகூர்-திருநகரிக்கு, நம்பி-நிர்வாஹகரானவரே, உன்றன-தேவரீருடைய, மொய்-ச்லாக்யமான, கழற்கு - திருவடிகளுக்கு, அன்பையே - அபிநிவேசத்தையே, முயல்கின்றேன் - அர்த்தியாநின்றேன்.

வ்யா.—(பயனன்றாகிலும்) நாட்டிலேயொருவனுக்கு ஒருவனுபகரிப்பது ஒருப்ரயோஜநத்தைப்பற்றவிறே; அங்ஙனொருப்ரயோஜநமில்லாதிருக்கச்செய்தேயும். (பாங்கலராகிலும்) ப்ரயோஜநமில்லாவிட்டால், சொல்லுகிற ஹிதங்கேட்கைக்குப் பாங்காயிருக்கலாமிறே; அங்ஙன் பாங்கின்றிக்கே யிருந்தார்களேயாகிலும்.

---

வ்யா.—(பயனன்றாகிலும் பாங்கலராகிலும்) "ధర్మార్థౌ యత్ర న స్యాతాం శుశ్రూషా వాపి తద్విధా। తత్ర విద్యా న వక్తవ్యా" "தர்மார்த்தௌ யத்ர நஸ்யாதாம் ஶுஶ்ரூஷா வா ததாவிதா| தத்ர வித்யா ந வக்தவ்யா" என்கிறபடியே தாமார்த்தரூபமான ப்ரயோஜநமாதல், "శుశ్రూషా" "ஶுஶ்ரூஷா" என்கிறவதிகாரமாதலின்றிக்கேயிருக்கச்செய்தேயும். அத்ருஷ்டப்ரயோஜநமாதல் த்ருஷ்டப்ரயோஜநமாதலின்றிக்கேயிருக்கச்செய்தேயும், பகவத் ப்ரீதிஹேதுக் காதல் பகவத்ஸமாராதந சேஷமாக இவர்பக்கலுண்டான த்ரவ்யஸித்திக்காதலன்றிக்கே, அவனுடைய சுச்ரூஷையாகிற அதிகாரிபூர்த்திகண்டாயிறே பகவத்விஷயத்தை உபதேசிக்கைக்கு யோக்யதையுள்ளது. "అర్థినః, ధార్మికః, శుశ్రూషుః, అధ్యాప్యః" "அர்த்திந:, தார்மிக:, ஶுஶ்ரூஷு:, அத்யாப்ய:" என்கிறபடியே நிரவதிகவத்ஸலனானவனும், "శిష్యస్తేऽహం శాధి మాం త్వాం ప్రపన్నమ్" "ஶிஷ்யஸ்தேஹம் ஶாதிமாம் த்வாம் ப்ரபந்நம்" என்றபின்பிறே உபதேசப்ரவர்த்தகனாய்த்து. இவர் அப்படியன்றிக்கே, துர்க்கதியேபற்றாசாகவாய்த்து உபதேசித்தது. *புன்மையாகக் கருதினாதேபற்றாசாகவாய்த்து *இவர் அன்னையாய்த்தனாய்த்து. இத்தலையில் ஒருநன்மைபார்க்கவேண்டிற்றில்லை புன்மையாகிற துர்க்கதி. ஸ்வப்ரயோஜந நிரபேக்ஷமாகப் பிறருடைய துர்க்கதியே பற்றாசாகவாய்த்து ஸத்துக்கள் உபதேசிப்பது. "శ్రూయతాం పరమార్థో మే దైతేయా దనుజాత్మజాః। న చాన్యథైతన్మన్తవ్యం నాత్ర లోభాదికారణమ్" "ச்ரூயதாம்பரமார்த்தோமே தைதேயா தநுஜாத்மஜா:| நசாந்யதைதந்மந்தவ்யம் நாத்ரலோபாதிகாரணம்" என்கிறபடியே. "నాత్ర లోభాదికారణమ్" "நாத்ரலோபாதிகாரணம்" என்கிறவிடம்-ஸ்வப்ரயோஜநநிரபேக்ஷம்; "దనుజాత్మజాః" "தநுஜாத்மஜா:" என்கிறவிடம் - ஆஸுரஸம்பந்தம் பிறருடையதுர்க்கதி; "శ్రూయతామ్" "ஶ்ரூயதாம்" என்கிறவிடம்-உபதேசம்; "పరమార్థః" "பரமார்த்த:" என்கிறவிடம் - உபதேஷ்டவ்யமான அர்த்தகௌரவம்; "మే" "மே" என்கிறவிடம் - உபதேஷ்டாவினுடைய ஆப்திபூர்த்தி.

இப்படியிருக்குமவர்களுக்கு ஹிதஞ்சொல்லுகைக்குஹேது வென்னென்னில்; இவர்களநர்த்தம் பொறுக்கமாட்டாமையிறே. இப்படியுபதேசித்தாருண்டோவென்னில்; ராவணனுடைய துர்க்கதியைக்கண்டு, "[illegible]" "மித்ரமௌபயிகம்கர்த்தும்" என்று-அவனுக்கு ஹிதஞ்சொன்னாளிறே பிராட்டி. ஒருவன், தலைக்கடையையும் புழைக்கடையையும் அடைத்துக்கொண்டு அகத்துக்குள்ளே கிடக்க அகம் நெருப்புப்பட்டுவேவாநின்றால், கண்டுநின்றார் அவிக்கும்போது, தங்களுக்கொரு ப்ரயோஜநத்தைப்பார்த்தாதல், உள்ளே கிடந்தவனபேக்ஷித்ததுக்காக வாதலன்றே யவிப்பது; இப்படியாய்த்து ஆழ்வார்படியும்.

(செயல்நன்றாக) தனக்கொரு ப்ரயோஜநமில்லையேயானாலும், எதிர்த்தலைபாங்கின்றியேயொழிந்தாலும் அவனுஜ்ஜீவிக்கும்படியென்னென்னில்; தம்முடைய செயலாலே எல்லாம நன்றாம்படிபண்ணி. இவன்செயல்தான் நன்றாமபடிபண்ணி யென்றாகவுமாம்.

---

(பயனன்றாகிலும் பாங்கலராகிலும்) நிஷ்பலமேயாகிலும் அநதிகாரிகளேயாகிலும்.

(செயல்நன்றாகத் திருத்தி) அநுஷ்டாநபர்யந்தமாக வுபதேசித்துத் திருத்தினார். என்னளவன்றியிலே தம்முடைய வளவிலே உபதேசித்தார். க்ஷத்ரபந்துவுக்கு துர்க்கதியே பற்றாசாக வைஷ்ணவனுபதேசித்தவிடத்திலும் காலாந்தரத்திலிறே அவனுக்குபலித்தது, இவர் * ஊரும் நாடு முலகமும் தன்னைப்போலே யாக்குமவராகையாலே * செயல்நன்றாகததிருத்தினார். (செயல்நன்றாகத் திருத்தி) இவருபதேசித்த வர்த்தம என்னெஞ்சிலேபட்டு அதுதான் அத்யவஸாயபர்யந்தமாய், அவ்வளவன்றிக்கே அநுஷ்டாநசேஷமாய், அவ்வநுஷ்டாநந்தான் ஸதஸதநுஷ்டாந மிச்ரமாகையன்றிக்கே ஸதநுஷ்டாநமேயாம்படி திருத்தினார். முற்பட ச்ரவணமும் ச்ருதமானவர்த்தத்தில் மநநமும் மநநமானவர்த்தத்தில் மஹாவிச்வாஸமும் விச்வஸிதமானவர்த்தத்தில் அநுஷ்டாநமும் அதில் அஸதநுஷ்டாநம் சலசாதேஸதநுஷ்டாநமேயாய்ப் போருகையுமிறே செயல் நன்றாகத் திருத்துகையாவது.

---

துர்க்கதிகண்டுபதேசிக்கைக்கு உபபத்தியுங்காட்டுகிறார் (ஒருவனித்யாதி.) அகம்-க்ருஹம். சங்காஸமாதாந பூர்வகம் எடுத்த ப்ரதீகத்துக்கு தாத்பர்யம் (தனக்கித்யாதி.) ஸ்வப்ரயோஜந மில்லாதே போனாலும் அவன்ப்ரயோஜநமானாலும் ஸித்திக்க வேண்டாவோ வென்று சங்கைக்குக்கருதது. "செயல்நன்றாக" என்றது-ஸாமாந்யமாக விருக்கையாலே, ஆழ்வாருடைய செயலாலே என்று கீழருளிச்செய்து, இவன் செயலை நன்றாகப் பண்ணியென்று அர்த்தாந்தர மருளிச்செய்கிறார் (இவனித்யாதி.)

(திருத்திப்பணிகொள்வான்) "தீர்ந்தவடியவர்தம்மைத்திருத்திப்பணிகொள்ளவல்ல" என்று—"ப்ராப்யமும்ப்ராபகமுந்தானே" என்றத்யவஸித்திருக்குமவர்களுடையவிரோதியைப்போக்கி அடிமைகொள்ளுமவனென்றதிறே ஸர்வேஶ்வரனை; அங்ஙனன்றிக்கே, இவையொன்றுமின்றிக்கே யிருக்குமவர்களையும் திருத்திப்பணிகொள்ளுமவரிறே ஆழ்வார். "பணிகொள்வான் - குருகூர்நம்பி" என்றந்வயம்.

---

(திருத்தி) இவற்றில் என்கையில் என்னைக்காட்டிக்கொடாதே தாமே கைக்கொண்டாராய்நின்று இவ்வவஸ்தாபந்நமாக்கினார்.

(பணிகொள்வான்) பகவத்பாகவதவிஷயங்களில் கிஞ்சித்காரத்திலே மூட்டினார். திருத்தினபலம் விநியோகமகொள்ளவேணுமே, இவரும் அவர்க்குகப்பாகவாய்த்து பகவத்பாகவத விஷயங்களுக்கு அடிமைசெய்வது. பகவத்கிஞ்சித்காரமும வேணும், ஆசார்யகிஞ்சித்காரமும் வேணும், வைஷ்ணவகிஞ்சித்காரமும் வேணும். பகவத்பாகவதவிஷயங்களுக்கு அடிமைசெய்யும் ஆசார்யனுக்குப்ரியமாக பகவத்பாகவதவிஷய மிரண்டும் உகக்கைக்கு ஆசார்யனுக்கு அடிமைசெய்யும். பதத்ரய நிஷ்டையைப்போலே கிஞ்சித்காரத்ரயமும் இவனுக்கு அபேக்ஷிதமா யிருக்கும். ஸ்வரூபம் பகவதகிஞ்சித்காரத்திலே மூடடும்; பகவத்ப்ரீதி பாகவதகிஞ்சித்காரத்திலேமூட்டும்; பாகவதப்ரீதியும் இவ்வ்யக்தித்வயத்தினுடைய வைபவத்தை உபதேசித்தஉபகார ஸ்ம்ர்தியால் வந்த விவன் தன்னுடைய ப்ரீதியும் ஆசார்யகிஞ்சித்காரததிலே மூட்டும். இப்படி ஒன்றுக்கொன்று ப்ரவர்த்தகமாயாய்த்து மூன்று விஷயமுமிருப்பது. இதில் ஒன்று நிருபாதிகஸம்பந்தம்; மற்றவை யிரண்டும் ஸோபாதிகஸம்பந்தம். அதில் ஒன்று உததேச்யதையுபாதியாகப் பிறக்கும்; ஒன்று உபகாரகத்வமுபாதியாகப்பிறக்கும்.

(பயணித்யாதி) அநதிகாரியான வென்னை அதிகாரத்தின் மேலெல்லையிலேநிறுத்தி நிஷ்பலமான வென்னை பகவத்பாகவத கைங்கர்யத்திலே அந்வயிப்பித்துத் தாமருளின ப்ரயோஜநங்கொண்டார்.

---

"திருத்தி" என்றதுக்கு - திருந்தாதவரையும் திருத்தியென்றாய், வ்யாவர்த்யபூர்வகமாக தாத்பர்யமருளிச்செய்கிறார்(தீர்ந்த இத்யாதிவாக்யத்வயத்தாலே.) இவையொன்றுமின்றிக்கே என்றது - ப்ராப்யமவனே என்றும் ப்ராபகமவனே என்றும் சொல்லுகிற அத்யவஸாயங்களின்றிக்கே என்றபடி. "கொள்வான்" என்றது-கொள்ளுகைக்காகவென்று போராமைக்காக அந்வயங்காட்டுகிறார் (பணிகொள்வா னித்யாதி.)

(குயில்நின்றார் பொழில்சூழ்) என்றவிடம் - திருத்திப் பணி கொள்ளும்படிக்கு த்ருஷ்டாந்தம். இவர் ஒருகாலத்திலே ஆற்றாமையாலே, "காணவாராய்" என்று கூப்பிடுவது மொருபாசுரமுண்டு; "யாவர் நிகரகல்வானத்தே" என்று களித்துச் சொல்லுவது மொருபாசுரமுண்டு; இவர்பாசுரத்தைக்கேட்ட குயில்களும் செவியேற்றத்தாலே யிப்பாசுரத்தையேசொல்லும்; ஆகஇரண்டுபாசுரத்துக்கும் குயில்களாய்த்துப் பயிற்றுவன.

---

(பயனித்யாதி) அவன் * தீர்ந்த வடியவர்தம்மைத் திருத்திப் பணிகொள்ளுமித்தனை, இவர் கருந்தரையிலே திருத்துமவராய்த்து. அவன் அதிகாரநிஷ்பத்தி பிறந்தால் ப்ராப்யவிரோதிகளைப் போக்கிப் பணிகொள்ளும்; அவ்வதிகார நிஷ்பத்தி தன்னையுங்கொடுத்தாய்த்து இவர் அடிமைகொண்டது. அதிகாரநிஷ்பத்தி ஆசார்யனாலே; புருஷார்த்த நிஷ்பத்தி ஈச்வரனாலே. அதிகாரமாவது-ஜ்ஞாநாநுஷ்டாநங்களில் புரையறுதியாகையாலே, "செயல்நன்றாகத்திருத்தி" என்று-அவராலேயிறே இவர்க்குண்டாய்த்து. இவனைத் தன்னுபதேசத்தாலே வெளிச்செறிப்பித்து, தாநநுஷ்டித்துக்காட்டி, தன்னில் விஞ்சின அநுஷ்டாநம் இவன்கையிலே கண்டாலாய்த்து அவன் இவனை பகவத்பாகவத கைங்கர்யயோக்யனென்றறுதியிடுவது.[ஆர்ந்தபுகழச்சுதன்] இவ்வளவிலே புகழ்படைத்து, "பற்றினாரைவிடாதவன்" என்கிற பட்டப்பெயரும் பெற்றாய்த்து அவனிருக்கிறது. (பணிகொள்வான் குயில்நின்றார் பொழில்சூழ்குருகூர்நம்பி) பணிகொள்ளுமவராய்த் திருநகரிக்கு நிர்வாஹகரானவரோயென்று ஸம்புத்தி.

(குயிலித்யாதி) அசேதநமானபக்ஷிஜாதமடைய ஆழ்வார்பரிஸரத்திலேதிருந்தி, திருவாய்மொழிபாடக்கற்றுப்பாடாநின்றால் சேதநனான நான் திருந்தச்சொல்லவேணுமோ. சாகாஸம்பந்தமுண்டாகையாலே அக்குயில்கள் திருவாய்மொழியையாய்த்துப் பாடுவது. அவை * பாடுங்குயில்களாகையாலே தம்பிரான் மாரைப்போலே ஆழ்வார்க்குத்திருவாய்மொழிபாடுவனவாய்த்து. ஒருதேசஸம்பந்தத்தாலே*செவ்வாய்க்கிளி நான்மறைபாடுமானால் இத்தேசவர்த்திகளுக்குத் திருவாய்மொழிபாடச்சொல்லவேண்டாவிறே. தாம் மதுரவாக்காகையாலே மதுரவாக்கான குயிலையிட்டுப் பொழிலைச் சிறப்பிக்கிறார்.

---

செவியேற்றத்தாலே - செவியாலே. பயிற்றுகை - அப்யஸித்துச் சொல்லுகை.

(குருகூர்நம்பி) "ஊரும்நாடுமுலகமுந்தன்னைப்போல்" என்று சேதநரளவன்றிக்கே, திர்யக்குக்களளவு மேறும்படியாயாய்த்து ஆழ்வாருடையபூர்த்தியிருப்பது.

(முயல்கின்றேனுன்றன்மொய்கழற்கன்பையே)உன்னுடைய ச்லாக்யமானதிருவடிகளுக்கன்பையே, முயல்கின்றேன்-அர்த்தியா நின்றேன். செய்கிறவடிமைய்யால் பர்யாப்திபிறவாமையாலே, "திருவடிகளிலே யெனக்கபிநிவேசம்வேணும்" என்று அர்த்திக்கிறார். "என்னைத்தீமனங்கெடுத்தாயுனக்கென்செய்கேன்"என்று ஆழ்வார் தாம் அவ்விஷயத்திலே தடுமாறினாப்போலே, ஆழ்வார்பண்ணின வுபகாரத்துக்கு ப்ரத்யுபகாரங் காணாமையாலே தடுமாறுகிறார். ()

---

(குருகூர்நம்பி) ப்ரத்யுபகார நிரபேக்ஷதைக்கடியான பூர்த்தியையுடையவரோ. பகவதகிஞ்சித்காரத்துக்கு த்வாரம்பெறிலும ஆசார்யகிஞ்சித்காரத்துக்கு த்வாரமில்லை. இவன் த்ர்ஷ்டத்தை கர்மத்தின்கையிலேபொகட்டு அத்ர்ஷ்டத்தை ஈச்வரன்கையிலே பொகட்டிருக்குமவனிறே.

(உன்றன் மொய்கழற்கன்பையே - முயல்கின்றேன்) உன்னுடைய பரமபோக்யமான திருவடிகளிலுண்டான ஸ்நேஹமடியாக ப்ரத்யுபகாரந்தேடி. உத்ஸாஹியாநின்றேன். இவ்வுத்ஸாஹத்துக்குமேற்பட ப்ரத்யுபகாரம்பண்ணுகைக்குவிரகில்லையே. அவர் தாம் "உனக்கென்செய்கேன்" என்பது, "அப்பனுக்கெதுவுமொன்றுமில்லை செய்வதிங்குமங்கே" என்றாப்போலே. (மொய்கழல) "மொய்கழலேயேத்தமுயல்" என்று - ஆழ்வார் அவ்விஷயத்தை யருளிச்செய்யக்கேட்டுப்போந்த வாஸநையாலே, இங்கும்"மொய்கழல்" என்கிறார். கீழே - "அவன்பொன்னடி" என்று ஆழ்வார் திருவடிகளின் பாவநத்வஞ்சொன்னார்; இங்கே - போக்யதை சொல்லுகிறார். * வகுளாபிராமமாய் ஸ்ரீமத்தாயிறே ஆழ்வார்திருவடிகளிருப்பது. (மொய்கழற்கன்பையே) இத்திருவடிகளின் போக்யதை அன்பைக்கொடுத்தது. அன்பு ப்ரத்யுபகாரத்திலே மூட்டிற்று; அதுக்கு இடங்காணாமையாலே அலமராநின்றேன். இவ்வலமாப்பு யாவச்சைதந்யமிறே ... ... ... (௧௦)

---

* நம்பி பததாத்பர்யம் (ஊருமித்யாதி.) மொய்-ச்லாக்யதை. "கழற்கு" என்றது-ஸம்பந்தஸாமாந்ய ஷஷ்டியாய், விஷய விஷயீ பாவனையிட்டு தாத்பர்ய மருளிச்செய்கிறார் (செய்கிற வித்யாதி.) முன்பே அபிநிவேச முண்டாயிருக்க இவர் புநः அத்தை ப்ரார்த்திப்பா னென்னென்ன; அருளிச்செய்கிறார் (என்னையித்யாதி.) ()

அ.—நிகமத்தில், இப்ப்ரபந்தத்தையே தஞ்சமாக நினைத்திருக்குமவர்களுக்கு ஆவாஸபூமி பரமபதமென்கிறார்.

அன்பன்றன்னையடைந்தவர்கட்கெலா
மன்பன்தென்குருகூர்நகர்நம்பிக்
கன்பனாய்மதுரகவிசொன்னசொல்
நம்புவார்பதிவைகுந்தங்காண்மினே.

மதுரகவியாழ்வார்திருவடிகளேசரணம்.

ப-ரை.—அன்பன் தன்னை அடைந்தவர்கட்கெலாம் - ஆச்ரிதவத்ஸலனானவனை ஆச்ரயித்தவெல்லார் பக்கலிலும், அன்பன்-வாத்ஸல்யத்தை யுடையராய், தென் - ஸ்பர்ஹணீயமான, குருகூர்நகர் - திருநகரிக்கு, நம்பிக்கு - நிர்வாஹகரான ஆழ்வாருக்கு, அன்பனாய் - தாஸபூதராய, மதுரகவி - ஸ்ரீமதுரகவிகள், சொன்ன-அருளிச்செய்த, சொல்-பாசுரங்களை, நம்புவார் - தங்களுக்குத் தஞ்சமாக நினைத்திருக்குமவர்களுக்கு, பதி - வஸ்தவ்யதேசம், வைகுந்தம் காண்மின் - பரமபதமாகக்காணுங்கள்.

---

பதினோராம்பாட்டு. (அன்பனித்யாதி) இப்பாட்டில்-இப்ப்ரபந்தம் கற்றார்க்கு வஸ்தவ்யபூமி பரமபதமென்கிறார். ஆழ்வாருடைய போக்யதையும் அவர் தமக்கு ஸ்வாமி யென்னு மிடமும், தமக்கு காலக்ஷேபவிஷயமும் அவருடைய ப்ரபந்தமே யென்னு மிடமும், ஆழ்வாரோட்டைஸம்பந்தமடியாக ஈச்வரன் மேல் விழுந்தநுபவித்தபடியும், தம்முடைய தோஷம்பாராமல் ஆழ்வார் விஷயீகரித்தபடியும், தோஷந்தான் அவருடைய தேசப்ரபாவத்தாலே தம்மைவிட்டுக்கழன்றபடியும், பின்பு அத்தோஷம் மேலிடாதபடி ஆழ்வார் குணகீர்த்தநமே தமக்கு காலயாத்ரையாம்படி அவர் தம்மைத்திருத்தினபடியையும், அவருடைய க்ர்பா வைபவத்தை லோகமடங்கலும் தாம்பரப்ப வேண்டும்படி தமக்குப் பிறந்த ஆதரமும், பகவத க்ர்யையிற்காட்டில் ஆழ்வாருடைய க்ர்பை லோகத்திலே அதிசயித்தபடியையும், அக் க்ர்பை யடியாக அவர் உபகரித்த வுபகாரமும், அவ்வுபகார பரம்பரைகளுக்கு ப்ரத்யுபகாரந்தேடி அவருடைய பூர்த்தியாலே ப்ரத்யுபகாரத்துக்கு அவகாசம் காணாமல் தாம் அலமருகிறபடியையுமிறே கீழ்ச்சொல்லி நின்றது; இவ்வர்த்தங்களுக்கு வாசக சப்தமிட்டுச்சொன்ன இப்ப்ரபந்தத்திலே ஆதரமுள்ளார்க்கு, நித்யஸூரிகள் பரமபதத்திலே ஒரு ப்ராப்தி பண்ணிக்கொடுப்பர்களென்கிறார். இவர்களுக்குத் திருநகரியே ப்ராப்யஸ்தலமாயிருந்ததாகிலும் அவர்களாதரத்துக்காக அங்கேபோய் அங்கும் ஆழ்வாரை அநுபவிக்கப்பெறுவர்கள்.

---

நிகமத்தில், "நம்புவார்பதிவைகுந்தங்காண்மின்" என்றதைக்கடாக்ஷித்தவதாரிகையருளிச்செய்கிறார் (நிகமத்திலித்யாதி.)

வ்யா.—(அன்பன்) வாத்ஸல்யத்தையே நிரூபகமாகவுடையவனுய்த்து ஈச்வரன். இன்னுனுக்கன்பன் என்று விசேஷியாமையாலே, "రిపూణామపివత్సలః" "ரிபூணுமபிவத்ஸலஃ" என்கிறபடியே-ஸர்வவிஷயமாயாய்த்து அவனுடைய வாத்ஸல்ய மிருப்பது. அதுக்கு ஹேதுவென் னென்னில்; "సర్వేషామేవలోకానాంపితామాతాచమాధవః" "ஸர்வேஷாமேவலோகாநாம்பிதாமாதாசமாதவஃ" என்றும், "దేవానాందానవానాఞ్చసామాన్యమధిదైవతమ్" "தேவாநாம் தாநவாநாஞ்ச ஸாமாந்யமதிதைவதம்" என்றும்-ஜநகத்வப்ரயுக்தமானஸம்பந்தம் ஸர்வஸாதாரணமாகையாலே வாத்ஸல்யமும் பொதுவாயிருக்கும்.

---

வ்யா.—(அன்பனித்யாதி) கவிபாட்டுண்ட விஷயத்தையும், கவிபாடினதம்மையும், கவிதன்னையும், கவியை யேதேனுமொரு வழியால் கற்றவர்களுக்கு பலமும் சொல்லுகிறது.

(தன்னையடைந்தவர்கட்கெலாம்-அன்பன்) தம்முடைய திருவடிகளை யாச்ரயித்த என்போல்வார்க்கெல்லாம் வத்ஸலராயிருக்குமவர். எங்கள்தோஷங்களைப்பாராதே தம்முடைய குணங்களைத் தந்து தரிப்பிக்குமவர். "நான்மறையாளர்கள் புன்மையாகக் கருதுவராதலில் அன்னையாயத்தனுய்" என்றும், "நின்று தன்புகழேத்தவருளினுன்" என்றும் சொல்லுகிறபடியே. அன்றிக்கே, "அன்பன்" என்று-ஸர்வேச்வரனுக்குத் திருநாமமாய், அவனை ஆச்ரயித்தவர்க்கெல்லாம் ஸ்நிக்தராயிருப்பர்."మద్భక్తజనవాత్సల్యమ్""மத்பக்தஜநவாத்ஸல்யம்" என்று இத்தையிறே ப்ரதமலக்ஷணமாகச் சொல்லிற்று.

(அன்பன்) இன்னபடி அன்பனென்கை யன்றியிலே எல்லார்க்கும் எல்லாப்படியாலும் நிஸர்க்கஸௌஹார்த்தாயிருக்கும். "ఏవంనిసర్గసుహృది,నచిత్రమిదమాశ్రితవత్సలత్వమ్""ஏவம்நிஸர்க்கஸௌஹார்தி-நசித்ரமிதமாச்ரிதவத்ஸலத்வம்" என்று - ஸௌஹார்த்த கார்யமிறே வாத்ஸல்யம். "సర్వలోకైకవత్సలః" "ஸர்வலோகைகவத்ஸலஃ" "శరణాగతవత్సలః" "ஶரணுகதவத்ஸலஃ" "రిపూణామపివత్సలః" "ரிபூணுமபிவத்ஸலஃ" என்னும்படி லோகத்துக்காக வத்ஸலனுமாய் அதில் ஆச்ரிதரளவிலே, "దోషోయద్యపి" "தோஷோயத்யபி" என்னும்படி வத்ஸலனுமாய், ப்ராதிகூல்யமே பண்ணிப்போரு மவர்களுக்கும் வத்ஸலனுயிருக்கும். * ప్రతిభవమపరాద్ధుర్ముగ్ధసాయుజ్యదోభూః-ப்ரதிபவம பராத்துர்முக்த ஸாயுஜ்யதோபூஃவிறே. அங்கு, மௌக்த்யமாவது-தோஷம் நெஞ்சில் படாதொழிகையாய்த்து.

---

"அன்பன்" என்றவிடத்தில் ப்ரீதியை விஷயாநுரூபமாக வாத்ஸல்ய பரமாக்கியருளிச்செய்கிறுர் (வாத்ஸல்யத்தை யித்யாதி.)

(அன்பன்) தன்னை ஸ்நேஹித்தார்க்குத் தானொருவனுமே விஷயபூதனுமாய், தான் ஸ்நேஹிக்குமிடத்தில் விபூதியாக ஸ்நேஹிக்குமவன். தன்னை ஸ்நேஹித்தவன்புறம்பே சிலவற்றை ஸ்நேஹித்தால் அவனுக்குத் தன்னைப்பெறவிரகில்லை, தான் எல்லாரையும் ஸ்நேஹியானாகில் தான் இன்றிக்கேயொழியும். "నిరవధికవాత్సల్యజలధే" "వాత్సల్యమహోదధే" "நிரவதிகவாத்ஸல்ய ஜலதே" "வாத்ஸல்ய மஹோததே" என்கிறபடியேகடலுக்குள்ளே மாணிக்கங்களடைய மறைந்துகிடக்குமாப்போலே, இவ்வாத்ஸல்யகுணத்திலே குணாந்தரங்களடைய மறையும்படியாயாய்த்து-இதுஸ்வரூபத்தை விளாக்கொலைகொண்டு கிடக்கும்படி. ஸ்வரூபந்தான் ஸர்வஸாதர்ச்யரஹிதமானாப்போலேயாய்த்து - இக்குணமும் ஸதர்சரஹிதமாய் * நிகரில் புகழாயிருக்கும்படி. அந்தஸாதர்ச்யராஹித்யத்தால்பெற்றது பரத்வஸித்தி; இந்த ஸாதர்ச்யராஹித்யத்தால் பெற்றது சரண்யத்வஸித்தி. (அன்பன்) தன்னைப்பற்றிப் புறம்பே சிலவற்றை யாசைப்பட்டவர்களுக்கும், "ఉదారాః" "உதாரா:" என்று குணங்கொள்ளும் வ்யாமோஹத்தை யுடையவன். (அன்பன்) உபக்ரமத்திலே, "கண்ணிநுண் சிறுத்தாம்பினால் கட்டுண்ணப் பண்ணிய பெருமாயனென்னப்பன்" என்று-சிலஸௌலப்யஸ்வாமித்வங்களை உபாதாநம்பண்ணி, உபஸம்ஹாரத்திலே வாத்ஸல்ய குணத்தோடே தலைக்கட்டுகிறார். அவை ஒருதட்டு, இது ஒருதட்டிறே. இத்தைப்பற்றவிறே, "శీలాదిగుణసంపన్నస్సర్వలోకైకవత్సలః" "ஶீலாதிகுணஸம்பந்நஸ்ஸர்வலோகைகவத்ஸல:" என்று ரிஷிகளும் சொல்லிற்று.

(அன்பன்றன்னையடைந்தவர்கட்கெலாமன்பன்) இப்படி ஸர்வலோகவத்ஸலனான ஸர்வேச்வரனுடைய இக்குணத்துக்குத்தோற்று, "గుణైర్దాస్యముపాగతః" "குணைர்தாஸ்யமுபாகத:" என்று அடிமைபுக்கு அவன்திருவடிகளை உபாயத்வேநவரணம்பண்ணியிருக்கும் ஸாத்விகவர்க்கத்துக்கு நல்லராயிருக்குமவர். அவனுக்கு எல்லாரோடும் பந்தமுண்டாகையாலே எல்லாரையும் ஸ்நேஹிக்கும்; இவர் "பரமனைப்பயிலும் திருவுடையார் யவரேலு மவர்கண்டீர்—எம்மையாளும்பரமர்" என்றிருக்குமவராய்த்து. இவரைப்போலே வைராக்யபூர்வகமான ஸ்நேஹமன்றே அவனது. அவனுக்கு எல்லாரோடும் ஸ்வரூபஸம்பந்தம்; இவரது உபாதிநிபந்தந ஸம்பந்தம். (எல்லாமன்பன்) அவர்களுடைய ஜாத்யாதிநியமம் பாராதே தத்ஸம்பந்தமேஹேதுவாக நல்லராயிருக்குமவர். "கும்பி நரகர்களேத்துவரேலும் - என்தொழுகுலம்" "எத்தனை நலந்தானிலாத சண்டாள சண்டாளர்களாகிலும் - மணிவண்ணர்க்காளென்றுள் கலந்தார் அடியார் தம்மடியாரெம்மடிகள்" என்றிருக்குமவர்.

(தன்னையடைந்தவர் கட்கெலாமன்பன்தென்குருகூர்நகர்நம்பி) ஆழ்வாருடைய அன்பு அங்ஙன் பொதுவாயன்றேயிருப்பது; “பரமனைப்பயிலும் திருவுடையார்யவரேலும் அவர்-எம்மையாளும்பரமர்” என்கிறபடியே-பகவத்ஸம்பந்த நிபந்தநமாயிறே யிருப்பது. தம்மைப்போலே “அடிக்கீழமர்ந்துபுகுந்தேன்” என்பாரெல்லாரையுந் தமக்கு நாதராகவாய்த்து நினைத்திருப்பது. (தென்குருகூர்நகர்நம்பி) “அடியாரடியார்தம்மடியார்” என்று-தத்ஸம்பந்திஸம்பந்திகளளவும்பண்ணினப்ரேமத்தாலே பூர்ணராயிருப்பர்.

(நம்பிக்கன்பனாய்) பகவத்விஷயத்தளவுமன்றிக்கே, ததீயரளவுமன்றிக்கே, ஆசார்யவிஷயத்திலே ஸக்தராய். தனக்கு புருஷார்த்தம் வேண்டியிருக்கில் பகவத்விஷயத்தைப் பற்றவமையும்; அங்ஙன்தானுகந்ததன்றிக்கே, “ஈஶ்வரனுகப்பே புருஷார்த்தம்” என்றிருக்கில் பாகவதர்களைப்பற்ற வமையும்; “జ్ఞానీత్వాత్మైవ మే మతమ్” “ஜ்ஞாநீத்வாத்மைவமேமதம்” “మమప్రాణాహిపాణ్డవాః” “மமப்ராணாஹிபாண்டவா:” என்று - பாண்டவர்களைத் தனக்கு தாரகராகவிறே நினைத்திருப்பது. ஈச்வரனோடு ஸ்ரீவைஷ்ணவர்களோடு வாசியற எல்லாருடையவுகப்பும் அபுருஷார்த்தமென்றிருக்கில் ஆசார்யனைப்பற்ற வடுக்கும்; “ஆசார்யவாந்” என்றாய்த்து ஸ்ரீவைஷ்ணவர்களுகப்பது.

---

(அன்பன்) அவனடியார், “நனிமாக்கலவியின்பமே நாளும் வாய்க்க” என்று-பகவதநுபவ ஸுகத்தைவிட்டேயாகிலும் வைஷ்ணவஸமவாயஸம்ச்லேஷரஸராயிருக்குமவர். (அடைந்தவர்கட்கெலாமன்பன்) அவனை சேஷியாக வரிக்கவுமாம், பந்துத்வேந வரிக்கவுமாம், உபாயத்வேநவரிக்கவுமாம், இவர்க்கு ஆதரிக்கவேண்டுவது ஏதேனுமொருஸம்பந்தமாய்த்து.

(தென்குருகூரித்யாதி) இவர்க்கு இப்படி பகவத்பாகவத விஷயத்தில் ஸ்நேஹத்துக்கு ஊற்றுவாய் திருநகரியில் பிறப்பாய்த்து. துறைவாய்ப்பாலே பயிரும்வாய்க்குமிறே. இவர்க்கு * கழுதல்கடல்புரைய விளைவிக்கைக்கடி அந்த நிலப்பண்பாய்த்து. (நகர்) அந்நகரவாஸத்தாலேயாய்த்து இவர் ஸாராஸார விவேகஜ்ஞராய்த்து. (நம்பி) இப்படி ஆத்மகுணபூர்ணரானவாழ்வார்.

(அன்பனாய்) இப்படி இவருடைய பகவத்ஜ்ஞாந பக்த்யாதிகளாகிற ஆத்மகுணம்கண்டாய்த்து இவர்க்கு ஸ்நேஹம்பிறந்தது.

---

அன்பன்றன்னை யடைந்தவர்கள்-ஸ்ரீமஹாபாகவதர்கள். இங்கு “அன்பன்” என்றது - பக்தனென்றபடி. * நம்பி பததாத்பர்யம் (அடியாரித்யாதி.) பகவானையும் பாகவதர்களையும் பற்றாமல் ஆழ்வார்விஷயத்திலன்பராவானென்னென்ன;“அன்பன், தன்னையடைந்தவர்கட்கெலாமன்பன், நம்பிக்கன்பன்” என்கிற பதங்களைக் கடாக்ஷித்து இவர்களுக்குண்டான பலதாரதம்யங்களை யருளிச்செய்கிறார் (தனக்கு என்று தொடங்கி அஞ்சுவாக்யத்தாலே.)

ப்ரதமத்திலே ஆசார்யன் தனக்கு அஜ்ஞாதஜ்ஞாபநமுகத்தாலே ஸ்வரூபஜ்ஞாநத்தைப் பிறப்பித்து, பகவத்ஸமாச்ரயண வேளையிலே புருஷகாரபூதனாய், தன்னுடைய அநுஷ்டாநத்தாலே இவனை நல்வழியே கொண்டுபோய், ப்ராப்திதசையிலும் ஸாத்யவிர்த்தியைப் பண்ணிக்கொடுக்கக்கடவனாய், இப்படி பஹுமுகத்தாலே உத்தேஶ்யனாயிறே யிருப்பது. (மதுரகவி சொன்ன சொல்) ஆழ்வாரை, தாம்சொன்ன பாசுரம் தமக்கினிதாயிருக்கையாலே "மதுரகவி" என்கிறார்.

(சொன்னசொல்நம்புவார் பதிவைகுந்தங்காண்மினே) இனிதாயிருந்ததில்லையாகிலும், இப்ப்ரபந்தத்தைதத்தஞ்சமாக நினைத்திருக்குமவர்களுக்கு வஸ்தவ்யதேசம் பரமபதம். ஆழ்வார் உத்தேஶ்யரானால் திருநகரியன்றோ ப்ராப்யமாவதென்னில்; திருநகரியில் * பொலிந்துநின்றபிரானையும், ஆழ்வாரானையுமாய் இருபுரியாய்ச்செல்லும்; அங்ஙனன்றிக்கே ஆழ்வாரானையேயாய்ச் செல்லும் பரமபதம்.

---

(அன்பனாய்மதுரகவி) அவர்க்கு பகவத்ப்ரேமம்ஸ்வரூபப்ரயுக்தமாய், "ஆராதகாதல் குருகூர்ச்சடகோபன்" என்று நிரூபகமானாப்போலே, இவர்க்கு ஆழ்வார்க்குநல்லரானவனென்று நிரூபகம். அவர் ப்ரணவநமஸ்ஸுக்களிரண்டிலும் நிஷ்டராய்ப்போருவர்; இவர் மத்யமபதத்திலேயே நிஷ்டராயிருப்பர். (மதுரகவி) அவர் தத்விஷயத்தைக் கவிபாடுகையாலே, "என்னாவிலின்கவி" என்றாப்போலே, இவரும ஆழ்வாரைக் கவிபாடுகையாலே, தம்மை "மதுரகவி" என்கிறார். (நம்பிக்கன்பனாய்-மதுரகவி) நெஞ்சுக்குப் பணி ஆழ்வார்பக்கல் ஸ்நேஹமாய், வாய்க்குப்பணி அவருடைய குணஸ்தோத்ரமேயானவர்.

(சொன்னசொல்) அவர் ப்ரபந்தீகரித்த இந்தசப்தஸந்தர்ப்பத்தை. (சொன்னசொல்) இதுவு மொருசொல்லே! என்று விஸ்மிதராகிறார். (நம்புவார்) இத்தை யாசைப்படுமவர்கள். இவ்வர்த்தத்தை வ்யுத்பத்திபண்ணிவிடுதல்செய்கையன்றிக்கே இதிலே நெஞ்சையுடையராய் இவ்வியலிலே எப்போதும் பரிசயிப்பது, இதுக்குள்ளோடுகிற ஆழ்வாருடைய ப்ரபாவங்களிலே வித்தராவது, இப்ப்ரபாவத்தை யெப்போதும் ஒருவர்சொல்லக்கேட்க வாசைப்படுவதாய், இப்படி நசைபண்ணிப்போருவர்ர்.

---

அவர்களுக்குகப்பாகவன்றிக்கே அவன்பண்ணின வுபகாரத்தாலும் பற்றவேண்டுமென்கிறார் (ப்ரதமத்திலித்யாதி.) சொல் நம்புவார் என்னாதே "சொன்ன" என்கையாலே பலிதம் (இனிதாயித்யாதி.) இருபுரியாவது - ஒருவன்மறுக்க எதிர்மறுக்குக்குவிபரீதமாயிருக்கை.

"அடியார் நிலாகின்ற வைகுந்தமோ" என்றும், "வானவர் நாடு" என்றுஞ் சொல்லக்கடவதிறே. நம்பிதிருவழுதி வளநாடு தாஸர், "'நம்புவார்பதிவைகுந்தம்' என்று-அவர்களிருந்ததேசங் காண் பரமபதம்" என்றுசொல்லுவர்; "உரைக்கவல்லார்க்கு வைகுந்தமாகுந்தம் மூரெல்லாம்" என்னக்கடவதிறே; "'கூரத்தாழ்வான் மகன் பிறந்தபின்பு ஸம்ஸாரமும் பரமபதமு மிடைச்சுவரைத் தள்ளி யொருபோகியாய்த்துக்காண்' என்று பெற்றி பணித்தார்" என்று பிள்ளை யருளிச்செய்வர் ... ... ... (௧௧)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

(நம்புவார்) பகவத்ப்ரபாவத்திற்காட்டில் ஆழ்வார்ப்ரபாவத்தை விரும்புவார். ஆழ்வார்ப்ரபாவஞ்சொன்னவிது கைதவமன்று, ஸத்யமென்று இவ்வர்த்தத்தைத் தங்களுக்குத் தஞ்சமாக விச்வஸித்திருப்பார். (பதிவைகுந்தம் காண்மினே) அவர்களுக்கு வஸ்தவ்ய பூமி பரமபதம் * ... ... ... ... (௧௧)

அழகியமணவாளப்பெருமாள்நாயனார்

திருவடிகளேசரணம்.

---

இங்கேதானே பரமபதம் என்றதுக்கு ஸம்வாதமாக ஓரைதிஹ்யமருளிச்செய்கிறார் (கூரத்தாழ்வானித்யாதி.) பெற்றிபணித்தார் என்றது - இங்கேயிருக்கச் செய்தேதானே அந்தவிபூதியிலநுபவத்தைப்பெற்றிபணித்தார். அங்குத்தையி லநுபவம் இங்கே கிட்டுகையாலே இங்கேயிருந்தே அந்தவிபூதியை யுண்டாக்கினார்; ஆகையாலேயொரு போகியாயிற்றென்றபடி ... (௧௧)

அடிவரவு - கண்ணி நாவினால் திரிதந்து நன்மையால் நம்பினேன் இன்று கண்டு அருள் மிக்கவேதியர் பயனன்றாகிலும் அன்பன் வாடி.

ஜீயர் திருவடிகளேசரணம்.

---

கண்ணிநுண்சிறுத்தாம்பு

ப்ரதிபத-வ்யாக்யாந அரும்பதங்கள்

ஸம்பூர்ணம்.

---

* இங்கே சிலவாக்கியங்க ளிருக்கவேண்டும், கோசாந்தரங்களில் கண்டு கொள்வது.



ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

# திருமழிசைப்பிரான் அருளிச்செய்த
# திருச்சந்தவிருத்தத்
## தனியன்களுக்கு
பிள்ளைலோகஞ்சீயரருளிச்செய்த
## வ்யாக்யாநம்.

---o---

அவதாரிகை.—(தருச்சந்தப்பொழில்) இதில்-திருச்சந்தவிருத்தஞ்செய்தருளின திருமழிசைப்பிரான் அவதாரஸ்தலமான *திருமழிசைவளம்பதியும் ஒருதேஶமே! என்று அதிலே ஆழங்கால்படும்படி சொல்லுகிறது.

தருச்சந்தப்பொழில்தழுவுதாரணியின் துயர்தீரத்
திருச்சந்தவிருத்தஞ்செய்திருமழிசைப்பரன்வருமூர்
கருச்சந்துங்காரகிலுங்கமழ்கோங்குமணநாறும்
திருச்சந்தத்துடன்மருவுதிருமழிசைவளம்பதியே.

வ்யா.—(தருச்சந்தப்பொழில்தழுவுதாரணியின்துயர்தீர) தரு-கல்பகத்தரு. சந்து-சந்தநம். *சந்தநப்பூமலர்சோலையிறே; இரண்டு சோலையாலும் சூழப்பட்ட. தாரணி-பூமி. பொழில்தழுவியிருக்கிற பூமியிலுண்டான மநுஷ்யர் து:கம்தீர. அவர்கள் பகவத்விஷயத்தை யிழந்திருக்கிற து:கம்தீர. அவர்கள்தான்போக்ய போகோபகரண போகஸ்தாநங்களைவிரும்பி பகவத்விமுகராயாய்த் திருப்பது. அதுக்குமேலே "அறியார்சமணரயர்த்தார்பவுத்தர்சிறியார்சிவப்பட்டார்" என்றிறே அவர்கள்அந்யஶேஷபூதராய் அநர்த்தப்படுகிறது; அவற்றை நிவர்த்திப்பித்து ஸத்வ்ர்த்தராக்குகைக்காக வாய்த்து-"திருச்சந்தவிருத்தம"என்கிற திவ்யப்ரபந்தம் செய்தருளிற்று. அதிலே "புண்டரீகபாதபுண்ணியகீர்த்தி நும்செவிமடுத்துண்டு நும்முறுவினைத்துயருள்நீங்கியுய்ம்மினோ" என்றும், "நன்மாலைவாழ்த்திவாழ்மினோ" என்றும்-பகவத்பஜநத்தையும் தேவதாந்தராஜ்ஞாநாஶக்திகளை, *காணில் *சொந்தம *வண்டு *போதுகளிலே ஸுவ்யக்தமாக தர்ஶிப்பித்தும் திருத்தியருளிற்று. (திருச்சந்தவிருத்தம்) சந்தோரூபமான வ்ர்த்தமென்றபடி. "கலித்துறை, விருத்தம், வெண்பா" என்றாப்போலே சொல்லக்கடவதிறே. ஏவம்வித பரபந்தநிர்மாணகராய்த் திருமழிஸைக்கு நாதரான ஆழ்வாரவதரித்தவூரிருக்கும்படி சொல்லுகிறது (கருச்சந்தும்காரகிலும்கமழ்) ஆகரத்தில் சந்தநாகருக்களாலும் பரிமளிதமாய்.

(கோங்குமணநாறும்) கோங்கென்கிற வ்ருக்ஷத்தினுடைய புஷ்பபரிமளத்தையு முடைத்தாய் எல்லாவற்றாலும் மிக்க பரிமளத்தை யுடைத்தாகையாலே * வேரிமாறாதபூமேலிருப்பாளாய் ஸ்ரீ என்று திருநாமத்தை யுடையளான பெரியபிராட்டியாருடன் பொருந்தி யிருக்கும் திருமழிசை. (வளம்பதியே) இந்த விபூதியிலே இதொரு தேஶமே! கோங்கு என்று - பரிமளமாகவுமாம் - வளம் - அழகும், ஸம்பத்தும். ஆழ்வாராலே ஊரும் உத்தேஶ்யமாயிருக்கிறது. ... ௯

அ.—(உலகுமழிசையும்) "இதில் திருமழிசை - மஹீஸாரக்ஷேத்ரம்" என்று மஹத்த்தையைச் சொல்லுகிறது.

உலகுமழிசையு முள்ளுணர்ந்து தம்மில்
புலவர்புகழ்க்கோலால தூக்க - உலகுதன்னை
வைத்தெடுத்தபக்கத்தும மாநீர்மழிசையே
வைத்தெடுத்தபக்கம் வலிது.

வ்யா.—(உலகுமழிசையும்) லோகங்களையும் விலக்ஷணமான திருமழிசையையும். (உள்ளுணர்ந்து) மாஹாத்ம்யங்களை மநஸ்ஸிலே மநநம்பண்ணி. (தம்மில்புலவர்) பார்க்கவாதி மஹர்ஷிகளான மஹாகவிகள். (புகழ்க்கோலால்தூக்க) இவற்றின்புகழை யென்னுதல்; புகழ்க்கோலாலே யென்னுதல். தூக்க - துலைப்படுத்திநிறுக்க. (உலகுதன்னைவைத்தெடுத்தபக்கத்தும்) லோகத்தைவைத்தெடுத்த துலையைக்காட்டிலும். (மாநீர்மழிசையே வைத்தெடுத்தபக்கமவலிது) மிக்க ஜலஸம்ருத்தியையுடைய மஹீஸாரக்ஷேத்ரத்தை வைத்தெடுத்த துலையே அதுலமாயிருந்தது. அகஸ்த்ய துர்வாஸாதிகளிருந்த பக்ஷம்போலே ஆழ்வாரவதரண ஹேதுவானதேஶமும் தாழ்ந்துகாட்டிற்றிறே. ஜகந்நாதனிறே அங்கேநித்யஸந்நிதிபண்ணுவது. "చిన్తయేత్సజగన్నాథం విష్ణుం సనాతనమ్" "சிந்தயேத் ஸஜகந்நாதம் விஷ்ணும்ஸநாதநம்" என்றிறே தத்யாநபரராய் அங்குள்ளதபோதநரிருப்பது; அத்தாலே வைத்தெடுத்தபக்ஷம் வலிதாயத்து. "ధాత్రాతులితాలకుమహః" "தாத்ராதுலிதாலகுமஹ்" என்னக்கடவதிறே. மாநீர்மழிசை-தீர்த்தம் திருமண்ணுண்டான ஸ்தலம். "மழசாடுகண்டீர்மருந்து" என்னக் கடவதிறே. * பத்தியான பாசனமான பகதிஸாராவதரணத்துக்கு அநுகுணமாயிருக்கும் தேஶமென்று அந்த திவ்யதேஶ வைபவம்சொல்லிற்றாய்த்து.

"తులయామ లవేనాపి న స్వర్గం న పునర్భవమ్।
భగవత్సఙ్గిసఙ్గస్య మర్త్యానాం కిముతాశిషః॥"

"துலயாம லவேநாபி நஸ்வர்க்கம் நபுநர்ப்பவம்।
பகவத்ஸங்கி ஸங்கஸ்யமர்த் யாநாம்கிமுதாஶிஷ:"

என்றிறே ததீயவைபவ மிருப்பது.

பிள்ளைலோகஞ்சீயர் திருவடிகளே சரணம்.

---



ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

## திருமழிசைப்பிரான் அருளிச்செய்த

திருச்சந்தவிருத்தத்திற்கு

# பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த

## வ்யாக்யாநாவதாரிகை.

————:o:————

ஆழ்வார்திருமழிசைப்பிரானுகிறார் க்ர்ஷ்ணாவதாரம்போலே யாய்த்துப் பிறந்தபடியும் வளர்ந்தபடியும்;—யதுகுலத்திலே பிறந்து கோபகுலத்திலே வளர்ந்தாப்போலே, ரிஷிபுத்ரராய்ப் பிறந்து தாழ்ந்தகுலத்திலே யாய்த்து வளர்ந்தது. க்ர்ஷ்ணனாய் யதுகுலத்திலேபிறந்தாப்போலே அங்கே வளர்ந்தருளினானாகில் ராமாவதாரத்தோபாதியா மித்தனையென்று பார்த்தருளி, இடையரும் இடைச்சிகளும பசுக்களும், "நம்மிலே யொருத்தன" என்னும்படி தாழ்ந்தார்க்கு முகங்கொடுக்கைக்காகவாய்த்து கோபஸஜாதீயனாய் வளர்ந்தருளிற்று; அப்படியே ஆழ்வாரும் பகவதபிப்ராயத்தாலே தாழ்ந்தார்க்கு முகங்கொடுக்கைக்காகத் தாழ்ந்தகுலத்திலே வளர்ந்தருளினாராய்த்து. இவ்வாழ்வார்க்கு ஸர்வேஶ்வரன் நிர்ஹேதுகமாக *மயர்வறமதிநலமருளி, தன்னுடைய திவ்யாத்மஸ்வரூபத்தையும், ததாஶ்ரயமான ஜ்ஞாநஶக்த்யாதிகல்யாணகுணங்களையும், உபயத்துக்கும் ப்ரகாஶகமான திவ்யமங்கள விக்ரஹத்தையும், அதுக்கலங்காரமான கிரீடாதிபூஷணவர்க்கத்தையும், அத்தோடு விகல்பிக்கலாம்படியான சங்கசக்ராதி திவ்யாயுதங்களையும, தொடங்கக்காட்டிலெறித்த நிலாவாகாமே அநுபவிக்கிற லக்ஷ்மீப்ரப்ருதி மஹிஷீவர்க்கத்தையும், அச்சேர்த்தியே தங்களுக்கு தாரகாதிகளாக வுடையரான பரிஜநபரிபர்ஹத்தையும, இப்போகத்துக்கு வர்த்தகமான பரமபதத்தையும் ஸாக்ஷாத்கரிப்பித்து ப்ரக்ருதிபுருஷாத்மகமான லீலாவிபூதியினுடைய ஸ்ர்ஷ்டி ஸ்திதிஸம்ஹாரங்களை லீலையாகவுடையனா யிருக்கிறபடியையுங்காட்டிக்கொடுத்து, இப்படி உபயவிபூதிநாதனான எம்பெருமான் தன்பெருமையைக்காட்டிக்கொடுக்கையாலே பகவதநுபவைகபோகராய், "𑌨𑍋𑌪𑌜𑌨𑌂 𑌸𑍍𑌮𑌰𑌨𑍍𑌨𑌿𑌦𑌂 𑌶𑌰𑍀𑌰𑌂" "நோபஜநம்ஸ்மரந்நிதம் ஶரீரம்" என்கிறபடியே ஸம்ஸாரதோஷத்தை அநுஸந்திக்க இடமில்லாதபடி ஈஶ்வரன் தம்மை அநுபவிக்கையாலே மார்க்கண்டேயாதிகளைப்போலே சிரகாலம் ஸம்ஸாரத்திலே யெழுந்தருளி யிருந்தவிவர், ப்ராப்தமுமாய ஸுலபமுமான விஷயத்தை ஸம்ஸாரிக ளிழக்கைக்கு ஹேதுவென்னென்று அவர்கள்பக்கலிலே கண்வைத்தார்.

தாம்பகவத்விஷயத்தில்ப்ரவணராயிருக்கிறப்போலேரஜஸ்தமஸ்ஸுக்களாலேபிறந்த அந்யதாஜ்ஞாந விபரீதஜ்ஞாநங்களாலே, "యో బ్రహ్మాణంవిదధాతిపూర్వమ్" "யோப்ரஹ்மாணம் விததாதிபூர்வம்" என்றும் "యుగకోటిసహస్రేషు విష్ణుమారాధ్యపద్మభూః। పునస్త్రైలోక్యధాతృత్వం ప్రాప్తవానితిశుశ్రుమః" "யுககோடிஸஹஸ்ரேஷு விஷ்ணுமாராத்யபத்மபூ:। புநஸ்த்ரைலோக்யதாத்ர்த்வம் ப்ராப்தவாநிதிஶுஶ்ரும:" என்றும் "వేదామేపరమంచక్షుర్వేదామేపరమంధనమ్" "வேதாமேபரமம்சக்ஷுர்வேதாமேபரமம்தநம்" என்றும் "మహాదేవస్సర్వమేధేమహాత్మా" "மஹாதேவஸ்ஸர்வமேதேமஹாத்மா" என்றும்-குருபாதகாதிகளாலும்க்ஷேத்ரஜ்ஞதயாஸம்ப்ரதிபந்நரானப்ரஹ்மருத்ராதிகள்பக்கலிலே, "ఏకఏవరుద్రః" "హిరణ్యగర్భస్సమవర్తతాగ్రే" "ஏகஏவருத்ர," "ஹிரண்யகர்ப்பஸ்ஸமவர்த்ததாக்ரே" என்று இத்யாதிப்ரஶம்ஸா வாக்யங்களாலும் தாமஸ புராணங்களாலும் பரத்வ புத்தியைப்பண்ணி, சேதநர் பகவத் விமுகராய் அநர்த்தப் படுகிறபடியைக்கண்டு பராநர்த்தம் பொறுக்கமாட்டாமையாலே நிர்த்தோஷ ப்ரமாணங்களாலும் ஸம்யக்ஞ்யாயங்களாலும் பாஹ்யகுத்ர்ஷ்டி நிரஸநபூர்வகமாக பகவத் பரத்வத்தை உபதேஶித்தவிடத்திலும் அவர்கள் அபிமுகீகரியாமையாலே, நாம் இவர்களைப்போலன்றியே ஜகத்காரண பூதனாய் பரமபத நிலயனான ஸர்வேஶ்வரனே ப்ராப்யனென்று அவன் ப்ரஸாதத்தாலே அறியப்பெற்றோம். இனி இவனை ஆஶ்ரயிக்குமிடத்தில் பரவ்யூஹங்கள் தேஶவிப்ரக்ர்ஷ்டத்வத்தாலே அஸ்மதாதிகளுக்கு ஆஶ்ரயணீயமாகமாட்டாது; அவதாரங்கள் காலவிப்ரக்ர்ஷ்டதையாலே ஆஶ்ரயணீயங்களாகமாட்டாது; இரண்டுக்கும் தூரஸ்தரான பாக்யஹீநர்களும் இழக்கவேண்டாதபடி அர்ச்சகபராதீநனாய் ஸர்வாபராதஸஹனாய் ஸர்வாபேக்ஷிதப்ரதனாய் வர்த்திக்கும் அர்ச்சாவதாரத்தின் நீர்மையை அநுஸந்தித்து ஆகிஞ்சந்யத்தை அதிகாரமாக்கி, ப்ரபத்தியை அதிகாரிவிஶேஷணமாக்கி, பகவத்க்ர்பையை நிர்பேக்ஷோபாயமென்று அத்யவஸித்து அவனையாஶ்ரயித்து அவன் க்ர்பைபண்ணி முகங்காட்ட. இவ்விஷயத்தை லபிக்கப்பெற்றேனென்று தமக்குப் பிறந்த லாபத்தைச்சொல்லித் தலைக்கட்டுகிறார். ... ... ... ... ... ... ... *

அ.—முதற்பாட்டு. "భూతేభ్యోऽణ్డమ్" "பூதேப்யோऽண்டம்" என்கிறபடியே - அண்டகாரணமாய் ஸகுணமானப்ர்திவ்யாதி பூதபஞ்சகங்களுக்கு அந்தராத்மாவாய் நிற்கிறநீயே ஜகத்துக்கு உபாதாந காரணம். இவ்வர்த்தம் வேதாந்தப்ரமேயம் கைப்படாத பாஹ்ய குத்ர்ஷ்டிகளால் நினைக்கவொண்ணாதென்கிறார்.

பூநிலாயவைந்துமாய்ப்புனற்கணின்றநான்குமாய்த்
தீநிலாயமூன்றுமாய்ச்சிறந்தகாலிரண்டுமாய்
மீநிலாயதொன்றுமாகிவேறுவேறுதன்மையாய்
நீநிலாயவண்ணநின்னையார்நினைக்கவல்லரே. (க)

ப-ரை.—பூ - பூமியிலே, நிலாய - வர்த்திக்கிற, ஐந்துமாய் - சப்தஸ்பர்சரூபரஸகந்தங்களைந்துமாய், புனற்கண்நின்ற-ஜலத்திலேவர்த்திக்கிற, நான்குமாய் - சப்தஸ்பர்ச ரூபரஸங்கள் நான்குமாய், தீநிலாய - அக்நியிலேவர்த்திக்கிற, மூன்றுமாய் - சப்தஸ்பர்சரூபங்கள் மூன்றுமாய், சிறந்த - சேதநர்க்கு ஆதாரமாயிருக்கும் பலத்தையுடைய, கால்நிலாய - காற்றிலேவர்த்திக்கிற, இரண்டுமாய் - சப்தஸ்பர்சங்களிரண்டுமாய், மீநிலாயது - ஆகாசத்திலே வர்த்திக்கிற, ஒன்றுமாகி - சப்தகுணமொன்றுமாகி, வேறுவேறு தன்மையாய்- தேவாதிகளுக்கு அந்தராத்மாவாய், நீ - சிதசிச்சரீரியானநீ, நிலாயவண்ணம்- கார்யகாரணவர்க்கத்திலே நிறகும ப்ரகாரத்தையுடையனாய், நின்னை - சித்சித் விசிஷ்டமாய்க்கொண்டு ஜகதுபாதாந காரணமாய்நிற்கிறவுன்னை, ஆர்நினைக்கவல்லரோ - நினைக்கவல்லாரார்.

வ்யா.—(பூநிலாயவைந்துமாய்)பூமியிலேவர்த்திக்கிறஶப்தாதிகுணங்களைந்துமாய். “గన్ధవతీ పృథివీ” “తస్యా గన్ధో గుణో మతః” “கந்தவதீ ப்ருதிவீ” “தஸ்யாகந்தோகுணோமத:” என்று-ப்ருதிவிகுணம்கந்தமாயிருக்க, ஶப்தாதிகளைந்தும அதுக்குகுணமாகச்சொல்லுவானென்னென்னில்; “శబ్దాదిభిర్గుణైర్బ్రహ్మన్ సంయుక్తాన్యుత్తరోత్తరైః” “சப்தாதிபிர்க்குணைர்ப்ரஹ்மந் ஸம்யுதாந்யுத்தரோத்தரை:” என்கிறபடியே காரணகுணாநுவர்த்தியாலே ஶப்தஸ்பர்ஶ ரூபரஸகந்தங்களையுங் கூட்டிச் சொல்லுகிறது. (புனற்கணின்றநான்குமாய்) அப்பிலேவர்த்திக்கிற ஶப்தஸ்பர்ஶரூபரஸங்களுமாய.“సమ్భవన్తి తతోऽమ్భాంసి రసాధారాణి తాని తు” “ஸம்பவந்திததோம் பாம்ஸி ரஸாதாராணிதாநிது” என்கிறபடியே தக்குணம்ரஸமாயிருக்க, அதிலும்காரணகுணாநுவர்த்தியாலே ஶப்தஸ்பர்ஶ ரூபங்களையும் கூட்டிச்சொல்லுகிறது. (தீநிலாயமூன்றுமாய்) “జ్యోతిరుత్పద్యతే వాయోః తద్రూపం గుణ ఉచ్యతే” “ஜ்யோதிருத்பத்யதே வாயோஸ்தத்ரூபம்குண உச்யதே” என்கிறபடியே அக்நிகுணமான ரூபத்தோடே ஶப்தஸ்பர்ஶங்களைக் கூட்டி “மூன்றுமாய்” என்கிறது.

(சிறந்தகாலிரண்டுமாய்) ஸ்வஸஞ்சாரத்தாலே சேதநர்க்காதாரமான பலத்தையுடைய வாயுவினுடையகுணமிரண்டுமாய். “బలవాన్ భగవాన్ వాయుః తస్య స్పర్శో గుణో మతః” “பலவாந்பகவாந்வாயுஸ் தஸ்ய ஸ்பர்ஶோகுணோமத:” என்கிறபடியே வாயுகுணமான ஸ்பர்ஶத்தோடே ஆகாஶகுணமான ஶப்தத்தையுங் கூட்டிச்சொல்லுகிறது.

(மீநிலாயதொன்றுமாகி) மீதிலேவர்த்திக்கிறஶப்தகுணமொன்றுமாய். “ఆకాశం శబ్దలక్షణమ్” “ஆகாஶம் ஶப்தலக்ஷணம்” என்கிறபடியே ஆகாஶகுணமொன்றையுஞ்சொல்லுகிறது. உக்தமான பூதபஞ்சகங்களுக்குக காரணமான ஏற்றத்தாலும் ஸ்வவ்யதிரிக்தங்களுக்கு அவகாஶப்ரதாநம்பண்ணு மேற்றத்தாலும் “மீது” என்று - ஆகாஶத்தைச்சொல்லுகிறது.

---

முதற்பாட்டு.—காரணகுணாநுவர்த்தியாவது - பூமிக்கு பரம்பரையா மற்றநாலுபூதங்களும காரணமாகையாலே அந்த நாலு பூதங்களுடைய குணங்களும் கார்யமான பூமியிலே வர்த்திக்குமென்றபடி.

அண்டகாரணம் ப்ர்திவ்யாதிகளாயிருக்க ஶப்தாதி குணங்களோடே ஸமாநாதிகரித்தது ப்ர்திவ்யாதிகளோபாதி தத்குணங்களும் ஸ்வாதீநமா யிருக்கையாலே சொல்லுகிறது. ப்ர்திவ்யாதிகளோடு ஸாமாநாதிகரண்யம் ஶரீராத்மபாவ ஸம்பந்த நிபந்தநம்; குணங்களோடு ஸாமாநாதிகரண்யம் அவற்றினுடையஸத்தாதிகள் ஸ்வாதீநமாயிருக்கையாலே. அண்டத்துக்கு மஹதஹங்காரங்களும் காரணமாயிருக்க பூதங்களைந்தையுஞ் சொல்லுவானென்னென்னில்; "तस्माद्वा एतस्मादात्मन आकाशस्संभूतः" "தஸ்மாத்வா ஏதஸ்மாதாத்மந ஆகாஶஸ்ஸம்பூத:" என்கிற ஶ்ருதிச்சாயையாலேயருளிச்செய்கிறார். "भूतेभ्योऽण्डम्" "பூதேப்யோऽண்டம்" என்று ரிஷிகள் சொல்லுகிற பஞ்சீகரணத்தாலே - ஸூக்ஷ்மசிதசித்விஶிஷ்டப்ரஹ்மகாரணமாகையாலே சிதந்தர்ப்பூதமான புருஷஸமஷ்டியையும் நினைக்கிறது. இவ்வளவாக ப்ராக்ர்தஸ்ர்ஷ்டி சொல்லிற்றாய்த்து.

(வேறுவேறுதன்மையாய்) அண்டாந்தர்வர்த்திகளாய் ஒன்றுக்கொன்று விலக்ஷணமான தேவாதிபதார்த்தங்களுக்கும ஆத்மாவாய். ஆத்மாக்களுடையஸ்வரூபம் ஏகரூபமாயிருக்க "வேறுவேறு" என்கிறது கர்மத்தால்வந்த தேவாதிரூப பேதங்களைப்பற்ற. (நீநிலாயவண்ணம்) சிதசிச்சரீரியானநீ கார்யகாரணவர்க்கத்திலேநிற்கிற ப்ரகாரம். அதாகிறது - அசித்கதமான பரிணாமமென்ன, சேதநகதமான அஜ்ஞாநதுக்காதிகளென்ன இவை, உன்பக்கல்ஸ்பர்ஶியாதபடிநிற்கை. (நின்னை) சிதசித்விஶிஷ்டமாய்க்கொண்டு ஜகதுபாதாந காரணமானவுன்னை. (ஆர்நினைக்கவல்லர்) நினைக்கவல்லாரார். பரமாணுக்கள் உபாதாநகாரணமென்னும் வைஶேஷிகர் நினைக்கவோ; ப்ரதாநம் உபாதாநகாரணம், சிதசித்ஸம்ஸர்க்கத்தாலே ஜகந்நிர்வஹணமென்னும் ஸாங்க்யர் நினைக்கவோ; நிமித்தோபாதாநங்களுக்குபேதஞ்சொல்லும் ஶைவர் நினைக்கவோ; சிதசிதீஶ்வர தத்வத்ரயங்களும் பர்ஹ்மபரிணாமமென்னும் பேதாபேதிகள் நினைக்கவோ; நிர்விஶேஷ வஸ்துவ்யதிரிக்தங்கள் அபரமார்த்தமென்னும் மாயாவாதிகள நினைக்கவோ; வேதாந்த ப்ரமேயம் கைப்பட்டாரொழிய ஆர்நினைக்கவல்லர் என்கிறார். (௧)

அ.—இரண்டாம்பாட்டு. "सहयज्ञैः प्रजाः सृष्ट्वा" "ஸஹயஜ்ஞைப்ரஜாஸ் ஸ்ர்ஷ்ட்வா" என்கிறபடியே-காரணபூதனான வுன்னாலேஸ்ர்ஷ்டமான சேதநர்க்குகர்மயோகம்முதலாகபரமபக்திபர்யந்தமான பகவத்ஸமாராதநத்துக்கும் ஶுபாஶ்ரயமாகைக்கும் அந்த பரபக்தியுக்தர்க்கு ஸர்வவித போக்யமாகைக்கும் க்ர்ஷ்ணனாய்வந்து ரக்ஷிக்கும் உன்னுடைய நீர்மையை * யார் நினைக்கவல்லரென்கிறார்.

---

ஸத்தாதிகள்-குணங்களுடைய ஸத்தாதிப்ரவர்த்திகள்.

இரண்டாம்பாட்டு —ஶுபாஶ்ரயம் - விஷயம்.

ஆறுமாறுமாறுமாயோரைந்துமைந்துமைந்துமாய்
ஏறுசீரிரண்டுமூன்றுமேழுமாறுமெட்டுமாய்
வேறுவேறுஞானமாகிமெய்யினோடுபொய்யுமாய்
ஊறொடோசையாயவைந்துமாயவாயமாயனே. (உ)

ப-ரை.—ஆறும் - அத்யயநாதிஷட்கர்மங்களாறும், ஆறும் - வஸந்தாதி ருதுக்களாறும், ஆறுமாய் - ஆக்நேயம்முதலான யாகங்களாறுமாய், ஓரைந்து - பஞ்சமஹாயஜ்ஞத்துக்கும், ஐந்தும - பஞ்சாஹுதிகட்கும் ஆராத்யனாய், ஐந்துமாய் - பஞ்சாக்நிகட்கு அந்தராத்மாவுமாய், ஏறு - ச்லாக்யமான, சீர்இரண்டும்-உபாஸநரூப பகவத்ஜ்ஞாநமும் இதரவிஷயவைராக்யமுமாகிற இரண்டு குணங்களும், மூன்றும்-ஐச்வர்ய கைவல்ய பகவத்ப்ராப்திகள் மூன்றும், ஏழும்-விவேகவிமோகம் முதலான ஏழுகர்மங்களும், ஆறும் - ஜ்ஞாநபலைச்வர்யம் முதலான ஆறும், எட்டுமாய் - அபஹதபாப்மத்வாதி எண்குணங்களுமாய், வேறுவேறுஞானமாகி - நிர்மலாந்தக்கரணரல்லாத பாக்யஹீநர்க்கும் பாஹ்ய குத்ருஷ்டிஸ்மாதிகளுக்கும் பரவாதத்களுய், மெய்யுமாய் - முமுக்ஷுக்களுக்கு மெய்யனாய், பொய்யுமாய் - ப்ரயோஜநாந்தரபரர்க்கு க்ஷுத்ரப்ரயோஜநங்களைக்கொடுத்துத் தான் அகலநிற்கையாலே பொய்யனாய், ஊறொடோசையாய ஐந்துமாய - சப்தஸ்பர்சரூபரஸகந்தங்களோடு கூடினமாய், ஆயனாய் - கோபஸஜாதியனாய் வந்து திருவவதரித்த, மாயனே - ஆச்சர்யபூதனே!, உன்னை உள்ளபடி பரிச்சேதித்தறிய வல்லாரானொருவர்.

வ்யா.—(ஆறுமாறுமாறுமாய்) அத்யயநாதி ஷட்கர்மங்களும், அத்யயநத்தால் ஜ்ஞாதவ்யமான கர்மாநுஷ்டாநத்துக்கு யோக்ய மான வஸந்தாதிருதுக்களாறும், அநுஷ்டேயமான ஆக்நேயாதிஷட் யாகங்களும். இது ஸர்வகர்மங்களுக்கு முபலக்ஷணம். இவை ஆறு என்றது - இவற்றோடே ஈச்வரனை ஸமாநாதிகரித்தது. அத்யய நாதிகளிலே, "𑌦𑌦𑌾𑌮𑌿 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌯𑍋𑌗𑌂 𑌤𑌮𑍍" "ததாமிபுத்தியோகந்தம்" என் கிறபடியே - சேதநனைமூட்டியும் அவற்றுக் கேகாந்தங்களான கால ங்களுக்கு நிர்வாஹகனாயும், அநுஷ்டேய கர்மங்களுக்கு ஆராத்ய னாயு மிருக்கையாலே ஸமாநாதிகரித்துச் சொல்லுகிறது. (ஓரைந் து மைந்துமைந்துமாய்) கீழ்ச்சொன்ன கர்மத்துக்கு அதிகாரஸம் பத்துகக்குடலாய், ப்ரதாநமான பஞ்சமஹாயஜ்ஞத்துக்கும், பஞ்சா ஹுதிகட்கும் ஆராத்யனாய், பஞ்சாக்நிக்கு அந்தராத்மாவாயுமிருக் குமவன். பஞ்சமஹாயஜ்ஞமாவது - "𑌦𑍇𑌵𑌯𑌜𑍍𑌞𑍋 𑌪𑌿𑌤𑍃𑌯𑌜𑍍𑌞𑍋 𑌭𑍂𑌤𑌯𑌜𑍍𑌞𑍋 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌯𑌜𑍍𑌞𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌯𑌜𑍍𑌞𑌃" "தேவயஜ்ஞோ பிதுர்யஜ்ஞோ பூதயஜ்ஞோ மநுஷ்யயஜ்ஞோ ப்ரஹ்மயஜ்ஞ:" என்கிறவை. பஞ்சாஹுதிக ளாவன - ப்ராணாஹுதிகள். பஞ்சாக்நிகளாவன - கார்ஹபத் யாஹவநீயதக்ஷிணாக்நிகளும் ஸப்யாவஸத்யங்களும். (ஏறுசீரிரண் டும்) "𑌧𑌰𑍍𑌮𑍇𑌣 𑌪𑌾𑌪𑌮𑌪𑌨𑍁𑌦𑌤𑌿" "தர்மேணபாபமபநுததி" என்னும்படி யே-விஹிதகர்மாநுஷ்டாநத்தாலே மோக்ஷவிரோதிபாபம்போனால்

---

அத்யயநாதிஷட்கர்மங்கள் - அத்யயந அத்யாபந யஜந யாஜந தாந ப்ரதிக்ரஹங்களாகிற ஆறு கர்மங்கள். ... ... உ

இவன்பக்கலிலே [பிறக்கும்] உபாஸநரூப பகவத்ஜ்ஞாநமும் தத்கார்யமான இதர விஷயவைராக்யமு மென்கிற இரண்டு குணமும். * மாற்பால் மநஞ்சுழிக்கையும், மங்கையர்தோள் கைவிடுகையும். (மூன்றும்) உபாஸநபலமான ஐஶ்வர்ய கைவல்ய பகவத்ப்ராப்திகள். அன்றிக்கே, ஜ்ஞாநவைராக்ய ஸாத்யமான பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திகள் மூன்றும். (ஏழும்) உக்தமானகர்மயோகாதி பரபக்தி பர்யந்தமான அளவுகளை பலிக்கக்கடவ மநோநைர்மல்யத்துக் கடியான விவேகாதி ஸப்தகமும். அதாகிறது - விவேக விமோகாப்யாஸக்ர்யாகல்யாணு நவஸாதாநுத் தர்ஷங்கள். அதாகிறது – மநோநைர்மல்ய ஹேதுவான விவேகாதி நியமஸப்தகயுக்தமாகிய க்ரியாஶப்த வாச்யமான விஹித கர்மாநுஷ்டாநத்தாலே உபாஸநநிஷ்பத்தியைச் சொல்லுகிறது. (ஆறும்) உக்தபக்தி வர்த்தகமாய் ஸ்வயம் ப்ராப்யமான ஜ்ஞாந பலைஶ்வர்ய வீர்யஶக்தி தேஜஸ்ஸுக்களாறும். (எட்டுமாய்) * அபஹத பாப்மத்வாதி குணாஷ்டகமுமாய். "స్వేనరూపేణాభినిష్పద్యతే" "ஸ்வேநரூபேணாபிநிஷ்பத்யதே" என்கிறபடியே இது ப்ராப்யார் தர்க்கதமிறே.

(வேறுவேறுஞாநமாகி) நிர்மலாந்தஃகரணரல்லாதபாக்யஹீநர்க்கும் பாஹ்யகுத்ர்ஷ்டி ஸ்ம்ருதிகளுக்கும் ப்ரவர்த்தகனாய். (மெய்யினோடுபொய்யுமாய்) கீழ்ச்சொன்ன முமுக்ஷுக்களுக்கு மெய்யனாய், ப்ரயோஜநாந்தரபரரான க்ஷுத்ரர்க்கு ப்ரயோஜநங்களைக்கொடுத்து தான் அகல நிற்கையாலே பொய்யனாய். (ஊறொடோசையாய வைந்துமாய) பரமபக்தி யுக்தராயிருப்பார்க்கு ஸர்வவித போக்யமானவன். "ஊறொடோசை" என்று - ஶப்தாதிகளைந்துக்கும் உபலக்ஷணம். "உண்ணுஞ்சோறு பருகுநீர்" என்றும், "சேலேய் கண்ணியரும் பெருஞ்செல்வமும்" என்னக்கடவதிறே. (ஆயமாயனே) கோபஸஜாதீயனாயவதரித்த ஆஶ்சர்யபூதனே. அதாவது - தான் நின்ற நிலையிலேநின்று ஆஶ்ரிதர்க்கு உபகரிக்கையன்றிக்கே, திவ்ய மங்களவிக்ரஹத்தை ஸம்ஸாரிஸஜாதீயமாக்கிவந்தவதரித்து, உபாஸகர்க்கு ஶுபாஶ்ரயமாய் ஸித்தோபாய பரிகரஹம் பண்ணினார்க்கு விஷயாந்தரங்களில் நின்றும்மீட்டு, தானே போக்யமுமாய், * காணவாராயென்றென்று கண்ணும்வாயும் துவர்ந்திருக்கும் பரமபக்தி யுக்தர்க்கு ஸர்வவித போக்யமுமானவனென்கை. அவதாரந்தான் * ஸாதுபரித்ராணத்துக்கும் தர்மஸம்ஸ்தாபநத்துக்கு மாகவிறே.௨

அ.—மூன்றாம்பாட்டு. முதற்பாட்டிற் சொன்ன ஜகத்காரணத்வப்ரயுக்தமான லீலாவிபூதியோகமென்ன, இரண்டாம்பாட்டிற் சொன்ன உபாயத்துக்கு பலமான நித்ய விபூதியோகமென்ன, ஆக இந்த உபய விபூதியோகத்தை நிர்ஹேதுக க்ருபையாலே தேவரீர் காட்ட வருத்தமற நான் கண்டாப்போலே வேறு ஸ்வஸாமர்த்யத்தால் காணவல்லாரில்லை யென்கிறார்.

ஐந்துமைந்துமைந்துமாகியல்லவற்றுளாயமாய்
ஐந்துமூன்றுமொன்றுமாகிநின்றவாதிதேவனே!
ஐந்துமைந்துமைந்துமாகியந்தரத்தணைந்துநின்
றைந்துமைந்துமாயநின்னையாவர்காணவல்லரே. (௰)

ப-ரை.—ஐந்தும் - ஆகாசாதிபூதங்களைந்தும், ஐந்தும்-ச்ரோத்ராதிஜ்ஞாநேந்த்ரியங்களைந்தும், ஐந்துமாகி - வாக்முதலிய கர்மேந்த்ரியங்களைந்துமாகி, ஐந்தும் - ஆகாசாதிபூதங்களைந்துக்கும் காரணமான தந்மாத்ரைகளைந்தும், மூன்றும் - அஹங்காரம் மஹாந் ஸூக்ஷ்மமூலப்ரக்ருதி என்கிற மூன்றும், ஒன்றுமாகி-மநஸ்ஸுமாய், அல்லவற்றுள்-இப்படி இருபத்துநாலாகப் பிரிக்கப்பட்டிருக்கிற ப்ரக்ருதியிலே ஸம்ஸ்ருஷ்டமான ஜீவாத்மாக்களுக்கு; ஆயமாய்-அந்தர்யாமியாய், நின்ற-இவையழிந்தகாலத்திலும் ஸூக்ஷ்மசிதசித்விசிஷ்டனாய்க் கொண்டுநின்ற, ஆதிதேவனே - காரணபூதனே, ஐந்தும் - அப்ராக்ருதமாய் திவ்ய சக்திமயமான திவ்யவிக்ரஹமும், ஐந்தும் - அதுக்கு நிரூபகமான ஜ்ஞாநேந்த்ரியங்களைந்தும், ஐந்தும - கர்மேந்த்ரியங்களைந்துமாகி, இவற்றுக்கு, ஆகி-நிர்வாஹகனாய், ஐந்தும் - சப்தாதிபோகயங்களைந்தும், ஐந்துமாய - போகஸ்தாநம் போகோபகரணம் வைகுந்தத்தமரர்முனிவர் முமுக்ஷுக்கள் என்கிற ஐந்தபோகியுமாய், அந்தரத்து - பரமபதத்திலே, அணைந்துநின்று - பொருந்திநின்ற, நின்னை - உபயவிபூதி யுக்தனாயிருக்கிற வுன்னை, யாவர்காணவல்லரோ - ஸ்வஸாமர்த்யத்தாலே காணவல்லாரார்.

வ்யா.—(ஐந்துமைந்துமைந்துமாகி) ஆகாசாதி பூதங்களைந்தும், ச்ரோத்ராதி ஜ்ஞாநேந்த்ரியங்களைந்தும், வாகாதி கர்மேந்த்ரியங்களைந்துமாகி. (ஐந்துமூன்றும்) ஆகாசாதிபூதங்களைந்துக்கும் காரணமான தந்மாத்ரைகளைந்தும், ஒன்றுக்கொன்று காரணமான அஹங்காரமென்ன மஹானென்ன ஸூக்ஷ்ம மூலப்ரக்ருதியென்ன இவை மூன்றும். (ஒன்றுமாகி) "மந:ஏவ" "மநஸ்ஸு" என்கிறபடியே-உத்தமான ஸகல பதார்த்தங்களுக்கும் பந்த ஹேதுவாகைக்கும் மோக்ஷ ஹேதுவாகைக்கும் ஹேதுவான மநஸ்ஸுமாய். (அல்லவற்றுளாயமாய்) இப்படி சதுர்விம்சதியாக விபக்தமான ப்ரக்ருதியிலே ஸம்ஸ்ருஷ்டரான ஜீவாத்மாக்களுக்கு அந்தர்யாமியாய். (அல்லவற்றுள்) அசித் வ்யாவர்த்தரான சேதநர்பக்கலிலே. (நின்றவாதிதேவனே) ஸ்தூலசிதசித்விசிஷ்டனாய் நின்றாப்போலே, இவை அழிந்த காலத்திலும், ஸூக்ஷ்ம சிதசித்விசிஷ்டனாய்க் கொண்டு நின்ற காரணபூதனானவனே. (ஐந்துமைந்துமைந்துமாகி) இதுக்குக்கீழே லீலாவிபூதியோகத்தைக்காட்டித்தந்தபடியைச் சொன்னாராய், மேல் திவ்யமங்கள விக்ரஹத்தையும் நித்யவிபூதியோகத்தையும் காட்டித் தந்தபடியைச் சொல்லுகிறார். அப்ராக்ருதமாய் பஞ்சசக்திமயமான திவ்ய விக்ரஹத்தையும், ததாச்ரயமானஜ்ஞாநேந்த்ரியங்களைந்தும் கர்மேந்த்ரியங்களைந்து மென்கிற இவற்றுக்கு நிர்வாஹகனாய். இத்தால் - திவ்ய விக்ரஹயோகஞ்சொல்லிற்று.

---

மூன்றாம்பாட்டு.— பஞ்சசக்தி - "ஸ்ம்ருதிவிஷ்ணுபுராணாதி(?) ..." என்கிறவை.

(அந்தரத்தணைந்துநின்றுஐந்துமைந்துமாய)ஶப்தாதிபோக்யங்களைந்தும்,போகஸ்தாநமென்ன,போகோபகரணமென்ன,“வைகுந்தத்தமரரும்முனிவரும்” என்றஇரண்டுகோடியும், முக்தரும் என்ற அஞ்சுகோடியுமாய். (அந்தரத் தணைந்துநின்று) “ பரமவ்யோம ” “பரமவ்யோம” என்றும், “பரமாகாஶ” “பரமாகாஶம்” என்றும் ஶ்ருதி ப்ரஸித்தமான பரமபதத்திலே பொருந்திநின்று. இப்படி உபயவிபூதி யுக்தனான (நின்னையாவர் காணவல்லரே) ஸ்வஸாமர்த்யத்தால் காணவல்லாரார். மநுஷ்யரிற்காட்டில் ஜ்ஞாநாதிகரென்று தேவர்கள் காணவோ; உபயபாவநாநிஷ்டரென்று ப்ரஹ்மாதிகள் காணவோ; ப்ரஹ்மபாவநா நிஷ்டரென்று ஸநகாதிகள் காணவோ. ... ... ... ... ... ... ௩

அ.—நாலாம்பாட்டு. ஜ்ஞாபகமான வேதங்களையும் மந்த்ர ரஹஸ்யங்களையும் தேவரீருண்டாக்கி வைக்கச்செய்தேயும் அவ்வழியாலேயறிந்து உபாஸியாதேயிருக்க,நீயேவந்து என்னுடைய ஹ்ருதயத்திலே புகுந்த விதுஎன்ன நீர்மை! என்கிறார்.

மூன்றுமுப்பதாறினோடோரைந்துமைந்துமைந்துமாய
மூன்றுமூர்த்தியாகிமூன்றுமூன்றுமூன்றுமூன்றுமாய்
தோன்றுசோதிமூன்றுமாய்த்துளக்கமில்விளக்கமாய்
ஏன்றெனாவியுள்புகுந்ததென்கொலோவெம்மீசனே. (௪)

ப-ரை.—ஸகலவேதத்துக்குமடியான, மூன்றுமுப்பது - ககாராதி ஹகாராந்தமான முப்பத்துமூன்று மெய்யெழுத்துக்களும், ஆறினோடோரைந்துமைந்தும் - பதினாறு உயிரெழுத்துக்களும், இரண்டிலும் - அநுபாத்தமான, ஐந்துமாய் - ளகரம் முதலான ஐந்தெழுத்துக்களுமாகிய ஐம்பத்துநாலு அக்ஷரங்களுக்கும் நிர்வாஹகனாய், மூன்றுமூர்த்தியாகி - வேதாத்மாவான மூன்றுரூபத்தையுமுடையையாய், மூன்று மூன்று மூன்று மூன்றுமாய் - த்வாதசாக்ஷர பரதிபாத்யனாய், தோன்றுசோதி மூன்றுமாய் - மூன்றக்ஷரங்களாலாகிய ப்ரணவத்தாலே ப்ரதிபாதிக்கப்படுமவனாய், துளக்கமில் - அசைவின்றிக்கேயிருக்கிற, விளக்கமாய - அகாரவாச்யனாய், எம்மீசனே - நீ சேஷி நானசேஷபூதன் என்கிற ஸம்பந்தத்தை உணர்த்தினவனே!, ஏன்று - என்காரியத்தை உனக்கு பரமாகவறிட்டுக்கொண்டு, என்ஆவியுள் புகுந்தது - என்மநஸ்ஸிலே புகுந்து எனனைப்ரகாசிப்பித்தது, என - என்னநீர்மை!, என்று ஈடுபடுகிறார்.

வ்யா.—(மூன்றுமுப்பதாறினோடோரைந்து மைந்து மைந்துமாய்) ஸகலவேதங்களுக்குமடியான ஐம்பத்துநாலு அக்ஷரத்துக்கும் நிர்வாஹகனாய். (மூன்றுமுப்பது) ககாராதி ஹகாராந்தமான ஹல்லுக்களான முப்பத்துமூன்று அக்ஷரமும். (ஆறினோடோரைந்துமைந்தும்) அச்சுக்களான பதினாறு அக்ஷரமும். (ஐந்துமாய்) இரண்டிலும் அநுபாத்தமான ளகாராதிகள் அஞ்சக்ஷரமும்.

---

போகோபகரணம் - சத்ரசாமராதிகள். ... ... ...௩
நாலாம்பாட்டு.—அகாரமமுதலானதுக்கு“அச்சு”என்றுபேர்.

(மூன்றுமூர்த்தியாகி)வேதாத்மாவானமூன்றுரூபத்தையுமுடையனாய்.அக்ஷரங்கள்ஜ்ஞாநஹேதுவாவதுவேதஶரீரமாகையிறே.(மூனறுமூன்று மூன்றுமூன்றுமாய்) அந்த வேததாத்பர்யமான திருத்வாதஶாக்ஷரப்ரதிபாத்யனாய். (தோன்றுசோதிமூன்றுமாய்) மூன்றிலே தோன்றுகிற சோதியாய். "ஓங்காரோ பகவாந் விஷ்ணு:" "ஓங்காரோ பகவாந் விஷ்ணு:" என்கிறபடியே-அக்ஷரத்ரயாத்மகமான ப்ரணவ ப்ரதிபாத்யனாய். (துளக்கமில்விளக்கமாய்) ஸகலவேதகாரண ப்ரணவத்துக்குங் காரணமாய். தனக்கொரு காரணமில்லாமையாலே, சலநமின்றிக்கேயிருக்கிறஅகாரவாச்யனாய்.(ஏன்றெனாவியுள்புகுந்ததென்கொலோ) இவ்வழியாலே நானறிந்து உபாஸிக்கைக்கு விஷயபூதனாகையன்றிக்கே, என்கார்யத்தை உனக்கு பரமாக ஏறிட்டுக்கொண்டு என்மநஸ்ஸிலே புகுந்து என்னை உள்ளபடி ப்ரகாஶிப்பித்த விதுஎன்னநீர்மை. (எம்மீசனே) ப்ரகாஶிப்பித்த ப்ரகாரமென்னென்னில்; நீ ஶேஷியாய் நான்ஶேஷபூதனாயிருக்கிற இம்முறையுணர்த்தினாயென்னுதல்; இப்படி எனக்கு ப்ரகாஶிப்பிக்கைக்கடி இழவுபேறுகள் உன்னதாம்படியான ஸம்பந்தத்தை யுடையவனென்னுதல். ... ... ... ... ... ... ௪

அ.—அஞ்சாம்பாட்டு. நம்மை உள்ளபடி அறிவிக்கவற்றான வேதங்களும் மந்த்ரரஹஸ்யங்களுமுண்டாயிருக்க, "யாவர்காணவல்லரோ"என்பானென்னென்னில்; அந்தர்யாமித்வததாலும் ஜகதேககாரணத்வததாலும் ஸகலாதாரனாயிருக்கிற ஸ்வபாவத்தைத் திரளவறியு மித்தனையொழிய, தேவரீர்காட்ட நான் கண்டாப்போலே ஏவம்விதனென்று ஒருவர்க்கு மறியவொண்ணாதென்கிறார்.

நின்றியங்குமொன்றிலாவுருக்கடோறுமாவியாய்
ஒன்றியுள்கலந்துநின்றநின்னதன்மையின்னதென்
றென்றும்யார்க்குமெண்ணிறந்தவாதியாய!நின்னுந்திவாய்
அன்றுநான்முகற்பயந்தவாதிதேவனல்லையே. (ரு)

ப-ரை.—நின்று-ஸ்தாவரமாய்நின்றும், இயங்கும்-ஜங்கமமாய்ஸஞ்சரித்தும், ஒன்றிலா - உஜ்ஜீவநப்ரகாரங்களல் ஒன்றுக்கும் உறுப்பன்றிக்கேயிருக்கிற, உருககள்தோறும - ஸகலசரீரங்கள்தோறும,ஆவியாய் - ஆத்மாவாய், ஒன்றி-எதிர்ததலையில் ஹேயதையைப்பாராதே பொருந்தி, உள்கலநதுநின்ற - ஏகதத்வமென்னும்படி கலநதுநின்ற, நின்னதனமை - உனனுடையஸ்வபாவம், இன்னதென்று-இப்படிப்பட்டதென்று, என்றும் - நிகழ்காலததிலும எதிர்காலத்திலும், யார்க்கும் - பேரளவுடையரான பரஹமாதிகளுக்கும, எண் இறந்த-

வேதாதமாவான - வேதஶரீரமான. மூனறு ரூபமாவது - கீழ் "ஹல்" என்றும், "அச்சு" என்றும் இரண்டு மன்றியிலே யிருக்கிற ளகாராதியுமாகிற மூன்று ரூபத்தையு மென்றபடி. அக்ஷரங்கள் வேதஶரீரமாக வேண்டுவானென்னென்ன ; அருளிச்செய்கிறார் (அக்ஷரங்களித்யாதி.) ... ... ... ... ... ௪

மநஸ்ஸால் நினைக்கைக்குமெட்டாத, ஆதியாய் - ப்ரதாநனானவனே, அன்று-தேவாதி ஸகலபதார்த்தங்களும் அழிந்துகிடந்தவன்று, நின் உந்திவாய்-உன்னுடைய திருநாபீகமலத்திலே, நான்முகன்பயந்த - ப்ரஹ்மாவை ஸ்ருஷ்டித்த, ஆதிதேவனல்லையே-ஜகதேககாரணனல்லையோ, உன் ஸ்வரூபத்தை உள்ளபடி காணவல்லாரார்.

வ்யா.—(நின்றியங்குமொன்றிலா வுருக்கள்தோறும்) ஸ்தாவர ஜங்கமாத்மகமாய், தந்தாமுடைய உஜ்ஜீவநப்ரகாரங்களில் ஒன்றுக்கு முறுப்பன்றிக்கேயிருக்கிற ஸகல ஶரீரங்கள்தோறும். ஒருபடிப் பட்டிராத ஶரீரங்களென்றுமாம். (ஆவியாயொன்றியுள்கலந்துநின்ற)ஆத்மாவாய்,எதிர்த்தலையில் ஹேயதையைப் பாராதேபொருந்தி, ஸமாப்ய-உள்புகுந்து,ஏகத்ரவ்யமென்னும்படிகலந்துநிற்கிற. (நின்ன தன்மை) உன்னுடைய ஸ்வபாவம். அதாகிறது-தத்கததோஷங்கள்தட்டாதேநிற்கையும், விபுவானதான்இவற்றிலேஸமாப்யவ்யாபரிக்கையுமாகிறஇவ்வாஶ்சர்யம்.(இன்னதென்று)ஏவம்விதமென்று. த்ர்ஷ்டாந்தமுகத்தாலே உபபந்நமென்று. (என்றும்யார்க்கும்)வர்த்தமாநகாலத்தோடுபவிஷ்யத்காலத்தோடுவாசியற அதிஶயிதஜ்ஞாநரானப்ரஹ்மாதிகளுக்கும்.(எண்ணிறந்த)மநோரதத்துக்கும்அவ்வருகாய்நின்ற. (ஆதியாய்) ப்ரதீதிவ்யவஹாரங்களிலேவந்தால் ப்ரதாநனானவனே. ஸாக்ஷாத்கரிக்கும்போது, "நிற்கின்றதெல்லாம்நெடுமால்" என்கிறபடியேவிஶேஷ்யமானதேவரீர்ப்ரதாநராயசேதநாசேதநங்கள் விஶேஷணமாத்ரமாயிருக்கையும், வ்யவஹாரத்தில்வந்தால் "వచసాంవాచ్యముత్తమమ్" "வசஸாம்வாச்யமுத்தமம்" என்கிறபடியே ஶப்தவாச்யங்களில் ப்ரதாநனாய் நிற்கையும். (நின்னுந்திவாயன்று நான்முகம்பயந்த வாதிதேவனல்லையோ)இதுகிடக்க,ஜகதேககாரணனாய் நிற்கிறநிலைதான் ஒருவர்க்குமறிய நிலமோ. * ஒன்றுந்தேவில்படியே தேவாதி ஸகலபதார்த்தங்களும் அழிந்துகிடந்தவன்று உன்னுடைய திருநாபீகமலத்திலே, "యో బ్రహ్మాణం విదధాతి పూర్వమ్" "யோப்ரஹ்மாணம்விததாதிபூர்வம்" என்கிறபடியே ப்ரஹ்மாவை ஸ்ருஷ்டித்த ஜகதேககாரணனல்லையோ. திருநாபீகமலோத்பத்தியைப்பார்த்தால் ப்ராக்ர்தமென்னவொண்ணாது, க்ஷேத்ரஜ்ஞனான ப்ரஹ்மாவுக்கு உத்பாதகமாகையாலே அப்ராக்ர்தமென்னவொண்ணாது, இவ்வாஶ்சர்யத்தை ஏவம்விதமென்று, கர்மவஶ்யராய் பரிமிதஜ்ஞாநரான ப்ரஹ்மாதிகளறியவோ. ... ... ... ரு

---

அரும்பதம்.—ஸமாப்ய-விபுவான ஸ்வரூபமெல்லாவற்றோடும் வ்யாபிக்கை. உபபந்நமாகாதிருக்கைபூரிப்பது .சொல்லக்கூடாதிருக்கையென்றபடி. ப்ரதீதி வ்யவஹாரங்களேதென்ன; அருளிச்செய்கிறார் (ஸாக்ஷாத் இத்யாதி.) இப்பாட்டுக்கு "யாவர்காணவல்லர்" என்று கீழ்ப்பாட்டோடே க்ரியை. ... ... ... ரு

அ.—ஆறும்பாட்டு. ஸகலாந்தர்யாமித்வத்தால் வந்த ஸகலாதாரத்வம் சொல்லிற்றாய் நின்றது-கீழ்; லோகத்திலே யொன்றுக்கொன்று தாரகமாயும் தார்யமாயும் போருகிற தில்லையோவென்று பகவதபிப்ராயமாக; அந்த பதார்த்தங்களுக்கும் தேவரீரே தாரகமென்று வேதாந்த ப்ரஸித்தமான 'இவ்வர்த்தம் தேவரீர் பக்ஷலிலே வ்யவஸ்திதமன்றோ, இஸ்ஸர்வாதாரத்வமும் ஸ்வஸாமர்த்யத்தாலே வேறொருவர்க்கும் காணமுடியாதென்கிறார்.

நாகமேந்துமேருவெற்பைநாகமேந்துமண்ணினை
நாகமேந்துமாகமாகமாகமேந்துவார்புனல்
மாகமேந்துமங்குல்தீயோர்வாயுவைந்தமைந்துகாத்
தேகமேந்திநின்றநீர்மைநின்கணேயியன்றதே. (கூ)

ப-ரை.—நாகம்ஏந்து-ஸ்வர்க்கத்தை தரிக்கிற, மேருவெற்பை-மேருபர்வதத்தையும், நாகம் ஏந்து-திக்கஜங்களாலே தரிக்கப்படுகிற, மண்ணினை-பூமியையும், நாகம் - துக்கசம்பந்தரஹிதமான ஸுகத்தாலே, ஏந்து - பூர்ணமான, மாகம் - பரமவ்யோமத்தையும், மாகம்-பரமபதத்தையும், மாகமேந்து-ஆகாசத்தாலே தரிக்கப்படுகிற, வார்புனல் - பரவாஹத்தையுடைய கங்கையையும், மாகமேந்து-ஆகாசம்தரிக்கின்ற, மங்குல் - மேகத்தையும், தீ - வைச்வாநராக்நியையும், ஓர் - அத்விதீயமான, ஐந்துவாயு - பஞ்சவ்ருத்திப்ராணனையும், அமைந்துகாத்து-பொருந்தி நின்று ரக்ஷித்து, ஏகம - ஒருவஸ்துவானது, ஏந்திநின்ற - தரியாநின்றதென்று ச்ருதிசொல்லுகிற, நீர்மை - ஸ்வபாவம், நின்கணேயியன்றதே-தேவரீர்பக்கலிலேயே வர்த்திக்கிறதென்கிறார்.

வ்யா.—(நாகமேந்துமேருவெற்பை) ஸ்வர்க்கத்தை தரிக்கிற மேருவாகிற பர்வதத்தை. மேருவுக்கு ஸ்வர்க்காதாரத்வம் மேருசிகரத்தில் தேஜோத்வாரத்தாலே. (நாகமேந்துமண்ணினை) திக்கஜங்களாலே தரிக்கப்படுகிற பூமியென்னுதல்; பாதாளகதனாயிருந்துள்ள திருவநந்தாழ்வானாலே தரிக்கப்படுகிற பூமியென்னுதல். (நாகமேந்துமாகம்) துக்கசம்பந்தரஹிதமான ஸுகத்தாலே பூர்ணமான பரமவ்யோமம். "ஏந்தல்" என்று - தேங்கலாய், ஆநந்தநிர்ப்பரமான தேசமென்கை. "நாகம்" என்று-துக்கசம்பந்தரஹிதமானஸுகத்துக்கு வாசகமானபடி யெங்ஙனேயென்னில்; கம் - ஸுகம். அகம்-துக்கம். நாகம்-துக்கரஹிதமித்யர்த்தம். "நாகமேந்து மஆக" என்று - ஸம்புதநியாய, திருவநந்தாழ்வானாலே தரிக்கப்பட்ட திருமேனியையுடையவனே.

---

ஆறும்பாட்டு.—பதார்த்தங்களுக்கும்-ஒன்றுக்கொன்று தாரகமான எல்லா பதார்த்தங்களுக்கும் ஸர்வேஸ்வரனே தாரகனென்றபடி.

இத்தால் - கீழ்ச்சொன்ன தாரகபதார்த்தங்களும் பகவதாஹித ஶக்திகமாய்க்கொண்டு தரிக்கிறனவென்றதாய்த்து. (மாகமாகமேந்துவார்புனல்)பரமபதமென்ன, ஆகாஶத்தாலே தரிக்கப்படுகிறப்ரவாஹரூபமானகங்கையென்ன, இவையும். (மாகமேந்துமங்குல்) ஆகாஶம்தரிக்கிற மேகத்தையும். (தீயோர்வாயுவைந்தமைந்து காத்து) வைஶ்வாநராக்நியையும் பஞ்சவ்ர்த்திப்ராணன்களையும்ரக்ஷணதர்மத்திலே சமைந்துநின்றுரக்ஷித்து. "ஓர்வாயுவைந்துமைந்து காத்து" என்று பாடமானபோது - தஶதாவிபக்தமான வாயுவைச்சொல்லுகிறது. "మేఘోదయస్సాగరసన్నివృత్తి:" "மேகோதயஸ்ஸாகரஸந்நிவ்ர்த்தி;" இத்யாதிகளிற் சொல்லுகிறபடியே நிராலம்பநமான ஆகாஶத்திலே ஸஞ்சரிக்கிற ஸகலபதார்த்தமும் ஈஶ்வரஸங்கல்பத்தாலே ஸஞ்சரிக்கிறதென்று சொல்லிற்றாய்த்து. "యథాకాశస్థితో నిత్యమ్" "யதாகாஶஸ்திதோநித்யம்" இத்யாதி. (ஏகமேந்திநின்றநீர்மை) ஒருவஸ்து தரிக்கிறதென்று ஶ்ருதிசொல்லுகிற ஸ்வபாவம். (நின்கணேயியன்றதே) தேவரீர்பக்கலிலே வர்த்திக்கிறது. இயத்தல் - நடத்தலும், வளர்த்தலும். "யாவர்காணவல்லர்" என்று கீழோடே அந்வயம். இஸ்ஸர்வாதாரத்வத்தைத் தேவரீர்காட்ட நான்கண்டாப்போலே வேறுகாண வல்லாராரென்கிறார். ... சு

அ.—ஏழாம்பாட்டு.—நாம் ஜ்ஞாநத்துக்கு விஷயமான பின்பு பரிச்சேதித்து அறியமாட்டாதொழிகிறது ஜ்ஞாநஶக்திகளின்குறையன்றோ, "யாவர்காணவல்லரோ" என்கிறதென்னென்ன; தேவரீர் இதரஸஜாதீயராய் அவதரித்து ரக்ஷிக்கிறபடியை ஜ்ஞாநத்தாலும் ஶக்தியாலும் அதிகனான ருத்ரனு மறியமாட்டானென்கிறார்.

ஒன்றிரண்டுமூர்த்தியாய்,உறக்கமோடுணர்ச்சியாய்,
ஒன்றிரண்டுகாலமாகி,வேலைஞாலமாயினாய்,
ஒன்றிரண்டுதீயுமாகி,ஆயனாயமாயனே!
ஒன்றிரண்டுகண்ணினானுமுன்னையேத்தவல்லனே. (எ)

ப-ரை.—ஒருமூர்த்தி. பரதாநமான ஒருமூர்த்தியும், இரண்டுமூர்த்தியாய்- அபரதாநமான இரண்டுமூர்த்தியுமாய், உறக்கமோடு - அஜ்ஞாநத்துக்கும், உணர்ச்சி - ஜ்ஞாநத்துக்கும், ஆய் - நிர்வாஹகனாய், ஒன்றிரண்டுகாலமாகி - ஸத்வரஜஸ்தமமாகிற மூன்றுகுணங்களுக்கும் நிர்வாஹகனாய், வேலை - கடல்சூழ்ந்த,

(இத்தாலென்றது) - பரமவ்யோமத்துக்கு அவன்றானே தாரகனென்னு மிடந்தோற்ற வேறொன்றை தாரகமாக இட்டுச்சொல்லாதே, கேவலம் "மாகம்" என்றவித்தால்-கீழ்தாரகங்களாகச் சொன்னமேருவும் ஶேஷனும் ஈஶ்வரனாலே கொடுக்கப்பட்ட ஶக்தியையுடைத் தாய்க்கொண்டு தரிக்கின்றன என்றபடி. அக்நி - ஜாடராக்நி. யோக ஶாஸ்த்ரத்திலே அவனதீநமென்றதுக்கு ப்ரமாண மருளிச்செய்கிறார் (யதாகாஶேத்யாதி.) ... சு

ஞாலமாயினாய் - பூமிக்குநிர்வாஹகனாய், ஒன்றிரண்டுதீயுமாகி-ஆஹவநீயம் கார்ஹபத்யம் தக்ஷிணாக்நிகளாகிற மூன்றக்நிகளுக்கும்நிர்வாஹகனாய், மாயனாய்-ஆச்சர்யபூதனான, ஆயனே - க்ருஷ்ணனே, ஒனறிரண்டுகண்ணினானும் - முக்கணனானருத்ரனும், உன்னை - ஸர்வநிர்வாஹகனானவுன்னை, ஏத்தவல்லனே-உள்ளபடி அறிந்து ஸ்தோத்ரம்பண்ணசக்தனோவென்கிறார்.

வ்யா.—(ஒன்றிரண்டுமூர்த்தியாய்) ப்ரதாநமான ஒருமூர்த்தியும் அப்ரதாநமான இரண்டுமூர்த்தியுமாய். ப்ரஹ்மருத்ரர்களை ஶரீரமாகக்கொண்டு அவர்களுக்கு நிர்வாஹகனாய், திவ்யமங்களவிக்ரஹத்தை இதரஸஜாதீயமாகக்கொண்டவதரித்து ப்ரயோஜநாந்தரபரரோடு முமுக்ஷுக்களோடு வாசியற ஸர்வநிர்வாஹகனாய். (உறக்கமோடுணர்ச்சியாய்) ஜ்ஞாநாஜ்ஞாநங்களுக்கு நிர்வாஹகனாய். "அநாதிமாயயாஸுப்த:" "அநாதிமாயயாஸுப்த:" என்கிறபடியே உறங்கினார்கணக்காய் விழுகையாலே, உறக்கத்தை-அஜ்ஞாநமென்கிறது. இத்தால் - மூன்றும் ஏகாத்மா திஷ்டிதமென்ன, அநேகாத்மா திஷ்டிதமென்ன அந்யோந்யம் ஸமமென்கிற அஜ்ஞாநத்துக்கும், மத்யஸ்தன் ரக்ஷகன், ப்ரஹ்மருத்ராதிகள் ரக்ஷ்யபூதரென்கிற யாதாத்ம்யஜ்ஞாநத்துக்கும் நிர்வாஹகனுயென்கை. (ஒனறிரண்டுகாலமாகி) ஜ்ஞாநஹேதுவான ஸத்வோத்தர காலத்துக்கும், அந்யதாஜ்ஞாநவிபரீதஜ்ஞாநங்களுக்கு ஹேதுவான ரஜஸ்தமோத்ரிக்தகாலத்வயத்துக்கும் நிர்வாஹகனாய். "ப்ரஜ்ஞாயாம் ஜ்ஞாநமுச்யதே" "த்ரேதாயாம் ஜ்ஞாநமுச்யதே" "கலௌ ஜகத்பதிம் விஷ்ணும்" "த்ரேதாயாம்ஜ்ஞாநமுச்யதே" "கலௌஜகத்பதிம்விஷ்ணும்" என்னக்கடவதிறே. (வேலைஞாலமாயினாய்) கடல்சூழ்ந்தபூமிக்கு நிர்வாஹகனாய். யதாஜ்ஞாநம் பிறந்தவர்களுக்கு ஆவாஸஸ்தாநமானகர்மவிபூதிக்குநிர்வாஹகனாய். "அயந்து நவமஸ்தேஷாம் த்வீப: ஸாகரஸம்வ்ருத:" "அயந்துநவமஸ்தேஷாம்தவீபஸ்ஸாகரஸம்வ்ர்த:" என்கிறபடியே-நவமவர்ஷமான ஜம்பூத்வீபத்தில் காமபூமியான பாரதவர்ஷம் கடல்சூழ்ந்திறே யிருப்பது.

---

ஏழாம்பாட்டு.—ஆதாரஸ்தாநமாவது - ஜ்ஞாநம் பிறந்தவனுக்கு கர்மாநுஷ்டாநம் இந்த பூமியிலொழியக் கூடாமையாலே அதுக்கு யோக்யமான பூமியென்றபடி. ஜம்பூத்வீப மெல்லாவற்றையுமன்றோ கடல்சூழ்ந்தது, பாரதவர்ஷமாத்ரத்தைச் சூழவில்லையேயென்ன; அருளிச்செய்கிறார் (என்கிறபடியே யித்யாதி.) பாரதவர்ஷத்துக்கு உத்தரமாக மேலைஸமுத்ரந் தொடங்கிக் கீழைஸமுத்ரமளவாக ஸகரர்கல்லினார்களென்று ப்ரஸித்தமாகையாலே பாரதவர்ஷத்தையும் தனியே கடல்சூழ்ந்ததென்றபடி. நாலுகடலுக்கும் நடுவான ஜம்பூத்வீபத்தில், நவவர்ஷமாவது - மஹாமேருவுக்கு ஆஸந்நமாகச் சுற்று மொரு வர்ஷமும், அதுக்கு வடக்காக மூன்றும், தெற்காகமூன்றும், கிழக்கேஒன்றும், மேற்கேஒன்றும்; ஆக மஹாமேருவைச்சுற்றும் ஒன்பது வர்ஷமாய், எல்லாவற்றுக்கும் தெற்கான வர்ஷம் பாரதவர்ஷப்பேர். இது தான் நவகண்டமாய் அதில் எட்டு கண்டமும் போகபூமியாய், ஒன்பதாம் கண்டமான பாரதகண்டம் கர்மபூமியா யிருக்குமென்றபடி.

(ஒன்றிரண்டுதீயுமாகி) ப்ரதாநமான ஆஹவநீயத்துக்கும் ததங்கமான கார்ஹபத்ய தக்ஷிணாக்நிகளுக்கும் நிர்வாஹகனாய். "[illegible]" "கர்மாண்யஸங்கல்பித தத்பலாநி" என்கிறபடியே - முமுக்ஷுக்களுக்கு அநுஷ்டேயமான யஜ்ஞாதிகளுக்கும் அங்கமான அக்நித்ரயத்துக்கும் நிர்வாஹகனாய். (ஆயனாயமாயனே) அதீந்த்ரியமான விக்ரஹத்தை கோபஸஜாதீயமாக்கி யவதரித்த ஆஶ்சர்யபூதனான க்ருஷ்ணனே. இத்தால்- "[illegible]" "அஹம் ஹி ஸர்வயஜ்ஞாநாம்போக்தா" என்கிறபடியே உக்தமான யஜ்ஞத்துக்குமாராத்யனாய அவதரித்தபடி. "[illegible]" "ஸர்வேயஜ்ஞா: ஸர்வஇஜ்யாஶ்சக்ருஷ்ண:" "[illegible]" "தர்மஸம்ஸ்தாபநார்த்தாயஸம்பவாமி" என்னக்கடவதிறே. (ஒன்றிரண்டுகண்ணினானும்) ஶக்திஸூசகமான ஒருகண்ணையும் இதரஸஜாதீயமான இரண்டுகண்ணையுமுடைய ருத்ரனும். (உன்னையேத்தவல்லனே) "[illegible]" "ஈஶ்வராத்ஜ்ஞாநமந்விச்சேத்" என்கிற ஜ்ஞாநாதிக்யத்தையும் லலாடநேத்ரனென்கிற ஶக்த்யாதிக்யத்தையு முடையனென்று ஸர்வநிர்வாஹகனான வுன்னை உள்ளபடி அறிந்தேத்தவல்லனோ. ஆகமமுகத்தாலே தன்னையேத்தவல்ல னித்தனைபோக்கி உன்னையேத்தவல்லனோ. ஸத்வோத்தரனானபோதும் தானறிந்த அம்ஶத்தைப் பிறர்க்கு உபதேஶிக்கு மித்தனைபோக்கி உன்னை உள்ளபடி அறிந்தேத்தவல்லனோ. ... ... ... ... ... ... எ

அ.—எட்டாம்பாட்டு. உபயவிபூதியிலுண்டான ஸகலபதார்த்தங்களினுடைய ஸத்தாதிகளும், கார்யகாரணோபயாவஸ்தமான லீலாவிபூதிக்கு நிர்வாஹகமான காலதத்வமும் ஸ்வாதீநமாம்படி நிற்கிற வுன்னை, ருத்ரனேயன்று பரிச்சேதிக்கமாட்டாதான். உபயவிபூதியிலும் பரிச்சேதிக்க வல்லாரில்லையென்கிறார்.

ஆதியானவானவர்க்குமண்டமாயவப்புறத்
தாதியானவானவர்க்குமாதியானவாதிநீ;
ஆதியானவானவாணரந்தகாலநீயுரைத்தி;
ஆதியானகாலநின்னையாவர்காணவல்லரே. (அ)

ப-ரை.—ஆதியான-ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹார கர்த்தாக்களான, வானவர்க்கும்-ப்ரஹ்மாதிதேவர்களுக்கும், அண்டமாய - அண்டசப்தவாச்யமான, அப்புறத்து -பரமபதத்திலவர்த்திக்கிற, ஆதியான-ஐகாந்தகாரணபூதரான, வானவர்க்கும்-நித்யஸூரிகளுக்கும், ஆதியான-ஸத்தாதிகளுக்குஹேதுவான, ஆதிநீ-ப்ரதாநன்நீ; ஆதியான-ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகர்த்தாக்களாய், வானம்- ஊர்த்வலோகங்களுக்கு, வாணர்-அத்யக்ஷராய்வர்த்திக்கிற ப்ரஹ்மாதிகளுடைய பதங்களு

"ஆலநிழற்கீழ்" என்று-பிறர்க்கு உபதேஶித்தானே யென்ன; அருளிச்செய்கிறார் (ஸத்வோத்தரனானபோதித்யாதி.) ... எ

டைய, அந்தகாலம்-அவ்வவகாலத்துக்கு நியாமகனுன, நீ—, உரைத்தி-அருளிச் செய்கையாலே, ஆதியானகாலம் - ஆதிகாலத்துக்கு நிர்வாஹகனுன, நின்னை-உன்னை, யாவர்-அளவுடையரான ப்ரஹ்மாதிகள்தான், காணவல்லரோ - பரிச்சேதித்தறியவல்லரோவென்கிறுர்.

வ்யா.—(ஆதியானவானவர்க்கும்) ஜகத்ஸ்ர்ஷ்டி ஸ்திதி ஸம்ஹார ங்களுக்கு கர்த்தாக்களான தேவதைகளுக்கும், ப்ரஹ்மா தக்ஷப்ரஜா பதிகள் ஸப்தரிஷிகள் ஆதித்யர்களாகிற இவர்கள் ஸ்ர்ஷ்டிகர்த்தாக் கள்; இந்த்ரன் சதுர்த்தஶமநுக்களாகிற விவர்கள் ஸ்திதிகர்த்தாக் கள்; ருத்ரன் அக்நி யமன்முதலான இவர்கள் ஸம்ஹாரகர்த்தாக்கள். "ஆதி" என்று - கர்த்தாவைச் சொல்லுகிறது. (அண்டமாயவப்புற த்து ஆதியானவானவர்க்கும்) லீலாவிபூதிக்கு அப்புறத்தில் அண்ட ஶப்தவாச்யமான பரமபதத்தில் வர்த்திக்கிற ஜகத்காரண பூதரான நித்யஸூரிகளுக்கும். அஸ்த்ரபூஷணாத்யாயக்ரமத்தாலே நித்யஸூரி களை ஜகத்துக்குக் காரணபூதராகச் சொல்லக்கடவதிறே. அதவா, "యత్రపూర్వే సాధ్యాస్సన్తిదేవాః" "யத்ரபூர்வேஸாத்யாஸ்ஸந்திதேவா:" என்றும், "యత్రఋషయఃప్రథమజాయేపురాణాః" "யத்ரரிஷயப்ரதமஜா யேபுராணா:" என்றும்சொல்லுகிறஆதிதேவர்களென்றுமாம். (ஆதியா னவாதிநீ) இப்படி உபயவிபூதியிலும்ப்ரதாநரானவிவர்களுடையஸ த்தாதிகளுக்குஹேதுவானப்ரதாநன்நீ. (ஆதியானவானவாணரந்த காலநீயுரைத்தி) இனிமேல்ஜகத்துக்குநிர்வாஹகமானகாலதத்வமும் தேவரீரிட்ட வழக்கென்கிறது. ஜகத்ஸ்ர்ஷ்ட்யாதி கர்த்தாக்களாய் ஊர்த்வலோகங்களுக்கு அத்யக்ஷராய் வர்த்திக்கிற ப்ரஹ்மாதிகளு டைய பதங்களுடைய அவ்வவகாலத்துக்கு நியாமகனாய். "நீஉரை த்தி" என்கிறது - "సహస్రయుగపర్యన్తమహర్యద్బ్రహ్మణోవిదుః" "ஸஹஸ்ர யுகபர்யந்தமஹர்யத் ப்ரஹ்மணோவிது:" என்றித்யாதிகளிலே நீயரு ளிச்செய்திருக்கையாலே. (ஆதியானகாலநின்னை) கார்யரூபமான ஜக த்தடைய ஸூக்ஷ்மாவஸ்தப்ரபைபோலேலீநமாய், "సదేవసోమ్యేదమగ్ర" "ஸதேவஸோம்யேதமக்ர" என்கிறபடியே ஆதிகாலத்துக்குநிர்வா ஹகனுன வுன்னை. (யாவர்காணவல்லரோ) தந்தாம் ஸத்தாதிகள் தேவரீரிட்ட வழக்காயிருந்தபின்பு தேவரீரை பரிச்சேதிக்க வல்லா ருண்டோ. ... ... ... ... ... ... ௮

எட்டாம்பாட்டு.—ஸூக்ஷ்மவஸ்த ப்ரபை-பொடி மூடினதணல் போலேயிருக்கை. அதாவது-கார்யாவஸ்தையில் ஜ்வாலாக்நிபோலே யும் காரணவஸ்தையில் ஜ்வாலை யடங்கியிருக்கிற அங்காராவஸ்தை போலேயும் சேதநாசேதநங்களைத் தனக்குள்ளே யடக்கிக் கொண் டிருக்கை. ... ... ... ... ... ... ௮

அ.—ஒன்பதாம்பாட்டு. இப்படி அபரிச்சேத்ய வைபவனாகை யாலே ப்ரயோஜநாந்தரபரரில் அக்ரகண்யனான ருத்ரனும், வைதிகா க்ரேஸரராய் அநந்ய ப்ரயோஜநரான ஸாத்விக ஜநங்களும் உன்னையே யாஶ்ரயிக்கையாலே ஸர்வ ஸமாஶ்ரயணீயனும் நீயே யென்கிறார். ... ... ... ... ... *

தாதுலாவுகொன்றைமாலைதுன்னுசெஞ்சடைச்சிவன்
நீதியால்வணங்குபாதநின்மலாநிலாயசீர்
வேதவாணர்கீதவேள்விநீதியானகேள்வியார்
நீதியால்வணங்குகின்றநீர்மைநின்கணின்றதே. (க௯)

ப-ரை.—தாதுஉலாவு - மகரந்தம்மிக்கிருந்துள்ள, கொன்றைமாலை - கொன்றை மாலையணிந்து, துன்னு - நெருங்கி, செம் - சிவந்த, சடை - ஜடையையுடைய, சிவன் - ருத்ரனானவன், நீதியால் - வேதோக்தப்ரகாரத்தாலே, வணங்கு - உபாஸிக்கிற, பாதம் - திருவடிகளையுடையவனே, நின்மலா - சுத்தியோகத்தை யுடையவனே, நிலாயசீர் - அமாநித்வாத்யாத்மகுணங்களோடும் சமதமாதி குணங்களோடுங் கூடினவர்களாய், வேதவாணர் - வேதார்த்தத்தையறிந்தவர்களாய், கீதம் - ஸாமகானபரராயுமான, வேள்வி - யாகங்களிலே ப்ரவர்த்தரானவர்களாய், நீதியானகேள்வியார் - ப்ரஹ்மநிஷ்டருடைய ஆசார்யன்பக்கலிலே வேதார்த்தத்தைக்கேட்டவர்கள், நீதியால் - காமாங்கமான அநவரதபாவனை பண்ணுகைக்கு, வணங்குகின்ற - உபாஸ்யனாயநிற்கிற, நீர்மை - ஸ்வபாவம், நின்கணே - உன்பக்கலிலேயே, நின்றது - வர்த்திக்கிறதென்கிறார்.

வ்யா.—(தாதுலாவித்யாதி) தாதுமிக்ககொன்றைமாலையென்ன, நெருங்கிச் சிவந்த ஜடையென்ன, இவற்றையுடைய ருத்ரன். கொன்றைமாலையைச் சொல்லுகையாலே-போக ப்ரதானனென்றும், தீர்க்க தபஸ்ஸாகையாலே செறிந்து, ஸ்நாநபாஹுள்யத்தாலே சிவந்திருக்கிற ஜடையையுடையனாகையாலே, அந்தபோகந்தான் ஸாதித்து லபித்ததென்றும் சொல்லுகிறது. இத்தால்-போகமே புருஷார்த்தம், அதுதான் ஈஶ்வரனை ஆஶ்ரயித்தே பெறவேணுமென்கை. (நீதியால் வணங்குபாத) தேவரீரை ஐஶ்வர்ய விஶிஷ்டனாக ஆஶ்ரயிக்கச்சொல்லுகிற வேதோக்தப்ரகாரத்தாலே அவனுபாஸிக்கிற திருவடிகளையுடையவனே. (நின்மலா) ப்ரயோஜநாந்தரங்களை அபேக்ஷிக்கிறது, "ஈஶ்வரோஹம்" என்றிருக்கிற துர்மாநி ஆஶ்ரயித்தானென்றிறே த்தோஷங்களைநினையாதே, நம்பக்கலிலேஸாபேக்ஷனாயிருந்தானென்கிறகுணத்தையேநினைத்து, அநந்யப்ரயோஜநருக்கு முகங்கொடுக்குமாப்போலேமுகங்கொடுக்கும்ஸுத்தியோகத்தை யுடையவனே. இப்படி விஷயீகரித்து அவனுக்குக்கொடுத்தஐஶ்வர்யமேதென்னில்; "ஏஷ ஹ்யேவ ஸாக்ஷாத் மஹாதேவ: ..." "மஹாதேவஸ்ஸர்வமேதம் ..." "மஹாதேவ: ஸர்வமேதே மஹாத்மா" "ஹுத்வாத்மாநம்தேவதேவோபபூவ" என்கிறபடியேதேவதேவத்வத்தைக்கொடுத்தவனே. இதுப்ரயோஜநாந்தரபரரெல்லார்க்கும் உபலக்ஷணம். (நிலாயசீர்) வர்த்திக்கிற குணங்கள்.

அதாகிறது - ஜ்ஞாநஸாதநமான அமாநித்வா த்யாத்ம குணங்களாலும்; உபாஸநாங்கமான ஶமதமாதி குணங்களாலும் ஸம்பந்நராயிருக்கை. அங்ஙனன்றியே, "நிலாயசீர்வேதம்" என்று வேதவிஶேஷணமாய் - நித்யத்வாபௌருஷேயத்வ நிர்த்தோஷத்வங்களாலே காரணதோஷ பாதகப்ரத்ய யாதி தோஷ ரஹித கல்யாண குணங்களைச் சொல்லிற்றாகவுமாம். (வேதவாணர்) வேதங்களுக்கு நிர்வாஹக ரென்னலாம்படி வேதார்த்தத்தைக் கரைகண்டவர். (கிதேளள்வி) அந்த வேதார்த்தாநுஷ்டாநமாய், ஸாமகாந ப்ரதாநமான யாகங்களிலே ப்ரவ்ர்த்தரானவர்கள். அதாவது - ஆத்ம யாதாத்ம்யஜ்ஞாந பூர்வகமாக த்ரிவித பரித்யாகயுக்தராய், பகவத்ஸமாராதநபுத்தியாலே அநுஷ்டிக்கும் யஜ்ஞங்கள். (நீதியாயகேள்வியார்) உத்தமான வேதார்த்த தாத்பர்யம் கைப்படுகைக்கும் தத்கார்யமான கர்மயோகா த்யநுஷ்டாநங்களுக்கு மடியான கேள்வியை யுடையவர்கள். நீதியான கேள்வியாராகிறது - "ஶ்ரோதவ்ய:" "பரீக்ஷ்யலோகாந்" இத்யாதியிற் சொல்லுகிறபடியே நிர்வேதாவர்த்தி பிறந்து ப்ரஹ்மநிஷ்டனான ஆசார்யன்பக்கலிலே உபஸந்நராய, "ஶ்ரோதவ்ய:" "ஶ்ரோதவ்யோமந்தவ்ய:" என்கிறபடியே ஶ்ரவண மநநங்களைப் பண்ணுகை. (நீதியால் வணங்குகின்ற நீர்மை) "நிதித்யாஸிதவ்ய:" "நிதித்யாஸிதவ்ய:" என்கிறபடியே - பக்த்யங்கமான அநவரதபாவனை பண்ணுகைக்கு உபாஸ்யனாய நிற்கிற ஸ்வபாவம். (நின்கண்நின்றதே) உன பக்கலிலே வர்த்திக்கிற வித்தனை. அவதாரணத்தாலே - வேறு ஆஶ்ரயணீய ரில்லையென்கை.... ... ... ... ... ... ... ௯

அ.—பத்தாம்பாட்டு. ஸர்வஸமாஶ்ரயணீயத்வத்தால் வந்த உபாஸ்யத்வமே யன்றிகே, "ஸர்வஸ்மாத்:" "காரணந்துத்யேய:" என்கிறபடியே ஜகதுபாதாநகாரணவஸ்துவே ஸமாஶ்ரணீய மென்று சொல்லுகிற காரணத்வ ப்ரயுக்தமான ஆஶ்ரயணீயத்வமும் தேவரீருடைய தென்று த்ர்ஷ்டாந்த ஸஹிதமான உபாதாநகாரணத்வத்தை யருளிச் செய்கிறார். ... . ... , *

தன்னுளேதிரைத்தெழுந்தரங்கவெண்டடங்கடல்
தன்னுளேதிரைதெழுந்தடங்குகின்றதன்மைபோல்;
நின்னுளேபிறந்திறந்துநிற்பவுந்திரிபவும்
நின்னுளேயடங்குகின்றநீர்மைநின்கணின்றதே. (க௦)

---

ஒன்பதாம்பாட்டு.—த்ரிவித பரித்யாகம் - பலஸங்க கர்த்ர்த்வ த்யாகம். கர்மசிதாந்லோந்பரீக்ஷ்ய என்றாய், "சிந்த" "சிந்தயே" என்கிற தாதுவாலே கர்மாநுஷ்டாநத்தாலே வதிக்கப்பட்ட லோகங்களை யென்றபடி. நிர்வேதாவர்த்தி - துக்கம் பலகால் அநுவர்த்திக்கை. ... ... ... ... ... ... ... ௯

ப-ரை.—தன்னுளே - தனக்குள்ளே, திரைத்து - வாயுவாலேகிளர்ந்து, எழும்-வீசாநின்றுள்ள, தரங்கம்- அலைகளையும், வெண்-வெண்மையையுமுடைத்தாய், தடம் - இடமுடைத்தான, கடல் - ஸமுத்ரமானது, வாயுவசத்தாலே, தனனுளே - தனக்குள்ளே, திரைத்து - கிளர்ந்து, எழுந்து -மேலெழுந்து, அடங்குகின்ற தனமைபோல் - அடங்கிவிடுகிறஸ்வபாவம்போலே; நின்னுளே-உன் ஸ்வரூபத்துக்குள்ளே, பிறந்து இறந்து - பிறந்துநசிக்கிற, நிற்பவும் திரிபவும்- ஸ்தாவரஜங்கமங்களும், நினனுளேயடங்குகின்ற - தேவரீர்பக்கலிலேயடங்குகிற, நீர்மை - இந்தஸ்வபாவம், நின்கணின்றது - தேவரீரிடத்திலேயுள்ளதென்கிறார்.

வ்யா.—(தன்னுளே திரைத்தெழும் தரங்கவெண் டடங்கடலித்யாதி) த்ருஷ்டாந்தத்திலே அர்த்தத்தை ஶிக்ஷித்து தார்ஷ்டாந்திகமுகத்திலே அதிதேஶிக்கிறார். "தன்னுளே" என்கிறவித்தால்-ஶரீரபூதசேதநாசேதநங்களும், ஸ்ருஷ்ட்யாதிவ்யாபாரங்களும், ஸ்வரூபாந்தர்ப்பூதமென்கை. (திரைத்தெழும்தரங்கம்) நிஸ்தரங்க ஜலதியானதுவாயுவாலே கிளர்ந்தெழுந்துஎங்குமொக்க ஸஞ்சரியாநின்றுள்ள திரைகளையுடைத்தாகை. தார்ஷ்டாந்திகத்தில் வாயுஸ்தாநீய பகவத்ஸங்கல்பமடியாக ஸ்ருஷ்டிகாலத்திலேபிறந்த குணவைஷம்யம். (வெண்தடங்கடல்) ஸஞ்சாரியான திரையையும் அஸஞ்சாரியான வெண்மையையுமுடைத்தான இடமுடையகடல். இது, மேலே "நிற்பவும்திரிபவும்" என்கிறதுக்கு த்ருஷ்டாந்தம். (தன்னுளேதிரைத்தெழுந் தடங்குகின்றதன்மைபோல்) வாயுவஶத்தாலே பரம்பினதிரைகள் மற்றப்படி ஒன்றிலேயொன்று திரைத்தெழுந்து உபஸம்ஹரிக்கிற ஸ்வபாவம்போலே. இத்தால் - ஏகத்ரவ்யபரிணாமத்தைச் சொல்லுகிறதன்று, கீழ்ப்பாட்டிலே உபாஸநம் சொல்லிற்றாய், இப்பாட்டிலே உபாஸ்யமான ஜகதுபாதாநகாரணத்தைச்சொல்லுகிறது. அதாகிறது - ஸூக்ஷ்மசிதசித் விஶிஷ்டப்ரஹ்மமே காரணம், ஸ்தூலசிதசித் விஶிஷ்டப்ரஹ்மமே கார்யமென்று வேதாந்தப்ரஸித்தமான அர்த்தம். இது எத்தாலே அறிவதென்னில்; "[illegible]" "நகர்மாவிபாகாத்" என்கிற ஸூத்ரத்தாலே "[illegible]" "ஸதேவ" என்கிற அவிபாகஶ்ருதியாலே அக்காலத்தில் க்ஷேத்ரஜ்ஞரில்லாமையாலே கர்மமில்லையென்று பூர்வபக்ஷித்து, "[illegible]" "ஜ்ஞாஜ்ஞௌத்வாவஜாவீஶநீஶௌ" "[illegible]" "நித்யோ நித்யாநாம்" என்று

---

பத்தாம்பாட்டு.—அதிதேஶிக்கை - ஏறிடுகை. தரங்கம்-அலை. வெண்மை ஏகரூபமாகையாலே (அஸஞ்சாரி) என்றது. மற்றைப்படி யென்கிறது - முன்புபோலே அல்பம் சலிக்கை யன்றிக்கே, திரைமேல் திரையாகக்கிளர்ந்து ஸம்ர்த்தமாகை. த்ரவ்ய பரிணாமத்தை யென்றது - ஸாங்க்யர் சொல்லுகிற பரிணாமத்தைச் சொல்லுகிற தென்றபடி.

க்ஷேத்ரஜ்ஞர் களுக்கும் தத்கர்மப்ரவாஹத்துக்கும் அநாதித்வ முண்டாகையாலே அது அர்த்தமன்றென்று நிஷேதித்து நாம ரூபவிபாகாபாவத்தாலே, "ஸதேவ" என்கிற அவதாரணம் உப பந்நமென்றதுமே. த்ர்ஷ்டாந்தம் ஏகத்ரவ்யமுகத்தாலே சொன்னு ரிவரோயன்று, "యథా సౌమ్యైకేన మృత్పిణ్డేన" "யதாஸௌம்யேகேநம்ர்த் பிண்டேந" என்று உபநிஷத்து; "కటకమకుటకర్ణికాదిభేదైః" "கடக மகுடகர்ணிகாதிபேதைஃ" என்று ஸ்ரீபராஶரபகவாந்இத்தைதார்ஷ் டாந்திகத்திலே அதிதேஶிக்கிறார். (நின்னுளேபிறந்திறந்து நிற்ப வும்திரிபவும்) உன் ஸ்வரூபத்துக்குள்ளே உத்பத்தியும் விநாஶமு மாய்ப்போருகிற ஸ்தாவரஜங்கமாத்மகமான ஸகலப்தார்த்தமும். (நி ன்னுளேயடங்குகின்றநீர்மை) ப்ராக்ர்தோபஸம்ஹார வேளையிலே "తమఏకీభవతి" "தமஏகீபவதி" என்கிறபடியே - தேவரீர்பக்கலிலே அடங்குகின்ற இந்த ஸ்வபாவம். (நின்கண்நின்றதே) தேவரீர்பக்க லிலே யுள்ளதென்று இவ்வுபாதாநகாரணத்வம் வ்யக்த்யந்தரத்தில் இல்லையென்கை. முதற்பாட்டிற்சொன்ன உபாதாநகாரணத்வத்தை பத்தாம்பாட்டிலே த்ர்ஷ்டாந்த ஸஹிதமாகச்சொல்லி முடித்தாரா ய்விட்டது. ... ... ... ... ... ... க0

அ.—பதினோராம்பாட்டு. "న సన్నచాసచ్ఛివ ఏవ కేవలః" "హిరణ్యగర్భ స్సమవర్తతాగ్రే" "நஸந்நசாஸச்சிவஏவ" "ஹிரண்யகர்ப்பஸ்ஸமவர்த் ததாக்ரே" என்று ப்ரஹ்மாதிகளுக்கும் காரணத்வஞ்சொல்லுகிறதில் லையோவென்ன; உனதுமேலே ஸ்ர்ஷ்டராய் உன்பெருமையை ஓரோ ப்ரயோஜநங்களிலே பேசக்ஷமருமன்றிக்கேயிருக்கிறவிவர்கள் ஆஶ்ர யணீயராக ப்ரஸங்கமென், கீழ்ச்சொன்ன காரணவாக்யமும் அவ்வ ஸ்துவைப்பற்ற அந்யபரமென்கிறார்.

சொல்லினாற்றொடர்ச்சிநீ;சொலப்படும்பொருளும்நீ;
சொல்லினாற்சொலப்படாதுதோன்றுகின்றசோதிநீ;
சொல்லினாற்படைக்கநீபடைக்கவந்துதோன்றினார்;
சொல்லினாற்சுருங்கநின்குணங்கள்சொல்லவல்லரே. (கக)

ப-ரை.—சொல்லினால் - சப்தஸித்தமான புருஷார்த்தத்திலே இழிந்தார்க கு, தொடர்ச்சி - உறவைப்பிறப்பிப்பாயும், நீ—; சொலப்படும்-ச்ருதிஸ்ம்ர த்யாதிகளில்ஆச்ரயணீயராய்ச்சொல்லப்படுகிறதேவதைகளுக்கு, பொருளும்- அந்தராத்மாவும், நீ—; சொல்லினால்-வேதாந்தத்தாலே, சொல்லப்படாதுதோ ன்றுகின்ற - பரிச்சேதிக்கப்படாதென்று தோன்றுகிற, சோதி - தேஜச்சப்தவா ச்யன், நீ—; 'சொல்லினை-நீகொடுத்ததை ஸாஷ்டியாகக்கொண்டு, படைச்ச-

சிதசித்விஶிஷ்ட வஸ்துவுக்கு ஏக த்ரவ்யமான ஸமுத்ரத் தைச் சொல்லலாமோவென்ன; அருளிச்செய்கிறார் (த்ர்ஷ்டாந்த மித்யாதி). வ்யக்த்யந்தரமானது ப்ரதாநபரிணாமம் முதலானவற் றில் நில்லாதென்றபடி. ... ... ... ... க0

ஜகத்ஸ்ருஷ்டிபண்ணுவாராக, நீபடைக்க - நீஸ்ருஷ்டிக்க, வந்து - உன் திருநாபீகமலத்திலேவந்து, தோன்றினார் - தோன்றினப்ரஹ்மாதிதேவர்கள், நின்குணங்கள் - உன்னுடையகுணங்களை, சொலலின்றல் - சொல்லப்புகுந்தால், சுருங்க-ஸங்க்ஷேபமாகவாகிலும், சொல்லவல்லரோ-பேசமாட்டார்களென்கிறார்.

வ்யா.—(சொல்லினுல்தொடர்ச்சிநீ)ஶப்தத்தாலேஸித்தமான புருஷார்த்தத்திலே இழிந்தார்க்கு அதிலே உறவுபிறப்பிப்பாயும் நீ. தொடர் - உறவு. அதாவது - ப்ரத்யக்ஷவிஷயமான ஶப்தாதிகளே புருஷார்த்தமென்றிருக்கும் ஸம்ஸாரிகளையொழிய வேதாந்த முகத்தாலே வேதைகஸமதிகம்யமான வஸ்துவையறிந்தும,அவ்வஸ்துவைப்பெற • ஆசைப்பட்டவர்களுக்கும் உபக்ரமதசையிலே ருசிஜநகன் நீ; ப்ரஹ்மாதிகள் ப்ராப்தரான ஜநகரல்லாமையாலே ருசிஜநகருமல்லர். (சொல்லப்படும்பொருளும்நீ) ஶ்ருதிஸ்ம்ருத்யாதிகளில் ஆஶ்ரயணீயராய்த் தோற்றுகிற தேவதைகளுக்கு ஆத்மாவும்நீ. "[Telugu-script quotation]" "[Telugu-script quotation]" "ஏநமேவ கேவதந்த்யக்நிம்" "சதுர் ஹோதாரோயத்ர ஸம்பதம்கச்சந்தி" "[Telugu-script quotation]" "ஏயஜந்தி." (சொல்லினுல் சொலப்படாது தோன்றுகின்றசோதிநீ) வேதாந்தத்தால் பரிச்சேதிக்கப்படாதென்றுதோன்றுகிற தேஜஶ்ஶப்தவாச்யன் நீ. "[Telugu-script quotation]" "[Telugu-script quotation]" "[Telugu-script quotation]" "[Telugu-script quotation]" "[Telugu-script quotation]" "யதோவாசோநிவர்த்தந்தே" "அவிஜ்ஞாதம்விஜாநதாம்" "யஸ்யாமதம்தஸ்யமதம்" "பரஞ்ஜ்யோதிருபஸம்பத்ய" "நாராயணபரோஜ்யோதி." இத்யாதிகளிலே உன்ஸ்வரூபாதிகள் அபரிச்சிந்நங்களென்றும் *பரம்ஜ்யோதிஶ் ஶப்தவாச்யன் நீயென்றும் சொல்லப்படாநின்றதிறே. (சொல்லினுல்படைக்க)[[Telugu-script quotation] - யோவைவேதாம்ஶ்சப்ரஹிணோதிதஸ்மை] நீ கொடுத்த வேதத்தை த்ருஷ்டியாகக்கொண்டு ஜகத்ஸ்ருஷ்டி பண்ணுவாராக. "[Telugu-script quotation]" "ஸபூரிதிவ்யாஹரத்." (நீபடைக்கவந்துதோன்றினார்) "[Telugu-script quotation]" "யோப்ரஹ்மாணம் விததாதிபூர்வம்" என்கிறபடியே - நீஸ்ருஷ்டிக்க உன் திருநாபீகமலத்திலேவந்து தோன்றின ப்ரஹ்மாமுதலான தேவர்கள். (சொல்லினுற்சுருங்க நின்குணங்கள்சொல்லவல்லரோ) உன் குணங்களையறிந்து பரக்கப் பேசமாட்டாமையன்றியே, ஓரோ ப்ரயோஜநங்களிலே ஸங்க்ஷேபேண உன்குணங்களைப் பேசவும்மாட்டார். பரத்வஸாதகமான குணங்கள், ஜகத்காரணத்வஸாதகமானகுணங்கள், ஆஶ்ரிதார்த்தமான குணங்கள் இவற்றிலே ஓரோகோடியைக்கரைகாணமாட்டார்கள். ... ... ... ... ... ... ... கக

பதினோராம்பாட்டு.—அந்யபரம் - ப்ரஶம்ஸாபரம். ஶப்தம்-வேதஶப்தம். ஜநகரல்லாமை - யதாவானகாரணபூதரல்லாமை. ப்ரஹ்மா வேதத்தைக்கொண்டு ஸ்ருஷ்டிக்குமோ வென்ன; அருளிச்செய்கிறார் ([Telugu-script quotation]-ஸர்வபூரிதி வ்யாஹரந் என்று) ... கக

அ.—பன்னிரண்டாம்பாட்டு. ஜகத்காரணபூதனாய் ஸ்ருஷ்ட்யாதி முகத்தாலே நின்று ரக்ஷிக்குமளவேயன்றியே, அஸாதாரண விக்ரஹயுக்தனாய் அவதரித்து ரக்ஷிக்கும் உன்படியை லோகத்தில் ஆர் நினைக்கவல்லாரென்கிறார். ... ... ... ... *

உலகுதன்னைநீபடைத்தியுள்ளொடுக்கிவைத்தி; மீண்
டுலகுதன்னுளேபிறத்தி; ஓரிடத்தையல்லை; ஆல்!
உலகுநின்னொடொன்றிநிற்கவேறுநிற்றி; ஆதலால்
உலகுநின்னையுள்ளசூழல்யாவருள்ளவல்லரோ. (கஉ)

ப-ரை.—நீ - ப்ராக்ருதஸ்ருஷ்டியைப்பண்ணின நீ, உலகுதன்னை - ஸகலபதார்த்தங்களையும், படைத்தி - யாநிற்றி, நித்யநைமித்திகாதிப்ரளயங்களிலே நாமரூபங்களை இழந்த பதார்த்தங்களை, உள் - உன் திருவயிற்றிலே, ஒடுக்கிவைத்தி - அடக்கிவைத்து ரக்ஷியாநிற்றி; மீண்டு - மறுபடியும், உலகுதன்னுளே - ஸ்ரேஷ்டமான இந்தலோகத்திலே, பிறத்தி - அவதரியாநிற்றி; ஓரிடத்தையல்லை - ஒருஸ்தலத்தாயென்று நிர்ணயிக்கவொண்ணாதவனாயிராநிற்றி, உலகு - ஜகத்து உனக்கு சரீரமாகையாலே, நின்னொடொன்றிநிற்க - உன்னைப்பிரியாதேயிருக்க, அஸாதாரணவிக்ரஹயுக்தனாய்க்கொண்டு, வேறுநிற்றி - வ்யாவர்த்தனாயிராநின்றாய்; ஆதலால் - ஒருவகையாலும் பரிச்சேதித்தறியவொண்ணாமையாலே, சூழலுள்ள - ஆச்சர்யமான வ்யாபாரத்தையுடைய, நின்னை - உன்னை, உலகில் - லௌகிகபுருஷர்களில், யாவர் - யார்தான், உள்ளவல்லர் - அறியவல்லாரென்கிறார்.

வ்யா.—(உலகுதன்னை நீ படைத்தி) அசித்தை உபகரணமாகக்கொண்டு ப்ராக்ருத ஸ்ருஷ்டியைப் பண்ணின நீ, ப்ரஹ்மாதி ஸகல தேவதாந்தர்யாமியாய்க்கொண்டு ஸகல பதார்த்தங்களையும் ஸ்ருஷ்டியாநிற்றி. (உள்ளொடுக்கிவைத்தி) நித்ய நைமித்திகாதி ப்ரளயாபத்துக்களிலே நாமரூபங்களை யிழந்த பதார்த்தங்களை உன் திருவயிற்றிலே வைத்து ரக்ஷியாநிற்றி. இத்தால் - ஸகல பதார்த்த ஸ்ருஷ்டிக்கும் கர்த்தாவாய ஸகல ஸம்ஹாரங்களிலும் ரக்ஷகனுமாயிருக்கிறான், அடியிலே "பஹுஸ்யாம்" "பஹுஸ்யாம்" என்கிற ஜகதுபாதாநகாரணபூதனென்றதாய்த்து. (மீண்டுலகு தன்னுளே பிறத்தி) ஜகத்காரணத்வத்தால் வந்த வைபவத்தினின்றும் மீட்டு உன்னாலே ஸ்ருஷ்டமான இவ்வுலகத்திலே சில க்ஷேத்ரஜ்ஞர்க்கு புத்ரனாய் வந்தவதரியாநிற்றி. (மீண்டு) அதுபோராமே திரியட்டுமென்றுமாம். ஸகல பதார்த்தங்களுக்கும் ஜநகனான நீ உன்னாலே ஸ்ருஜ்யனாயிருப்பானொரு க்ஷேத்ரஜ்ஞனை ஜநகனாகக்கொண்டு நீ ஜநிப்பதே. ப்ரளயாபத்திலே ஸகல பதார்த்தங்களையும் உன் திருவயிற்றிலே வைத்து ரக்ஷித்த நீ ஒரு ஸ்த்ரீவயிற்றிலே கர்ப்பபூதனாவதே!. "ப்ரீத்யாத்வம் தாரயேஶாநம் த்ருதம் ஸர்வம் இதம் ஜகத்" "ப்ரீத்யாத்வம தாரயேஶாநம் த்ருதம்யேநாகிலம் ஜகத்" என்னக்கடவதிறே.

---

பன்னிரண்டாம்பாட்டு—.மீண்டு - காரணத்வத்தில் நின்றும் மீண்டுஎன்னுதல்; காரணமானதுக்கு மேலேயென்னுதல்.ஸ்த்ரீவயிற்றிலே என்றதுக்கு ப்ரமாணமருளிச்செய்கிறார் (ப்ரீத்யா - ப்ரீத்யாத்வமித்யாதி)

(ஓரிடத்தையல்லையால்) ஒருஸ்தலத்தாயென்றுநிர்ணயிக்கவொண்ணுதவனுகையாலே ஒருகோடியிலே சேர்த்தறியப் போகிறதில்லை. அதாகிறது-உபாதாநகாரணத்வத்திலேபுரையில்லாமையாலே கார்யமென்னவொண்ணுது, அவதாரத்தில்ஸஜாதீயபாவத்தில்புரையில்லாமையாலேகாரணமென்னவொண்ணுது, இதுஎன்னபடியென்கிருர். (உலகுநின்னொடொன்றிநிற்கவேறுநின்றி) ஜகத்துஉனக்கு ஶரீரமாகையாலே உன்னைப்பிரியாதேநிற்க, அஸாதாரண விக்ரஹயுக்தனுய்க்கொண்டு வ்யாவர்த்தனுயிருத்தி. அதாகிறது - விமுகரானகாலத்திலே ஆத்மாவாய், நின்று ஸத்தையை நோக்கியும், அபிமுகீகரித்தவன்று ஸமாஶ்ரயணுகைக்கு அஸாதாரண விக்ரஹயுக்தனுயிருக்குமென்கை. (ஆதலால்) ஒரு வகையாலும் பரிச்சேதித்தறிய வொண்ணுமையாலே. (உலகில்நின்னை யுள்ளசூழல் யாவருள்ள வல்லரோ) ஆஶ்சர்யமான படிகளையுடைய வுன்னை லௌகிக புருஷர்களில் அறியவல்லவரார். சூழல் - சூழ்ச்சி. ... ... ... (கஉ)

அ.—பதின்மூன்ரும்பாட்டு. இவ்வவதார ரஹஸ்யம் ஒருவர்க்கறிய வொண்ணுதோ வென்னில்; கோபஸஜாதீயனுய் வந்தவரித்த நீ காட்டித்தர உன்வைலக்ஷண்யம் காணுமதொழிய ஸ்வஸாமர்த்யத்தாலே காணமுடியா தெனகிருர. ... ... ... *

இன்னையென்றுசொல்லலாவதில்லையாதுமிட்டிடைப்
பின்னைகேள்வனென்பருன்பிணக்குணர்ந்தபெற்றியோர்
பின்னைபாயகோலமோடுபேருமூருமாதியும
நின்னையார்நினைக்கவல்லர்நீர்மையால்நினைக்கில்லே. (கஙு)

ப-ரை.—உன் - உன்நிமித்தமாக ஆச்ரிதர்க்கும் அநாச்ரிதர்க்கு முண்டான, பிணக்கு-உணர்ந்த - விவாதத்தை அறுதியிட்டுத் தெளிந்திருக்கிற, பெற்றியோர - பண்டிதர்களானவர்கள், உன்னைபரிச்சேதித்தறியப்புக்கால, இன்னையென்று - இப்படிப்பட்டவனென்று, சொல்லலாவதுயாதுமில்லை-சொல்லலாவதொன்றுமில்லை; இட்டிடை - நேரிய இடையையுடைய, பின்னை - நப்பின்னைபிராட்டிக்கு, கேள்வனென்பர் - வல்லபனென்று சொல்லுவர்கள்; பின்னையாய - அவதாரஸமாப்தியில் இசைப்பாறுமிடமான, கோலமோடு-வ்யூஹவிக்ரஹமும், பேரும்-குணசேஷ்டிதங்களுக்கு வாசகமான திருநாமங்களும், ஊரும் - அவதரித்த தேசப்ரபாவமும், ஆதியும் - அவ்விக்ரஹத்துக்கு நிதாநமுமாகிய இவற்றையுடையனை, நின்னை - உன்னை, நீர்மையால் - தங்கள் நீர்மையால், நினைக்கில் - ஆராயப்புக்கால், யார்நினைக்கவல்லர் - அறியவல்லார் ஆர், ஒருவருமில்லையென்றுகருத்து.

வ்யா.—(இன்னை யென்று சொல்லலாவ தில்லையாதும்) அவதரித்து நிற்கிற நிலையில் அஜஹத்ஸ்வ பாவங்களென்ன, ஸௌலப்யாதிகளென்ன, இவற்றிலே ஒரு கோடியாலே உன்னைப் பரிச்சேதிக்கப்புக்கால் ஏவம் விதனென்று சொல்லலாவதொன்றுமில்லை.

---

சூழலுள்ளநின்னை - உலகில் - யாவருள்ள வல்லரோனமபடி. சூழ்ச்சி - வ்யாபாரம். ... ... ... ... ... கஉ

பதின்மூன்ரும்பாட்டு.—யாதும் - ஒன்றும்.

(இட்டிடைப்பின்னை கேள்வனெபர்) "தஸ்யதீராঃபரிஜாநந்தி யோநிம்" "தஸ்யதீராঃபரிஜாநந்தியோநிம்" என்கிறபடியே அவதாரரஹஸ்ய ஜ்ஞாநமுடையவர்களும் "மிதுநமேஆஶ்ரயணீயம்" என்று ஸஜாதீயரில்காட்டில் வ்யாவர்த்தனை வுன்னை உபதேஶிப்பார்கள். நேரிதான இடையையுடைய நப்பின்னைப்பிராட்டிக்குவல்லபனென்று சொல்லுவர்கள். "யாதுமிட்டு" என்றுகீழோடேகூட்டினபோது, ஶுபாஶ்ரயத்தையோதுகிற ப்ரகரணங்களில் அங்குஷ்ட மாத்ரமென்றும் "அக்நிர்மூர்த்தா சக்ஷுஷீ சந்த்ரஸூர்யௌ" "அக்நிர்மூர்த்நா சக்ஷுஷீசந்த்ர ஸூர்யௌ" என்கிறபடியே த்ரைலோக்ய ஶரீரனென்று இத்யாதிகளில் சொல்லுகிற ஶுபாஶ்ரயங்களை யடங்கவிட்டு. "மநுஷ்யத்வேசமாநுஷீ" "மநுஷ்யத்வேசமாநுஷீ" என்று கோபஸ்ஜாதீயனாய் வந்தவதரித்த நீளாவல்லபனே ஶுபாஶ்ரய மென்பர்கள். (உன்பிணக்குணர்ந்த பெற்றியோர்)உன்நிமித்தமாக ஆஶ்ரிதர்க்கும் அநாஶ்ரிதர்க்கு முண்டானவிவாதத்தை அநுஸந்திக்கும் பண்டிதர்கள். அதாகிறது - "பேருமோராயிரம் பிறபலவுடைய வெம்பெருமான்" என்றாய்த்து ஆஶ்ரிதருடையவறிவு; "பேருமோருருவமு முளதில்லை" என்றாய்த்து அநாஶ்ரிதருடைய வறிவு. இவ்விவாதத்துக்கடிநீ யென்றறியுமவர்கள்.

(பின்னையாய கோலமோடு பேருமூருமாதியும் நின்னை) இதரஸஜாதீயனாய் வந்தவதரித்து நிற்கச்செயதே ஸர்வ விஸஜாதீயமான வைலக்ஷண்யத்தையுடைய விக்ரஹமென்ன, அவதாரத்தில் குணசேஷ்டிதங்களுக்கு வாசகமான திருநாமங்களென்ன, அவதரித்த தேஶப்ரபாவமென்ன, அவதாரவிக்ரஹத்துக்கு நிதாநமென்ன, இவற்றை யுடையனான வுன்னை. அதவா, அவதாரஸ்மாப்தியில் விஶ்ரமஸ்தலமான வ்யூஹவிக்ரஹங்களென்ன, தத்தத்குணசேஷ்டித வாசகங்களான திருநாமங்களென்ன, ஆமோதாதி வ்யூஹஸ்தாநங்களென்ன,இவற்றுக்கடியான பரத்வமென்ன, இவற்றையுடைய வுன்னை யென்றுமாம்.

---

"இட்டு" என்றது-இட்டளமாய்,அத்தால்-ஸங்கோசமாய் (நேரிதென்கிறது.)யாதுமிட்டு-அடங்கஇட்டு வேதங்களிலேசொல்லுகிற ப்ரகாரங்களில் எல்லாப்ரகாரங்களையுமிட்டுச்சொன்னாலும் இப்படிப் பட்டவனென்று, சொல்லலாவதில்லை-சொல்லப்போகாதென்றபடி. இடை-இடைக்குலமாதல். நீயென்றறிகையாவது-ஜ்ஞாநாஜ்ஞாநங்களை கர்மாநுகுணமாகக்கொடுத்து விவாதத்தைப் பண்ணுகிறவன் நீயென்றறியு மவர்களென்றபடி. பின்னையாயகோலம்-இதரவ்யாவர்த்தமான விக்ரஹமென்னுதல்; மநுஷ்யத்வத்துக்கு அபரமாயிருக்கிற திர்யகாதிகளென்னுதல். என்றுமாமென்று-தாம்சொன்னஜபிக்கும்பொருள்-திர்யகாதிகளென்றுசொன்ன இரண்டாமர்த்தம். கந

நீர்மையால் நினைக்கிலல்லது ஆர்நினைக்கவல்லார் - உன்னுடைய நீர்மையாலே நீ அறிவிக்க அறியு மத்தனையொழிய வேறுஅறிய வல்லாரார். அதாகிறது - "பஹூநிமேவ்யதீதாநி" "பஹூநிமேவ்யதீதாநி" என்று தொடங்கி, "ஜந்மகர்மசமேதிவ்யம்" ஜந்மகர்மசமேதிவ்யம்" என்று நீ அறிவித்தாப்போலே அறிவிக்க அறியுமத்தனை. ... (கங)

அ.—பதினாலாம்பாட்டு. நம்மவதாரரஹஸ்யம் நீரறிந்தபடியென்னென்னில்; ப்ரயோஜநாந்தர பரர்க்காக திர்யக்ஸஜாதீயனாய் வந்தவதரித்த உன்குணங்களை பரிச்சேதித் தறியமாட்டேனே யாகிலும், அவ்வடிவு வேதைகஸமதிகம்யமென் றறிந்தேனென்கிறார்.

தூய்மையோகமாயினாய்! துழாயலங்கல்மாலையாய்!
ஆமையாகியாழ்கடற்றுயின்றவாதிதேவ! நின்
நாமதேயமின்னதென்னவல்லமல்லவாகிலும்
சாமவேதகீதனாயசக்கரபாணியல்லையே. (கச)

ப.—ஸம்ஸாரிகளைநித்யஸூரிகளோடேசேர்த்துஅநுபவிப்பிக்கவல்ல, தூய்மையோகமாயினாய் - சுத்தியோகத்தையுடையனாய், துழாயலங்கல்மாலையாய்-திருத்துழாய்மாலையாலே அலங்க்ர்தனாய், தேவர்களுக்கு அம்ர்தங்கொடுக்கைக்காக, ஆமையாகி - கூர்மாவதாரஞ்செய்தருளி, ஆழ் - மிக்க ஆழத்தையுடைய, கடல்-கடலிலே, மந்தரபர்வதம் அமிழ்ந்தாதபடி உனமுதுகிலேநின்று சுழல, துயின்ற-கண்வளர்ந்தருளின, ஆதிதேவ - ஜகதகாரணபூதனானவனே, நின் - உன்னுடைய, நாமதேயம் - குணசேஷ்டிதங்களை, இன்னதென்ன வல்லமல்லவாகிலும் - இப்படிப்பட்டதென்று சொல்லமாட்டேனேயாகிலும், சாமவேதகீதனாய - ஸாமவேதகீதனாயசக்ரமவனாய், ஆச்ரிதவிரோதி நிரஸநார்த்தமாக, சக்கரபாணியல்லையே - திருவாழியைகையிலே யுடையவனாதலால் நீயே யோசித்தருளவேணுமென்கிறா. ... ... ... (கச)

வ்யா.—(தூய்மையோகமாயினாய்) அசித்ஸம்ஸர்க்கத்தாலே அசுத்தனான ஸம்ஸாரிக்கு உன்கர்பையாலே அசித்ஸம்ஸர்க்கத்தையறுத்து நித்யஸூரிகளோடேசேர்த்து உன்னை அநுபவிப்பிக்க வல்ல ஶுத்தியோகத்தையுடையவனே. ஸம்ஸாரி ஶுத்தியோகத்துக்கு நிர்வாஹகனானவனே. இத்தால்-ஸம்ஸாரோத்தரணத்துக்கு உபாயமும் நீயேயென்கை. ஹேயப்ரத்யநீகனானவனேயிறே சேதநர்க்கு ஸம்ஸாரமாகிற அஶுத்தியைப்போக்கவல்லான். (துழாயலங்கல்மாலையாய்) ஸர்வேஶ்வரத்வ சிஹ்நமான திருத்துழாய்மாலையாலே அலங்க்ர்தனானவனே. திருத்துழாய நாதத்வ சிஹ்நமாகையாலும், போக்யத்வசிஹ்நமாகையாலும், ப்ராப்யபூதனும் நீயேயென்கை. (ஆமையாகி) ப்ரயோஜநாந்தரபரரான தேவர்களுக்காக அம்ர்தமதநத்துக்கு அநுகூலமான கூர்மவேஷத்தைக்கொண்டு. (ஆழ்கடல்துயின்ற) அகாதமானகடலிலே மந்தரம் அமிழ்ந்தாதபடி உன்முதுகிலே அதுநின்றுசுழலக் கண்வளர்ந்

"క్షీరోదమధ్యేత్వభవత్ కూర్మరూపీస్వయంహరిః" "க்ஷீரோதமத்யேத்வபவத் கூர்மரூபிஸ்வயம்ஹரி:" என்னக்கடவதிறே. (ஆதிதேவ) ஜகத்துக்கு நீயேகாரணபூதனென்னு மிடத்தை ப்ரகாஶிப்பித்தவனே. ப்ரயோஜநாந்தரபரரொன்றுபாராதே அவர்களாபத்துக்கு உன்னையழிய மாறிஉதவுகையாகிறவிது 'உத்பாதகர்க்கல்லது கூடுமோவென்கை.

(நின்னாமதேயமின்னதென்ன வல்லமல்லவாகிலும்) கூர்மரூபியான தேவரீருடைய குணசேஷ்டிதங்களை ஏவம்விதமென்று பரிச்சேதித்துச்சொல்லமாட்டேனேயாகிலும். "நின்னாமதேயம்" என்று-வாச்யமான குணசேஷ்டிதங்களை தத்வாசகமான ஶப்தத்தாலே லக்ஷிக்கிறது. (சாமவேதகீதனாய சக்கரபாணியல்லையே) நீ அழிவுக்கிட்ட கூர்மவிக்ரஹம் சாந்தோக்யஸித்தமாய் கையும் திருவாழியுமான அதிரமணீய விக்ரஹமென்றறிந்தேன். "య ఏషోన్తరాదిత్యే హిరణ్మయః పురుషో దృశ్యతే" "யஏஷோந்தராதித்யே ஹிரண்மய:புருஷோ த்ர்ஶ்யதே" என்றும், "సవితృమణ్డలమధ్యవర్తీ నారాయణః-ధృతశఙ్ఖచక్రః" "ஸவித்ரமண்டலமத்யவர்த்தி நாராயண: - த்ர்தசங்கசக்ர:" என்றும் சொல்லக்கடவதிறே. ... ... ... (கச)

அ.—பதினஞ்சாம்பாட்டு. வைதிக ஸமதிகம்யமான ஸ்வபாவத்தையுடைய நீ ஆஶ்ரிதாநுக்ரஹார்த்தமாக அவதாரகந்தமான திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிறது பரதசையென்னும்படி அங்குநின்றும் ஆஶ்ரிதருகந்த ரூபத்தையே உனக்கு ரூபமாகக்கொண்டுவந்தவதரித்த உன்னுடைய நீர்மையை ஒருத்தரால் பரிச்சேதிக்கப்போமோ வென்கிறார். ... ... ...

அங்கமாறுவேதநான்குமாகிநின்றவற்றுளே
தங்குகின்றதன்மையாய்! தடங்கடற்பணத்தலைச்
செங்கணாகணைக்கிடந்தசெல்வமல்குசீரினாய்!
சங்கவண்ணமன்னமேனிசார்ங்கபாணியல்லையே. கரு

ப-ரை.—அங்கமாறும் - அங்கமான வ்யாகரணம்முதலிய ஆறும், வேதநான்கும் - அங்கியான வேதங்கள் நாலுமாகிற விவற்றுக்கு, ஆகிநின்று - ப்ரவர்த்தகனாய்நின்று, அவற்றுளே - அங்கங்களோடுகூடிய வேதங்களினுள்ளே, தங்குகின்ற - பரமேயமாயவர்த்திக்கிற, தன்மையாய் - ஸ்வபாவங்களையுடையவனே, தடம் - இடமுடைத்தான, கடல் - கடலிலே, உன்னுடைய ஸ்பர்சத்தாலே விகஸிதமான, பணத்தலை - பணத்தினதலையிலே, செம் - சிவந்த, கண் - திருக்கண்களையுடையனான, நாகணை - திருவநந்தாழ்வானாகிற படுக்கையிலே, கிடந்த - கண்வளர்ந்தருளி, மல்கு - நிரவதிகமான, செல்வம் - ஐசவர்யத்தையும், சீரினாய் - கல்யாணகுணங்களையு முடையவனே!; க்ஷீரார்ணவசாயிதவம் பரதசையென்னும்படி அங்குநின்றும் க்ரதயுகத்திலே சேதநர்விரும்புகைக்காக, சங்கவண்ணமன்ன - சங்கத்தினநிறத்தையொத்த, மேனி - திருமேனியையுடையையாய்த் திருவவதரித்து, அதுக்குமேலே த்ரேதாயுகத்தில்,

---

பதினாலாம்பாட்டு.—"நாமதேயம்" என்றால் குணசேஷ்டிதங்களைக் காட்டுமோவென்ன; அருளிச்செய்கிறார் (நின்நாமதேயமித்யாதி.) அதிரமணீயம்-கீதத்துக்கு போக்யமான விக்ரஹமென்றபடி.

ராவணாதிகண்டகரை நிரஸிக்கைக்காக, சார்ங்கபாணியல்லையே - க்ஷத்ரிய குலத்திலே சக்ரவர்த்தித்திருமகனாய் வந்தவதரித்து ஸ்ரீசார்ங்கத்தைத் திருக் கையிலேதரித்தவனல்லையோ, இப்படிப்பட்ட நீர்மையையுடைய வுன்னை பரிச் சேதித் தறியவல்லாரா ரொனகிறார். ... ... ... (கரு)

வ்யா.—(அங்கமாறுவேதநான்குமாகிநின்று) ஶிக்ஷாத்யங்கங்க ளாறும், அங்கியான வேதங்கள் நாலுமாகிற இவற்றுக்கு ப்ரவர்த்த கனாய்நின்று. (அவற்றுளே தங்குகின்றதன்மையாய்) ஸாங்கமான வேதங்களினுள்ளே ப்ரமேயமாய்வர்த்திக்கிற ஸ்வபாவங்களையுடை யவனே. (ஆகிநின்றவற்றுளே) நிர்த்தோஷப்ரமாணமாய் நின்றவ ற்றுளென்னவுமாம். வேதப்ரதிபாத்யமான ஸ்வபாவங்களாவன- "ஸத்யம்ஜ்ஞாநம்" "ஸத்யம்ஜ்ஞாநம்" இத்யாதிகளிற்சொன்ன ஸர்வாதி கத்வமென்ன, "யஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித்" "யஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித்" இத் யாதிகளிற்சொன்ன கல்யாணகுணங்களென்ன, "வ்யாப்யநாராயணஸ்தித꞉" "வ்யாப்யநாராயணஸ்தித꞉" இத்யாதிகளிற்சொன்ன உபயவி பூதிநாதத்வமென்ன, "மஹாரஜதம்வாஸ꞉" "மஹாரஜதம்வாஸ꞉" இத் யாதிகளிற்சொன்னவிக்ரஹயோகமென்ன, "யஏஷோந்தராத்மா ஹிரண்மய꞉ புருஷ꞉" "யஏஷோந்தராத்மா ஹிரண்மயபுருஷ꞉" இத்யாதி களிற்சொன்ன அவதாரங்களென்ன, "தத்விஷ்ணோ꞉பரமம்பதம்" "தத் விஷ்ணோ꞉பரமம்பதம்" இத்யாதிகளிற்சொன்ன நித்யவிபூதியோக மென்ன இவை.

(தடங்கடலித்யாதி) வேதைகஸமதிகம்யமாய் ஸ்வபாவங்களைக் கேட்டே போகாதபடி திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளி இக்கு ணங்களை ப்ரகாஶிப்பித்தவனே. இடமுடைத்தான கடலிலே, உன் னுடைய ஸ்பர்ஶத்தாலே விகஸிதமான பணத்தின்தலையிலே, மது பாநமத்தனைப்போலே சிவந்த திருக்கண்களையுடையனான திருவநந் தாழ்வானாகிற படுக்கையிலே கண்வளர்ந்தருளி, நிரவதிகமான ஐஶ் வர்யத்தையும் கல்யாணகுணங்களையுமுடையவனே. (சங்கவண்ண மன்னமேனியித்யாதி) க்ஷீரார்ணவஶாயித்வம் பரதஶையென்னும் படி அங்குநின்றும் க்ர்தயுகத்திலே சேதநர்விரும்புகைக்காக ஶங்கம் போலேயிருக்கிற திருமேனியையுடையையா யவதரித்து, அதுக்கு மேலேத்ரேதாயுகத்திலே, ஆஶ்ரிதவிரோதிகளான ராவணாதிகண்ட கரை நிரஸிக்கைக்குக்ஷத்ரியகுலத்திலே வந்தவதரித்து ஸ்ரீஶார்ங் கத்தைத் திருக்கையிலே தரித்தவனல்லையோ. இப்படி காளமேக நிபஶ்யாமமானதிருநிறத்தையழிய மாறியும், "ஆத்மாநம்மாநுஷம்மந்யே" "ஆத்மாநம்மாநுஷம்மந்யே" என்று பரத்வத்தையழிய மாறியும் ரக்ஷித்தவுன்னுடையநீர்மையை பரிச்சேதித்தறிய லாவாராரொன்று வாக்யஶேஷம். ... ... ... ... (கரு)

---

பதினஞ்சாம்பாட்டு.—ஶிக்ஷை - வ்யாகரணம், நிருக்தம், சந் தஸ்ஸு, ஜ்யோதிஷம், கல்பஸூத்ரமாகிற அங்கங்களாறும். கரு

அ.—பதினாறும்பாட்டு. திருப்பாற்கடலிலே நின்றும் இப்படி தேவமநுஷ்யாதிகளிலே அவதரித்து ரக்ஷிக்குமளவன்றிக்கே, ஸ்தாவரபர்யந்தமாக சதுர்வித ஸ்ர்ஷ்டியிலும் அவதரித்து உன்னை ஸர்வாநுபவ யோக்யமாக்கினாலும் ப்ரமாணகணங்கள் பரிச்சேதிக்கமாட்டாதபடியிறே உன்னுடைய அவதாரவைலக்ஷண்ய மிருப்பதென்கிறார்.

தலைக்கணத்துட்குழம்புசாதிசோதிதோற்றமாய
நிலைக்கணங்கள்காணவந்துநிற்றியேலும்நீடிரும
கலைக்கணங்கள்சொற்பொருட்கருத்தினாலினைக்கொணா
மலைக்கணங்கள்போலுணர்த்தும்மாட்சிநின்றன்மாட்சியே()

ப-ரை.—சாதி-அபராகாத திவ்யஸமஸ்தாநனான், தலைக்கணம்-புண்ய யோநியான தேவஜாதியிலும், துகள்சாதி - பாபயோநியான ஸ்தாவரஜாதியிலும், குழம்புசாதி - புண்யபாப மிச்ரமானமநுஷ்யஜாதியிலும் திர்யக்ஜாதியிலும், தோற்றமாய - வந்து திருவவதரித்து, நிலைக்கணங்கள்காணவந்து நிற்றியேலும் - ஸ்தாவரங்கள் உன்னையநுபவிக்கும்படிவந்துநின்றாலும், நீடு - நித்யமாய், இரும்-பரப்புடைத்தான, கலைக்கணங்கள் - நான்குவேதங்களும், சொல் அபிதானவ்ர்த்தியாலும், பொருள்-தாத்பர்யவ்ர்த்தியாலும், கருத்தினால்-நெஞ்சாலும், நினைக்கொணா - பரிச்சேதித்தறியமாட்டாமையாலே, மலைக்கணங்கள் போல்-பாவதஸமூஹங்கள்போலே அபேதயமாய் அபரிச்சிந்நமான உன்னுடைய அவதாரகுணசரிதரங்களாலே, உணர்த்தும் - அறிவிக்கப்படும், மாட்சி-வைலக்ஷண்யம், நின்றன்மாட்சி - உன் வைலக்ஷண்யம் என்று ஈடுபடுகிறார். (கசு)

வ்யா.—(தலைக்கணத் துகட்குழம்புசாதி) தேவகணமென்ன, க்ஷுத்ரகணமென்ன, நடுவுண்டான மநுஷ்ய திர்யக்குக்களென்ன, சதுர்விதஶரீரங்களிலே. (குழம்புசாதி) தேவகணம் புண்யயோநியாய், ஸ்தாவரங்கள் பாபயோநியாய், மநுஷ்யதிர்யக்குக்களிரண்டும் புண்யபாப மிஶ்ரயோநிகளாகையாலே "குழம்புசாதி" என்கிறது. திர்யக்குக்களுக்கு மிஶ்ரயோநித்வம் ஆஹாரநித்ராதிகளாலே மநுஷ்யஸாம்ய முண்டாகையாலே. க்ஷுத்ரகணமென்று - ஸ்தாவரத்துக்கு உபலக்ஷணம். (துகள்) குற்றமும், புழுதியும். (சோதிதோற்றமாய்) "[Grantha text]" "பரஞ்ஜ்யோதிருபஸம்பத்ய" என்கிற அப்ராக்ர்த திவ்யஸம்ஸ்தாநத்தை சதுர்விதஜாதிகளிலும் ஸஜாதீயமாக்கியவதரித்து. ஸ்தாவரஜாதியிலும குப்ஜாம்ரமாய் அவதரித்தானிறே. (நிலைக்கணங்கள் காணவந்து நிற்றியேலும்) தேவாதிகளையன்றியே ஸ்தாவரங்களும் உன்னை அநுபவிக்கும்படி வந்துநின்றாலும். அதாவது - உன்னை ஸ்பர்ஶித்தவாயு அவற்றை ஸ்பர்ஶிக்க ஸ்தாவரத்வ ஹேதுவான பாபம்போமென்கை.

---

பதினாறும்பாட்டு.—"[Grantha text]" "வாசிகைஃபக்ஷிம்ர்கதாம்" என்று - திர்யக்குக்கள் பாபயோநியாயிருக்க, புண்யம்கலசினபடி எப்படியென்ன அருளிச்செய்கிறார் (திர்யக்குக்களித்யாதி.)

(நீடிருங்கலையித்யாதி) நீ இப்படி தாழநின்றாலும் ப்ரமாணங்கள் உன்னுடைய அவதாரவைபவத்தை நெஞ்சாலும்பரிச்சேதிக்க மாட்டாது. (நீடிரும்கலைக்கணங்கள்) ஸ்வரூபேணவும் ப்ரவாஹரூபேணவும் நித்யமாய்ப் பரப்புடைத்தாயிருந்துள்ள சதுர்த்தஶவித்யாஸ்தாநங்களும். "கலை" என்று - வேதமும், அங்கமும். "ஷடங்கோ வேதா:" "அங்காநிசதுரோவேதா:" இத்யாதியாலேசதுர்த்தஶவித்யாஸ்தலங்கள் சொல்லப்பட்டதிறே. (சொல்பொருள் கருத்தினால் நினைக்கொணா) அபிதாநவ்ர்த்தியாலும் தாத்பர்யவ்ர்த்தியாலும் ஓரோ அவதாரத்தைநெஞ்சாலும் பரிச்சேதிக்கமாட்டாமையாலே. (மலைக்கணங்களித்யாதி) பர்வதஸமூஹங்கள்போலே அபேத்யமாய் அபரிச்சிந்நமான உன்னுடைய அவதாரகுண சரித்ரங்களென்றவற்றாலே அறிவிக்கப்படும் வைலக்ஷண்யம் உன்வைலக்ஷண்யம். மாட்சி - அழகு. ... ... ... ... ... (௧௬)

அ.—பதினேழாம்பாட்டு. பரமபதநிலயனாயிருந்து நித்யவிபூதியை நிர்வஹித்தும், வ்யூஹம்முதலாக ஸ்தாவரபர்யந்தமாக அவதரித்து லீலாவிபூதியை நிர்வஹித்தும்போருகிறவிவையோரொன்றே ப்ரமாணங்களால் பரிச்சேதிக்கவொண்ணாதிருக்க, அதுக்குமேலே அர்ச்சாவதாரஸுலபனாய் ஆஶ்ரிதருடைய இச்சாதீநனாய் தன்னைநியமித்த இஸ்ஸ்வபாவம் என்னாயிருக்கிறதோ! வென்று அதிலேவித்தராகிறார்.

ஏகமூர்த்திமூன்றுமூர்த்திநாலுமூர்த்திநன்மைசேர்
போகமூர்த்திபுண்ணியத்தின்மூர்த்தியெண்ணில்மூர்த்தியாய்
நாகமூர்த்திசயநமாய்நலங்கடற்கிடந்துமேல்
ஆகமூர்த்தியாயவண்ணமென்கொலாதிதேவனே. (௧௭)

ப-ரை.—ஏகமூர்த்தி - பரமபதத்திலே நித்யஸித்தரும் முக்தருமநுபவிக்கும் அத்விதீயமான மூர்த்தியாய், மூன்றுமூர்த்தி - ஸங்கர்ஷணாதிரூபத்தாலே மூன்றுமூர்த்தியாய், நாலுமூர்த்தி - வ்யூஹத்தோடேகூடின நாலுமூர்த்தியாய், நன்மைசேர்-பேரருளாகிற நன்மையையுடைய, போகமூர்த்தி - ஸம்ஸாரிகளுக்கு போகயோக்யமான மூர்த்தியாய், புண்ணியத்தின்மூர்த்தி - அதுதான் பாக்யாதிகருடைய புண்யவிபாகத்திலே பலிக்கும் மூர்த்தியாய், எண்ணில்மூர்த்தியாய்-விபவஜாதீய விக்ரஹத்தையுடையனாய், இப்படி அஸங்க்யாதமான அவதாரங்களைப்பண்ணினவிடத்திலும் ஸம்ஸாரிகள் தன்னைவந்து கிட்டாமலிருக்கச்செய்தேயும், ஆதிதேவனே-ஜகத்துக்கெல்லாம் காரணபூதனான நீ, ரக்ஷணத்தில் ஆசையாலே, நலம் - ஆச்ரிதரக்ஷணார்த்தமாகப்ரளயம்மட்டும்வஸிக்கையாகிற, நன்மையையுடைய, கடல் - திருப்பாற்கடலிலே, நாகமூர்த்தி - திருவநந்தாழ்வான் திருமேனியாகிற, சயநமாய்க்கிடந்த - படுக்கையிலே, கண்வளர்ந்தருளி, மேல் - அதுக்குமேலே, "தமருகந்ததெவ்வுருவம் அவ்வுருவம்தானே"

---

வ்ர்த்தியென்று - எல்லாஸம்பந்தங்களையும் சொல்லும். அபிதாநவ்ர்த்தியென்று - வாச்யவாசகஸம்பந்தம். ஶப்தார்த்தங்களுக்குண்டான தாத்பர்யவ்ர்த்தியாவது - லக்ஷணரூபஸம்பந்தம்.

என்கிறபடியே, ஆக - ஆச்ரிதர் தேவரீர்க்கு விக்ரஹமாகநினைத்த த்ரவ்யத்திலே, மூர்த்தியாயவண்ணம் - உனக்கு அஸாதாரணமான விக்ரஹத்திலே பண்ணும் விருப்பத்தைப்பண்ணுகிற இந்த ஸ்வபாவம், என் - என்னுயிருக்கிறதென்று ஈடுபடுகிறூர். (கஎ)

வ்யா.—(ஏகமூர்த்தி) "వాసుదేవోసిపూర్ణః" "வாஸுதேவோஸிபூர்ணః" என்கிறபடியே ஜ்ஞாநாதிஷட்குணபூர்ணனுய், நிஸ்தரங்கஜலதிபோலே பரமபதநிலயத்திலே எழுந்தருளியிருந்து நித்யஸித்தரும் முக்தரும் அநுபவிக்கவிருக்கிற அத்விதீயமான மூர்த்தியையுடையையாய். (மூன்றுமூர்த்தி) அந்த ஷட்குணங்களிலே இவ்விரண்டுகுணங்களை ப்ரகாஶிப்பித்துக்கொண்டு ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகளைப் பண்ணுகைக்காகஸங்கர்ஷணாதிரூபத்தாலேமூன்றுமூர்த்தியாய். (நாலுமூர்த்தி) பராவஸ்தையும்வ்யூஹங்களோடேஎண்ணலாம்படிபரார்த்தமாயிருக்கையாலே அத்தையுங்கூட்டி "நாலுமூர்த்தி" என்கிறது. அதவா, வ்யூஹகார்யமான ஸ்ருஷ்ட்யாதிகளுக்கு உபயோகமாயிருக்கிற ப்ரதாநபுருஷ அவ்யக்தகாலங்களை ஶரீரமாக வுடையனுயிருக்கிறபடியைச் சொல்லுகிற தென்னவுமாம். (நன்மைசேர்போகமூர்த்தி) அநுக்ரஹப்ராசுர்யமான நன்மையையுடைத்தாய் ஸம்ஸாரிகளுக்குபோகயோக்யமானமூர்த்தி. அநுக்ரஹப்ராசுர்யமாவது—ஸ்வாஸாதாரணமாய் அப்ராக்ருதமானவிக்ரஹத்தை, தேவாதி ஸஜாதீயமாக்கிக்கொண்டு ஸம்ஸாரிகளுக்கு சக்ஷுர்விஷயமாம்படி பண்ணுகை. அதவா, ஆமுஷ்மிகத்தில் நித்யாநுபவத்தோடே சேர்ந்த நன்மையை யுடைத்தாய் ஐஹிகத்தில் போகயோக்யமாயிருக்கும் மூர்த்தியென்னவுமாம்.

(புண்யத்தின் மூர்த்தி) அதுதான் பாக்யாதிகருடைய புண்யவிபாகத்திலே பலிப்பதாயிருக்கை. "పరిత్రాణాయసాధూనామ్" "பரித்ராணாயஸாதூநாம்" என்று-பரமபக்தியுக்தர்க்கு ஸ்வயம்ப்ரயோஜநமாய், ஸித்தஸாதந பரிக்ரஹ யுக்தர்க்கு ஶரண்யமாயும், உபாஸகர்க்கு ஶுபாஶ்ரயமாயுமிறேயிருப்பது "మానుషీంతనుమాశ్రితంపరమ్భావమజానన్తః" "மாநுஷீம்தநுமாஶ்ரிதம்பரம்பாவமஜாநந்தः" என்று பாக்யஹீநராய் அவதாரத்துக்கு இழவாளராகச் சொல்லாநின்றதிறே. (எண்ணில் மூர்த்தியாய) இப்படி அஸங்க்யாதமான விபவஸஜாதீயமான விக்ரஹத்தை யுடையையாய். "బహుధాజాయతే" "பஹுதாவிஜாயதே" என்றுஶ்ருதி; "బహూని" "பஹூநி" என்று ஸ்வவாக்யம்; "சன்மம்பலபல" என்று அபியுக்தர்வாக்யம்.

---

பதினேழாம்பாட்டு.—சேருந்தன்மை சேர்க்குமென்றுய், இவனை அநுபவத்தோடே சேர்க்கும் ஸ்வபாவத்தையுடைத்தாய், அவதாரம் உபாயமும் உபேயமுமா யிருக்குமென்றபடி. ஆகமூர்த்தி-மூர்த்தியாக. ... ... ... ... ... ... கஎ

(நாகமூர்த்தியித்யாதி) இப்படி அஸங்க்யாதமான அவதாரங்களைப்பண்ணினவிடத்திலும் தன்திருவுள்ளத்துக்கேற ஸம்ஸாரிகள் தன்னைவந்து கிட்டாமையாலே உபேக்ஷித்து பரமபதத்திலேபோக ப்ராப்தமாயிருக்க, ரக்ஷணத்தில் ஆசையாலே திருப்பாற்கடலிலே சேர்ந்த நீர்மையைச்சொல்லுகிறது. நலங்கடலிலே நாகமூர்த்திஶயனமாய்க்கிடந்து. அவதாரஸ்தலங்கள்போலே சிரகாலாவதியின்றிக்கே ப்ரளயாவதியாக விரும்பிக் கண்வளர்ந்தருளுகையாலே "நலங்கடல்" என்கிறது. திருவநந்தாழ்வான் திருமேனியாகிற படுக்கையிலே கண்வளர்ந்தருளி. (மேலாகமூர்த்தியாயவண்ணமென்கொல்) அதுக்குமேலே ஆஶ்ரிதர் தேவரீர்க்கு விக்ரஹமாகநினைத்த த்ரவ்யத்திலே ஸ்வாஸாதாரண விக்ரஹத்தில்பண்ணும் விருப்பத்தைப்பண்ணுகிற இஸ்ஸ்வபாவமென்னாயிருக்கிறது. "స్మృతం సఙ్కల్పనామయమ్" "ஸ்ம்ர்தம் ஸங்கல்பநாமயம்" என்றும், "యే యథా మాం ప్రపద్యన్తే" "யேயதாமாம் ப்ரபத்யந்தே" என்றும் சொல்லுகிறபடியே - ஆஶ்ரிதர் உனக்கு விக்ரஹமாகநினைத்த த்ரவ்யத்தையிறே ஸ்வாஸாதாரணவிக்ரஹத்தோபாதிவிரும்புவது. (ஆதிதேவனே) ஜகத்துக்கெல்லாம் காரணபூதனானநீ கார்யபூதனாயிருப்பானொருசேதநனுடைய இச்சாதீநமாக உன்னைப்பண்ணுவதே! யென்று கருத்து. இவ்விருப்பத்துக்கு அடியுடையவனாகையாலே யென்று ஹேதுவுமாம். (கஎ)

அ.—பதினெட்டாம்பாட்டு. "நாகமூர்த்திசயநம்" என்றும் "தடங்கடல்பணத்தலைசெங்கணாகணைக்கிடந்த" என்றும் அவதாரகந்தமான க்ஷீராப்திஶயநம் ப்ரஸ்துதமானவாறே திருவுள்ளமங்கே தாழ்ந்து, "ఆర్తిర్తో మానుషే లోకే" "அர்த்திதோமாநுஷேலோகே" என்கிறபடியே அவதாரங்களிலுண்டான அர்த்தித்வமன்றிக்கே யிருக்க விஜாதீயதேஶத்திலே வந்து கண்வளர்ந்தருளுகிற தேவரீருடைய வாசியை ஆரறிந்து ஆஶ்ரயித்துககாரியங் கொள்ளவென்கிறார்.

விடத்தவாயொராயிரமிராயிரங்கண்வெந்தழல்
விடுத்துவீள்விலாதபோகமிக்கசோதிதொக்கசீர்
தொடுத்துமேல்விதானமாயபௌவநீரராவணைப்
படுத்தபாயில்பள்ளிகொள்வதென்கொல்வேலைவண்ணனே.

ப-ரை.—வேலைவண்ணனே - கடலோடொத்த திருநிறத்தை யுடையவனே!; விடத்த - விஷத்தை உமிழாநின்றுள்ள, ஓராயிரம்வாய் - ஆயிரம்வாயையுடையனாய், இராயிரங்கண் - இரண்டாயிரங்கண்ணும், வெம் - வெவ்விய, தழல்விடுத்து - அழலைப்புறப்படவிட்டு, வீள்விலாத - ஒருக்காலும் பிரிவில்லாமல், போகம் - உன்னை அநுபவிக்கையால்வந்த, மிக்கசோதி - நிரவதிக தேஜஸ்ஸையுடையனாய், மேல் - மேலே, விதானமாய - விதானமானபணங்கள் பலவற்றிலேயுண்டான, தொக்கசீர்தொடுத்து-மிக்கவழகைத்தொடுத்து, பௌவநீர் - கடல்நீரிலே, அராவணை - திருவநந்தாழ்வானாகிற, படுத்தபாயில் - பரப்பப்பட்ட படுக்கையிலே, பள்ளிகொள்வது - கண்வளர்ந்தருளுகிறவிது, என்கொல் - என்னநீர்மையென்று ஈடுபடுகிறார். (கஅ)

வ்யா.—(விடத்தவாயொராயிரம்) விஷத்தை உமிழாநின்றிருந்துள்ள ஆயிரம் வாயையுடையனாய். (இராயிரங்கண்வெந்தழல்விடுத்து) இரண்டாயிரங்கண்ணாலும் வெவ்விய அழலைப்புறப்படவிட்டு. பகவதநுபவமே யாத்ரையாயிருக்கிற திருவநந்தாழ்வானுக்கு ரோஷகார்யமான இந்தக்ரௌர்ய முண்டாவானென்னென்னில்; துஷ்ப்ரக்ர்திகள் சஞ்சரிக்கிற தேசத்திலே கண்வளர்ந்தருளுகிற விவனுக்கு ஆராலே யென்னவருகிறதோவென்னுமதிசங்கையாலே வந்தது. அநுபவம் ராககார்யமான வோபாதி ப்ரதிகூலஸ்தலத்திலே த்வேஷமும் ராககார்யமிறே. இத்தால் - துஷ்ப்ரக்ர்திகளுக்குக் கணிசிக்கவொண்ணாதபடி திருவநந்தாழ்வானாலே ஸுரக்ஷிதனாய்க் கண்வளர்ந்தருளப் பெற்றோமென்று த்ர்ப்தராகிறார். (வீள்விலாதபோகம்) ஈச்வரன் அணைத்தால் ஒருவகையாலும் பிரியவொண்ணாத திருவுடம்பையுடையனாய, "அநந்தபோகினி" "அநந்தபோகிநி" என்று திருவநந்தாழ்வானுடைய திருமேனியை "போகம்" என்னக்கடவதிறே. இத்தால்-ஆத்மகுணங்களாலேரக்ஷகனாப்போலே ரூபகுணங்களாலே போக்யபூதனானபடியைச சொல்லுகிறது. (மிக்கசோதி) இப்படி கிஞ்சித்காரபூதனாய்க்கொண்டு உன்னை அநுபவிக்கையாலே வந்த நிரவதிக தேஜஸ்ஸையுடையனாய்.

(தொககசீர்தொடுத்து மேல்விதாநமாய) விதாநமானபணங்கள் பலவற்றிலே யுண்டான மிக்கவழகைத்தொடுத்து. தொக்கு - திரட்சி. சீர் - அழகு. இத்தால் - ஸ்பர்சததால்வந்த அநுபவமேயன்றிக்கே, தர்சநீயமாய் நாநாவர்ணமான பணங்களினழகைச் சேர்த்தநுபவித்துக்கொண்டு கண்வளர்ந்தருளுகிறபடியைச் சொல்லுகிறது. (பௌவநீராரவணைப்படுத்தபாயில்) கடல்நீரிலே அது உறுத்தாமைக்குப்படுத்த திருவநந்தாழ்வானாகிற படுக்கையிலே. (பள்ளிகொள்வதென்கொல்) கண்வளர்ந்தருளுகிறவிது வென்னோ. தங்களாபத்துக்கு உதவுகைக்குப்ரஹ்மாதிகள் அர்த்திக்கத்தான் செய்தருளிற்றோ. (வேலைவண்ணனே) வெள்ளைக்கடலிலே ஒரு நீலக்கடல் சாய்ந்தாப்போலே தேவரீருடைய பரபாகரஸத்தைச் சிலர் அறிந்து அநுபவிக்கைக்காகச் செய்தருளிற்றோ. இப்பாட்டில்- திருவநந்தாழ்வானோட்டை யநுபவத்தைச்சொல்லிற்று. அடிமைசெய்வாரில்லாமையன்று, ஸம்ஸாரிகளிழவைப்பார்த்து, பரார்த்தமாகக் கண்வளர்ந்தருளுகிறதென்றுதோன்றுகைக்காக. ... ... (௧அ)

அ.—பத்தொன்பதாம்பாட்டு. அர்த்தித்வ நிரபேக்ஷமாகக் கண்வளர்ந்தருளுகிறவிது என்னநீர்மையென்றார் கீழ்; இங்கு - பண்ணின ஜகத்ரக்ஷணங்களைக்கண்டு, "நஹி பாலந ஸாமர்த்ய ம்ருதே ஸர்வேச்வரம் ஹரிம்" "நஹிபாலநஸாமர்த்யம்ர்தேஸர்வேஶ்வரம்ஹரிம்" என்கிறபடியே பாலநதர்மத்துக்கு வேறுசக்தரில்லாமையாலும், ஜகத்து தேவரீர்க்கு அநந்யார்ஹசேஷமாகையாலே ரக்ஷிக்குமிடத்தில் அர்த்தித்வம்

மிகையாகையாலும், வந்து கண்வளர்ந்தருளுகிற இத்தனையென்று அந்தரக்ஷணங்களைப்பேசி, ஸாமாந்யத்ர்ஷ்டியால் ஸஹஜஶத்ருக்களாய்த் தோற்றுகிற பெரியதிருவடியும் திருவநந்தாழ்வானும் ஏககண்டராய் தேவர்க்குப் பரியும்படியாகக் கண்வளர்ந்தருளுகிற விது என்ன ஆஶ்சர்யமென்கிறார்.

புள்ளதாகிவேதநான்குமோதினையதன்றியும்
புள்ளின்வாய்பிளந்துபுட்கொடிப்பிடித்தபின்னரும்
புள்ளையூர்தியாதலாலதென்கொல்மின்கொணேமியாய்
புள்ளின்மெய்ப்பகைக்கடல்கிடத்தல்காதலித்ததே. (கக)

ப-ரை.—புள்ளதாகி - ஹம்ஸரூபியாய்க்கொண்டு, வேதநான்கும் - நாலு வேதங்களையும், ஓதினாய் - சதுர்முகனை ப்ரஹ்மாவுக்கு உபதேசித்தாய்; அதன்றியும் - அதுக்குமேலே, புள்ளினவாய்பிளந்து - பகாஸுரனவாயைக் கிழித்து, தன்பக்கலிலே ஆர்த்தர்வந்து காரியங்கொள்ளும்படி, புள்-பெரியதிருவடியை, கொடிப்பிடித்தபின்னரும -த்வஜமாகப்பிடித்தபின்பும், புள்ளையூர்தி-அவனைவாஹநமாகக்கொண்டுநடத்தாநிற்றி; மின்கொள்-மின்னுகின்ற, நேமியாயாதலால் - திருவாழியை யுடையவனாயிருக்கையாலே, கடல் - திருப்பாற்கடலிலே, புள்ளின் - பெரியதிருவடிக்கு, மெய்ப்பகை - ஸஹஜசத்ருவான திருவநந்தாழ்வான்மேலே, கிடத்தல -பள்ளிகொண்டருளுகைசகு, காதலித்தது-ஆசைப்பட்ட விது, என்கொல் - என்னோவென்கிறார். (சக)

வ்யா.—(புள்ளதாகிவேதநான்குமோதினாய்)வேதத்தினுடைய அபௌருஷேயத்திக்காக ஸ்வாஸாதாரண விக்ரஹத்தை திர்யக்ஸஜாதீயமாக்கிக் கொண்டு ஹம்ஸாவதாரத்தைப் பண்ணி தத்வஹிதங்களுக்கு ஜ்ஞாபகமான நாலுவேதங்களையும் ஜகத்தில் அஜ்ஞாநாந்தகாரமெல்லாம் நீங்கும்படி யருளிச்செய்தாய். "மாநம்ப்ரதீப மிவ காருணிகோ ததாதி" "மாநம்ப்ரதீபமிவகாருணிகோததாதி" என்னக் கடவதிறே. (அதன்றியும்) ஸஹஜஶத்ருவான அஜ்ஞாநத்தைப் போக்கினதுக்குமேலே. (புள்ளின்வாய்பிளந்து) பகாஸுரன்வாயைக்கிழித்து. இத்தால்- ப்ரமாணஜ்ஞாநத்தாலே அஜ்ஞாநாந்தகாரத்தைப் போக்கினாப்போலே, பகாஸுரனை நிரஸித்து ப்ரமேயபூதனான தன்னைத்தந்து, ஆஶ்ரிதர்க்கு ப்ராணப்ரதிஷ்டை பண்ணினபடியைச் சொல்லிற்று. (புட்கொடிப்பிடித்த பின்னரும்புள்ளையூர்தி) தன்பக்கலிலே ஆர்த்தரடங்கவந்து காரியங்கொள்ளும்படி பெரியதிருவடியை ரக்ஷணதர்மத்துக்கு த்வஜமாகப்பிடித்து அவ்வளவுமன்றிக்கே, ஆஶ்ரிதரிருந்த விடங்களிலேவந்து உதவுகைக்கு அவனை வாஹநமாகக்கொண்டு நடத்தாநிற்றி.

(மின்கொள்நேமியாய்) திருநிறத்துக்குப் பகைத்தொடையாய் மின்னுகின்ற திருவாழியை யுடையவனே. இத்தால் - ரக்ஷகத்வமே நிருபகமென்று தோற்றும்படி * கைகழலா நேமியானாயிருக்கிற படியைச் சொல்லிற்று. (ஆதலால்) நிருபாதிகரக்ஷகனாகையாலே. "புள்ளதாகி வேதநான்குமோதினாய்" என்று கீழோடே அந்வயம்.

"அதென்கொல்" என்கிறவிது பாட்டின்முடிவிலே அந்வயம். (புள்ளின்மெய்ப்பகைக் கடல்கிடத்தல்காதலித்தது - என்கொல்) ஸாமாந்யத்ருஷ்டியால்பார்த்தால் திருவடிக்கு ஸஹஜஶத்ருவென்னலாயிருக்கிற திருவநந்தாழ்வான்மேலே திருப்பாற்கடலிலே இருவருங்கூட விரும்பி அடிமைசெய்யும்படி கண்வளர்ந்தருளுகிறவிது என்கொலோ. ஸஹஜஶத்ருவென்று புத்திபண்ணியிருக்கும் ஸம்ஸாரத்திலே இருவரையும் ஏககண்டராக்கி அடிமைகொண்டவிது, தேவரீருடைய ஸர்வஶக்தித்வத்தை ப்ரகாஶிப்பிக்கைக் காகவோவென்று கருத்து. அநாதியாய் அஹங்காரத்தை விரும்பிப்போந்த சேதநனை, ஶேஷைகரஸரான நித்யஸூரிகளோடே ஒருகோவையாக்குவது இச்சக்தயிறே. ... ... ... ... கசு

அ.—இருபதாம்பாட்டு. ப்ரயோஜநாந்தரபரரான ப்ரஹ்மாதிகளைத்தத் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிற இம்மேன்மைதானே நீர்மைக்கெல்லை நிலமாயிராநின்றது, அம்ர்தமதநவேளையில் மந்தரதாரணார்த்தமாக ஆமையான நீர்மைதானேமேன்மைக்கு எல்லைநிலமாயிராநின்றது, இவைகளைப்பிரித்து என்னெஞ்சிலேபட வருளிச்செய்ய வேணுமென்கிறார்.

கூசமொன்றுமின்றிமாசுணம்படுத்து, வேலைநீர்
பேசநின்றதேவர்வந்துபாடமுன்கிடந்ததும்,
பாசநின்றநீரில்வாழுமாமையானகேசவா!
ஏசவன்றுநீகிடந்தவாறுகூறு; தேறவே. (உ௦)

ப-ரை.—கூச மொன்றுமின்றி - கொஞ்சமாயினும் கூசுதலின்றிக்கே, வேலைநீர் - கடல்நீரிலே, மாசுணம - திருவநநதாழ்வானை, படுதது - திருப்பள்ளியாகப்படுத்து, பேச - ப்ரஹ்மாதிகள ஸ்துதிககவும், நின்ற - ஊர்தவலோகங்களில் வர்த்திக்கிற, தேவர்வநது - தேவர்கள்வநது, பாட-ஸ்துதிக்கவும், முன்கிடந்ததும் - ஸ்ருஷ்டி காலநதொடஙகிக் கணவளாநதருளினதும், ஸமுத்ரமதநவேளையிலே, பாசம்நினற - வருணபாசஙகளை யுடைததான, நீரில் - கடலிலே, ஆமையான - கூர்மரூபியாய, வாழும் - மநதரததைச்சுமநது நிற்கிறவனாய், கேசவா - ப்ரஹ்மருத்ரர்களுக்கு உத்பாதகனானவனே, அன்று - தேவதைகள் ஸாபேக்ஷராய் நினறவனறு, உன்படியறியாதார், ஏச - "ஆமையானான்" என்று உன்னுடையானை ஏசும்படியாக, நீ - ஸர்வாதிகனானநீ; கிடந்தவாறு - மநதரம்முதுகிலெ சுழலக் கண்வளர்நதருளினபடியை, தேற - தெரியும்படி, கூறு - அருளிச்செய்ய வேணுமென்கிறார். (உ௦)

வ்யா.—(கூசமொன்றுமின்றி) மாயாகுஶலரான அஸுரராக்ஷஸர் ஸஞ்சரிக்கிறதேஶம். ஆராலே யென்வருகிறதோ வென்று ஒரு கூச்சமின்றியே யென்னுதல்; பிராட்டிமாருக்கும் அடுத்துப் பார்க்கப்பொறாத ஸுகுமாரமானவடிவு, துஷ்ப்ரக்ருதிகள்விஷத்ருஷ்டிக்கு விஷயமாகிறதோவென்று கூசாதேயென்னுதல். அதவா, "கூசமொன்றுமின்றி-கூறுதேற" என்று அந்வயித்து தன்படிகளைச் சொல்லுகைக்கு அதிகாரிகளில்லையென்று அதிகாரி விரஹத்தால் கூசாதேயென்றுமாம். அதாவது-மேன்மையைச்சொல்லிதுஷ்ப்ராபமென்றுஅகலுதல்; நீர்மையைச்சொல்லிக் காற்கடைக்கொண் டகலுதலென்கை.

---

பத்தொன்பதாம்பாட்டு. கடலிலே காதலித்துக் கிடத்தல் என்கொல். (கசு)

(மாசுணம்படுத்து) நீருறுத்தாமே திருவனந்தாழ்வானை விரித்து. (வேலைநீர்பேச) ஸ்வஸந்நிதாநத்தாலே வந்த ப்ரீதியாலே கடல்நீர் கோஷியாநிற்க. (நின்றதேவர்) ஜகத்ரக்ஷண தர்மத்திலே வ்யவஸ்திதராய் நின்ற ப்ரஹ்மாதிகள் பேசநின்றதேவரொன்றுமாம். "பேசநின்றசிவன்" எனனக்கடவதிறே. (வந்துபாட) ஊர்த்வ லோகங்களில்நின்றும் வந்துதந்தாமுடைய அபிமதஸித்துக்காக ப்ரீதிப்ரேரிதராயேத்த. (முன்கிடந்ததும்) ஸ்ர்ஷ்டிகாலமேதொடங்கிக் கண்வளர்ந்தருளுகிற விதுவும். ஸமுத்ரகோஷத்தோடு, ப்ரயோஜநாந்தரபரரான ப்ரஹ்மாதிகளுடைய ஸ்தோத்ரத்தோடு, அநந்ய ப்ரயோஜநரான ஶ்வேதத்வீபவாஸிகளுடைய ஸ்தோத்ரத்தோடு வாசியற முகங்கொடுத்து நிற்கிற விது என்ன சீலமென்று கருத்து. (பாசநின்றநீரில்வாழு மாமையானகேசவா) ஸமுத்ர மதநவேளையில் வருணபாசங்களை யுடைத்தான கடலிலே முதுகிலே மந்தரம் சுழலுகிற விது ஸ்வப்ரயோஜநமாக நினைத்து கூர்மஸஜாதீய னானவனே. "பாசநின்றநீர்" என்று - பரமபதத்திற்காட்டில் ப்ரேமஸ்தலமான கடலிலே யென்னவுமாம். (கேசவா) ப்ரஹ்மாதிகள் சரணம் புகுர தத்ரக்ஷணார்த்தமாக கூர்மஸஜாதீயனாகையாலே அவ்வளவாலும் ப்ரஹ்மருத்ரர்களுககு உத்பாதகனான மேன்மை யழியாதிருக்கிறபடி. (ஏசவனறு நீ கிடந்தவாறு) தேவதைகளடங்க ஸாபேக்ஷராய் நின்றவன்று, ஸர்வாதிகனான நீ, உன்படி யறியாதார் "ஆமையானான்" என்று உன்னுடையாளை யேசும்படி, மந்தரம் முதுகிலே நின்று சுழலக் கண்வளர்ந்தருளின ப்ரகாரம. (கூறுதேறவேறிதே) தெரியும்படியெனககருளிச்செய்யவேணும். ஆமையானநீர்மையிலே ஸர்வாதிகத்வமும் ப்ரகாசியாநின்றது, ப்ரஹ்மாதிகளைத்தக கண்வளர்ந்தருளுகிற விடத்திலே நீர்மைப்ரகாஶியாநின்றது, இவற்றைப்பிரித்துத் தெரிய வருளிச்செய்யவேணுமென்று கருத்து. (உ0)

அ.—இருபத்தோராம்பாட்டு. ஸமுத்ரமதநவேளையில் ஆமையான நீர்மைக்குமேலே ஸகல வ்யாபாரங்களையுமதேவரீரே செய்தருளி, "தேவர்கள் கடல்கடைந்தார்கள்" என்றுதேவர்கள்தலையிலே யேறிட்டுக்கொண்டாடினபடி, ராவணனைத்தேவரீரே அழியச்செய்து முதலிகள்தலையிலே விஜயத்தை யேறிட்டுக்கொண்டாடினாப்போலேயிருந்தது. இவ்வாஶ்ரிதபக்ஷபாதத்தை வேறாகத்தெரியவருளிச்செய்யவேணுமென்கிறார். ஸம்பந்தம் ஸர்வஸாதாரணமா யிருக்க இதொரு பக்ஷபாதமிருந்தபடி யென்னென்று விஸ்மிதராகிறார்.

---

இருபதாம்பாட்டு. ஆமையாயிருக்கச்செய்தேயும், "கேசவா" என்கையாலே - மேன்மைக்கெல்லை நிலமென்கிறது. மாசுணம்-பெரும்பாம்பு. பேசநின்ற - ப்ரஶம்ஸாபரமாகப் பேசநின்ற. கடல்வருணனுக்கு இருப்பிடமாகையாலே அவனுடைய ஆயுதத்தை யுடைத்தாயிருக்கை. பாசம் - ஆயுதம். ப்ரஹ்மாதிகள் ஸ்தோத்ரம் பண்ணக்கிடக்கிற மேன்மையிலே அசேதநமான ஸமுத்ரகோஷத்தைக் கேட்டுக்கொண்டு கிடக்கையாலே நீர்மை ப்ரகாசிக்கிறது. (உ0)

அரங்கனே தரங்கநீர்கலங்கவன்றுகுன்றுசூழ்
மரங்கள்தேயமாநிலங்குலுங்கமாசுணஞ்சுலாய்
நெருங்கநீகடைந்தபோதுநின்றசூரரென்செய்தார்
குரங்கையாளுகந்தவெந்தைகூறுதேறவேறிதே. (உக)

ப-ரை.—அன்று - தூர்வாஸசாபத்தாலே தேவதைகள் வெறுவியரான வன்று, தரங்கம - திரைக்கிளர்த்தியை யுடைத்தான, நீர - கடலானது, கலங்க - குளப்படிபோலே கலங்கும்படியாகவும், குன்றுசூழ் - மந்தரபர்வதத்தைச்சூழ்ந்த, மரங்கள் - மரங்களானவை, தேய - வாஸுகியுடல்பட்டுத்தேயவும், ஸமுத்ரகோஷத்தாலே, மாநிலம் - புஷ்கரத்வீபங்களாகிற மஹாப்ருதிவிகள், குலுங்க - அசையவும், மாசுணம் - வாஸுகியை, நெருங்கச்சுலாய் - நெருங்கச்சுற்றி, நீகடைந்தபோது - தேவரீர் கடைந்தருளினபோது, நின்றசூரா - அதிபலபராக்ரமராய் நின்றதேவர்களும அஸுரர்களும், என்செய்தார - செய்ததென; குரங்கை - சிறியதிருவடியை, ஆள் உகந்த - அடிமைகொண்டு உகந்தருளின, எந்தை - எனஸ்வாமியாய், அரங்கனே - கோயிலிலே கண்வளர்ந்தருளுகிறதேவரீர, இது-இதனை, வேறு - விசேஷித்து, தேற - தெரியும்படி, கூறு-அருளிச்செய்யவேணும. (உக)

வ்யா.—(அரங்கனே) என்கிற விது விசேஷ்யமாகையால் க்ரியையோடே அந்வயிக்கக்கடவது. (தரங்கநீர்கலங்க) "அப்ரமேயோ மஹோததி:" "அப்ரமேயோமஹோததி:" என்கிறபடியே-அத்யகாதமான கடலானையாலே தன்னையநுபவிக்க விழுந்தாரைக் கரையிலேயேறிட வல்ல திரைக்கிளர்த்தியையுடைத்தானகடல் குளப்படிபோலே கலங்க. (அன்று) ஸகலதேவதைகளும் துர்வாஸஶ்ஶாபத்தாலே நஷ்டஸ்ரீகராயத் தங்க ளைச்வாயதநுக்கு தேவரீர் கைபார்த்து நின்ற வன்று. (குன்றுசூழ்மரங்கள்தேய) மந்தரத்தைச்சூழ்ந்த மரங்கள் வாஸுகியுடல பட்டுத்தேய. (மாநிலங் குலுங்க) ஸமுத்ர கோஷத்தினுடைய அதிசயத்தாலே அதோடேசேர்ந்த புஷ்கரத்வீபங்களாகிற மஹாப்ருதிவி குலுங்க. (மாசுணம் சுலாய்நெருங்க) (நெருங்க - மாசுணம்சுலாய்) வாஸுகியை நெருகச்சுற்றி. சுலாய் - சுலாவி - சுற்றியென்றபடி. ஸ்வதேஜஸ்ஸாலே உபப்ரும்ஹிதமானபடியாலே கூசாதே மந்தரத்திலே வாஸுகியை நெருங்கச்சுற்றி. "மந்த்ராத்ரேரதிஷ்டானம் மத்நேப்யூத்" "மந்தராத்ரோதிஷ்டாநம் மதநேபூத்" என்று மந்தரததுககு அதிஷ்டாநமும் தானேயென்றும, "தேஜஸா நாகராஜானம் ததாப்யாயிதவான் ப்ரபு:" "தேஜஸா நாகராஜாநம் ததாப்யாயிதவாநப்ரபு:" என்று வாஸுகிக்கு பலகரனும் தானேயென்றும் சொல்லக்கடவதிறே. (நீகடைந்தபோது) "ததோமதிதுமாரப்த" "ததோமதிதுமாரப்ய" என்று - தேவர்களுக்கு ஆரம்பமாத்ரமேயாய், "ஆயிரந்தோளா லலைகடல்கடைந்தான்" என்கிறபடியே அக்கடலை தேவரீரேகடைந்தபோது.

---

இருபத்தோராம்பாட்டு. ஸர்வஸாதாரணம் தேவர்களுக்கும் அஸுரர்களுக்கு மொத்திருக்க நெருங்கக்கட்டிக்கடைகைக்கு வாஸுகிக்கு சக்தியுண்டோவென்ன; அருளிச்செய்கிறார் (ஸ்வதேஜஸ் ஸாலே யித்யாதி.) உபப்ரும்ஹிதம் - பெருக்கப்படுகை.

(நின்றசூரரென்செய்தார்) அதிபலபராக்ரமரான தேவர்களும் அஸுரர்களும் செய்ததென். அம்ர்தமதநஸாமர்த்யத்தை தேவர்க ள்பக்கலிலே யேறிட்டு கொண்டாடுகைக்கு அவர்கள்செய்த கார்ய மென். கூர்மரூபியாய் மந்தராத்ரிக்கு அதிஷ்டாநமானார்களோ; "உ பர்யாக்ராந்தவாந் ஶைலம் ப்ருஹத்ரூபேண கேஶவ:" "உபர்யாக்ராந்தவாச்சைலம் ப்ர்ஹத்ரூபேணகேஶவ:" என்று மந்தரம்சலியாதபடி நோக்கினார் களோ; தேஜஸ்ஸாலேவாஸுகிக்கு பலகரரானார்களோ; பலபோக்தா க்களாய் நின்ற விஷ்ணுஹேதுவாக அவர்களையே கர்த்தாக்களுமாக்கி னவித்தனையன்றோ. "தேவதானவயத்நேன ப்ரஸூதாம்ருதமந்தநே" "தேவதாந வயத்நேநப்ரஸூதாம்ர்தமந்தநே" என்று-அம்ர்தமதநவ்யாபாரம் அஸுரர்களுக்கு மொத்திருக்க அவர்களைக்லேஶபாகிகளாக்கி தே வர்களை அம்ர்தபாகிகளாக்கின விதுவும் அதுக்குமேலேயொருபக்ஷ பாதமிறே. ப்ரயோஜநாந்தர பரரொன்று பாராதே தேவர்கள்பக் கல் பக்ஷபாதத்துக்கடி, "ஶரணம் த்வாமநுப்ராப்தா:" "ஶரணம்த்வாமநுப் ராப்தா:" என்று சரணமென்ற வதிலேயிறே. (குரங்கையாளுகந்த வெந்தை) கீழ்ச்சொன்ன பக்ஷபாதத்துக்குத்ர்ஷ்டாந்தம் சொல்லு கிறது. ராவணனை தேவரீரே யழியச்செய்து, ப்ரதிபக்ஷத்தை வெ ன்று தந்தார்களாக ஸ்ரீவாநரவீரர்களை ஆதரித்தாப் போலே, "எந்தை" என்று - நித்யஸூரிகளை அடிமைகொள்ளு மேற்றத் தை யுடையனுய்வைத்து, "திர்யக்குக்கள்" என்று இகழாதே அடிமைகொண்ட வித்தைத் தன்பேறுகநினைத் திருக்கையாலே என்னுதனே யென்கிறார். (அரங்கனே - கூறுதேறவேறிதே) "ஈஶ் வரன் ஒருவனுளன்" என்று அறியாத ஸம்ஸாரத்திலே இவ்வாஶ் ரித பக்ஷபாதத்தை ப்ரகாசிப்பிக்கைக்காக அர்த்தியாய் வந்துகோயி லிலே கண்வளர்ந்தருளுகிற தேவரீர் இத்தைவிஶேஷித்துத் தெரிய வருளிச் செய்யவேணும். கீழ் - வ்யூஹத்திலும் விபவத்திலும் சொ ன்னபக்ஷபாதங்கள்காணலாவது பெரியபெருமாள் பக்கலிலே யெ ன்றுகருத்து. ... ... ... ... ... ... (உக)

அ.—இருபத்திரண்டாம் பாட்டு. ப்ரளயாபத்திலே வரையா தே யெல்லாரையும், வடதளஶாயியாய், ஸர்வஶக்தித்வந்தோற்றச் சிறிய திருவயிற்றிலேவைத்து ரக்ஷித்ததேவரீருக்கு "ஆச்ரிதவிஷ யத்தில் வத்ஸலர்" என்னுமிது ஓரேற்றமோ வென்கிறார்.

பண்டுமின்றுமேலுமாயோர்பாலனாகிஞாலமேழும்
உண்டுமண்டியாலிலைத்துயின்றவாதிதேவனே!
வண்டுகிண்டுதண்டுழாயலங்கலாய்! கலந்தசீர்ப்
புண்டரீகப்பாவைசேருமார்ப! பூமிநாதனே! (உஉ)

நின்றசூரர் – பராக்ரமமாதல்; சூரராதல். அதுக்கு தான்கடைந்து அவர்கள்மேலே ஏறிட்டத்துக்குமேலே. (உக)

ப-ரை.—பண்டுமாய் - ஸ்ர்ஷ்டிக்கு முன்பு அசித்தாய்க்கிடந்த ஸகலபதார்த்தங்களையும் தன்மேலே யேறிட்டுக்கொண்டு நோக்கியும், இன்றுமாய் - ஸ்ர்ஷ்டிவேளையில் கர்மாநுரூபமாக ஸ்ர்ஷ்டித்து ததநுரூபமாக ரக்ஷித்தும், மேலுமாய - ப்ரளயங்கொள்ளுமளவில், ஓர் அத்விதியமான, பாலனுகி - முக்தச்சிசுவாய், ஞாலமேழும் - ஸகலலோகங்களையும், மண்டி - தன்பேருகவிரும்பி, உண்டு - அமுதுசெய்து, ஆலிலை - ஓராலந்தளிரிலே, துயின்ற - கண்வளர்ந்தருளின, ஆதிதேவனே - ஜகத்காரணபூதனுயை, வண்டு-வண்டுகளானவை, கிண்டு-கிளராநின்றுள்ள, தண்-குளிர்ந்த, துழாயலங்கலாய் - திருத்துழாய்மாலையையுடையனுய், கலந்த - நித்யஸம்ச்லேஷஸ்வ பாவையாய், சீர் - ச்லாக்யமான, புண்டரீகம் - தாமரைப்பூவை ஜந்பூமியாக வுடையளாய், பாவை - நிருபாதிகஸ்த்ரீத்வத்தை யுடையவளான பெரியபிராட்டியார், சேரும் - நித்யவாஸம் பண்ணுகிற, மார்ப - திருமார்பையுடையனுய், பூமி - ஸ்ரீ பூமிப்பிராட்டிக்கு, நாதனே - நாதனானவன், ப்ரளயத்தில் ஒருவரில்லாதாரைப் போலே தனியே கண்வளர்ந்தருளா நின்றுளென்கிறுர். (௨௨)

வ்யா.— (பண்டுமின்று மேலுமாய்) "பண்டு" என்கிறது-ஸ்ர்ஷ்டேஃபூர்வகாலத்தை; "இன்று" என்கிறது - ஸ்ர்ஷ்டிகாலத்தை; "மேல்" என்கிறது - ப்ரளயவேளையை. "ஸதேவஸோம்யேதமக்ர ஆஸீத்" "ஸதேவஸோம்யேதமக்ர ஆஸீத்" என்கிறபடியே நாமரூபங்களை இழந்து அசிதவிசேஷிதமாய் சோச்யதசாபந்நமான ஸகல பதார்த்தங்களையும், "தம:ஏகீபவதி" "தம:ஏகீபவதி" என்கிறபடியே தன் பக்கலிலேயிட்டு நோக்கியும்; ஸ்ர்ஷ்டிவேளையில் கர்மாநுரூபமாக ஸ்ர்ஷ்டித்து ததநுரூபமாக ரக்ஷித்தும ப்ரளயங்கொள்ளுமளவில் வயிற்றிலே வைத்து நோக்கியும் போருமவனுகையாலே. "ஆய்" என்றது-ஆசையாலே யென்று ஹேதுகர்ப்பமாய்க்கிடக்கிறது. (ஓர் பாலனுகி) அத்விதியமான முக்தசிசுவாய். (ஞாலமேழுமுண்டுமண்டி) ஸகலலோகங்களையும் தன்பேருகவிரும்பி யமுதுசெய்து சிறியவயிற்றிலே ஸகலலோகங்களையு மடக்கின அகடிதகடனாஸாமர்த்யத்தால் தேவரீருடைய ஐச்வர்யமான சக்தியை ப்ரகாசிப்பித்தபடியிறேயிது. (ஆலிலைத்துயின்ற வாதிதேவனே) ஒருபவனுன வாலிலையிலே ஜகத்காரணவஸ்து வென்று தோற்றும்படி கண்வளர்ந்தருளினவனே. (வண்டுகிண்டு தண்டுழாயலங்கலாய்)இப்படிப்ரளயார்ணவத்திலே பரிவரொருவரின்றிக்கே தனியே கண்வளர்ந்தருளுகிறவன் ஸர்வாதிகனென்கிறதென்கிறது இப்பாட்டில் சேஷத்வமும். செவ்வியாலே வண்டுகள் புக்குப்பருகும் ஸரமஹரமான திருத்துழாய்மாலையை யுடையவனே. கிண்டல்-கிளர்தலும்,கிழித்தலும். இத்தால்-ஆதிராஜ்யஸூசகமான திருத்துழாய்மாலையையுடையவனென்கை. (கலந்தசீர்ப்புண்டரீகப் பாவைசேருமார்ப) ஸ்வரூபநிரூபக பூதையாகையாலே நித்யஸம்ச்லேஷஸ்வபாவையாய், தாமரைப்பூவை ஜந்மபூமியாக வுடையளாய், நிருபாதிகஸ்த்ரீத்வத்தையுடைய பிராட்டி, "அகலகில்லேனிறையும்" என்று அவள் ஆதரிக்கும்திருமார்பையுடையவனே.

(பூமிநாதனே) ஸ்ரீபூமிப்பிராட்டிக்கு நாதனானவனே. இத்தால்- "ஹ்ரீஶ்ச தே லக்ஷ்மீஶ்ச பத்ந்யௌ" "ஹ்ரீஶ்சதேலக்ஷ்மீஶ்சபத்ந்யௌ" என்கிறபடியே ஸ்ரீபூமிஸஹிதனான ஏற்றத்தையுடையவனென்கை. இப்படி ஸர்வாதிகன் இவர் ப்ரளயார்ணவத்திலே ஒருவரில்லாதாரைப் போலே தனியே கண்வளர்ந்தருளுகிறானென்கை. ... (உஉ)

அ.—இருபத்து மூன்றாம்பாட்டு. ப்ரளயாபத்ஸகனானைக்கு வடதளஶாயியான அகடிதகடநா ஸாமர்த்யத்யத்தள வனறியே தேவரீருடைய அஸாதாரண விக்ரஹத்தை, "நரஸ்யார்த்ததநும் க்ருத்வா ஸிம்ஹஸ்யார்த்ததநும் ததா" "நரஸ்யார்த்ததநும் க்ர்த்வா ஸிம்ஹஸ்யார்த்ததநுந்ததா" என்கிறபடியே ஏகதேஶத்தை மநுஷ்யஜாதியமாக்கியும் ஏகதேஶத்தை திர்யக்ஸஜாதியமாக்கியும் இப்படி யோநித்வயத்தை ஏகவிக்ரஹமாக்கி, அர்த்தித்வ நிரபேக்ஷமாக பிதாவாலே புத்ரனுக்குப்பிறந்த ஆபத்தை தேவர்பொறுக்க மாட்டாமையாலே தூணிலே தோற்றின அகடிதகடநாஸாமர்த்யத்தை அநுஸந்தித்து இத்தை யாவர் பரிச்சேதித்து அறியவல்லாரென்கிறார்.

வாணிறத்தொர்சீயமாய்வளைந்தவாளெயிற்றவன்
ஊனிறத்துகிர்த்தலமழுத்தினாயுலாயசீர்
நாணிறத்தவேதநாவர்நல்லயோகினால்வணங்கு
பாணிறக்கடற்கிடந்தபற்பநாபனல்லையே. (உ௩)

ப-ரை.—வால்நிறத்து - வெளுத்தநிறத்தையுடைத்தாய், ஓர் - அத்விதீயமான, சீயமாய் - நாஸிம்ஹாவதாரஞ்செய்தருளி, வளைந்த - வளைந்து, வாள்- ஒளியையுடைத்தான, எயிற்றவன் - பற்களையுடைய ஹிரண்யனது, ஊன் நிறத்து - சரீரத்தில் மார்பிலே, உகிர்த்தலம் - திருவுகிரை, அழுத்தினாய் - அழுத்தினவனே, உலாய - ஸர்வலோகப்ரஸித்தமான, சீர் - ப்ராமாண்யத்தையுடைத்தாய், நால்நிறத்த - உதாத்தாநுதாத்தஸ்வரித ப்ரசயரூபமான நாலுவகைப்பட்ட ஸ்வரத்தையுடைய, வேதம் - வேதத்தை, நாவர் - நாவிலேயுடைய வைதிகர், நல்லயோகினால் - பக்தியோகத்தாலே, வணங்கு - ஆச்ரயிக்கிற, பால்நிறக்கடல் - க்ஷீராப்தியிலே, கிடந்த - கண்வளர்ந்தருளின, பற்பநாபனல்லையே- பத்மநாபனன்றோ வென்கிறார். (உ௩)

வ்யா.—(வாணிறத்தொர் சீயமாய்) புருஷோத்தமன் தன்னை அறியமாறி ஸிம்ஹஸஜாதியனாப்போலே ஸ்வாபாவிகமான நிறத்தையும் மாறுடுவதே யென்கிறார். வால்நிறம் - வெளுத்தநிறம். (ஓர் சீயமாய்) "பஹுதா விஜாயதே" "பஹுதாவிஜாயதே" என்றும், "பஹூநி" "பஹூநி" என்றும் சொல்லுகிற அஸங்க்யாதமான அவதாரங்களிலே இங்ஙனிருப்பதொன்றில்லாமையாலே அத்விதீயமென்கிறார். "அழகியான்றானே" என்கிறபடியே போக்யதையில் அத்விதீயத்வத்தைச் சொல்லவுமாம். சீயம் - சிங்கம். (வளைந்தவாளெயிற்றவன்) வளைந்து ஒளியையுடைத்தான எயிற்றையுடைய ஹிரண்யன்.

இத்தால் - வரபலத்திலே அந்தர்ப்பவியாத ஆஸுரமான புஜ பலத்தைச் சொன்னபடி. (ஊன்நிறத்து உகிர்த்தலமழித்தினாய்) ஶரீரத்தில்மர்மத்திலே திருவுகிரை அழுத்தினவனே. "உகிர்த்தலமழுத்தினாய்" என்று - அவன்வரத்திலே அந்தர்ப்பவியாத வதஸாதநத்தாலே அநாயாஸேந அழித்தபடி சொல்லிற்றாகிறது. (உலாயசீர் நால்நிறத்த வேதநாவர்) ஸர்வலோக ப்ரஸித்தமான ப்ராமாண்யத்தையுடைத்தாய், உதாத்தாநுதாத்த ஸ்வரிதப்ரசயரூபமான நாலுவகைப்பட்ட ஸ்வரத்தையுடைய வேதத்தை நாவிலே யுடையவர்கள். நிறம்-மேனி. இத்தால - அநுமாநாதிகளாலே தத்வஹிதங்களை நிர்ணயிக்குமவர்கள். அன்றியே, வைதிகர் ஆஶ்ரயிக்குமவனென்கை. (நல்லயோகினால் வணங்கு) பக்தியோகத்தாலே ஆச்ரயிக்குமவர்களென்னுதல்; விலக்ஷணமான ப்ரபத்தியாலே ஆஶ்ரயிக்குமவர்களென்னுதல். யோகு - யோகம்-உபாயம். (பால்நிறக்கடல் கிடந்த பற்பநாபனல்லையே) தேவரீர் திருமேனிக்கு பரபாகரூபமான நிறத்தை யுடைத்தான கடலிலே ஜகத்துக்கு உத்பாதகனென்று தோற்றும் வடிவோடே கண்வளர்ந்தருளுகிற பற்பநாபனல்லையோ. "நல்லயோகினால்" என்கையாலே - வாக்யார்த்த ஜ்ஞாநமென்ன, கர்மஜ்ஞாந ஸமுச்சயமென்ன, இவற்றைமோக்ஷஸாதந மென்கிற குத்ருஷ்டிகளில் வைதிகருக்குண்டான வ்யாவர்த்தி சொல்லுகிறது. "உலாயசீர்" என்று- அதிகாரிவிசேஷணமாகவுமாம். "உலாயசீர்-பற்பநாபன்" என்று அந்வயிக்கவுமாம். அப்போது, "ஸத்ய:" "விதித:" என்கிறபடியே கல்யாணகுண யுக்தனான ஜநகனென்கிறது. (உரு)

அ.—இருபத்துநாலாம்பாட்டு. பரமபாவநனுமாய் நிரதிஶயபோக்யனுமாய், போக்தாக்களைக்காத்தூட்டவல்ல பரிகரத்தையுமுடைய தேவரீர், ஆஶ்ரிதரக்ஷணத்துக்கு அநுரூபமாகதிவ்யவிக்ரஹத்தை அழியமாறிவந்து தோற்றின இவ்வேற்றத்தை நித்யஸூரிகளறிதல், பிராட்டியறிதலொழிய வேறறியவல்லாரானொன்று பின்னையும் அந்த நரஸிம்ஹவர்த்தாந்தத்திலே ஈடுபடுகிறார்.

கங்கைநீர்பயந்தபாதபங்கயத்தெம்மண்ணலே!
அங்கையாழிசங்குதண்டுவில்லும்வாளுமேந்தினாய!
சிங்கமாயதேவதேவதேனுலாவுமென்மலர்
மங்கைமன்னிவாழுமார்பவாழிமேனிமாயனே. (உச)

ப-ரை.—கங்கைநீர் - கங்காதீர்த்தத்தை, பயந்த - பெற்ற, பாதபங்கயம்-திருவடித்தாமரைகளையுடைய, எம்மண்ணலே - எனக்குநாதனாய், அங்கை - அழகியதிருக்கைகளிலே, ஆழியும் - திருவாழியையும், சங்கும் - ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும், தண்டு - கௌமோதகியென்னுங் கதையையும், வில்லும் - சார்ங்க

இருபத்துமூன்றாம்பாட்டு. சீர் - ப்ராமாண்யஸ்ரீ. மேனி - ஸ்வரம். "ஸத்யஸ:" "தத்வமஸி" என்கிற வாக்கியார்த்த ஜ்ஞாநம். அந்தகுளகமாய் மேலேக்ரியை. (உரு)

மென்னும் திருவில்லையும், வாளும் - நந்தகமென்னும்வாளையும், ஏந்தினாய்- தரித்தருளினவனாய், சிங்கமாய - ந்ர்ஸிம்ஹாவதாரஞ்செய்தருளி ஹிரண்யனை நிரஸிக்கையாலே, தேவதேவ - நித்யஸூரிகளை யெழுதிக்கொண்டவனாய், தேன் உலாவு - மதுவெள்ளமிடாநின்றதாய், மெல் - ம்ர்துவான, மலர் - தாமரைமலரைப் பிறப்பகமாகவுடைய, மங்கை - நவயௌவநஸ்வபாவையான பெரியபிராட்டியார், மன்னிவாழும் - நித்யவர்ஸம்பண்ணுகிற, மார்ப - திருமார்பையுடையனாய், ஆழி - கடல்போலே ச்ரமஹரமான, மேனி - திருமேனியையுடைய, மாயனே - ஆச்சர்யபூதனே. (உ௪)

வ்யா.—(கங்கைநீர்பயந்தபாத பங்கயத்தெம்மண்ணலே) குருபாதகனான ருத்ரனுக்கும் சுத்தியைப்பிறப்பிக்கும் அக்கங்கைக்கும் உத்பாதகனாய், ஸாத்தியுக்தர்க்கு நிரதிசயபோக்யமான திருவடிகளையுடையவென்னுதனே.*அபராதாநாமாலயரானஸம்ஸாரிகளுக்குப்பாவநமாய், * அஸ்ப்ர்ஷ்டஸம்ஸாரதோஷரான நித்யர்க்கும் முக்தர்க்கும் நிரதிசயபோக்யமான திருவடிகளையுடையவனென்கை. இப்போது "அண்ணல்" என்று-இவ்வர்த்தைத்தமக்கு நிர்ஹேதுகமாக ப்ரகாசிப்பித்த உபகாரஸ்ம்ர்தியாலே என்னுதனே யென்கிறார். (அங்கையாழிசங்குதண்டு வில்லும்வாளுமேந்தினாய்) அத்திருவடிகளை அநுபவிக்கவிழிந்தார்க்கு விரோதிகளை யழியச்செய்யும் திவ்யாயுதங்களை எப்போது ஆர்க்கு என்வருகிறதோவென்று ஸர்வதாதரித்து நிற்குமவனே. தனக்குத்தானே ஆபரணமான திருக்கையிலே திருவாழி தொடக்கமான ஸ்ரீபஞ்சாயுதங்களை தரித்தவிதுவும் திருவடிகளோபாதி தமக்கு போக்யமாயிருக்கிறதாய்த்து. (சிங்கமாய தேவதேவ) அத்திவ்யாயுதங்கள் அஸத்ஸமமாம்படி வரங்கொண்ட ஹிரண்யனை, நகாயுதமான ஸிம்ஹமாயழியச்செய்த ஆச்ரித பக்ஷபாதத்தாலே நித்யஸூரிகளை யெழுதிக்கொண்டவனே. திவ்யமங்களவிக்ரஹத்தின் சுவடறியும் நித்யஸூரிகளுக்கிறே அவ்வடிவையும் அழியமாறிரக்ஷித்த ஆச்ரிதபக்ஷபாதத்தின் எல்லைதெரிவது. (தேனுலாவுமென்மலர்மங்கைமன்னிவாழுமார்ப) செவ்வியையும்மென்மையையுமுடைத்தான தாமரையில் பிறப்பாலும் பருவத்தாலும் நிரதிசய போக்யையான பிராட்டி நித்யவாஸம்பண்ணி யநுபவிக்கும் திருமார்பையுடையவனே. இப்போது, "அகலகில்லேன்" என்கிற ஸாமாந்யமன்றிக்கே ஹிரண்யனை யழியச்செய்த வீரத்தாலே, "[illegible]" "ஸர்த்தாரம்பரிஷஸ்வஜே" என்கிறபடியே இவ்வடிவிலே பிராட்டி அத்யாதரம்பண்ணினபடியைச் சொல்லுகிறது. இத்தால்- நித்யஸூரிகளளவுமன்றிக்கே தலைநீர்ப்பாட்டிலே அநுபவிக்கும் பிராட்டியும் இவ்வாச்ரித பக்ஷபாதத்துக்குத் தோற்றிருக்கும்படியைச்சொல்லிற்றாய்த்து. "என்னடியாரது செய்யார்" என்றிறே அவன்படியிருப்பது. (ஆழிமேனிமாயனே) கடல்போலே ச்ரமஹரமான திருமேனியையுடைய ஆச்சர்யபூதனே. ஹிரண்யனுக்கு அநபிபவநீயமான அவ்வடிவுதானே ஆச்ரிதர்க்கு ச்ரமஹரமானபடியைச்சொல்லுகிறது. ... ... ... (உ௪)

அ.—இருபத்தஞ்சாம்பாட்டு. அநந்யப்ரயோஜநனான ப்ரஹ்லாதனுடைய விரோதியைப்போக்கினபடியை அநுபாஷித்துக்கொண்டு, அவனுடையவளவன்றிக்கே ப்ரயோஜநாந்தரபரனான இந்த்ரனுக்காக அர்த்தியாயும் அவ்வளவும் புகுர நில்லாதேவிமுகரான ஸம்ஸாரிகளை ப்ரளயாபத்திலே திருவயிற்றிலே வைத்து ரக்ஷித்த இவ்வாபத்ஸகத்வத்தை அறியவல்லாராரென்கிறார்.

வரத்தினிற்சிரத்தைமிக்கவாளெயிற்றுமற்றவன்
உரத்தினிற்கரத்தைவைத்துகிர்த்தலத்தையூன்றினாய்
இரத்திநீயிதென்னபொய்யிரந்தமண்வயிற்றுளே
கரத்தியுன்கருத்தையாவர்காணவல்லர்கண்ணனே. (உரு)

ப-ரை.—வரத்தினில் - பர்ஹ்மா தனக்குக்கொடுத்தவரத்திலே, மிக்கசிரத்தை - மிகவும் விசுவாஸமுடையனாய், வாள் - வாள்போன்ற, எயிறு - பற்களையுடையனான, மற்றவன் -சத்ருவானஹிரண்யனுடைய, உரத்தினில்-மார்விலே, கரத்தைவைத்து - திருக்கைகளைவைத்து, உகிர்த்தலத்தை-திருவுகிராலே, ஊன்றினாய் - ஊன்றிக் கிழித்துப்போகட்டாய், நீ - வாமநாவதாரஞ்செய்தருளின நீ, தத்ஸந்தாநஜாதனான மஹாபலியிடத்தில்சென்று, இரத்தி - மூவடிமண்தாவென்று இரந்தாய்; இதென்னபொய்—; இரந்தமண - அர்த்தித்துப்பெற்ற பூமியென்று ப்ரளயத்திலே, வயிற்றுளே - திருவயிற்றிலேவைத்து, கரத்தி - ஒளித்துவைத்துரக்ஷித்த, கண்ணனே - க்ர்ஷ்ணனான, உன-உன்னுடைய, கருத்தை - நினைவை, யாவர்காணவல்லா - அறியவல்லாரா ரென்கிறார். (உரு)

வ்யா.—(வரத்தினில் சிரத்தைமிக்க) ப்ரஹ்லாதனுக்குத்தந்த வரத்திலே அத்யாதரத்தைப்பண்ணி, வரப்ரதனான ப்ரஹ்மாவுக்கு உத்பாதகனானவனோடே விரோதித்து, அவனாலே உத்பந்நனான ப்ரஹ்மா தனக்குத்தந்த வரத்திலேயிறே மிகக ஶ்ரத்தையைப்பண்ணிற்று. "ஸோऽயம் விஷ்ணு:" "சோயம்விஷ்ணு:" என்றுனிறே. தன்வரத்துக்குப்புறம்பான வடிவு கொள்ளவல்லையென்று உன்னை யறியாதே வரத்தையே விஶ்வஸித்திருந்தவன். (வாளெயிற்று) வாள்போலேயிருக்கிற எயிற்றையுடையவன். இத்தால் - ஹிரண்யனுடைய புஜபலத்தைச்சொல்லிற்று. வரபலத்துக்குப்புறம்பானவடிவுகொண்டாப்போலே புஜபலத்தை யழிக்க வல்ல ஸர்வஶக்தியென் றறிந்திலன். உன்னை யறியாதே தன் வரபலபுஜபலங்களை விஶ்வஸித்திருந்தமதிகேடன். (மற்றவன்) ஶத்ருவானவன். ஸம்பந்த மொத்திருக்க, "மற்றவன்" என்கிறது - ஆஶ்ரிதஶத்ருவே தனக்கு ஶத்ருவென்னும் நினைவாலே. (உரத்தினில) துர்மாம்ஸங் கிடந்த விடத்தை கொட்டமிடுவாரைப்போலே துர்மாநங்கிடந்தமார்விலே. (கரத்தை வைத்து) "அப்யேஷ ப்ருஷ்டே மம ஹஸ்தபத்மம் கரிஷ்யதி" "அப்யேஷப்ர்ஷ்டே மம ஹஸ்தபத்மம்கரிஷ்யதி" என்று அக்ரூராதிகளுக்கு ஜீவநஹேதுவாய், "அடிச்சியோந்தலைமிசைநீயணியாய்" என்று - ப்ரணயிநிக்கு போக்யமாயிருக்கும் திருக்கையை துஷ்ப்ரக்ர்தியான வவனுடைய திண்ணியமார்விலேவைத்து.

(உகிர்த்தலத்தையூன்றினாய்) வரபலத்துக்குப் புறம்பானவத ஸாதநமாய் அத்யந்தம் ஸுகரூபமான வுகிராலே அநாயாஸேநக் கொன்றாய்: தலம்-நிலமும், இதழும். (இரத்திநீ) ஹிரண்யனிற்கா ட்டில் தத்ஸந்தாநஜனான மஹாபலிபக்கலிலே ஔதார்யகுணமென்ப தொருகுணமுண்டாகையாலே அர்த்தித்வத்திலேயிழிந்தாய். (இரத் திநீ)ஸர்வஶக்தியாய் அவாப்த ஸமஸ்தகாமனான நீ* அலம்புரிந்தநெ டுந்தடக்கையாலே யிரப்பதே!. ஹிரண்யனுக்காக உடம்பை அழிய மாறினாய், ப்ரயோஜநாந்தர பரனான இந்த்ரனுக்காக உனக்குநிரூபக மான ஔதார்யத்தை அன்றழியமாறிற்று. (இத்தென்னபொய்) உ ன்னதல்லாத தொன்றை அர்த்தித்தாயாகிலிறே உன்னர்த்தித்வம் மெய்யாவது, தன்னதொன்றைத் தந்தானாகிலிறேமஹாபலி ஔதா ர்யம் மெய்யாவது. இதுபொய்யென்றதே "இத்தென்னபொய்" என் று – அர்த்தித்வபலமான த்ரைவிக்ரமாபதாநத்தைஶ்ருதி ஓதாநின் றது. "யத்ராம்புவிந்யஸ்ய" "யத்ராம்புவிந்யஸ்ய" என்று- ஔதார்யத் துக்கு பலமாகமஹாபலிக்கு இந்த்ரபதத்தைச் சொல்லாநின்றது. ஆக, ப்ரமாணங்களாலே பொய்யென்னவொண்ணாது, தன்னத்தை அவனதாக்கிக்கொண்டு யிரக்கையாலும், மஹாபலி அவனத்தைத் தன்னதாக்கிக் கொடுக்கையாலும்மெய்யென்னவொண்ணாது. ஆகை யாலே"இத்தென்னபொய்" என்கிறார். (இரந்தமண்வயிற்றுளேகரந் தி)அர்த்தித்துப்பெற்ற பூமியென்று ப்ரளயாபத்திலே ஆபத்தேஹே துவாகத்திருவயிற்றிலே ஒளித்துவைத்து ரக்ஷித்தது. (உன்கருத்தை யாவர்காணவல்லர்) உன்னினைவை யாவர்காணவல்லார். அநந்யப்ர யோஜநனான ப்ரஹ்லாதனோடு,ப்ரயோஜநாந்தரபரனான இந்த்ரனோ டு, விமுகரான ஸம்ஸாரிகளோடு வாசியற ரக்ஷிக்கிற உன்னினைவை ஜ்ஞாநாதிகரார்தான அறியவல்லார். (கண்ணனே)க்ருஷ்ணனாய் வந் தவதரித்து இடக்கையும் வலக்கையுமறியாத இடயரையும் பசுக்க ளையும் ரக்ஷித்து உன்னை யொழியச்செலலாதபடி பண்ணி, அவர்க ளுக்கு நியாமகனான நீயேயருளிச்செய்ய வேணுமென்றுகருத்து. ()

அ.—இருபத்தாறும்பாட்டு. ஸர்வநிர்வாஹகனானநீ ஸூரி போக்யமான வடிவை ஆஶ்ரிதார்த்தமாக தேவஸஜாதீயமாக்கியும் கோபஸஜாதீயமாக்கியும் அவதரித்துப்பண்ணின ஆஶ்சர்யங்களை ஆரறிய வல்லாரென்கிறார்.வாமநாவதாரத்தோடே க்ருஷ்ணாவதாரத் துக்கு ஒருவகையாலே ஸாம்யம் சொல்லலாயிருக்கையாலே இரண் டவதாரத்தையுஞ்சேர்த்தநுஸந்திக்கிறார்.

---

இருபத்தஞ்சாம்பாட்டு. "த்ரீணிபதாவிசக்ரமே" "த்ரீணிபதாவிசக்ர மே" என்கிற ச்ருதி ப்ரயோஜநாந்தர பரனான இந்த்ரனோடுவாசிய ற என்றபடி, (உரு)

ஆணினேடுபெண்ணுமாகியல்லவோடுநல்லவாய்
ஊனொடோசையூறுமாகியொன்றலாதமாயையாய்ப்
பூணிபேணுமாயனாகிப்பொய்யினேடுமெய்யுமாய்க்
காணிபேணுமாணியாய்க்கரந்துசென்றகள்வனே, (உசு)

ப-ரை.—ஆணினேடு பெண்ணுமாகி - ஸ்தரீபும் விபாகத்தாலே ஸ்ருஷ்டித்து அவற்றுச்கு நிர்வாஹகனுய், அல்லவோடு - நபும்ஸகபதார்த்தத்துக்கு நிர்வாஹகனுய், இந்தலிங்கத்ரய பதார்த்தங்களில், நல்லவாய - விலக்ஷணபதார்த்தங்களுக்கு நிர்வாஹகனுய், ஊனொடோசையூறுமாகி - ஐம்புலன்களுக்கும் அந்தராத்மாவாய், ஒன்றலாதமாயையாய் - பலவகையாய்பரிணமிக்கிற ப்ரக்ருதிதத்வத்துக்கு நிர்வாஹகனுய், இப்படி ஸங்கல்பத்தாலே ஸகலமும் நிர்வஹிக்கிறநீ, பூணிபேணும் - பசுக்களை ஆதரித்துப்போரும், ஆயனாகி - இடையனுய், பொய்யுமாய் - அநாச்ரிதரான துர்யோதநாதிகளுக்குப் பொய்யனுய், மெய்யுமாய் - ஆச்ரிதரான பாண்டவர்களுக்கு மெய்யனுய், காணிபேணும் - பூமியை நீரேற்றுவாங்கத்தக்க, மணியாய்- ப்ரஹ்மசாரியாய், கரந்துசென்ற-மறைந்துசென்ற, கள்வனே - கர்தரிமனே. (உசு)

வ்யா.—(ஆணினேடுபெண்ணுமாகி) ஜந்யஜநக பாவத்தாலே ஜகத்துவிஸ்ம்ர்தமாகவேணுமென்று ஸ்த்ரீபும் விபாகத்தாலே ஸ்ருஷ்டித்தும் அந்யோந்யம் ஸம்பந்தித்தும் ஸம்ஸர்க்கிப்பித்தும் இப்படி அந்தராத்மதயாநின்று நிர்வாஹகனுய். (அல்லவோடு) ஒன்றுக்கு முடலன்றிக்கேயிருக்கிற நபும்ஸகபதார்த்தத்துக்கு நிர்வாஹகனுய். (நல்லவாய்) இந்த லிங்கத்ரயவிஶிஷ்ட பதார்த்தங்களிலே விலக்ஷணபதார்த்தங்களுக்கு நிர்வாஹகனுய். வைலக்ஷண்யமாவது-புருஷார்த்த ருசியுண்டாகை. அவர்களுக்கு நிர்வாஹகனுகையாவது- "𑌦𑌦𑌾𑌮𑌿 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌯𑍋𑌗𑌂 𑌤𑌂" "ததாமிபுத்தியோகந்தம்" என்கிறபடியே புருஷார்த்தஸாதநபூதனுகை. (ஊனொடோசையூறுமாகி) புருஷார்த்த ருசியில்லாதார்க்கு போக்யமான சப்தாதிகளுக்கு சர்மாநுகூலமாக நியாமகனுய். ரஸரூபகந்தஸ்பர்ஶமான இவைமூன்றும் - அஞ்சுக்கும் உபலக்ஷணம. (ஒன்றலாதமாயையாய்) இவற்றினுள்ளே ஒன்றுக்கு காரணமானவளவன்றிக்கே, உக்தங்களோடு அநுக்தங்களோடு வாசியற ஸர்வமுமாய்க்கொண்டு பரிணமிக்கவல்ல ப்ரக்ருதி தத்வத்துக்கு நிர்வாஹகனுய். "𑌮𑌾𑌯𑌾𑌂 𑌤𑍁 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌤𑍍" "மாயாந்துப்ரக்ருதிம்வித்யாத்" எனனக்கடவதிறே. "மாயை" என்று- ஆஶ்சர்யவாசியாய், ஒன்றுக்கு நிர்வாஹகனுமளவன்றிக்கே ஸகலபதார்த்தங்களையும் சேதநனுடையகர்மாநுகூலமாகநிர்வஹிக்கவல்ல ஆஶ்சர்யத்தையுடையாயென்னவுமாம். (பூணிபேணுமாயனாகி) இப்படி ஸங்கல்பத்தாலே ஸகலமும் நிர்வஹிக்கிற நீ ஆச்ரிதபரித்ராணார்த்தமாக அஸாதாரண விக்ரஹத்தை கோபஸஜாதீயமாக்கிக்கொண்டவதரித்து உன்னைப்பேணுதே பசுக்களைப்பேணும் இடையனுகி. பூணி-பசு. (பொய்யினேடுமெய்யுமாய்) அவதரித்து ரக்ஷிக்கும்போது அநாஶ்ரிதரான துர்யோதநாதிகள்பக்கலிலே பொய்யையும், ஆஶ்ரிதரான பாண்டவர்கள்பக்கலிலே மெய்யையுமுடையையாய்.

(காணிபேணுமாணியாய்) மஹாபலியாலே அபஹ்ருதமாய் நோவுபடாதபடி பூமியைப் பேணித்தன்னைப்பேணுதே ப்ரஹ்மசாரியாய். (கரந்துசென்றகள்வனே) மறைத்துக்கொண்டு சென்ற க்ர்த்ரிமனே. மறைத்துக்கொண்டு செல்கையாவது - ஐஶ்வர்யமான வைபவம் தோற்றுமே பூமியை மஹாபலியதாக்கி அர்த்தியாய்ச்செல்லுகை. க்ர்த்ரிமனுகையாவது - சுகரன்வார்த்தை செவிப்படாதபடி அழகாலும் சீலத்தாலும் மஹாபலியை வஶீகரித்து சிறுகாலைக்காட்டிப் பெரியகாலாலே அளந்துகொள்ளுகை. (கரந்துசென்ற கள்வனே) "உன்னை யார்மதிக்கவல்லர்" என்று மேல்பாட்டோடே அந்வயம். ... ... .... ... (௨௬)

அ.—இருபத்தேழாம்பாட்டு. சேதநாசேதந விலக்ஷணமான உன்னுடைய அபரிச்சிந்நவைபவத்தை பரிச்சேதிக்கிலும் குணப்ரோிதனுய் பூமியை அளந்துகொண்ட வடிவை பரிச்சேதிக்கவல்லாராரொன்கிறுர்.

விண்கடந்தசோதியாய்! விளங்குஞானமூர்த்தியாய்!
பண்கடந்ததேசமேவுபாவநாசநாதனே!
எண்கடந்தயோகினேடிரந்துசென்றுமாணியாய்!
மண்கடந்தவண்ணநின்னையார்மதிக்கவல்லரே. (௨௭)

ப-உரை.—விண்-விபுவானமூலப்ரகர்தி, கடந்த-உனக்குள்ளேயாம்படியான ஸ்வரூபத்தையுடைய, சோதியாய் - ஸ்வயம்ப்ரகாசவஸ்துவாய், விளங்கு-ப்ரகாசியாநின்றுள்ள, ஞானமூர்த்தியாய-ஜ்ஞாநசப்தவாச்யமானஆத்மஸ்வரூபத்தைசரீரமாகவுடையனுய், பண்கடந்த-வேதத்தாலேபரிச்சேதிக்கவொண்ணுத, தேசமேவு - தேஜஸ்ஸையேஸ்வரூபமாகவுடையனுய், பாவநாசநாதனே - ஹேயப்ரத்யநீகனுனஸர்வேச்வரனே, எண்கடந்த - அஸங்க்யாதமான, யோகினோடு - கல்யாணகுணங்களோடேகூட, மாணியாய்இரந்துசென்று-வாமநவேஷத்தைக்கொண்டு அர்த்தியாய்ச்சென்று, மண்கடந்தவண்ணம்நின்னை-பூமியையளந்துகொண்ட ப்ரகாரத்தையுடையவுன்னை, யாரமதிக்கவல்லர்-பரிச்சேதிக்கவல்லாரார். (௨௭)

வ்யா.—(விண்கடந்தசோதியாய்) விபுவான மூலப்ரக்ர்தி உனக்குள்ளே யாம்படியான ஸ்வரூபவைபவத்தை யுடைய ஸ்வயம்ப்ரகாஶவஸ்துவாய். "சுரரறிவருநிலைவிண்" என்று - மூலப்ரக்ர்தியை "விண்"என்கிற ஶப்தத்தாலே சொல்லிற்றிறே. இதுதனக்கடி கார்க்ய வித்யையிலே, "ஆகாஶ ஓதஞ்சப்ரோதஞ்ச" "ஆகாஶ ஓதஞ்சப்ரோதஞ்ச" என்று முலப்ரக்ர்தியை ஆகாஶ ஶப்தத்தாலே சொல்லிற்று. (விளங்குஞாநமூர்த்தியாய்) ஸ்வயம்ப்ரகாசமாய், ஜ்ஞாநகுணஸாரமாகையாலே ஜ்ஞாந ஶப்தவாச்யமான ஆத்மஸ்வரூபத்தை ஶரீரமாகவுடையையாய். ஆக இரண்டாலும், "अणोरणीयान् महतो महीयान्" "அணோரணீயாந்மஹதோமஹீயாந்" என்கிறபடியே விபுத்வ ஸௌக்ஷ்மதவங்களைச் சொல்லிற்று.

---

இருபத்தாறும்பாட்டு. காச்யப ப்ரஜாபதி தேவகோடியிலே அந்தர்ப்பவிக்கையாலே வாமநனையும் "தேவன்" என்கிறது. (௨௬)

(பண்கடந்ததேசமேவு பாவநாசநாதனே) வேதத்தாலே பரிச்சேதிக்கவொண்ணாத தேஜஸ்ஸையே ஸ்வரூபமாக வுடையையாய், ஹேயப்ரத்யநீகனான ஸர்வேஶ்வரனே. வேதம் ஸ்வரப்ரதாநமாகையாலே தத்வாசிசப்தத்தாலே வேதத்தைச் சொல்லுகிறது. இது தான் சேதநாசேதநங்களை வ்யாபித்து நிற்கச்செய்தேயும் தத்கத தோஷைரஸம்ஸ்ப்ர்ஷ்டனாகையாலும் அசித்ஸம்ஸர்க்கத்தாலே சேதநனுக்கு வந்த தோஷத்தைப் போக்கவல்லனாகையாலும் ஹேயப்ரத்யநீகனென்கிறது.

(எண்கடந்தயோகினோடு) அஸங்க்யாதமான கல்யாணகுணங்களோடேகூட. யோகு - யோகம். அதாகிறது - கல்யாணகுணயோகம். "పశ్యమేయోగమైశ్వరమ్" "பஶ்யமேயோக மைஶ்வரம்" என்று-யோகஶப்தத்தாலேகுணயோகத்தைச்சொல்லிற்றிறே. (இரந்துசென்றுமாணியாய்) இரப்பிலே தகணேறினவனென்றுதோற்றவாமநவேஷத்தைக்கொண்டு அர்த்தியாய்ச்சென்று. (மண்கடந்தவண்ணம்) பூமியையளந்துகொண்ட ப்ரகாரத்தை. அதாகிறது- "இந்த்ரனுக்கு மஹாபலியாலே அபஹ்ர்தமான ராஜ்யத்தை வாங்கிக்கொடுக்க" என்கிற வ்யாஜத்தாலே வஸிஷ்டசண்டாள விபாகமற சதுர்த்தஶபுவநாந்தர்க்கதமான சேதநர் தலைகளிலும் திருவடிகளை வைக்கை. (நின்னை) சேதநாசேதநவிலக்ஷணமாய், வேதத்தாலும் பரிச்சேதிக்கவொண்ணாத ஸ்வரூபவைலக்ஷண்யவைபவத்தையுடையையாய், அதுக்குமேலே குணப்ரேரிதனாய்க்கொண்டு பூமியையளந்துகொண்டவுன்னை. (ஆர்மதிக்கவல்லரோ)பரிச்சேதிக்கவல்லாரார். வேதங்களாலே பரிச்சேதிக்கலாமோ, ஜ்ஞாநாதிகரான வைதிகரால் தான் பரிச்சேதிக்கலாமோ, அம்மேன்மையை பரிச்சேதிக்கவோ, அந்நீர்மையை பரிச்சேதிக்கவோ, எத்தை யார் பரிச்சேதிக்கவல்லார்.

அதவா; (விண்கடந்தசோதியாய்) பரமபதத்துக்கவ்வருகாய் ஸ்வயம்ப்ரகாஶமானதிவ்யாத்மஸ்வரூபத்தையுடையையாய்.இத்தால்-த்ரிபாத்விபூதியும்தனக்குள்ளே யாம்படியான ஸ்வரூபவைபவத்தைச்சொல்லுகிறது. (விளங்குஞானமூர்த்தியாய்) ஜ்ஞாநம் விளங்குகிறமூர்த்தியையுடையையாய். திவ்யாத்மஸ்வரூபத்தை ஆஶ்ரயமாகவுடைய ஜ்ஞாநத்துக்குப்ரகாஶகமான திவ்யவிக்ரஹத்தை யுடையையாய். இந்த ஜ்ஞாநம் ஷட்குணங்களுக்கு முபலக்ஷணம். "షాడ్గుణ్యవిగ్రహందేవమ్" "ஷாட்குண்யவிக்ரஹம்தேவம்" என்னக்கடவதிறே. (பண்கடந்ததேசமேவுபாவநாசநாதனே) ச்ருதியால் பரிச்சேதிக்கவொண்ணாத பரமபதத்திலே நித்யவாஸம்பண்ணுமவனாய், ஸம்ஸாரிகளுடைய தோஷத்தைப்போக்க வல்ல ஹேயப்ரத்ய நீகத்வத்தையுடைய ஸர்வேஶ்வரனே.

(எண்கடந்தயோகினோடு) "பராஸ்ய ஶக்திர் விவிதைவ ஶ்ரூயதே" "பராஸ்யஶக்திர் விவிதைவஶ்ரூயதே" என்கிறபடியே அபரிச்சிந்நமாய் அஸங்க்யாதமான ஆஶ்சர்ய சக்தியோகத்தை யுடையையாய்க்கொண்டு. (மாணியாய் - இரந்துசென்று) அதீந்த்ரியமாய் அபரிச்சிந்நமான திவ்யமங்கள விக்ரஹத்தை பரிச்சிந்நமாக்கி, மஹாபலியுடைய சக்ஷுர்விஷயமாக்கி அர்த்தியாய்ச்சென்று.(மண்கடந்தவண்ணம்) மூன்றடியை அர்த்தித்து இரண்டடியாலே ஸகலலோகங்களையும் அளந்துகொள்ளுகையும், சிறுக்காலைக்காட்டிப் பெரியகாலாலே அளந்துகொள்ளுகையுமாகிற இப்ரகாரத்தை. (நின்னை) அபரிச்சிந்நமான ஸ்வரூபவைபவத்தையுடையையாய், அந்த ஸ்வரூபத்துக்கும் ஸ்வரூப ஆஶ்ரயமான குணங்களுக்கும் ப்ரகாஶகமான திவ்யவிக்ரஹயுகதனாய், வேதத்தாலும் பரிச்சேதிக்கவொண்ணாத பரமபதத்தை வாஸஸ்தாநமாகவுடையையாய், உன்னுடைய ஆஶ்சர்யஶக்திப்ரேரிக்க, அத்தாலே ப்பேரிதனாய்வந்து பூமியையளந்துகொண்ட வுன்னை. (ஆர்மதிக்கவல்லரே) இவற்றிலே யொன்றை ஒருத்தராலே பரிச்சேதிக்கப்போமோ. (௨எ)

அ.—இருபத்தெட்டாம்பாட்டு. ஸங்கல்பலேஶத்தாலே அண்டகாரணமான ஜலஸ்ருஷ்டிமுதலான ஸகலஸ்ருஷ்டியையும் பண்ணக்கடவநீ, ஸ்ருஷ்டமான ஜகத்திலே ஆஶ்ரிதரக்ஷணார்த்தமாக உன்னையழியமாறி அநேகாவதாரங்களைப்பண்ணியும், ஆச்ரிதவிரோதிகளான துர்வர்க்கத்தை திவ்யாயுதங்களாலே கைதொட்டு அழிக்கையுமாகிற இவ்வாஶ்சர்யங்களை ஒருவருமறியவல்லாரில்லையென்கிறார். "ஒருத்தரும் நினைது தன்மையின்னதென்னவல்லரோ" என்கிற மேலிற்பாட்டில் க்ரியை இதுக்கும் க்ரியை.

புடைத்தபாரிடந்தளந்ததுண்டுமிழ்ந்துபௌவநீர்
படைத்தடைத்ததிற்கிடந்துமுன்கடைந்தபெற்றியோய!
மிடைத்தமாலிமாலிமான்விலங்குகாலனூர்புகப்
படைக்கலம்விடுத்தபல்படைத்தடக்கைமாயனே. (௨அ)

பதா.—பௌவநீர் - அண்டகாரணமான ஏகார்ணவத்தை, படைத்த - ஸ்ருஷ்டித்து, பார் - ப்ரளயார்ணவத்திலே அந்தர்ப்பூதையானபூமியை இடந்து-வராஹமாய்அண்டபித்தியிலேபுக்கு இடந்தெடுத்து, மஹாபலியாலே அபஹ்ருதமானபூமியை, அளந்து - வாமநாவதாரஞ்செய்தருளி எல்லைநடந்துமீட்டு, நைமித்திகப்ரளயத்திலேவடதளசாயியாய், அது - அந்தலோகத்தை, உண்டு-தன்திருவயிற்றிலேவைத்து, உமிழ்ந்து-பின்புவெளிநாடுகாணப்புறப்படவிட்டு, பௌவநீர்-அண்டாநதர்வர்த்திகளானஸமுத்ரங்களிலேஒருஸமுத்ரத்தை, வருணனைச் சரணம்புக்கு, படை - படைகளைத்திரட்டி, தடைத்து-அணைகட்டி, முன-ப்ரஹ்மாதிகள் ஆர்த்தரானதசையில்கிட்டி உதவுகைக்காக, அதில் - திருப்பாற்கடலிலே, கிடந்து-கண்வளர்ந்தருளி, தேவர்கள், இழந்தபொருள்களை அவர்களுக்குக் கொடுக்கைக்கா, கடைந்த - அக்கடலைக்கடைநதருளின, பெற்றியோய - ஸ்வபாவத்தையுடையவனே, மிடைத்த - கோபித்துவநத, மாலி - மாலியும், மான் -

மிநிக்சனுனை, மாலிவிலங்கு - ஸுமாலியென்னும்ம்ர்சமும், காலனூர்புக - யம புரசதேபோம்படிக்கீடாக, படைக்கலம்விடுத்த - ஆயுதத்தையேவினவனாய். பினனும்விரோதிநிரஸநத்துக்காக, பல்படை - அநேக ஆயுதங்களைதரித்த, தடம் - விசாலமான, கை-திருக்கைகளையுடைய, மாயனே - ஆச்சர்யபூதனே என்று ஈடுபடுகிறார். (உஅ)

வ்யா.—(படைத்தபாரிடந்து)"பௌவநீர்படைத்து-பாரிடந்து" என்று அந்வயமாகக்கடவது. "ஸ்ருஷ்டவ" "அபஏவ ஸஸர்ஜாதௌ" என்கிறபடியே-அண்டகாரணமான ஏகார்ணவத்தை ஸங்கல்பலேசத்தாலே ஸ்ர்ஷ்டித்து, ஜகத்கார்யமான அண்டத்தையும் அண்டாதிபதியான ப்ரஹ்மாவையும் ஸ்ர்ஷ்டித்து, ப்ரஹ்மாவாலே ஸ்ர்ஷ்டமான ப்ரளயார்ணவத்திலே அந்தர்ப்பூதையான பூமியை ஸூரிபோகயமான திவ்யவிக்ரஹத்தை வராஹஸஜாதீயமாக்கி அண்டபித்தியிலே புக்கு இடந்தெடுத்து. இது ஸங்கல்பத்தாலேசெய்யமுடியாததொன்றன்றே, "ஸம்ஸாரப்ரளயாபத்தினின்றும் எடுப்பானிவனே!" என்று ஆஶ்ரிதர்விச்வஸிக்கைக்காகவிறே. (அளந்து) அதுக்குமேலே, மஹாபலியாலே அபஹ்ர்தமான பூமியை, ஸ்ரீவாமநனாய் எல்லை நடந்து மீட்டுக்கொண்டு. இதுவும் தன்னுடைமைபெறுகைக்குத் தானே அர்த்தியாய் வருமவனென்று ஆஶ்ரிதர்விஶ்வஸிக்கைக்காக. (அதுண்டுமிழ்ந்து) நைமித்திக ப்ரளயம்வர வடதளஶாயியாய், தன்னுடைய சிறியவயிற்றிலே த்ரிலோகத்தையும் வைத்து ரக்ஷித்து, உள்ளேயிருந்து நோவுபடாமல் அவற்றை உமிழ்ந்து. இதுவும் ஸங்கல்பத்தாலே செய்யலாயிருக்க அப்படிசெய்ததும் ஸர்வசக்தியென்றும், உருவழிந்தபதார்த்தங்களை உண்டாக்குமவனென்றும் ஆஶ்ரிதர்விஶ்வஸிக்கைக்காக. "பௌவநீர் படைத்தடைத்து" என்று இங்கேயும் அந்வயிக்கக்கடவது. அண்டகாரணமான ஏகார்ணவத்தை ஸங்கல்பலேசத்தாலே ஸ்ர்ஷ்டித்த நீ அண்டாந்தர்வர்த்திகளான ஸமுத்ரங்களிலே ஒருஸமுத்ரத்தை, வருணனைச்சரணம்புக்குபடைதிரட்டியும் அடைத்த இதுவும் ப்ரணயினியுடைய விஶ்லேஷத்தில் தேவரீருடைய ஆற்றாமையை ப்ரகாஶிப்பித்த வித்தனையிறே. (முன் அதில்கிடந்து) ப்ரஹ்மாதிகள் ஆர்த்தரானதசையிலே தூரஸ்தராகவொண்ணாது என்றும், அபிமுகீகரித்தார்க்கு அவதரித்து சுபாசரயமாகைக்கும திருப்பாற் கடலிலேகண்வளர்ந்தருளி.

---

இருபத்தெட்டாம்பாட்டு. பௌவநீருக்கு கீழ்மேலத்திலே அர்த்தமாக்கி, மேலுக்கருளிச் செய்கிறார் (ஸ்ருஷ்ட - அப ஏவ இத்யாதி) (முன்னதில் - கிடந்து) இடந்ததுமுதலான வ்யாபாரங்களுக்குமுன்னே திருப்பாற்கடலிலே கிடந்ததென்றபடி. ()

" ஜ்யோதீம்ஷிவிஷ்ணு: " " ஜ்யோதீம்ஷிவிஷ்ணு: " என்கிறபடியே ஸர்வர்க்கும் ஸந்நிஹிதரானதேவரீர் இப்படி செய்தருளிற்று ஆச்ரிதரக்ஷணத்திலே ஸத்யோத்யுக்தரென்று தோற்றுகைக்காக விறே. (கடைந்தபெற்றியோய்) தூர்வாஸ சாபத்தாலே தேவர்களிழந்த பதார்த்தங்களடங்கக் கடலிலே யுண்டாக்கிக் கொடுக்கைக்காக அக்கடலைக்கடைந்த மஹாப்ரபாவத்தை யுடையவனே "பெற்றி" என்று - ஸ்வபாவம். இதுவும் ஆச்ரிதருடைய இழவுகளைத் தானேவ்யாப்ரித்துத்தீர்க்குமென்று தோற்றுகைக்காக.

(மிடைத்தமாலி) கோபித்தமாலி. (மாலிமான்விலங்கு) பெருமிடுக்கனான ஸுமாலியான திர்யக்கு. திர்யக்ப்ரவர்த்தனான ஸுமாலியென்னவுமாம். (காலனூர்புகப் படைக்கலம்விடுத்த) அவர்களையும் அப்புறத்திலே புகும்படி ஆயுதத்தை யேவினவன். இத்தால் - ஆச்ரித விரோதிகளை அழியச்செய்யுமிடத்தில் ஸங்கல்பத்தாலன்றிக்கே கைதொட்டு ஆயுதத்தாலே அழிக்குமவனென்கிறது. (பலபடைத்தடக்கை மாயனே) பின்பு விரோதி நிரஸநத்துக்கீடான அநேக ஆயுதங்களை யுடைத்தாய், அவ்வாயுதங்களுக்கு ஸத்ருசமான சுற்றுடைத்தான திருக்கையையுடைய ஆஸ்சர்யபூதனே. ... (உஅ)

அ.—இருபத்தொன்பதாம்பாட்டு. கீழ்ப்பாட்டில் "மநஸைவஜகத்ஸ்ருஷ்டிம்" "மநஸைவஜகத்ஸ்ர்ஷ்டிம்" என்கிறபடியே - ஸங்கல்பலேஶத்தாலே ஜகத்ஸ்ர்ஷ்டி ஸம்ஹாரங்களைப் பண்ணவல்லவன், ஆச்ரிதாநுக்ரஹத்தாலே எளியகாரியங்களுக்கு அநேகவிக்ரஹபரிக்ரஹங்களைப் பண்ணி ரக்ஷிக்குமென்கிறது; இதில் - இவ்வநுக்ரஹத்துக்கு ஹேது ஸர்வாதிகத்வத்தால்வந்த பூர்த்தியும், ச்ரிய:பதித்வத்தால்வந்த நீர்மையும், அவர்ஜநீயமானஸம்பந்தமு மென்றும், அநுக்ரஹகார்யம் வ்யூஹவிபவார்ச்யவதாரங்களென்றும் சொல்லி, இப்படிப்பட்ட வநுக்ரஹம் ஏவம்விதமென்று பரிச்சேதிக்கவொண்ணாதென்கிறார்.

பரத்திலும்பரத்தையாகிபௌவநீரணைக்கிடந்
துரத்திலுமொருத்திதன்னைவைத்துகந்ததன்றியும்
நரத்திலும்பிறத்திநாதஞானமூர்த்தியாயினாய்
ஒருத்தரும்நினைத்துதன்மையின்னதென்னவல்லரோ. (உகூ)

ப-ரை.—பரத்திலும் - த்ரிவிதாத்மவர்க்கத்துக்கும், பரத்தையாகி - மேலானவை லக்ஷண்யத்தையுடையையாய், ஒருத்திதன்னை - அத்விதீயையான பெரியபிராட்டியாரை, வைத்து - பிரியாமல்வைத்து, உகந்து - ஸம்ச்லேஷ ரஸங்களையநுபவிக்கிறநீ, ஆச்ரிதரக்ஷணத்துக்காக அநிருத்தரூபியாய்க்கொண்டு, பௌவம்-

"ஜ்யோதீம்ஷிவிஷ்ணு:" "ஜ்யோதீம்ஷிவிஷ்ணு:" என்று ஸர்வாந்தர்யாமித்வம் சொல்லுகையாலே ஸர்வர்க்கும் ஸந்நிஹிதனென்கிறது, மாலிமானை ராக்ஷஸனை, க்ஷத்ரனுகையாலே விலங்கென்னுதல்; பசுவர்த்தியாலே விலங்கென்னுதல். (உஅ)

க்ஷீராப்தியிலே, நீர் அணை - நீரோபடுக்கையாக, கிடந்து - கண்வளர்ந்தருளி, சேதநர் விஷயத்தில் செய்த அநுக்ரஹம்பர்யவஸியாமையாலே, **அன்றியும்**- அதுக்குமேலே, நரத்திலும் - மநுஷ்யயோநியிலும், பிறந்தி-ராமக்ருஷ்ணதிரு மேனிவந்தவதரித்தவனாய், நாத-ஸகல ஆத்மாக்களுக்கும்நாதனாய, ஞானமூர்த்தியாயினாய் - ஜ்ஞாநஸ்வரூபனானவனே!, ஒருத்தரும-வேதவைதிகர்களில் ஒருவரும், நின்னுதன்மை - உனஅநுக்ரஹத்தினெல்லையை, இன்னதென்னவல்லரோ-ஏவம்விதமென்று பரிச்சேதிக்கவல்லரோ. (உகூ)

வ்யா.—(பரத்திலும் பரத்தையாதி) "పరాత్పరాణాంపరమః" "பராத்பராணாம்பரம:" என்கிறபடியே - த்ரிவிதாத்ம வர்க்கத்துக்கு மவ்வருகான ஸ்வரூபவைலக்ஷண்யத்தையுடையையாய். அநந்தரம் "உரத்திலும் ஒருத்திதன்னைவைத்துகந்து" என்கிறவிது அந்விதமாகக் கடவது. கீழ்ச்சொன்ன ஸ்வரூப வைலக்ஷண்யத்துக்கும் அவ்வருகான உத்கர்ஷத்துக்கும் ஹேதுவாயிறே ச்ரிய:பதித்வமிருப்பது. (உரத்திலும்) சப்தத்தாலே - ஸ்வரூபாந்தர்ப்பாவத்தையும் ஸமுச்சயிக்கிறது. அதுக்குமேலே, மஹிஷீவர்க்கத்தையும் வ்யாவர்த்திக்கிறது. (ஒருத்தி) அத்விதீயை. "வடிவிணையில்லாமலர் மகள்." அதாகிறது - த்ரிவிதாத்மவர்க்கத்துக்கும் ஸ்வாமிநியாய் ஸர்வேச்வரனுக்கு ப்ரதாந மஹிஷியாயிருக்கை. (தன்னைவைத்து) "அகலகில்லேனிறையும்" என்று - மேல்விழக்கடவ விவள்தன்னை, தான் "இறையுமகலகில்லேன்" என்று திருமார்விலேவைத்து.(உகந்து)* துல்யசீலவயோவ்ருத்தையாயிருந்துள்ளவளோடே ஸம்ச்லேஷரஸங்களை யநுபவிக்கிற நீ. (பௌவநீரணைக்கிடந்து) ரக்ஷ்யவர்க்கத்தினுடையரக்ஷணம், பிராட்டிபக்கல்ப்ரீதிக்குப்போக்குவீடாயிறே யிருப்பது. ஆர்த்தரக்ஷணத்துக்காக அநிருத்தரூபியாய்க் கொண்டு க்ஷீராப்தியிலே நீரோபடுக்கையாகக் கண் வளர்ந்தருளி. "తాపార్తోజలశాయినమ్" "தாபார்த்தோஜலஶாயிநம்" என்கிறபடியே-தாபார்த்தர்க்குப் புகலாய்க்கொண்டு அபேக்ஷா நிரபேக்ஷமாகக் கண்வளர்ந்தருளுகிற நீர்மையைச் சொல்லுகிறது. இது - ஸங்கர்ஷணப்ரத்யும்ந வ்யூகங்களுக்கும் உபலக்ஷணம்.

---

இருபத்தொன்பதாம்பாட்டு. "பரத்தையாதி"என்றது, "பரத்தையாகி" என்றுபாடமாகவேணும்; கண்டுகொள்வது. சேஷசாயித்வம் உத்கர்ஷஹேது வாயிருக்க, "உரத்திலும" என்கிற இப்பதத்தைநடுவே வைக்கவேண்டுவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (கீழ்ச்சொன்னஸ்வரூபேத்யாதி.) மஹிஷ்யந்தரத்துக்கு மார்பிலே அந்வயமில்லாவிட்டவாறே அவர்களையும் வ்யாவர்த்திக்கிறது. ரக்ஷணத்துக்காகக் கிடந்தால் ஸம்ச்லேஷத்துக்குக் கொத்தைவாராதோவென்ன; அருளிச்செய்கிறார் (ரக்ஷ்யவர்க்கத்தினித்யாதி.)

(அதன்றியும்) ஸம்ஸாரத்தில் அசித்கல்பமாய்க்கிடந்தசேதநர்க்கு ரூபநாமங்களைக்கொடுத்தும், ஶாஸ்த்ரப்ரதாநாதிகளைப்பண்ணியும், ப்ரஹ்மாதிகளுடைய ஆர்த்திகளைப்பரிஹரித்தும், இப்படிரக்ஷித்துப்போந்த வ்யூஹாவதாரங்களாலே தேவரீருடையஅநுக்ரஹம் பர்யவஸியாமையாலே, அதுக்குமேலே. (நரத்திலும் பிறத்தி) "ஸர்வகந்த:" "ஸர்வகந்த:" என்கிறநீ ப்ரஹ்மாதிகளுக்கு கூடத்ஸாவிஷயமான மநுஷ்யயோநிகளிலே தத்ஸஜாதீயனாய்க் கொண்டு ராமக்ருஷ்ணதிருபத்தாலேவநதவதரித்து. இது, தேவயோநியிலும்திர்யக்யோநியிலுமுண்டான அவதாரங்களுக்கு முபலக்ஷணம். "ஸுரநரதிர்யக்ஸாமவதீர்ணா" "ஸுரநரதிர்யக்ஸாமவதீரந்" என்னக்கடவதிறே. (நாத) இப்படி விஸத்ர்ஶமானஹேயயோநியிலே வந்து அவதரிக்க வேண்டுகிறது இவற்றையுடையனுகையாலேயென்கை. (ஞானமூர்த்தியாயினுய்) ஜ்ஞாநஸ்வரூபனுயினுய். இப்போது ஜ்ஞாநாதிக்யம் சொல்லுகிறது ரக்ஷிநனைக்கு விரகறியுமவனென்கைக்காக. ப்ராப்தியுண்டானாலும் விரகறியாதவன்று ரக்ஷிக்கப்போகாதிறே. சாஸ்த்ரப்ரதாநமென்ன, ஆசார்யோபதேசமென்ன, அழகென்ன, சீலமென்ன, ஏவமாதிகளாலே ஆச்ரயாநுகூலமாகருசியைப் பிறப்பிக்க வேண்டும்படியிறே சேதநனுடைய ப்ரக்ருதிபேதமிருப்பது. (ஒருத்தரும் நினுது தன்மையின்னதென்னவல்லரோ) வேதங்களென்ன, ஜ்ஞாநாதிகரான வைதிகரென்ன, இவர்களொருத்தரும் உன்னுடைய அநுக்ரஹத்தினுடைய எல்லையை ஏவம்விதமென்று பரிச்சேதிக்கவல்லரோ. தன்னையறியமாறி பகவத்ஸம்பந்தத்தை யறுத்துக்கொள்ளும் ஸம்ஸாரிகளை, தன்னை யறியமாறி ரக்ஷிக்கிறஅநுக்ரஹத்தை எவரறியவல்லார். ... ... ... ... (உகூ)

அ.—முப்பதாம்பாட்டு. கீழ்ப்பாட்டிலே-"நரத்திலும்பிறத்தி" என்று-மநுஷ்யயோநியில அவதாரங்கள் ப்ரஸ்துதமாகையாலும், அதுக்குக்கீழ்ப்பாட்டிலே, "அருண்டுமீழ்ந்து" என்று - வடதளசாயியவதாரம ப்ரஸ்துத மாகையாலும, வடதளஶாயியுடைய மௌக்த்யத்திலும் ஶக்தியிலும், சக்ரவர்த்திதிருமகனுடைய வவதாரத்தின மெய்ப்பாட்டால் வந்த மௌக்த்யத்திலும் வீரஸ்ரீயிலு மீடுபடுகிறார்.

வானகமும்மண்ணகமும்வெற்புமேழ்கடல்களும்
போனகஞ்செயதாலிலைத்துயின்றபுண்டரீகனே !
தேனகஞ்செய்தண்ணறுமலர்த்துழாய்நன்மாலையாய்
கூனகம்புகத்தெறித்தகொற்றவில்லியல்லையே. (கூ0)

---

விரகறியவேண்டுவா னென்னென்ன; ருசிபேதத்தாலேயென்கிறார் (ஶாஸ்த்ரப்ரதாநமித்யாதி.) நினது - உன்னுடைய. (உகூ)

ப-ரை.—வானகமும் - ஸ்வர்க்கலோகத்தையும், மண்ணகமும்-பூலோகத்தையும்-வெற்பும் - அந்த பூமிக்கு ஆதாரமான ஸப்தகுலபர்வதங்களையும், ஏழ்கடல்களும் - ஸப்தஸமுத்ரங்களையும், போனகஞ்செய்த - அமுதுசெய்தருளி, ஆலிலை-ஓராலந்தளிரிலே, துயின்ற-கண்வளாந்தருளினவனுடைய, புண்டரீகனே-தாமரைமலரையொத்தஅவயவங்களையுடையையாய், ஊரெல்லாம், தேன்அகம் செய-வண்டுகள நெருங்கியிருப்பதாய், தண் - குளிர்ந்திருந்துள்ள, நல் - விலக்ஷணமான, மாலையாய்-திருமாலையையுடையவனே, கூன்-கூனியுடையகூன், அகம்புக-உள்ளேயடங்கும்படி, தெறித்த-சுணமுவில்லைத்தெறித்தவனுய்,சொற்றவில்லியல்லையே - ஜயப்ரதமானவில்லையுடையவனல்லையோ! என்று ஈடுபடுகிறார், (௩0)

வ்யா.—(வானகமும்மண்ணகமும்) ஸ்வர்க்கவாஸிகளான இந்த்ராதிதேவர்களும் அவர்களுக்கு போக்ய போகோபகரண போகஸ்தாநமான ஸ்வர்க்கந்தானும், பூமியிலுள்ளமநுஷ்யாதிகளும் அவர்களுக்கு வாஸஸ்தாநமான பூமியும். "[Grantha]" "மஞ்சாக்ரோசந்தி" என்கிறபடியே தேசவாசிசப்தத்தாலே - தேசிகளையும் சொல்லுகிறது; ப்ரளயத்தில் ஆபந்நரானார்தேசிகராகையாலே. இத்தால் - பூமியிலுள்ளார்க்கு ஆராத்யராய் அவர்களுக்கு அபிமத பலப்ரதருமானஇந்த்ராதிகளோடுஆராதகரான மநுஷ்யாதிகளோடு வாசியறப்ரளயாபத்தில் வந்தால் எல்லாருமொக்க ஈஶ்வரைகரக்ஷ்ய பூதரென்கிறது. (வெற்பும்) அந்தபூமிக்காதாரமாயிருந்துள்ளஸப்தகுலபர்வதங்களும். இத்தால் - ஆதாரமான குலபர்வதங்களோடு ஆதேயமான பூமியோடுவாசியற தத்காலத்தில் ஈஶ்வரனே ஆதாரமென்கை. "வெற்பு" என்று - ஸ்தாவர ஜாதிக்கு முபலக்ஷணம். (ஏழ்கடல்களும்) த்வீபங்களுக்கு பேதகமான ஸப்த ஸமுத்ரங்களும். அத்தாலே - ஜலவாஸிஸத்வங்களைம் சொல்லுகிறது. ஆக, ஆராத்யரான இந்த்ராதிகளோடு, ஆராதகரான மநுஷ்யர்களோடு, தாரகங்களான பர்வதங்களோடு, தார்யையான பூமியோடு, ஸமுத்ரங்களோடு, ஜலசரஸத்வங்களோடு வாசியற ஸர்வேஶ்வரனேரக்ஷகனென்றதாய்த்து. "போனகஞ்செய்து" என்றது - ரக்ஷகனுக்கு ரக்ஷணதர்மம் பசியர்க்குச் சோறுபோலே அபிமதமாயிருக்குமென்கை. "[Grantha]" "[Grantha]" "யஸ்யப்ரஹ்மசக்ஷத்ரஞ் சோபே பவதஓதநம்," "அத்தாசராசரக்ரஹணாத்." (ஆலிலைத்துயின்ற) அவ்வடிவுக்களவாய் தன்ஸௌகுமார்யத்துக்குச் சேர்ந்த ஆலந்தளிரிலே கண் வளர்ந்தருளின. (புண்டரீகனே) புண்டரீகாவயவனே. "செங்கனிவாய்ச் செங்கமலம் கண்பாதங்கைசமலம்" என்கிறபடியே-வ்யா வயவங்கள் அப்போதலர்ந்த செந்தாமரைகள்போலே யிருக்கையாலே புண்டரீக சப்தவாச்யனென்கிறது. த்ரைலோக்ய ரக்ஷணத்தால் வந்த ப்ரீதி திருவடிவிலே தோற்றி யிருக்கிறபடி.

(தேனகஞ்செய்) ஊரெல்லாம் வண்டுகளாலே மிடைந் திருக்குமென்னுதல்; மதுவாலே பூர்ணமாயிருக்குமென்னுதல். (தண்ணறுமலர்த்துழாய்) ச்ரமஹரமாய் பரிமளிதமாய்ச் செவ் வியையுடைத்தான திருத்துழாய். (நன்மாலையாய்) அவயவ ஶோபையிற்காட்டில்ஆகர்ஷகமாயிருக்கும்மாலையென்னுதல்; ரக்ஷ ணத்துக்கிட்ட தனிமாலை யாகையாலே விலக்ஷணமென்றுதல். ஆக, ஸத்தாப்ரயுக்தமான சக்த்யாதிசயத்தையும், அவயவசோ பையையும், அலங்கார சோபையையும் அநுபவிக்கிறார். (கூன் அகம்புகததெறித்த) கூனியுடைய கூன் உள்ளே யடங்கும்படி யாகச் சுண்டுவில்லைத் தெறித்த. இத்தால் - அவதாரத்தில் மெய்ப் பாட்டால்வந்த மௌக்த்யமும் ரக்ஷகமாயிருக்குமென்கை. ரக்ஷ கவஸ்துவாகவே அதிலுள்ளதெல்லாம் ரக்ஷகமாயிறேயிருப்பது. (கொற்றவில்லியல்லையே) வில்பிடித்தபோது ஆக்கையையும் வில்லை யும் கண்டபோதே ராவணாதிகள் குடல்குழம்பும்படியான வீரஸ்ரீ யைச் சொல்லுகிறது. கொற்றம் - வென்றியும்; வலியும். "புண்டரீ கனே - கொற்றவில்லியல்லையே" என்று-அவதாராந்தரமா யிருக்க ச்செய்தேயும் தர்ம்யைக்யத்தாலே பால்யயௌவநா த்யவஸ்தா விசேஷங்கள்போலே தோற்றுகிறதாய்த்து இவர்க்கு. இப்பாட் டுத்தொடங்கி, மேல் "மாயமென்னமாயம்" என்கிறபாட்டளவும் வர அதுவே க்ரியையாகக்கடவது. ... ... (௩௦)

அ.—முப்பத்தோராம்பாட்டு. கீழ்ப்பாட்டில் - அவதாரங்களி லுண்டான ரக்ஷகத்வத்தை யநுபவித்தார்; இதில் - ஆச்ரயணீயரா முகரானவர்கள்திறத்தில் அவதாரகார்யமான உபகாரபரம்பரைக ளையநுபவிக்கிறார்.

காலநேமிகாலனே! கணக்கிலாதகீர்த்தியாய!
ஞாலமேழுமுண்டுபண்டோர்பாலனாயபண்பனே!
வேலைவேவவில்வளைத்தவெல்சினத்தவீரநின்
பாலராயபத்தர்சித்தம்முத்திசெய்யுமூர்த்தியே. (௩௧

ப-ரை.—காலநேமி-காலநேமியாகிற அஸுரனுக்கு, காலனே-ம்ருத்யுவாய், கணக்கிலாத - அஸங்க்யேயமான, கீர்த்தியாய்-ஸௌலப்யாதிகல்யாணகுணங் களையுடையனாய், ஞாலமேழும் - ஸகலலோகங்களையும், உண்டு. திருவயிற் லேவைத்து, பண்டு - பூர்வகல்பாவஸாநத்திலே, ஓர் பாலனாய - அதிவிதி பாலனான, பண்பனே - ஆச்சர்ய சக்தியையுடையனாய, வேலை-கடல், வேவ தக்தமாம்படி, வில்வளைத்த-வில்வளைத்தவனாய், வெல்சினத்த-பகைவரைவெ லும் சினத்தையுடைய, வீர-வீரனே, நின்பாலராய - உன்விஷயத்தில் அநந் ப்ரயோஜநராய், பத்தர்சித்தம் - பக்திமான்களாயிருப்பவர்களுடைய மன ஸில், முத்திசெய்யும் - "உன்னையொழிய வேறு ப்ராப்யப்ராபகங்களுண்டெ னும் நசையறுக்கவல்ல, மூர்த்தியே-மஹாப்ரபாவத்தையுடையவனே! இதெ வாச்சர்யமென்கிறார். (௩௧

முப்பதாம்பாட்டு. தேன் - வண்டாகவுமாம். கூன்நிமிர்ந் ரூபிணியாகையாலே ரக்ஷகமென்கிறது. (௩௦

வ்யா.—(காலநேமிகாலனே) காலநேமியாகிற அஸுரனுக்கும் ம்ருத்யுவானவனே. இத்தால்-முமுக்ஷுக்களாய் தேவரீரை ஆச்ரயிக்கையிலே உத்யுக்தரானவர்களுடைய ஆச்ரயண விரோதிபாபங்களை, காலநேமியை நசிப்பித்தாப்போலே நசிப்பிக்குமவனென்கை. பிராட்டி பொறுப்பிக்க ஈஶ்வரன் பொறுக்குமாயிருக்கச் செய்தேயும், தாம் அதுக்கு அஞ்சினபடியாலே காலநேமியை த்ருஷ்டாந்தீகரிக்கிறாரிறே. (கணக்கிலாத கீர்த்தியாய்) ஆச்ரயணத்துக்குஏகாந்தமாய், எண்ணிறந்த ஸௌலப்யாதி கல்யாண குணங்களை யுடையையென்னும குணவத்தாப்ரதையையுடையவனே. • "குடந்தையன் கோவலன்" என்று - இந்த ஸௌலப்யாதிகள் பரத்வததிலும் ப்ரஸித்தமிறே. * அபாரகாருண்யந்தொடங்கி, "ஸௌந்தர்யமஹோததே" என்னக்கடவதிறே. (ஞாலமேழுமுண்டு பண்டோர் பாலனாய பண்பனே) ஆச்ரயித்தால் பண்ணுமுபகாரத்தைச் சொல்லுகிறது. ஸப்தத்வீபவதியான பூமியை யுண்டு பூர்வகல்பாவஸாநத்திலே அத்விதீயபாலனான ஆச்சர்யசக்தியைநிரூபகமாக வுடையவனே. பண்பு-இயல்வு. இது-த்ரைலோக்யத்துக்குமுபலக்ஷணம். இத்தால்-ஸ்வாதந்த்ர்யமே நிரூபகமாயப்போந்த ஸம்ஸாரியை சேஷத்வமே நிரூபகமென்னும்படி பண்ணவல்ல சக்தியை யுடையவனென்கை. அதாகிறது-"ద్విధాభజ్యేయమప్యేవం న నమేయమ్" "த்விதாபஜ்யேயமப்யேவம் நநமேயம்" என்றிருக்குமவனை, "ముహూర్తమపి జీవావః" "முஹூர்த்தமபிஜீவாவ:" என்றும், "நின்னலாலிலேன்காண்" என்றும் சொல்லுமபடிபண்ணுகை.

(வேலைவேவவில்வளைத்த வெல்சினத்தவீர) கடல் சுஷ்கத்ருணஸமூஹம்போலே தகதகமாம்படி. வில்வளைத்தவனாய், ப்ரதிபக்ஷத்தை வெல்லுஞ் சினத்தையுடைய வீரனே. இத்தால் - ஆச்ரிதர்க்கு ஸ்வாநுபவ விரோதிவர்க்கத்தை அநாயாஸேநப் போக்குமவனென்னை. (நின்பாலராயபத்தர் சித்தம் முத்திசெய்யும் மூர்த்தியே) உன் திறத்தில் அநந்யப்ரயோஜநராய், "ఛాయా వా సత్త్వమనుగచ్ఛేత్" "சாயாவாஸத்வ மநுகச்சேத" என்கிறபடியே - உன்பார்ஶ்வத்தை விடமாட்டாத பக்தர்களுடைய மநஸ்ஸு உன்னையொழிய வேறுப்ராப்யப்ராபகங்களுண்டென்றும் நசையறுக்கவல்லமஹாப்ரபாவத்தை யுடையவனே. இதென்ன வாச்சர்யமென்று வாக்யசேஷம். ஆச்ரிதவிஷயத்தில் கீழ்உக்தமான தன்படிகளையநுஸந்தித்தால் அது தன்னையொழிய வேறொன்றை யறியாதபடிபண்ணுமவனென்கை. ... ... ... (௩௧)

அ.—முப்பத்திரண்டாம்பாட்டு. ஆச்ரிதவிரோதிநிரஸநம்பண்ணுமிடத்தில் சக்ரவர்த்தித்திருமகன் செவ்வைப்பூசலாலே ராக்ஷஸரையழியச செய்தாப்போலே விரோதிவர்க்கத்தைப் போக்கவுமாம், மஹாபலிபக்கலிலே வாமநனாய் அர்த்தித்துச் சென்று வஞ்சித்தழித்தாப்போலே யழிக்கவுமாம், ஆச்ரிதவிரோதி நிரஸநத்தில் ஸ்வபாவநியதியில்லை யென்கிறார்.

குரக்கினப்படைகொடுகுரைகடலின்மீதுபோய்
அரக்கரங்கரங்கவெஞ்சரந்துரந்தவாதிநீ
இரக்கமண்கொடுத்தவற்கிரக்கமொன்றுமின்றியே
பரக்கவைத்தளந்துகொண்டபற்பபாதனல்லையே. (௩௨)

ப-ரை.—குரக்கினப்படைகொடு - ஸமூஹமான வாநர ஸேனையைக்கொண்டு, குரை - கோஷியாநின்றுள்ள, கடலின் - கடலில் அணைகட்டி, மீதுபோய் - அதின் மேலேபோய், லங்கையிலே ப்ரவேசிக்க, அங்கு - அந்த வாநரஸேனையைக் கண்ட, அரக்கர் - ராக்ஷஸர், அரங்க - அஞ்சும்படியாக, வெஞ்சரம் - உக்ரஸ்த்ரங்களான திருச்சரங்களை, துரந்த - நடத்தினவனான, ஆதிநீ - வீரர்களில் ப்ரதாநனான நீ, இரக்க - வாமநாவதாரஞ்செய்தருளி யஜ்ஞவாடத்திலே சென்று இரக்க, மண்கொடுத்தவற்கு - பூமியைத்தந்த மஹாபலிவிஷயத்திலே, ஒன்றும இரக்கமின்றி - சற்றேனும் இரக்கமில்லாமல், பரக்கவைத்து - திருவடிகளைப் பரப்பிவைத்து, அளந்துகொண்ட - பூமியையெல்லா மளந்துகொண்ட, பற்பபாதனல்லையே - தாமரைமலரையொத்த திருவடிகளையுடையவனல்லையோ! இதென்ன ஆச்சர்யமென்கிறார். (௩௨)

வ்யா.—(குரக்கினப்படைகொடு) வாநர ஸமூஹமானஸேனையைக்கொண்டு. (குரைகடலின்மீதுபோய்) கடலின் கிளர்த்தியையும் கோஷத்தையுங்கேட்டு, "இக்கடலையெங்ஙனே கடக்கக்கடவோம்" என்று அந்தஸேனை பயப்படும்படி கோஷத்தையுடைத்தான கடலைத் தூர்த்து அதின்மேலேபோய். இத்தால் - ப்ரபலபதார்த்தங்களை க்ஷுத்ரபதார்த்தங்களைக் கொண்டு அழிக்கவல்லவனென்கை. (அரக்கரங்கரங்க) அவ்வபதாநத்தைக் கண்டு, "வரபலபுஜபலங்களால் நமக்கெதிரில்லை" என்றிருக்கும் ராக்ஷஸர், போக்கடிதேடி அஞ்சும்படியாக. அரக்கல்-கரத்தல். "அரங்க" என்று மெல்லொற்றாய்க்கிடக்கிறது. (வெஞ்சரந்துரந்த) "ஶரஜாலைஶ்ச" "பாவகஸங்காஶை;" என்கிறபடியே அக்நிஸத்ருஶங்களான திருச்சரங்களை நடத்தின. (ஆதிநீ) லங்கைக்கு அரணான ஸமுத்ரத்தைத்தூர்த்து, அரணையழித்து, ராக்ஷஸருடைய ஹ்ருதயங்களை யழித்து, திருச்சரங்களாலேஉடல்களைத்துணித்துச்செய்த ஆணைத்தொழில்களாலேவீரர்களில் ப்ரதாநனான வீரன் நீயென்கிறார். ஆதிஶப்தம் - ப்ரதாநத்தைச் சொல்லுகிறது.

(இரக்க மண்கொடுத்தவற்கு) நீ அர்த்தியாய்ச் செல்ல ப்ரத்யாக்யாநம் பண்ணுதல், சுக்ரனுடைய உபதேஶங் கேட்டல் செய்யாதே, பூமியைத்தந்த மஹாபலிக்கு. (இரக்கமொன்றுமின்றியே) பூமியில் அவனுக்கு ஒரு பதந்யாஸமும் ஶேஷியாதபடி. (பரக்கவைத்தளந்துகொண்ட) சிறுக்காலைக் காட்டி மூன்றடியிரந்து, இரண்டடியாலே பூமிப்பரப்படையவளந்துகொண்ட.

முப்பத்திரண்டாம்பாட்டு. ப்ரத்யாக்யாநம் - இல்லையென்கை ஔதார்யமும் கொடுத்தவனன்றேவென்றுபாராமை. (௩௨

(பற்பபாதனல்லேயே) புஷ்பஹாஸஸுகுமாரமான திருவடிகளைக் கொண்டுகாடுமோடையுமளந்துகொண்டவனல்லேயோ. திருவடிகளின் ஸௌகுமார்யமும் பார்த்திலே, மஹாபலிபக்கல் ஔதார்யமும் பார்த்திலே, அர்த்திக்கிறவன் ப்ரயோஜநாந்தர பரனென்றும் பார்த்திலே, அந்த விந்த்ரனுடைய இரப்பையே பார்த்த வித்தனையிறே. இதென்ன ஆச்சர்யமென்று வாக்யசேஷம். ... ... (௩௨)

அ.—முப்பத்து மூன்றும்பாட்டு. ஆச்ரித ரக்ஷணத்தில் ஸ்வபாவநியதியில்லாதவோபாதி ஆச்ரயிப்பார்க்கும் ஜாதிநியதியில்லை யென்கிறார்.

மின்னிறத்தெயிற்றரக்கன்வீழவெஞ்சரந்துரந்து
பின்னவற்கருள்புரிந்தரசளித்தபெற்றியோய்!
நன்னிறத்தோரின்சொலேழைபின்னைகேள்வ!மன்றுசீர்ப்
பொன்னிறத்தவண்ணனாயபுண்டரீகனல்லையே. (௩௩)

ப-ரை.—மின்-மின்னலேயொத்த, நிறத்து - ஒளியையுடைத்தான, எயிறு-எயிற்றையுடைய, அரக்கன் - ராக்ஷஸனான ராவணன், வீழ - முடியும்படியாக, வெம்-க்ரூரமான, சரம் துரந்து - சரங்களையேவி, பின்னவற்கு - அவன் தம்பியான ஸ்ரீவிபீஷணாழ்வானுக்கு, அருள்புரிந்து - க்ருபைசெய்து, அரசளித்த-ராஜ்யத்தைக்கொடுத்த, பெற்றியோய்-சீலவத்தையையுடையவனே, நல் நிறத்து-நல்லநிறத்தையும், ஓர் இன்சொல் - மிகவுமினிதான சொல்லையுமுடையளாய், ஏழை-தேவரீர்பக்கல் அதிசபலையான, பின்னை - நப்பின்னைபிராட்டிக்கு, கேள்வ - வல்லபனானவனே. மன்று - நிரயமான, சீர் - ஔஜ்ஜ்வல்யாதிகுணங்களையும், பொன்னிறத்த வண்ணனாய-ஸ்பர்ஹணீயமான விக்ரஹத்தையுமுடைய, புண்டரீகனல்லையே - புண்டரீகாக்ஷனல்லையோ. (௩௩)

வ்யா.—(மின்னிறத்தெயிற்றரக்கன்) மின்போலே யொளியையுடைத்தான எயிற்றோடே கூடின ராக்ஷஸனான ராவணன். "மின்னிறத்தெயிறு" என்று - புஜபலத்தால வந்த செருக்குக்கு ஸூசகமாயிருக்கிறது. "அரக்கன்" என்கையாலே - அத்தோள் வலி பரஹிம்ஸைக்கேயாகை ஜாதிஸ்வபாவமாயிருக்கை. ஸத்ப்ரக்ருதிகளுடைய தோள்வலியிறே ஸாத்விகர்க்கு ஒதுங்க நிழலாயிருப்பது. (வீழவெஞ்சரந்துரந்து) அவன் முடியும்படியாக பர்வத ஸங்காசங்களான சரங்களையேவி. (பின்னவற்கருள்புரிந்தரசளித்த பெற்றியோய்) அவன்தம்பிக்கு ப்ரஸாதத்தைப் பண்ணி ராஜ்யத்தைக்கொடுத்த ஶீலவத்தையையுடையவனே. "ராகவம் ஶரணம் கத:" "ராகவம்ஶரணங்கத:" என்ற அதனையே கொண்டு ஸ்ரீவிபீஷணாழ்வானை அவன்தம்பியென்று பாராதே, "வத்யதாம், வத்யதாம்" "வத்யதாம், வத்யதாம்" என்ற மஹாராஜ ப்ரப்ருதிகள்வார்த்தையையுங்கேளாதே, "நத்யஜேயம்" "ஏதத் வ்ரதம் மம" "நத்யஜேயம்" "ஏதத்வ்ரதம்மம" என்று - ப்ரஸாதத்தைப்பண்ணி, ராஜ்யஸ்பர்ஶை அவனுக்கின்றிக்கே யிருக்க, "தாஸவச்சாவமாநித:" "தாஸவச்சாவமாநித:" என்று-புறப்படவிட்டானென்று அந்த லங்காராஜ்யத்தைக் கொடுப்பதே!, இதென்ன ஸ்வபாவமென்கிறார். பெற்றி-ஸ்வபாவம்.

(நன்னிறத்தோரின்சொலேழைபின்னைகேள்வ) நல்லநிறத்தையும், இனியபேச்சையுமுடையவளாய், தேவரீர்பக்கல் அதிசபலையான நப்பின்னைப்பிராட்டிக்கு வல்லபனானவனே. இத்தால்-நப்பின்னைப்பிராட்டியுடைய ரூபகுணங்களும் ஆத்மகுணங்களும் தேவரீர்க்கு போக்யமாயிருக்குமாப்போலே, ஸ்ரீவிபீஷணாழ்வான்தேவரீர்க்குபோக்யனாயிருக்கும்படியைச்சொல்லுகிறது. (மன்னுசீர்ப்பொன்னிறத்த வண்ணனாய புண்டரீகனல்லையே) நித்யமான ஔதார்யாதி குணங்களையும், "அந்தராதித்யே ஹிரண்மய: புருஷோ த்ருச்யதே" "அந்தராதித்யே ஹிரண்மய: புருஷோத்ருஶ்யதே" என்றும், "ருக்மாபம்" "ருக்மாபம்" என்றும் சொல்லுகிற ஸ்ப்ருஹணீயவிக்ரஹத்தையுமுடையையாய், "யதா கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ" "யதாகப்யாஸம்புண்டரீகமேவமக்ஷிணீ" என்கிறபடியே புண்டரீகாக்ஷனாயிருக்கிறவனல்லையோ. இதென்ன வாஶ்சர்யமென்று வாக்யஶேஷம். நிறம்-வடிவு. வண்ணம் - நிறம் ஆக, அவயவஶோபையையும் வர்ணசோபையையும் சொல்லுகிறது. இத்தால் - ஆதித்யமண்டல மத்யாவதாரத்தின் ஆத்மகுணங்களும ரூபகுணங்களும் மஹர்ஷிவர்க்கத்துக்கு போக்யமாயிருக்குமாப்போலே, ஸ்ரீவிபீஷணாழ்வானுக்கு போக்யபூதனாயிருக்கிறபடியைச் சொல்லுகிறது. ... (௫௫)

அ.—முப்பத்துநாலாம்பாட்டு. கீழிற்பாட்டில் - ருசியுடைய விபீஷணாழ்வானை ஜந்மத்தால்தாழ்வுபாராதே விஷயீகரிக்கும் சக்ரவர்த்திதிருமகனுடைய நீர்மையையநுபவித்தார்; இதில் - கார்ய காரணங்களென்ன, ப்ரமாண ப்ரமேயங்களென்ன, ஸகலமும் ஸ்வாதீநமாம்படியிருக்கிற நீ புருஷார்த்தருசியில்லாதார்க்கு ருசிஜநகனாய்க்கொண்டு கோபஸஜாதீயனாய்வந்தவதரித்த விதென்னவாச்சர்யமென்கிறார்.

ஆதியாதியாதிநீயோரண்டமாதியாதலால்
சோதியாதசோதிநீயதுண்மையில்விளங்கினாய்;
வேதமாகிவேள்வியாகிவிண்ணினோடுமண்ணுமாய
ஆதியாகியாயனாயமாயமென்னமாயமே. (௫௪)

ப.ரை.—ஆதியாதியாதிநீ-த்ரிவிதகாரணமுமநீ; ஓரண்டமாதி-ஏகரூபமான அண்டஜாதியுமாகிறாய்; ஆதலால்-இப்படி ஸகலஜகத்காரண பூதனாகையாலே, சோதியாத-பரீக்ஷிக்கவேண்டாத, சோதிநீ - தேஜஸ்தத்வம்நீ; அது - அந்த தேஜஸ்தத்வம் நித்யநிரஸ்ததோஷமாகையாலே, உண்மையின்-இதரஸஜாதீயனாய்க்கொண்டு, விளங்கினாய்-விளங்கினவனே, வேதமாகி - நித்யநிரஸ்ததோஷமானவேதத்துக்கு நிர்வாஹகனாய், வேள்வியாகி - ததர்த்தமான யாகத்துக்கு நிர்வாஹகனாய், மண்ணும்-போக பூமிக்கும், விண்ணினோடு - மோக்ஷபூமிக்கும், ஆய்-நிர்வாஹகனாய், ஆதியாகி - இந்த ருசிஜநகனாய்க்கொண்டு, ஆயனாயமாயம்-கோபஸஜாதீயனாய் அவதரித்த ஆச்சர்யம், என்னமாயம்-என்ன ஆச்சர்யமெ

வ்யா.—(ஆதியாதியாதிநீ) "సదేవసోమ్యేదమగ్రఆసీత్, ఏకమేవాద్వితీయమ్" "ஸதேவஸோம்யேதமக்ரஆஸீத், ஏகமேவாத்விதீயம்" என்கிறபடியே த்ரிவிதகாரணமும்நீ. எதுக்குக்காரணமாகிறதென்னில்; மஹதாதிவிசேஷாந்தமான ப்ராக்ர்தஸ்ர்ஷ்டிக்கு "బహుస్యామ్" பஹுஸ்யாம்" என்கிற ஸங்கல்பத்தாலே காரணபூதன். (ஓரண்டமாதி) மஹதாத்யவஸ்தனான நீயே ஏகரூபமான வண்டஜாதியுமாவுதி. "ఈదృశానాంతథా" "ஈத்ர்சாநாம்ததா" என்கிறபடியே அண்டங்கள் ஏகரூபமாயிறேயிருப்பது. ஏகவசநம்-ஜாத்யபிப்ராயத்தாலே. அதாகிறது - அண்டத்தில் உத்பந்நமான ப்ரஹ்மாதி பிபீலிகாந்தமான ஸகலபதார்த்தங்களையும் ஸ்ர்ஷ்டித்து, தத்நுப்ரவேசத்தாலே ஸகலாந்தர்யாமியாய் நிற்கை. (ஆதலால் சோதியாதசோதிநீ) இப்படி ஸகலஜகத்காரணபூதனாகையாலே பரிக்ஷிக்க வேண்டாத உபாஸ்யதேஜஸ்தத்வம்நீ. உபாஸ்யமான தேஜஸ்தத்வம் - த்ரிவித மஹாபூதமோ, தேவதையோ, ஆதித்யனோ, வைச்வாநராக்நியோ வென்று சங்கித்து, ஸர்வநிர்வாஹகமான தேஜஸ்தத்வமே யுபாஸ்யமென்றுநிர்ணயிர்க்கவேண்டாதிருக்கை. "అథయదతఃపరోదివోజ్యోతిః" "తదేవజ్యోతిషాంజ్యోతిః" "నారాయణపరోజ్యోతిః" "அதயததஃபரோதிவோஜ்யோதிஃ" "ததேவஜ்யோதிஷாஞ்ஜ்யோதிஃ" "நாராயணபரோஜ்யோதிஃ" என்கிறதத்வமல்லையோநீ (அதுண்மையில் விளங்கினாய்) அந்ததேஜஸ்தத்வம்நித்யநிர்த்தோஷப்ரமாணஸித்தமாகையாலே, இதாவிஸஜாதீயனாய்க்கொண்டு விளங்கினவனே.

(வேதமாகி) வேதத்தினுடைய நித்யநிர்த்தோஷத்வத்துக்கு நிர்வாஹகனாய். அதாவது - ஸம்ஹாரவேளையில் திருவுள்ளத்திலே ஸமஸ்காரதயாலே வைத்து, "యోవై వేదాంశ్చ ప్రహిణోతి తస్మై" "யோவை வேதாம்ச்ச ப்ரஹிணோதிதஸ்மை" என்கிறபடியே ஆதியிலே வேதத்துக்கு அத்யாபகனாகை. (வேள்வியாகி) ததர்த்தமான யாகத்துக்கு நிர்வாஹகனானவனே. அதாவது - ஆராத்யனாகை. (விண்ணினோடுமண்ணுமாய்) ஆராதநபலமான போகமோக்ஷபூமிகளுக்கு நிர்வாஹகனாய. "விண்" என்று-பரமபதம. "மண்" என்று-சதுர்த்தசபுவநத்துக்கு முபலக்ஷணம். யாகம் அந்யோந்ய விருத்தங்களான போகமோக்ஷங்களிரண்டுக்கும் ஸாதநமாமோ வென்னில்; ஜீவபரயாதாத்ம்யஜ்ஞாநபூர்வகமான யாகம் மோக்ஷத்துக்கும், கேவலயாகம் போகத்துக்கும ஸாதநமாகையாலே அவிருத்தம். (ஆதியாகி) இதெல்லாம் ருசியுடையவனுக்குநகமிறே; அந்தருசிஜநகனாய்க்கொண்டு. (ஆயனாயமாய மென்னமாயமே) அதீந்த்ரியமான இவ்விக்ரஹத்தை கோபஸஜாதீயமாக்கி ருசியில்லாதார்க்கு ருசிஜனகமாய்க்கொண்டு வந்தவதரித்த விது என்ன வாச்சர்யம். (௩௪)

---

முப்பத்துநாலாமபாட்டு. த்ரிவித மஹாபூதம் - ஆகாசமும, அக்நியும், வாயுவும். ... ... ... (௩௪)

அ.—முப்பத்தஞ்சாம்பாட்டு. அதீந்த்ரியமான திவ்யவிக்ரஹத்தை கோபஸஜாதீயமாக்கி, ருசியில்லாதார்க்கு ருசிஜநகனாய்க்கொண்டு அவதரித்த வேற்றத்தை யநுபவித்தார்-கீழ்ப்பாட்டில்; இதில்-ஒரு கோபஸ்த்ரீக்குக் கட்டவும் அடிக்கவும் விடவுமாம்படி நியாம்யனான குணதிக்யத்தை யநுஸந்தித்து, திரியவும் க்ருஷ்ணாவதாரத்திலே யீடுபடுகிறார்.

அம்புலாவுமீனுமாகியாமையாகியாழியார்
தம்பிரானுமாகிமிக்கதன்புமிக்கதன்றியும்
கொம்பராவுநுண்மருங்குலாயர்மாதர்பிள்ளையாய்
எம்பிரானுமாயவண்ணமென்சொலேலாவெம்மீசனே. (கூரு)

ப-ரை.—ஆழியார் தம்பிரானுமாகி - திருவாழியையுடைய ஸர்வாதிகனானவன், அன்புமிக்கு - சேதநர்பக்கல ஸங்காதிசயத்தாலே, அம்பு - ஜலத்திலே, உலாவு-வர்த்திக்கிற, மீனுமாகி-மத்ஸ்யமாய, அம்ருதமதநவேளையிலேமந்தரதாரணார்த்தமாக, ஆமையாகி-கூர்மமாய, மிக்கது-மிகத்தீயவவதரித்தது; அன்றியும்—, கொம்பு-பூங்கொம்பு போலேயும், அரவ-ஸர்ப்பம்போலேயும், நுண்-ஸூக்ஷ்மமான, மருங்குல் - இடையையுடைய, ஆயர்மாதர் பிள்ளையாய்-யசோதைப்பிராட்டிக்குப்பிள்ளையாய, எம்பிரானுமாய வண்ணம்-எங்களை அநந்யார்ஹமாக்கிக்கொண்டது, என்சொல் - என்ன ஆச்சர்யம், எம்மீசனே - எங்களுக்கு நியந்தாவானவனே! என்று ஈடுபடுகிறார். (கூரு)

வ்யா.—"ஆழியார் தம்பிரானுமாகி - அம்புலாவுமீனுமாகி யாமையாகி - மிக்கது" என்றந்வயமாகக் கடவது. "[illegible]" "தமஸ:பரமோதாதா ஶங்கசக்ரகதாதர:" என்கிறபடியே ஸர்வேஶ்வரத்வஸூசகமான திருவாழியையுடைய ஸர்வாதிகனுமாய் வைத்து. (அம்புலாவுமீனுமாகி) அம்பிலே வர்த்திக்கிற மத்ஸ்யமாய். அப்பை, "அம்பு" என்று மெலித்துக்கிடக்கிறது. "முதுகில் மலைகளை மீதுகொண்டு வருமீனே" என்கிறபடியே ப்ரளயார்ணவத்திலே நோவுபட்டதேவர்களுடைய ஆபத்தைப் போக்குகைக்காகத் தனக்கு நிலமான நீரிலே ஸஞ்சரிக்கக்கடவதான மத்ஸ்யமுமாய். சம்ப்ரதத்தாலே - தேவயோநி மநுஷ்யயோநிகளில் பண்ணின அவதாரங்களால் பர்யவஸியாத அநுக்ரஹாதிசயத்தைச் சொல்லுகிறது. (ஆமையாகி) அம்ருதமதநவேளையிலே மந்தரதாரணார்த்தமாக கூர்மமாய். "[illegible]" "கூர்மம் பூதம் ஸர்ப்பந்தம்" என்கிறபடியே ப்ரளயவேளையில் கூர்மவிக்ரஹத்தைச் சொல்லிற்றாகவுமாம். (மிக்கது) க்ஷுத்ரயோநியொன்றும் பாபயோநியொன்றும் பாராதே கைகழியவவதரித்தது. (அன்புமிக்கு) ஆபந்நராய், அவதாரங்களுக்குநிமித்தபூதரான சேதநர்பக்கலுண்டான ஸங்காதிசயத்தாலே யவதரித்த விதத்தனையிறே. ஒருகூர்மம்ப்போரிக்கவாதல், ஒருகாத்தாப்போரிக்கவாதல்லன்றிறே; "மீனோடேனமும் தானானான் என்னில் தானாயசங்கு" என்னக்கடவதிறே. (அன்றியும்) அதுக்குமேலே ஸுத்ரிபோக்யமானவடிவைஜலசரஸத்வஸஜாதீயமாக்குவதே! என்று அதிலேயீடுபட்டாரயத்து இவர்தாமிருப்பது

அதிற்காட்டிலும் க்ர்ஷ்ணாவதாரத்தில் குணாதிகயம் தம்மை யீடுபடுத்தினபடியைச் சொல்லுகிறார்மேல் (கொம்பராவுநுண் மருங்குலாயர்மாதர்பிள்ளையாய்) கொம்புபோலேயும் அரவுபோலேயும நுண்ணிய இடையையுடைய அசோதைப்பிராட்டிக்குப்பிள்ளையாய். மத்ஸ்யாத்யவதாரங்களில் ரக்ஷணத்திலே தன்ஸ்வாதந்த்ர்யங்கள் குலைந்ததில்லை; இதில் ஒருகோபஸ்த்ரீக்குக்கட்டவும் அடிக்கவுமாம்படி நியாம்யனாயவந்தவதரித்தகுணாதிக்யமுண்டிறே, "ஸ்வரூபம் ஸ்வாதந்த்ர்யம்" என்கிற ஸ்வரூபமும் அழிந்ததிறே இதில். அவதாரங்களில் ஸ்வரூபத்தையுமழியமாறின வித்தனையிறே. (எம்பிரானுமாயவண்ணமென்கொலோ) அவர்களுக்குக் கட்டவுமடிக்கவுமாம்படியான நீர்மையைக்காட்டி எங்களை அநந்யார்ஹமாக்கிகொண்டதென்செய்தபடி. பஹுவசநத்தாலே - மற்ற ஆழ்வார்களையும கூட்டிக்கொள்ளுகிறார். (எம்மீசனே) அறிந்தோம் - எங்களுடைய விழவுபேறுகள் உன்னதென்னுமபடியான ஸம்பந்தத்தாலே.(௩௫)

அ.—முப்பத்தாறும்பாட்டு. கீழ்ச்சொன்ன பாரதந்த்ர்யத்தை அநுபாவித்து அவ்வவதாரங்களின் ஆச்சர்ய சேஷ்டிதங்களிலே யீடுபடுகிறார்.

ஆடகத்தபூண்முலையசோதையாய்ச்சிபிள்ளையாய்ச்
சாடுதைத்தோர்புள்ளதாவிகள்ளதாயபேயமகள்
வீடவைத்தவெய்யகொங்கையையபாலமுதுசெய்
தாடகக்கைமாதர்வாயமுதமுண்டதென்கொலோ. (௩௬)

ப-ரை.—ஆடகத்த - பொன்னாலேசெய்த, பூண் - ஹாரத்தாலே அலங்க்ருதமான, முலை - ஸ்தனங்களையுடையவளான, ஆய்ச்சி - இடைச்சியான, அசோதை - யசோதைப்பிராட்டிக்கு, பிள்ளையாய்—, முலைவாய்வைத்தழப்பாச சீறி நிமிர்த்த திருவடிகளாலே, சாடு - சகடாஸுரனை, உதைத்து - உதைத்து முறித்து, ஓர் - ஒப்பற்ற, புள்ளதாவி - புள்ளின் ரூபத்தையுடையவனாய, கள்ளதாய - கபடமுடைத்தாயான, பேய்மகள் - பூதனையானவள், வீட - நீயழியும்படிக்கீடாக, வைத்த - உனதிருப்பவளத்திலே வைத்த, வெய்யகொங்கை - க்ரூரமான முலையிலுள்ள, ஐய - ஸூக்ஷ்மமான ப்ராணனை க்ரஹிக்கவல்ல, பால - பாலை, அமுதுசெய்து - அமுதுசெய்தருளி, ஆடகம - ஸ்வர்ணாபரணங்களாலே அலங்க்ருதமான, கை - கைகளையுடையரான, மாதர்வாயமுதம - ஸ்த்ரீகளின அதராம்ருதத்தை, உண்டது - புஜித்தது விடா, எனகொலோ - அவ்விஷத்துக்கு பரிஹாரமாகவோவெனகிறார். (௩௬)

வ்யா.—(ஆடகத்தபூண்முலையசோதையாய்ச்சிபிள்ளையாய) "கொம்பராவுநுண்மருங்குலாயர் மாதர்பிள்ளையாய" என்றது தன்னையே முகபேதத்தாலேயநுபவிக்கிறார். (ஆடகத்தபூண்முலை) பொன்னாலே செய்த ஹாரத்தாலே அலங்க்ருதமான முலையை யுடையவள். "க்ர்ஷ்ணன அமுதுசெய்யக்கடவன்" என்று முலையை யொப்பித்துக்கொண்டு நிற்கிறாளாயத்து - அவள்; அந்தப்ரேமத்தை யநுபவிக்கிறாரிறே - இவர். "ஆயர்மாதர் பிள்ளையாய" என்ற ஸாமாந்யத்தை, "அசோதையாய்ச்சிபிள்ளையாய்" என்று விசேஷிக்கிறார்.

---

முப்பத்தாறும்பாட்டு. "ஆடகம்" என்றது - ஹாடகமாய், அத்தால் - பொன்னைச் சொல்லுகிறது.

ஸர்வநியந்தாவானவன், ஓரிடைச்சி, "என் மகன்" என்றுநியமிக்கலாம்படியிருக்கிற ஆச்சர்யத்தில்நின்றும் கால்வாங்கமாட்டுகிறிலர். (சாடுதைத்து) ஸ்தந்யார்த்தியாய்த் திருவடிகளை நிமிர்த்து ஶகடாஸுரனை நிரஸித்து. "..." "தநம்மதீயம் தவபாத பங்கஜம்" என்றும், "கோலமாமென் சென்னிக்கு" என்றும்-அநந்யப்ரயோஜநர்க்குப்ராப்யமான திருவடிகளை துஷ்ப்ரக்ருதிகளுக்குவத ஸாதநமாக்குவதே! என்கை. (ஓர்புள்ளதாவிகள்ளதாயபேய்மகள்) பிள்ளைகளனுங்கஸஞ்சரிக்கும்புள்ளின் கருத்தையுடையளாய், அபூர்வை யென்றுசங்கித்து விலங்கவொண்ணாதபடி க்ருத்ரிமஜநநியான பேய்ப்பெண். "ஓர்புள்" என்று - தப்பவொண்ணாதபடி யனுங்கப்பண்ணும் புள்ளென்றபடி.

(வீடவைத்த வெய்யகொங்கை) ஜகஜ்ஜீவநமான வுன்திறத்திலே தீங்கை விளைப்பாளாகத் திருப்பவளத்திலேவைத்த க்ரூரமான முலையில். (ஐயபால் அமுதுசெய்து) ஸூக்ஷ்மமான ப்ராணனைப்புக்ரஹிக்கவல்லஅதிஸூக்ஷ்மமானபாலை யமுதுசெய்து. அவள் தன்னுடையக்ரௌர்யத்தையும், ஸ்வதந்திதனுடைய க்ரௌர்யத்தையும்பிரித்துப்பேசுகிறாராய்த்துத் தம்முடைய பயாதிசயத்தாலே. "ஐய" என்றுஸம்போதநமாகவுமாம். பூதனையைத் தாயென்று மௌக்த்யத்தாலே அவள்முலையை யமுது செய்தான். ப்ரகாசஸந்நிதியில் தமஸ்ஸூப்போலே துஷ்ப்ரக்ருதிகள் நசிக்கும் தர்மி ஸ்வபாவத்தாலே. அத்தலையித்தலையான வித்தனை. (ஆடகக்கைமாதர்வாய்அமுதமுண்டதெனகொலோ) அப்பருவத்திலே "உன்னையுமொக்கலையில் கொண்டு" என்னுமாப்போலே, அவ்வூரில கந்நிகைகள் தங்கள்க்ருஹத்திலே கொண்டுபோக, யௌவநதசையைப் பரிக்ரஹித்து விதக்தனுயககலந்து அவர்கள் வாகம்ருதத்தையுண்ட விதுவென்னே. (ஆடகக்கைமாதர்) பொன்னாலே யலங்கரித்த கைவளையையுடைய பெண்கள். அவன பிடிக்குங்கையென்றும், அவனணைக்கும் கொங்கையென்றும் அலங்கரிக்கிறார்களாய்த்து. "என்கொலோ" என்றது - அவ்விஷததுக்கு இவ்வாகம்ருதம பரிஹாரமோ, ஸர்வாதாரனுய் வேறுதாரகாந்தரமன்றிககே யிருக்கிற உனக்கு ப்ரதிகூலப்ராணனும் அநுகூலர்ப்ரேமமும தாரகமாயிருக்கிறதோ. பால்யாவஸ்தையிலே யுவாவாயும், யுவாவான நீபாலனுமிருநத விது என்னவாச்சர்யமென்கிறார் ... ... .. ... (௩௬)

அ.—முப்பத்தேழாம்பாட்டு. பின்பு க்ருஷ்ணாவதாரத்தில் விதக்த சேஷ்டிதங்களையும முக்தசேஷ்டிதங்களையும் அநுபவிக்கிறவர், மௌக்த்யத்தாலும ஸௌலப்யத்தாலும் வயையாமே எல்லாரையும் தீண்டினபடியாலும் க்ருஷ்ணாவதார ஸத்ர்சமான வடதளசாயியையும், ஸ்ரீவராஹவாமந ப்ராதுர்ப் பாவங்களையும, க்ருஷ்ணாவதாரத்தோடொக்க வநுபவிக்கிறார்.

---

(புள்ளதாவி) ஆவி-மநஸ்ஸு. புள்ளாவது-பறவை. "..." "ததாஷம்" என்கிற பக்ஷியிலே ஒருகொக்குவிஶேஷம். ... (௩௬)

காய்த்தநீள்விளங்கனியுதிர்த்தெதிர்ந்தபூங்குருந்தம்
சாய்த்துமாபிளந்தகைத்தலத்தகண்ணனென்பரால்
ஆய்ச்சிபாலையுண்டுமண்ணையுண்டுவெண்ணெயுண்டுபின்
பேய்ச்சிபாலையுண்டுபண்டோரேனமாயவாமநா. (௩௭)

ப-ரை.—க்ருஷ்ணன்மேலே விழுகைக்குறுப்பாக, காய்த்த - பரப்புமாறக் காய்த்து, நீள்-ஓங்குகின்ற, விளங்கனி-விளாவான அஸுரனுடைய கனிகளை, உதிர்த்து-கன்றைவிட்டெறிந்து உதிர்த்து, எதிர்ந்த-போராதே நின்ற, பூ-மொட்டாகக்கிட பூத்துக்கிடக்கிற, குருந்தம்- குருந்தமரத்தை, சாய்த்து-வேரோடே பறித்துவிழ விட்டு, மா-கேசியை, பிளந்த-இருகூறாகப்பிளந்துபோகட்ட, கைத்தலத்த-திருக் கையையுடைய, கண்ணனென்பர்-க்ருஷ்ணனென்று வ்யாஸபராசராதிகள்சொல் லாநின்றார்கள்; ஆய்ச்சி-யசோதைப்பிராட்டியுடைய, பாலையுண்டு-பாலையமுது செய்து, வெண்ணெயுண்டு - வெண்ணெயை யமுதுசெய்து, பேய்ச்சி - தாய் வடிவுகொண்டு வஞ்சகையாய்வந்த பூதனையுடைய, பாலையுண்டு-முலைப்பாலை யமுது செய்து, பின் - பால்யாவஸ்தையிலே, சிறிய திருவயிற்றிலே, மண்ணை யுண்டு - ஜகத்தையடைய அமுதுசெய்து, பண்டு-கல்பாதியிலே, ஓர் - அத்விதீய மான, ஏனமாய - வராஹாவதாரஞ்செய்தருளி பூமியை யெடுத்து ரக்ஷித்து, அந்த பூமியை மஹாபலி அபஹரிக்க, வாமநா - வாமநாவதாரஞ் செய்தருளி அளந்துகொண்டவனே! என்று ஈடுபடுகிறார். (௩௭)

வ்யா.—(காயத்தநீள் விளங்கனியுதிர்த்து) க்ருஷ்ணன்மேலே விழுகைக்குறுப்பாகப் பரப்புமாறக்காய்த்து ஓங்குகின்ற விளாவான அஸுரனுடைய கனிகளை, கன்றைவிட்டெறிந்து உதிர்த்து. (எதிர்ந்த பூங்குருந்தம சாய்த்து) விளாவான அஸுரனையழியச்செய்து, க்ருஷ்ணன் கிட்டின பின்பும் போராதே நின்ற பூங்குருந்தை ஊசி வேரோடே பறித்து விழவிட்டு. இதுவும் அவன்மேலே விழுந்து புஷ்பாபசயம்பண்ணுகைக் குறுப்பாகப்பரப்புமாறப் பூத்துநின்ற தாய்த்து. இவையிரண்டாலும் - அநுகூல வேஷராய் நலியவந்த அஸுரர்களை யழியச்செய்தபடி சொல்லிற்று.(மாபிளந்த)ப்ரதிகூல ராயே வாய்பாறி ஊரையழிக்கவந்த கேசியை அநாயாஸேந இரு கூறாகப்பிளந்து அவ்வாபத்தைப்போக்கினவன். (கைத்தலத்தகண் ணனென்பரால்) ஓராயுதத்தாலன்றிக்கே லீலையாகவழித்த திருக் கையையுடைய க்ருஷ்ணனென்று ஜ்ஞாநாதிகரான வ்யாஸபராசரா திகள் சொல்லாநிற்பர்கள். (ஆய்ச்சிபாலை யுண்டு மண்ணை யுண்டு வெண்ணெயுண்டு பின்பேய்ச்சிபாலையுண்டு) (ஆய்ச்சிபாலையுண்டு- வெண்ணெயுண்டு) யசோதைப்பிராட்டியுடைய பாலையும் வெண் ணெயையும் அமுதுசெய்து. இத்தால் - "ஜிஷ்ணு:" என்கிறதத்வத் துக்கு ஆச்ரிதஸ்பர்சமுள்ளதொரு த்ரவ்யத்தாலன்றிக்கே செல்லா திருக்கிறபடியைச சொல்லிற்று (பேய்ச்சிபாலையுண்டு) தாய் வடி வுகொண்டுவிநாசகையாய் வந்த பூதனையினுடைய முலையையமுது செய்து அவ்வழியாலே அவளைமுடித்து. யசோதையினுடையபா லோபாதி பூதனையுடைய ப்ராணனும் தாரகமாயிருக்கிறபடி.

(பின்மண்ணையுண்டு)க்ர்ஷ்ணனுடைய மௌக்த்யத்தை யநுபவித்தஸமநந்தரம்தத்ஸத்ர்சமானவடதளஶாயியுடையமௌக்த்யத்தையநுபவிக்கிறார். சல்பாவஸாநத்திலே சிறியதிருவயிற்றிலே ஜகத்தையடைய வமுதுசெய்தால் ஸாத்மியாதென்றறியாதமௌக்த்யமிறே வடதளஶாயியுடைய மௌக்த்யம். (பண்டோரேனமாயவாமனு)கலபாதியிலே ஸ்ரீவராஹமாய, ஒருத்தர் அர்த்தியாதிருக்க பூமியையெடுத்துரக்ஷித்து, அந்தபூமியை மஹாபலியபஹரிக்க ஸ்ரீவாமநனாயளந்துகொண்டவனே. தன்னையறியமாறி ரக்ஷிததஸௌலப்யத்துக்கும், வரையாதே எல்லாரையுந்தீண்டின ஶீலத்துக்கும் க்ர்ஷ்ணாவதாரத்தோடு ஸாம்யமுண்டாகையாலே இவ்வவதாரங்களையநுபவிக்கிறார.... ... ... .. (கள)

அ.—முப்பத்தெட்டாம்பாட்டு. "[Grantha quotation]" "பரித்ராணாயஸாதூநாம் விநாஶாயசதுஷ்க்ர்தாம்" என்கிறபடியே - ப்ரதிகூலரை யழியச்செய்தும் அநுகூலரை யுஜ்ஜீவிப்பித்தும்செய்தருளின க்ர்ஷ்ணாவதாரசேஷ்டிதங்களையநுபவிக்கிறார்.

கடங்கலந்தவன்கரிம ருப்பொசித்தோர்பொய்கைவாய்
விடங்கலந்தபாம்பின்மேல நடம்பயின்றநாதனே!
குடங்கலந்தகூத்தனாயகொண்டல்வண்ணதண்டுழாய
வடங்கலந்தமாலைமார்பகாலநேமிகாலனே. (கஅ)

ப-ரை.—கடம் கலந்த - மதஜலம் வ்யாப்தமான வுடம்பையுடைய, வன் - அதிப்ரபலமாயிருந்த, கரி-குவலயாபீடமென்னும் யானையினுடைய, மருப்பு-கொம்பை, ஒசித்து - முறித்து, ஓர் - அதிபயங்கரமாகையாலே அத்விதீயமான, பொய்கைவாய் - பொய்கையிலே, விடம்கலந்த - மிக்கவிஷத்தையுடைய, பாம்பின்மேல - காளியனுடைய பணங்களினமேலே, நடம்பயின்ற - ந்ருத்தஞ்செய்தருளி, அத்தாலே, நாதனே - உனனுடைய நாதத்வத்தைப் ப்ரகாசிப்பித்தவனே, கலந்த - கையில்பொருந்தின, குடம் - குடத்தையுடையனாய், கூத்தனாய - ஜாத்ப்ரயக்தமான கூத்தை யுடையனாய், கொண்டல் வண்ண - காளமேகநிபஶ்யாமமான வடிவையுடையனாய், தண் - குளிர்ந்த, துழாய்வடம் - திருத்துழாய்வடத்தோடும், மாலைகலந்த - வநமாலையோடுங்கூடின, மார்ப - திருமார்பையுடையவனாய், காலநேமி - தேவர்களுக்கு விரோதியான காலநேமிக்கு, காலனே - ம்ருத்யுவானவனே! என்று அவனுடைய ஆஸ்ரிதபக்ஷபாதாதிசயத்தை யநுபவிக்கிறார். ()

வ்யா.—(கடங்கலந்தவன் கரிமருப்பொசித்து) குவலயாபீடத்தை மதிப்பித்தபடியாலே அம்மதஜலம் உடம்பிலே வ்யாப்தமாய அதிப்ரபலமாயிருந்தவதின் கொம்பைமுறித்து. இத்தால்-ஸ்வாபாவிகமானபலத்தாலும் மதபலத்தாலும் துர்ஜயமான குவலயாபீடத்தைஅநாயாஸேநவழித்தானென்கை. கடம்-ஆனைமதம். (ஓர்பொய்கைவாய்விடங்கலந்தபாம்பின்மேல்நடம்பயின்றநாதனே) "[Grantha quotation]" "வாதாஹதாம்புவிக்ஷேபஸ்பர்ஶதக்தவிஹங்கமம்" என்கிறபடியே அதிபீஷணமாகையாலே அத்விதீயமான பொய்கையிலே.

முதலைகிடந்த பொய்கையும் இதுக்கு ஸத்ர்ஶமன்றென்கை. விஷமே யிவனுக்கு உபாதாந மென்னும்படி விஷப்ரசுரமான காளியனுடைய பணங்களிலே வல்லாராடினாப்போலே திருவடிகளை மாறியிட்டு, அவ்வழியாலே அவனை தமித்துப் போகவிட்டு, யமுனையை ஸர்வோபஜீவநமாம்படி பண்ணி, உன்னுடைய நாதத்வத்தை ப்ரகாஶிப்பித்தவனே. "..." "துஷ்டுவுர்முதிதாகோபாதர்ஷ்டவாஶீவ்ஜலாம்நதீம" என்னக்கடவதிறே. இவ்வளவால துஷ்க்ர்த்விநாஶநஞ்சொல்லி, மேல் ஸாது பரித்ராணஞ்சொல்லுகிறது (குடங்கலந்தகூத்தனாய கொண்டல்வண்ண) கையில திருவாழி பொருந்தினாப்போலே பொருந்தின குடத்தையுடையனாய், ஜாதிப்ராயுக்தமான கூத்தையாடி, மன்றிலே யுன்னுடைய வழகை ஸர்வஸ்வதாநம் பண்ணினவனே. ப்ரயோஜநாந்தர நிரபேக்ஷமாக ஜலஸ்தலவிபாகமன்றிக்கே வர்ஷிக்கும் மேகஸ்வபாவனே. குடக்கூத்தாடினபோதை காளமேகநிபஶ்யாமமான நிறத்தைச்சொல்லிற்றாகவுமாம். (தண்டுழாய் வடங்கலந்த மாலைமார்ப) இப்படிக்ஷாத்ராரான இடையருடைய சேஷ்டிதத்திலே யிழிந்தவன், ஸர்வேஶ்வரனாய், "..." "அவாக்யநாதர:" என்கிற பூர்ணனென்கிறாரென்கிறார். ஐசவரயஸூசகமான திருத்துழாய்வடத்தோடும் வநமாலையோடுங்கூடின திருமார்வை யுடையவனே. வடம்-தொடை. மாலை-வநமாலை. (காலநேமிகாலனே) ஆபந்நராய்த்திருவடிகளிலேவிழுந்த தேவர்களுக்கு விரோதியான காலநேமிக்கு ம்ர்த்யுவானவனே. இத்தால் ஸர்வஸாதாரணனாயிருக்கச்செய்தேயும் தன்திருவடிகளிலே தலைசாய்த்தார்க்கு விரோதிகளானார், தனக்கு ஶத்ருவென்கை. .. ... ... (௩௮)

அ.—முப்பத்தொன்பதாம்பாட்டு. ஸாதுபரித்ராணமும் துஷ்க்ர்த்விநாஶமும் சொல்லிற்று - கீழ்ப்பாட்டில்; இதில - இவ்வளவு புகுரவில்லாத விந்த்ராதிகளுடைய விரோதிகளான ராக்ஷஸவர்க்கத்தை யழியச்செய்து அவர்கள் குடியிருப்பைக்கொடுத்தபடியையும், அவ்விந்த்ரன்றான் ஆச்ரிதனைக்குறித்து ப்ரதிகூலனான போது அவனை யழியச்செய்யாதே முகாந்தரத்தாலே ஆச்ரிதனை ரக்ஷிக்கும் நீர்மையையும் அநுபவிக்கிறார்.

வெற்பெடுத்துவேலைநீர்கலக்கினாயதன்றியும
வெற்பெடுத்துவேலைநீர்வரம்புகட்டிவேலைசூழ்
வெற்பெடுத்தவிஞ்சிசூழிலங்கைகட்டழித்தநீ
வெற்பெடுத்துமாரிகாத்தமேகவண்ணனல்லையோ. (௩௯)

ப-ரை.—இந்த்ராதிதேவர்களபேக்ஷிதம செய்கைக்காக, வெற்பெடுத்து மந்த்ரபர்வதத்தை பரிகரமாகக்கொண்டு, வேலைநீர-திருப்பாற்கடலை, அவர்க விழந்தவை யடங்கலும் உண்டாம்படி, கலக்கினாய—, அதன்றியும-அது... லே, வெற்பெடுத்து-கனடமலைகளைப்பிடுங்கி, வேலைநீர் - ஸமுத்ர ஜலத்தில

மேலே, குரங்குகள் காலாலே நடந்துபோம்படி, வரம்புகட்டி-பூமியிலே அணை கட்டுமாப்போலே அணைகட்டி, வேலைசூழ் - கடலை அகழாகவுடைத்தாய், ]வெற்பு - த்ரிகூடபர்வதத்திலே விச்வகர்மாவாலே சமைக்கப்பட்டிருப்பதாய், எடுத்த-கடக்கவரிதான, இஞ்சிசூழ - மதிளாலே சூழப்பட்ட, இலங்கை - லங்கையிலே, கட்டு-தர்மம் தங்காதபடியான ஸ்வபாவத்தை, அழித்த - மாற்றியருளின, நீ-தேவரீர், வெற்பெடுத்து - கோவர்த்தநபர்வதத்தையெடுத்து, மாரிகாத்த-வர்ஷாபத்தைப்போக்கி யருளின, மேகவண்ண னல்லையே - காளமேக நிபச்யாமமான வடிவையுடையவனல்லையோ என்கிறார்.

வ்யா.—(வெற்பெடுத்து வேலைநீர்கலக்கினாய்) தூர்வாஸஶ் ஶாபத்தாலே இந்த்ராதிகள் ஐச்வர்யத்தையிழந்து, "शरणं त्वामनुप्राप्ताः" "ஶரணம்த்வாமநுப்ராப்தாः" என்கிறபடியே-திருவடிகளிலே சரணம்புக, கடல்கொண்டு முழுகும் மந்தரத்தைப் பரிகரமாகக்கொண்டு ஸமுத்ரஜலத்திலே அவர்களிழந்தவையடங்கலும உத்பந்நமாம்படி கலக்கினாய். "रत्नाकरम्, मत्स्याकरम्" "ரத்நாகரம், மத்ஸ்யாகரம்" என்று லோகப்ரஸித்தமாயிருந்துள்ள ஸமுத்ரஸ்வபாவத்தைத்தவிர்த்து ஸ்வர்க்கத்திலுள்ள பதார்த்தங்களுக்கு உத்பாதகமாக்கினாய். "एतत्कथं कथय मन्मतिस्त्वया सौहृदात् स्वभावनियमं प्रथितं त्रिलोक्याम्। अश्वाप्सरोविषसुधाविधुपारिजातलक्ष्म्यात्मना परिणतो जलधिर्बभूव" "ஏதத்கதம் கதயமந்மதிதஸ்த்வயா ஸௌஹ்ருதாத் ஸ்வபாவ நியமம் ப்ரதிதம்த்ரிலோக்யாம்। அஶ்வாப்ஸரோ விஷஸுதாவிது பாரிஜாத லக்ஷ்ம்யாத்மநாபரிணதோ ஜலதிர்பபூவ" என்னக் கடவதிறே. "பரயோஜநாந்தரபரன்" என்று அவன சிறுமைபாராதே, மோக்ஷப்ரதனாயிருக்கிற தன்பெருமை பாராதே, "ஏஶ்வரோஹம்" என்றிருக்குமவனென்று அவனுடைய பூர்வவ்ருத்தம்பாராதே, "சரணமென்று நின்றான்" என்றத்தையே பார்த்து ரக்ஷித்தருளினாய்.(அதன்றியும்)இதுதானே போருமாயத்து ஆச்ரிதர்உனனைத் தருசம்மன்றுவிசவஸித்திருக்கைக்கு, அதுக்குமேமல்ல.(வெற்பெடுத்து வேலைநீர் வரம்புகட்டி) கண்டமலைகளைப்பிடுங்கி, ஸமுத்ரஜலத்தின்மேலே,பூமியிலேவரம்புகட்டுமாப்போலே,பலவங்கங்கள் காலாலே நடந்துபோம்படி அணைகட்டி.இதொரு அதிமாநுஷமான ஆஶ்சர்யம். அகாதமான ஸமுத்ரத்தில மலையமிழ்ந்ததில்லை, திரைக்கிளர்த்தியில் மண்கரையப்பெற்றதில்லை. (வேலைசூழ் வெற்பெடுத்தவிஞ்சிசூழிலங்கை கட்டழித்தநீ) கடலை அகழாக வுடைத்தாய, த்ரிகூடபர்வதத்திலே விசவகர்மாவாலே சமைக்கப்பட்டதாய், கடக்க வரிதான மதிளாலே சூழப்பட்ட லங்கையினரணை, "यथा सैकतमम्भसि" "யதாஸைகதமம்பஸி" என்னும்படியே அநாயாஸேநவழித்தநீ. இஞ்சி-மதிள். கட்டு-அரணும்; இயல்வும்.

தர்மம்தொங்கக்கடவதன்றிக்கே யிருக்கிற லங்காஸ்வபாவத்தையழித்து, "विभीषणस्तु धर्मात्मा" "விபீஷணஸ்துதர்மாத்மா" என்கிறபடியே தார்மிகனை நிர்வாஹகனாக்கி, தர்மமே ஸஞ்சரிக்கும்படியைச் சொல்லிற்று;

இனி இந்த்ரன்றான் ஆச்ரிதர்க்கு துஷ்க்ர்த்தாளுல் அவனை யழியச்செய்யாதே முகாந்தரத்தாலே ஆச்ரிதனை ரக்ஷிக்கும்படி சொல்லுகிறது (வெற்பெடுத்துமாரிகாத்த மேகவண்ணனல்லையே) "இடையர் க்ர்ஷ்ணனையண்டை கொண்டு நம்முடைய மகபங்கம் பண்ணினர்கள்" என்று ஸம்வர்த்தககணத்தையேவி வர்ஷிப்பிக்க; அவனை அழியச்செய்கை ப்ராப்தமாயிருக்க ப்ராதிகூல்யத்தில் நியதனல்லாமையாலும், "ந நமேயம்" "நநமேயம்" என்கிறபடியே திருவடிகளில் தலைசாயேனென்கிற நியதியில்லாமையாலும, கோவர்த்தநகிரியை யெடுத்து வர்ஷத்தால் வந்த அநர்த்தத்தை பரிஹரித்த மஹோதாரனல்லையோ. காளமேகநிபஶ்யாமமாய் ச்ரமஹரமான விக்ரஹத்தைச் சொல்லவுமாம். ஒருமேக ஸமூகம் பாதககோடியிலேயாய் நிறக ஒருமேகத்தாலே வந்த ஆபத்தைப்பரிஹரித்தாப்போலே யிருந்ததென்கை ... ... .. (௩௯)

அ.—நாற்பதாம்பாட்டு. ஈஶ்வராபிமாநிகளான தேவதைகளுடைய ரக்ஷணப்ரகாரஞ் சொல்லிற்று - கீழ்; இப்பாட்டில் - அநந்ய ப்ரயோஜநனை ரக்ஷிக்குமிடத்தில் நித்ய ஸூரிகளுக்கு மேலெல்லையானபிராட்டிமாரோடு ஸம்ஸாரிகளுக்குக் கீழான திர்யக்குக்களோடு வாசியறத் தன்னையொழியச்செல்லாமை யொன்றுமே ஹேதுவாக விரோதிநிரஸநபூர்வகமாக ரக்ஷிக்கும் ஆச்சர்யங்களையநுபவிக்கிறார்.

ஆனைகாத்தோரானைகொன்றதன்றியாயர்பிள்ளையாய்
ஆனைமேய்த்தநியாநெயுண்டியன்றுகுன்றமொன்றினால்
ஆனைகாத்துமையரிக்கண்மாதரார்திறத்துமுன்
ஆனையன்றுசென்றடர்த்தமாயமென்னமாயமே. (௪0)

ப-ரை.—ஆனை-முதலையாலே பிடர்பட்ட ஸ்ரீகஜேந்த்ராழ்வானை, காத்து-ரக்ஷித்து, அதன்றி அதுக்குமேலே, ஆயர்பிள்ளையாய்-இடைச்சாதிக்கு நியாம்யனாயவதரித்து, ஓர்-அத்விதீயமான, ஆனை-குவலயாபீடமென்கிற யானையை, கொன்று-அநாயாஸேந கொன்று, அதன்றி-அதுக்குமேலே, அந்தஜாதிக்குசிதமாக, ஆனை-பசுக்களை, மேய்த்து-புலுளவிடமேய மெய்த்து, ஆநெய்-பசுக்களின்நெய்யை, உண்டி - அமுதுசெய்யாநிற்றி; அதுக்குமேலே, அன்று-இந்த்ரன் ஸப்தமேகங்களையும ஏவிவர்ஷிப்பித்தபோது, குன்றமொன்றினால் - கைக்கெட்டிறமொருமலையை யெடுத்து, ஆனைகாத்து - பசுக்களை ரக்ஷித்து, மை-அஞ்சநத்தாலே அலங்க்ருதமாய், அரி - செவ்வரிகருவரிகளோடுகூடின, கண்-திருக்கண்களையுடைய, மாதரார்திறத்து - நப்பின்னைபிராட்டிக்காக, முன்-ஸம்ச்லேஷார்த்தமாக ஒப்பித்திருக்கிற தசையிலே, சென்று-அவள் ஸந்நிதியிலே சென்று, ஆனை - ரிஷபங்களேழையும், அடர்த்த - ஸம்ஹரித்த, மாயம் - ஆச்சர்யம், என்னமாயம்-என்ன ஆச்சர்யமென்கிறார். (௪0)

வ்யா.—(ஆனைகாத்து) அநந்யப்ரயோஜநதவமொழிய இவ்வருகுஜந்மாதிகளாலே யொருயோக்யதையில்லாத ஸ்ரீகஜேந்த்ராழ்வானை ரக்ஷித்து. இன்னவானை யென்னாதே, "ஆனைகாத்து" என்கிறாராய்த்து அவனுடைய ஆபத்பரவஶ்யத்தியாலும் அவனைரக்ஷித்த

ரக்ஷணப்ரகாரத்தின் ப்ரஸித்தியாலும். "గజాకర్షతే తీరే" "పరమాపద మాపన్నః" கஜஆகர்ஷதே தீரே" "பரமாபதமாபந்ந:" என்னும் படியிறே அவனுடைய ஆபத்து. "అతన్త్రిత చమూపతి ప్రహిత హస్తమ్" "அதந்த்ரிதசமூபதிப்ரஹிதஹஸ்தம்" "தவஞ்செய்தார் வெள்கிநிற்பவிண்ணுளார்வியப்ப" என்னக்கடவதிறே. "அதன்றியாயர் பிள்ளையாய்-ஓரானைகொன்று" என்றநவ்யம். (அதன்றியாயர் பிள்ளையாய்) தேவரீரைத தஞ்சமன்றிருக்கைக்கு ஸ்ரீகஜேந்த்ராழ்வானுடைய ரக்ஷணப்ரகாரமே யமையும், அதுக்குமேலே, இடைச்சாதிக்கு நியாமயனு யவதரித்து. கீழ் "அசோதையாய்ச்சி பிள்ளையாய்" எனறத்தை வ்யாவர்த்திக்கிறது. (ஓரானைகொன்று) ஸ்ரீவஸுதேவர் தேவகிப்பிராட்டி, "నసమం యుద్ధమిత్యాహుః" "நஸமம்யுத்தமித்யாஹு:" என்கிற ஸ்ரீமதுரையில் பெண்களாக இவ்வநுகூலவர்க்கமடைய பயப்படும்படி மதிப்பித்து கம்ஸன் நிறுத்தின அத்விதீயமான குவலயாபீடத்தை அநாயாஸேநக்கொன்று. ஸ்வாபாவிகமான பலமும் மதபலமுமாய அத்விதீயமாயிறே யிருப்பது. "கடங்கலந்தவன் கரி" என்றாரிறே. (அதன்றியானைமேய்த்து) அதுக்குமேலே, அந்த ஜாதிக்கு உசிதமாகப் பசுக்களை ரக்ஷித்து. "விளையாடுகுழலைச் சூழவே நின்று காலிமேய்க்கவல்லாய்" என்கிறபடியே தன்னமுகாலே வயிறுநிரம்பும்படி யிறே பசுக்களை ரக்ஷித்தது. (ஆநெயுண்டி) பசுக்களின் நெயயை யமுதுசெய்யாநிற்றி. ஸ்தயகாமனாய் விஜிகித்ஸனாயிருக்கிற நீ ஆச்ரிதஸ்பர்ஶமுடையதொருத்ரவ்யத்தை யொழியச்செல்லாமையாலே யிறே அததைவிரும்பி யமுதுசெய்தது.

(அன்றுகுன்றமொன்றினாலானைகாத்து) அதுக்குமேலே இந்த்ரன், "ஸம்வர்த்தககணம்" என்கிற மேகஸமூஹத்தைக்கொண்டு ஊரையழியச்செய்கிற தசையிலே கைக்கெட்டிற்றொருமலையையெடுத்து பசுக்களை ரக்ஷித்தது. ஆன்-பசு. கீழிற்பாட்டிலும இவ்வபதாநம் சொல்லிற்று, அதுக்கும் இதுக்கும் வாசியெனனென்னில்; ப்ராதிகூல்யத்தில் நியதனலலாமையாலே இந்த்ரனை யழியச்செய்யமாட்டாதநீர்மையைச் சொல்லிற்று-அஙகு; இங்கு - தன்னை யொழியச் செல்லாத பசுக்களை ரக்ஷித்தபடியைச்சொல்லுகிறது. (மையரிககண் மாதரார்திறத்து) அஞ்ஜநததாலே அலங்க்ர்தமாய், செவ்வரிகருவரிகளோடே கூடினதிருககண்களையுடைய நப்பின்னைப்பிராட்டிக்காக. (முனனனையாறு சென்றடர்ததமாயம்) ஸமஶ்லேஷார்ததமாக ஓப்பித்து நிற்கிறதசையிலே அவள்ஸந்நிதியிலே சென்று ரிஷபங்களேழையு மடர்தத ஆஶ்சர்யம். (என்னமாயமே) முன்புசெய்த செயல்களுக்கும் அவ்வருகே யொன்றாயிருந்ததே!. ... (சo)

அ.—நாற்பத்தோராம்பாட்டு. நீ உகந்தாரை, தத்ஸஜாதீயனாய் வந்தவதரித்து ஸ்வரூபாநுரூபமாக ரக்ஷிக்கும்படியையும், விமுகரான ஸம்ஸாரிகளை ஸங்கல்பத்தாலே கர்மாநுகூலமாக ரக்ஷிக்கும்படியையும், அநுஸந்திக்கப்புக்கால் பரிச்சேதிக்க முடியாதாயிருந்ததீ! யென்கிறார்.

ஆயனாகியாயர்மங்கைவேயதோள்விரும்பினாய்;
ஆயநின்னையாவர்வல்லரம்பரத்தொடிம்பராய்,
மாயமாயமாயைகொல்லதன்றிநீவகுத்தலும்
மாயமாயமாக்கினாயுன்மாயமுற்றுமாயமே. (சக)

ப-ரை.—ஆயனாகி-இடைச்சாதியிலேபிறந்து, ஆயர்மங்கை - நவயௌவந ஸ்வபாவையான நப்பின்னைப்பிராட்டியுடைய, வேய-மூங்கில்போலேஸ்ப்ர்ஹணீயமான, தோள்விரும்பினாய்-திருத்தோடே ஸம்ச்லேஷித்தாய்; அம்பரத்தோடு-ப்ரஹ்மாதி தேவர்களிலும், இம்பராய் - விசேஷஜ்ஞரான மநுஷ்யர்களிலும், நின்னை - ஸர்வசக்தியுக்தனானவுன்னை, யாவா-யார், ஆயவல்லா-ஆராய்கைக்கு ஸமர்த்தா;மாய-ஆச்சர்யசக்தியுக்தனே,மாயம்-ப்ரகர்தி ஸம்பந்தத்தால்பிறந்த, மாயைகொல் - அஜ்ஞாநத்தாலேயா; அதனறி - அந்த அவதார வைபவத்தையொழிய, நீ-தயாளுவானநீ, வகுத்தலும்-மஹாதிகளை விபஜித்திருந்தபோதிலும், அவன தந்த கரணங்களை பரங்களைக்கொண்டு தங்களுக்கு ஹிதம்பார்க்க மாட்டாதே, மாயும் - விஷயாந்தரப்ரவணராய் நசியாநிற்பர்கள்; அவ்வளவிலும் உபேக்ஷியாதே, மாயமாக்கினாய் - ஸ்வசரீரமான பரக்ர்தயவஸ்தமாக்கினாய், உன-உன்னுடைய, மாயமுற்றும்-மாநஸவ்யாபாரமான ஸங்கல்பஜ்ஞாநமடங்கலும், மாயமே-ஆச்சர்யாவஹமே யாயிராநின்றதீ! யென்கிறார். (சக)

வ்யா —(ஆயனாகி ஆயர்மங்கை வேயதோள் விரும்பினாய்) இடைஜந்மத்திலே யவதரித்து நவயௌவநஸ்வபாவையான நப்பின்னைப்பிராட்டியுடைய, சுற்றுடைமையாலும் பசுமையாலும் செவ்வையாலும வேயபோலே ஸ்ப்ர்ஹணீயமான திருத்தோளோடே ஸம்ஶ்லேஷித்தாய். நித்யமங்கள விக்ரஹத்தை கோபஸஜாதீயமாக்கிக்கொண்டவதரித்து அத்யாதரத்தைப் பண்ணினாய். "ஆனையன்று சென்றடர்த்த" என்று கீழ்ப்பாட்டிலும் இவ்வபதாநத்தைச் சொல்லிற்று, இதுக்கு மதுக்கும வாசியென்னென்னில்; விரோதிநிரஸநத்திலே நோக்கு. அதில்-ஸௌரிபோக்யமான விக்ரஹத்தை கோபஸஜாதீயமாக்கி வந்தவதரித்தபடியைச சொல்லுகிறது; இது-அநந்யப்ரயோஜநரான ஆச்ரிதரக்ஷணத்துக்கு முபலக்ஷணம். (ஆய நின்னையாவர் வல்லரம்பரத தொடிம்பராய) உபரிதநலோகங்களிலுண்டான ப்ரஹ்மாதிகளிலும், பூமியில் விஶேஷஜ்ஞரான மநுஷ்யாதிகளிலும் ஸர்வஶக்தியுக்தனான உன்னை யாவர் காணவல்லார். அப்ராக்ருத விக்ரஹத்தை ப்ராக்ர்த ஸஜாதீயமாக்கினவித்தை எவர் பரிச்சேதிக்கவல்லார்; ஒருவருமில்லையெனகை. (மாய) ஆஶ்சர்ய சக்துயுகதனே.

நாற்பத்தோராம்பாட்டு. "ஆனையன்று சென்றடர்த்த" என்று-ரிஷபத்தைச்சொல்லுகைக்கு அவதரித்தபடி சொல்லுகிறதென்று சங்காபிப்பராயம்.

( மாயமாயைகொல் ) "ஸஸமாயாஸரத்யயா" "மமமாயாதுரத்யயா" என்கிறபடியே ப்ரக்ருதி ஸம்பந்தத்தால்பிறந்த அஜ்ஞாநத்தாலேயோ, அன்றிறே. கிம், க்ஷேபே "மாயாவயுநஞ்ஜ்ஞாநம்" "மாயாவயுநம்ஜ்ஞாநம்" என்கிறபடியே மாயாசப்தம் ஜ்ஞாநவாசியாகிறது. அஜ்ஞாநமும் ஜ்ஞாநவிசேஷமிறே. அஸ்ப்ருஷ்டஸம்ஸாரகந்தனானதான், அப்ராக்ருதமாய் அதீந்த்ரியமான திவ்யவிக்ரஹத்தை ப்ராக்ருதஸஜாதீயமாக்கி சக்ஷுர்விஷயமாக்கின வித்தையறியலாமோ. "அவாக்யநாதர:" "அவாக்யநாதர:" என்கிறபடியே ஸ்வயம் பூர்ணனானவன் ஒருகோபஸ்த்ரீயுடைய வடிவழகிலே அத்யாதரத்தைப்பண்ணின வித்தைத்தான் எவர்பரிச்சேதிக்க.(அதன்றி) அந்தவவதார வைபவத்தையொழிய. ஸகலஜகத்ஸ்ருஷ்ட்யாதிகளால் பண்ணின வுபகாரங்களை பரிசசேதிக்க வொண்ணுமோதென்கிறதுமேல் (நீவகுத்தலும) ஸம்ஸாரிகளுடைய விழவிலே * தயமாநமநாவாயிருந்துள்ளநீ, உன்னை லபிக்கைக்கு ஹேதுவானஜ்ஞாநமுண்டாய் நல்வழிபோகைக்குக் கரணகளே பரங்களைக்கொடுக்கச்செய்தேயும், மஹதாதிவிசேஷாந்தமான வகுப்பு, தத்கார்யமான வண்டங்களாகிற வகுப்பு, அண்டாந்தர்க்கதமான சதுர்த்தச புவநாத்மகமானவகுப்பு,ததந்தர்கதத தேவாதிகளாகிற வகுப்பு.(மாய)நசிக்க. அந்த சரீரங்களைக் கொண்டு தந்தாம் ஹிதம் பார்க்கமாட்டாதே விஷயாந்தரப்ரவணராய நசிப்பார்கள். (மாயமாக்கிறாய்) அவ்வளவிலு முபேக்ஷியாதே இவற்றுக்கு இனி ஸம்ஹாரமே ஹிதமென்று பார்த்து ஸ்வசரீரமான ப்ரக்ருத்ய வஸ்தமாககிறாய். (உன்மாயமுமுமாயமே,) உன்னுடைய மாநஸவ்யாபாரரூபமான ஸங்கல்பஜ்ஞாநமடங்கலும் ஆஸ்சர்யாவஹமாகாநின்றதி!. ... ... (சக)

---

பரிச்சேதிகக்ப் போகாமைக்கு அருளிச்செய்கிறார் (மாயமாயைகொல்என்று. ) மாயமாயை - ப்ரக்ருதி ஸம்பந்தத்தால்வந்த அஜ்ஞாநமென்னுதல்; "கொல்" என்கிற கிம் - க்ஷேபத்திலேயாய், அஜ்ஞாநமென்று ஜ்ஞாநமென்னுதல். * மாயசபதம் ஜ்ஞாநத்தைச் சொல்லுமோ வென்ன; அருளிச்செயகிறார் (மாயாவயுநஞ்ஜ்ஞாநம் - மாயாவயுநம ஜ்ஞாநமித்யாதி.) மாயையை அஜ்ஞாந வாசகமாகச சொல்லிற்றே யென்ன; அருளிச்செய்கிறார் ( அஜ்ஞாநமுமித்யாதி.) (அறியப்போகாமை) ப்ராக்ருதராயிருககிற ப்ரஹ்மாதிகளுக்கேயன்றிக்கே, அப்ராக்ருதராயிருக்கிற நித்யஸூரிகளுக்கு மறியப்போகாதென்னுமத்தை, அமசத்தமொன்கிறது அர்த்தாந்தரமாக வருளிச் செய்கிறார் (அஸ்ப்ருஷ்டேத்யாதி.) இத்தால் - ப்ரக்ருதிஸம்பந்தத்தால் வந்த அஜ்ஞாநத்தாலே அறியப்போகாதாப்போலே, ப்ரக்ருதிஸம்பந்தி ரஹிதராயிருக்கிற ஜ்ஞாநாதிகர்க்கும அறியப்போகாதென்றதாய்த்து. மாய - நசிக்க. ... ... (சக)

அ.—நாற்பத்திரண்டாம்பாட்டு. "நீவகுத்தலும் மாயமாய யாக்கினாய்" என்று - ஸ்ர்ஷ்டி ஸம்ஹாரங்கள் சேரப்ரஸ்துதமாகை யாலே, "[illegible]" "ஏகஏவருத்ர: ஸர்வோஹ்யேஷ ருத்ர:" என்று ஶ்ருதிப்ரஸித்தராயிருப்பாரு முண்டாயிருக்க, நம்மையே அபரிச்சிந்ந ஸ்வபாவராகச் சொல்லக்கடவீரோ வென்று பகவதபிப்ராயமாக; அந்தருத்ரனுக்குவந்த ஆபத்தை, அவதரித்துத் தாழநின்று அந்நிலையிலே போக்கின தேவரீர்க்கு இதுபரிஹரிக்கை பரமென்கிறார்.

வெறிசைந்தசெக்கர்மேனிநீறணிந்தபுன்சடைக்
கீறுதிங்கள்வைத்தவன்கைவைத்தவன்கபாலமிசை
ஊறுசெங்குருதியால்நிறைத்தகாரணந்தனை
ஏறுசென்றடர்த்தவீசபேசுகூசமின்றியே. (சஉ)

ப-ரை.—வெறு-வெருக, இசைந்த-தன்னுடையஸம்ஹாத்ர்த்வத்துக்குச்சேர்ந்த, செக்கர்மேனி - க்ருத்தமானவேஷத்தையும், நீறணிந்த - பஸ்மந்தரித்த சரீரத்தையும், புல்-கோரமாயிருந்துள்ள, சடை-ஜடையையுமுடையனாய், அந்த ஜடையிலே, கீறுதிங்கள் வைத்தவன்-கலாமாத்ரமான சந்த்ரனைதரித்தவனாய், கைவைத்த-கையிலேவைத்த, வல-வலிய, கபாலமிசை-கபாலத்திலே, ஊறு-ஊன திருமேனியிலே யூறுகின்றுள்ள, செங்குருதியால்நிறைத்த-சிவந்த ரக்தமாகிற ஜலத்தாலே நிறைத்த, காரணந்தனை - ஹேதுவை; ஏறு - ரிஷபங்களினுடைய க்ரௌர்யத்தையும், தன்னுடைய ஸௌகுமார்யத்தையும்பாராதே, கூசமின்றி-கூசாமல், சென்று - அவற்றி னருகேசென்று, அடர்த்த - நிரஸித்த, ஈச-நியாமகனே, பேசு-எனக்கருளிச்செய்யவேணும். (சஉ)

வ்யா.—(வெறிசைந்தசெக்கர்மேனி) வெருகத்தன்னுடைய ஸம்ஹாரத்வத்துக்குச் சோந்த க்ருத்தமான வேஷத்தையுடையனாய். செக்கர்-சிவப்பு. சிவத்தல் - கோபித்தல். ஸ்ர்ஷ்ட்யாதித்ரயத்துக்கும்தேவரீர்க்கு தயையேயிறே ஸ்வபாவம். (நீறணிந்தபுன்சடை) பஸ்மோத்தூளிதஸர்வாங்கனாய்க்ர்பணமானஜடையையுடையனாய். புன்மை-பொல்லாமை. இத்தால் – ப்ராயஶ்சித்தத்துக்கும் ஸாதகத்வத்துக்கும் ஏகாந்தமான லிங்கத்தையுடையவனென்கை. (கீறு திங்கள் வைத்தவன்) அந்த ஜடையிலே கலாமாத்ரமான சந்த்ரனை வைத்தவன். ஆக, ஸமஹர்த்ர்த்வமாத்ரமேதொழிலென்றும், சாஸ்த்ரவஶ்யதையை ஸூசிப்பிக்கிற ஜடாநிகளையுடையவனென்றும், சந்த்ரதாரணத்தாலே-போகப்ரதாநனென்றும் சொல்லிற்றாய்த்து. (கை வைத்தவன் கபாலமிசை) கையில்வைத்த வலியகபாலத்திலே. பாதகித்வப்ரகாஶகமான கபாலதாரணம், பாதகம் போனாலல்லது போகாத ப்ராபல்யத்தை யுடைத்தான கபாலமென்றும் சொல்லிற்றாய்த்து. ஶாஸ்த்ரவஶ்யனுக்கிறே இப்பாதகமுண்டாவது.

---

நாற்பத்திரண்டாம்பாட்டு. பாதகமுண்டாவது - பாதகபீதியுண்டாவதென்றபடி.

(ஊறுசெங்குருதியால்நிறைத்தகாரணந்தனை)உன்திருமேனியிலே யூறுநின்றுள்ளரக்தஜலத்தாலேநிறைத்தஹேதுவை.(பேசு)உன்னுடைய ஈஶ்வரத்வமும் அவனுடைய ஈசிதவ்யத்வமுமொழிய வேறு ஹேதுவுண்டாகில்அருளிச்செய்யவேணும்.உன்னுடையரக்ஷகத்வமும் அவனுடைய ரக்ஷ்யத்வமுமொழிய ஹேதுவுண்டோ.இங்கே, "செங்குருதி" என்றும்,மேலே,"அலங்கல் மார்வில் வாசநீர்கொடுத்தவன்" என்றுமருளிச்செய்யாநின்றார்,இரண்டுக்கும்பேதமென்னென்னில்; அப்ராக்ருதஸம்ஸ்தாநத்தை இதரஸஜாதீயமாக்கின மெய்ப்பாட்டைச்சொல்லுகிறது-இங்கு;"ஸர்வகந்த:" "ஸர்வகந்த:" என்கிற அப்ராக்ர்த ஸம்ஸ்தாநத்தை இதரஸஜாதீயமாக்கிற்றென்று தோற்றுகைக்காகவந்த வைலக்ஷண்யத்தைச்சொல்லுகிறது-அங்கு.(கூசமின்றியே-ஏறுசென்றடர்த்தவீசபேசு) ரிஷபங்களினுடைய க்ரௌர்யத்தையும் தன்ஸௌகுமார்யத்தையும்பார்த்துக்கூசாதே, மேல்விழுந்தடர்த்து உன்னீசவரத்வம் நிறம்பெறும்படி நின்றவனே! எனக்கருளிச்செய்யவேணும். சாஸ்த்ரவஶ்ய ஜந்மத்திலே பிறந்து ஏழுகோஹத்யையைப்பண்ணச்செய்தேயும் ஈஶ்வரத்வம் நிறம்பெறநின்றாய்நீ; ருத்ரன் ஈச்வரத்வத்தால் வந்த மேன்மை குலையாதே நிற்கிறவிளவிலே பாதகியானான், அப்பாதகத்தை யவதரித்து தாழநின்றநிலையிலேபோக்கியருளினாய, இந்நெடுவாசியை தேவர்களே எதிரிகளாயழிக்கப்புக்கால்தான் அழியுமோ. "கூசமின்றியே-பேசு" என்னவுமாம். "அஹம்வோ பாந்தவோஜாத:" "அஹம்வோ பாந்தவோஜாத:" என்று-சிலர்க்கு தேவரீருடைய மேன்மையை மறைத்துப் பரிமாறுகிறபடியை நினைத்துக்கூசாதே, "ஜந்மகர்ம ச மே திவ்யம்" "ஜந்மகர்மசமேதிவ்யம்" என்கிறபடியே அவதாரத்தினுடைய அப்ராக்ர்தத்வத்தையுள்ளபடி யறிகிற வெனக்கு அருளிசசெய்யவேணும்.(சஉ)

அ.—நாற்பத்துமூன்றாம்பாட்டு. ருத்ரனுடைய பாதகத்தைப் போக்கினவளவேயன்றிக்கே, க்ர்ஷ்ணனாய்வந்தவதரித்து பூபாரமான கம்ஸனைபரிகரமாகநிரஸிக்கையாலும்,அந்தருத்ராதிகளோடு கர்மிகீடாதிகளோடு வாசியற ஸ்ரீவாமநனாய் எல்லார்தலைகளிலும் திருவடிகளைவைத்து உன்ஸர்வஶேஷித்வத்தை ப்ரகாஶிப்பித்தபடியும் ஜகத்காரணபூதன் நீயேயென்கிறார். "காலநேமிர்ஹதோயோஸௌ" "காலநேமிர்ஹதோயோஸௌ" என்று - பூமி கம்ஸனை பூபாரமாகச் சொன்னாளிறே.

இந்தநெடுவாசியை அவளாலும் இல்லை செயயப் போகாமையாலே அழிக்கப்போகாதென்கிறது. ... ... ... ... (சஉ)

வெஞ்சினத்தவேழவெண்மருப்பொசித்துருத்தமா
கஞ்சனைக்கடிந்துமண்ணளந்துகொண்டகாலனே
வஞ்சனத்துவந்தபேய்ச்சியாவிபாலுள்வாங்கினாய்
அஞ்சனத்தவண்ணனாயவாதிதேவனல்லையே. (சஙு)

ப-ரை.—வெம்சினம் - மிககோபத்தையுடைய, வேழம்-குவலயாபீடத்தினுடைய, வெள்-வெளுத்த, மருப்பு-கொம்பை, ஒசித்த-அநாயாஸேநமுறித்து, அந்தச்செய்தியைக்கேட்டு, உருத்த-கோபித்தவனாய், மா-மிக்கவலிமையையுடையனான, கஞ்சனை-கம்ஸனை, கடிந்த-நிரஸித்து, தாய்வடிவுகொண்டு, வஞ்சநத்து வந்த-வஞ்சகையாய்வந்த, பேய்ச்சி-பூதனையினுடைய, ஆவி-ப்ராணனை, பால்-பாலோடேகூட, உள்வாங்கினாய் - அமுதுசெய்தருளினவனாய், வாமநாவதாரஞ்செய்தருளி-நீரேற்றுப்பெற்ற, மண்-பூமியை, அளந்துகொண்ட - திருவடிகளாலே யளந்து கொள்ளுகையாலே, காலனே - ப்ரதிகூலர்க்கு ம்ருத்யுவானவனே, அஞ்சநத்தவண்ணனான-மைபோன்ற திருநிறத்தை யுடையனாய், - ஆதிதேவனல்லையே - உத்பாதகனானவனே! என்று ஈடுபடுகிறார். (சஙு)

வ்யா.—(வெஞ்சினத்த வேழவெண மருப்பொசித்து) வெவ்விய சினத்தையுடைய குவலயாபீடத்தினுடையவெளுத்தகொம்பை அநாயாஸேநமுறித்து. வெவ்வியசினம்-அதிகோபம். அதினுடையசினமும் ஹிம்ஸாபரிகரமானகொம்பும பயஹேதுவானவோபாதி கொம்பினுடையவர்ணமும் பயஹேதுவாயிருக்கிறதாய்த்து இவர்க்கு. (உருத்தமாகஞ்சனைக்கடிந்து) அதுகேட்டுக்ருத்தனாய்ப்ரகர்த்யாபலோத்தரனான, கமஸனுடைய நினைவைக்கடிந்து-அவன் நினைதத நினைவையவன்றன்னோடேபோக்கி. "[Grantha text]" "கிமிந்த்ரேணாலப்யவீர்யேண." "வஞ்சனத்துவந்தபேயச்சியாவிபாலுள்வாங்கினாய்-மண்ணளந்துகொண்டகாலனே" என்றந்வயம். குவலயாபீடத்தைபபோலேயும கம்ஸனைப்போலேயும் எதிரியாய்த தோன்றுகையன்றிக்கே, தாயவடிவுகொண்டு * வஞ்சனையால்வந்த பூதனையினுடைய ப்ராணனைப் பாலோடேகூட வாஙகினாய். அவளும் தாயாய் முலைகொடுக்கவந்தாள்; இவனும் பிள்ளையாய் ஆதரத்தோடே அம் முலைப்பாலை யமுதுசெய்தான். துஷ்ப்ரக்ருதிகளுக்கு நாஸகரமான தர்மிஸ்வபாவத்தாலே அவள்நினைவு அவள்தன்னோடே போனவித்தனை. முலைவழியாலே ப்ராணனைவாங்கின ஆஸ்சர்யத்தாலும், துர்வர்க்கத்துக்கு ஜ்ஞாததயாவன்றிக்கே ஸத்தயாநாஸகரானகையாலும், ஸர்வாதிகன்நீயேயென்கை. "[Grantha text]" "ஸ்தந்யம்தத்விஷஸம்மிஸ்ரம் ரஸ்யமாஸீஜ்ஜகத்குரோ:" என்னக்கடவதிறே.

நாற்பத்துமூன்றாம்பாட்டு. கம்ஸன் பூபாரமோவென்ன; அருளிச்செய்கிறார் (காலநேமியித்யாதி.) விஷ்ணுவாலே கொல்லப்பட்ட "காலநேமி" என்கிற அஸுரன் கமஸனாய வந்து பிறக்கையாலே தனக்குபாரமென்று பூமிசொன்னாளென்றபடி. உரு-மிடுக்கு. தமன்-மிடுக்கிலே அதிகனென்றபடி. மிடுக்கனோவென்ன; அருளிச்செய்கிறார்(கிமிந்த்ரேணேத்யாதி.)மிடுக்கனாகையாலேயன்றோ "அல்பவீர்யேணஇந்த்ரேணகிம" என்று கம்ஸன்சொன்னானென்றபடி.

" உருத்து " என்று பாடமானபோது - குவலயாபீடநிரஸநத்தாலும் திருவுள்ளத்திலே சினம் மாறாமையைச் சொல்லிற்றாகக்கடவது. (மண்ணளந்துகொண்டகாலனே) பூபாரமானகம்ஸநிரஸநமேயன்றிக்கே, தன்சேஷித்வத்தை ப்ரகாசிப்பிக்கைக்காக ப்ரஹ்மாதி ஸகலஜந்துக்கள்தலையிலும் வைத்த திருவடிகளையுடையவனே. "காலனே" என்று - ப்ரதிகூலர்க்கு ம்ருத்யுவானவனே யென்றுமாம். (அஞ்சநத்தவண்ணனாய வாதிதேவனல்லையோ) "నీలతోయదమధ్యస్థా విద్యుల్లేఖేవ భాస్వరా" "நீலதோயதமத்யஸ்த்தா வித்யுல்லேகேவபாஸ்வரா" என்கிறபடியே - விலக்ஷணவிக்ரஹயுக்தனாய் ஜகத்துக்கு உத்பாதகனாய், அத்தாலே யுஜ்வலனானவனல்லையோ. ஜகத்காரணத்வத்தோபாதி அப்ராக்ருததிவ்யவிக்ரஹயோகமும் ஸர்வாதிகவஸ்துவுக்கு லக்ஷணமென்கை. (சங)

அ.— நாற்பத்துநாலாம்பாட்டு. " மண்ணளந்துகொண்ட காலனே" என்று - முறையறிவித்தபடியும் "அஞ்சநத்தவண்ணன்" என்று முறையறிந்தவர்கள ஆச்ரயிக்கைக்குபாச்ரயமானவடிவும் ப்ரஸ்துதமாய்நின்றது-கீழ்; க்ருதாதியுகங்களில் சேதநர்ஸத்வாதிகுணாநுகூலமாக ச்வேதாதிவர்ணங்களை விரும்புகையாலே அந்த காளமேகநிபச்யாமமான நிறத்தை யழியமாறி அவர்களுக்குவர்ணங்களைக்கொண்டு அவ்வவகாலங்களிலே முகங்காட்டச்செய்தேயும் ஸம்ஸாரிகள் காற்கடைக்கொள்ளுவதே! இதென்னதுர்வாஸநாபலம்! என்கிறார்.

பாலினீர்மைசெம்பொனீர்மைபாசியின்பசும்புறம்
போலுநீர்மைபொற்புடைத்தடத்துவண்டுவிண்டுலாம்
நீலநீர்மையென்றிவைநிறைந்தகாலநான்குமாய்
மாலினீர்மைவையகம்மறைத்ததென்னநீர்மையே. (சச)

ப-ரை.—பாலின்நீர்மை-பால்போலே வெளுத்ததிருநிறமும், செம்பொன்நீர்மை-செம்பொன்னினநிறமும், த்வாபரயுகத்தில், பாசியின்-பாசியினுடைய, புறம்-புறத்திலுண்டான, பசுமைபோலும் நீர்மை-பசுமையையொத்த திருநிறமும், பொற்புடை — அழகிதான, தடத்து - தடாகத்திலே, வண்டு - வண்டுகள் நெருங்கப்படிந்து மதுபாநத்தைப்பண்ணி அததால்வந்தஹர்ஷத்தாலே, விண்டு-சிறகுவிரித்து, உலாம்-உலாவாநின்றுள்ள, நீலநீர்மை - கருநெய்தல்மலரின் நிறமும், என்றிவை - என்கிற நான்குநிறங்களும், நிறைந்த - குறைவற்றிருந்துள்ள, காலம்நான்குமாய் - சதுர்யுகமாய், மாலின்நீர்மை-இப்படியிருக்கிற ஸர்வேச்வரனுடைய, நீர்மையை - ஸௌலப்யத்தை, வையகம் - பூமியிலுள்ளார், மறைத்து-அவனை ஆச்ரயியாதே அசட்டைசெய்தது, என்னநீர்மை-என்ன துர்வாஸநையோவென்கிறார். (சச)

வ்யா.—(பாலின்நீர்மை)க்ர்தயுகத்திலுள்ளார் ஸத்வப்ரசுரராய் வெளுப்புஉகக்குமவர்களாகையாலே அவர்களுக்குப் பால்போன்ற நிறத்தைக்கொள்ளும்ஸ்வபாவம்.அதாகிறது-நிறம். "வளையுருவாய்த்திகழ்ந்தான்" என்றும்,"சங்கவண்ணமன்னமேனி"என்றும்சொல்லுகிறஸ்தாநத்திலே "பாலின்நீர்மை" என்றது-இவ்வெளுப்புக்கு ஆச்ரயம் "ஸர்வரஸ:" "ஸர்வரஸ:" என்கிறவிஷயமென்று தோற்றுகைக்காக.(செம்பொன்நீர்மை) த்ரேதாயுகத்தில்வந்தால்"ருக்மாபம்" "ருக்மாபம்" என்றும், "சுட்டுரைத்த நன்பொன் உன்திருமேனியொளி யொவ்வாது" என்றும் சொல்லுகிறபடியே - சிவந்த திருநிறத்தைக்கொள்ளும். "சேயனென்றுந் தீயைக்கண்" என்கிற ஸ்தாநத்திலே "செம்பொனீர்மை" என்றது-அந்நிறத்துக்கு ஆச்ரயமான விக்ரஹம் மஹார்க்கமென்று தோற்றுகைக்காக.(பாசியின் பசும்புறம்போலும் நீர்மை) த்வாபரயுகத்திலே வந்தால் பாசியினுடைய புறத்தில் பசுமைபோலே ஶ்ரமஹரமானதிருநிறத்தையுடையனாய். (பொற்புடைத்தடத்துவண்டுவிண்டுலாநீலநீர்மை)கலியுகத்திலே வந்தால் எல்லாவடிவுங் கொண்டாலும் அபிமுகீகரிப்பாரில்லாமையாலே ஸ்வாபாவிகமான நீலநிறமாயிருக்கும். "நீலநின்றபின்னைவண்ணங்கொண்டல் வண்ணம்" என்னக்கடவதிறே. "கலௌஜகத்பதிம்" "கலௌஜகத்பதிம்." அழகியதடாகத்திலே வண்டுகள் நெருங்கப்படிந்து மதுபாநத்தைப்பண்ணி, அத்தால்வந்த ஹர்ஷத்தாலே சிறகுவிரித்து உலாவாநின்றுள்ள நீலப்பூவின் நிறம்போலேயிருக்கிற நிறத்தையுடையனாய். இத்தால் – ச்ரமஹரமான செவ்வியை யுடைத்தான நீலப்பூவென்கை. பொற்பு - அழகு. விண்டல் - அலர்தல். (என்றிவை நிறைந்த காலநான்குமாய்)ஆச்ரிதார்த்தமாகக்கொள்ளும் அந்நிறங்கள் குறைவற்றிருந்துள்ள சதுர்யுகமாய். இந்நிறங்கள் நாலுயுகத்திலும் குறைவற்றிருக்கை. (மாலின்நீர்மை) இப்படியிருக்கிற ஸர்வேஶ்வரனுடைய, நீர்மையை - இஸ்ஸௌலப்யத்தை. (வையகம் மறைத்ததென்ன நீர்மையே) பூமியிலுள்ளார் ஆச்ரயியாதே காற்கடைக்கொண்டது என்ன துர்வாஸநையினாலே தான். "மஞ்சாக்ரோசந்தி" "மஞ்சாக்ரோசந்தி" என்கிறபடியே ததந்தர்ப்பூதரைச்சொல்லுகிறது."மறைத்தது"என்கிறது "குணமாயாஸமாவ்ர்த:" "குணமாயாஸமாவ்ர்த:" என்னுமாப்போலே பகவதநுக்ரஹத்தையும் அதிஶயித்திருப்பதே! அநாதிகால துர்வாஸநையென்கை. (சச)

அ.—நாற்பத்தஞ்சாம்பாட்டு.பகவத்ஸௌலப்யத்தையும் அதிஶயித்திருந்துள்ள ஸம்ஸாரிகளுடைய துர்வாஸநையால்வந்த இழவைச்சொன்னார்-கீழ்; இதில்-அவர்களிலே அந்யதமனானவெனக்கு தேவரீருடைய பரத்வஸௌலப்யங்களையும், ஆஶ்ரிதர்க்கெளியனாய் அநாச்ரிதர்க்கரியனாயிருக்கிறபடியையுங்காட்டி என்னை அநந்யார்ஹமாக்குவதே! இதென்ன ஆஶ்சர்யமென்கிறார்.

**மண்ணுளாய்கொல்விண்ணுளாய்கொல்மண்ணுளேமயங்கிநின்**
**றெண்ணுமெண்ணகப்படாய்கொலென்னமாயைநின்றமர்**
**கண்ணுளாய்கொல்சேயைகொலனந்தன்மேற்கிடந்தவெம்**
**புண்ணியாபுனந்துழாயலங்கலம்புனிதனே.** (சரு)

ப-ரை.—* ஆதியஞ்சோதியுருவானதேவரீர் ஆச்ரிதரை அடிமைகொள்ளுகைக்காக, மண்ணுளாய்-இங்கேவநதவதரித்து ஸுலபராய், விண்ணுளாய்-நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனாய், ப்ரக்ர்திஸ்பர்சத்தாலும் ப்ரயோஜநாந்தரபரதையாலும், மயங்கிநின்று-மயங்கிநிற்கிற, மண்ணுள்-பூமியிலுள்ள மநுஷ்யர்கள், எண்ணும்எண்-நினைக்கும் நினைவுக்கு, அகப்படாய்-எட்டாதவனாய், நின்தமர்-உன்திருவடிகளைப்பற்றி அநந்ய ப்ரயோஜநராயிருப்பார்க்கு, கண்ணுளாய்-ஸாக்ஷாத்கரிக்கும்படி நிற்குமவனாய், ஆச்ரிதவிரோதிகள் உன்னை அறியாதபடி, சேயை-தூரஸ்தனாய், அவையெல்லாம்கிடக்க, அநந்தனமேல்-திருவநந்தாழ்வான்மேலே, கிடந்த-கண்வளர்ந்தருளினபடியைக்காட்டி, எமபுண்ணியா-எனக்கு உபகாரகனானவனாய், புனம்-தன்னிலத்திலுண்டான, துழாயலங்கல்-திருத்துழாய்மாலையாலே அலங்க்ர்தனாய், அமபுனிதனே-பரமபாவநனானவனே!, என்னமாயையம்-இதென்ன ஆச்சர்யமெனகிறார். (சரு)

வ்யா.—(மண்ணுளாய்கொல்) "అవాక్యనాదరః" "அவாக்யநாதர:" என்கிறபடியே பூர்ணரானதேவரீர் ஸர்வஸமாச்ரயணீயராகைக்காக ஸாபேக்ஷராய், அப்ராக்ர்தமாய் அதீந்த்ரியமானவிக்ரஹத்தை ப்ராக்ர்தஸஜாதீயமாகக்கொண்டு அவதரித்து சக்ஷுர்விஷயமானாய். "கொல்" என்று-ஏகாச்ரயத்திலே விருத்ததர்மங்கள் காண்கையாலே, இதென்னாயிருக்கிறதெனகிறார். அதாகிறது-ஸீதாவியோகத்தில் கலக்கமும், ஒருதிர்யக்குக்கு மோக்ஷப்ரதாநமும். "ప్రచ్ఛామికిఞ్చన", "ப்ரச்சாமிகிஞ்சந." (விண்ணுளாய்கொல்) அஸ்பர்ஷ்டஸம்ஸாரகந்தரான நித்யஸூரிகளுக்கும் பரிச்சேதிக்கவொண்ணாத பெருமையையுடையையாய். (கொல்) நித்யஸூரிகளுக்கும் நிர்வாஹகனாயிருக்கையும், குஹஶபரி ஸுக்ரீவாதிகளுக்குநிர்வாஹ்யனாயிருக்கையுமாகிறவிதென்னாயிருக்கிறதோ! வென்கிறார். (மண்ணுளே மயங்கிநின்றெண்ணுமெண்ணகப்படாயகொல்) இப்பரத்வஸௌலப்யங்கள்ப்ரக்ர்திஸ்பர்ஶததாலேவந்தவிபரீதஜ்ஞாநத்தையுடையராய் ப்ரயோஜநாந்தரபரரான ஸம்ஸாரிகள்மநோரதிக்கும்மநோரதத்துக்கும் அவ்வருகாம்படி யிருத்தி. (என்னமாயை) என்கிற விது, இப்பாட்டின் முடிவிலே க்ரியையாகக்கடவது. (நின்தமர்கண்ணுளாய்கொல்) உன்திருவடிகளிலே அநந்ய ப்ரயோஜநரா யிருப்பார்க்கு, "పరిత్రాణాయసాధూనామ్" "பரித்ராணாயஸாதூநாம்" என்கிறபடியே உள்ளபடியை ஸாக்ஷாத்கரிப்பியாநிற்றி.

---

நாற்பத்தஞ்சாம்பாட்டு. இரண்டும் ஏகாஶ்ரயத்திலேயுண்டென்றுசொன்னவிடமுண்டோவென்ன; அருளிச்செய்கிறார் (ப்ரச்சாமிகிஞ்சநவென்று.) ... ... ... ... (சரு)

(சேயைகொல்) ஆச்ரிதவிரோதிகளுக்கு உன்னை யறியவொண்ணாதே எதிரிட்டு முடிந்துபோம்படி தூரஸ்தனாயிருப்புதி. "....... ......" "விநாஶாய சதுஷ்க்ருதாம்" என்னக்கடவதிறே. (கொல்) ஸம்பந்தம் ஸமாநமாயிருக்க அநந்யப்ரயோஜநர் பக்கலிலும் தத்விரோதிகள் பக்கலிலுமுண்டான இஸ்ஸ்வபாவங்கள் என்னாயிருக்கிறதோ. இவ்விருத்த தர்மாச்ரயமாகிற தேவரீருடைய ப்ரபாவம் ப்ரமாணஸித்தமாகையாலே பொய்யென்ன வொண்ணாது, விருத்தஸ்வபாவங்களாகையாலே மெய்யென்னவொண்ணாது. (அனந்தன்மேல் கிடந்தவெம்புண்ணியா) அதெல்லாங்கிடக்க, திருவநந்தாழ்வான்மேலே சாய்ந்தருளினவடிவைக்காட்டி, தேவரீருடைய ஆஶ்ரித ஸம்ஶ்லேஷ ஸ்வபாவத்தையும் என்னுடைய அநந்யார்ஹ ஶேஷத்வத்தையும் எனக்கு உணர்த்தினவனே. "......" "பும்ஸ்த்வம்நயதீதிபுண்ய:" என்கிறபடியே இவருடைய ஸ்வரூபத்தையும் ப்ரகாஶிப்பிக்கைக்கு உபாயமானவனே. (புனந்துழாயலங்கலம்புனிதனே) தோளும் தோள்மாலையுமான வழகைக்காட்டி, விஷயாந்தரருசியென்ன, "......" "சோரேணாத்மாபஹாரிணா" என்கிற ஆத்மாபஹாரமென்ன, இவ்வஶக்திகளைத் தவிர்த்த பரமபாவநனே. (என்னமாயை) இதென்ன ஆஶ்சர்யம். என்திறத்தில் நீசெய்தருளின விவை யென்றால் பரிச்சேதிக்கலா யிருந்ததில்லையெனகிறார். ... ... (௪௫)

அ.—நாற்பத்தாறும்பாட்டு. "அனந்தன்மேல்கிடந்த வெம்புண்ணியா" என்று - ஸ்வரூபத்தை யறிவிக்கையாலே ஸம்ஸாரத்திலே வந்து ஆவிர்ப்பவித்தும் அவதரித்தும் பெரியதிருவடிதோளிலேயேறி ஆச்ரித ரிருந்தவிடத்திலேசென்று ரக்ஷித்த காலமெல்லாம் இழந்தேன, இனி இழவாதபடி விரோதி நிவர்த்திபூர்வகமாக நான் உன்னைப்பெறும் விரகு அருளிச்செய்யவேணுமென்கிறார்.

தோடுபெற்றதண்டுழாயலங்கலாடுசென்னியாய்
கோடுபற்றியாழியேந்தியஞ்சிறைப்புள்ளூர்தியால்
நாடுபெற்றநன்மைநண்ணமில்லையேனும்நாயினேன்
வீடுபெற்றிறப்பொடும்பிறப்பறுக்குமாசொலே. (௪௬)

ப-ரை.—உனதிருமேனிஸ்பர்சததாலே, தோடுபெற்ற-பூவிதழ்கள் மிக்கு, தண்-குளிர்ந்ததிருந்துழாய், துழாயலங்கல்-திருத்துழாய்மாலையைதரித்தவனாய், ப்ரணதஜநங்கள பக்கல் முகப்ரதாநத்தாலே, ஆடு-அசைந்துவருகிற, சென்னியாய்-திருமுடியையுடையையாய, கோடு-ஸ்ரீபாஞ்சஜந்யத்தை, பற்றி-இடத்திருக்கையிலேதரித்து, ஆழி-திருவாழியை, ஏந்தி-வலத்திருக்கையிலே, ஏந்தி-தரித்து, உன்ஸ்பர்சத்தாலே, அம்-அழகுபெற்றிருக்கிற, சிறை-சிறகையுடைய, புள்-பெரியதிருவடியை, ஊர்தி-நடத்தாநிற்கிறாய்; நாடு-லோகத்திலுள்ளாரெல்லாரும் காணும்படி, பெற்ற - பெரியதிருவடியை மேற்கொண்டு ஸஞ்சரித்த, நன்மை-இந்த நன்மையை, நண்ணமில்லையேனும்-நானகிட்டப்பெற்றிலேனாகிலும், நாயினேன்-அநந்யகதியானநான், வீடுபெற்று-பகவத்ப்ராப்திரூபமோக்ஷத்தைப்பெற்று, இறப்பொடும் - இச்சரீர விமோசநத்தோடே, பிறப்பு-இனியொரு சரீரபரிக்ரஹம பண்ணாதபடி, அறுக்குமா - ஸம்ஸாரத்தை அறுக்கும் விரகு, சொல்-அருளிச்செய்யவேணும். (௪௬)

வ்யா.—(தோடுபெற்றதண்டுழாயலங்கலாடுசென்னியாய்)உன் திருமேனியில் ஸ்பர்சத்தாலே தழைத்துக்குளிர்ந்திருந்துள்ள திருத்துழாய்மாலையை யுடையையாய், ப்ரணதஜநங்கள்பக்கல் முகப்ரஸாதத்தாலே யசைந்துவருகிற திருமுடியையுடையையாய். ஸர்வேஶ்வரஸ்பர்ஶமிறே- சேதநர்க்கு ஸங்கோசத்துக்கும் தாபஶாந்திக்கும் ஹேது. இத்தால்-கண்டபோதே ருசிபிறக்கும்படியான வொப்பனையழகையும், ஆபிமுக்யம்பண்ணினர்பக்கல் முகப்ரஸாதம் பண்ணும் நீர்மையையும் சொல்லிற்று. தோடு - பூவிதழ். (கோடுபற்றியாழியேந்தி) ஆச்ரித விரோதிகளை த்வநியாலே மண்ணுண்ணும்படி பண்ணுகைக்கு ஸ்ரீபாஞ்சஜந்யத்தைப்பற்றி, "கருதுமிடம் பொருது" என்கிறபடியே எதிரிகளைச்சென்றழிக்கைக்குத்திருவாழியையேந்தி. ஆச்ரிதர்க்கு முகங்கொடுக்குமளவன்றியே அவர்கள்விரோதிகளையும் அழியச்செய்யும் பரிகரங்களை யுடையவ னென்கை. (அஞ்சிறைப்புள்ளூர்தியால்) ஸ்பர்ஶத்தாலே யழகுபெற்ற திருச்சிறகையுடைய பெரியதிருவடியைநடத்தாநிற்றி. அவனை மேற்கொண்டால் ஈஶ்வரனுக்கு அலங்காரமாயிருக்கும்படியான அழகைச்சொல்லிற்றாகவுமாம். இத்தால் -ஆச்ரிதரிருந்தஸம்ஸாரத்திலே ஆபத்தசைகளிலே சென்று முகங்காட்டி ரக்ஷிக்கும் நீர்மையைச் சொல்லிற்று. இப்படி தன்னை தூளிதாநம்பண்ணின காலமெல்லா மிழந்தேனென்கிறார். "ஆல்" என்று - விஷாதாதிஶயஸூசகம். (நாடுபெற்ற நன்மை நண்ணமில்லையேனும்)இருந்ததே குடியாகக்காணலாம்படி பெரியதிருவடியை மேற்கொண்டு ஸஞ்சரித்த விந்த நன்மையை நான் கிட்டப்பெற்றிலேனாகிலும். நான் விமுகனானகாலமெல்லா மிழந்தாலும் எனக்கு ருசிபிறந்தவின்றும் தேவருள்ளீராயிருக்க இழக்கவேணுமோவென்கை. (நாயினேன்வீடுபெற்று) அநந்யகதியான நான் பகவத் ப்ராப்திரூபமோக்ஷத்தைப்பெற்று. (நாயினேன்) அநாதிகாலம் திறந்துகிடந்தவாசலெல்லாம் நுழைந்து ஸர்வராலும் பரிபூதனானநான். உகந்து தொட்டாலுமஎதிர்த்தலைக்கு அஶுத்தியைவிளைப்பிக்கும் நிஹீநதையையுடையநான்.(வீடுபெற்று)இப்படிப்பட்டிருந்துள்ளநான்,உனக்குஸத்ரஶராயிருந்துள்ளநித்யஸூரிகள்பேற்றைப்பெற்று. அகிஞ்சநனான நான், பூர்ணனுடைய பேற்றைப்பெற்று. (இறப்பொடும்பிறப்பறுக்குமாசொலே) இச்சரீரத்தினுடைய விமோசநத்தோடே இனியொரு சரீரபரிக்ரஹம் பண்ணாதபடி ஸம்ஸாரத்தை யறுக்கும் விரகு அருளிச்செய்யவேணும். சிறைக்கூடத்திலிருந்த ராஜகுமாரன்தலையிலே அபிஷேகத்தை வைத்து, பின்பு சிறையை வெட்டிவிட்டாப்போலே, ப்ராப்திமுன்பாக விரோதியைப் போக்கும் விரகு அருளிச்செய்யவேணும். ... ... (சகூ)

---

நாற்பத்தாறும்பாட்டு. ஸ்பர்சத்தாலே திருத்துழாய்தழைக்கக் கூடுமோவென்ன; அருளிச்செய்கிறார்(ஸர்வேச்வரஸ்பர்சமித்யாதி.) கோடு-ஸ்ரீபாஞ்சஜந்யம். ... ... ... (சகூ)

அ.—நாற்பத்தேழாம்பாட்டு. பரவ்யூஹவிபவங்களடங்கலும் ரயணீயஸ்தலமன்றே, அதிலே ஓரிடத்தைப்பற்றியாஶ்ரயித்து நம்மைப்பெறமாட்டீரோவென்ன; அவ்விடங்களெங்கும்நிலமல்ல,இனி எனக்கு ப்ரதிபத்திபண்ணி யாஶ்ரயிக்கலாவதோ ரிடத்தை யருளிச் செய்யவேணுமென்கிறார்.

காரொடொத்தமேனிநங்கள்கண்ணவிண்ணிணாதனே
நீரிடத்தராவணைக்கிடத்தியென்பரன்றியும்
ஓரிடத்தையல்லையெல்லையில்லையென்பராதலால்
சேர்விடத்தைநாயினேன்தெரிந்திறைஞ்சுமாசொலே. (சஎ)

ப-ரை.—காரொடொத்த-காளமேகத்தோடு ஸத்ர்சமான, மேனி-வடிவையுடையையாய், நங்கள்-ஆச்ரிதர்க்கு உன்னை உடைமையாக்கிவைத்த, கண்ண-கர்ஷ்ணனாய்அவ்வடிவை, விண்ணின்நாதனே-* அயர்வறுமமரர்களதிபதியான வுன்னை, நீரிடத்து-க்ஷீராப்தியிலே, அராவணை - திருவநந்தாழ்வானாகிற திருப்படுக்கையிலே, கிடத்தியென்பர் - பள்ளிகொண்டருளாநிற்கிறாயென்று ஜ்ஞாநாதிகரான வைதிகர்கள் சொல்லாநின்றார்கள்;அன்றியும்—, ஓரிடத்தையல்லை-நீ ஓரிடத்திலே வர்த்திக்கிறாயல்லை; தஹரசாண்டில்யம் முதலிய வித்யைகளிலே, எல்லையில்லையென்பர் - உன் ஆச்ரயணீயஸ்தலங்களுக்கு எல்லை யில்லையென்று சொல்லப்படுகிறது; ஆதலால்-இப்படி ஒருவகையாலும் உன்னைக் கிட்டவொண்ணா திருப்பதினாலே, நாயினேன - அயோக்யனான நான், தெரிந்து - இப்படிப்பட்டதென்று அறிந்து, இறைஞ்சுமா-ஆச்ரயிக்கலாம்படி, சேர்விடத்தை-ஆச்ரயணீயஸ்தலத்தை, சொல்-அருளிச்செய்யவேணும். (சஎ)

வ்யா.—(காரொடொத்தமேனிநங்கள்கண்ண)காளமேகத்தோடு ஸத்ர்ஶமாய் ஆகர்ஷகமானவடிவையுடையையாய், அத்தை ஆச்ரிதர்க்கு ஸ்வம்மாக்கிவைத்த க்ர்ஷ்ணனே. இத்தால்-காலவிப்ரகர்ஷத்தால் எனக்கு ஆச்ரயிக்கவிரகில்லையென்கிறார். அந்தகாலவிப்ரகர்ஷமாகிற குற்றமின்றிக்கே நித்யமாயிருக்கிற பரமபதத்தில் வடிவைப்பற்றி ஆச்ரயிக்கமாட்டீரோவென்ன (விண்ணின்நாதனே) அவ்வடிவை நித்யஸூரிகள் நித்யாநுபவம்பண்ணுமத்தனையொழிய தேஶவிப்ரகர்ஷத்தாலே எனக்காஶ்ரயிக்க விரகில்லையென்கை (நீரிடத்தராவணைக்கிடத்தி) தேஶகாலவிப்ரகர்ஷங்களாகிற குறையின்றிக்கேக்ஷீராப்தியிலே நித்யஸூரி ஸங்நிஹிதரல்லோமோவென்ன; அவ்விடமும் ச்வேதத்வீபவாஸிகளுக்குக் காதாசித்கமாகக் காணலாமித்தனை யல்லது அஸ்மதாதிகளுக்கு வரவுமொண்ணாது. (என்பர்) இவ்வர்த்தம் வேதங்களும் ஜ்ஞாநாதிகரான வைதிகர்களும்சொல்லக்கேட்டோமித்தனை. “అజాయమానో బహుధా విజాయతే” “యత్రావతీర్ణః కృష్ణాఖ్యః పరంబ్రహ్మ నరాకృతిః” “அஜாயமாநோபஹுதாவிஜாயதே” “யத்ராவதீர்ண꞉க்ர்ஷ்ணாக்ய꞉ பரம்ப்ரஹ்மநராக்ர்தி꞉” என்று க்ர்ஷ்ணாவதாரமும்கேட்டே போருமித்தனை.

"తద్విష్ణోః పరమం పదం సదా పశ్యన్తి సూరయః" "தத்விஷ்ணோஃ பரமம்பதம் ஸதாபஶ்யந்திஸூரயஃ" என்று பரமபதத்திலிருப்பும் ஶ்ருதிகள் சொல்லக்கேட்ட வித்தனே; "ఏష నారాయణశ్శ్రీమాన్ క్షీరార్ణవనికేతనః" "ஏஷநாராயணஶ் ஶ்ரீமாந்க்ஷீரார்ணவநிகேதநஃ" என்று-க்ஷீராப்தியில்வாஸமும் ஜ்ஞாநாதிகர்சொல்லக்கேட்ட வித்தனே. நீரிடத்து-கடலிடத்து. அராவணை - அரவணை. அன்றியும்-அதொழியவும். (ஓரிடத்தையல்லே) ஓரிடத்திலேவர்த்திக்கிறுயல்லே. ஸர்வகதனென்கை. இதுவும் "మాముపాస్వ" "మామేవ విజానీహి" "மாமுபாஸ்வ" "மாமேவவிஜாநீஹி" என்றித்யாதிகளிலே ஸாபாச்ரயமாக உபாஸநாத்வைவித்யத்திலே சொல்லப்பட்டதிறே. (எல்லையில்லை என்பர்) தஹர சாண்டில்ய ஸ்ம்ர்தி வைஶ்வாநரோபகோஸலாதிவித்யைகளிலே ஆச்ரயணீயஸ்தலங்களுக்கு எல்லையில்லையிறே; அவையும் "యస్సర్వజ్ఞః" "யமாத்மாநமேவத" என்று - ப்ரதிபத்திவிஷயமல்லாமையாலும் த்ரைவர்ணிகாதிகாரமாகையாலும் நிலமல்ல. (ஆதலால்) பரமபதம் தேஶத்தால் விப்ரக்ர்ஷ்டமாகையாலும், அவதாரம் காலத்தால் விப்ரக்ர்ஷ்டமாகையாலும், க்ஷீராப்தி அதிக்ர்தாதிகாரமாகையாலும, அந்தர்யாமித்வம் ப்ரதிபத்திக்கு அபூமியாகையாலும், த்ரைவர்ணிகாதி காரமாகையாலும், நிலமல்ல. (சேர்விடத்தை நாயினேன் தெரிந்திறைஞ்சுமாசொலே) அயோக்யனை நான் "ఇదం" "இதம" என்று புத்திபண்ணி ஆச்ரயிக்கலாம்படி ஆஶ்ரயணீயஸ்தலத்தை யருளிச்செயயவேணும். (சஎ)

அ.—நாற்பத்தெட்டாம்பாட்டு. ஆச்ரயணீயஸ்தலஙகளை ஸாமாந்யேந பாரித்துவைத்தோமாகில் அவற்றிலே யொன்றைப்பற்றியாச்ரயிக்கும் ஆச்ரிதபூதர்க்கு ஆச்ரயணுநுகூலமாக பலப்ரதராயிருக்குமதொழிய, உமககு ஆஶ்ரயணீயஸ்தலத்தை விஶேஷித்துச்சொல்லுகை நமக்கு பரமோமென்ன; ஆச்ரிதாநாசரிதவிபாகமன்றிக்கே நின்ற நின்ற நிலைகளிலே பரஹிதமே செய்யும்ஸ்வபாவனை பின்பு என்னபேக்ஷிரம் செய்கைஉனககே பரமன்றோ வென்கிறுர்.

குன்றினின்றுவானிருந்துநீள்கடல்கிடந்துமண்
ஒன்றுசென்றதொன்றையுண்டதொன்றிடந்துபன்றியாய
நன்றுசென்றநாளவற்றுணல்லுயிர்படைத்தவர்க
கன்றுதேவமைத்தளித்தவாதிதேவனல்லையே. (சஅ)

ப-ரை.— நிதயஸூரிகள் நித்யாநுபவம் பண்ணும்படி, வான்இருந்து-பரமபதத்திலே யிருக்கிறநீ, தாழ்ந்தார்க்கு முகம் கொடுக்கைக்காக, குன்றில் நின்று-திருமலையிலே நின்றருளி, ஆர்த்தரான ப்ரஹ்மாதிகள் கூக்குரல் கேட்கைக்காக, கடல்-திருப்பாற்கடலிலே, நீள்-நெடுங்காலம், கிடந்து-கண்வளாந்தருளி, மண்-பூமியை, ஒன்று - அத்விதீயமாக, சென்று-அளந்தருளி, அதொன்று-அந்த ப்ரதாநமானபூமியை, உண்டு - திருவயிற்றிலே வைத்துரக்ஷித்து,பன்

றியாய்-மஹாவராஹமாய், அதொன்று-ப்ராளயங்கொண்டபூமியை,இடந்து-இடந்தெடுத்து, நன்றுசென்ற-நன்றாகச்சென்ற, நாளவற்றுள்-அந்தநாள்களிலே, நல் - சாஸ்த்ராதிகாரத்தாலே ச்ரேஷ்டரான, உயிர்-மநுஷ்யர்களை, படைத்து-ஸ்ருஷ்டித்து, அன்று-ரஜஸ்தமஸ்ஸுக்கள் மேலிட்டு பகவத்விமுகரானவன்று, அவர்க்கு-அந்தமநுஷ்யர்களுக்கு, ஆச்ரயணீயமாக,தேவு-தேவஜாதியை,அமைத்தளித்த-ஸ்ருஷ்டித்தளித்த,ஆதிதேவனல்லையே-ஜகத்காரணபூதனானஸர்வேச்வரனல்லையோ வென்கிறார். .(௨அ)

வ்யா.—(குன்றில்நின்று) "கானமும் வாநரமும் வேடுமுடை வேங்கடம்" என்கிறபடியேதாழ்ந்தார்க்கு முகங்கொடுக்கைக்காகச் சில ரபேக்ஷியாதிருக்கத்திருமலையிலே நின்றநிலை: (வான்இருந்து) அஸ்ப்ருஷ்ட ஸம்ஸாரகந்தரான நித்யஸூரிகளுக்கு நித்யாநுபவம் பண்ணுகைக்குப் பரமபதத்திலே யிருக்கிற பெரியமேன்மையை யுடையையா யிருக்கச்செய்தே யன்றே திருமலையிலே வந்துநின்றது.'(நீள்கடல் கிடந்து)வாநரங்களையும் வேடரையும்போலன்றிக்கே"ஈச்வரோஹம்"என்றிருக்கிற ப்ரஹ்மாதிகளுக்குஆபத்துவந்தபோது கூக்குரல்கேட்கைக்காகவன்றே "தாளுந்தோளும் முடிகளும் சமனிலாத பலபரப்பி" என்கிறபடியே - அஸங்குசிதமாகக் கண்வளர்ந்தருளுகைக் கீடாகத் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளிற்று. (மண்ணொன்றுசென்று) இந்த்ரன்இழந்ததும் மஹாபலி அபஹரித்ததும் த்ரைலோக்யத் தளவாயிருக்க,ப்ரஹ்மலோகபர்யந்தமாக, ஒருத்தரபேக்ஷியாதிருக்க எல்லார்தலையிலும் திருவடிகளை வைத்திலையோ. ப்ரதாநமான பூமியை யளந்து. "சென்று" என்று-பதவிக்ஷேபமாய், அளந்தென்றபடி. பூமியிலே ஓரிடங்களிலேசென்று அவதரித் தென்னவுமாம். (அதொன்றையுண்டு) அந்தப்ரதாநமான பூமியை ப்ரளயங்கொள்ளப்புக அர்த்தித்வ நிரபேக்ஷமாகத் திருவயிற்றிலே வைத்து ரக்ஷித்திலையோ. (அதொன்றிடந்து பன்றியாய்) மஹாவராஹமாய ப்ரளயங்கொண்ட பூமியை உத்தரித்து.

(நன்றுசென்ற நாளவற்றுள் நல்லுயிர்படைத்து) நன்றாகச்சென்ற நாள்களிலே மநுஷ்யர்களை ஸ்ருஷ்டித்து. "நன்றுசென்ற நாள்" என்று - மஹாவராஹ வேஷத்தைக் காணலாங் காலமென்னுமத்தாலே வராஹகல்பத்தைக் கொண்டாடுகிறார். "நல்லுயிர்" என்று - சாஸ்த்ராதிகாரத்தாலே ச்ரேஷ்டரான மநுஷ்யர்களைச் சொல்லுகிறது. "ದುರ್ಲಭೋ ಮಾನುಷೋ ದೇಹಃ" "துர்லபோமாநுஷோதேஹ:" என்னக்கடவதிறே. (அவர்க்கன்று தேவமைத்தளித்த) அம்மநுஷ்யர்களுக்கு ரஜஸ்தமஸ்ஸுக்கள மேலிட்டு பகவத்விமுகரான வன்று ஆச்ரயணீயராக தேவஜாதியை ஸ்ருஷ்டித்து அளித்த. (ஆதிதேவனல்லையே) இப்படி நின்றநின்ற நிலைகளிலே பராஜிதங்களை ப்ரவர்த்திப்பிக்கிறஜகத்காரணபூதனான ஸர்வேஸ்வரனல்லையோ.

ஆராதகரான மநுஷ்யர்களையும் ஆராத்யரான தேவர்களையும் ஸ்ருஷ்டிக்கையாலே ஜகத்காரணபூதனான நிருபாதிக தேவனாகையாலே ஸர்வஸமாச்ரயணீயனல்லையோ. "ஸஹஸ்ரஶீர்ஷம் தேவம்" "ஸஹஸ்ரஶீர்ஷம்தேவம்" என்றும், "ஸாக்ஷாத்தேவ: புராணோஸௌ" "ஸாக்ஷாத்தேவ: புராணோஸௌ" என்றும் சொல்லக்கடவதிறே. ... (சஅ)

அ.—நாற்பத்தொன்பதாம்பாட்டு. "சேர்விடத்தைநாயினேன் தெரிந்திறைஞ்சுமாசொலே" என்று இவர்க்கு இவரிருந்த பூமியிலே சக்ஷுர்விஷயமாய், அவதாரங்களிலுண்டான நீர்மைகளும் இழக்கவேண்டாதபடி குணபூர்த்தியோடே கோயிலிலே கண்வளர்ந்தருளுகிற ஸம்ருத்தியைக் காட்டக் கண்டநுபவிக்கிறார்.

கொண்டைகொண்டகோதைமீதுதேனுலாவுகூனிகூன்
உண்டைகொண்டரங்கவோட்டியுண்மகிழ்ந்தநாதனூர்
நண்டையுண்டுநாரைபேரவாளைபாயநீலமே
அண்டைகொண்டுகெண்டைமேயுமந்தணீரரங்கமே. (சகூ)

ட-ரை.—கொண்டைகொண்ட - மயிர்முடியிலேயுண்டான, கோதைமீது-மாலையின்மேலே, தேன் உலாவு-வண்டுகள ஸஞ்சரிக்கும்படியான ஒப்பனையழகையுடையளான, கூனி-கூனியுடைய, கூன - முதுகில் கூனை, லீலார்த்தமாகவில்லிலே, உண்டைகொண்டு - உண்டையைவைத்து, அரங்க - கூனையுள்ளேபுகும்படி, ஓட்டி-ஓட்டித்தெறித்து, ஆச்ரிதர்க்கு அவத்யாவஹமான அஹங்காரத்தை அநாயாஸேநப்போக்குகையாலே, உள்மகிழ்ந்த - ஹ்ருஷ்டனாய், நாதன-அச்செயலாலேஎனக்குநாதனான சக்ரவர்த்தித் திருமகன் வர்த்திக்கிற, ஊர்-தேசமாவது; நாரை - நாரையானது, நண்டையுண்டு - நண்டைவிழுங்கி, பேர - மலை பேர்ந்தாப்போலே பெயர, வாளை-வாளைமத்ஸ்யமானது, பாய - துள்ள, நீலம்-கருநெய்தல் பூவின் இருட்சியை, அண்டைகொண்டு - ஸஹாயமாகக்கொண்டு, கெண்டை - கெண்டைமத்ஸ்யமானது, மேயும் - பயம்கெட்டுமேய்கிற, அம்-அழகிதாய், தண - குளிர்ந்த, நீர - ஜலஸம்ருத்தியையுடைய, அரங்கமே - ஸ்ரீரங்கமேயாம். (சகூ)

வ்யா.—(கொண்டை கொண்டகோதைமீதுதேனுலாவுகூனி) மயிர்முடியிலே யுண்டான மாலையின்மேலே வண்டுகள் ஸஞ்சரிக்கும்படியான வொப்பனையாலே ஸ்ப்ருஹணீய வேஷையான கூனி. இத்தால் - சேதநனுடைய நிஷ்க்ருஷ்டஸ்வரூபம் ஸ்ரீகௌஸ்துபம்போலே ஈஶ்வரனுக்கு ஸ்ப்ருஹணீயமென்று கருத்து. (கூனிகூன்) கீழ்ச்சொன்னவடிவுக்கும் ஒப்பனைக்கும் சேராதே அவளுக்கு நிரூபகமாய்ப் போந்தகூனை. இத்தால்-ஸ்வரூபவிரோதியாய்,

நாற்பத்தொன்பதாம்பாட்டு. கொண்டைகொண்ட கோதை-கொண்டையிலே உண்டாயிருக்கிறகோதை. கொள்கை - உடைத்தாகை. கோதை-மாலை.

"தேவோஹம், மநுஷ்யோஹம்" என்று நிரூபகமுமாய் ஸ்வரூபத்துக்கு அவத்யமுமா யிருந்துள்ள அஹங்காரத்தை நினைக்கிறார். (உண்டைகொண்டரங்கவோட்டி) லீலார்த்தமாக வில்லிலே யுண்டையைவைத்துக் கூனேஉள்ளே புகும்படியோட்டித் தெறித்து. அவத்யமான அஹங்காரத்தை அநாயாஸேநப்போக்கவல்லசக்தியை நினைக்கிறார். (உண்மகிழ்ந்த நாதனூர்) ஆச்ரிதர்க்குஅவத்யமான அஹங்காரத்தை அநாயாஸேநப் போக்குகையாலே ஹ்ருஷ்டனாய், அச்செயலாலே என்னை யெழுதிக்கொண்ட சக்ரவர்த்தித் திருமகன் வர்த்திக்கிற தேசம். இத்தால் - ஆச்ரிதருடைய அவத்யங்களைப்போக்கி யுகப்பானுந்தானே யென்கை. ஆக, சக்ரவர்த்தித் திருமகனுடைய நீர்மையும் நம்பெருமாள் பக்கலிலேகாணலா மென்கிறார்.

(நண்டையுண்டு நாரைபேர) நண்டைவிழுங்கின நாரையானது விழுங்கின கனத்தாலே மலைபோந்தாப்போலேபேர. இத்தால்-பாதகபதார்த்தத்தினுடைய கனம்சொல்லிற்று. (வாளைபாய) அந்நாரைக்குத் தன்மேலே நோக்கென்று நினைத்து பயப்பட்டு வாளையானது துள்ள. (நீலமேயண்டைகொண்டு கெண்டைமேயும்) அதின் மிகுதியைக்கண்டு, கெண்டையானது பயத்தாலே பரப்புமாறப் பூத்த நீலத்தி னிருட்சியை யண்டைகொண்டு, அரணுக்குள்ளே வர்த்திப்பாரைப்போலே, பயநகெட்டு மேய்ந்து வர்த்திக்கிற தேசம். இத்தால் - ஸம்ஸாரிகளை நலிகிற அஹங்காரத்தைக்கண்டு பீதராய், முமுக்ஷுக்களாய் உபாஸநத்திலே இழிந்த ஸாதகரைக்கண்டு இவையிரண்டும் பயஸ்தாநமென்று ஸர்வேச்வரனையேயுபாயமாகப் பற்றிநிர்ப்பரராய், ஸ்வரூபாநுரூபமான பகவத்குணாநுபவமே யாத்ரையாய் வர்த்திக்கும் ப்ரபந்நர்க்குஸ்மாரகமாயிருக்கிறதாய்த்து-கெண்டைகளினுடையயாத்ரையென்கை. (அந்தண்நீரரங்கமே) அழகிதாய்ச்ரமஹரமான ஜலஸம்ருத்தியையுடைத்தானகோயில். தாபத்ரயாதுரர்க்கு தாபஹரமான தேசமென்கை. "நீலமேயண்டை கொண்டு" என்று, ச்யாமமாய் ஸுகுமாரமான நீலத்தை யண்டைகொண்டு என்கையாலே – பெருமாளுடைய ஸௌந்தர்யமே அபாச்ரயமும், அத்தைஆச்ரயித்திருப்பார்க்குபோகயமுமதுவே யென்று கருத்து. இப்பாட்டில் சொன்ன ஸ்வாபதேசங்கள் இவர்க்கு நிலமல்லாதபோது தேசத்தை யாச்ரயித்தநுபவிக்க இழிந்தவர்க்கு இப்பாட்டால் ஒருப்ரயோஜந மில்லை. ... ... (சக)

அரங்க - மறைய. நீலம் - கருநெய்தல். அதின்மிகுதி-நாரை, வாளை இவற்றின்திரள். சப்தத்துக்கு அர்த்தம்வேறாயிருக்க, இப்படி ஸ்வாபதேசத்திலே ஒதுக்குவா னென்னென்ன; அருளிச்செய்கிறார் (இப்பாட்டிலித்யாதி.) நிலமல்லாதபோது-விவக்ஷையல்லாதபோது.

அ.—ஐம்பதாம்பாட்டு. ஆந்தரவிரோதத்தைப் போக்கவல்ல வவதார வைபவத்தையும், பாதகபதார்த்த ஸகாஶத்திலே நிர்ப்பயராய் வர்த்திக்கலாம்படி அபாச்ரயமான தேசவைபவத்தையும் சொன்னார் - கீழ்ப்பாட்டில்; இதில் - பாஹ்யவிரோதத்தைப் போக்கவல்ல வவதார வைபவத்தையும் ஸர்வஸமாச்ரயணீயமான தேசவைபவத்தையும் அருளிச்செய்கிறார்.

வெண்டிரைக்கருங்கடல்சிவந்துவேவமுன்னொருநாள்
திண்டிறற்சிலைக்கைவாளிவிட்டவீரர்சேருமூர்
எண்டிசைக்கணங்களுமிறைஞ்சியாடுதீர்த்தநீர்
வண்டிரைத்தசோலைவேலிமன்னுசீரரங்கமே. (௫௰)

ப-ரை.—வெள் - வெளுத்த, திரை - திரைகளையுடைத்தாய், கரு - கறுத்த, கடல் - கடலானது, சிவந்துவேவ - சிவந்துவேம்படியாக, முன்னொருநாள் - இருபத்தெட்டாம் சதுர்யுகத்தில் த்ரேதாயுகத்திலே, திண்திறல் - மிக்கவலியையுடைய, சிலை - ஸ்ரீசார்ங்கத்தை, கை - கையிலேவாங்கி, வாளிவிட்ட - அம்புகளையேவின, வீரர் - ஆண்பிள்ளையான சக்ரவர்த்தித் திருமகன், சேரும் - நித்யவாஸம்பண்ணுகிற, ஊர் - ஊராவது; எண்திசைக்கணங்கள் - எட்டுத்திக்கிலுள்ள ஸமூஹங்களும் வந்து, இறைஞ்சி - பெருமாளைத் திருவடிதொழுது, ஆடு - தீர்த்தமாடி, தங்களபிமத விரோதியான ஸர்வபாபங்களையும் போக்கும், தீர்த்தம் - சுத்தியையுடைய, நீர் - நீரையுடைத்தாய, வண்டு - மதுபானமத்தமான வண்டுகள், இரைத்த - ப்ரீதிஉள்ளடங்காமே சப்திக்கிற, சோலைவேலி - சோலையாலே சூழப்பட்டிருப்பதாய், சீர் - இப்பாவநத்வ போக்யத்வங்களாகிற இத்தன்மை, மன்னும் - நிரூடமாய்ச்செல்லும். அரங்கம் - கோயிலேயாம். (௫௰)

வ்யா.—(வெண்டிரைக்கருங்கடல்) வெளுத்ததிரைகளையுடைத்தான கருங்கடல். திரைகிளர்த்தியின் மிகுதிசொல்லிற்று. (சிவந்துவேவ) கறுத்தகடலோடு வெளுத்ததிரைகளோடு வாசியற அக்நியின்நிறமான சிவப்பே நிறமாய் மாறும்படி தக்தமானபடி. இத்தால் - ஆச்ரிதரக்ஷணத்துக்கு வருணன் விரோதியாக அவனுக்கு இருப்பிடமான கடலை யழியச்செய்தபடி. (முன்னொருநாள் திண்டிறல் சிலைக்கைவாளிவிட்ட வீரர்சேருமூர்) இருபத்தெட்டாம் சதுர்யுகத்திலே மிக்கவலியையுடைய ஸ்ரீஶார்ங்கத்தை, "चापमानय" "சாபமாநய" என்கிறபடியே வாங்கி அம்புகளையேவின வாண்பிள்ளை சேருமூர். "உண்மகிழ்ந்துநாதனூர்" என்று ஆச்ரிதரக்ஷணம் ஸ்வயம் ப்ரயோஜநமாகப் பண்ணும் நீர்மையைச் சொல்லிற்று - கீழ்ப்பாட்டில்; இதில் - விரோதிநிரஸந ஶக்தியைச்சொல்லுகிறது. இத்தால் - அவதாரத்துக்குப் பிற்பாடரான ஆச்ரிதர்க்கு ஸ்வாநுபவவிரோதியான ஶப்தாதிகளில் ப்ராவண்யத்தைப் போக்குகைக்குக் கோயிலிலே நித்யவாஸம் பண்ணுகிறபடி யென்கை. திண்மைஎன்றும், திறல் என்றும் வலியைச் சொல்லுகையாலே - மிக்கவலியென்றபடி.

(எண்டிசைக்கணங்களு மிறைஞ்சியாடுதீர்த்தநீர்) எட்டுதிக்கிலு முள்ள ஸமூஹங்கள் வந்து பெருமாளைத் திருவடித்தொழுது தீர்த்தமாடி, தங்களபிமத விரோதியான ஸர்வபாபங்களையும் போக்கும் சுத்தியையுடைய நீரையுடைத்தாய். "𑌸𑌰𑍍𑌵𑌶𑌕𑍍𑌤𑌿𑌮𑌯𑌂 𑌧𑌾𑌮 𑌸𑌰𑍍𑌵𑌤𑍀𑌰𑍍𑌥𑌮𑌯𑌂 𑌸𑌰𑌃। 𑌸𑌰𑍍𑌵𑌪𑍁𑌣𑍍𑌯𑌮𑌯𑍋 𑌦𑍇𑌶𑌃 𑌸𑌰𑍍𑌵𑌦𑍇𑌵𑌮𑌯𑍋 𑌹𑌰𑌿𑌃" "ஸர்வஶக்திமயந்தாமஸ்ஸர்வதீர்த்தமயம்ஸர:। ஸர்வபுண்யமயோதேஶ: ஸர்வதேவமயோஹரி:" என்னக்கடவதிறே. ஸமூஹங்களாவன - ஐச்வர்யார்த்திகள், முமுக்ஷுக்கள், ஜந்மவர்த்தங்களால் யோக்யாயோக்யர் இவர்கள். (வண்டிரைத்த சோலைவேலி) மதுபாந மத்தமான வண்டுகள், ப்ரீதிஉள்ளடங்காமேசப்திக்கிறசோலையைச் சூழவுடைத்தாய். (மன்னுசீரரங்கமே) இப்பாவநத்வ போச்யத்வங்க ளாகிற இந்நன்மைகள் நித்யமாய்சசெல்லும்கோயில். அநாத்மகுணோபேதர்க்கு பாவநமுமாய்,ஆத்மகுணோபேதர்க்கு போக்யமுமான தேசமென்கை. ... ... ... ... ... ... (ருo)

அ.—ஐம்பத்தோராம்பாட்டு. கடலைநியமித்து அக்கரையிலேயேறி ராவணனையழியச்செய்தவீரன் நித்யவாஸம் பண்ணுகிற தேசமாய், சதுர்த்தசபுவநஸ்ரஷ்டாவான சதுர்முகன் தன் அதிகாரஸித்திக்காக ஆஶ்ரயித்ததேசம் கோயிலென்கிறார்.

சரங்களைத்துரந்துவில்வளைத்திலங்கைமன்னவன்
சிரங்கள்பத்தறுத்துதிர்த்தசெல்வர்மன்னுபொன்னிடம்
பரந்துபொன்னிரந்துநுந்திவந்தலைக்குமவார்புனல்
அரங்கமென்பர்நான்முகத்தயன்பணிந்தகோயிலே. (ருக)

ப-ரை.—வில்வளைத்து-ஸ்ரீசார்ங்கத்தை வளைத்து,சரங்களைத் துரந்து-அம்புகளை யெவி, இலங்கைமன்னவன - லங்காதிபதியான ராவணனுடைய, சிரங்கள் பத்து - பததுதலைகளையும், அறுத்து - அறுக்க, பின்பு வரபலத்தாலே முளைக்க, உதிர்த்த - பனங்கனிகள் உதிர்த்தாப்போலே யுதிர்த்து, செல்வர்-வீரஸ்ரீயால பூர்ணரானவா, மன்னு - நித்யவாஸமபண்ணுகிற, பொன் - ஸ்ப்ருஹணீயமான, இடம - ஸதாநமாவது; நிரந்துபரந்து - எஙகுமொக்கபபரந்து, வந்து - மாருதேவந்து, பொன-பொனகளை, நுந்த-தள்ளி, அலைக்கும-அலையாநின்றுள்ள, வார்புனல்-ப்ரவாஹரூபமான காவேரியால் சூழப்பட்டதாய், நான்குவேதங்களையும ஒருக்காலே உச்சரிக்கைக்கீடான, நானமுகத்து - நானகு முகங்களையுடையனுய, அயன-அஜனெனனும் பேரையுடையனுன ப்ரஹ்மா, பணிந்த - பக்நாபிமாநனுய் வநதாசரயிககும,கோயில் - கோயிலே, அரங்கமென பர் - ஸ்ரீரங்கமெனறு சொல்லா நின்றார்கள்புராணவித்துக்கள். (ருக)

வ்யா.—(சரங்களைத்துரந்து வில்வளைத்து) ஸ்ரீசார்ங்கத்தை வளைத்து, அம்புகளையேவி. துரத்தல் - போக்கல். ஐச்வரமான ஸங்கல்பத்தாலன்றிக்கே ஆச்ரிதவிரோதியான ராவணனை அம்பாலே,பெறாப்பேறுபெற்றாற்கைத்தொட்டுக்கொன்றபடி.(இலங்கை

மன்னவன்) லங்கையையண்டைகொண்டால் ஸ்த்ரீகளுக்கும் எதிரிகளைஜெயிக்கலாம், வெளிநிலத்திலும் எதிரிகளைஜயிக்கவல்லவாண்பிள்ளை ராவணன். அத்யக்ஷனானவன். "லஙூ ராவணபாலிதாம்" "லங்காம்ராவணபாலிதாம்." (சிரங்கள் பத்தறுத்துதிர்த்த செல்வர்) அவன்தலைகள் பத்தையும் அறுத்தபின்பு வரபலத்தாலே சததசாகமாக முளைக்க முளைக்க, பனங்கனியுதிர்த்தாப்போலே யுதிர்த்த வீரஸ்ரீயால் பூர்ணரானவர். (மன்னுபொன்னிடம்) அவன் நித்யவாஸம்பண்ணுகிற ஸ்ப்ருஹணீயமான ஸ்தானம். ரக்ஷகாபேக்ஷையுடைய சேஷபூதனுக்கும் ரக்ஷ்யாபேக்ஷையுடைய சேஷிக்கும் ஸ்ப்ருஹணீயமான விடம். இத்தால் - அவதாரத்துக்குப் பிற்பாடரான அநந்ய ப்ரயோஜநர்க்கு ப்ரபலப்ரதிபந்தகமாய், விஷயாந்தரப்ரவணமான மநஸ்ஸேபரிகரமான இந்த்ரியங்களோடே யழியச்செய்கைக்கு வர்த்திக்கிற தேசமென்கை. "தமேந்த்ரியாநநம் ఘోరం యోమనోరజనీచరమ్। వివేకశరజాలేన శమంనయతియోగినామ్" "தமேந்த்ரியாநநம் கோரம் யோமநோரஜநீசரம்। விவேகஶரஜாலேந ஶமம்நயதியோகிநாம்" என்னக்கடவதிறே. "ఆత్మైవరిపురాత్మనః" "ஆத்மைவரிபுராத்மந:."

(பரந்துபொன் நிரந்து நுந்திவந்தலைக்கும்வார்புனல்) தன்னபிநிவேசமெல்லாம் கொண்டு எங்குமொக்கபபரந்து மாறாதேவந்து பொன்களைக்கோயிலிலே தள்ளி அலையெறியாநின்றுள்ள காவேரி. வார்புனல் - ப்ரவாஹரூபமான ஜலம். அதாகிறது - காவேரி. (அரங்கமென்பர் நான்முகத்தயன்பணிந்த கோயிலே) உபயபாவநாநிஷ்டனான ப்ரஹ்மாவானவன் தன்னதிகாரத்துக்குவரும் விரோதிகளைப்பரிஹரிக்கைக்குப்ரஹ்மபாவனைக்கும் பலமானமோக்ஷத்துக்குமாக சதுர்த்தசபுவநஸ்ரஷ்டாவென்றும், நாலுவேதங்களையும் ஒருக்காலே உச்சரிக்கைக்கீடான நான்கு முகத்தையுடையனென்றும், அஜனென்றும், தன்னைஸர்வாதிகனாகவபிமானித்திருக்கிறவன் பக்நாபிமானனாய் வந்தாச்ரயிக்கும் கோயிலை"ஸ்ரீரங்கம்"என்று நின்றார்கள் புராணவித்துக்கள். "రతిఙ్గతఇతిరఙ్గమ్" "ரதிங்கத இதிரங்கம்." "క్షీరాబ్ధేర్మణ్డలాద్భానోర్యోగినాంహృదయాదపి। రతిఙ్గతోహరిర్యత్రరఙ్గమిత్యభిధీయతే" "க்ஷீராப்தேர் மண்டலாத்பாநோர்யோகிநாம் ஹ்ருதயாதபி। ரதிங்கதோஹரிர்யத்ரரங்க மித்யபிதீயதே." ... ... (ருக)

அ.—ஐம்பத்திரண்டாம்பாட்டு. ராமாவதாரத்துக்குப்பிற்பாடர்க்குக் கோயிலிலே வந்து உதவினபடிசொல்லிற்று - கீழ்மூன்று

---

ஐம்பத்தோராம்பாட்டு. மநஸ்ஸு சத்ருவோவென்ன; அருளிச்செய்கிறார் (ఆత్మైవరిపురాత్మనః- ஆத்மைவரிபுராத்மந: என்று.) நிரந்து-நிறைந்தென்றாய் (மாறாதேயென்கிறது.) ... ... (ருக)

பர்ட்டாலே; இனியிரண்டுபாட்டாலே - க்ர்ஷ்ணாவதாரத்துக்குப்பிற்பாடர்க்குதவும்படி சொல்லுகிறது. அநந்தரம் கீழ்ப்பாட்டோடு ஸங்கதியென்னென்னில்; சதுர்த்தசபுவநாத்யக்ஷனாய் ஜ்ஞாநாதிகனானப்ரஹ்மாவுக்கு ஆச்ரயணீயமானவளவேயன்றிக்கே, அநந்யப்ரயோஜநராய் அநந்யஸாதநராயிருந்துள்ளவர்களுக்கு அநுபவஸ்தாநம் கோயிலென்கிறார்.

பொற்றையுற்றமுற்றல்யானைபோரெதிர்ந்துவந்ததைப்
பற்றியுற்றுமற்றதன்மருப்பொசித்தபாகனூர் •
சிற்றெயிற்றுமுற்றல்மூங்கில்மூன்றுதண்டரொன்றினர்
அற்றபத்தர்சூழ்ந்துவாழுமந்தணீரரங்கமே. (௫உ)

ப-ரை.—பொற்றையுற்ற - கற்பாறையிலே வர்த்திக்கையாலே, முற்றல்-திண்ணிதான, யானை-ஆனையாய், போரெதிர்ந்துவந்ததை- யுத்தத்திலே யெதிர்த்துவந்தத்தை, பற்றி - மதியாதே சென்று பற்றி, உற்று - நாலுகாலுக்குமுள்ளான அதினுடலிலே புக்குநுழைந்து, மற்று - அதுக்குமேலே, அதன - அதினுடைய, மருப்பு-கொம்பை, ஒசித்த-அநாயாஸேநமுறித்த, பாகனூர்-பாகன்வாத்திகிற தேசமாவது; சிறு-சிறுகின, எயிறு-கண்களையுடைத்தாய், முற்றல்-திண்ணிதான, மூங்கில் மூன்றுதண்டர் - மூங்கிற்றண்டு மூன்று தரித்த ஸந்யாஸிகளும், ஒன்றினர் - இதுதேசமே பரமப்ராப்யமென்று வந்து சேர்ந்தவர்களும், அற்ற - புருஷார்த்தாந்தரங்களில் பற்றற்று, பத்தர் - பெருமாளே ப்ராப்யப்ராபகமென்றிருக்குமவர்களும், சூழ்ந்துவாழும் - கோயிலவாஸமே வாழ்வாக வர்த்திக்கிற, அம் - தர்சநீயமாய, தண - சராஹாரமான, நீர் - ஜலஸம்ர்த்தியையுடைய, அரங்கம் - கோயிலாம். (௫உ)

வ்யா.—(பொற்றையுற்றமுற்றல் யானை) கற்பாறையிலே வர்த்திக்கையாலே திண்ணிதான ஆனை. மநுஷ்யஸஞ்சாரமின்றிக்கே மரங்களாலே நெருங்கின காட்டிலே வர்த்திக்கையாலே மநுஷ்யரைக்கண்டு கண்கலங்கிவர்த்தித்தவானை யென்றுமாம். பொற்றை-கற்பாறையும், கரிக்காடும. (போரெதிர்ந்துவந்ததை) ரஜகனைப்போலன்றியே யுத்தத்திலே யெதிர்த்து வந்தத்தை. (பற்றியுற்று) மதியாதேசென்று பற்றி,, நாலுகாலுக்கு முள்ளான வதினுடலிலே புக்குநுழைந்து. (மற்றதன் மருப்பொசித்தபாகனூர்) அதுக்குமேலே, அதினுடைய ஹிம்ஸாபரிகரமான கொம்பை அநாயாஸேநமுறித்தபாகன் வர்த்திக்கிறதேசம். “பாகன்” என்று - அதுக்கு ரக்ஷகனானவன், அதினளவறிந்துஇடம்கொள்ளுமாப்போலேஇடங்கொண்டுஅத்தை யழித்தபடியாலே சொல்லுகிறது. இத்தால்-க்ர்ஷ்ணாவதாரத்தில் பிற்பாடரானார்க்குப்பெருமாள்ஸ்வாநுபவ விரோதிவர்க்கத்தை குவலயாபீடத்தையழித்தாப்போலேயழியச்செய்யுமவரென்கை.

ஸ்ரீ வஸுதேவரும் தேவகிப் பிராட்டியும் ஸ்ரீமதுரையில் பெண்களும் ரங்கமத்யத்திலேக்ர்ஷ்ணனைக்காணவாசைப்பட்டிருக்க வாசலிலே இடைச்சுவராயிறேகுவலயாபீடம் நின்றது. "సఖ్యేనపశ్యత యువేవ వసుదేవోऽభూత్ ప్రాదురాసీజ్జనార్దనః" "ஸக்யேநபஶ்யதயுவேவவஸுதேவோபூத்ப்ராதுராஸீஜ்ஜநார்த்தந:."

(சிற்றெயிற்றுமுற்றல் மூங்கில் மூன்றுதண்டர்) சிறுகின கண்களையுடைத்தாய்த் திண்ணிதானமூங்கில்தண்டுமூன்றுதரித்த ஸந்ந்யாஸிகள். "மூங்கில் மூன்றுதண்டர" என்கிறவித்தால்-கீழுள்ள ஆச்ரமத்ரயத்தையும் வ்யாவர்த்திக்கிறது. "சிற்றெயிற்றுமுற்றல" என்கிறவித்தால்-"ఏకేన బ్రహ్మదణ్డేన సర్వాస్త్రాణి హతాని మే" "ஏகேநப்ரஹ்மதண்டேநஸர்வாஸ்த்ராணிஹதாநிமே" என்கிறந்யாயத்தாலேஎதிர்த்தவிரோதிவர்க்கத்தைத் தானே யழியச்செய்யவற்றாய், தனக்கழிவின்றிக்கே யிருக்குமென்னு மத்தை நினைக்கிறார். (ஒன்றினர்) பகவத்விஷயத்திலே ஏகாந்தஹ்ர்தயரானவர்கள் என்னுதல், தேசாந்தரங்களைவிட்டு இத்தேசமே ப்ராப்யமென்று வந்து சேர்ந்தவர்களென்னுதல். (அற்றபத்தர்) புருஷார்த்தாந்தரங்களிலும் ஸாதநாந்தரங்களிலும் பற்றற்றுப் பெரியபெருமாளே ப்ராப்யமும்ப்ராபகமுமென்று இருக்குமவர்கள். த்ரிதண்டதாரிகளாய் பகவத்விஷயத்திலே ஏகாந்தஹ்ர்தயராய்பரவஸ்துக்களைத்ர்ணமாகபுத்திபண்ணும்ஸந்ந்யாஸிகளென்றுமாம். (சுற்றிவாழும்) ஸர்வாவஸ்தையிலும் விடாதே கோயிலில்வாஸமே வாழ்வாகஇருக்குமவர்களென்னுதல்; தேசஸம்ர்த்தியைமநோரதித்து அதுவேபோக்யமாக விருக்குமவர்களென்னுதல். சுற்றல் - எண்ணல். (அந்தண்நீரரங்கமே) தர்சநீயமாய்ச்ரமஹரமான ஜலஸம்ர்த்தியையுடையகோயில். (ரு௨)

அ.—ஐம்பத்துமூன்றும்பாட்டு. அநிருத்தாழ்வானுடைய அபிமதவிரோதியாய்ப்ரபலமானபாண ப்ரமுகவர்க்கத்தைப் போக்கினாப்போலே,இன்றுஆசிரிதருடைய போகவிரோதியைப்போக்குகைக்கு அந்தக்ர்ஷ்ணன்நித்யவாஸம்பண்ணும்தேசம் கோயிலென்கிறார்.

---

ஐம்பத்திரண்டாம்பாட்டு. குவலயாபீடம் அநுபவவிரோதியாயிருந்ததோவென்ன; அருளிச்செய்கிறார்(ஸ்ரீவஸுதேவருமித்யாதி.) "மூங்கில்" என்கையாலே - பலாசதண்டத்தை யுடையப்ரஹ்மசாரியையும், "மூன்றுதண்டர்" என்கையாலே - ஒருதண்டுடைய க்ர்ஹஸ்தாஶ்ரமத்தையும் வ்யாவர்த்திக்கிறது. வஸிஷ்டனுடைய ஏகதண்டத்தாலே விச்வாமித்ரனுடைய அஸ்த்ரங்கள் நசிக்கையாலே (సర్వాస్త్రాణి హతాని - ஸர்வாஸ்த்ராணிஹதாநி என்கிறது) "ஒன்றினர் அற்றபத்தர்" என்று - தனித்தனியேயாதல்; ஸந்ந்யாஸிகளுக்கு விசேஷணமாதல். பற்றுகை - த்ர்ணமாக விசாரிக்கை. ()

மோடியோடிலச்சையாயசாபமெய்திமுக்கணன்
கூடுசேனைமக்களோடுகொண்டுமண்டிவெஞ்சமத்
தோடவாணனாயிரங்கரங்கழித்தவாதிமால்
பீடுகோயில்கூடுநீரரங்கமென்றபேரதே. (ருக)

ப-ரா.—சாபமெய்தி - ப்ரஹ்மாவாலே சபிக்கப்பட்டு, கையும் கபாலமுமாய் இரந்து திரிகையாலே, இலச்சையாய - லஜ்ஜாவிஷ்டனாய், முக்கணன்- த்ரிநேத்ரதாரியான ருத்ரன், மோடியோடு - காளியோடே, மக்களோடு கூடு- மக்களோடேதிரண்ட, சேனைகொண்டு - சேனையையுங்கொண்டு, வெஞ்சமத்து - க்ரூரமான யுத்தத்திலே, மண்டியோட - அரைகுலையத் தலைகுலைய ஓட, வாணன - பாணாஸுரனுடைய, ஆயிரம் கரம் கழித்த - ஆயிரமதோள்களையும் கழித்த, ஆதிமால் - ஜகத்காரண பூதனான ஸர்வேச்வரனுடைய, பீடுகோயில்- பெரிய கோயிலாவது, கூடு - ஸஹ்யத்தினின்றும் வந்ததும் வர்ஷஜலத்தோடு கூடினதுமான, நீர் - நீரையுடைத்தான, அரங்கமென்றபேரது - திருவரங்கமென்னும் திருநாமத்தையுடையது. (ருக)

வ்யா.—(மோடியோடிலச்சையாயசாபமெய்தி) ஸாத்விகர்க்கு தர்சநமேதொடங்கி லஜ்ஜையாம்படி அவர்களால் அபரிக்ராஹ்யை யான சாபத்தைப்ராபித்தகாளியோடே. தமஃப்ரசுரையாகையாலும், துராசாரையாகையாலும், ஸாத்விகரால் உபேக்ஷணீயையாயிறே அவளிருப்பது. (சாபமெய்தி-இலச்சையாய-முக்கணன்) "[Grantha] [Grantha]" "கபாலீத்வம் பவிஷ்யஸி" என்றுப்ரஹ்மாசபிக்கையாலே லஜ்ஜாவிஷ்டனான லலாடநேத்ரனென்றுமாம். ஆகமாதிமுகத்தாலே தன்னைஸர்வேச்வரனாக வுபதேசித்து, லலாடநேத்ரத்வ கங்காதரத்வாதிகளாலே தன்னுடையசக்திகளையு மாவிஷ்கரித்து, லோகத்தை யடங்கக் கும்பீடுகொள்ளுகிறவனுக்கு ப்ரஹ்மசாபத்தாலே க்ஷேத்ரஜ்ஞத்வமும் சாஸ்த்ரவச்யதையும் ப்ரகாசித்தால் லஜ்ஜாவிஷ்டனாகச்சொல்லவேணுமோ. (கூடுசேனைமக்களோடு கொண்டுமண்டிவெஞ்சமத்தோட) மக்களோடே திரண்ட ஸேனையையுங்கொண்டு அரைகுலையத்தலைகுலைய யுத்தத்திலேயோட. நம்பி மூத்தபிரானும் க்ர்ஷ்ணனும் விஜயத்திலே மண்டினவாறே ருத்ரனும்பரிகரமும் ஓடுகையிலேமண்டினபடி.

(வாணனாயிரங்கரங்கழித்த) பாணனுடைய ஆயிரந்தோள்களையும் கழித்த.பாணனுடைய ரக்ஷணத்திலே ப்ரதிஜ்ஞைபண்ணின ருத்ரனுடைய அபிமாநத்தைக்கழித்தான்; தோள்வலிகொண்டாடின பாணனுடைய தோள்களையும் கழித்தான். (ஆதிமால்) ஜகத்காரணபூதனான ஸர்வேச்வரன். "[Grantha]" "க்ர்ஷ்ண ஏவஹிலோகாநாம் உத்பத்திரபிசாப்யயஃ" என்னக்கடவதிறே. (பீடுகோயில்) பெரியகோயில். பீடு-பெருமை. (கூடு நீரரங்கமென்றபேரதே) ஸஹ்யத்தினின்றும் வந்ததும் இப்பாலுண்டானவர்ஷத்தாலு மாகக்கூடின நீரையுடைத்தான திரு

வரங்கமென்னும் திருநாமத்தையுடைத்து. "சாபமெய்தி - இலச்சையாய-முக்கணன் - மோடியோடும் - மக்களோடும் - கூடுசேனை-கொண்டு - வெஞ்சமத்து - மண்டி - ஓடவாணனாயிரங்கரங் கழித்த வாதிமால் - கூடுநீர் - அரங்கமென்றபேரதான-பீடுகோயில்" என்றந்வயம். ஆக இரண்டுபாட்டாலும் செய்ததாய்த்து - ஆச்ரிதர்க்கு விரோதிகளாமித்தனையேவேண்டுவது, எதிர்த்தலை திர்யக்காகவுமாம்,ஸர்வாதிகனானருத்ரனாகவுமாம்,அழியச்செய்கைக்குகுவலயாபீடம் *கொலையானையாய்த்தோற்றுகையாலேகொன்றருளினான். க்ர்ஷ்ணனைத் தோற்பித்து பாணனைரக்ஷிக்கக்கடவோமென்று வந்த ருத்ரன் தோற்றுப்போம்படிபண்ணினான். "ஷாராயமமஹிமபுஜை:" "பாரரயமமகிமபுஜை:" என்று தோள்வலிகொண்டுவந்த பாணனுடையதோள்களைக்கழித்தான். ஆக அவர்களுடையநினைவு அவர்கள்தலையிலே யாக்குமவனென்னை. ... ... (ருரு)

அ.— ஐம்பத்துநாலாம்பாட்டு. ஸாத்விகர்க்கு துஷ்ப்ராபமாம்படியான அரணையுடையலங்கையை அம்பாலேயழித்த தசரதாத்மஜன், பிறபாடர்க்கு ஸ்வபோகவிரோதியான ஸ்வாதந்த்ர்யமாகிற அரணையழிக்கைக்கும, லங்கையிலே பண்ணின ஆயாஸத்தாலே வந்த ச்ரமந்திரக சாவேரி சிசிரோபசாரம் பண்ணுகைக்காகவும் வந்து கண்வளர்ந்தருளுகிறதேசம் கோயிலென்கிறார். கீழிரண்டுபாட்டால் - பாஹ்யமான ஸ்வபோகவிரோதிகளையழியச்செய்தபடி சொல்லிற்று; இதில்-ஸ்வபோகத்தில் "மமேதம்" "மமேதம்" என்றுவரும ஆந்தரமானஸ்வாதந்த்ர்யத்தை லங்கையிலரணையழித்தாப்போலே யழிக்குமென்கிறது.

இலைத்தலைச்சரந்துரந்திலங்கைகட்டழித்தவன்
மலைத்தலைப்பிறந்திழிந்துவந்துநுந்துசந்தனம்
குலைத்தலைத்திறுத்தெறிந்தகுங்குமக்குழம்பினோ
டலைத்தொழுகுகாவிரியரங்கமேயவண்ணலே. (ருச)

ப-ரை.—இலை - இலைபோலேயிருக்கிற, தலை - தலையையுடைத்தான, சரம் - திருச்சரங்களை, துரந்து - ஏவி, இலங்கைகட்டு - லங்கையின அரணை, அழித்தவன் - அழித்ததசரதாத்மஜனாய; மலைத்தலைபிறந்து-ஸஹ்யபர்வதத்திலேபிறந்து, வர்ஷத்திலே வேரோடே பறியுண்டு, இழிந்து வந்து - அங்கிநோடே யிழிந்துவந்து, நுந்து - தள்ளாநின்றுள்ள, சந்தனம் - சந்தனமரங்கள், குலைத்து - குங்குமபபடர்கொடியை நீவந்து குலைத்து, அலைத்து - சுற்றுமலைத்து, இறுத்து - முறித்து, எறிந்த - வீசின, குங்குமக்குழம்பினோடு - குங்குமரஜஸ்ஸுக்களைக் குழம்பாக்கி அதனோடே கூட, அலைத்தொழுகு - அலைத்துக்கொண்டுவாரா நின்றுள்ள, காவிரி - திருக்காவேரியால் சூழப்பட்ட, அரங்கம் மேய - கோயிலிலே நித்யவாஸம் பண்ணுகிற, அண்ணல் - ஸ்வாமி, தனபக்கல்ருசியில்லாதார்க்கு ருசியையுண்டாக்குகைக்கும், ருசிபிறந்தார்க்கு ஆச்ரயணீயனாகைக்கும் உரியனென்கிறார். (ருச)

வ்யா.— (இலைத்தலைச்சரந் துரந் திலங்கைகட்டழித்தவன்) இலைபோலேயிருக்கிற தலையையுடைத்தான திருச்சரங்களையேவி லங்கையி லரணையழித்த தசரதாத்மஜன. இலைத்தலைச்சரம்-வாயம்பு. கட்டு - அரண். இவ்வபதானத்தால் - ராமாவதாரத்தைச் சொல்லிற்று, ஸ்வபோகத்தை "மமேதம்" "மமேதம்" என்ற சூர்ப்பணகியை யழியச்செய்தவனே அழியச்செய்யவேணுமென்று நினைத்து. (மலைத்தலைப் பிறந்திழிந்து வந்து நுந்து சந்தநம்) ஸஹ்யத்திலே பிறந்து வர்ஷத்திலே வேரோடேபறியுண்டு அந்நீரோடே யிழிந்து வந்து தள்ளாநின்றுள்ளசந்தநம.

(குலைத்தலைத்திறுத்த •தெறிந்த குங்குமக் குழம்பிநோடலைத்து ஒழுகுகாவிரி) குங்குமப்படர்கொடியை நீவந்து குலைதநுச் சுற்று மலைத்துமுறித்தெறிந்த குங்குமரஜஸ்ஸுக்களாக குழம்பாக்கி அத்தோடேகூட அலைத்துக்கொண்டுவாராநின்ற காவேரி. இந்தால்- லங்கையையழித்த ச்ரமந்தீரவும், அவன் திருமேனியில ஸௌகுமார்யத்துக்கு ஸத்ருசமாகவும, சந்தநகுங்குமங்களாலே ப்ரிதிப்போரிதையாயக்கொண்டு காவேரி அடிமை செய்யும்படியைச் சொல்லிற்று. (அரங்கமேயவண்ணலே) கோயிலிலே நித்யவாஸம் பண்ணுகிற ஸ்வாமீ. காவேரிஸஹ்யத்திலநின்றும் அடிமை செய்கைக்கு வந்த தூரத்தோபாதி போருமாய்த்து - க்ஷீராப்தியிலநின்று மடிமை கொள்ளுகைக்கு வந்ததூரம். அண்ணல-ஸ்வாமி. ஸம்ஸாரத்தில் தம்பக்கலில் ருசியில்லாதாரக்கு ருசிஜநகராகைக்கும், ருசிபிறந்தார்க்கு ஆச்ரயணீயராகைக்கும், ஆச்ரிதரை அநுபாவ்யராயுமாகவடிமை கொள்ளுகைககு முரியவனென்னை ...　　... •　(ருச)

அ.—ஐம்பத்தஞ்சாம்பாட்டு.இப்படி ஆச்ரிதார்த்தமாகக்கோயிலிலே கண்வளர்ந்தருளுகிறபடியைககாட்டி, லக்ஷ்மீ பூமி நீளாநாயககனுயிருந்துவைத்து எனக்கு மறுகமொண்ணுதபடி என்னை அங்கீகரித்தருளினுனென்கிறார்.

மன்னுமாமலர்க்கிழத்திவையமங்கைமைந்தனுயப்
பின்னுமாயர்பின்னைதோண்மணம்புணர்ந்ததன்றியும்
உன்னபாதமென்னசிந்தைமன்னவைத்துநல்கிஞய்
பொன்னிசூழரங்கமேயபுண்டரிகனல்லையே.　　(ருரு)

ப-ரை.—மன்னு-மெனமைமுளிய்த்ரநாற்றங்களையுடைத்சாகையாலே,மாச்லாக்யமான,மலர்க்கிழத்தி-தாமரைமலரைப்பிறப்பகமாகவுடைய பெரியபிராட்டியாருக்கும, வையமங்கை - ஸ்ரீபூமிப்பிராட்டிக்கும், மைந்தனுய் - இஷ்டனுய், பின்னும் - அதுக்குமேலே, ஆயர் - இடைக்குலத்தில் பிறந்த, பின்னை

---

ஐம்பத்துநாலாம்பாட்டு. ஸ்வபோக்த்ர்த்வ விரோதி போக்குகைக்கு, வேறொரு அவதாரமாகாதோ,ராமாவதாரமாகவேணுமோ வென்ன; அருளிச்செய்கிறூர் (இவ்வபதாநத்தாலித்யாதி.)குங்குமரஜஸ்ஸு - குங்குமதூளென்றபடி.　　...　　...　　(ருரு)

தோள் - நப்பின்னைப் பிராட்டி திருத்தோளோடே, மணம் புணர்ந்து-ஸம்ச்லேஷித்து, அதன்றியும் - அதுக்குமேலேயும், உன்னபாதம்-ஸுஸ்ரீபோக்யமான உன திருவடிகளை, என்னசிந்தை - நித்யஸம்ஸாரியான வென்னுடையஹ்ர்தயத்திலே, மன்னவைத்து - பொருந்தும்படிவைத்து, நல்கினாய - பக்ஷபதித்தாய்; பொன்னி - காவேரியாலே, சூழ் - சூழப்பட்ட, அரங்கம் - கோயிலிலே, மேய-நித்யவாஸம் பண்ணின, புண்டரீகனல்லையே - புண்டரீகாவயவனல்லயோ. (ருரு)

வ்யா.—(மன்னுமாமலர்க்கிழத்தி) மென்மை குளிர்த்தி நாற்றமென்கிற விவற்றால் ச்லாக்யமான தாமரைப்பூவில் பிறப்பையுடையளான பெரியபிராட்டியாராகிற மஹிஷி. "కృతాభిషేకా మహిషీ" "க்ர்தாபிஷேகாம்ஹிஷீ" என்கிறபடியே ஜகத்ரக்ஷணத்துக்கு முரியவளென்கை. கிழத்தி - உரியவள். (வையமங்கைமைந்தனாய்) ஸ்ரீ பூமிப்பிராட்டிக்கு அபிமதனாய். "యువతిశ్చకుమారిణీ" "யுவதிஶ்ச குமாரிணீ" என்கிற விவள்பருவத்தோடே சேர, "యువాకుమారః" "யுவாகுமார:" என்கிற பருவத்தையுடைய காந்தனாய். மைந்தன்-இளையோன். (பின்னும்) அதுக்குமேலே. ஸர்வாதிகத்வத்துக்கும் போகபௌஷ்கல்யத்துக்கும் இவர்களிருவருமே யமைந்திருக்க அதுக்குமேலே. "అస్యేశానా జగతో విష్ణుపత్నీ" "హ్రీశ్చ తే లక్ష్మీశ్చ పత్న్యౌ" "அஸ்யேஶாநாஜகதோ விஷ்ணுபத்நீ" "ஹ்ரீஶ்சதேலக்ஷ்மீஶ்ச பத்ந்யௌ" "தேவிமாராவார் திருமகள்பூமி." (ஆயர்பின்னை தோள் மணம்புணர்ந்து) அபிஜாதையான நப்பின்னைப் பிராட்டியோடே கலந்து போரும் போகபௌஷ்கல்யத்தையுடையனாய.

(அதன்றியும்) உனக்கபிமத விஷயங்களை குறைவற்றிருக்கச் செய்தே அதுக்குமேலேயும். (உன்னபாதமென்ன சிந்தைமன்ன வைத்து நல்கினாய்) "அமரர்சென்னிப்பூ" என்கிறபடியே ஸுஸ்ரீ போக்யமான உன்திருவடிகளை நித்யஸம்ஸாரியா யிருக்கிற வென்னுடைய ஹ்ர்தயத்திலே க்ஷணகாலம் விஶ்லேஷமில்லாதபடி வைத்து என்பக்கலிலே பக்ஷபதித்தாய். வாத்ஸல்யம் தந்தாமுடைய வைலக்ஷண்யத்தையும் எதிர்த்தலையில்தண்மையையும் பார்க்கவொட்டாதிறே. (பொன்னிசூழரங்கமேயபுண்டரீகனல்லையே) ச்ரமஹரமான காவேரியாலே சூழப்பட்டகோயிலிலே நித்யவாஸம்பண்ணின புண்டரீகாவயவனல்லயோ. புண்டரீகாவயவ ப்ராசுர்யத்தாலேபுண்டரீகவ்யபதேஶம் "ఆనన్దో బ్రహ్మ" "విజ్ఞానం బ్రహ్మ" "ஆநந்தோப்ரஹ்ம" "விஜ்ஞாநம்ப்ரஹ்ம" இதிவத், திவ்யாவயவங்களுக்கு ச்ரமஹரமான தேசவாஸத்தால் பிறந்த செவ்விக்குமேலே என்னோட்டை ஸம்ஶ்லேஷத்தாலேயும் புதுக்கணித்ததென்கை. ... (ருரு)

---

ஐம்பத்தஞ்சாம்பாட்டு. மன்னுமாமலர் - மாமலரிலே மன்னுகிற கிழத்தி. இவர்களிருவரும் ஆதிக்யத்துக்கும் போகத்துக்கும் அமைந்திருப்பார்களென்கிறதுக்கு ப்ரமாண மருளிச்செய்கிறார், (అస్యేశానా - அஸ்யேஶாநேத்யாதி.) ... ... (ருரு)

அ.—ஐம்பத்தாறும்பாட்டு. இனி மேலாறுபாட்டாலே-திருக்குடந்தையிலே கண்வளர்ந்தருளுகிறபடியை யநுபவிக்கிறார். இதில் முதற்பாட்டால்-ஆச்ரிதவிரோதியான ராவணனையழியச்செய்தசக்ரவர்த்தித்திருமகன்,பின்புள்ளாரான அநந்யப்ரயோஜநர்க்குஸ்வப்ராப்திவிரோதிகளைப்போக்கி அநுகூலவ்ர்த்தி கொள்ளுகைக்குத் திருக்குடந்தையிலே கண்வளர்ந்தருளுகிறபடியை யநுபவிக்கிறார்.

இலங்கைமன்னனைந்தொடைந்துபைந்தலைநிலத்துகக்
கலங்கவன்றுசென்றுகொன்றுவென்றிகொண்டவீரனே
விலங்குநூலர்வேதநாவர்நீதியானகேள்வியார்
வலங்கொளக்குடந்தையுட்கிடந்தமாலுமல்லையே. (ருசா)

ப-ரா.—அன்று - வரங்கொடுத்த தேவதைகளும் குடியிருப்பு இழக்கும்படியானதசையிலே, சென்று - ஸேதுபந்தநத்தைப் பண்ணிச்சென்று, இலங்கைமன்னன் - லங்கைக்கு நிர்வாஹகனானராவணன், கலங்க-பயப்படும்படிக்கீடாக, அவனுடைய, பை-வலிதான, ஐந்தொடைந்து தலை - பத்துத்தலைகளும், நிலத்து-பூமியிலே, உக-உதிர்ந்து உருமாய்ந்துபோம்படி,கொன்று—, வென்றிகொண்ட - ஜயத்தை லபித்த, வீரனே - வீரத்தனமையையுடையவனே; வைதிககர்மாநுஷ்டாதாக்களென்று தோற்றும்படியான, நூல் - யஜ்ஞோபவீதத்தை, விலங்கர் - சரீரத்திலே யுடையவர்களாய், வேதநாவர் - ஸர்வகாலமும் வேதமோதுகிற நாக்கையுடையராய், நீதியான - ஸர்வகர்ம ஸமாராத்யன் ஸர்வேச்வரனென்று, கேள்வியார் - ஸதாசார்யோபதேச முடைய ப்ராஹ்மணருடைய, வலங்கொள - அநுகூலவ்ர்த்தியை அங்கீகரிக்கைக்காக, குடந்தையுள் - திருக்குடந்தையிலே, கிடந்த - கண்வளர்ந்தருளுகிற, மாலல்லையே-ஸர்வாதிகனல்லையோ. (ருசா)

வ்யா.—(இலங்கைமன்னன்) குளவிக்கூடுசேர்த்தாப்போலே ஹிம்ஸகர் சேரவர்த்திக்கும் லங்கைக்கு நிர்வாஹகனான ராவணன். "𑌰𑌾𑌵𑌣𑍋 𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑍇𑌶𑍍𑌵𑌰𑌃" "ராவணோராக்ஷஸேச்வர:" என்கிறபடியே அந்ததுர்வர்க்கத்துக்கடையநிழலாயிருக்குமவனிறே.(ஐந்தொடைந்து பைந்தலைநிலத்துக) அறுக்கவரிதான பத்துத்தலையையும் பூமியிலேயுதிர்த்து உருமாய்ந்துபோம்படி. பைந்தலை-வலியதலை. "ஐந்தொடைந்து" என்று-"𑌦𑌶𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌨𑌨𑌮𑍍" "தசேந்த்ரியாநநம்" என்கிறபடியே அநந்யப்ரயோஜநர்க்கு பாதகமான சிலவஞ்சகங்களைநினைக்கிறாராய்த்து. (கலங்கவன்றுசென்றுகொன்று வென்றிகொண்ட வீரனே)பயமிருக்கும்படி யறியாதவன் பயத்தாலே போக்கற்றுக் கலங்கும்படி,இவனுக்கு வரங்கொடுத்த தேவதைகளும் குடியிருப்பிழக்கும்படியானதசையிலே ஜநஸ்தாநவதத்தையும் ஸேதுபந்தநத்தையும் பண்ணிச் சென்றுஅவனைக்கொன்று விஜயத்தை லபித்த ஆண்புலியானவனே.

---

ஐம்பத்தாறும்பாட்டு. சிலவஞ்சகங்கள் - மநஸ்ஸு முதலான தசேந்த்ரியங்களை நினைக்கிறாரென்றுஸ்வாபதேசம்.

(விலங்குநூலர்) ஸர்வகாலமும் வைதிக கர்மாநுஷ்டாதாக்களென்று தோற்றும்படியான யஜ்ஞோபவீதத்தை சரீரத்துக்கு நிரூபகமாக வுடையராய். விலங்கு - உடம்பு. (வேதநாவர்) ஸர்வகாலமும் வேதபாராயணம் பண்ணுகையாலே வேதோச்சாரணத்தை நிரூபகமாக வுடையராய். (நீதியானகேள்வியார்) ஸர்வ கர்மஸமாராத்யன் ஸர்வேஶ்வரனென்று ஸதாசார்யோபதேசமுமுடைய ப்ராஹ்மணர். (வலங்கொளக் குடந்தையுள் கிடந்த மாலுமல்லையே) அவர்களுடைய அநுகூலவ்ருத்தியை ஸ்வீகரிக்கைக்காகத் திருக்குடந்தையிலே கண்வளர்ந்தருளுகிற ஸர்வாதிகனல்லையோ. வலம் - அநுகூலம். சக்ரவர்த்தித் திருமகனுடைய ஆண்பிள்ளைத் தனத்தை ஆராவமுதாழ்வார்பக்கலிலே யநுபவித்தபடி சொல்லிற்றாய்விட்டது. ... ... ... (ருசு)

அ.—ஐம்பத்தேழாம்பாட்டு. ப்ராப்திவிரோதியைப் போக்கி அநுகூலவ்ருத்தி கொள்ளுமளவன்றியே, நித்யாநபாயிநியான பிராட்டியோட்டைஸம்ஶ்லேஷத்துக்கு இடைச்சுவரான ராவணனை யழியச்செய்தாப்போலே, பிற்பாடரான ஆச்ரிதர்க்கு அநுபவ விரோதிகளைப் போக்குகைக்காகத் திருக்குடந்தையிலே கண்வளர்ந்தருளுகிறபடியை யநுபவிக்கிறார்.

சங்குதங்குமுன்கைநங்கைகொங்கைதங்கலுற்றவன்
அங்கமங்கவன்றுசென்றடர்த்தெறிந்தவாழியான்
கொங்குதங்குவார்குழல்மடந்தைமார்குடைந்தநீர்
பொங்குதண்குடந்தையுட்கிடந்தபுண்டரீகனே. (ருஎ)

ப-ரை.—சங்கு - சங்குவளைகள், தங்கு - கழலாதே யிருக்குமுள்ள, முன்கை - முன்கையையுடையளாய, நங்கை- ரூபகுணத்தாலும் ஆத்மகுணத்தாலும் பூர்ணையான பிராட்டியுடைய, கொங்கை தங்கல்-ஸ்தநங்களோடே ஸம்ஶ்லேஷிக்கையை, உற்றவன் - விரும்புற்ற ராவணனுடைய, அங்கம் மங்க - சரீரம் அழிகைக்காக, அன்று - பிராட்டி தலைப்பின்னலாலே உச்சரிக்கிட்டுக்கொண்டு முடிய நினைத்தகாலத்திலே, சென்று - அவனிருந்த விடத்தே சென்று, அடர்த்து - அடைமதிள் படுத்தி, எறிந்த - அவன தலையை யறுத்த, அநதஹார்ஷத்தாலே, ஆழியான் - கடல்போலே ச்ரமஹரமான வடிவையுடையவன்; கொங்குதங்கு - பரிமளம் மாறாத, வார் - நீண்ட, குழல் - குழலையுடைய, மடந்தைமார் - ஸ்த்ரீகள், குடைந்த - அவகாஹித்த, நீர்-நீரானது, பொங்கு - இவர்களுடைய நெருக்கத்தாலே ப்ரவ்ருத்தமாய், அதனாலே, தண் - குளிர்ந்த, குடந்தையுள் - திருக்குடந்தையிலே, கிடந்த-கண்வளர்ந்தருளுகிற, புண்டரீகனே- புண்டரீகாக்ஷனே. (ருஎ)

வ்யா.—(சங்குதங்குமுன்கை) வளை கழலாதேயிருந்துள்ள முன்கையை யுடையவள்.

---

வலம்-ப்ரதக்ஷிணமாகையாலே (அநுகூலமென்கிறது.) (ருசு)

அவன் கொண்டாடும்வளே முன்னைவளையாகையாலே வ்யதிரேகத்தில் கழலுவதும் அதுவேயிறே. இத்தால் - நித்யாநபாயிநியென்கை. (நங்கை) ரூபகுணத்தாலும் ஆத்மகுணத்தாலும் பூர்ணையானவள். "துல்யஶீலவயோவ்ருத்தாம் துல்யாபிஜநலக்ஷணாம்" "துல்யஶீலவயோவ்ர்த்தாம் துல்யாபிஜநலக்ஷணாம்" என்கிற பிராட்டி பக்கலிலே. (கொங்கைதங்கலுற்றவனங்கம் மங்க) திருவடிகளிலே தங்கப்ராப்தமாயிருக்க, மாத்ர்விஷயமென்று பாராதே அதிக்ரமத்தைநினைத்த ராவணனுடைய ஶரீரமழிகைக்காக. தங்கல்-தொங்கல். இநத துர்ப்புத்திககடி தேஹாத்மாபிமாநமாகையாலே அதுக்கடியான சரீரத்தை யாய்த்து அழிக்கநினைத்தது. (அன்று) உடலையுமுயிரையும் பிரித்தாப்போலே, இருவரையும் கடலுக்கக்கரையு மிககரையுமாம்படி பண்ணினஅன்றென்னுதல்; வேண்யுத்க்ரதந தசையிலே யென்னுதல். (சென்று) "அபியாதா ப்ரஹர்த்தா ச" "அபியாதாப்ரஹர்த்தாச" என்கிறபடியே அவனிருந்தவிடத்தே சென்று. (அடர்த்தெறிந்தஆழியான்) அடைமதிட்படுத்தி அவன்தலையையறுத்து அந்த ஹர்ஷத்தாலே கடல்போலே ச்ரமஹரமான வடிவையுடையவன். எறிதல் - அறுத்தல்.

(கொங்குதங்குவார்குழல் மடந்தைமார்) பரிமளம் மாறாத நீண்ட குழலையுடைய ஸ்த்ரீகள். (குடைந்தநீர்பொங்கு தண்குடந்தையுள்) அவகாஹித்தநீரானது இவர்களுடைய நெருக்கத்தாலே ப்ரவர்த்தமாய், அத்தாலே ச்ரமஹரமானதிருக்குடந்தையிலே. இத்தால் - ஆராவமுதாழ்வாரை யநுபவிக்கச்சொல்லுமவர்களை, "ஶ்ரீமாலாஹஸ்தாः" "ஶ்ரீமாலாஹஸ்தாः" என்கிறபடியே எதிரேற்றுக்கொள்ளுமவர்களையு மங்குத்தைக்கு பரிசாரகைகளாயும் நிற்குமவர்களென்கை. (கிடந்தபுண்டரீகனே) தாமரைக்காடு பரப்புமாறப் பூத்தாப்போலே யிருக்கிற திவ்யாவயவங்களோடே தன்னை யநுபவிப்பிக்கைக்காகக் கண்வளர்ந்தருளுகிறவன். ஆக இரண்டுபாட்டாலே-சக்ரவர்த்தித்திருமகனுடைய ஆண்பிள்ளைத்தனத்தையும் அழகையுமநுபவித்து, மேலிரண்டு பாட்டாலே - கர்ஷ்ணனுடைய வீரசரிதத்தையும் அழகையும் ஆராவமுதாழ்வார்பக்கலிலே யநுபவிக்கிறார். ... ... ... ... ... ... ... (௫௭)

அ.—ஐம்பத்தெட்டாம்பாட்டு. ஆசரிதார்த்தமாக யமளார்ஜுநங்கள் தொடக்கமானப்ரதிகூலவர்க்கத்தைப்போக்கினநீ, அக்காலத்துக்குப் பிற்பாடர்க்குதவுகைக்காக ஆச்ரிதவாத்ஸல்யத்தாலே வந்து கண்வளர்ந்தருளினையல்லையோ வென்கிறார்.

---

ஐம்பத்தேழாம்பாட்டு. "தங்கு" என்று விசேஷிப்பானென்னென்ன; அருளிச்செய்கிறார் (அவன்கொண்டாடுமித்யாதி.) ()

மரங்கெடநடந்தடர்த்துமத்தயானைமத்தகத்
துரங்கெடப்புடைத்தோர்கொம்பொசித்துகந்தவுத்தமா
துரங்கம்வாய்பிளந்துமண்ணளந்தபாதவேதியர்
வரங்கொளக்குடந்தையுட்கிடந்தமாலுமல்லையே. (ரு அ)

ப-ரை.—மரம் - யமளார்ஜுநமென்னும் மருதமரங்கள், கெட - முறியும்படி, நடந்து - தளர்நடையிட்டு, மத்தயானை - மதிக்கப்பண்ணிக்கொண்டுவந்த குவலயாபீடத்தின்செருக்குப்போம்படி, அடர்த்து-நெருக்கி, ஓர்- அத்விதீயமான, கொம்பு - கொம்பை, ஒசித்து - முறித்து, உரங்கெட - அதின் மிடுக்கழியும்படி, மத்தகத்து - தலையிலே, புடைத்து - புடைத்துக்கொன்றருளி, உகந்த - ஆச்ரிதவிரோதிபோகப்பெற்றதென்று உகந்த, உத்தமா - புருஷோத்தமனே!; துரங்கம்வாய் பிளந்து - கேசியுடைய வாயைக்கிழித்து, வாமனனாய் மஹாபலியஜ்ஞவாடத்தில் சென்றிரந்து நீரேற்றுப் பெற்று, மண்-பூமியை, அளந்த - அளந்தருளிய, பாத - திருவடிகளையுடையனாய், வேதியர் - வேதார்த்த தாத்பர்யம் கைப்பட்டவர்கள், வரம்கொள - தந்தாமபேக்ஷிதங்களை உன்பக்கலிலே அபேக்ஷிக்கலாம்படி, குடந்தையுள்கிடந்த - திருக்குடந்தையிலே கண்வளர்ந்தருளுகிற, மால்லையே - வ்யாமுக்தனல்லையோ. (ரு அ)

வ்யா.—(மரங்கெடநடந்து) மருதுகள் முடியநடைகற்று.நடக்கையாவது - தவழுகையும், தளர்நடையிடுகையும். (அடர்த்து மத்தயானை) மதிக்கப்பண்ணிக்கொண்டுவந்த குவலயாபீடத்தைச் செருக்குப்போம்படி நெருக்கி. (மத்தகத்துரங்கெடப்புடைத்தோர் கொம்பொசித்து) ஆனைவீழக் குத்துமிடத்தில் அத்விதீயமான கொம்பைமுறித்து, அதினுடைய மிடுக்கழியும்படி மஸ்தகத்திலேபுடைத்து. மதத்தாலே வந்த செருக்கை அதினுடைய நாலுகாலுக்கு முள்ளே புக்கு நின்று உழைப்பித்துக்கொடுத்து அதினுடைய ஹிம்ஸாபரிகரமான கொம்பைமுறித்துக் கொன்றருளினனென்றதாய்த்து. (உகந்தவுத்தமா) ஆச்ரிதவிரோதிபோகப் பெற்றதென்று உகந்த புருஷோத்தமனே. இங்குபுருஷோத்தமனென்கிறது-ஸ்வரூபத்தால் வந்த உத்கர்ஷத்தளவன்றியே ஆச்ரிதபக்ஷபாதத்தால் வந்த உத்கர்ஷத்தைநினைத்து. குணாதிக்யமிறே வஸ்துவுக்கு உத்கர்ஷஹேது.

(துரங்கம் வாய்பிளந்து) ஸந்த்யாகாலத்திலே திருவாய்ப்பாடியை யழிக்கவந்த கேசியுடைய வாயைக்கிழித்து. (மண்ணளந்த பாத) ஸ்ரீவாமனனாய எல்லார்தலையிலும்வைத்த திருவடிகளையுடையவனே. த்ரைவிக்ரமாபதாநம், கேசிவதஸமநந்தரத்திலே க்ர்ஷ்ணனுடைய சேஷ்டிதமாகப் பேசலாம்படியிறே இரண்டவதாரத்துக்கு முண்டான ஸௌப்ராத்ரம். அதாகிறது-எல்லாரையும் வளையாதே தீண்டுகையும் எதிரிகளை யழகாலே யழிக்கையும்.

---

ஐம்பத்தெட்டாம்பாட்டு. நடைதருகை யாவதென்னென்ன; அருளிச்செய்கிறார் (தவழுகையுமித்யாதி.) உழப்பி - தடுமாறப் பண்ணி. ... ... ... ... ...(ரு அ)

(வேதியர்வரங்கொளக் குடந்தையுட்கிடந்த மாலுமல்லையே) வேதார்த்ததாத்பர்யம் கைப்பட்டவர்கள் தந்தா மபேக்ஷிதங்களை உன்பக்கலிலே யபேக்ஷிக்கலாம்படி திருக்குடந்தையிலே கண்வளர்ந்தருளுகிற வ்யாமுக்தனல்லையோ. வஞ்சகராய் வந்த யமளார்ஜுநங்களை தன்மௌக்த்யத்தாலேயழித்துள திரிகளாகக்கண்முகப்பேதோற்றவந்த குவலயாபீடத்தையும் கேசியையும் அநாயாஸேநவழியச் செய்து, தான் வஞ்சகனாய் எல்லார்தலையிலும் திருவடிகளை வைத்து முறையுணர்த்தினபுருஷோத்தமன் தன்வாத்ஸல்யத்தாலே பிற்பாடர்க்குதவவந்துகிடக்கிறதேசம் திருக்குடந்தையென்றதாய்த்து.()

அ.—ஐம்பத்தொன்பதாம்பாட்டு. பண்டு ஆச்ரிதவிரோதிகளைப் போக்கின மிடுக்கனுயைவைத்து, அழகாலும் சீலத்தாலும் ஆச்ரிதரை யெழுதிக்கொள்ளுகைக்காக வவதரித்த க்ர்ஷ்ணன், பிற்பாடருடைய இழவுதீர ஸர்வப்ரகாரத்தாலும்புஷ்கலமான திருக்குடந்தையிலே கண்வளர்ந்தருளுகிறபடியை யநுபவிக்கிறார்.

சாலிவேலிதண்வயல்தடங்கிடங்குபூம்பொழில்
கோலமாடநீடுதண்குடந்தைமேயகோவலா
காலநேமிவக்கிரன்கரன்முரன்சிரமவை
காலனோடுகூடவிற்குனித்தவிற்கைவீரனே. (ருகூ)

ப-கா.—சாலி - செந்நெல், வேலி - சுற்றுமுடைத்தாய், தண் - குளிர்ந்த, வயல் - வயலையும், அதுக்குள்ளாக, தடம் - பெரிய, கிடங்கு-அகழையும், அதுக்குள்ளாக, பூ - பூத்த, பொழில் - பொழிலையுமுடைத்தாய், கோலம்-அழகிதாய, நீடு - ஓக்கத்தையுடைத்தான, மாடம் - மாடங்களையுடைத்தாய், தண்-குளிர்ந்த, குடந்தை - திருக்குடந்தையிலே, மேய - நித்யவாஸம் பண்ணுகிற, கோவலா - க்ர்ஷ்ணனே; காலநேமி - காலநேமியும், வக்கிரன் - தந்தவக்ரனும், கரன் - க்ரூரனான, முரன் - முராஸுரனுமாகிற இவர்களுடைய, சிரமவை-தலையையறுத்து, காலனோடு கூட-அவர்களுடைய ப்ராணனகாலனோடே கூடும்படிக்கீடாக, வில்வளைத்த - வில்லை வளைத்து அம்பெய்தவனாய், விற்கை வீரனே - வில் பிடித்த பிடியிலே அவர்கள் முடியும்படியான ஆண்பிள்ளைத்தனத்தையுடையவனே. (ருகூ)

வ்யா.—(சாலிவேலிதண்வயல் தடங்கிடங்கு பூம்பொழில்) செந்நெலைச்சுற்றுமுடைத்தாய், ச்ரமஹரமானவயலையும் அதுக்குள்ளாகப்பெரிய அகழையும் அதுக்குள்ளாகப்பூத்த பொழிலையுமுடைத்தாய். இத்தால் - ஆராவமுதாழ்வாருடைய ஸௌகுமார்யத்துக்கு அநுரூபமாக ஸர்வப்ரகார போக்யதையையுடைய தேசமென்கை. (கோலமாடநீடு தண்குடந்தைமேயகோவலா) தர்சநீயமுமாய், ஓக்கத்தையுமுடைய மாடங்களை யுடைத்தாய், ச்ரமஹரமான திருக்குடந்தையிலே நித்யவாஸம்பண்ணுகிற க்ர்ஷ்ணனே. இத்தால்-ஆராவமுதாழ்வாருடைய ரஸிகத்வத்துக்கு ஏகாந்தமான போகஸ்தாநமென்கை. “கோவலா” என்கிறது - க்ர்ஷ்ணனுடைய அழகும்

ஸௌலப்யமும் ஶீலமும் ஆராவமுதாழ்வார் பக்கலிலே காணலாம் படி யிருக்கையாலே. அவதாராந்தரங்களென்னவொண்ணாது ஸர்வ தாஸாத்ர்ம்யத்தாலே. * "குடந்தையன் கோவலன்குடியடியார்" என்று ஒருதேசவிசேஷத்திலும் ப்ரஸித்தமிறே.

(காலநேமி வக்கரன் கரன்முரன்சிரமவை) காலநேமி தந்த வக்ரன் க்ரூரனான முரன் இவர்களுடைய தலைகளையறுத்து. (காலனோடுகூட வில்குனித்த) இவர்கள்பேர்கேட்கவஞ்சுங்காலன் இவர்களுக்கு நிர்வாஹகனாய், இவர்களஞ்சிச் சென்று கூப்பிடும்படியாக, ஸங்கல்பத்தாலன்றியே, வில்லாலே யழியச்செய்தவனே. (விற்கைவீரனே) ஆச்ரிதவிரோதிகளை யழியச்செய்கைக்கு வில்வளைக்கவும் வேண்டாதே, "[Grantha text]" "ஶக்ர சாபநிபேசாபே க்ர்ஹீத்வா ஶத்ருநாஶநே" என்னும்படியே வில் பிடித்தபிடியிலே அவர்கள் முடியும்படியான ஆண்பிள்ளைத்தனத்தை யுடையவனே. ... ... ... (ருகூ)

அ.—அறுபதாம்பாட்டு. உகந்தருளினநிலங்கள் ஆச்ரயணீயஸ்தலம், போகஸ்தானம் ஒருதேசவிசேஷமென்றிராதே, "நிலையாரநின்றான்" என்று-நிலையழகிலே துவக்குண்பார்க்குத் திருமலையிலே நின்றருளியும், "கிடந்ததோர் கிடக்கை" என்று – கிடையழகிலே துவக்குண்பார்க்குத்திருக்குடந்தையிலேகண்வளர்ந்தருளியும், இப்படிசெய்தருளிற்று, போக்தாக்களான ஆச்ரிதர்பக்கலுள்ளவ்யாமோஹமிறேயென்கிறார்.

செழுங்கொழும்பெரும்பனிபொழிந்திடவுயர்ந்தவேய
விழுந்துலர்ந்தெழுந்துவிண்புடைக்கும்வேங்கடத்துள்நின்று
எழுந்திருந்துதேன்பொருந்துபூம்பொழிற்றழைக்கொழும்
செழுந்தடங்குடந்தையுட்கிடந்தமாலுமல்லையே. (சுo)

ப-ரை.—செழும் - பருத்த, கொழும - தாரைகளாய விழுகிற, பெரும்பனி - மூடுபனியானது, பொழிந்திட - சொரிய, உயர்ந்த - ஓங்கின, வேய்-மூங்கில்கள், விழுந்து - பனியினகனத்தாலே தரையளவும் சாய்ந்து, உலர்ந்து-ஸூர்யகிரணத்தாலே பனி உலருகையாலே, எழுந்து - தலையெடுத்து, விண்புடைக்கும் - ஆகாசத்தி னெல்லையிலே முட்டும், வேங்கடத்துள் நின்று - திருமலையிலே நின்றருளி, தேன் - வண்டுகள், எழுந்திருந்து - கிளர்ந்து பரவி, பொருந்து - திரியவும்படிந்து வர்த்திக்குமதாய, தழை - தழைத்து, கொழும்-சிரத்தையையுடைத்தாய், பூ - பரப்புமாறப் பூத்த, பொழில - பொழிலை யுடைத்

ஐம்பத்தொன்பதாம்பாட்டு. அழகுமுதலானவற்றை அவதாரங்களுக்கு இல்லையென்ன; அருளிச்செய்கிறார் (அவதாராந்தரமித்யாதி.) க்ர்ஷ்ணனே யென்கைக்கு ஜ்ஞாபகமேதென்ன; அருளிச்செய்கிறார் (குடந்தையன்கோவலனித்யாதி.) ... (ருகூ)

தாய், செழும் - அழகிய, தடம் - தடாகத்தை யுடைத்தான, குடந்தையுள் - திருக்குடந்தையிலே, கிடந்த - கண்வளர்ந்தருளுகிற, மாலல்லேயே - வ்யாமுக்தனல்லேயோ. (௬0)

வ்யா.— (செழுங்கொழும்பெரும்பனிபொழிந்திட) பருத்து தாரைகளாய் விழுகிற மூடுபனிசொரிய. செழுமை-பெருமை. கொழுப்பு – கொழுமை. இடைவிடாதேதாரைகளாய் விழுகை. செழுமை-வண்மை. பெரும்பனி - மூடுபனி. இப்படி பனியை வர்ணிக்கிறது-ஏதேனுமாகத் திருமலையிலே ஸம்பந்தித்தவை தமக்கு மநோஹரமா யிருக்கையாலே. (உயர்ந்தவேய்விழுந்து) ஓங்கினமூங்கில்கள் பனியால்வந்த கனத்தாலே தரையளவும் சாய்ந்து. "செழுங்கொழும் - உயர்ந்தவேய் - பெரும்பனிபொழிந்திட - விழுந்து" என்றுமாம். அப்போது – பெருத்து ச்ரத்தையை யுடைத்தாய் உயர்ந்த மூங்கில்களென்றுகக் கடவது. திருவேங்கட முடையானுடைய விசேஷகடாக்ஷமே விளைநீராக வளருகிறவை யென்கை. (உலர்ந்தெழுந்து விண்புடைக்கும் வேங்கடத்துள் நின்று) ஆதித்யகிரணங்களாலே பனியுலருகையாலே, பனியுலர்ந்தவாறே தலையெடுத்து ஆகாசத்தின் எல்லையிலே முட்டுந் திருமலையிலேநின்றருளி. இத்தால்-திருவேங்கடமுடையானுடைய விசேஷகடாக்ஷத்திலே தலையெடுக்கையும் வ்யதிரேகத்தில் தரைப்படுகையும் அத்தேசிகமானபதார்த்தங்களுக்கு ஸ்வபாவமென்னுமிடத்துக்கு த்யோதகமென்கை.

(எழுந்திருந்து தேன்பொருந்து பூம்பொழில் தழைக்கொழும்) வண்டுகள்கிளர்ந்துபரவாநதிரியவும்படிந்துவர்த்திக்குமதாய், தழைத்துச்ரத்தையையுடைத்தாய், பரப்புமாறப்பூத்த பொழிலையுடைய தேசம். இத்தால் – வண்டுகள் பொழிலின்மதுவெள்ளத்தாலே அவகாஹிக்கமாட்டாதே அலமாக்குமென்கை. (செழும்தடங்குடந்தையுள்) விடமாட்டாதே அப்பொழிலுக்குள்வாயில் அழகிய தடாகத்தையுடைத்தானதிருககுடந்தையிலே. இத்தால்-அத்தேசத்தில்திர்யக்குக்களும்போக்யத்தாலேவந்துகளித்துவர்த்திக்கும்படியாயும்த்ாபத்ரயாதுரர்க்குக்கண்டபோதே ச்ரமஹரமாயுமிருக்கும்தேசமென்கிறது. (கிடந்தமாலுமல்லேயே) "கிடையழகிலே துவக்குண்டு அநுபவிப்பாராரோ" என்று அவஸரப்ரதீக்ஷனாய்க்கொண்டு கண்வளர்ந்தருளுகிற வ்யாமுக்தனல்லேயோ. ... ... (௬0)

அ.—அறுபத்தோராம்பாட்டு. இப்படி போகஸ்தாநமாகையாலே ஆராவமுதாழ்வார்திருவடிகளிலேதாமநுபவிக்க விழிந்தவிடத்தில், வாய்திறத்தல் அணைத்தல் செய்யாதே ஒருபடியேகண்வளர்ந்தருளக்காண்கையாலே, ஸுகுமாரமான இவ்வடிவைக்கொண்டு த்ரைவிக்ரமாதி சேஷ்டிதங்களைப்பண்ணுகையாலேதிருமேனிநொந்து

கண்வளர்ந்தருளுகிறாராகத் தம்முடையபரிவாலே அதிசங்கித்து என்பயம்கெடும்படி ஒன்றை நிர்ணயித்து எனக்கருளிச் செய்ய வேணுமென்கிறார். இதொழியப்ராங்ந்யாயத்தாலே அர்ச்சாவதார ஸங்கல்பமென்னவொண்ணாதிறே இவர்க்கு.

நடந்தகால்கள்நொந்தவோநடுங்கஞாலமேனமாய்
இடந்தமெய்குலுங்கவோவிலங்குமால்வரைச்சுரம்
கடந்தகால்பரந்தகாவிரிக்கரைக்குடந்தையுள்
கிடந்தவாறெழுந்திருந்துபேசுவாழிகேசனே. (௬௧)

ப-ரை.—நடந்த - திருவுலகளந்தருளின, கால்கள் - திருவடிகள், நொந்தவோ-நொந்த ஆயாஸம் பொறுமையாலேயோ; நடுங்க - பூமிப்பிராட்டி தன்னை உத்தரிக்கைக்கு ஒருவழிகாணாதே நடுங்குகிறதசையிலே, ஞாலம்-பூமியை, ஏனமாய் - மஹாவராஹமாய், இடந்த - அண்டபித்தியிலே புக்கு இடந்தெடுத்தவது பொறுமே, மெய்குலுங்கவே - திருமேனியிலுண்டான ஆயாஸத்தாலேயோ; விலங்கு - நீர்வரவொண்ணாதபடி இருவிலங்கான, மாலவரை - பெரியமலைகளையும், சுரம்-மணற்காடுகளையும், கடந்த-கடந்த நீரோடு, கால்பரந்த-கால் பரந்து வருகிற, காவிரி-காவேரி யடிமைசெய்ய, கரை - அதனகரையிலுள்ள, குடந்தையுள்-திருக்குடந்தையிலே, கிடந்தவாறு-கண்வளர்ந்தருளுகிறபடியை விட்டு, எழுந்திருந்துபேசு-எழுந்திருந்து அருளிச்செய்யவேணும்; வாழி - இக்கிடையழகு நிரயமாய்ச்செல்லவேணும்; கேசனே-குழலப்பேனரி எனக்லேசத்தைத்தீர்த்தருளவேணுமெனகிறார். (௬௧)

வ்யா.—(நடந்தகால்கள்நொந்தவோ) "வடிவிணையில்லா மலர் மகள் மற்றை நிலமகள் பிடிக்கும் மெல்லடி" என்கிறபடியே ஸுகுமாரமான திருவடிகளைக்கொண்டு திருவுலகளந்த விது பொறுமே நொந்துகண்வளர்ந்தருளுகிறதோ. சகரவர்த்தித் திருமகனுயக்காட்டிலும் மலையிலும ஸுகுமாரமான திருவடிகளைகொண்டு திரிந்தவது பொறுமேநொந்து கண்வளர்ந்தருளுகிறதோ. "எவ்வாறுநடந்தனை யெம்மிராமாவோ!" என்று - ஸௌகுமார்யத்தை யறியுமவர்கள் கூப்பிடும்படியாயிறேயிருப்பது. நடந்ததுபொறுமேகண்வளர்ந்தருளுகிறதாகில் நான் திருவடிகளைப்பிடிக்க. (நடுங்க ஞாலமேனமாயிடந்த மெய்குலுங்கவோ) அன்றிக்கே, பூமிக்கபிமாநிநியான பிராட்டி, பாதாளகதையாய்த் தன்னுடைய உத்தரணத்துக்கு ஒரு வழிகாணாதே நின்றுநடுங்குகிற தசையிலே,பஞ்சாஶத்கோடி விஸ்தீர்ணையான பூமியை மஹாவராஹமாய்அண்டபித்தியிலேபுக்கிடந்தவதுபொறுமே திருமேனியில்ஆயாஸத்தாலே கண்வளர்ந்தருளுகிறதோ!;அதுவாகில் நான்திருமேனியைப்பிடிக்க.(விலங்குமால்வரைச்சுரம் கடந்தகால்பரந்த காவிரிக்கரை) நீர்வரவொண்ணாதபடி இரு

---

அறுபத்தோராம்பாட்டு. ப்ராங்ந்யாயம் - திருவெஃகாவிலும் அர்ச்சாவதார ஸமாதிகுலைந்து கார்யம் செய்கை.

விலங்கான பெரியமலைகளையும் சுரங்களையும் கடந்த நீரோடு கால்பரந்து வருகிறகாவேரிக்கரையிலே. சுரம்-காடும்; அருநெறியும். இத்தால்-ஆராவமுதாழ்வாருடைய ஸௌகுமார்யத்துக் கநுகூலமாக சிசிரோபசாரம் பண்ணுகைக்கு, காவேரி, மலையென்ன அருநெறியென்ன இவற்றைக்கடந்து தனனபிநிவேஶம் தோற்றப்பரந்து வந்தபடியைச் சொல்லிற்றென்கை. (குடந்தையுள் கிடந்தவாறு) காவேரி அடிமைசெய்யத் திருக்குடந்தையிலே ச்ரமம்தோற்றக் கண்வளர்ந்தருளுகிறபடியை. காவேரி சிசிரோபசாரம்பண்ணக் காண்கையாலும், திருவெஃகாவில் கிடையில், "ச்சாயாவாஸத்வமநுகச்சேத்" "சாயாவாஸத்வமநுகச்சேத்" என்கிறபடியே தொடர்ந்துபோரக்காண்கையாலும், கோயிலிலும் "உன்னபாதமென்னசிந்தைமன்னவைத்து நல்கினாய்" என்று தன்னபிமதம் பெறுகையாலும், திருக்குடந்தையில் முகந்தாராதேகண்வளர்ந்தருளுகைக்குஹேது ச்ரமமென்றிருக்கிறார். ஆராவமுதாழ்வாரும் இவருடைய பரிவினெல்லையையநுபவிக்கைக்காகவும் படுக்கைவாய்ப்பாலும் கண்வளர்ந்தருளுகிறார். (எழுந்திருந்துபேசு) இதுக்கு ஹேதுவை, கண்வளர்ந்தருளாநிற்க அருளிச்செய்ய வொண்ணாது, என்பயங்கெட எழுந்திருந்து அருளிச்செய்யவேணும். எழுந்திருக்கும்போதை சேஷ்டிதத்தாலும, அருளிச்செய்யும போதை ஸ்வரத்தாலும் எனக்கு பயங்கெடவேணும். (வாழி) அப்படி யருளிச்செய்யாமையாலே, "ஆயுஷ்மந்" "ஆயுஷ்மந்" என்னுமாப்போலே யொருநீங்கின்றிக்கே கண்வளர்ந்தருளுகிற இவ்வழகு நித்யமாயச் செல்லவேணுமென்று மங்களாசாஸநம் பண்ணுகிறார். (கேசனே) கேசவசப்தமாய்இடைக்குறைத்தலாய்நகிடக்கிறதென்னுதல்; கேசத்தை யுடையவனென்னுதல். இரண்டுக்கும் * ஸ்நிக்தநீலகுடிலகுந்தளனென்றர்த்தம். இத்தால்-"க்லேஶாபஹாரக:" "கேஶவக்லேஶநாஶந:"என்கிறபடியே-திருக்குழலைப்பேணி என்னுடைய க்லேசத்தைத் தீர்த்தருளவேணுமென்கை. ... ... ... (௬௧)

அ.—அறுபத்திரண்டாம்பாட்டு. திருக்குடந்தையிலே கண்வளர்ந்தருளின விதுக்கு ஹேதுநிஶ்சயிக்கமாட்டாதே பீதரானவர்க்கு, ஹிரண்யனை யழியச்செய்த வீரத்தோடே திருக்குறுங்குடியிலே நின்றருளினபடியைக் காட்டக்கண்டு தரித்து, நம்பியடைய ஸௌகுமார்யத்தை யநுஸந்தித்து முரட்டுஹிரண்யனை யழியச்செய்தாயென்பது உன்னையே யென்று விஸ்மிதராகிறார்.

---

ச்ரமத்தாலேகண்வளர்ந்தருளுகிறானென்பானென், அர்ச்சாவதாரஸமாதியாலே கண்வளர்கிறானென்னவொண்ணாதோவென்ன; அருளிச்செய்கிறார் (காவேரிசிசிரோபேத்யாதி.) ... ... (௬௧)

கரண்டமாடுபொய்கையுட்கரும்பனைப்பெரும்பழம்
புரண்டுவீழவாளைபாய்குறுங்குடிநெடுந்தகாய்
திரண்டதோளிரணியன்சினங்கொளாகமொன்றையும்
இரண்டுகூறுசெய்துகந்தசிங்கமென்பதுன்னையே. (சுஉ)

ப-உரை.—கரண்டம் - நீர்க்காக்கைகள், ஆடு-முழுகாநின்றுள்ள, பொய்கையுள் - பொய்கையிலே, பனை-பனையினுடைய, கரு-கறுத்து, பெரு - பெரிதான, பழம்—, அதினின்றும் விழுந்து, புரண்டு—, வீழ-நீரிலேவிழ, அத்தை நீர்க்காக்கையாகக்கருதி, வாளை - வாளைகள், பாய் - அஞ்சிப்பாயாநின்ற, குறுங்குடி-திருக்குறுங்குடியிலே, அழகு முதலிய ஸ்வபாவங்கள் குறைவற்றிருக்கிற, நெடுந்தகாய் - மஹாப்ரபாவனே, திரண்ட - திரட்சிபெற்ற, தோள் - தோளையுடையனான, இரணியன-ஹிரண்யனுடைய, சினம்கொள-சினம்மிக்க, ஒன்று-அதவிதீயமான, ஆகத்தை - சரீரத்தை, இரண்டு கூறுசெய்து - இருகூறாகப்பிளந்து, உகந்த - சிறுக்கனுடைய விரோதிபோக்கப்பெற்றோமென்று உகந்த, சிங்கம் என்பது - நரஸிம்ஹமாக ப்ரமாணங்கள் சொல்லுவது, உன்னையே - அத்யந்த ஸௌகுமாரனான உன்னையே. (சுஉ)

வ்யா.—(கரண்டமித்யாதி)நீர்க்காக்கை ஸஞ்சரிக்கும்பொய்கையிலே, பனையினுடைய கறுத்தபெரிய பழம் அதினின்றும் விழுந்து புரண்டு நீரிலேவிழ, நீர்க்காக்கையாகக் கருதி வாளைகள் அஞ்சிப் பாயாநின்ற திருக்குறுங்குடியிலே, அழகும் ஸௌகுமார்யமும் சீலமும் மேன்மையுமாகிறஇஸ்ஸ்வபாவங்கள் குறைவற்றிருக்கிறமஹாப்ரபாவனே. கரண்டம்-நீர்க்காக்கை. ஆடுகை-நடையாடுதலென்னுதல்; முழுகுதலென்னுதல். தகை – இயல்வு. போலியைக்கண்டு வாளையானது அதிசங்கைபண்ணுகிறவிது, அத்தேசத்தின்பதார்த்தங்கள் நம்பிபக்கல் அஸ்தாநேபயசங்கை பண்ணுகிறபடிக்கு ஸூசகமாயிருக்கிறது.

(திரண்டதோளிரணியன்) திரட்சிபெற்ற தோளையுடைய ஹிரண்யன். அவன் வலியைக் கோட்சொல்லித் தருகிறதோளென்கை. அதவா, தேவர்களுடைய வலியடங்கத் திரண்டதோளென்றுமாம். “इन्द्रत्वमकरोद्दैत्य” “இந்த்ரத்வமகரோத்தை சத்ய” இத்யாதி. (சினங்கொளாகம்) நெஞ்சில்க்ரோதம் வடிவிலே தோற்றியிருக்கிறபடி. சினம்மிக்கவடிவு. (ஒன்றையுமிரண்டு கூறுசெய்து) இஸ்ஸௌகுமாரமான வடிவைக்கொண்டு அத்விதீயமான ஹிரண்யன்சரீரத்தை இரண்டுகூறாகப்பிளந்து. (உகந்த சிங்கமென்ப துன்னையே) சிறுக்கனுடைய விரோதி போக்கப்பெற்றோமென்று உகந்த நரஸிம்ஹமாக ப்ரமாணங்கள் சொல்லுவது அத்யந்த ஸௌகுமாரனான வுன்னையே. “उग्रं वीरं मृत्युमृत्युम्”

---

அறுபத்திரண்டாம்பாட்டு. இந்த்ரத்வம் - அஸுரர்களெல்லாருங்கூடி ஹிரண்யனை இந்த்ரனாக ப்ரதிபத்திபண்ணினார்கள்.

"உக்ரம்வீரம்மர்த்யும்ர்த்யும்" என்றுசொல்லுவதுன்னையே. "క్వయా వస్సుఖిభూతసుకుమారతనుంహరిః। క్వవజ్రకఠినాభోగశరీరోయంమహాసురః" "க்வ யௌவநோங்முகீ பூதஸுகுமாரதநும்ஹரி:। க்வவஜ்ரகடிநாபோக ஶரீரோயம் மஹாஸுர:" என்கிறபடியே உன்ஸௌகுமார்யங் கண்டபடிக்கு அவ்வபதாநம் அநுபபந்நமென்று கருத்து. ஸர்வா திகனாய் அத்யந்த ஸுகுமாரனான வவன், விமுகரான ஸம்ஸாரி கள்நடுவே திருக்குறுங்குடியிலே வந்து தாழ்ந்தார்க்கு முகங்கொ டுக்க நிற்கிற நிலையாய்த்து, அவ்வூரில் பதார்த்தங்களுக்கு அதி சங்கை மாறாதே செல்லுகைக்கும் இவ்வாழ்வார்க்கு நம்பியுடைய ஸௌகுமார்யத்தையே யநுஸந்திக்கைக்கும் ஹேது. ... (சுஉ)

அ.— அறுபத்துமூனறும்பாட்டு. தேவரீர்ஸௌகுமார்யத் தைப் பாராதே, ஸ்ரீப்ரஹ்லாதன்பக்கல் வாத்ஸல்யத்தாலே ப்ரேரி ரிதராய், ஹிரண்யனை யழியச்செய்யலாம், விமுகரான ஸம்ஸாரிக ளுடைய ஆபிமுக்யத்தை யபேக்ஷித்து உன்மேன்மையைப்பாராதே கோயில்களிலே நிற்பது, இருப்பது, கிடப்பதாகிற விதென்ன நீர் மையென்று தாம் ஈடுபடுகிறார்.

நன்றிருந்துயோகநீதிநண்ணுவார்கள்சிந்தையுள்
சென்றிருந்துதீவினைகள்தீர்த்ததேவதேவனே
குன்றிருந்தமாடநீடுபாடகத்துமூரகத்தும்
நின்றிருந்துவெஃகணைக்கிடந்ததென்னநீர்மையே. (சுரு)

ப-ரை.—குசாஜிநங்களாகிற ஆஸநத்தையிட்டு, நன்றிருந்து-அதிலே ஏகா க்ரசித்தனாயிருந்து, யோகநீதி - யோகமாகிற உபாயத்தாலே, நண்ணுவார்கள்- உன்னை லபிக்க விருக்கிறவர்களுடைய, சிந்தையுள் சென்று - ஹ்ருதயத்திலே சென்று, இருந்து-பொருந்திநின்று, தீவினைகள் - அநுபவவிரோதிகளான துக் கங்களை, தீர்த்த-போக்குகிற, தேவதேவனே-தேவாதிதேவனானவனே; குன்று இருந்த-மலைசேரவிருந்தாப்போலே, நீடு-ஓங்கின, மாடம்-மாடங்களையுடைய, ஊரகத்து - திருவூரகத்திலே, நின்றும் - நின்றருளியும், பாடகத்து - திருப்பா டகத்திலே, இருந்தும்-இருந்தருளியும், வெஃகணை - திருவெஃகாவிலே, கிடந் தது-கண்வளர்ந்தருளினவிது, என்னநீர்மை-என்னஸ்வபாவமென்கிறார். (சுரு)

வ்யா.—(நன்றிருந்து) "చేలాజినకుశోత్తరం స్థిరమాసనంశుచౌదేశేప్రతిష్ఠాప్య" "சேலாஜிநகுஶோத்தரம் ஸ்திரமாஸநம் ஶுசௌதேஶே ப்ரதிஷ்டாப்ய" என்கிற ஶுத்தமான தேஶத்திலே குஶாஜிநசே லோத்தரமான ஆஸநத்தையிட்டு அதிலே ஏகாக்ரசித்தனாயிருந்து. "ఆసీనస్సంభవాత్" "ஆஸீநஸ்ஸம்பவாத்" இத்யாதி. (யோகநீதிநண்ணு வார்கள்)யோகமாகிறஉபாயத்தாலேயுன்னை லபிக்கவிருக்கிறவர்கள். நீதி-வழி. (சிந்தையுட்சென்றிருந்துதீவினைகள்தீர்த்ததேவதேவனே)

---

அவ்வபதாநம் - நரஸிம்ஹாவதாரம். ... ... (சுஉ)

* அயர்வறுமமரர்க ளதிபதியான உன்மேன்மை பாராதே அவர்க ளுடைய ஹ்ர்தயத்திலே சென்று சுபாச்ரயமாய்க்கொண்டு, அநாதிகாலம் விஷயாந்தர ப்ரவணமாய்ப் போந்த ஹ்ர்தயமென்று குத்ஸியாதே ஆஸநபலத்தாலே ஜயிப்பாரைப்போலே ஸ்தாவரப்ரதிஷ்டையாக விருந்து, ஆந்தரமாயும் பாஹ்யமாயுமிருந்துள்ள அநுபவ விரோதிகளான துக்கங்களைப்போக்கும் ஸ்வபாவத்தையுடையவனே. அநந்யப்ரயோஜநரானவர்கள் ஸாதநாந்தர நிஷ்டரேயாகிலும் அவர்கள்ஹ்ர்தயத்திலே செல்லுகையும், நெடுநாள் விஷயாந்தரப்ரவணமான ஹ்ர்தயமென்று குத்ஸியாதே அதிலே நற்றரிக்க விருக்கையும், ஸ்வப்ராப்தி விரோதிகளான அவித்யாகர்ம வாஸநாதிகளைப் போக்குகையும் தேவரீர்க்கே பரமிறே. "யோகோ யோகவிதாந் நேதா" "யோகோயோக விதாந்நேதா" என்னக்கடவதிறே.

ஸாதநாந்தர நிஷ்டையொன்று பாராதே அநந்யப்ரயோஜநரொன்கிற விவ்வளவேபார்த்து அவர்களுடைய ஹ்ர்தயத்திலேசென்று, உன்னைப்பெறுகைக்கு கர்ஷிபண்ணின விவ்வௌதார்யம் பொருமே உன்பக்கல் த்வேஷம் பண்ணியிருக்கிற ஸம்ஸாரிகள்திறத்திலே பண்ணினவிவை என்னநீர்மை யென்கிறார்மேல் (குன்றிருந்த வித்யாதி) மலைகள் சேரவிருந்தாப்போலே ஓங்கின மாடங்களையுடைய திருப்பாடகத்திலும், அப்படியே யிருந்துள்ள திருவூரகத்திலும்; "முகங்காட்டுவாருண்டோ" என்று திருவூரகத்திலே நின்றருளியும்,"ஒருத்தரையுங்கண்டிலோம்"என்று சோம்பாதே திருப்பாடகத்திலே யிருந்தருளியும், அவ்விடத்திலும் ஆதரிப்பா ரில்லாமையாலே ருசிபிறந்தவன்று கிடையழகைக்கண்டு ஆதரிக்கிறார்களென்று திருவெஃகாவிலே கண்வளர்ந்தருளியும்,இப்படிசெய்தருளின விது என்ன நீர்மையென்கிறார். உன்னைப் பிரியமாட்டாத நித்யஸூரிகளுக்கும் நித்யாநுபவவிஷயமாகலாம், உன்வாசியறியாதார் பக்கலிலே மேல்விழுந்து அவர்களைத் திருத்தி யநுபவிக்க நினைக்கவுமாம், "உன்னைநோககோம்"என்றிருந்தஸம்ஸாரிகளுடை வுகப்பையாசைப்பட்டு வளைப்புக்கிடக்கிற விதென்னநீர்மை யென்கிறார். (௬௩)

அ.—அறுபத்துநாலாம்பாட்டு. கீழ்ச்சொன்னநீர்மையையுடையவன், எனக்கு ருசிஜநகனுகைக்காகத் 'திருவூரகந்தொடக்கமான

---

அறுபத்துமூன்றும்பாட்டு. ஸாதநாந்தரநிஷ்டர் தங்கள் ஸத்கர்மத்தாலே விரோதியைப்போக்கிக் கொள்ளுகையொழிய அவர்களுக்கு நாம் வேணுமோவென்ன; அருளிச்செய்கிறார் (அநந்யப்ரயோஜநரித்யாதி.) ஸாதநாந்தரநிஷ்டர்க்கும் அவன்வேணுமென்னுமதுக்குப்ரமாணமருளிச்செய்கிறார் (யோகோயோக - யோகோயோகேத்யாதி.) ... ... ... ... (௬௩)

திருப்பதிகளிலே வர்த்தித்து ருசிபிறந்தபின்பு, என்பக்கல் அதி வ்யாமோஹத்தைப் பண்ணுகையாலே கீழ்ச்சொன்ன நீர்மைபலி த்தது என்பக்கலில் என்கிறார்.

நின்றதெந்தையூரகத்திருந்ததெந்தைபாடகத்
தன்றுவெஃகணைக்கிடந்ததென்னிலாதமுன்னெலாம்
அன்றுநான்பிறந்திலேன்பிறந்தபின்மறந்திலேன்
நின்றதுமிருந்ததுங்கிடந்ததுமென்னெஞ்சுளே. (சுச)

ப-ரை.—எநதை-எனக்கு ஸ்வாமியானவன், ஊரகத்து - திருவூரகத்திலே, நின்றது-நினறருளினதும், எநதை-எனனுடையஸ்வாமி, பாடகதது-திருப்பாட கத்திலே, இருநதது-இருந்தருளினதும், அன்று-இவ்விரண்டுதிருப்பதிகளிலும் எனக்கு ருசிபிறவாதவனறு; வெஃகணை - திருவெஃகாவிலே, கிடந்தது - கண் வளர்நததும், எனனிலாதமுன்னெலாம்-நான்அபிமுகீகரிப்பதற் முன்பெல்லா ம்; அனறு-ஸ்ாஷ்டிகாலத்திலேநாமரூபங்களேத்தநதருளினவன்று, நான்—, பிறந் திலேன-அஜ்ஞனாய்ப்போனேன்; பிறநதபினை - அவன்சேஷி நானசேஷம் என் னும் அறிவு பிறநதபின்பு, மறந்திலேன்-மறந்தறியேன்; எனக்கு மறக்கவொண் ணுதபடி ருசிபிறநதபினபு, நினறதும் - நின்றருளினதும், இருந்ததும் - இருந் தருளினதும், கிடநததும்-கண்வளாநதருளினதும், எனனெஞ்சுள் - என மநஸ் ஸிலேயாம். (சுச)

வ்யா.—(நின்றதெந்தையூரகத்து) த்ரிவிக்ரமம் பண்ணின தூளிதாநந் தோற்றத் திருவூரகத்திலே நின்றருளிற்று, எனக்கு ஸ்வாமியென்று நானிசைகைக்காக. நிலையழகைக்காட்டி ருசியைப் பிறப்பித்து, த்ரிவிக்ரமாபதாநத்தை ப்ரகாஶிப்பித்து முறையை யுணர்த்துகைக்காக வென்கை. அதவா, எனக்குஇசைவின்றிக்கே யி ருக்கச்செய்தேயும் வந்து நின்றருளுகிறது உடையவன் உடைமை யை யிழக்கமாட்டாமையாலே நின்றருளுகிறானென்றுமாம். (இரு ந்த தெந்தைபாடகத்து) அந்தநிலையழகிலும் எனக்கு ஆபிமுக்யம் பிறக்கக்காணுமையாலே இருப்பழகைக்காட்டி, "[Grantha/Telugu script]" "குணைர்த்தாஸ்யமுபாகத:" என்கிறபடியே-"நீஎனக்கு ஸ்வாமி, நா ன் அடியேன்" என்னும்முறையுணருகைக்காகத் திருப்பாடகத்திலே யிருந்தருளினான். (அன்று வெஃகணைக்கிடந்தது) கீழ்ச்சொன்னவி ரண்டு திருப்பதிகளிலும் எனக்குருசிபிறவாதவன்றுகத்திருவெஃகா விலே கண்வளர்ந்தருளிற்றும். அத்திருப்பதிகளை ஆச்ரயித்த கால த்துக் கவதியென்னென்னில் (என்னிலாத முன்னெலாம்) நானில் லாத முற்காலமெல்லாம. நான் அபிமுகீகரிப்பதற்குமுன்பெல்லாம். "என்னுகிநானுகி" என்னக்கடவதிறே. உபயவிபூதிநாதனை தான்

அறுபத்துநாலாம்பாட்டு. "என்னிலாத" என்றதுக்கு, "நா னிலாத" என்றவிடமுண்டோவென்ன; அருளிச்செய்கிறார். (என் னுகிநானுகியென்று.)

ஸம்ஸாரியானவெனக்கு ருசிபிறவாதகாலமெல்லாம் ருசிபிறக்கைக் காக நிற்பது இருப்பது கிடப்பதாவதே!. என்னுடையஸத்தைதன் னுடையகடாக்ஷாதீநமாயிருக்க, இத்தலையில்கடாக்ஷம்தனக்குத்தே ட்டமாவதே!.

அக்காலத்தில் நீர்செய்ததென்னென்னில் (அன்றுநான்பிற ந்திலேன்) தன்திருவடிகளிலே தலைசாய்க்கைக்காக ஸ்ர்ஷ்டிகாலத் த்திலே நாமரூபங்களைத் தந்தருள விஷயாந்தர ப்ராவண்யத்தா லே அநுபவிக்கப் பெற்றிலேன். (நான்பிறந்திலேன்) ஆத்மாவுக்கு ஜந்மமாகிறது அஜ்ஞாநலாபமாகையாலே அஜ்ஞனாய்ப்போனேன். "అసద్బ్రహ్మేతివేదచేత్-అసన్నేవసభవతి" "அஸத்ப்ரஹ்மேதி வேதசேத்- அஸந்நேவஸபவதி" என்னக்கடவதிறே. "గరీయాన్ బ్రహ్మదః పితా" "கரீயாந்ப்ரஹ்மதஃபிதா." (பிறந்தபின் மறந்திலேன்) அவன் க்ர்ஷியாக வெனக்குஅறிவு பிறந்தபின்பு மறந்தறியேன். "మత్తస్స్మృతిర్జ్ఞానమపోహనఞ్చ" "மத்தஸ்ம்ர்திஜ்ஞாநமபோஹநஞ்ச." அவனடியாகப் பிறந்த ஜ்ஞாநம், "மதிநலம்" என்கிறபடியே- பக்திரூபாபந்நஜ்ஞாநமாகையாலே விஸ்ம்ர்திப்ரஸங்கமில்லையிறே. ஆக, தன்னுடையஸத்பாவா உஸத்பாவங்களாகிறன- பகவத்விஷய த்திலே ருசிபிறக்கையும், அதின்றிக்கே யொழிகையும். (நின்றது மிருந்ததுங் கிடந்தது மென்னெஞ்சுளே) எனக்கு மறக்கவொண் ணுதபடி ருசிபிறந்த பின்பு,அவன்,திருப்பதிகளில்பண்ணினசெயல் களெல்லாவற்றையும், திருப்பதிகளைச் சாம்கடைக்கொண்டு என்னு டைய ஹ்ர்தயத்திலே பண்ணியருளா நின்றான். முதலிலே தான் என்பக்கலிலே அபிநிவிஷ்டனாய, அஸத்ஸமனு யிருந்துள்ள வென் னேயும் உளனும்படி பண்ணி, தன்னை மறக்கவொண்ணுதபடியான ப்ரேமத்தை விளைத்து,அதுக்கு விஷயபூதனுயத்தன்னுடையவிடா யுந் தீர்ந்தானென்றதாய்த்து. "சிந்தையுட் சென்றிருந்து தீவினை கள் தீர்த்த" என்றார் - கீழ்; "நின்றது மிருந்ததும் கிடந்தது மென்னெஞ்சுளே" என்று அநுபவத்தைச் சொன்னார் - இங்கு. இவை யிரண்டாலும் - ஸாதநாந்தரநிஷ்டரிற்காட்டில் தம்முடைய வதிகாரத்துக் குண்டான வேற்றத்தை யருளிச் செய்துவிட்டா ராய்த்து. ... ... ... ... (௬௪)

அ.—அறுபத்தஞ்சாம்பாட்டு. தமதிருத்தில் ஈச்வரன் பண் ணின வுபகாரமானது தமதிருவுள்ளத்தில்நின்றும் பேராமையாலே பின்பும் அதிலே கால்தாழ்ந்து, திருமலையில் நிலையும், பரமபதத்தி லிருப்பும், க்ஷீராப்தியில் கண்வளர்ந்தருளின விதுவும், எனக்குத் தன்திருவடிகளிலே ருசிபிறவாத காலமிறே யென்கிறார்.

க்ர்ஷியாக - க்ர்ஷியடியாக. ... ... (௬௪)

நிற்பதுமோர்வெற்பகத்திருப்புவிண்கிடப்பதும்
நற்பெருந்திரைக்கடலுள்ளானிலாதமுன்னெலாம்
அற்புதனநந்தசயநனாதிபூதன்மாதவன்
நிற்பதுமிருப்பதுங்கிடப்பதுமென்னெஞ்சுளே. (௯௫)

ப-ரை.—ஓர்-அத்விதீயமான, வெற்பகத்து-திருமலையிலே, நிற்பதும்-நின்றருளினதும், விண்இருப்பும் - பரமபதத்திலிருந்தருளினதும், நல்-தெளிந்து குளிர்ந்திருக்கிற, திரை-திரைகளையுடைத்தாய், பெரு - பரப்பையுடைத்தான, கடலுள் - திருப்பாற்கடலிலே, கிடப்பதும் - கண்வளர்ந்தருளினதும், நான் இலாத முன்னெல்லாம் - நான் அஸத்கல்பனாய்க்கிடந்த காலமெல்லாம்; அற்புதன்-ஜ்ஞாநசக்த்யாதிகுணபரிபூர்ணனாய், அநந்தசயநன - திருவநந்தாழ்வானமேலே பள்ளிகொண்டருளுகையாலே ஸர்வேச்வரனாய், ஆதிபூதன் - ஜகத்காரணபூதனாய், மாதவன - சரியகபதியானஸர்வேச்வரன, நிற்பதும்-நின்றருளுவதும், இருப்பதும் - இருந்தருளுவதும, கிடப்பதும் - பள்ளிகொண்டருளுவதும், என்னெஞ்சுள் - என ஹ்ருதயத்திலேயாம். (௯௫)

வ்யா.—(நிற்பதுமோர்வெற்பகத்து) அத்விதீயமான திருமலையிலே நிற்பதுவும். திருமலைக்கு அத்விதீயத்வம்—"கானமும் வானரமும் வேடுமுடை வேஙகடம்" என்கிறபடியே தாழ்ந்தார்க்கு முகங்கொடுக்கும் நீர்மைக்கு எல்லைநிலமாயிருக்கை. ஸ்தாவரங்களுக்கும் திர்யக்குக்களுக்கும தத்ப்ராயரானவேடர்க்கும் திருவடிகளிலேருசியைப்பிறப்பிக்கைக்கு நிற்கிறநிலையிறே. (இருப்பும்விண்) ருசிபிறந்தாரை அஸ்ப்ர்ஷ்ட ஸம்ஸாரகந்தரானநித்யஸூரிகளோபாதி முகங்கொடுதது அநுபவிப்பிக்கைக்காக வெழுந்தருளியிருக்கிற பரமபதத்திலிருப்பும் (கிடப்பதும்நற்பெருந்திரைக்கடலுள்) தெளிந்து குளிர்ந்திருக்கிற திரைகளையுடைத்தாய், "தாளும் தோளும் முடிகளும் சமனிலாத பலபரப்பி" என்கிறபடியே விஸ்த்ர்தமாகக் கண்வளர்ந்தருளுகைக்கு வேண்டும் பரப்பையுடைத்தாய, திரையாகிற கைகளாலே திருவடிகளை வருட க்ஷீராப்தியிலே கண்வளர்ந்தருளுவதும். (நான்இலாத முன்னெலாம்) தன்னோடுண்டான முறையை யறியாதே நான்அஸத்ஸமனாயிருந்த காலமெல்லாம்.

இப்படிஎன்பக்கலிலேஅத்யபிநிவேசத்தைப்பண்ணுகிறவன்ஸர்வப்ரகாரபரிபூர்ணன் கிடீரென்கிறது மேல் (அற்புதனநந்தசயநனாதிபூதன்மாதவன்) ஆச்சர்யமானஜ்ஞாந சக்த்யாதி குணபரிபூர்ணனாய், அநந்தசாயியாகையாலே ஸர்வேச்வரனாய,ஜகத்காரணபூதனாய்,உபயவிபூதிநாதத்வத்துக்கும் அவ்வருகானச்ரியப்பதித்வத்தையுமுடையவன் கிடீரென்னுதல். என்னைப்பெற்றபின்பு அவனுக்கு இவையெல்லாம் நிறம்பெற்றதென்னுதல். (நிற்பது மிருப்பதுங் கிடப்பதுமென்னெஞ்சுளே) "கல்லும் கனைகடலும்வைகுந்தவானாடும்புல்லென்றொழிந்தன கொலோ பாவம்" என்கிறபடியே அத்திருப்பதி

களைக்காற்கடைக்கொண்டு அவ்விடங்களில்நின்றும் இருந்தும் கிடந்தும்செய்தருளின நன்மையெல்லாம் என்னெஞ்சிலேயாய்த்து. நிஹீநாக்ரேஸரனானவென்னை விஷயீகரித்தவாறே திருமலையில் நிலையும் மாறி என்னெஞ்சிலே நின்றருளினான்; தன்திருவடிகளில்போக்யதையையெனக்கறிவித்தபின்பு பரமபதத்திலிருப்பைமாறி என்னெஞ்சிலே போகஸ்தாநமாயிருந்தான்; "𑌤𑌾𑌪𑌾𑌰𑍍𑌤𑍋𑌜𑌲𑌶𑌾𑌯𑌿𑌨𑌮𑍍" "தாபார்த்தோஜலஶாயிநம்" என்கிறபடியே திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளினபடியைக் காட்டி யென்னுடைய ஸாம்ஸாரிகமான தாபத்தைத் தீர்த்தபின்பு திருப்பாற்கடலில்கிடையைமாறி என்னெஞ்சிலே கண்வளர்ந்தருளித் தன்விடாய் தீர்ந்தான். இப்படி என்பக்கல் பண்ணின வ்யாமோஹம் என்னால் மறக்கலாயிருக்கிறதில்லையென்கிறார். ... ... ... ... (௬௫)

அ.—அறுபத்தாறாம்பாட்டு. பகவத்விஷயம் ஸுலபமாயிருக்க, ஸம்ஸாரம் அல்பாஸ்திரத்வாதி தோஷதூஷித மென்னுமிடம் ப்ரத்யக்ஷஸித்தமாயிருக்க, பகவத்ஸமாசரயணம் அபுநராவ்ருத்திலக்ஷணமான மோக்ஷப்ரதமாயிருக்க, ஸம்ஸாரிகள் பகவத்ஸமாச்ரயணம்பண்ணாதிருக்கிற ஹேது என்னோ! என்று விஸ்மிதராகிறார்.

இன்றுசாதனின்றுசாதலன்றியாரும்வையகத்
தொன்றிநின்றுவாழ்தலின்மைகண்டுநீசரென்கொலோ
அன்றுபாரளந்தபாதபோதையொன்றிவானின்மேல்
சென்றுசென்றுதேவராயிருக்கிலாதவண்ணமே. (௬௬)

ப-ரை.—இன்று சாதல்-பிறந்து தன்னையின்னானென்றறிந்தவுடனே முடிதல்; நின்றுசாதல்-நூறுபிராயம் சென்றபின்முடிதல்; அன்றி - இப்படியன்றிக்கே, யாரும் - பேரளவுடையாரான ப்ரஹ்மாதிகளும், வையகத்து - பதினாலுலோகங்களிலும், ஒன்றி நின்று - ஒருபடிப்படநின்று, வாழ்தலின்மைகண்டும்-ஜீவிக்குமதில்லாமையைக்கண்டுவைத்தும், நீசர் - அறிவிலிகள்; அன்று - பூமி மஹாபலியாலே அபஹரிக்கப்பட்டவன்று, பாரளந்த - பூமியையிரண்டடியாலேயளந்துகொண்ட, பாதபோதை - திருவடித்தாமரைகளை, ஒன்றி - ஆசரயித்து, வானின்மேல்சென்று - அர்ச்சிராதிமார்க்கத்தாலே சென்று சென்று-பரமபதத்திலேபோய், தேவராயிருக்கலாதவண்ணம்-நித்யஸூரிகளோடே ஒரு கோவையாயிராதே யொழிகைக்கு ஹேது, என்கொலோ - என்னோவென்கிறார். (௬௬)

வ்யா.—(இன்றுசாதல்) யோஷித்புருஷ ஸம்யோகஸமநந்தரம் முடிதல்; பிறந்து தன்னை யின்னானென்று ப்ரதிபத்தி பண்ணின ஸமநந்தரத்திலே முடிதல். "𑌗𑌰𑍍𑌭𑌾𑌷𑍍𑌟𑌮𑍇𑌷𑍁" "கர்பாஷ்டமேஷு"

---

அறுபத்தாறாம்பாட்டு. கர்ப்பத்திலிருப்பையும் ஆயுஸ்ஸாகச் சொல்லுமோவென்ன; அருளிச்செய்கிறார் (𑌗𑌰𑍍𑌭𑌾𑌷𑍍𑌟𑌮𑍇𑌷𑍁-கர்பாஷ்டமேஷு இத்யாதி.)

என்கையாலேகர்ப்பாதாநஸமயம் உத்பத்திகாலமாய், கர்ப்பவாஸகாலம் ஆயுஸ்ஸூக்குடலாகக்கடவது. (நின்றுசாதல்) சதாயுஸ்ஸம்பூர்ணறுய் முடிதல்; கல்பாதியிலே தோற்றி கல்பாந்தத்திலே முடியும் தேவர்களைப்போலேயாதல். "ஜாதஂஸ்ஸாத்வாபவிதாவாநஸ்ஸ:" "நாசம் பூத்வாபவிதாவாநபூய:" என்னக்கடவதிறே. (அன்றி) இந்த அஸ்தைர்யத்திலும் உள்மானம் புறமானமொழிய நித்யராயிருப்பாரொருவருமில்லை. "கர்பேவிலீயதேபூயோ ஜாயமானோஸ்தமேதிச। ஜாதமாத்ரேச" "கர்ப்பேவிலீயதே பூயோஜாயமாநோஸ்தமேதிச| ஜாதமாத்ரேசம்ர்யதேபாலபாவேசயௌவநே" இத்யாதி. (ஆரும்) எத்தனை யேனும் அதிசயித ஜ்ஞாநராய் சதுர்த்தச புவநத்துக்கும்நிர்வாஹகரானப்ரஹ்மாதிகளும்.(வையகத்தொன்றி நின்றுவாழ்தலின்மைகண்டும்) சதுர்த்தச புவநத்திலும் ஒருபடிப்பட நின்று ஜீவிக்குமதில்லாமையைக் கண்டுவைத்தும். "வையகம்" என்று-சதுர்த்தச புவநத்துக்குப உபலக்ஷணம். "வாழ்தல்" என்று - க்ஷேபிக்கிறுராதல். ஸம்ஸாரிகள்கருத்தாலே யாதல். (நீசர்) தங்களநுபவத்துக்கு உபதேசம் வேண்டும்படி அஜ்ஞராயிருக்குமவர்கள். ப்ரக்ர்தி ப்ராக்ர்தங்களின்தண்மை ப்ரத்யக்ஷத்தாலும் பரோக்ஷத்தாலும் ப்ரகாசியா நிற்கச்செய்தே விடமாட்டாதேயிருக்கிற பாபப்ரசுரரொன்றுமாம். "நீசர்" என்று – அறிவிலோரும், பறையரும்.

(அன்று) பூமி மஹாபலியாலே அபஹ்ர்தமாய், அத்தாலே தன்னுடைய சேஷித்வமும் சேதநருடைய மோக்ஷத்வமுமழிந்து கிடந்தவன்று. ( பாரளந்தபாதபோதை ) குணகுண நிரூபணம் பண்ணுதே பூமிமுதலான ஸகலலோகங்களிலு முண்டான ஸகல சேதநர்தலையிலும்வைத்து பூதையை யுணர்த்தின ஸர்வஸுலபமான திருவடித்தாமரைகளை."பார்" என்று-ஊர்த்வலோகங்களுக்குமுபலக்ஷணம். "தாமரை" என்றது-துர்லபமாறுலும் விடவொண்ணுத போக்யதையாலே. ஒன்றி - ஆச்ரயணம் அநாயாஸமென்கிறது "சிந்திப்பேயமையும்" என்னக்கடவதிறே. ஆச்ரயணத்தில் ஆயாஸமின்றிக்கே யொழிந்தால பலமும் க்ஷுத்ரமாயிருக்

கல்பாதியிலே தோற்றி கல்பாந்தத்திலே முடியுமென்னுமதுக்கு ப்ரமாணமருளிச்செய்கிறுர். (ஜாதஂஸ்ஸாத்வா - நாஶம் பூத்வா இத்யாதி.) மநுஷ்யஜந்மத்தையும் தேவஜந்மத்தையும் வ்யாவர்த்தித்து ஆத்மநித்யத்வம் சொல்லிற்றேயாகிலும், தீர்க்க ஜீவிகளாயிருக்கிற தேவதேஹத்தையும் வ்யாவர்த்திக்கையாலே ப்ரமாணமாகக் குறையில்லை. உள்ளு - பாதாளலோகம்.

குமோ வென்னில் (வானின்மேல்சென்று சென்று) அர்ச்சிராதி மார்க்கத்தாலே போய், அபுநராவர்த்தி லக்ஷணமான பரமபதத்திலே சென்று. அதவா, (சென்று சென்று) தேசப்ராப்தியிற் காட்டில் வழிப்போக்குத்தானே யினிதாயிருக்கிற படியைச் சொல்லிற்றாகவுமாம். (தேவராயிருக்கிலாத வண்ணம் - என்கொலோ) நித்யஸூரிகளோடே ஒரு கோவையாயிராதே ஒழிகிற ஹேதுவென்னோ.! நித்யஸூரிகளாயிருக்கையாவது - ஸர்வதா ஸத்ர்சராயிருக்கை. அதாகிறது – அஸங்கோசத்தாலும், ரூபத்தாலும், பேதத்தாலும், அவர்களோடுஸமராயிருக்கை. (என்கொலோ) ப்ர்த்யக்ஷஸித்தமான ஸம்ஸார தோஷத்துக்குக் கண்ணழிவுண்டாயோ, சாஸ்த்ரஸித்தமான பகவத்ப்ராப்தியில்நன்மைக்குக் கண்ணழிவுண்டாயோ, ஆச்ரயணீய வஸ்துவி னுடையஸௌலப்யத்துக்குக்கண்ணழிவுண்டாயோ, ஆச்ரயணத்திலாயாஸமுண்டாயோ, வழிப்போக்கி லருமையுண்டாயோ, ப்ரக்ருதிப்ராக்ர்தங்களில் ப்ராவண்ய ஹேதுவான பாபமும் பகவத்வைமுக்யஹேதுவான பாபமுமொழிய இப்புருஷார்த்தத்தை இழக்கைக்கு ஒருஹேதுவுங் கண்டிலோமென்கை. ... ... ... ... ... (சுசு)

அ.—அறுபத்தேழாம்பாட்டு. ஸம்ஸாரிகள் தங்களுக்கு ஹிதமறிந்திலர்களேயாகிலும் இதில் ருசிபிறந்தவன்று இத்தை யிழக்கவொண்ணாதென்று பார்த்து, இவர்கள்துர்கதியைக்கண்டு பரோபதேச ப்ரவர்த்தராகிறார்-மேலேழுபாட்டாலே;இதில் முதல்பாட்டு-அர்ச்சிராதிகதியிலே போய, நிலைநின்றபுருஷார்த்ததத்தை லபிக்க வேண்டி யிருப்பீர், ப்ராப்யமும் ப்ராபகமுமான பகவத்விஷயத்தை யாச்ரயித்து உங்கள்விரோதியைப்போக்கி யுஜ்ஜீவியுங்கோளென்கிறார்.

சண்டமண்டலத்தினூடுசென்றுவீடுபெற்றுமேல்
கண்டுவீடிலாதகாதலின்பநாளுமெய்துவீர்
புண்டரீகபாதபுண்ணியகீர்த்திநுஞ்செவிமடுத்
துண்டுநும்முறுவினைத்துயருணீங்கியுய்ம்மினோ. (சுஎ)

ப-ரை.—சண்டமண்டலத்தினூடுசென்று-ஆதித்யமண்டலத்தின் நடுவேபோய்,வீடுபெற்று-பரமபதத்தைலபித்து, மேல்-பரமப்ராப்யமாய்,வீடிலாத-ஒருநாளும் விச்சேதியாத,காதலின்பம்-பகவதநுபவஜநிதபகதிகாரித கைங்கர்யஸுகத்தை, கண்டு- ஸாக்ஷாத்கரித்து,நாளும எய்துவீர் - யாவதாத்மபாவிலபிக்கவேண்டியிருப்பீர்; புண்டரீகம் - தாமரைமலரையொத்த, பாதம் - திருவடிகளையுடைய, புண்ணியகீர்த்தி-பாவநத்வப்ராபகத்வபரதையிலே, நும்செவி-உங்களசெவியை, மடுத்து - ஆசார்யோபதேசத்துக்கு பாத்ரமாக்கி, உண்டு - பகவத்குணங்களையநுபவித்து, நும்-உங்களால் சூழ்த்துக்கொள்ளப்பட்ட, உறு-அறு

அஸங்கோசம் - ஜ்ஞாநம் ஸங்கோசமில்லை.... ... (சுசு)

பவித்தே கழியவேண்டும்படி பொருந்திநின்ற, வினை - பாபபலமான, துயருள் நீங்கி - துக்கத்தினின்றுநீங்கி, உய்மின்-உஜ்ஜீவியுங்கோள். (கூஎ)

வ்யா.—(சண்டமண்டலத்தினூடுசென்று) கடிதான ஆதித்ய மண்டலத்தின் நடுவேபோய். "மன்னுங்கடுங்கதிரோன் மண்டலத்தினன்னடுவுள்" என்கிறபடியே முமுக்ஷுக்க ளல்லாதார்க்கு துஷ்ப்ராபமான ஆதித்யமண்டல மத்யத்திலே, ராஜபுத்ரர்கள் ராஜகுலத்தாலே அப்ரதிஹத கதிகளாய்ப்போமாபோலே போய். (வீடுபெற்று) பரமபதத்தைலபித்து. (மேல்கண்டு வீடிலாத காதலின்பம் நாளுமெய்துவீர்) (மேல்-வீடிலாதகாதலின்பம் - கண்டு-நாளுமெய்துவீர்) ப்ராப்யபலமாய், யாவதாத்மபாவி விச்சேதசங்கையின்றியே ஸ்வரூபாநுபந்தியாய்,பகவதநுபவ ஜநிதபக்திகாரிதகைங்கர்ய ஸுகத்தை ஸாக்ஷாத்கரித்து யாவதாத்மபாவி லபிக்கவேண்டியிருப்பீர்.

(புண்டரீகபாதபுண்ணியகீர்த்தி) செவ்வித் தாமரைப்பூப்போலே நிரதிசய போக்யமான திருவடிகளில் பாவநத்வ ப்ராபகத்வ ப்ரதையிலே. "పావనస్సర్వలోకానామ్" "పవిత్రాణాంహిగోవిన్దః" "లోకానాంత్వంపరోధర్మః" "కృష్ణంధర్మంసనాతనమ్" "பாவநஸ்ஸர்வலோகாநாம்," "பவித்ராணாம்ஹிகோவிந்த:" "லோகாநாம்த்வம்பரோதர்ம:" "க்ருஷ்ணம்தர்மம்ஸநாதநம்" என்று ப்ரஸித்தமிறே. (நும்செவிமடுத்து) பகவத்விஷயத்தைக் கேளாதே போந்த உங்கள்செவியை, ஆசார்யோபதேசத்துக்கு பாத்ரமாக்கி. ஆப்தவாக்ய ச்ரவணமே பகவத்விஷயீகாரத்துக்கு வேண்டுவதென்கை. (உண்டு) ஸ்மர்த்தவ்யதசையே தொடங்கி யினிதாகையாலும், நிரபேக்ஷோபாயமாகையாலும், பகவத்குணங்களையே யநுபவித்து. (நும்முறுவினைத் துயருள் நீங்கியுய்மினோ) நீங்கள் சூழ்த்துக்கொண்டதாய், "అవశ్యమనుభోక్తవ్యమ్" "அவஶ்யமநுபோக்தவ்யம்" என்கிற பாபபலமான துக்கத்திநுள்ளே வர்த்திக்கிற நீங்கள், இதில்நின்றும்நீங்கி முன்சொன்ன கைங்கர்ய ஸுகத்தை லபித்து, "தொழுதெழு" என்கிறபடியேஉஜ்ஜீவியுங்கோள். ... ... ... ... (கூஎ)

அ.—அறுபத்தெட்டாம்பாட்டு. ஸம்ஸாரிகள் குணத்ரய ப்ரசுரராகையாலே குணாநுகூலமாக ராஜஸ தாமஸ தேவதைகளை யாச்ரயித்து உஜ்ஜீவிக்கப் பார்க்கிறவர்களை நிஷேதியாநின்றுகொண்டு, ஆத்மோஜ்ஜீவநத்திலே ருசியையுடையராய் ஸாத்விகரானவர்கள் ஸர்வாதிகனை யாச்ரயித்து உஜ்ஜீவிக்கப் பாருங்கோளென்கிறார்.

---

அறுபத்தேழாம்பாட்டு. உபதேசம்வேணுமோ, சாஸ்த்ரஜ்ஞாநமாகாதோ வென்ன; அருளிச்செய்கிறார் (ஆப்த வாக்யேத்யாதி. ... ... ... ... ... (கூஎ)

முத்திறத்துவாணியத்திரண்டிலொன்றுநீசர்கள்
மத்தராய்மயக்குகின்றதிட்டதிலிறந்துபோந்
தெத்திறத்துமுய்வதோருபாயுமில்லையுய்குறில்
தொத்திறுத்ததண்டுழாய்நன்மாலைவாழ்த்திவாழ்மினோ (சுஅ)

ப-ரை.—ஸாத்விக ராஜஸ தாமஸதேவதைகளை ஆராதித்துப்பெறும், முத்திறத்துவாணியத்து - மூன்றுவகைப்பட்ட பலங்களிலே, இரண்டில் ஒன்றும் - ராஜஸதாமஸங்களில் ருசியைபபண்ணுகிற, நீசர்கள் - தண்ணியர்கள், காமாவஸாநத்தில், அதில் இட்டு - அந்தபலத்தைவிட்டு, இறந்து - அவ்வவதேசங்களில் போகசரீரங்களைவிட்டு, போந்து - பூமியிலேவந்து பிறந்து, மத்தராய் - தேஹாத்மாபிமாநத்தாலே ப்ராக்ருத பதார்த்த லாபத்தாலே களித்து, மயங்குகின்றது - தன்னையும் ஈச்வரனையும் அறியாமையாலே மயங்காநின்றார்கள்; ஆகையாலே, எத்திறத்தும் - தன்னுடைய ஆணதனமையாலும் இதரதேவதைகளை ஆச்ரயணீயராகப் பற்றினாலும் ஸர்வேச்வரனை ஐச்வர்யார்த்தமாகப்பற்றினாலும், உய்வதோருபாயமில்லை - உஜ்ஜீவிக்கைக்குவழியில்லை; உய்குறில் - உஜ்ஜீவிக்கவேண்டியிருந்தீர்களாகில், தொத்திறுத்த - கொத்துக்கொத்தாகச்செறிந்த, தண் - குளிர்ந்த, துழாய் - திருத்துழாய்மாலையாலே அலங்காதனாய், நல் - ஸௌலப்யாதி கல்யாணகுணயுக்தனாயிருக்கிற, மாலை - ஸர்வேச்வரனை, வாழ்த்தி - மங்களாசாஸநம்பண்ணி, வாழ்மினோ - வாழுங்கோளென்கிறார். (சுஅ)

வ்யா.—(முத்திறத்து வாணியத்து) ஸாத்விக ராஜஸ தாமஸதேவதைகளைத் தந்தாமுடைய குணாநுகூலமாகப் பற்றி ஆராதித்துப் பெறும் மூன்றுவகைப்பட்ட பலங்களிலும். திறம் - ப்ரகாரம். பலங்களை "வாணியம்" என்கிறது - வ்யாபாரம் அல்பமாய் பலம்விஞ்சியிருக்கை. "అగ్నౌప్రాస్తాహుతిస్సమ్యక్" "పత్రంపుష్పంఫలంతోయమ్" "త్రైగుణ్యవిషయావేదాః" "அக்நௌ ப்ராஸ்தாஹுதிஸ்ஸம்யக்" "பத்ரம்புஷ்பம் பலம்தோயம்" "த்ரைகுண்யவிஷயாவேதா:" என்கிறபடியே - வேதங்களும் குணத்ரயவச்யரான சேதநர்க்கு குணாநுகூலமாக ஆராத்ய தேவதைகளையும், ததாராதநப்ரகாரங்களையும், ஆராதந பலங்களையும்சொல்லிவைத்தது. (இரண்டிலொன்றும் நீசர்கள்) ஸ்வகுணங்களுக்கு அநுகூலமாயிருக்கையாலும்சாஸ்த்ராநுமதியாலும் நித்யஸத்வத்தையும் ததாராத்யனான ஈச்வரனையும் ஆராதந பலமான மோக்ஷத்தையுமொழிந்து, ராஜஸ தாமஸபலங்களிலே ருசியைப்பண்ணும் நீசர். நீசராகிறார் - ஸம்ஸாரத்தை வர்த்திப்பித்துக்கொள்ளும் ஹேயர். (மத்தராய் மயங்குகின்ற திட்டதிலிறந்து போந்து) (இட்டதில்) கர்மாவஸாநத்திலே அந்தபலத்தை விட்டு.

---

அறுபத்தெட்டாம்பாட்டு. வ்யாபாரம் அல்பமாய் பலம்பெருத்திருக்குமோ வென்ன; அருளிச்செய்கிறார் (అగ్నౌప్రాస్తా - அக்நௌ ப்ராஸ்தாவித்யாதி.) (இட்டதில்) அதில் - இட்டு—அத்தைவிட்டு.

(இறந்து) அவ்வவதேசங்களில்போகசரீரங்களைமுடித்த. (போந்து) அந்தபோகபூமியில்நின்றும் ஆகாச மேக ஸஸ்யாதிகளிலே கிடந்து கர்ப்பவாஸார்த்தமாகப்போந்து. "க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விஶந்தி" "க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விஶந்தி" என்கிறபடியேபூமியிலேபிறந்து. (மத்தராய்) தேஹாத்மாபி மாநத்தாலே ப்ராக்ர்த பதார்த்த லாபத்தாலே களித்து. (மயங்குகின்றது) ஆத்மாவையாதல், ஈச்வரனையாதல் உள்ளபடி யறியாமையாலே மோஹங்கதனைப்போலே யிருக்கிறதிறே. ஸ்வர்க்காதிபலாநுபவங்களை, புண்யம் க்ஷயித்தவளவிலே மத்யேவிட்டு அந்தபோகசரீரங்களையும் முடித்து, கர்ப்பவாஸார்த்தமாக அதிக்லேசத்தோடே போந்தபடியை யநுஸந்தியாமையிறே சேதநர் ப்ராக்ர்தபோகங்களிலே களித்து வர்த்திக்கிறதென்கை.

(எத்திறத்துமுய்வதோருபாயமில்லை) ஆகையாலே ஸ்வபௌருஷத்தாலும் இதரதேவதைகளை யாச்ரயணீயராகப்பற்றினாலும், ஈஶ்வரன் தன்னையே ஐச்வர்யார்த்தமாகப் பற்றினாலும் உஜ்ஜீவிக்கைக்கு வழியில்லை. (உய்குறில்) உஜ்ஜீவிக்கவேண்டி யிருந்திகோளாகில். (தொத்துறுத்ததண்டுழாய் நன்மாலை வாழ்த்தி வாழ்மினோ) ஸர்வேச்வரத்வஸூசகமாய், தொடைசெறிந்து ச்ரமஹரமா யிருந்துள்ள திருத்துழாயாலே அலங்க்ர்தனாய், ஸௌலப்யாதி கல்யாண குணயுக்தனா யிருக்கிற ஸர்வேஶ்வரனையாச்ரயித்து வாழுங்கோள். "நிகரில் புகழாயுலகமூன்றுடையாய்" இத்யாதிகளைச்சொல்லிப் புகழ்ந்து, யாவதாத்மபாவி ஆநந்த நிர்ப்பரராயிருங்கோள். "ரஸம் ஹ்யேவாயம் லப்த்வாநந்தீ பவதி" "ஏஷஹ்யேவாநந்தயாதி" என்னக்கடவதிறே. (௩௮)

அ.—அறுபத்தொன்பதாம்பாட்டு. "எத்திறத்து முய்வதோருபாயமில்லை" என்கிறதென், தேவதாந்தரங்களை யாச்ரயித்தால் உஜ்ஜீவிக்க வொண்ணாமை யென்னென்னில்; அந்த தேவதாந்தர ஸமாச்ரயணம் துஷ்கரம், அத்தைப் பெற்றாலும் அபிமதப்ரதாநத்தில் அவர்கள் அசக்தர்; ஆனபின்பு ஜகத்காரணபூதனை யாச்ரயித்து ஸம்ஸார துரிதத்தை யறுத்துக்கொள்ள வல்லிகோளென்கிறார்.

காணிலுமுருப்பொலார்செவிக்கினாதகீர்த்தியார்
பேணிலும்வரந்தரமிடுக்கிலாததேவரை
ஆணமென்றடைந்துவாழுமாதர்காளெம்மாதிபால்
பேணிநும்பிறப்பெனும்பிணக்கறுக்ககிற்றிரே. (௩௯)

ப-ரை.—முமுக்ஷுக்களுக்கு, காணிலும்-காணக்கூடாத, உருப்பொலார்-க்ரூரமான ரூபத்தையுடையவர்களாய், செவிக்கு - காதுகளுக்கு, இனாத-இனிமையைத் தாராத, பிதர்வதம்முதலிய, கீர்த்தியார் - கீர்த்தியை யுடையவர்களாய், பேணிலும் - ஆச்ரயிக்கிலும், வரம் தர - அபிமதபலம் தருகைக்கு, மிடுக்கிலாத - சக்தியில்லாதவர்களான, தேவரை - தேவதைகளை, ஆணமென்று -

தஞ்சமென்று, அடைந்து - ஆச்ரயித்து, வாழும்-வாழுகிற, ஆதர்காள் - குறு டர்களே!, எம்மாதிபால் - எங்களுக்குக் காரணபூதனுன ஸர்வேச்வரன் பக்க லிலே, பேணி - ஆதரத்தைப்பண்ணி, நும் - உங்களுடைய, பிறப்பெனும் - பிற ப்பு என்கிற, பிணக்கு-தூற்றை, அறுக்ககிற்றிர் - அறுத்துக்கொள்ள ஸமர்த்த ராகுங்கோள். (சுகூ)

வ்யா.—(காணிலுமுருப்பொலார்) தாமஸதேவதைக ளாகை யாலே முமுக்ஷுக்களுக்கு அவர்கள் த்ரஷ்டவ்யரலலர். "స్కన్దరుద్ర మహేన్ద్రాద్యాః ప్రతిష్ఠాస్తుపూజనే। అశుద్ధాస్తే సమస్తాస్తు దేవాద్యాః కర్మయోనయః" "ஸ்கந்தருத்ரமஹேந்த்ராத்யா: ப்ரதிஷ்த்தாஸ்துபூஜநே। அஶுத் தாஸ்தேஸமஸ்தாஸ்ச தேவாத்யா: கர்மயோநய:" என்னக்கடவ திறே. "ఆత్మావారే ద్రష్టవ్యః" "ஆத்மாவாரேத்ரஷ்டவ்ய:" என்னுமவ னல்லனிறே. இங்ஙனே யிருக்கச்செய்தே உங்கள் குறுருபமான ருசியாலே கண்டாலும் விரூபாக்ஷத்வாதிகளாலே வடிவு பொல்லா தாயிருப்பர்; திருவுள்ளத்தில் தண்ணளியைக்கோட்சொல்லித்தாரா நின்றபுண்டரீகாக்ஷனைப்போலேவடிவு ஆகர்ஷகமாயிருக்கிறதன்றே; அவர்களுடைய ஹ்ருதயத்தில் க்ரௌர்யமே அவர்கள்வடிவிலே ப்ரகாசிப்பது. (செவிக்கினாத கீர்த்தியார்) த்ரஷ்டவ்யரல்லாதவோ பாதி ச்ரோதவ்யருமல்லர். கேட்கவேண்டி யிருந்திகோளேயாகி லும், பிதுர்வத ப்ரஸித்தியென்ன, தத்பலமான பிக்ஷாடநசாரித்ர ப்ரதையென்ன, அத்வரத்வம்ஸ கதையென்ன, ச்வசுரவதகதையெ ன்ன, இத்யாதி ச்ரவணகடுகமான கீர்த்தியையுடையரா யிருப்பர்; ம்ருதனானபுத்ரனை ஸாந்தீபிநிக்குமீட்டுக்கொடுத்தான், புநராவ்ருத்தி யில்லாத தேசத்தில்நின்றும் வைதிகன்புத்ரர்களை மீட்டுக்கொடுத் தான் என்றித்யாதிகளாலே * ஸம்ப்ரவே மதுரமான கீர்த்தியி றே. (பேணிலும்) ஆச்ரயணீயருமல்லர், ஆச்ரயித்தார்திறத்திலே "உன்பயலைபறுத்திடு" என்றும், "ஊட்டியிலே தட்டிற்றில்லைகா ண்" என்றும்சொல்லுகையாலே, உங்கள்ருசியாலே அவற்றையும் பொறுத்து ச்ரவணகடூரமான கீர்த்தியையும் வைரூப்யத்தையும் பொறுத்து ஆச்ரயித்தாலும். "పత్రంపుష్పంఫలంతోయమ్" "பத்ரம் புஷ்பம பலம்தோயம்" என்றும, "సుసుఖంకర్తుమ్" "ஸுஸுகம்கர்த் தும்" என்றும் ஆச்ரயணம் ஸுககரமுமாய் ஸுகருபமுமா யிருக் கிறதன்றே. (வரந்தர மிடுக்கிலாததேவனை) பரஹிம்ஸையிலே வந்தால் ஜகதுபஸம்ஹாரக்ஷமராய், அபிமதபலந்தருகைக்கு சக்தி யில்லாத தேவதைகளை.

---

அறுபத்தொன்பதாம்பாட்டு. அத்வரத்வம்ஸம் - மாமனாயிரு க்கிற தக்ஷப்ரஜாபதியுடைய யாகத்தையும் கெடுத்து அவனையும்கொ ன்றது.

ஒருபிசாசத்துக்கு மோக்ஷத்தைக்கொடுப்பது, ஒரு பக்ஷிக்கு மோக்ஷத்தைக்கொடுப்பது. "ఉదారాస్సర్వఏవైతే" "உதாராஸ்ஸர்வ ஏவைதே" என்று-தானும், பிறரும் "సకలఫలప్రదోహివిష్ణుః" "ஸகல பலப்ரதோஹிவிஷ்ணு:" என்னும் விஷயமன்றிறே. "நீதந்த நித்யத்வம் எனக்குக் கழுத்துகட்டியாய்த்து" என்றுமார்க்கண்டேயன் அவனைவளைக்க, மோக்ஷப்ரதன்கையிலே காட்டிக்கொடுத்து நழுவும் சீலமிறேபிறரது.

(ஆணமென்றடைந்து) இப்படி இவர்கள் ஆச்ரயணீயரு மன்றிக்கே யிருக்கச்செய்தே தங்கள் ப்ரமத்தாலே ஆச்ராயித்து. ஆணம் – அரண். "నత్యజేయమ్" "நத்யஜேயம்" என்னும் விஷய மன்றே. "మారుచః" "மாரூச:" என்னமாட்டான் ஏறுண்டவனுகையாலே. (வாழும் ஆதர்காள்) கர்த்தராயிருக்கிற அறிவு கேடர்காள். ஆதர்-குறுடரும், அறிவுகேடரும். "నాహారయతిసంత్రాసం బాహూరామస్యసంశ్రితా" "நாஹாரயதிஸந்த்ராஸம்பாஹூராமஸ்யஸம் ச்ரிதா" என்றும், "బాహుచ్ఛాయామవష్టబ్ధో యస్యలోకోమహాత్మనః" "பாஹுச்சாயாமவஷ்டப்தோயஸ்யலோகோமஹாத்மந:" என்றும், "అథసోఽభయంగతోభవతి" "அதஸோபயங்கதோபவதி"என்று மிருக்கிறுர்களன்றே. (எம்மாதிபால்பேணி) எங்களுக்குக்காரண பூதனானவன்பக்கலிலே ஆதரத்தைப்பண்ணி. ஜகத்காரணவஸ்துவாயிருக்கிறவனை, "எம்மாதி" என்பானென்னென்னில்; ஈச்வரன் ஜகத்ஸ்ர்ஷ்டியைப்பண்ணுகிறது முமுக்ஷுஸிஸ்ர்க்ஷையாலே யாகையாலே அந்தஸ்ர்ஷ்டிபலிததது அநந்யப்ரயோஜநர்பக்கலிலேயென்று "எம்மாதி" என்று விசேஷிக்கிறுர்.(நும்பிறப்பெனும்பிணக்கறுக்ககிற்றிரோ) ஒருத்தராலுமறுக்கப்போகாத வுங்களுடைய பிறப்பென்கிற தூற்றையறுத்துக்கொள்ள வல்லிகோளே. (பிணக்கறுக்க) ஜந்மத்தை "தூறு" என்கிறது - அகப்பட்டவனுக்குப் புறப்படப்போகாதொழிகையும், தன்னில் தரிக்கவொண்ணுதொழிகையும், முதலும் முடிவும்காண முடியாதிருக்கையும். ... ... (௬௯)

அ — எழுபதாம்பாட்டு. "வரந்தரமிடுக்கிலாததேவர்" என்று-அவர்களுக்கு சக்திவைகல்யம் சொல்லுவானென், அவர்களை ஆச்ரயித்துத் தங்களபிமதம் பெற்றுரில்லையோவென்னில்; ருத்ரனையாச்ரயித்து அவனுக்கந்தரங்கனுய்ப்போந்த பாணன் பட்டபாடும், ருத்ரன்கலங்கினபடியும் * (கண்டு, அன்று ஸஹகரித்தது) தேவர்களையறியுமத்தனையிறேயென்கிறுர்.

கொந்தமோடுசூலம்வேல்கள்தோமரங்கள்தண்டுவாள்
பந்தமானதேவர்கள்பரந்துவானகமுற
வந்தவாணனீரைஞ்ஞூறுதோள்களைத்துணித்தநாள்
அந்தவந்தவாகுலமமரரேயறிவரே. (எ௦)

---

ஏறுண்டது - பாணுஸுரயுத்தத்திலே. ... (௬௯)

* இந்தகுண்டலிதகரந்தத்துக்குச சரியான பாடதனைதகோசாநதரங்களில கண்டுகொள்வது.

ப - ரை.—கொந்தமோடு - சவளங்களும், சூலம் - சூலங்களும், வேல்கள் - வேல்களும், தோமரங்கள்-எறியீட்டிகளும், தண்டு - கதைகளும்,வாள்-வாள்களுமாகிற ஆயுதங்களை, பந்தமான - பந்தகமாகப் பொகட்டுப்போன, தேவர்கள் - தேவதைகள், க்ர்ஷ்ணன் முன்னே நிற்கமாட்டாமல், பரந்து - ஒருவர்போன வழி ஒருவர்போகமாட்டாமே சிதறி, வானகமுற - தங்களிருப்பிடங்களில் புக; வந்த - தன்தோள் வலியைநம்பி எதிர்த்துவந்த, வாணன்-பாணாஸுரனுடைய, ஈராஞ்ஞூறுதோள்களை - ஆயிரம் தோள்களையும், துணித்த நாள் - கழித்தவன்று, அந்தவந்த ஆகுலம் - ருத்ரன் அரைகுலையத் தலைகுலைய ஓடின ஸங்கடத்தையும் தனக்குப் புகலிட மற்றுபாணாஸுரன பட்டஸங்கடத்தையும், அமரரோ யறிவர் - தேவர்களே யறிவார்கள்; இன்று நான சொல்லவேண்டியிருக்கிறதோ வென்கிறார். (எ0)

வ்யா.—(கொந்தமோடு சூலம் வேல்கள் தோமரங்கள் தண்டு வாள் பந்தமான தேவர்கள்) கொந்தம் முதலான வாயுதங்களைக் கொண்டு ருத்ரனுக்கு பந்துக்களா யுதவிசெய்யவந்த தேவதைகள். கொந்தம் - சவளம். தோமரம் - எறியீட்டி. பந்தம் - பந்தம். இவ்வாயுத வர்க்கத்தைக்கொண்டு வந்து அவைதானே காற்கட்டாய்ப் பொகட்டுப்போன தேவர்களென்றுமாம். அப்போது "பந்தம்" என்று - பந்தகமென்றபடி. "ஸ்ரீ..." "விநாசாயசதுஷ்க்ர்தாம்" என்கிறபடியே க்ர்ஷ்ணனை, தங்களுக்கு விரோதிகளான அஸுரராக்ஷஸர்களை யழியச்செய்து குடியிருப்புத்தர வந்துபிறந்தவனென்று பாராதே, அந்த துர்வர்க்கத்தோ பாதி எதிரம்பு கோத்துவருகையாலே க்ர்தக்நருமாய் துர்மாநிகளுமாயிருக்குமவர்களென்கை. ஸாயுதராய்வந்த தேவர்களென்று சுருங்கச் சொல்லாதே பரக்க ஆயுதங்களைப் பேசிற்று, உபகாரகனானவன் பக்கலிலே இத்தனை அபகாரத்தை நினைப்பதே! என்னும் நெஞ்செரிவாலே யருளிச்செய்கிறார். (பரந்துவானகமுற) க்ர்ஷ்ணன்ஸந்நிதியிலே நேர்நிற்கமாட்டாதே ஒருவர்போனவழியொருவர்போகாதே சிதறித் தங்கள் குடியிருப்பிலே புக.

(வந்தவாணன்) தேவதைகள் ஆயுதங்களைப்பொகட்டுப்போன விடத்திலும, தனக்கு நியாமகனான ருத்ரன் ஜர்ம்பிதனானவிடத்திலும், தன்தோள்வலியை விச்வஸித்துவந்த வாணனுடைய. (ஈராஞ்ஞூறு தோள்களைத் துணித்தநாள்) ஆயிரந்தோள்களையும் கழித்தவன்று. தோள்வலியைக்கொண்டுவந்தவனுடைய தோள்வலியைக் கழித்தான், ஆயுதங்களைபலமாகக்கொண்டுவந்த தேவர்களை ஆயுதங்களைப் பொகட்டுப் பிற்காலித்துப்போம்படி பண்ணினான், ஸர்வாத்யக்ஷனாய் வந்த ருத்ரனை நிச்சேஷ்டனாம்படி பண்ணினான்.

---

எழுபதாம்பாட்டு. கொந்தம்- சவளம் தோமரம் - வேல்விசேஷம். ஜர்ம்பிதன் - முறிந்துபோனவன். ... ... (எ0)

(அந்தவந்தவாகுலம்)ருத்ரன் கொன்றையும் தும்பையும் ஜடையும் குலையக்கெட்டுப்போன பாரவச்யமும், போக்கற்றவாறே கலங்கி க்ர்ஷ்ணனுடைய முகம்பெறுகைக்கு ஸ்தோத்ரம்பண்ணின பாரவஶ்யமும். "పారవశ్యంసమాయాత శ్శూలీజృమ్భితతేజసా। పాఞ్చజన్యస్యఘోషేణ శార్ఙ్గవిస్ఫూర్జితేనచ" "பாரவஶ்யம்ஸமாயாதஶ்ஶூலீஜ்ர்மபிததேஜஸா। பாஞ்சஜந்யஸ்யகோஷேண ஶார்ங்கவிஷ்ப்பூர்ஜிதேநச" என்றும், "కృష్ణకృష్ణమహాబాహో జానేత్వాంపురుషోత్తమమ్। పరేశంపరమాత్మాన మనాదినిధనం హరిమ్" "க்ர்ஷ்ணக்ர்ஷ்ணமஹாபாஹோ ஜாநேத்வாம் புருஷோத்தமம்। பரேஶம்பரமாத்மாந மநாதிநிதநம்ஹரிம்" என்னக் கடவதிறே. (அமரரோயறிவரோ) ஆக இப்படி யிரண்டு வகைப்பட்ட ஆகுலத்துக்கும்கெட்டுப்போன தேவர்களேஸாக்ஷி, நான் இன்றுசொல்லவேண்டியிருந்ததோ ... ... ... ... ... (௭௰)

அ.—எழுபத்தோராம்பாட்டு. பாணனை ரக்ஷிக்கக்கடவேனென்று ப்ரதிஜ்ஞைபண்ணி, ஸபரிகரனாய்க்கொண்டு ரக்ஷணத்திலே யுத்யோகித்து, எதிர்த்தலையிலே அவனைக்காட்டிக் கொடுத்துத் தப்பிப்போனபடியாலும், ஒருவன் ஆச்ரிதனுக்குதவினபடியென் என்று லஜ்ஜித்து க்ர்ஷ்ணனைகாபைபண்ணி அவன்ஸத்தையைநோக்கினபடியாலும், அவன் ரக்ஷகனல்லனென்னுமிடமும் க்ர்ஷ்ணனே ரக்ஷகனென்னுமிடமும் ப்ரத்யக்ஷமன்றே, இவ்வர்த்தம் ஒருவர் சொல்லவேண்டியிருந்ததோ வென்கிறார்.

வண்டுலாவுகோதைமாதர்காரணத்திஞல்வெகுண்டு
இண்டவாணனீரைஞ்ஞூறுதோள்களைத்துணித்தநாள்
முண்டனீறன்மக்கள்வெப்புமோடியங்கியோடிடக்
கண்டுநாணிவாணனுக்கிரங்கினனெம்மாயனே. (௭௧)

ப - ரை.—சித்ரலேகையைக்கொண்டு அநிருத்தாழ்வானை வரவழைத்தவளாய், வண்டு உலாவு - வண்டுகள் மாறாத, கோதை-மாலையாலே அலங்காதையாய், மாதர்காரணத்திஞல- தனபெண்ணான உஷைநிமித்தமாக, எதிர்த்தலைஸா வேச்வரனென்று பாராதே, வெகுண்டு - கருத்தனாய், இண்ட-மேல்விழுந்த, வாணன் - பாணாஸுரனுடைய, ஈரைஞ்ஞூறு தோள்களை-ஆயிரம் தோள்களையும், துணித்தநாள் - சேதித்தவன்று; முண்டன் - முண்டிதனாய், நீறன - பஸ்மந்தரித்த சரீரத்தையுடையனான ருத்ரனும், தேவ்ஸேநாபதியாய், மக்கள் - பிள்ளையான ஸுப்ரஹ்மண்யனமுதலிய புத்ரர்களும், வெப்பு - ஜ்வரமும், மோடி-காளியும், அங்கி - நாறபததொன்பது அகநிக்கும் நிர்வாஹகனை அக்நியும், ஓடிடக்கண்டு - முதுகுகாட்டியோடக்கண்டு, எம் ஆயன் - என்னுயனான க்ர்ஷ்ணன், நாணி - தாம் போராத இவற்றின்மேலே யாகாதே சிறிதென்று லஜ்ஜிதது, வாணனுக்கு - பாணாஸுரனுக்கு, இரங்கினன் - இரங்கி இரண்டுதோளைக்கொடுத்து ரக்ஷித்தருளினனெனகிறா. (௭௧)

வ்யா.—(வண்டுலாவுகோதைமாதர் காரணத்தினுல்) வண்டு மாறுதமாலையாலே அலங்க்ருதையான உஷைநிமித்தமாக. ஸ்வப்ந த்ர்ஷ்டனுன அநிருத்தனை சித்ரலேகை கொண்டுவரக்கூடுமென்று அவள்வரவுபார்த்துச்செவ்விப்பூவாலே யொப்பித்திருந்தபடியைச் சொல்லுகிறது. (வெகுண்டிண்டவாணன்)எதிர்த்தலை ஸர்வேஶ்வர னென்று பாராதே யுத்தக்ருத்தனுய் மேல்விழுந்த பாணன். வெகு ளி-கோபம். இண்டல்-நெருங்குதல். "పితరం మాతరం దారాన్" "பிதரம் மாதரம்தாரான்" என்று-ரக்தஸ்பர்சங்களைவிட்டுப் பற்றவேண்டும் விஷயத்திலே ஸூதைநிமித்தமாகப் பகைக்கிறுனிறே துஷ்ப்ரக்ர்தி யாகையாலே. காந்தர்வபக்ஷத்தாலே ஸம்ச்லேஷம் பிறந்தபின்பு க்ர்ஷ்ணனேடே ஸம்பந்தியாய்க்கொண்டு ப்ரீதனுக ப்ராப்தமாயிருக்க, தன் பாஹுபலத்தாலே வந்த துர்மாநத்தாலே சீறி அந்தரப்பட்டா னென்கை. (ஈரைஞ்ஞூறுதோள்களைத்துணித்தநாள்) இவன் எதி ரிடுகைக்குஹேது பாஹுபலமாகையாலே பாஹுவநத்தைச்சேதி த்தவன்று.

(முண்டன் நீறன் மக்கள் வெப்புமோடியங்கியோடிடக் கண்டு நாணி) "ரக்ஷிக்கிறேன்" என்று ப்ரதிஜ்ஞைபண்ணினவன் செய்த தென்னென்னில்; பாணனை கர்ஷ்ணன்கையிலே காட்டிக்கொடுத்து ப்ரதாநனுன தனனேடு பரிகரத்தோடுவாசியற முதுகுகாட்டியோ டின வித்தனை. (முண்டன்நீறன்) முண்டிதனுய் பஸ்மச்சந்நஶரீர னுன ருத்ரன். இத்தால்-க்ர்ஷ்ணனைக்குறித்துத் தன்னபிமத ஸந்தி யைக்குறித்து,ஸாதகனுன அவனதன்னளவும்பாராதே எதிர்த்தலை யையும்பாராதே ஸாதகவேஷத்தோடே துர்மாநங் கொண்டாடின படி. தேவஸேநாபதியான ஸுப்ரஹ்மண்யன்முதலான புத்ரர்கள், ஜ்வரம், மோடி - பிடாரி, நாற்பத்தொன்பதக்நிக்கும்கூடஸ்தனுன வக்நி இவர்களோடு, தன்னேடு வாசியற முதுகிட்டுப்போகக்கண்டு லஜ்ஜித்து. மோடி - காளியென்றுமாம். லஜ்ஜிக்கையாவது - யுத தோந்முகனுய்த்தான்படுதல், எதிர்த்தலையை ஜயித்தல் செய்ய ப்ரா ப்தமாயிருக்க, முதுகிடுகையாலே தரம்போராத இவற்றின்மேலே யாசாதே நாம்சிறிற்றென்று லஜ்ஜித்து. "అరిః ప్రాణాన్ పరిత్యజ్య రక్షితవ్యః" "அரிப்ப்ராணுந்பரித்யஜ்யரக்ஷிதவ்ய:"என்கிறபடியே - ஆச்ரிதனை ப்ராணுவதியாக ரக்ஷிக்க ப்ராப்தமாயிருக்க,' ஒருவன் ஆச்ரிதனுக்கு உதவினபடியென்! என்று லஜ்ஜித்தெனனவுமாம். (வாணனுக்கிரங் கினுனெம்மாயனே) இப்படிப்பட்ட ருத்ரனைத் தனக்குத் தஞ்சமாக நினைத்திருக்கையாலே தயநீயனுன பாணனுக்கு ஆபத்தேஹேது வாக க்ர்பைபண்ணி இரண்டுதோள்களைக்கொடுத்து ரக்ஷித்தான் என்னுயனுன க்ர்ஷ்ணனல்லனே. இத்தால்-தேவதாந்தரங்கள் ரக்ஷ கராறுலும் ஆபத்துக்கு உதவார்கள்; ஈஶ்வரன் முனிந்த தசையி லும் ஆபத்ஸகனென்றதாய்த்து. "కృపయా పర్యపాలయత్" "க்ரபயா பர்யபாலயத்." ... ... ... ... (எக)

அ.—எழுபத்திரண்டாம்பாட்டு. ருத்ரன் லோகத்திலேமோக்ஷ ப்ரதனென்று ஆச்ரயிப்பாரும் ஆகமாதிகளிலே பரத்வத்தை ப்ரதிபாதித்துமன்றோ போருகிறதெனனில்; நிர்த்தோஷச்ருதியில் அவனே க்ஷேத்ரஜ்ஞனாகச் சொல்லுகையாலே லோகப்ரஸித்தி வடயக்ஷ ப்ரஸித்திபோலே அயதார்த்தம், ஆகமாதிகள் விப்ரலம்பகவாக்யவத் அயதார்த்தமென்கிறார்.

போதின்மங்கைபூதலக்கிழத்திதேவியன்றியும்
போதுதங்குநானமுகன்மகனவன்மகன்சொலில்
மாதுதங்குகூறனேறதூர்தியென்றுவேதநூல்
ஓதுகின்றதுண்மையல்லதில்லைமற்றுரைக்கிலே. (எஉ)

ப - ரை.—போதிலமங்கை - தாமரைமலரில ேருவவதரித்த பெரியபிராட்டியாரும், பூதலக்கிழத்தி - ஸ்ரீபூமிப்பிராட்டியும், ேதவி - மஹிஷிகள்; அன்றியும் - அதுகருமேலே, போதுதங்கு நான்முகன - கமலாஸநஜ்ஞனப்ரஹ்மா, மகன - புதரன்; அவன - அநதபரஹ்மாவினுடைய, மகனசொலில- மகன்பெயைச் சொல்லபபுகில, மாது - பார்வதியை, தங்கு கூறன-இடது பக்கதிலே யுடையருதரன; ஏறது - ரிஷபம, ஊர்தி - அவனுக்கு வாஹநம்; என்று-ஸ்ரீபூமிஸஹிதன ப்ரஹமாவுக்கு உதபாதகன பரமஹோதபநன ருதரனென்று, வேதநூல்- வேதமாகிற சாஸ்த்ரம், ஓதுகின்றது - சொல்லுகிற அர்ததமே, உண்மை - ஸதயம்; மற்று - அதுக்குப் புறம்பாக, உரைக்கில் - ப்ராகதம் சொல்லில், அல்லதில்லை - அது அஸத்யமல்லதுவேறன்று. (எஉ)

வ்யா.—(போதில்மங்கைபூதலக்கிழத்திதேவி) தாமரையிலேபிறப்பையுடைய பிராட்டியும், ஸ்ரீபூமிப்பிராட்டியும் மஹிஷிகள். "హ్రీశ్చ తే లక్ష్మీశ్చ పత్న్యౌ" "ஹ்ரீஸ்சதேலக்ஷ்மீஸ்சபத்ந்யௌ" என்றும், "పద్మే స్థితాం పద్మవర్ణామ్" "பத்மேஸ்திதாம் பத்மவர்ணாம்" என்றும் சொல்லக்கடவதிறே. (அன்றியும்) ச்ரியப்பதித்வமே போரும் ஸர்வாதிகன் ஸர்வ ஸமாச்ரயணீயனென்கைக்கு, ச்ரியப்பதித்வத்துக்கு மேலில்லையிறே. அன்றியும் - அதுக்குமேலே. (போதுதங்கு நான்முகன்மகன்) திருநாபீகமலத்திலே பிறக்கையாலே கமலாஸநனான சதுர்முகன் புத்ரன். "అజస్య నాభావధ్యేకమర్పితం యస్మిన్నిదం విశ్వం భువనమధిశ్రితం స ప్రజాపతిరేకః పుష్కరపర్ణే సమభవత్" "அஜஸ்யநாபாவத் யேகமர்ப்பிதம்யஸ்மிந்நிதம் விஶ்வம்புநம் மதிஶ்ரிதம் ஸப்ரஜாபதிரேகঃ புஷ்க்கரபர்ணே நஸமபவத்" என்னக்கடவதிறே. (அவன்மகன் சொலில் மாதுதங்குகூறனேறதூர்தி) "ఏక ఏవ రుద్రః సర్వో హ్యేష రుద్రః" "ஏக ஏவருத்ர: ஸர்வோஹ்யேஷருத்ர:" என்கிற ப்ரசம்ஸாவாக்யங்களையும் ஆகமாதிதந்த்ரங்களையுமொழிய அவன்ஸ்வரூபத்தையுள்ளபடியே "బ్రహ్మణః పుత్రాయ జ్యేష్ఠాయ" "ப்ரஹ்மணঃபுத்ராய ஜ்யேஷ்டாய" இத்யாதி நிர்த்தோஷ ஶ்ருதி ப்ரக்ரியையாலே சொல்லப்பார்க்கில் அவன் ப்ரஹ்மபுத்ரன்.

---

எழுபத்திரண்டாம்பாட்டு. இங்கே பிராட்டிஸம்பந்த மேதுக்கென்ன; அருளிச்செய்கிறார். (ஸர்வாதிகனித்யாதி.) ... (எக)

"மாதுதங்குகூறன்" என்கிறது - ப்ரஹ்மாவினுடைய மாநஸ ஸ்ர்ஷ்டியொழிய யோஷித்புருஷ ஸம்யோகத்தாலே பிறக்கும் ஸ்ர்ஷ்டிக்கு ப்ரதமகண்யனென்று இவனுடைய க்ஷேத்ரஜ்ஞத்வந் தோற்றுகைக்காக. "భ్రుకుటీకుటిలాత్తస్యలలాటాత్క్రోధదీపితాత్। సముత్పన్నస్తదారుద్రో మధ్యాహ్నార్కసమప్రభః। అర్ధనారీనరవపుః ప్రచణ్డోతిశరీరవాన్" "ப்ருகுடீகுடிலாதஸ்யலலாடாத்க்ரோததீபிதாத்| ஸமுத்பந்நஸ்ததாருத்ரோ மத்யாஹ்நார்க்கஸமப்ரப:| அர்த்தநாரீநரவபு: ப்ரசண்டோதிஶரீரவாந்" என்று ப்ரஹ்மாவினுடைய ஸ்ர்ஷ்டிப்ரகரணத்திலே சொல்லக்கடவதிறே. "ஏறதூர்தி" என்று-வேதமய்ஞ பெரியதிருவடிக் கெதிராக ரிஷபத்தை வாஹநமாகக்கொண்டிருக்கிற துர்மாநம் தோற்றுகைக்காக. (என்று வேதநூலோதுகின்றதுண்மை) ஸ்ரீபூமிஸஹிதன ப்ரஹ்மாவுக்கு உத்பாதகன், ப்ரஹ்மோத்பந்நன் ருத்ரனென்று வைராக்யஶாஸ்த்ரமோதுகிற அர்த்தமே ஸத்யம். (அல்லதில்லை மற்றுரைக்கிலே) அதுக்குப் புறம்பாக ஓரர்த்தம்சொல்லில் அது அஸத்யம். ஸௌபர்ணவைகுண்டஸம்வாதே, "యత్తత్పద్మమభూత్ పూర్వం యత్ర బ్రహ్మా వ్యజాయత। బ్రహ్మణశ్చాపి సమ్భూత శ్శివ ఇత్యవధార్యతామ్। శివాత్స్కన్దస్సమ్భూత ఏతత్సృష్టిచతుష్టయమ్" "யத்தத்பத்மமபூத்பூர்வம்யத்ரப்ரஹ்மாவ்யஜாயத, ப்ரஹ்மண ஶ்சாபிஸம்பூத ஶ்ஶிவ இத்யவதார்யதாம் | ஶிவாத்ஸ்கந்தஸ்ஸம்பபூவ ஏதத்ஸ்ர்ஷ்டி சதுஷ்டயம்" இத்யாதி. ... ... ... (எ௨)

அ.—எழுபத்துமூன்றாம்பாட்டு. ச்ரியப்பதியே யாச்ரயணீயன், ப்ரஹ்மருத்ரர்கள்க்ஷேத்ரஜ்ஞராகையாலே அநாச்ரயணீயரென்றதாய்நின்றது-கீழ்; இதில் அந்தச்ரியப்பதிதான் தாழ்ந்தார்க்குமுகங்கொடுக்கைக்காக மநுஷ்ய ஸஜாதீயனாய்த் தன்னைத்தாழவிட்டுக்கொண்டு நின்றநிலையிலே ப்ரஹ்மருத்ரர்களுடைய வதிகாரத்திலே நின்றார்க்கு மோக்ஷப்ரதனென்றுகொண்டு தேவதாந்தரங்களுக்கும் ஸர்வேச்வரனுக்குமுண்டான நெடுவாசியை யருளிச்செய்கிறார்.

மரம்பொதச்சரந்துரந்துவாலிவீழமுன்னோர்நாள்
உரம்பொதச்சரந்துரந்தவும்பராளியெம்பிரான்
வரங்குறிப்பில்வைத்தவர்க்கலாதுவானமாளினும்
நிரம்புநீடுபோகமெத்திறத்துமியார்க்குமில்லையே. (எ௩)

ப - து.—மஹாராஜருக்கு நம்பிக்கையுண்டாக்குகைக்காக, மரம் - மராமரங்கள், பொத - மறுபாடுருவும்படி, சரம்துரந்து - திருச்சரங்களை யேவி, முன்னோர்நாள் - முன்பொருதரோதாயுகத்திலே, ராவணனை வாலிலே கட்டிக்கொண்டு திரியும் பெருமிடுக்கனான, வாலி - வாலியானவன், வீழ-தரையிலே விழும்படி, உரம் அவனுடைய மார்வு, பொத - மறுபாடுருவும்படி, சரம்துரந்து-அம்புவிட்டருளினவனாய், உம்பராளி - நித்யஸூரிகளை அடிமைகொள்ளுமவனாய், எம்பிரான் - அச்செயலாலே என்னை யெழுதிக்கொண்டவன்;

இப்படிப்பட்ட தசரதாத்மஜனுடைய, வரம் - ச்ரேஷ்டமான, குறிப்பில் வைத்தவர்க்கலாகாது - திருவுள்ளத்தாலே விஷயீகரிக்கப்பட்டவர்களுக்கல்லது, ஜ்ஞாநாதிகனான சதுர்முகனாய், வானமாளிலும் - ப்ரஹ்மலோகத்தை நிர்வஹிக்கப்பெற்றாலும், நிரம்பு - குறைவறாத, நீடுபோகம் - நித்யமானமோக்ஷம், எத்திறத்தும்-கர்மாத்யுபாயங்களை யநுஷ்டித்தாலும் ஸித்தோபாய பரிக்ரஹம் பண்ணினாலும், யார்க்குமில்லை - அநந்யப்ரயோஜநர்க்கும் ஸித்தியாது. (எங)

வ்யா.—(மரம்பொதச்சரந்துரந்து) மஹாராஜருடைய விச்வாஸார்த்தமாக மராமரங்களை மறுபாடுருவத்திருச்சரத்தையேவி, இத்தால்-தன்னுடைய ரக்ஷணத்திலே அதிசங்கைபண்ணினார்க்கும்அவ்வதிசங்கையைத்தீர்த்துத்தன்பக்கலிலேவிச்வாஸத்தைப்பிறப்பித்து ரக்ஷிக்குஞ்சீலவானென்னை.(வாலிவீழ முன்னோர்நாள்உரம்பொதச் சரந்துரந்த) ராவணனை வாலிலே கட்டிக்கொண்டுதிரியும் பெருமிடுக்கனான வாலியை, முன்போன சதுர்யுகங்களில் ஒரு த்ரேதாயுகத்திலே இவன் தரைப்படும்படியாக மராமரங்களிலும்திண்ணிய அவன்மார்வு மறுபாடுருவும்படி அம்பைவிட்டு, அதிகாரிகளுமாய் நிவர்த்தவிரோதருமா யிருக்குமவர்களுக்குஸ்வாநுபவரூபமான அபிமதத்தைக்கொடுக்கையேயன்றியே,தத்விரோதியான அவித்யாதிப்ரபல விரோதிகளையும்போக்கி அதுக்கடியான வதிகாரத்தையும் கொடுக்கும் சீலவானென்கைக்குஉதாஹரணமிதுவென்கை. "வரந்தரமிடுக்கிலாததேவர்" என்று அபிமத ப்ரதாநத்திலும் அசக்தரொன்றதிறே ப்ரஹ்மாதிகளை. (உம்பராளி)நித்யஸூரிகளை யடிமைகொள்ளுகிறவன்கிடீர் தாழ்ந்தார்க்கு இப்படி யுபகரிக்கிறானென்கை. ரக்ஷணத்திலே அதிசங்கைபண்ணினவனுடைய அதிசங்கையைத் தீர்த்து அவன் விரோதியைப்போக்கின அந்தசீலமறியவுரியார்நித்யஸூரிகளிறே.

(எம்பிரான்) அச்செயலாலே என்னை யெழுதிக்கொண்டவன். அதவா, "உம்பராளியெம்பிரான்" என்று - அச்செயலாலே ப்ரயோஜநாந்தர பரரான தேவர்களையும், அநந்ய ப்ரயோஜரான அஸ்மதாதிகளையுமொக்கவெழுதிக்கொண்டவனென்றுமாம்.

---

எழுபத்துமூன்றாம்பாட்டு. அதிகாரத்திலே - அவர்களுடைய அநுஷ்டாநத்திலே.நிர்வாஹகரா யிருக்குமவர்களுக்கும்ஸ்வாநுபவரூபமான தன்னை யநுபவிக்கையாகிற புருஷார்த்தத்திலே அபிமாநத்தையுண்டாக்குகை. ப்ரஹ்மாதிகள் இவன்விரோதியைப்போக்க மாட்டார்களோ வென்ன; அருளிச்செய்கிறார் (வரந்தரமிடுக்கிலாத வித்யாதி.) "உம்பராளி" என்றதுக்கு தாத்பர்யத்வய மருளிச்செய்கிறார் (நித்யஸூரிகளை யித்யாதி வாக்யத்வயத்தாலே.) அன்றிக்கே, ப்ரஹ்மாதிகளாகவுமாம்; இத்தை யருளிச்செய்கிறார் (அதவாயித்யாதி.) ப்ரயோஜநாந்தர பரரோ ப்ரஹ்மாதிகளோடொக்க அஸ்மதாதிகளையு மென்றபடி. ஜ்ஞாநாதிகரான அநந்யப்ரயோஜநர் — உபாஸகர். ... ... ... ... (எங)

"உரம்பொதச்சரந்துரந்த-எம்பிரான்" என்று-முன்புமஹாராஜர்க்குஉதவினதுவும்தமக்குஉதவிற்றாகநினைத்திருக்கிறார்.(வரங்குறிப்பில்வைத்தவர்க்கலாது) இப்படிப்பட்டதசரதாத்மஜனுடையச்ரேஷ்டமான திருவுள்ளத்தாலேவிஷயீகரிக்கப்பட்டவர்களுக் கல்லது. ச்ரேஷ்டமாகையாவது - பரஸம்ர்த்யேக ப்ரயோஜநமா யிருக்கை. (வானமாளிலும்) ஜ்ஞாநாதிகராய் சதுர்த்தசபுவநங்களுக்கும் நிர்வாஹகரான ப்ரஹ்மாதிகளாயிருந்தாலும். (நிரம்பு நீடுபோகம்) குறைவற்று நித்யமானபோகம். அதாவது – பரமபக்தி க்ர்தமாய் பரிபூர்ணமாய்விசததமமானநித்யாநுபவம். (எத்திறத்தும் யார்க்குமில்லையே) அநந்யப்ரயோஜநர்க்குமில்லை: கர்மாத்யுபாயங்களை யநுஷ்டிக்கவுமாம், ஸித்தோபாயபரிக்ரஹம்பண்ணவுமாம், அவன் ப்ரஸாதமொழிய மோக்ஷஸித்தியில்லை. ஜ்ஞாநாதிகராய் அநந்ய ப்ரயோஜநராகவுமாம்; அகிஞ்சநராய் அநந்யப்ரயோஜந ராகவுமாம்; அவன் ப்ரஸாதமே மோக்ஷஸாதநமென்கை. விரோதிநிரஸந சீலனான தசரதாத்மஜன் ப்ரஸந்நரானார்க்கல்லது ப்ரஹ்மருத்ராதிகளுடைய அதிகாரத்திலே நின்றார்க்கும் நித்யமானமோக்ஷத்தை ப்ராபிக்க விரகில்லையென்றதாய்த்து. ... ... ... (எ௩)

அ.—எழுபத்துநாலாம்பாட்டு. ஆச்ரயணீயனுடைய ப்ரஸாதமேமோக்ஷஸாதநமாகில் முமுக்ஷுவான விவ்வதிகாரிக்கு ப்ரஸாதகமான கர்த்தவ்யமேதென்னில்; ஸ்ரீவாமநனுடைய திருவடிகளிலே தலைசாய்த்தல், க்ஷீராப்திநாதனுடைய சீலத்துக்குவாசகமான திருநாமத்தை வாயாலே சொல்லுதல் செய்யவே புருஷார்த்த ஸித்தியுண்டென்கிறார்.

அறிந்தறிந்துவாமநனடியிணைவணங்கினால்
செறிந்தெழுந்தஞானமோடுசெல்வமுஞ்சிறந்திடும்
மறிந்தெழுந்ததெண்டிரையுண்மன்னுமாலைவாழ்த்தினால்
பறிந்தெழுந்துதீவினைகள்பற்றறுதல்பான்மையே. (எ௪)

ப-ரை.—வாமநன் - தன்னுடைமை பெறுகைக்காக வாமநாவதாரம் செய்தருளினவனுடைய, அடியிணை - திருவடிகளை, சாஸ்த்ர ச்ரவணத்தாலும் ஆசார்யோப தேசத்தாலும், அறிந்தறிந்து - அவனேப்ராப்யமும் ப்ராபகமுமென்று அத்யவஸித்து, வணங்கினால் - ஆச்ரயித்தால், செறிந்தெழுந்த ஞானமோடு - "ஸர்வேச்வரனுக்கே அநந்யார்ஹசேஷம் இவ்வாத்மா" என்கிற ஜ்ஞாநத்தோடே, செல்வமும் - கைங்கர்யோபகரணமான பக்தியும், சிறந்திடும் - குறைவறவுண்டாம்; மறிந்து - பரம்பி, எழுந்த - கிளர்ந்த, தெள்-தெளிந்த, திரையுள் - அலைகளையுடைய க்ஷீராப்தியிலே, மன்னு - நித்யவாஸம் பண்ணுகிற, மாலை - ஆச்ரிதவத்ஸலனுடைய வாத்ஸல்யவாசியான திருநாமத்தை, வாழ்த்தினால் - வாயாலே சொன்னால், தீவினைகள் - பகவத்ப்ராப்தி ப்ரதிபந்தகங்களான பாபங்கள், பறிந்து - இத்தைவிட்டுப் பறிந்து, எழுந்து - மேலே கிளர்ந்து, பற்றறுதல் - வாஸநையோடேபோம்படி பண்ணுகை, பான்மை-ஸ்வபாவமேயாகுமென்கிறார். (௪)

வ்யா.—(அறிந்தறிந்து வாமநனடியிணை வணங்கினால்) தன்னுடைமையை லபிக்கைக்குத்தான் அர்த்தியாய்வந்தவன்றிருவடிகளை, "ப்ராப்யமும் ப்ராபகமு மதுவே" என்று அத்யவஸித்து, அத்திருவடிகளிலே ந்யஸ்தபரனானால். "வாமநனடியிணை" என்று-வரையாதே யெல்லார் தலையிலும் திருவடிகளை வைக்கையாலே ஸர்வஸுலபனானவன்றிருவடிகளென்றுமாம். "அறிந்தறிந்து" என்றது-சாஸ்த்ரச்ரவணத்தாலும், ஆசார்யோபதேசத்தாலு மென்றுமாம். இது "அன்று பாரளந்த பாதபோதையொன்றி" என்றுகீழ்ச்சொன்னதினுடைய விவரணம். (செறிந்தெழுந்தஞானமோடு செல்வமும் சிறந்திடும்) ப்ரத்யக்ஷ்ரவண்மாய்ஸாக்ஷாத்காரபர்யந்தமானஸர்வேச்வரனுக்கே அநந்யார்ஹசேஷபூதன் இவ்வாத்மாவென்கிற ஜ்ஞானமும், அதடியாககைங்கர்யோபகரணமான பக்தியும் குறைவறவுண்டாம். சிறப்பு—மிகுதி. இது-கைங்கர்யத்துக்கும்விரோதிநிவர்த்திக்குமுபலக்ஷணம். நிர்த்தோஷனுக்கிறேகைங்கர்யோபகரணமானபக்தியுண்டாவது. ப்ரீதிகாரிதமிறே கைங்கர்யம். "நமமாயதானே கைகூடும்" என்று வைஷ்ணவனுக்கு ஐச்வர்யம்பக்தியாகையாலே, அந்த பக்தியை இங்கு "செல்வம்" என்கிறது. (மறிந்தெழுந்து தெண்டிரையுள்மன்னுமாலைவாழ்த்தினால்) பரம்பிக்கிளர்ந்து தெளிந்ததிரைகளையுடைய க்ஷீராப்தியிலே நித்யவாஸம்பண்ணுகிற ஆச்ரிதவத்ஸலனுடைய வாத்ஸல்யவசியான திருநாமத்தைவாயாலே சொன்னால். மறிதல்-விறிதல். (பறிந்தெழுந்து தீவினைகள் பற்றறுதல்) பகவத் ப்ராப்திப்ரதிபந்தகங்களாய்ஸ்வாச்ரயத்திலே வேர் விழுந்தவைத்தை விட்டுப்பறிந்துபோய் மறுவலிடாதபடி வாஸனையோடே போம்படி பண்ணுகை. (பான்மையே) அவன் ஓரேற்றம்செய்தானாகவன்றிக்கே ப்ரக்ருதியாயிருக்கை. இதுவும் "ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" "ஸர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமி" என்கிறபடியே கைங்கர்யத்துக்கும் உபலக்ஷணம். ... ... ... (எச)

அ.—எழுபத்தஞ்சாம்பாட்டு. இப்படி அவனை ஆச்ரயித்து அவனுடைய கடாக்ஷததாலேப்ரதிபந்தகநிரஸநபூர்வகமாக அவனைப் பெறுகை யொழிய வுபாயாந்தரங்களிலே யிழிந்து ஆச்ரயிப்பாருடைய வருமையை யருளிச்செய்கிறார்-மேலேழுபாட்டாலே; இதில் முதற்பாட்டில்-கர்மயோகமேதொடங்கி பரமபக்தி பர்யந்தமாக ஸாதிக்கு மவர்களுடைய துஷ்கரதையை யருளிச்செய்கிறார்.

---

எழுபத்துநாலாம்பாட்டு. ப்ரத்யக்ஷப்ரதாநம்-ப்ரயக்ஷஸமாநாகாரம் விரோதி நிவர்த்திக்கும் உபலக்ஷணமாகவேணுமோவென்ன; அருளிச்செய்கிறார் (நிர்த்தோஷனுக்கித்யாதி) ஸ்வாச்ரயத்திலே-வினைகளானவைதன்னிருப்பிடத்திலே. போய்-அங்குமிருக்கமாட்டாமல் அவ்விடத்தையும் ஸவாஸநமாகவிட்டுப்போய். (எச)

ஒன்றிநின்றுநற்றவஞ்செய்தூழியூழிதோறெலாம்
நின்றுநின்றவன்குணங்களுள்ளியுள்ளந்தூயராய்ச்
சென்றுசென்றுதேவதேவரும்பரும்பரும்பராய்
அன்றியெங்கள்செங்கண்மாலையாவர்காணவல்லரே. (எரு)

ப - ரை.—விஷயாந்தரங்களினின்றும் மீட்டமநஸ்ஸோடே கூட, ஒன்றி நின்று - பொருந்திநின்ற, நல்தவம்செய்து-யஜ்ஞ தாந தப: கர்மங்களாகிற நல்லதபஸ்ஸுகளைப்பண்ணி, ஊழியூழிதோறெலாம் - ப்ரளயகாலங்களிலெல்லாம், நின்றுநின்றவன் - க்ரமத்தாலே பரமபாவநனான ஸர்வேச்வரனுடைய, குணங்கள் - குணங்களை, உள்ளி - அநுசந்தித்து, உள்ளம் தூயராய் - பரிசுத்தாந்த:கரணராய், சென்று சென்று-அநவரதப்ராவணையளவும் சென்று, தேவதேவர் - நித்யஸூரிகளளவிலேசெல்ல, உம்பரும்பரும்பராயன்றி - ஸோபாநக்ரமத்தாலே பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திரூபத்தாலே உதகர்ஷ்டராய்ப் பெறுவதொழிய, எங்கள் செங்கண்மாலை - எங்களுடைய புண்டரீகாக்ஷனை, யாவர்காணவல்லர் - காணவல்லாரார். (எரு)

வ்யா.—(ஒன்றிநின்று) "చఞ్చలంహిమనఃకృష్ణ" "சஞ்சலம் ஹிமந: க்ர்ஷ்ண" என்கிறபடியே விஷயாந்தரங்களிலே மண்டி அவற்றில் நின்றும் மீட்க வரிதான நெஞ்சை பகவத் விஷயத்தில் உத்தேஶ்ய புத்தியாலே மீட்ட அம்மநஸ்ஸோடேபகவத்விஷயத்திலேயொன்றி நின்று. (நற்றவம் செய்து) தபஸ்ஸென்று - "యజ్ఞేనదానేనతపసానాశకేన" "யஜ்ஞேநதாநேநதபஸாநாஶகேந" என்றும், "యజ్ఞోదానంతపఃకర్మనత్యాజ్యంకార్యమేవతత్" "யஜ்ஞோதாநம்தப:கர்மநத்யாஜ்யம்கார்யமேவதத்" என்றும்சொல்லுகிற கர்மங்களுக்கும் உபலக்ஷணம். "நற்றவம்" என்று-ஜீவபரயாதாத்ம்யஞ்ஜாநபூர்வகமாகவும்த்ரிவிதபரித்யாக பூர்வகமாகவு மநுஷ்டிக்கும் கர்மயோகத்தைச்சொல்லுகிறது. (ஊழியூழிதோறெலாம்) புதுப்புடைவையிலழுக்குக் கழற்றுமாப்போலேஅந்தகர்மத்தாலே விரோதிபாபம்போமிடத்தில் "జన్మాన్తరసహస్రేషు" "ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு" இத்யாதிப்படியேகாலதைர்க்யத்தைச்சொல்லுகிறது. (நின்றுநின்றவன்குணங்களுள்ளி) க்ரமத்தாலேபரமபாவநனா யிருந்துள்ளவனுடையகுணங்களையநுஸந்தித்து. இத்தால் - விவேகவிமோகாதிஸாதநஸப்தகங்களிலப்யாஸத்தைச் சொல்லுகிறது. க்ரமத்தாலே அநவரத பாவனையும்சொல்லுகிறது. (உள்ளந்தூயராய்) உக்தமான கர்மயோகத்தாலும் பகவத் குணாப்யாஸத்தாலும், "మనసాతువిశుద్ధేన మనసాగ్రాహ్యః" "மநஸாது விஶுத்தேநமநஸாக்ராஹ்ய:" என்றும் சொல்லுகிறபடியே பரிசுத்தாந்த:கரணராய.

---

எழுபத்தஞ்சாம்பாட்டு. அநசநேந - அநசநத்தாலே.

(சென்று சென்று) "ध्रुवानुस्मृतिः" "த்ருவாநுஸ்ம்ருதிः" என்றும், "निदिध्यासितव्यः" "நிதித்யாஸிதவ்ய:" என்றும் சொல்லுகிறபடியே க்ரமத்தாலே அநவரதபாவனையளவும்சென்று. (தேவ தேவரும்பரும்பரும்பராயன்றி) ஸூரிகளளவிலேசெல்ல ஸோபாந க்ரமத்தாலே பரபக்திபரஜ்ஞாந பரமபக்தி ரூபத்தாலே யுத்க்ருஷ்டராய்ப்பெறுவதொழிய. (எங்கள் செங்கண்மாலை)சரணாகதவத்ஸலனை புண்டரீகாக்ஷனை. "எஙகள்" என்று - மற்றுள்ள ஆழ்வார்களையுங்கூட்டிக்கொள்ளுகிறதொன்னுதல். தம்மையேபற்றிவர்த்திக்கும் சரணாகத ஸமூஹத்தைக்கூட்டிக் கொள்ளுகிறதொன்னுதல். "செங்கண்மால்" என்றது - "जितन्ते पुण्डरीकाक्ष" "ஜிதந்தே புண்டரீகாக்ஷ" என்கிறபடியே ருசியேதொடங்கி பரமபக்திபர்யந்தமாக அத்தலையில் விசேஷ கடாக்ஷத்தாலே ஸித்தியென்றுதோற்றுகைக்காக. (யாவர் காணவல்லரே) நிர்ஹேதுககடாக்ஷத்தாலேஎங்களுக்கு அவன்காட்ட நாங்கள் கண்டாப்போலே, யாவர்காணவல்லார். "உம்பரும்பரும் பராய்" என்று-மேலேமேலே போயல்லது, தேவ தேவர்-எங்கள் செங்கண்மால்" என்று கூட்டுவது ... ... (எரு)

அ.—எழுபத்தாறும்பாட்டு. த்ரவ்யார்ஜநாதிக்லேசமென்ன, பரஹிம்ஸாதிதுரிதமென்ன, இவற்றையுடைத்தாய், இந்த்ரிய வ்யாபாரரூபமான கர்மயோகத்தில் காட்டில் இந்த்ரியோபரதி ரூபமான ஞ்ஜாநயோகத்திலே ப்ரதமத்திலே இழியுமவர்களுடைய துஷ்கரதையை யருளிச்செய்கிறார.

புன்புலவழியடைத்தரக்கிலச்சினைசெய்து
நன்புலவழிதிறந்துஞானநற்சுடர்கொளீஇ
என்பிலெள்கிநெஞ்சுருகியுள்கனிந்தெழுந்ததோர்
அன்பிலன்றியாழியானையாவர்காணவல்லரே. (எசு)

ப - ரை.—புல் - க்ஷுத்ரவிஷயங்களைப்பற்றிப்போருகிற, புலம்வழி - இந்த்ரிய மார்க்கததை, அடைத்து-நிரோதித்து, அரக்கு இலச்சினைசெய்து-அரக்கு முத்திரையிட்டு, நல் - விலக்ஷணவிஷயததில, புலம்வழி - இந்தரிய மார்க்கத்தை, திறந்து - ப்ரகாசிப்பிததது, நல் - நன்றான, ஞானச்சுடர் - ஜ்ஞாநப்ரபையை, கொளீஇ - மிகவுண்டாக்கி, என்பில் எள்கி - எலும்பிலே தட்டும்படி சரீரம் சிதிலமாய், நெஞ்சு உருகி - மநஸ்தத்வம் த்ரவீபூதமாய், உள்கனிந்து-உள்ளே பக்வமாய், எழுநததோர் - பக்திரூபேண ஆவிர்ப்பூதமான, அன்பிலன்றி- ப்ரேமத்தாலல்லது, ஆழியானை - திருவாழியைத்திருக்கையிலே யுடையனான ஸர்வேச்வரனை, யாவர்காணவல்லர் - காணவல்லாரார். (எசு)

---

(ஸூரிகளளவிலே)அவர்களுடையஅஜ்ஞாநத்தையுடையராக. "உம்பர்உம்பர்"என்று-மேலேமேலேபராபக்த்யாதிகளையுடையராய்.

வ்யா.—(புன்புலவழியடைத்து) க்ஷுத்ரவிஷயங்களைப் பற்றிப் போருகிற இந்த்ரியமார்க்கத்தை நிரோதித்து. விஷயங்களுக்குப் புல்லிமையாவது - அல்பமாய் அஸ்திரமாய் அபோக்யமாயிருக்கையும், வருத்தவிஷயத்திலே வைமுக்யத்தைப் பண்ணுகையும். தத்விஷயமான இந்த்ரியபதத்தைநிரோதிக்கையாவது-விஷயங்களிலே சாபலத்தைப் பண்ணி சேதநனையும் தன்வழியிலே ஆகர்ஷிக்கும் இந்த்ரியங்களை ப்ரத்யாஹாரத்தாலே மீட்கை.(அரக்கிலச்சினை செய்து) சப்தாதிவிஷயங்களினுடைய க்ஷுத்ரதையை யநுஸந்தித்து வாஸனையு மநுவர்த்தியாதபடி பண்ணி. "[Grantha script] [Grantha script]" "பலவாநிந்த்ரியக்ராமோ வித்வாம்ஸமபிகர்ஷதி" என்று ஜ்ஞாநாதிகர்களையும் வாஸனைநலியுமிறே; அதுவும்பிறவாதபடி பண்ணி. (நன்புலவழிதிறந்து) விலக்ஷணவிஷயத்தில் இந்த்ரியமார்க்கத்தை ப்ரகாஶிப்பித்து. இவ்வாத்மாவுக்கு ப்ராப்தமாய் "[Grantha script]" "ஸாஸாகம்கர்த்தும்" என்கிறபடியே ஸாதநவேளையேதொடங்கி ரஸிக்கும் பகவத்விஷயமே இந்த்ரியங்களுக்கு விஷயமாக்கியென்கை.(ஞானநற்சுடர்கொளீஇ)நன்றானஜ்ஞாநப்ரபையை மிகவுமுண்டாக்கி. ஈச்வரனுடைய ஸ்வரூபரூபகுண விபூதிகளை ஸ்வஞ்ஜாநத்துக்கு விஷயமாம்படி. பண்ணி.

(என்பிலெள்கி) எலும்பிலே தட்ட சரீரம் சிதிலமாய். எள்கல் - இறங்கல். (நெஞ்சுருகி) மநஸ்தத்வம்த்ரவீபூதமாய். கீழ்ச் சொன்ன ஜ்ஞாநம் பரபக்த்ய வஸ்தமாம்படி வாஸனைபண்ணி. (உள்கனிந்தெழுநததோரன்பிலன்றி)உள்ளே பக்வமாய்,பரமபக்திரூபேண ஆவிர்ப்பூதமானப்ரேமத்தாலேயல்லது பெறவிரகில்லை. (ஆழியானையாவர்காணவல்லரே)"எங்கள்செங்கண்மால்" என்று-கீழ்ச் சொன்ன ஸ்தாநத்திலே "ஆழியானை" என்கிறார். "கைகழலாநேமியான் நம்மேல் வினைகடிவான்" என்கிறபடியே விஷயாந்தரப்ராவண்ய ஹேதுவான பாபததையும் பகவத்வைமுக்யஹேதுவாயிருந்துள்ள பாபத்தையும் கையில் திருவாழியாலே இருதுண்டமாக வெட்டி, கையும்திருவாழியும்சேர்ந்தசேர்த்தியைக்காட்டிஸ்வவிஷயமான பக்தியை வர்த்திப்பித்தவனை நான்கண்டாப்போலே யாவர் காணவல்லார். இந்த்ரியஙகளுக்கு விஷயாந்தர ப்ராவண்யத்தைத்தவிர்த்து,பகவத்விஷயமே விஷயமாக்கி,தத்விஷயஜ்ஞாநம்பக்திரூபாபந்நஞ்ஜாநமாய்,அதுபரபக்த்யாதிகளாய்ப் பழுத்தாலல்லதுஸர்வேச்வரனை லபிக்கவிரகில்லையாய்த்து. ... ... (எகூ)

அ.— எழுபத்தாறும்பாட்டு. பகவத்ஜ்ஞாநம் - பகவாந்சரீரி, ஜகத்துசரீரம் என்கிறஜ்ஞாநம்.

அ.—எழுபத்தேழாம்பாட்டு. கர்மஜ்ஞாநங்களை ஸஹகாரமாகக்கொண்டுப்ரவர்த்தமான பக்தியாலே பகவல்லாபத்தைச்சொல்லிற்று-கீழ்; ஸர்வாந்தர்யாமியாய் ஜகத்காரணபூதனை ஸர்வேஶ்வரனை அஷ்டாங்க ப்ரணமம்முன்னாகத்திருமந்த்ரத்தைக்கொண்டுபஜிக்குமவர்கள் இட்ட வழக்கு பரமபதமென்கிறார். இப்பாட்டுமுதலாக இதிஹாஸபுராணப்ரக்ரியையாலே பகவத்பஜநத்தை அருளிச்செய்கிறார்.

எட்டுமெட்டுமெட்டுமாயொரேழுமேழுமேழுமாய்
எட்டுமூன்றுமொன்றுமாகிநின்றவாதிதேவனை
எட்டினாயபேதமோடிறைஞ்சிநின்றவன்பெயர்
எட்டெழுத்துமோதுவார்கள்வல்லர்வானமாளவே. (௭௭)

ப-ரை.—எட்டுமெட்டுமெட்டுமாய்-இருபத்துநாலு தத்வங்களுக்கும் அந்தராத்மாவாய் நின்று ஸத்தையை நோக்குமவனாய், ஏழும்-ஸப்த த்வீபங்களுக்கும், அவற்றுக்காதாரமான, ஏழும்-ஸப்தகுலபர்வதங்களுக்கும், அந்த த்வீபங்களுக்கு அவச்சேதகங்களான, ஏழுமாய்-ஸப்தஸமுத்ரங்களுமாய், எட்டு மூன்றுமொன்றுமாகி நின்ற - த்வாதசாதித்யர்களுக்கும் அந்தராத்மாவாய் நின்ற, ஆதிதேவனை - ஸர்வஸமாச்ரயணீயனானவனை, எட்டினாயபேதமோடு இறைஞ்சி - அஷ்டாங்கப்ரணமத்தைப்பண்ணி, நின்று - அவ்வழியாலே ஆச்ரயித்து நின்று, அவன்பெயர் எட்டெழுத்து - அவன திருநாமமான திருவஷ்டாக்ஷரத்தை, ஓதுவார்கள்-வாயாலே உச்சரிக்குமவர்கள், வானமாள வல்லர் - பரமபதத்தைத் தாங்களிட்டவழக்காம்படி நிர்வஹிக்க ஸமர்த்தராவர்கள். (௭௭)

வ்யா.—(எட்டுமெட்டுமெட்டுமாய்) சதுர்விம்ஶதி தத்வங்களுக்கு மாத்மாவாய் நின்று ஸத்தையை நோக்குமவன். இந்த ஸாமாநாதிகரண்யம் சரீராத்ம பாவத்தாலே சொல்லுகிறது. இத்தால்-அண்டகாரணமானப்ராக்ருதஸ்ருஷ்டியைச்சொல்லுகிறது. (ஒரேழுமேழுமேழுமாய்)ஸப்தத்வீபங்களும், அவற்றுக்குதாரகமானஸப்தகுலபர்வதங்களும்,அந்தத்வீபங்களுக்கு அவச்சேதகங்களானஸப்தஸமுத்ரங்களுமாய். அண்டாந்தர்வர்த்திகளான ஸகலலோகங்களுக்குமுபலக்ஷணம். ஸ்தலசரராயும் ஜலசரராயும்பார்வதேயருமானசேதநரை நினைக்கிறது.(எட்டுமூன்றுமொன்றுமாகிநின்ற)த்வாதசாதித்யர்களுக்கும்அந்தராத்மாவாய்நின்ற. இது-ஆராத்ய தேவதைகளுக்குமுபலக்ஷணம். “[illegible]” “அக்நௌப்ராஸ்தாஹுதி ஸம்யக்.” (ஆதிதேவனே) ஸூக்ஷ்ம சிதசித்வஸ்து சரீரனாயும் ஸ்தூலசிதசித்வஸ்துசரீரனாயும்காரியகாரண மிரண்டுமாய்க்கொண்டு ஸர்வஸமாச்ரயணீயனானவனை.

(எட்டினாயபேதமோடிறைஞ்சிநின்று) அஷ்டாங்க ப்ரணமத்தைப்பண்ணி அம்முகத்தாலே ஆச்ரயித்து நின்று. ப்ரணமத்துக்கு

அஷ்டாங்கதையாவது - பக்நாபிமாநியாய் விழுகையும், மநோ புத்திகளுக்கு ஈச்வரனே விஷயமாகையும், பதத்வயகரவயங்களும் கூர்மவத்பூமியிலே பொருந்துகையும். "మనోబుద్ధ్యభిమానేన సహన్యస్యధరాతలే । కూర్మవచ్చతురఃపాదాన్ శిరస్తత్రైవపఞ్చమమ్" "மநோ புத்த்யபிமாநேந ஸஹந்யஸ்யதராதலே । கூர்மவத்சதுர:பாதாந் ஶிரஸ்தத்ரைவபஞ்சமம்" என்னக்கடவதிறே. (அவன்பெய ரெட்டெழுத்து மோதுவார்கள்) கீழ்ச்சொன்னஜகதந்தராத்மபாவத்துக்குவாசகமானமந்த்ராந்தரங்களிற்காட்டில் திருவஷ்டாக்ஷரத்தை வாயாலே உச்சரிக்குமவர்கள். (வல்லர்வானமாளவே) அர்த்தத்தை மநஸ்ஸாலெ அநுஸந்தித்தும், வாயாலேசப்தத்தை யுச்சரித்தும், சாரீரமானப்ரணாமத்தை பண்ணியும், இப்படிமநோவாக்காயங்களாலே பஜிக்குமவர்கள்இட்ட வழக்கு பரமபதமென்கை. "ఆపోనారాఇతిప్రోక్తాః" "ஆபோநாரா இதிப்ரோக்தா:" என்றும், "నరాజ్జాతానితత్త్వాని" "நராஜ்ஜாதாநிதத்த்வாநி" என்றும்-ஜகத்காரணவஸ்துவை நாராயணனென்னக்கடவதிறே ... ... ... (எஎ)

அ.—எழுபத்தெட்டாம்பாட்டு. உபாஸநத்துக்கு சுபாச்ரயம் வேண்டாவோ வென்ன; கார்யரூபமான ஜகத்திலே ஆச்ரிதார்த்தமாக வந்து கண்வளர்ந்தருளுகிற க்ஷீராப்திநாதனை சுபாச்ரயமாகப்பற்றி மந்த்ர ரஹஸ்யத்தாலேமுறையறிந்து ஆச்ரயித்து இடைவிடாத ப்ரேமத்தையுடையரா யிருக்குமவர்கள் பரமபதத்தையாளுகை நிம்சிதமென்கிறார்.

சோர்விலாதகாதலால்தொடக்கறுமநத்தராய்
நீரராவணைக்கிடந்தநின்மலன் நலங்கழல்
ஆர்வமோடிறைஞ்சிநின்றவன்பெயரெட்டெழுத்தும்
வாரமாகவோதுவார்கள்வல்லர்வானமாளவே. (எஅ)

ப - ரை.—சோர்விலாத - விஷயாந்தரங்களால் அபஹார்தமாகாத, காதலால்-ஆசையாலே, பகவத ஸமர்த்திமாறாதே செல்லுகையாலே, தொடக்கறு-விச்சேதமில்லாத, மநத்தராய் - மநஸ்ஸையுடையராய், நீர் - க்ஷீராப்தியிலே, அராவணை-திருவநந்தாழ்வானமேலே, கிடந்த-கண்வளர்ந்தருளுமவனாய், பஜநவிரோதிகளைப்போக்கும், நின்மலன்-ஹேயப்ரத்யநீகனுடைய, நலங்கழல்-ருசிஜநகமான திருவடிகளை, ஆர்வமோடு - ப்ரேமயுக்தனாய்க்கொண்டு, இறைஞ்சிநின்று - ஆச்ரயித்து நின்று, அவன்பெயர் - அவன் திருநாமமான, எட்டெழுத்தும் - திருவஷ்டாக்ஷரத்தையும், வாரமாக ஓதுவாகள் - அன்பினாலே சொல்லுமவர்கள், வானமாளவல்லர் - பரமபதத்துக்கு நிர்வாஹகராகைக்கு ஸமர்த்தராவ ரென்கிறார். (எஅ)

---

எழுபத்தேழாம்பாட்டு. (கரத்வயங்களும்) சிரஸ்ஸுமென்று கூட்டுவது. ... ... ... ... (எஎ)

வ்யா.—(சோர்விலாதகாதலால்) ஸர்வகாலமும் விஷயாந்தரங்களால் அபஹ்ர்தமாகாத ப்ரேமத்தை யுடையராகையாலே. அதாவது - ப்ரேமாதிசயத்தாலே தத்ஸம்ச்லேஷ விச்லேஷஸுகதுக்கராகை. (தொடக்கறுமநத்தராய்) பகவத்ஸ்ம்ர்தி ஸந்ததிரூபேணச் செல்லாநின்றால் விச்சேதமில்லாத நெஞ்சையுடையராய். "ஸத்த்வஶுத்தௌ த்ருவாஸ்ம்ருதி:" "ஸ்ம்ருதிலம்பே ஸர்வக்ரந்தீனாம் விப்ரமோக்ஷ:" "ஸத்வஶுத்தௌ த்ருவாஸ்ம்ர்தி:" "ஸ்ம்ர்திலம்பேஸர்வக்ரந்தீநாம்விப்ரமோக்ஷ:" என்கிற வளவைச் சொல்லுகிறது. (நீரரவணைக்கிடந்த நின்மலன்நலங்கழல்) இப்படி ப்ரேமத்தை விளைக்கும் விலக்ஷணவிஷயமான சுபாச்ரயத்தைச் சொல்லுகிறது. (நீரரவணைக்கிடந்த) க்ஷீராப்தியிலே திருவனந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளுகிற. இத்தால் - நீருறுத்தாமைக்கு அதின்மேலே திருவனந்தாழ்வானைப் படுக்கையாகவுடையனுகையாலே ஸௌகுமார்யமும், ஆச்ரித ஸம்ச்லேஷைக ஸ்வபாவதவமும், அர்த்தித்வநிரபேக்ஷமாக ஆச்ரிதாநுக்ரஹத்தாலே கண்வளர்ந்தருளுகையாலே ஸௌலப்யாதிகளையும் சொல்லுகிறது. (நின்மலன் நலங்கழல்) பஜநவிரோதிபாபங்களைப் போக்கும் ஹேயப்ரத்யநீகனுடைய ருசிஜநகமான திருவடிகளை.

(ஆர்வமோடிறைஞ்சிநின்று) ப்ரேமயுக்தராய்க்கொண்டு ஆச்ரயித்துநின்று. இத்தால்-"நாஸ்த்யக்ருத: க்ருதேந" "நாஸ்த்ய க்ர்த:க்ர்தேந" என்கிறபடியே ஸம்ஸாரம் அநித்யம், ஈச்வரன்நித்யன்என்று ஆச்ரயிக்குமளவன்றியே, நிரதிசயபோக்யனென்கிறப்ரேமத்தாலே யாச்ரயிக்கை.(அவன்பெய ரெட்டெழுத்தும்) க்ஷீராப்திநாதன்திருநாமமான திருவஷ்டாக்ஷரத்தையும். "ஏஷ நாராயண: ஶ்ரீமாந்" "ஏஷ நாராயணஶ்ஶ்ரீமாந்" என்றும், "நாராயணனே நமக்கே பறைதருவான்" என்றும், "பவாந்நாராயணோ தேவ:" "பவாந்நாராயணோதேவ:" என்றும் - தீர்மிபுக்க விடமெங்கும் இத்திருநாமம் ப்ரதமாபிதாநமா யிருக்குமென்கை. (வாரமாக வோதுவார்கள் வல்லர் வானமாளவே) "நமோ நாராயணாயேதி மந்த்ரஸ்ஸர்வார்த்தஸாதக:" "நமோநாராயணாயேதிமந்த்ராக ஸரணவயம்" என்கிறபடியே தந்நிஷ்டராய்க்கொண்டு சொல்லுமவர்கள், பரமபதத்துக்கு நிர்வாஹகராக வல்லரென்கிறார்.

அ.— எழுபத்தெட்டாம்பாட்டு. "நாராயணன்" என்கிற திருநாமம்பரத்திலேயன்றோ, க்ஷீராப்திநாதனுக்கு வாசகமோவென்ன; அருளிச்செய்கிறார் (ஏஷ நாராயண: ஶ்ரீமாந் - ஏஷநாராயணஶ்ஶ்ரீமானித்யாதி.) ... ... ... (எஅ)

நீராரவணைக்கிடந்தநின்மலன் நலங்கழல் ஆர்வமோடிறைஞ்சி நின்று - சோர்விலாத காதலால் துடக்கறு மனத்தராய் - அவன் பெயரெட்டெழுத்தும் வாரமாக வோதுவார்கள் வல்லர்வானமாளவே'' என்றந்வயம் ... ... ... ... (எஅ)

அ.—எழுபத்தொன்பதாம்பாட்டு. ச்வேதத்வீப வாஸிகளை யொழிந்த ஸம்ஸாரிகளுக்கு அதுநிலமோவென்ன; அவதாரகந்தமானக்ஷீராப்தியில்நின்றும் தன்மேன்மை பாராதே தஸப்ராதுர்ப்பாவத்தைப் பண்ணி ஸுலபனுன வன்றிருவடிகளிலே அவதாரரஹஸ்ய ஜ்ஞாந மடியான பக்தியையுடையவர்களுக்கல்லது முக்தராகவிரகுண்டோவென்கிறுர்.

பத்திஞேடுபத்துமாயோரேழிஞேடொரொன்பதாய்
பத்திஞன்றிசைக்கணின்றநாடுபெற்றநன்மையாய்ப்
பத்திஞயதோற்றமோடோராற்றன்மிக்கவாதிபால்
பத்தராமவர்க்கலாதுமுத்திமுற்றலாகுமே. (எகூ)

ப - ரை.—பத்திஞேடு - பத்துதிக்குக்களுக்கும், அத்திக்குக்களிலே வஸிக்கிற, பத்துமாய் - தசாத்யக்ஷருக்கும் நிர்வாஹகனுய, ஓர் - அத்விதீயமான, ஏழிஞேடு - ஸப்தஸ்வரங்களுக்கும், ஒன்பதாய் - நாட்யரஸமொன்பதுக்கும நிர்வாஹகனுய், பத்திஞன்றிசைகளை நின்றநாடு - பதினுன்கு வகைப்பட்ட லோகங்களுக்கு, பெற்ற - ப்ரயோஜநமான, நன்மை - சப்தாதிவிஷயங்களெல்லாம், ஆய் - தான் ஆனகைக்காக, பத்திஞயதோற்றமோடு - தசாவதாரஞ்செயதருளி, ஸம்ஸாரிகளபண்ணும, ஓர்-அத்விதீயமான, ஆற்றல்மிக்க-பரிபவத்தைப்பொறுத்தருளக்கூடிய மிக்கக்ஷமையையுடையனுய, ஸம்ஸாரிகள ருசிபிறந்தவனறு ஆச்ரயிக்கைக்காக, ஆதிபால் - முனைமே அவதரிக்கிற நிறபவன விஷயத்தில், அவ்வளபண்ணின உபகாரத்தையறிந்து, பத்தராமவர்க்கலாது - பக்தராயவர்களுக்கலலது, முத்திமுற்றலாகுமே - மோக்ஷபதமபெறக்கூடுமோ.()

வ்யா.—(பத்திஞேடுபத்துமாய) தஸதிக்குக்களுக்கும், அத்திக்குக்களிலே வ்யவஸ்திதரான தஸாத்யக்ஷருக்கும் நிர்வாஹகராய. அவர்களாகிறுர் - இந்த்ராதி திக்பாலகர்களென் மறும், ஊர்த்வலோகங்களுக்கு மேலெல்லையான ஸத்யலோகத்துக்கு நிர்வாஹகனுன ப்ரஹ்மாவுக்கும், அதோலோகத்துக்குக் கீழெல்லையிலேதாரகனுன அநந்தனுக்கும். (ஓரேழிஞேடொரொன்பதாய) அத்விதீயமான ஸப்தஸ்வரமும, நாட்யரஸமொன்பதும. அவையாவன-இசைகளேழும், "నిషాదర్షభ గాన్ధార షడ్జమధ్యమధైవతాః। పఞ్చమశ్చేత్యమీ సప్త" "நிஷாதர்ஷபகாந்தார ஷட்ஜமத்யமதைவதா, । பஞ்சமஶ்சேத்யமீ ஸப்த'' என்கிறபடியே "శృఙ్గారహాస్యకరుణా వీరరౌద్రభయానకాః। బీభత్సాద్భుతశాన్తాశ్చ నవ నాట్యరసాః స్మృతాః" "ஶ்ருங்கார ஹாஸ்யகருணவீரரௌத்ரபயாநகா:। பீபத்ஸாத்புதஶாந்தாஶ்ச நவநாட்யரஸாஸ்ஸ்ம்ருதா:'' என்கிறபடியே நாட்யரஸங்களும், இவை சப்தாதிவிஷயங்களுக்கு

ரூபலக்ஷணம். இத்தால்-கீழ்ச்சொன்ன தசாத்யக்ஷரோடு அவர்களுக்கு நிர்வாஹகரான சேதநரோடு வாசியற எல்லார்க்கும் போக்யமான சப்தாதிகளுக்கும் நிர்வாஹகனென்கை. (பத்தினான் திசைக்கணின்றநாடுபெற்றநன்மையாய) பதினாலுவகைப்பட்டிருந்துள்ள லோகங்களுக்கு ப்ரயோஜநமான சப்தாதிவிஷயங்களெல்லாம் அவர்களுக்குத் தானேயாகைக்காக, "ఏషాదిక్" "ஏஷாதிக்" என்கிறபடியே, "திசை" என்று-ப்ரகாரவாசி. "பத்தினான் திசைக்கணின்றநாடு" என்று - "பத்தினோடுபத்துமாய்" என்கிறவிடத்தை யநுபாஷிக்கிறார். "பெற்றநன்மை" என்று-"ஏழினோடோரொன்பதாய்" என்றவிடத்தை யநுபாஷிக்கிறார். "ஆய்" என்று - ஆகைக்காக வென்றபடி. "உயிர்முதலா முற்றுமாய" என்னக்கடவதிறே. "సర్వరసః" "ஸர்வரஸ:" என்கிற தானே சேதநர்க்கு போக்யனாகைக்காக வென்கை.

(பத்தினாயதோற்றமோடோராற்றல்மிக்க வாதிபால்) தசப்ராதுர்ப்பாவத்தாலே யாவிர்ப்பவித்து, ஸம்ஸாரிகள பண்ணும் பரிபவத்தைப் பொறுத்து ரக்ஷிக்கும் பூர்வஜன்பக்கலிலே. தோற்றமாவது - அதிந்த்ரியனான தன்னை சக்ஷுர்விஷயமாக்குகை. ஆற்றல்-பொறை. பூர்வஜனாகையாவது - ஸம்ஸாரிகளுக்கு ருசிபிறந்தவன்று ஆச்ரயணீயரானநாம் தூரஸ்தராகவொண்ணாதென்று ஏற்கவே யவதரித்து நிற்கை. (பத்தராமவர்க்கலாது) "జన్మకర్మ చ మే దివ్యమేవం యో వేత్తి తత్త్వతః" "ஜந்மகர்மசமேதிவ்யமேவம்யோவேத்திதத்வத:" என்கிறபடியே அவன்பண்ணின உபகாரத்தை உள்ளபடி அறிந்து அதிலே லக்தராயிருக்குமவர்களுக்கல்லது. (முத்திமுற்றலாகுமே) மோக்ஷபலம்பக்வமாகைக்கு விரகில்லை. "త్యక్త్వా దేహం పునర్జన్మ నైతి మామేతి" "த்யக்த்வாதேஹம்புநர்ஜந்மநைதிமாமேதி" என்கிறபடியே விரோதிநிவ்ருத்திபூர்வகமான பகவல்லாபமுண்டாக விரகில்லையென்கிறார்.

அ.—எண்பதாம்பாட்டு. அவதார ரஹஸ்யஜ்ஞாந மடியான ப்ரேமம் மோக்ஷஸாதநமென்றது - கீழ்; இதில் - அவதாரவிசேஷமான க்ர்ஷ்ணனுடைய ஆச்ரிதவிரோதி நிரஸநசீலத்தை அநுவதித்து, அவன்றிருவடிகளிலே ஆசையுடையார்க்கல்லது நித்யஸூரிகளோடு ஒருகோவையாய் அநுபவிக்கைக்கு விரகில்லையென்கிறார்.

---

அ.— எழுபத்தொன்பதாமபாட்டு. ப்ரகாரவாசி யென்று-பத்துதிக்கோடே கூடியிருக்கையாலே பத்துவகைப்பட்டலோகமென்றபடி. பதினாலுலோகமும் பத்துதிக்கிலே அந்தர்ப்பூதமாகையாலே அநுபாஷிக்கிறது. (முற்றலாகும்) முற்றல் - பலமாய், "ஆகுமே" என்கிறஸ்வரத்தாலே - பலியாதென்றபடி. ... ... (எகூ)

வாசியாகிநேசமின்றிவந்தெதிர்ந்ததேனுகன்
நாசமாகிநாளுலப்பநன்மைசேர்பனங்கனிக்கு
வீசிமேனிமிர்ந்ததோளினில்லையாக்கினாய்கழற்
காசையாமவர்க்கலாலமரராகலாகுமே. (அ0)

ப-ரை.—நன்மைசேர் - அழகிதான, பனங்கனிக்கு-பனம்பழம் உதிருகைக் கீடாக, வாசியாகி - வாஜிவேஷத்தையுடையனாய், நேசமின்றி-ஆபிமுக்யத்தை யன்றிக்கே, வந்தெதிர்ந்த - வந்தெதிர்த்த, தேனுகன் - தேனுகாஸுரனை, நாச மாகி-மர்தப்ராயனாக்கி, நாள் உலப்ப - ஆயுஸ்ஸு முடிக்கைக்காக, வீசி - சுற்றி யெறிந்து, அத்தாலே, மேல்நிமிர்ந்த-எதிரியைக்காட்டிலும்விஞ்சின,தோள்-தோள்வலியாலே, இல்லையாக்கினாய் கழற்கு - அவனையழியச்செய்த வுனதிரு வடிகளிலே, ஆசையாமவர்க்கலால் - ப்ரேமமுடையார்க்கல்லது, அமரராகலா குமே-நித்யஸூரிகளோடு ஸதர்சராய் தேவரீரை யநுபவிக்கப்போமோ. (அ0)

வ்யா.—(வாசியாகிநேசமின்றி வந்தெதிர்ந்த தேனுகன்) கால யவநாதிகளைப்போலே ஸ்வரூபேண வந்து தோற்றாமே வாஜிவேஷத்திலேவந்து தோற்றினாய்த்து - க்ர்ஷ்ணன் அவதாரம்பண்ணி மேல்விழுகைக்காக. நேசமின்றி வருகையாவது - "மருண்டுமான்க ணங்கள் மெய்கைமறந்து மேய்ந்தபுல்லும் கடைவாய்வழிசோர" என்று க்ர்ஷ்ணசேஷ்டிதங்களாலே திர்யக்குக்களும் ப்ரேமபரவச மாய்ச்செல்லாநிற்க, துஷ்ப்ரக்ர்தியாகையாலே அத்துறையி லிழியா தொழிகை. எதிர்ந்துவருகையாவது - ஆதரமில்லையானாலு முபே க்ஷகனாகலாமிறே; அதுவுமின்றிக்கே ப்ரதிகூலனாய்வருகை. (நாசமாகி நாளுலப்ப) இப்படிப்பட்டதேநுகனை மர்தப்ராயனாக்கி ஆயுஸ்ஸை முடிக்கைக்காக. நாசம் - துன்பம். (நன்மைசேர்பனங்கனிக்கு வீசி) தர்ஶநீயமாய்ப்பழுத்துநின்ற பனம்பழமுதிரும்படி, பனைத்த லையிலே சுழற்றியெறிந்து. "[Telugu-script Sanskrit quotation, partly illegible] | [illegible] | [illegible]" "க்ர்ஹீத்வாபாமனேனைவஸோ ம்பரோகதஜீவிதம் | தஸ்மிந்நேவஸமிக்ஷேப தேநுகந்த்ர்ணராஜநி | ததஃபலாந்யநேகாநிதாலாக்ராந்நிபதந்கரஃ | ப்ர்திவ்யாம்பாதயாமா ஸமஹாவாதோகநாநிவ" என்னக்கடவதிறே.

(மேல்நிமிர்ந்ததோளினில்லையாக்கினாய்கழற்கு) எதிரியளவன் றிக்கே விஞ்சினதோள்வலியாலே அவனையழியச்செய்த உன்திரு வடிகளுக்கு ஸங்கல்பத்தாலே யழித்தல், ஆயுதத்தாலேயழித்தலன் றிக்கே, கைதொட்டுத் தோள்வலியாலே யழியச்செய்தபடி. (ஆசை யாமவர்க்கலாலமரராகலாகுமே) உன்னுடைய விரோதி நிரஸந ஶீலதையை யநுஸந்தித்து உன்பக்கலிலே ப்ரேமமுடையார்க் கல்லது நித்யஸூரிகளோடு ஸதர்சராய் தேவரீரை யநுபவிக்கப் போமோ வென்கிறார். ... ... ... (அ0)

அ.—எண்பத்தோராம்பாட்டு. வ்யூஹவிபவங்கள் தேசகால விப்ரக்ர்ஷ்டத்தாலே நிலமன்றென்ன வேண்டாதபடி பிற்பாடரிழவாமைக்குத் திருமலையிலேவந்து நின்றருளினான், அவன் திருவடிகளையாச்ரயித்து உஜ்ஜீவிக்கப் பாருங்கோளென்று உபதேசத்தைத் தலைக்கட்டுகிறார்.

கடைந்தபாற்கடற்கிடந்துகாலநேமியைக்கடிந்
துடைந்தவாலிதந்தனுக்குதவவந்திராமனாய்
மிடைந்தவேழ்மரங்களுமடங்கவெய்துவேங்கடம்
அடைந்தமாலபாதமேயடைந்துநாளுமுய்ம்மினோ. (அக)

ப-ரை.—தூர்வாஸச்சாபத்தாலே ப்ரஷ்டைச்வர்யனான இந்த்ரனுக்கு ஐராவதம் கல்பகவ்ர்க்ஷம் முதலியவற்றை யுண்டாக்கிக் கொடுக்கைக்காக, கடைந்தருளின, பாற்கடல்-க்ஷீராப்தியிலே, ஆச்ரிதரக்ஷணத்துக்காக, கிடந்து-கண்வளர்ந்தருளியும், அத்தேவதைகளை புஜபலத்தாலே நலிந்த, காலநேமியை-காலநேமியாகிற அஸுரனை, கடிந்து-வென்று, உடைந்த - பகைமீளப்பெறாத நாம் என்னராஜ்யம்பண்ணுகிறோமென்று நெஞ்சழிந்த, வாலிதந்தனுக்கு-உதவ, வாலியின் தம்பியாகிய மஹாராஜருக்குண்டான ஆபத்தைத் தீர்க்கைக்காக, இராமனாய்வந்து - சக்ரவர்த்தித்திருமகனாய்த்திருவவதரித்து, மிடைந்த-இலக்குக்குறிக்கவொண்ணாதபடி நெருங்கிநிற்கிற, ஏழ்மரங்களும் - மராமரங்களேழையும், அடங்க-கிரிரஸாதலங்களையுமடைய, எய்து-துளைத்து, வேங்கடம் அடைந்த-திருமலையை ஆச்ரயித்துநிற்கிற, மாலபாதமே-வ்யாமுக்தனுடைய திருவடிகளையே, அடைந்து-அநந்யப்ரயோஜநராய் ஆச்ரயித்து, நாளும்-நாள்தோறும்-உய்ம்மின-உஜ்ஜீவிக்கப்பாருங்கோள். (அ)

வ்யா.—(கடைந்தபாற்கடல்கிடந்து) தூர்வாஸச்சாபத்தாலே இந்த்ராதிகளுக்குவந்த ஆபத்தை, கடலைக்கடைந்து பரிஹரித்து, இன்னம் ஆபத்துக்களிலே ப்ரஹ்மாதிகள் வந்தபேக்ஷிக்கலாம்படி அதிலே கண்வளர்ந்தருளி. (காலநேமியைக்கடிந்து) அத்தேவதைகளை புஜபலத்தாலே நலிந்தகாலநேமியாகிற அஸுரனைவென்று. கடத்தல் - வெற்றி. (உடைந்தவாலிதந்தனுக்குதவவந்திராமனாய்) வலியாலேயுடைந்த தம்பி தனக்கு. (தன்தம்பி) ப்ரம்ஹாதிகளளவல்லாத திர்யக்குக்களுடைய ரக்ஷணத்துக்காக சக்ரவர்த்தித்திருமகனாய் வந்தவதரித்து. தேவதாந்தர ஸ்பர்சத்தாலே ஸ்வரூபமழிந்தவாலிக்கு, “ராமபாணாஸநக்ஷிப்த மாவஹத்பரமாங்கதிம்” “ராமபாணாஸநக்ஷிப்த மாவஹத்பரமாங்கதிம்” என்கிறபடியே ஸ்வஹஸ்தவதத்தாலே மோக்ஷப்ரதனாகைக்காக தசரதாத்மஜனாய்வந்து. உடைதல் - அழிதல். அதவா, தனக்கு துஷ்ப்ராபமான ரிச்யமூகத்திலே பகையான மஹாராஜரிருக்கையாலே, “பகைமீளப்பெறாத நாம் என்னராஜ்யம் பண்ணுகிறோம்” என்று நெஞ்சழிந்தவாலியாலே மஹாராஜர்க்குப் பிறந்த ஆபத்தைத் தீர்க்கைக்காக வந்தென்றுமாம்.

(உடைந்தவாலிதந்தனுக்கு) "(தம்பிதனக்கு) மவ்வுக்கு ந ஆதேசமாய், 'தம்பி'என்றதனை 'தந்' என்று கடைக்குறைத்த லாய்க் கிடக்கிறது" என்று ஒருதமிழன்.

(மிடைந்தவேழ்மரங்களுமடங்கவெய்து) ஆபத்திலே ரக்ஷிக் கவரக்கொண்டு ரக்ஷணத்திலே அதிசங்கைபண்ணின மஹாராஜர் விச்வஸிக்கைக்காக இலக்குக்குறிக்கவொண்ணாதபடி மிடைந்துநிற் கிற மராமரங்களேழையும், அநுக்தமான கிரிரஸாதலங்களேழை யுமடங்கத்துளைத்து. வாலி, ஸ்வபலபரீக்ஷைபண்ணுவது ஒரு மரா மரத்தளவிலேயாயிருக்க, மஹாராஜருடைய வதிசங்கையை ஸவா ஸநமாகப் போக்குகைக்காக ஏழென்று பேர்பெற்றதடைய எய்தா ராய்த்து. (வேங்கடமடைந்த மாலபாதமே யடைந்து) ப்ரயோஜ நாந்தரபரர்க்கு முகங்கொடுத்த சீலமும், அவதாரத்தில தாழ்ந்தார் க்குமுகங்கொடுத்தசீலமும், பிற்பாடரானவர்க ளிழவாமைக்குத் திருமலையை யாச்ரயித்துநிற்கிற வ்யாமுக்தன்திருவடிகளை அநந்ய ப்ரயோஜநரா யாச்ரயித்து நாளுமுய்மினோ. "நாளும்-அடைந்துய் மின்" என்றுமாம. கைங்கர்யமென்றும் உஜ்ஜீவநமென்றும்-பர்யா யம். "சுடரடிதொழுதெழு" என்னக்கடவதிறே. ஆச்ரிதர்க்குத் திருவேங்கடமுடையான்திருவடிகளே ஆச்ரயணீயஸ்தலம்; திரு வேங்கடமுடையானுக்கு ஆச்ரயணீயஸ்தலம் திருமலே. (அக)

அ.—எண்பத்திரண்டாம்பாட்டு. இதுக்கு முன்பு பரோபதே சம்பண்ணினராய், மேல் ஈச்வரனைக்குறித்து தேவரீர்திருவடிகளி லே ப்ரேமயுக்தர் நித்யஸுகிகளென்கிறார். இதுக்கடி-பிறர்க்கு ஸாத நமாகத் தாமுபதேசித்தபக்தி தமக்கு ஸ்வயம் ப்ரயோஜநமாகையா லே, தமக்கு ரஸித்தபடியைப் பேசுகிறார். இப்பரபக்திதான் ஸாதக னுக்கு உபாயத்தில் மேலெல்லையாய், ப்ரபந்நனுக்கு ப்ராப்யத்திலே முதலடியாயிருக்குமிறே. இதில் முதற்பாட்டில்-மநுஷ்யத்வே பரத் வத்தையும் அவதாரகந்தமான க்ஷீராப்தியிலே கண்வளர்ந்தருளு கிற நீர்மையையும் அநுஸந்தித்து, தேவரீர்திருவடிகளிலே ப்ரவண ரானார்க்கு ஸர்வதேசத்திலும் ஸுகமேயாமென்கிறார்.

எத்திறத்துமொத்துநின்றுயர்ந்துயர்ந்தபெற்றியோய்
முத்திறத்துமூரிநீரராவணைத்துயின்றநின்
பத்துறுத்தசிந்தையோடுநின்றுபாசம்விட்டவர்க்
கெத்திறத்துமின்பமிங்குமங்குமெங்குமாகுமே. (அஉ)

---

அ.—எண்பத்தோராம்பாட்டு. "வாலிதனக்கு" என்று முழுச் சொல்லாய் - வாலிபரமாதல்; வாலியுடைய, தந்தனுக்கு - தம்பித னக்கென்றாய் மாஹாராஜர்பரமாதல். ... ... ...(அக)

ப-ரை.—எத்திறத்தும் தேவமநுஷ்யதிர்யக் ஸ்தாவரங்களாகிற நான்கு ஜாதிகளிலும் - ஒத்துநின்று-ஸஜாதீயனாய் அவதரித்து, உயர்ந்து - அஜஹத்ஸ்வ பாவனாகையால் வந்தவுத்கர்ஷத்தையும், உயர்ந்த - ஸௌசீல்யத்தால்வந்த உத்கர்ஷத்தையும், பெற்றியோய் - ஸ்வபாவமாகவுடையவனே, முத்திறத்துநீர்- மூன்றுவகைப்பட்ட நீரையுடையகடலை, மூரி-இடமாகக்கொண்டு, அந்நீர் உறுத்தாணமக்காக, அரவணை - திருவநந்தாழ்வான்மேலே, துயின்ற - கண்வளர்ந்தருளின, நின் - தேவரீர்திருவடிகளிலே, பத்து உறுதந்த-பக்திமிகுந்த, சிந்தை யோடுநின்று - மநோரதத்தோடே நின்று, பாசம்விட்டவர்க்கு - இதரவிஷய ஸங்கம் விட்டவர்களுக்கு, இங்கும் - சரீரத்தோடே யிருக்குமிருப்பிலும், அங்கும் - பரமபதத்திலிருக்குமிருப்பிலும், எங்கும் - உத்க்ரமணதசையிலும் அர்ச்சிராதிமார்க்கத்திலும், எத்திறத்தும்-ஆகிய இவ்வவஸ்தைகளிலெல்லாம், இனபமாகும்-ஸுகமேயாயிருக்கும். (அஉ)

வ்யா.—(எத்திறத்துமொத்துநின்றுயர்ந்துயர்ந்த பெற்றியோய்) தேவஜாதியிலும் மநுஷ்யஜாதியிலும் திர்யக்ஜாதியிலும் ஸ்தாவர ஜாதியிலும் ஸஜாதீயனாயவதரித்து, அஜ்ஜாதியிற்காட்டில் அஜஹத் ஸ்வபாவனாகையாலேவந்த வுத்கர்ஷத்தையும், "ప్రజాయమానః" "ஸஉஶ்ரேயாந்பவதிஜாயமாநঃ" என்கிறபடியே ஸௌசீல்யத்தால்வந்த வுத்கர்ஷத்தையும் ஸ்வபாவமாகவுடையவனே. பெற்றி-இயல்வு. திறம்-திரள். ப்ரஹ்மருத்ரமத்யாவதாரத்தோடு மத்ஸ்யாவதாரத்தோடு வாசியற ஸஜாதீயபாவத்தில் புரையறுகையும், அதிமாநுஷ சேஷ்டிதங்களாலே ஸர்வாதிகத்வந் தோற்றுகையும், நாத்யஸாரத்யங்களாலே ஸௌசீல்யம் தோற்றியிருக்கையும். (முத்திறத்துமூரிநீரராவணைத்துயின்ற) அவதாரத்தில் சொன்னமேன்மைக்கும் நீர்மைக்கும் ஊற்றாய், மூன்றுவகைப்பட்ட நீரையுடைத்தானகடலையிடமாகக்கொண்டு, அந்நீருறுத்தாமைக்குத்திருவனந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளின. முத்திறத்துநீர் - ஆற்றுநீர், ஊற்றுநீர், வர்ஷஜலம் இவை. மூரி - இடம்.

(நின்பத்துறுத்தசிந்தையோடுநின்றுபாசம்விட்டவர்க்கு) உன் திருவடிகளிலே பக்திமிக்க மநோரதத்தோடே நின்று,இதரவிஷயத்தில் ஸங்கத்தைவிட்டவர்க்கு. "பத்து" என்று - பக்தி. உறுதல்-அழுந்தல். அதாவது - மிகுதி. ஆச்ரிதபரித்ராணார்த்தமாக வவதரித்த வவதாரத்தின்மேன்மையும் நீர்மையும் அதுக்கூற்றானக்ஷீராப்தியில் கண்வளர்ந்தருளுகிற நீர்மையையும் அநுஸந்தித்து பரபக்தியுக்தராய்,அப்பக்தி பாரவஶ்யத்தாலே இதரவிஷயங்களிலே வைராக்யத்தையுடையராயிருக்கிறவர்களுக்கென்கை.

(எத்திறத்துமின்பமிங்கு மங்குமெங்குமாகுமே) சரீரத்தோடே யிருக்குமிருப்பிலும், பரமபதத்திலிருக்குமிருப்பிலும், உத்க்ரமணதசையிலும், அர்ச்சிராதிமார்க்கமென்கிறஅவஸ்தாவிசேஷங்களிலும் ஸுகமேயாயிருக்கும். எத்திறத்து மின்பமான ஸர்வேஸ்வரனான உன்னுடைய ஸ்வரூபரூபகுணவிபூதிகளை யநுபவித்து, ப்ரகாரபேதங்களிலும் த்வதநுபவத்தால் வந்த ஸுகமேயல்லதில்லை. விஷயாந்தரப்ராவண்ய்ம் எங்ஙனுமாகிலும் துக்கமேயானவோபாதி பகவத்ப்ராவண்யம் எங்ஙனுமாகிலும் ஸுகமேயாயிருக்குமென்கை.

அ.—எண்பத்துமூன்றும்பாட்டு. "[illegible]" "அநந்தக்லேசபாஜநம்" என்கிறபடியே-துக்கப்ரசுரமான இஸ்ஸம்ஸாரத்திலே ஸுகமுண்டாகக்கூடுமோவென்னில்; ப்ராப்திதசையில் ஸுகமும், ஸம்ஸாரத்தேயிருந்துவைத்து தேவரீர்திருவடிகளில் விச்சேதமில்லாத ப்ரேமத்தால் பிறக்கும் ஸுகததுக்குப் போராதென்கிறார்.

மட்டுலாவுதண்டுழாயலங்கலாய்புலன்கழல்
விட்டுவீள்விலாதபோகம்விண்ணினண்ணியேறினும
எட்டினோடிரண்டெனுங்கயிற்றினன்மனந்தனைக்
கட்டிவீடிலாதுவைததகாதலின்பமாகுமே. (அங)

ப-ரை.—மட்டுலாவு - தேனமாருத, தண்-குளிர்ந்த, துழாயலங்கலாய்-திருத்துழாய்மாலையாலே அலங்கர்தனானவனே, புலன்கழல் - [illegible]சநீயமான [illegible]திருவடிகளை, விட்டு—, [illegible]போகம்-அழிவில்லாதபோகத்தை, விண்[illegible]ஏறி நண்ணினும்-பரமபதத்திலே யேறிக்கிட்டினாலும்; எட்டினோடிரண்டெனும் கயிற்றினால்-பக்தியென்கிறகயிற்றாலே, மனந்தனை-ஸர்வேந்த்ரியங்களுக்கும் ப்ர[illegible]மனஸ்ஸை, கட்டி-விஷயங்களிலே போகாதபடி பந்தித்து, வீடிலாது-விச்சேத[illegible]படி, வைத்த-தேவரீர்திருவடிகளிலேவைத்த, காதலின்பம் - ப்ரேமமானது, ஸுகத்துக்கு ஸாதநமா[illegible]பணுகிக்கே, ஆகும்-அதுதானே ஸுகமாயிருக்கும். (அங)

வ்யா.—(மட்டுலாவுதண்டுழாயலங்கலாய) தேன்மாறாத செவ்வித்திருத்துழாய் மாலையாலே யலங்கர்தனானவனே. இத்தால்-திருத்துழாயோட்டை ஸம்பந்தத்தாலே ஸர்வாதிக வஸ்துவென்னுமிடமும், உபயவிபூதி நிர்வஹணத்துக்கிட்ட தனிமாலையென்னுமிடமும், ஒப்பனையழகும் சொல்லித்தாய்த்து.(புலன்கழல் விட்டு

---

அ.— எண்பத்திரண்டாம்பாட்டு. "இங்குமங்குமெங்குமான-எத்திறத்தும்" என்றாய்-முமுக்ஷுசரீரம், முக்தசரீரம், ஸுக்ஷ்மசரீரம் இவையெல்லாவற்றிலும் ஸுகமாயிருக்குமென்கை. திறம்-ப்ரகாரமாய், அத்தால் - சரீரத்தைச்சொல்லுகிறது. எல்லாவவஸ்தையிலுமென்றபடி. ... ... ... (அஉ)

வீள்விலாதபோகம்) தர்சநீயமாய் நித்யஸூரிகளுக்கு ஸதா தர்சநீயமுமான தேவரீர்திருவடிகளைவிட்டு, வேறுபோக்கில்லாத போகத்தை. புலன்கழல்-புலப்படும் திருவடிகளை. (விண்ணில்நண்ணியேறினும்) பரமபதத்தேயேறிக்கிட்டிலும்.

(எட்டினோடிரண்டெனுங்கயிற்றினால்) எட்டுமிரண்டும்கூடி-பத்தாய், அத்தைபக்தியென்கிறது. பகவத்பக்தியில் தமக்குள்ள கௌரவாதிசயத்தாலே மறைத்துச்சொல்லுகிறார். "கயிறு" என்று-பந்தகமென்றபடி. (மநந்தன்னைக்கட்டி) ஸர்வேந்த்ரியங்களுக்கும் ப்ரதாநமான மநஸ்ஸை விஷயாந்தரங்களில் போகாதபடிபந்தித்து. (வீடிலாதுவைத்தகாதலின்பமாகுமே) விச்சேதமில்லாதபடி தேவரீர்திருவடிகளிலே வைத்த ப்ரேமம், ஸுகத்துக்கு ஸாதநமாயிருக்கையன்றிக்கே தானே ஸுகமாயிருக்கும். ... (௮௩)

அ.—எண்பத்துநாலாம்பாட்டு."வீடிலாதுவைத்த காதலின்பமாகும்" என்று - கீழ்ப்ரஸ்துதமானபக்தி தம்பக்கல் காணுமையாலும், தம்மை ப்ரக்ருதியோடேயிருக்கக் காண்கையாலும், ஈச்வரன் ஸ்வதந்த்ரனுகையாலும், அவன்நினைவாலே பெறுகையாலும், என்திறத்தில் என்னுதன், தன் திருவடிகளிலே பரமபக்தியுக்தனும்படி பண்ண நினைத்திருக்கிறானே, நித்யஸம்ஸாரியாய்ப்போக நினைத்திருக்கிறானே, திருவுள்ளத்தில் நினைத்திருக்கிறதென்னோவென்கிறார்.

பின்பிறக்கவைத்தனன்கொலன்றிநின்றுதன்கழற்
கன்புறைக்கவைத்தநாளறிந்தனன்கொலாழியான்
தன்திறத்தோரன்பிலாவறிவிலாதநாயினேன்
என்திறத்திலென்கொலெம்பிரான்குறிப்பில்வைத்ததே. (௮௪)

ப-ரை.—இந்தசரீராவஸாநத்துக்குமேலே, பின்பிறக்கவைத்தனன் கொல்-இன்னமும் சிலசரீரபரிக்ரஹம்பண்ணும்படியாக நினைத்திருக்கிறானே; அன்றி-அன்றிக்கே, நின்று - இடைவீடில்லாமல், தன்கழற்கு - தன திருவடிகளுக்கு, அன்பு-அன்பை, உறைக்கவைத்தநாளறிந்தனன்கொல் - உறைக்கவைத்து அநுபவிக்கும்நாள் எனக்குண்டாம்படி நினைத்திருக்கிறானே; ஆழியான்தன்திறத்து-ஸர்வாதிகத்வஸூசகமான திருவாழியையுடையனானவனுடைய ஸ்வரூபரூபகுணவிபூதிகளிலே, ஓரன்பிலா-ப்ரேமகந்தமில்லாதவனாய், ஓர் அறிவிலாத-ஜ்ஞாநலேசமில்லாதவனாய, நாயினேன - ஹேயனான, என்திறத்தில் - என் விஷயத்திலே, எம்பிரான் - எனக்கு உபகாரகனான ஸர்வேச்வரன், குறிப்பில்வைத்தது என்கொல் - திருவுள்ளத்தில் கொண்டிருக்கிறது என்னோ. (௮௪)

வ்யா.—(பின்பிறக்கவைத்தனன்கொல்) இந்த சரீராவஸாநத்துக்குமேலே இன்னமும் சிலசரீரபரிக்ரஹம்பண்ணும்படியாக என்னை நினைத்திருக்கிறானே. அன்றிக்கே (பின்புஇறக்கவைத்தனன்கொல்)

---

அ.—எண்பத்துநாலாம்பாட்டு. பின் பிறக்க என்னுதல்; பின்பு இறக்கவென்னுதல்.

தன்பக்கலிலே ஜ்ஞானம்பிறந்தபின்பும் தன்னைவிஸ்மரித்துநசிக்க நினைத்திருக்கிறுனே. நித்யமான வாத்மாவுக்கு பகவத் ஜ்ஞாந லாபாலாபங்களேயிறே ஸதஸத்பாவஹேதுக்கள். "𑌅𑌸𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍇𑌤𑌿 𑌵𑍇𑌦 𑌚𑍇𑌤𑍍-𑌅𑌸𑌨𑍍𑌨𑍇𑌵 𑌸 𑌭𑌵𑌤𑌿-𑌅𑌸𑍍𑌤𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍇𑌤𑌿 𑌚𑍇𑌦𑍍𑌵𑍇𑌦, 𑌸𑌨𑍍𑌤𑌮𑍇𑌨𑌂 𑌤𑌤𑍋 𑌵𑌿𑌦𑍁𑌰𑌿𑌤𑌿" "அஸத் ப்ரஹ்மேதிவேதசேத் - அஸந்நேவஸபவதி, அஸ்திப்ரஹ்மேதிசேத்வேத,ஸந்தமேநந்ததோவிதுரிதி" என்னக்கடவதிறே. (அன்றி) அன்றிக்கே.(நின்று தன்கழற்கன்புறைக்கவைத்தநாளறிந்தனன் கொல்) விச்சேதமில்லாதபடி தன்திருவடிகளுக்கு அன்பையுறைக்கவைத்து அநுபவிக்கும்நாள் எனக்குண்டாமபடி நினைத்திருக்கிறுனே. அன்புறைக்கையாவது - பரமபக்தியுக்தனுகை. வைத்தநுபவிக்கும் நாளென்கிறது - ஒருதேசவிசேஷத்தி லநுபவத்தை. இத்தால் - இச்சேதநனுக்கு ஜந்மமும் விஸ்ம்ர்தியும் விநாசமும் பக்தியில்லாமை; உஜ்ஜீவநம் பரமபக்தியுக்தனுகை யென்றதாய்த்து. ஜந்மமாகிறது-விஷயாந்தர ப்ராவண்யஹேது. விஸ்ம்ர்தியாகிறது - விஷயாந்தர ப்ராவண்யகார்யமாகையாலே ஆத்மாவுக்கு உபயமும்விநாசமிறே.

(ஆழியான்றன்திறத்து) ஸர்வாதிகனுன தன்னிடை யாட்டத்து. (ஓரன்பிலாவறிவிலாதநாயினேன்) அவன்ஸ்வரூப ரூப குண விபூதிகளில் ப்ரேமகந்தமின்றிக்கே, அதுக்கடியான ஜ்ஞாநலேசமுமின்றிக்கே, ஹேயனுன நான். ப்ரேமகந்தமின்றிக்கே,அதில்லையென்கிற வறிவுமில்லாதவென்றுமாம். "நாயினேன்" என்கிறது - திறந்துகிடந்த வாசல்கள்தோறுமநுழைந்து திரிகையும், எல்லாராலும் பரிபூதனுகையும், உகந்து தொட்டார்க்கும் ஸ்நாநம் பண்ணவேண்டும்படிஅமேத்ய பதார்த்தமாகையும்.(என்திறத்தில்) ஸம்ஸாரிகளைப்போலே விமுகனுதல், முக்தரைப்போலே போகப்ரவணனுதலன்றிக்கேயிருக்கிற வென்னிடையாட்டத்தில். (எம்பிரான் குறிப்பில் வைத்தது-என்கொல்) என்னுதன் திருவுள்ளத்தில் கொண்டிருக்கிறதென்னே. "பிறந்தபின்மறந்திலேன்" என்கிற ஜ்ஞாநத்தையும், "நடந்தகால்கள்நொந்தவோ" என்கிற ப்ரேமத்தையும் உபாயமென்றிருக்கிறிலர், ஈச்வரன்நினைவே தமக்கு உபாயமென்றிருக்கிருர். "வரந்தரும் திருக்குறிப்பில்வைத்ததாகில்" என்று-ஸாமாந்யேநவுபாயமாகச்சொல்லுவதுமதுவே, தமக்குஉபாயமாகவிசேஷித்துச்சொல்லுவதுமதுவே. இப்பாட்டால்-என்னுடைய பூர்வ வ்ர்த்தத்தைப் பார்த்து உபேக்ஷிக்கிறுனே, இத்தலையில்விநாசம் தன்னிழவாமபடியானகுடம்றுடக்கை நினைத்து உஜ்ஜீவிப்பிக்க நினைத்திருக்கிறுனேவென்றதாய்த்து. ... ... (௮௪)

---

அவன்நினைவேஸாதநமென்பானென், தம்முடைய ஜ்ஞாநம் ஸாதநமாகாதோவென்ன;அருளிச்செய்கிருர்(பிறந்தபின் இத்யாதி.)

அ.—எண்பத்தஞ்சாம்பாட்டு. என்னை இப்ப்ரக்ருதியோடே வைத்தபோதே தேவரீர்நினைவின்னதென்றறிகிலேன், முந்துற முன்னம்உன்ப்ரஸாதத்தாலே திருவடிகளில்பிறந்த ருசியைமாற்றி இதரவிஷய ப்ரவணனுக்காதொழியவேணுமென்று ப்ரார்த்திக்கிறார்.

நச்சராவணைக்கிடந்தநாதபாதபோதினில்
வைத்தசிந்தைவாங்குவித்துநீங்குவிக்கநீயினம்
மெய்த்தன்வல்லையாதலாலறிந்தனன்நின்மாயமே
உய்த்துநின்மயக்கினில்மயக்கலென்னைமாயனே. (அரு)

ப-ரை.—உகவாதார்க்குக்கிட்டவொண்ணாதபடி, நஞ்சு - விஷத்தையுமிழுகிற, அராவணை - திருவனந்தாழ்வானாகிற திருப்பள்ளியிலே, கிடந்த - கண்வளர்ந்தருளுகிற, நாத - ஸர்வேச்வரனே. பாதம் - தேவரீருடைய திருவடிகளாகிற, போதினில் - புஷ்பத்திலே, வைத்த - வைக்கப்பட்ட, சிந்தை - மநஸ்ஸை, வாங்குவித்து - அவைகளினின்றும் மீளும்படி பண்ணி, நெடுங்காலம் அகன்றிருந்தது போராமே, இன்னம் நீங்குவிக்க - இன்னும் அகலும்படி பண்ணுகைக்கு, நீ - ஸர்வசக்தியானநீ, மெய்த்தன வல்லை - மெய்யே ஸமர்த்தனை; ஆதலால - ஆகையாலே, அறிந்தனன் - உன்னை ஸ்வதந்த்ரனென்று அறிந்துகொண்டேன்; மாயனே - ஆச்சர்யமான சேஷ்டிதங்களையுடையவனே, நின மாயம - தேவரீரிட்டவழக்கான ப்ரக்ருதியோடே, உய்த்து - நித்யஸம்ஸ்ருஷ்டனும்படி பண்ணி, நின் - உனக்கு பரிகரமான, மயக்கினில் - சப்தாதிவிஷயங்களிலே மூட்டி, என்னை - உன்னைபார்த்திருக்கிறவென்னை, மயக்கல் - அறிவுகெடுக்கப்பாராதொழியவேணும். (அரு)

வ்யா.—(நச்சராவணைக்கிடந்தநாத) உகவாதார்க்குக் கிட்டவொண்ணாதபடி விஷத்தையுமிழுகிற திருவநந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளுகிற ஸர்வேச்வரனே. நீ உகந்தாரை நித்யகைங்கர்யம் கொள்ளும் ஸ்வதந்த்ரனென்றபடி. (பாதபோதினில்வைத்தசிந்தை) உன்திருவடிகளாகிற செவ்விப்பூவிலே வ்யவஸ்திதமான மநஸ்ஸை. ப்ராப்தமுமாய் நிரதிசய போக்யமுமா யிருந்துள்ள திருவடிகளிலே பொருந்தின மநஸ்ஸை யென்கை. (வாங்குவித்து) திருவடிகளில்நின்றும் மீளும்படிபண்ணி. "ஶ்ரீ॰ஶூந்ஙாதுஸ்த்ஷ॰ஃதூ॰" "நிவேசிதாத்மாகதமந்யதிச்சதி" என்று மநஸ்ஸையும் விமுகமாம்படிபண்ணி. (நீங்குவிக்கநீயினம்மெய்த்தன்வல்லை) நெடுங்காலம் அகன்றதுபோராமே யினனமகலுமபடிபண்ணவல்ல ஸர்வசக்தியானநீ மெய்யே வல்லை.

(ஆதலாலறிந்தனன்) ஒருத்தனைக் கேள்விகொண்டு கார்யம் செய்யவேண்டாதபடிவஸ்துவை வஸ்தவந்தரமாக்கவல்ல சக்தியையுடையையாகையாலே உன்னை ஸ்வதந்த்ரனென் றறிந்துகொண்டேன். (நின்மாயமேயுய்த்து நின்மயக்கினில்மயக்கல்) உமக்குச் செய்யவேண்டுவதென்னென்ன; "ஶ॰ஶ॰ஶூ॰" "மமமாயா" என்கிறபடியேதேவரீரிட்டவழக்கானப்ரக்ருதியோடேநித்யஸம்ஸ்ருஷ்ட

ணும்படி பண்ணி, உனக்கு பரிகரமான சப்தாதிவிஷயங்களிலே மூட்டி என்னை யறிவுகெடுக்கப் பாராதொழியவேணும். சேதநனை யறிவுகெடுக்குமவையாகையாலே, "மயக்கு" என்று - சப்தாதிவிஷயங்களைச்சொல்லுகிறது. (என்னை) உன்பக்கலிலே ந்யஸ்தபரனாய் உன்கைபார்த்திருக்கிறவென்னை. (மாயனே) நம்மை யொழியச் செல்லாதாரை சப்தாதிகளிலேமூட்டி யறிவுகெடுப்புதோமோ, ஸ்வதந்த்ரரையன்றோ நாம் அங்ஙன் செய்வதென்ன; ஆச்சர்யமான சேஷ்டிதங்களையுடையவனே. "ఉపమానమశేషాణాం సాధూనామ్", "உபமாநமஸேஷாணாம்ஸாதூநாம்" என்கிறபடியே ப்ரஹ்லாதனை எதிரம்புகோக்கப்பண்ணவல்லை,ப்ராதிகூல்யத்தில் வ்யவஸ்திதனான சிசுபாலனுக்கு ஸாயுஜ்யப்ரதனாகவும் வல்லை, இதுவன்றோ தேவரீருடைய ஸ்வாதந்த்ர்யமென்கிறார். ... ... (அரு)

அ.—எண்பத்தாறும்பாட்டு. உம்மை நம்பக்கல்நின்றுமகற்றி ப்ரக்ருதிவச்யராக்குவோமாக நம்பக்கலிலே அதிஸங்கை பண்ணுவானென்னென்ன; விரோதிநிரஸநஸமர்த்தனானநீ என்ப்ரக்ருதிஸம்பந்தத்தையறுத்து என்னினைவைத் தலைக்கட்டாதொழிந்தால் அதிசங்கைபண்ணாதே செயவதென்னென்கிறார்.

சாடுசாடுபாதனேசலங்கலந்தபொய்கைவாய்
ஆடரவின்வன்பிடர்நடம்பயின்றநாதனே
சோடுநீடுகையசெய்யபாதநாளுமுள்ளினால்
வீடனாகமெய்செயாதவண்ணமென்கொல்கண்ணனே. (அசு)

ப-ரை.—சாடு-சகடாஸுரனமுடியும்படி, சாடு-உதைதத, பாதனே - திருவடிகளையுடையனாய், விஷமேமிகுந்து, சலம்கலந்த - அதுதோடேயமுராஜலமும் கலந்திருந்தள்ள, பொய்கைவாய்-பொய்கையிலே, ஆடு-வாத்திக்கிற, அரவின-காளியனுடைய, வன் - திண்ணியதான, பிடர் - பிடரியிலே, நடம்பயின்ற - நாத்தனம்செய்தவனாய், நாதனே-எங்களுக்கு வகுத்தஸ்வாமியாய், நீடு-ஸர்வகாலத்திலும்,கோடு-ஸ்ரீபாஞ்சஜந்யத்தை, கைய-திருக்கையிலே யுடையவனாய், கண்ணனே-ஆச்ரிதஸுலபனானவனே, செய்ய - அழகிதான. பாதம்-உன் திருவடித்தாமரைகளை, நாளும்-ஸர்வகாலமும்,உள்ளினால்-அநுஸந்தித்தால்,வீடனாக-ப்ரக்ருதிஸம்பந்தமறறுததிருவடிகளைப்பெறுமவனாக, மெய்செயாதவண்ணம் - மெய்செய்யாதொழிகின்ற ப்ரகாரம், என்கொல்-என்னோவென்கிறார். (அசு)

வ்யா.—(சாடுசாடுபாதனே) சகடாஸுரன்முடியும்படி திருவடிகளை நிமிர்த்தவனே. அநுகூலர்க்கு உத்தேஸ்யமானதிருவடிகளேயாய்த்து ப்ரதிகூலர்க்குநாசகரமாயத்து.இதிறே வஸ்துஸ்வபாவம். "விடமுமமுதமுமாய்" என்னக்கடவதிறே. இத்தால்-விரோதிநிரஸநத்தில் உனக்கு வருத்தமுண்டாய்ததானிழுக்கிறேனோவென்கை.

(சலங்கலந்தபொய்கைவாய்)விஷமேப்ரசுரமாய்அத்தோடேயமுநா ஜலமும் மிச்ரமாயிருந்துள்ள பொய்கையிலே. "[Grantha script] [Grantha script]" "தஸ்யாஸ்சாதிம ஹாபீமம்விஷாக்நிஸ்ரிதவாரிணம் | ஹ்ரதம்காளியநாகஸ்யததர்ஸா திவிபீஷணம்" என்னக்கடவதிறே. (ஆடரவின்வன்பிடர்நடம்பயி ன்ற) அப்பொய்கையிலே வர்த்திக்கிற காளியனுடைய திண்ணிய பிடரியிலேநின்று ஸஞ்சரிக்கிற ஸஞ்சாரம் வல்லராடினைப்போலே யிருக்கை. "ஆடரவு" என்று-க்ரோதத்தாலே யாடுகிற அரவென்று மாம். "ஆடல்" என்று - நடையாட்டமும், கூத்தும். (நாதனே) வகுத்தஸ்வாமியானவனே. விரோதிநிரஸந முகப்பாலேக்கடியான ஸம்பந்தத்தைச்சொல்லுகிறது. இத்தால - என்விரோதியைப்போக் குகைக்கு உகப்பல்லாரையிழக்கிறேனோ, ஸம்பந்தமில்லாமே யிழக் கிறேனோவென்கை. பகவத்ஸமாச்ரயணத்துக்கும் அநுபவத்துக் குமாக ஸ்ரேஷ்டமான சரீரத்திலே அஹங்காரலேச முண்டானால் அதுநிரஸநீயமென்று தோற்றுகைக்காக, சகடாஸுரநிரஸநத்தை யருளிச்செய்தார். தனக்கு போக்யமான வாத்மாவுக்கு, விஷ ஸம் ஸர்க்கம்போலே நிரஸநீயம் தேஹஸம்பந்தமென்று தோற்றுகை க்காகக் காளியமர்த்தநத்தை யருளிச்செய்தார். அநுகூலமாகவை த்ததொன்றிறே சகடம், உபஜீவ்யமாயிருப்பதொன்றிறே யமுநா ஜலம்.

(கோடுநீடுகைய) ஸர்வகாலமும் திருக்கைக்கு நிரூபகமென்னு ம்படி அத்தைப்பிரியாத ஸ்ரீபாஞ்சஜந்யத்தை யுடையவனே. என் விரோதியைப் போக்குகைக்கு உன்கையில் பரிகரமில்லாமே யிழக்கி றேனோ, என்கையில் பரிகரமுண்டாயிழக்கிறேனோவென்கை. (செ ய்யபாதம் நாளுமுள்ளினால்) உன்திருமேனிக்கு பரபாகமாய் ஆகர் ஷகமான திருவடிகளை ஸர்வகாலமும் அபாச்ரயமாக வநுஸந்தித் தால். இத்தால்-நான் அந்யபரனாய்த்தானிழக்கிறேனோ வென்கை. (வீடனாகமெய்செயாதவண்ணமென்கொல்) இப்படி சக்தனாயிருக்க, ப்ரக்ருதி ஸம்பந்தமற்றுத் திருவடிகளைப்பெறுமவனாக மெய்செய்யா

அ.— எண்பத்தாறும்பாட்டு (ஆடரவு) ஆடல் - ஸஞ்சாரமா ய், அத்தால் - வர்த்திக்கிற அரவென்னுதல். மெய்செய்கை - சரீரமி ருக்கச்செய்தே ஒருஜ்ஞாநவிஷயத்தாலேமெய் போலேதோற்றியிரு க்கையை சரீரநிவ்ருத்திபூர்வகமாக யதாவானபகவதநுபவத்தைச் செய்கை. நான்இச்சங்கைக்குஹேது சொல்லாதபடி என்னபிமதம் செய்யாமைக்கு ஹேதுவைச்சொல்லலாகாதோ என்கிறதொன்று வாக்யத்தை அந்வயித்துக்கொள்வது. ... ... (அசு)

தொழிகிற ப்ரகாரமென்னே. மெய்செய்கையாவது - விஷயீகாரமாத்ரத்திலே, "மூடியாததென்னெனக்கேலினி" என்னப்பண்ணுதல், ஜ்ஞாநலாபத்தாலே, "யாவர்நிகரகல்வானத்தே" என்னப்பண்ணுதல் செய்யுமிவ்வளவுகளாலேவந்த ஆஶ்வாஸமொழிய தேஹஸம்பந்தத்தை அறுக்கையும், நித்யஸூரிகள் பரிமாற்றத்தைப் பண்ணித்தருகையும். (கண்ணனே) ஸம்ஸாரிகளுக்கு இச்சையே தொடங்கி பரமபக்தி பர்யந்தமாக வெல்லா வவஸ்தைகளையு முண்டாக்கி முக்தராக்குகையன்றோ வவதாரத்துக்குபலம், அநுபாவ்யமாயிருப்பதொரு கர்மஶேஷமுண்டாயோ வவதரித்தது; ஆக, நீர் நம்பக்கலிலே அதிசங்கை பண்ணுகைக்கு ஹேதுவென்னென்ன; நீ சக்தனாய் வைத்து என்னபிமதஞ்செய்யாமைக்கு ஹேதுவைச் சொல்லலாகாதோ நான் அதிஶங்கைபண்ணினதுக்கு ஹேதுசொல்லும்படியென்கிறார். ... ... ... ... ... (அசு)

அ.—எண்பத்தேழாம்பாட்டு. "செய்யபாதம் நாளுமுள்ளினால்" என்று நீயே எனக்கு அபாச்ரயமென்கையாலே நம்மையொழிய வுமக்கு வேறொரு பற்றில்லையோவென்ன; அபாச்ரயமாக ஸம்பாவனையுள்ள ப்ரஹ்ம ருத்ரர்கள் ஸ்வாதிகாரஸித்திக்கு தேவரீர் கைபார்த்திருக்கும்படியாய் இழிந்தபின்பு,ஸர்வாதிகாரானதேவரீரையொழிய வேறொரு பற்றையுடையே னல்லேனென்று தம்முடைய வதிகாரத்துக்கு அபேக்ஷிதமான அநந்யகதித்வ க்யாபநம் பண்ணுகிறார் மேல்.

நெற்றிபெற்றகண்ணன் விண்ணினாதனோடுபோதின்மேல்
நற்றவத்தநாதனோடுமற்றுமுள்ளவானவர்
கற்றபெற்றியால்வணங்குபாதநாதவேதநின்
பற்றலாலோர்பற்றுமற்றதுற்றிலேனுரைக்கிலே. (அஎ)

ப-ரை.—நெற்றிபெற்றகண்ணன் - நெற்றியிலே கண்ணையுடையவனான ருத்ரனும், விண்ணின்நாதனோடு-ஸ்வர்க்கத்துக்கு நிர்வாஹகனான இந்த்ரனும், போதின்மேல் - திருநாபீகமலத்தைப் பிறப்பிடமாகவுடையவனாய், நல்தவத்தநாதனோடு-ஒருவராலும் செய்யமுடியாத தபஸ்ஸைப்பண்ணுகையாலே பதினாலு உலகங்களுக்கும் ஸ்ரஷ்டாவாய் அவற்றுக்கு நாதனான சதுர்முகனும், மற்றுமுள்ளவானவர்-ஹவிர்ப்பாகபுக்குக்களான மற்ற தேவதைகளும், கற்றபெற்றியால்-தந்தாம்கற்ற ப்ரகாரங்களாலே, வணங்கு - ஆச்ரயிக்கும், பாத-திருவடிகளையுடையனாய், நாதவேத-ஸாவலோகநாதனாக வேதப்ரதிபாத்யனானவனே, உரைக்கில் - உண்மைசொல்லப்புகில், நின்பற்றலால்-உன் திருவடிகளே அபாச்ரயமாயிருக்குமதொழிய, மற்றோர்பற்றுது -வேறோர் பாச்ரயத்தை, உற்றிலேன் - உடையேனல்லேன். (அஎ)

வ்யா.—(நெற்றிபெற்றகண்ணன்)நெற்றியிலே கண்ணையுடைய ருத்ரன். தன்னுடைய ஶகத்யதிசயத்துக்கு ப்ரகாசகமாகையாலே லலாட நேத்ரத்தைத் தனக்குப்பேறாக நினைத்திருக்கிறானாய்த்து.

(விண்ணின்நாதனோடு போதின்மேல் நற்றவத்தநாதனோடுமற்றுமு ள்ளவானவர்) ஸ்வர்க்கத்துக்குநிர்வாஹகனை இந்த்ரனோடே, திரு நாபீகமலத்தைப் பிறப்பாகவும் ஸ்தாநமாகவுமுடையனாய் துஷ்க் கரமான தபஸ்ஸாலே சதுர்த்தசபுவநஸ்ரஷ்டாவுமாய் அதுக்கு நிர் வாஹகனுமானப்ரஹ்மாவோடே, ஹவிர்ப்பாகபுக்குக்களான ஸகல தேவதைகள். ஸம்ப்ரதிபந்ந க்ஷேத்ரஜ்ஞரான தேவர்களோடும் இந்த்ரனோடுங்கூட ப்ரம்ஹ ருத்ரர்களைச் சொல்லிற்று, அவர்களோ பாதி இவர்களும் க்ஷேத்ரஜ்ஞரென்று தோற்றுகைக்காக.

(கற்றபெற்றியால்வணங்குபாத) தாந்தாங்கற்ற ப்ரகாரங்களா லே யாச்ரயிக்கும் திருவடிகளையுடையவனே. கற்றப்ரகாரங்களென் கையாலும், ஆச்ரயணத்தைச் சொல்லுகையாலும்-இவர்களுடைய சாஸ்த்ரவஸ்யதையையும் ஜ்ஞாநஸக்திகளுடைய வைஷம்யங்களை யும் சொல்லுகிறது. (நாதவேத) நாதனாக வேதப்ரதிபாத்யனானவ னே. தேவர்களுடைய ஆச்ரயணத்துக்கடியான ஸம்பந்தத்தைச் சொல்லுகிறது. “తమీశ్వరాణాం పరమం మహేశ్వరమ్” “పతిం విశ్వస్య” “தமீ ஶ்வராணாம்பரமம்மஹேஶ்வரம்” “பதிம்விஶ்வஸ்ய” என்னக்க டவதிறே. (நின்பற்றலாலோர்பற்றுமற்றதுற்றிலேன்) உன் திருவ டிகளே அபாச்ரயமாகவிருக்குமதொழிய எனக்கு வேறொரு அபாச் ரயஸ்பர்சமில்லை. உறுதல்-தீண்டுதல். (உரைக்கிலே) தேவதாந்தர ஸ்பர்சமில்லையென்று சொல்லுகையும் எனக்கவத்யமென்கை. (அஎ)

அ.—எண்பத்தெட்டாம்பாட்டு. ப்ரஹ்மருத்ராதிகளுடையவதி காரம் ஈஶ்வரனாலேயென்றார்-கீழ்; இதில் - அவர்கள் தங்களாபந்நி வ்ருத்திக்கு தேவரீர்கைபார்த்திருக்கும்படி பரமோதாரரான தேவ ரீரையொழிய வேறொருவரை தேவதையாக மதிப்பனோவென்கிறார்.

வெள்ளைவேலைவெற்புநாட்டிவெள்ளெயிற்றராவளாய்
அள்ளலாய்க்கடைந்தவன்றருவரைக்கோராமையாய்
உள்ளநோய்கள்தீர்மருந்துவானவர்க்களித்தவெம்
வள்ளலாரையன்றிமற்றோர்தெய்வம்நான்மதிப்பனே. (அஅ)

ப-ரை.—வெள்ளைவேலை - வெளுத்தகடலானக்ஷீராப்தியிலே, வெற்புநாட் டி-மந்தரபர்வதத்தைநாட்டி, வெள - வெளுத்த, எயிறு - தந்தபங்தியைக்காட் டுகிற, அரா - வாஸுகியென்கிறபாம்பை, அளாய்-சுற்றி, அள்ளலாய-திரைகள் எதிரேவந்து செறியும்படி, கடைந்தவன்று-மதநம்பண்ணின காலத்திலே, அரு வரைக்கு - அரிதான அம்மலை அமிழ்ந்தாதபடி முதுகிலேநின்று சுழலுகைக்கு, ஓர்-அத்விதீயமான, ஆமையாய-ஆமையாய்தரித்து, வானவர்க்குஉள்ள நோய் கள்-இந்த்ராதிதேவர்களுக்குண்டான துரிதங்களை, தீர்-தீர்க்கத்தக்க, மருந்து- அம்ர்தத்தை, அளித்த - அவர்களுக்குக்கொடுத்தருளுகையாலே, எம்வள்ளலா ரையன்றி - எனக்கு ஔதார்யத்தை ப்ரஸாதித்தவனையொழிய, நான்-அநந்ய ப்ரயோஜநனாய் அநந்யசரணனானநான், மற்றோர்தெய்வம் - வேறொருதைவத் தை, மதிப்பனோ-ஆச்ரணீயமாகமதிப்பேனோ. (அஅ)

வ்யா.—(வெள்ளைவேலைவெற்புநாட்டி) வெளுத்தகடலிலேமந்தரபர்வதத்தைநாட்டி.காளமேகநிபஶ்யாமமானதான் க்ஷீராப்தியில் கண்வளர்ந்தருளும்போதை அந்த பரபாகரஸம் அநந்யப்ரயோஜநர்க்கு அநுபாவ்யமாயிருக்க, அத்தைக்குலைத்து ப்ரயோஜநாந்தரபரர்க்காக அக்கடலிலே கொடுப்புக்கு மந்தரத்தைநாட்டி. (வெள்ளெயிற்றரா வளாய்) வெளுத்த தந்தபங்க்தியைக்காட்டுகிற வாஸுகியை அதிலேசுற்றி. தன்னை மந்தரபர்வதத்திலே சுற்றிவலிக்கப்புக்கவளவிலே தன்பலஹாநிதோற்றப் பல்காட்டுகிற வாஸுகிக்கு பல ஸாதநத்தைப்பண்ணி அந்த மந்தரத்திலேசுற்றி. "తేజసా నాగరాజానం తథాప్యాయితవాన్ ప్రభుః" "தேஜஸாநாகராஜாநம் ததாப்யாயிதவாந் ப்ரபு꞉" என்னக்கடவதிறே. எயிறு - பல்லு. அரவு-பாம்பு. அளாய்-அளாவி-சுற்றி. (அள்ளலாய்க்கடைந்தவன்று) "అప్రమేయో మహోదధిః" "அப்ரமேயோமஹோததி꞉" என்கிறபடியே அம்மஹார்ணவத்தை, "கடல்மாயுசுழன்றழைக்கின்றவொலி" என்னும்படி திரைகள் எதிரேவந்து செறியும்படி கடைந்தவன்று. அள்ளல் - செறிவு. "அன்று" என்கிறது-ஈஶ்வராபிமாநிகளான ஸகலதேவதைகளும் தங்களாபந்நிவ்ர்த்திக்கு அவனைப்பார்த்திருந்தவன்றென்கை. (அருவரைக்கோராமையாய்) அம்மந்தரம் ஆழங்கால்படாமே தன்முதுகிலேநின்று சுழலும்படி அத்விதீயமானவாமையாய்தரித்து. அஜ்ஜாதியிலே அந்யதமனுயென்றுமாம். "క్షీరోదమధ్యే భగవాన్ కూర్మరూపీ స్వయం హరిః । మన్దరాద్రేరధిష్ఠానం భ్రమతోఽభూన్మహామునే" "க்ஷீரோதமத்யேபகதாந் கூர்மரூபீஸ்வயம்ஹரி꞉ । மந்தராத்ரேரதிஷ்டாநம் ப்ரமதோபூந்மஹாமுநே" என்னக்கடவதிறே.

(உள்ளநோய்கள்)"ஈச்வரோஹம" என்றிருக்கிறவர்களுக்குஒரு ப்ராஹ்மணசாபமாத்ரத்தாலே தன்னையும்தன்விபூதியையும் அஶ்ரீ ப்ரவேஶிக்கையும், அத்தாலே ஸத்வம் குடிபோகையும், அத்தாலே ஜ்ஞாநஹாநியும் பலஹாநியும்,அந்த பலஹாநியாலே வந்த அஸுரபரிபவமும், இவற்றால்வந்ததுக்கபரம்பரைகளும்நோய்களிறே.(தீர்மருந்துவானவர்க்களித்த) இவர்கள்துரிதங்கள்போக அம்ர்தத்தையும் பிராட்டியுடைய விஶேஷகடாக்ஷத்தையும் கொடுத்த. அம்ர்தப்ரதாநத்தாலே பலத்தையும், பிராட்டியுடைய விஶேஷகடாக்ஷத்தாலே ஐச்வர்யத்தையும் கொடுத்தானென்கை. "పీత్వా మృతం చ బలిభిర్దేవైర్దైత్యాశ్చమూస్తదా । వధ్యమానా తతో దేవా హరివక్షస్థలస్థయా । లక్ష్మ్యా మైత్రేయ సహసా పరాం నిర్వృతిమాగతాః" "பீத்வாம்ர்தேசபலிபிர்த்தேவைர்த்தைத்யசமூஸ்ததா। வத்யமாநாததோதேவா ஹரிவக்ஷஸ்தலஸ்தயா । லக்ஷ்ம்யாமைத்ரேயஸஹஸா பராந்நிவ்ர்திமாகதா꞉" என்னக்கடவதிறே.(எம்வள்ளலாரையன்றி மற்றோர்தெய்வம்நான்மதிப்பனே) "ఉదారాస్సర్వ ఏవైతే"

"உதாராஸ்ஸர்வஏவைதே" என்கிற ஔதார்யத்தை எனக்கு ப்ர காசிப்பித்தவனையொழிய அநந்யப்ரயோஜநனாய் அநந்யசரணனாயிரு ந்துள்ள நான் வேறொருதைவத்தை ஆச்ரயணீயமாகநினைப்பனோ.

அ.—எண்பத்தொன்பதாம்பாட்டு. ப்ரஹ்மாதிகளையும் மேன் மைகுலையாதபடி நின்று ரக்ஷித்தவளவன்றிக்கே, "కృష్ణాశ్రయాఃకృ ష్ణబలాః కృష్ణనాథాశ్చపాణ్డవాః" "க்ர்ஷ்ணாச்ரயாஃக்ர்ஷ்ணபலாஃ க்ர்ஷ்ண நாதாஶ்சபாண்டவா;" என்கிறபடியே பாண்டவர்களுக்கு தூத்ய ஸாரத்யங்களைப்பண்ணித்தாழநின்று ஸத்யஸங்கல்பனாய்க்கொண்டு அவர்கள் விரோதிவர்க்கத்தை யழியச்செய்து ராஜ்யத்தைக்கொடு த்தவுன்னையொழிய ஒருதைவமுண்டென்று நான் நினைத்திருப்பனோ வென்கிறார்.

பார்மிகுத்தபாரமுன்னொழிச்சுவானருச்சுநன்
தேர்மிகுத்துமாயமாக்கிநின்றுகொன்றுவென்றிசேர்
மாரதர்க்குவான்கொடுத்துவையமைவர்பாலதாம்
சீர்மிகுத்தநின்னலாலோர்தெய்வநான்மதிப்பனே. (அகூ)

ப-ரை.—பார் - எல்லாவற்றையும் பொறுத்துக்கொள்ளும்பூமி, என்னால் ஸஹிக்கவொண்ணாதென்று சொன்ன, மிகுத்தபாரம் - மிக்கபாரத்தை, முன்-தான்முறபாடனாய்நின்று, ஒழிச்சுவான் - அதனைத்தவிர்பபிக்கைக்காக, அருச்சுநன்-அர்ஜுநனுடைய, தேர்-தேரை, மிகுத்து - பார்த்தபார்த்த விடமெல்லாம் நடத்தி, மாயமாக்கி - பகலையிரவாக்குவது முதலிய ஆச்சர்யங்களையுண்டாக்கி, நின்று - முகம் தோற்றுமே நின்று, கொன்று - எதிரிகளைக்கொன்று, வென்றி சேர் - தங்களுக்குவெற்றியுண்டாவதாக நினைத்திருந்த, மாரதர்க்கு - மஹாரத ரான துர்யோதநாதிகளுக்கு, வான்கொடுத்து - வீரஸ்வர்க்கத்தைக்கொடுத்து, அவர்கள் "ஒருகோல்குத்துநிலமும்கொடோம்" என்றிருந்த, வையும்-பூமியை, ஐவர்பாலதாம் - பாண்டவர்கள் பக்கலிலேயாம்படி, சீர்மிகுத்த-புகழ்மிகுந்த, நின்னலால் - உன்னையொழிய, நான்-நீ ஆச்ரிதபக்ஷபாதியென்றறிந்தநான், ஓர் தெய்வம் - வேறொருதைவத்தை, மதிப்பனே-ஆச்ரயணீயமாக நினைப்பேனோ வெனகிறார். (அகூ)

வ்யா.—(பார்மிகுத்தபாரம்) ஸர்வம்ஸஹையான பூமிதன்னால் பொறுக்கவொண்ணாதென்று சொன்ன மிக்கபாரத்தை. "కాలనేమిహతో యోసౌ" "காலநேமிஹதோயோஸௌ" என்று தொடங்கி, "తథా న్యేచమహావీర్యాః నృపాణాంభవనేషుతే । సముత్పన్నాదురాత్మాన స్తాన్నసంఖ్యాతుము త్సహే" "ததாந்யேசமஹாவீர்யா ந்ர்பாணாம்பவநேஷுதே । ஸமு த்பந்நாதுராத்மா நஸ்தாந்நஸங்க்யாதுமுத்ஸஹே." (முன்னொழிச் சுவானருச்சுநன்தேர்மிகுத்து) தான்முற்பாடனாய் அத்தைத்தவிர்ப் பிக்கைக்காகஅர்ஜுநனுடையதேரைப் பார்த்தபார்த்தவிடமெல்லாம் நடத்தி. அர்ஜுநனுக்குத் தான் முற்பாடனாகையாவது - "విసృజ్య సశరంచాపమ్" "விஸ்ர்ஜ்யஸஶராஞ்சாபம்" என்று இருந்த அர்ஜுந னை, "కరిష్యేవచనంతవ" "கரிஷ்யேவசநந்தவ" என்னப்பண்ணுகையும்,

யுத்தமத்யத்தில் விஜயபரிகரங்களில் உத்க்ர்ஷ்டபரிகரம் தேரொன்று எதிரிகள் மதிக்கும்படி தேரைநடத்துகையும், ஆயுதமெடுக்கக்கடவதன்றாக பதிஜ்ஞைபண்ணுகையாலே ஸாரத்யவேஷத்திலே யதிகரித்துத் தேரைக்கொண்டே விஜயவ்யாபாரங்களடையப் பண்ணினாய்த்து. (மாயமாக்கி) ஆச்சர்யங்களை யுண்டாக்கி. அதாவது-பகலை யிரவாக்குகையும், "ஆயுதமெடேன்" என்று ஆயுதமெடுக்கையும்; ஆச்ரிதார்த்தமாகக் காலவ்யவஸ்தையையும் தன்ஸ்வபாவ வ்யவஸ்தையையும் அழித்தானென்கை. (நின்றுகொன்று) அர்ஜுநன் செய்தானென்னும்படி முகந்தோற்றாமே நின்று எதிரிகளைக்கொன்று.

(வென்றிசேர் மாரதர்க்கு வான்கொடுத்து) நாம் யுத்தோந்முகரானவன்று விஜயமும் நம்மது, அத்தாலே பூமியும் நம்மதாகக்கடவதென்றிருந்த மஹாரதரான துர்யோதநாதிகளென்ன, அவர்களுக்குத் துணையாய்வந்தத்ரோணாதிகளென்ன, இவர்களுக்கு வீரஸ்வர்க்கத்தைக்கொடுத்து. (வையமைவர்பாலதாஞ் சீர்மிகுத்தநின்னலால்) அவர்களுக்கு "ஒருபதந்யாஸமுங்கொடோம், ஸாகல்யேந எங்களதாக வேணும்" என்றிருந்த பூமியை பாண்டவர்கள் பக்கலிலேயாம்படி புகழைமிகுத்த வுன்னையொழிய. சீர் - புகழ். பாண்டவர்கள் விஜயிகளாய் பூமியை ஸாகல்யேநலபித்தார்களென்னும்படி புகழ்மிகுத்த வென்னுதல்; "ஆச்ரிதபக்ஷபாதி" என்னும் தன்புகழை மிகுத்தானென்னுதல். (ஓர்தெய்வம் நான் மதிப்பனே) ஆச்ரிதபக்ஷபாதியென்றறிந்த நான் வேறொரு தைவத்தை ஆச்ரயணீயமாக நினைப்பேனோ. ... ... ... (அ௯)

அ.—தொண்ணூறாம்பாட்டு. உன்னையொழிந்தாரொருவனை ஆச்ரயணீயனென்றிரேனென்று தம்முடைய அநந்யகதித்வம் சொன்னார் - கீழ்; இப்பாட்டில் - ஆச்ரயணீயர் தேவரீரேயானாலும் தேவரீரை லபிக்கைக்கு தேவரீர்திருவடிகளையொழிய என்பக்கல் உபாயமென்று சொல்லலாவதில்லையென்றுதம்முடையஆகிஞ்சந்யத்தை யருளிச்செய்கிறார்.

குலங்களாயவீரிரண்டிலொன்றிலும்பிறந்திலேன்
நலங்களாயநற்கலைகள்நாவிலும்நவின்றிலேன்
புலன்களைந்தும்வென்றிலேன்பொறியிலேன்புனிதநின்
இலங்குபாதமன்றிமற்றோர்பற்றிலேனெம்மீசனே. (௯0)

ப - ரை.—பொறியிலேன் - கண்ட கண்ட விஷயங்களிலே வீழ்த்தும்சப்தாதிவிஷயங்களுக்கு வசப்பட்டு நடக்குமவனாய், புலன்களைந்தும் வென்றிலேன் - பஞ்சேந்த்ரியங்களையும் நானிட்டவழக்காய் நடத்த சக்தியற்றவனாய், நலங்களாய - சேதநருடைய குணாநுகூலமாக நல்வழி போகைக்குடலாய், நற்கலைகள் நாவிலும் - மோக்ஷஸாதநங்களான நான்குவேதங்களிலும், நவின்றி

லேன - அப்யஸிக்கப்பெற்றிலேனாய், குலங்களாய வீரிரண்டிலொன்றிலும் - நாலுவர்ணங்களில் ஒருவர்ணத்திலும், பிறந்திலேன் - பிறவாதவனாயிராநின்றேன்; புநித - ஸ்வஸ்பர்சத்தாலே யாவரையும் சுத்தராக்கவல்ல சுத்தியோகமுடையனாய், எம்மீசனே - அகதிகளான எங்களுக்கு நிர்வாஹகனானவனே, நின் - தேவரீருடைய, இலங்கு - விளங்காநின்றுள்ள, பாதமன்றி - திருவடிகளையொழிய, மற்றோர்பற்றிலேன - வேறொரு ஜீவநோபாயத்தை யுடையேனல்லேனென்கிறார். (௯0)

வ்யா.—(குலங்களாயவித்யாதி) இப்பாட்டு "பொறியிலேன்" என்கிற பதந் தொடங்கிக் கீழ்நோக்கிக் காரணபரம்பரையாலேயும் பாடக்ரமத்தாலே கார்யபரம்பரையாலேயும் இரண்டுமுகமாக நிர்வஹித்துப்போரும். நம்மை லபிக்கைக்கு உம்முடைய பக்கலுள்ளதென்னென்ன; ஸம்ஸாரபீஜமான சப்தாதிவிஷயங்களிலே யகப்பட்டு நின்றேன், இதிறே என்பக்கலுள்ளது. "பொறி" என்று-சப்தாதிவிஷயங்களைச் சொல்லுகிறது, வறல்நாற்றத்தைக் காட்டி யகப்படுத்திக்கொள்ளுமதாகையாலும், அகப்பட்டால்பின்பு புறப்படவிரகற்றிருக்கையாலும்,விநாசத்தோடேதலைக்கட்டுகையாலும்.

சப்தாதிவிஷயங்களை புருஷார்த்தமென்று ஸாதநாநுஷ்டாநம் பண்ணுகிற ஸம்ஸாரத்திலே இது அகப்படத் தகாதென்றறிந்த நீர் அவ்விஷயங்களிலே இந்த்ரியங்கள் போகாமே நோக்க மாட்டிற்றிலீரோவென்ன (புலன்களைந்தும் வென்றிலேன்) இந்த்ரியங்கள் ஸ்வவசத்திலே யென்னைக்கொடுபோக அவையிட்ட வழக்காய்த் திரிந்தே னித்தனைபோக்கி அவற்றிலே யோரிந்த்ரியத்தை நியமிக்க க்ஷமனாயத்திலேன். "इन्द्रियाणि प्रमाथीनि हरन्ति प्रसभं मनः" "இந்த்ரியாணிப்ரமாதீநி ஹரந்திப்ரஸபம்மந:"என்னக்கூடவதிறே. "धर्मेण पापमपनुदति" "தர்மேணபாபமபநுததி"என்றும், "शान्तो दान्त उपरतः" "ஶாந்தோதாந்தஉபரத:" என்றுமித்யாதிகளாலே வேதங்கள் இந்த்ரியஜயத்துக்கு வழிசொல்லாநின்றன, அவ்வேதங்களிலே யிழிய் மாட்டிற்றிலீரோ வென்ன (நலங்களாய நல்கலைகள் நாலிலும் நவின்றிலேன்) நலங்களாயகலைகளாவது - "त्रैगुण्यविषया वेदाः" "த்ரைகுண்யவிஷயாவேதா:" என்கிறபடியே சேதநருடைய குணாநுகூலமாக நின்றநின்ற நிலைகளிலே நலவழிபோக்கும்படி மாதாபித்ர்சதங்களிற் காட்டில் வத்ஸலதரங்களாகை. நற்கலைகளாவது-மோக்ஷத் ஸாதநங்களிலே நோக்கையுடைத்தாகை.

---

அ.— தொண்ணூறாம்பாட்டு. பாடக்ரமம் * பொறியிலேன் தொடங்கி பதம் பேதியாமல் கீழ்நோக்கி அவரோஹணமாகவருகை. கார்யபரம்பரையாவது - ஒன்றினுடையகார்யம் ஒன்றினுக்காகக்கொண்டு அடிதொடங்கி மேல்நோக்கி ஆரோஹணமாகப் போருகை.

இப்படிப்பட்ட நாலுவேதங்களிலும் இகிலிக்கப் பெற்றிலேன். நவிலுதல் - பயிலுதல். கலை - வேதம். ப்ரதமத்திலே அத்யயநம் பண்ணினார்க்கிறே தத்பலமான வநுஷ்டாநம், அதிறே இந்த்ரியஜயத்துக்கு ஸாதநம். ஆக இப்படி இந்த்ரியஜயத்தில் நான் தூரஸ்தனென்கை.

இந்த இந்த்ரியஜயத்துக்கு ப்ரதமஸாதநமான அத்யயநாதிகளில் இழியாதொழிவானென்னென்னில(குலங்களாயவீரிரண்டிலொன்றிலும் பிறந்திலேன்) உபேக்ஷையாலே இழியாதொழிந்தேனல்லேன், அயோக்யனாகையாலே யிழியப்பெற்றிலேன். அத்யயநம் த்ரைவர்ணிகாதி காரமிறே. சதுர்த்தவர்ணத்திலே ஜநித்தவனுக்கும் பாகயஜ்ஞாத் யதிகாரமுண்டு, த்ரைவர்ணிக சுச்ரூஷணத்திலே யதிகாரமுண்டு,அத்தாலே விரோதிபாபம்போகையாலே இந்த்ரிய ஜயத்துக்கு ஸாதநமாகலாம், அந்நாலுவர்ணத்திலும் பிறக்கப் பெற்றிலேன். இவ்வுத்க்ர்ஷ்ட வர்ணத்திலே ரிஷிபுத்ரராய்த்திருவவதரித்த விவர் நாலுவர்ணத்திலே பிறந்திலேனென்பானென்னென்னில்; யதுகுலத்திலே யவதரித்தக்ர்ஷ்ணன் வளர்ந்தருளின கோபகுலத்தையே தனக்குக் குலமாக நினைத்திருந்தாபபோலே, இவரும் வளர்ந்தருளினபடியை நினைத்தருளிச் செய்கிறார். "గోపాలో యాదవంవంశం మగ్నమభ్యుద్ధరిష్యతి" "கோபாலோயாதவமவம்ஶம்மக்நமப்யுத்தரிஷ்யதி" என்று அவதரித்த குலம் கோபகுலம, ரக்ஷ்ய குலம் யதுகுலமாகச் சொல்லாநின்றதிறே. "స పితా యస్తు పోషక:" "ஸபிதாயஸ்துபோஷக," என்னக்கடவதிறே. அதவா, நாலுவர்ணத்திலும்எனக் கந்வயமிலலாதபடியாலே த்ரைவர்ணிகர்க்கே விஹிதமான அத்யயநத்துக்கு அயோக்யனானேன், அத்யயநம் பண்ணப்பெறாமையாலே வேதார்த்தஜ்ஞாநமில்லையாய்,அதின்பலமான வேதார்த்தாநுஷ்டாந மில்லாமையாலே இந்த்ரியஜயம் பண்ணப் பெற்றிலேன். அஜிதேந்த்ரியனாகையாலே விஷயங்களின்கையிலே யகப்பட்டு நின்றேனென்கிறாரென்னவுமாம. ஸம்ஸாரபீஜமான விஷயாந்தர ப்ராவண்யமொழிய உம்முடைய பக்கலொருமுதலில்லையாகில் உமக்குஉஜ்ஜீவந ஹேதுவாக நீர்நினைத்திருந்ததென்னென்ன (புநித)விஷயாந்தரப்ராவண்யத்தாலே அசுத்தராய்த் தந்தாம் பக்கல்சுத்திஹேதுவின்றிகேயிருக்கும் குறைவாளரையும்ஸ்வஸ்பர்சத்தாலே சுத்தராக்கவல்ல சுத்தியையுடையவனல்லையோ.

---

(அதிகாரமிறே) நாலுவர்ணத்திலு மென்பானென்ன என்று பூரிப்பது. பாகயஜ்ஞம்-யாகத்துக்கு உபசிக்கைக்கு காஷ்டாதி சுச்ரூஷைபண்ணுகை. அநுஷ்டாநகார்யமாக என்றது-அநுஷ்டாநத்தாலே யுண்டான சுத்திக்கு ஹேதுவான கீழ்ச்சொன்னஜந்மாதிகளில்லாத குறைவளரையுமென்றபடி. ... ... (௯0)

அதாவது-உத்க்ருஷ்டஜந்மமென்ன, வேதஸ்பர்சமென்ன, வேதார்த்தாநுஷ்டாநமென்ன, இவற்றினுடைய ஸ்தாநத்திலே பகவதநுக்ரஹம் நின்று விஷயாந்தரப்ராவண்யத்தைத் தவிர்த்துத் தருகை. (மின்னிலங்கு பாதமன்றி மற்றோர்பற்றிலேன்) இருட்டு மிக்கதனையும் விளக்கொளி வீறுபெறுமாப்போலே, குறைவாளர்க்கு முகங்கொடுக்கையாலே விளங்காநின்றுள்ள திருவடிகளை யொழிய வேறு ஜீவனோபாயத்தை யுடையே னல்லேன். (எம்மீசனே) வேறுமுதலின்றிக்கே அகதிகளான எங்களுக்கு நிர்வாஹகனானவனே. (௯0)

அ.—தொண்ணூற்றோராம்பாட்டு. "[illegible]" "பராஸ்த்ரபலம்ப்ரயோக்தரி" என்றுபேறு உம்மதானால் உமமுடையவிரோதிநிவர்த்திக்கு நீரேகடவீராகவேண்டாவோ, "மின்னிலங்குபாதமன்றிமற்றோர்பற்றிலேன்" என்கிறதெத்தாலேயென்ன; ப்ராங்ந்யாயத்தாலே. அதெங்ஙனே யென்னில்; அசோகவநிகையிலேயிருந்தபிராட்டிதேவரீரைலபிக்கைக்கு ராக்ஷஸவதத்திலே அவள்யத்நம் பண்ணுமன்றன்றே நான் என்னுடையவிரோதியைப்போக்குகைக்குயத்நம்பண்ணுவது, ஆனபின்பு அநந்யகதியாய் அகிஞ்சநனான என்னை ஸ்வரக்ஷணத்திலேமூட்டி அகற்றுதொழியவேணுமென்கிறார்.

பண்ணுலாவுமென்மொழிப்படைத்தடங்கணாள்பொருட்டு
எண்ணிலாவரக்கரைநெருப்பினால்நெருக்கினாய்
கண்ணலாலோர்கண்ணிலேன்கலந்தசுற்றம்மற்றிலேன்
எண்ணிலாதமாயநின்னையென்னுள்நீக்கலென்றுமே. (௯௧)

ப-ரை.—பண்ணுலாவு - பண்ணோடே சேர்ந்த, மெல் - மார்த்வமான, மொழி - பேச்சையுடையளாய், படை - வாள்போலே ஒளியையும், தடம்-வைசால்யத்தையுமுடைத்தான, கணாள் பொருட்டு - திருக்கண்களை யுடையளான ஸ்ரீஜநகராஜன்திருமகள்நிமித்தமாக, எண்ணிலா - அஸங்க்யாதரான, அரக்கரை - ராக்ஷஸர்களை, நெருப்பினால் - சராக்நியாலே, நெருக்கினாய் - அழியச்செய்தநீயே, கண் அலால் - எனக்கு நிர்வாஹகனல்லாமல், ஓர்கண்ணிலேன்-வேறொரு நிர்வாஹகனையுடைத்தாகாதவனாய், கலந்த - நெஞ்சுக்குப் பொருந்தின, சுற்றம் - பந்துவர்க்கத்தை, மற்றிலேன் - வேறேயுடைத்தாகாதவனாயிராநின்றேன்; எண்ணிலாதமாய - அஸங்க்யேயமான ஆச்சர்யசக்தியையுடையவனே, நின்னை - ஸர்வசக்தியாயிருக்கிற உன்னை, என்னுள் - அகிஞ்சநனான வென்பக்கல் நின்றும், என்றும் - நான் கலங்கினவன்றும், நீக்கல் - அகற்றுதொழியவேணும். (௯௧)

வ்யா.—(பண்ணுலாவுமென்மொழி) பண்ணோடேசேர்ந்த ம்ருதுவான பேச்சையுடையவள். "[illegible]" "மதுராமதுராலாபாகிமாஹமமபாமிநீ" என்றுசக்ரவர்த்தித்திருமகன் வாய்ப்புலத்தும்படி வார்த்தைப்பாடுடையவளிறே. "பண்ணைவென்றவின்சொல்மங்கை" என்றவளிறே. (படைத்தடங்கணாள் பொருட்டு) வாள்போலேயொளியையும் இடமுடைமையையுமுடைத்தான திருக்கண்களையுடைய ஸ்ரீஜநகராஜன் திருமகள் பொருட்டு.

“నజీవేయంక్షణమపివినాతామసితేక్షణామ్” “நஜீவேயம் க்ஷணமபிவிநாதாம ஸிதேக்ஷணாம்” என்று அவர்வ்யதிரேகத்தில் தரிக்கமாட்டாதகண்க ளிறே. ஆகஎதிர்த்தலையை “அகலகில்லேன்” என்னப்பண்ணும்பேச் சழகையும் கண்ணழகையு முடையவளென்கை. தம்முடைய வெறு மைசொல்ல விழிந்தவர் பிராட்டியுடைய வேற்றங்களைசொல்லுகி றது, நிக்ருஷ்டமான விவ்வாத்மஸ்வரூபம்பிராட்டியோபாதியும் ஸ்ரீகௌஸ்துபத்தோபாதியும் விலக்ஷணமென்கைக்காக. ஜ்ஞாநம் பிறந்தபின்பு பிராட்டி அசோகவநிகையிலே யிருந்தாப்போலே, அஸஹ்யமிறே சேதநனுக்கு சரீரவாஸமும். (எண்ணிலாவரக்க ரை) அவளைப்போலே விரோதிகள் அஸங்க்யாதராகவேணுமோ, அஞ்சானலாகாதோ. (நெருப்பினால்நெருக்கினாய்கண்) சராக்நியா லே யழியச்செய்தநீ எனக்கு நிர்வாஹகனென்னுதல். “యథారాఘవనిర్ముక్తశ్శరః” “யதாராகவநிர்முக்தஶ்ஶர:” என்கிறபடியே ஶராஸ்தா நீயனை திருவடியையிட்டு லங்கையைதஹித்து, ராக்ஷஸரைக் கண்கலங்கும்படிபண்ணினநீ எனக்கு நிர்வாஹக னென்னுதல். இத்தால் - என்னுடைய விரோதிவர்க்கத்தையும் பஸ்மமாகப் பண் ணவேணுமென்கை.

(அலாலோர்கண்ணிலேன்) “లోకానాంత్వంపరోధర్మః” “லோகா நாம்த்வம்பரோதர்ம:” என்கிற தேவரீரையொழிய வேறொரு நிர் வாஹகனை யுடையேனல்லேன். “தயரதற்குமகன்றன்னை யன்றி மற்றிலேன்றஞ்சம” என்கிறார். “నత్వాకుర్మిదశగ్రీవభస్మ” “நத்வாகுர்ம் மி தஶக்ரீவபஸ்ம” என்று - பிராட்டிக்கு சக்தியுண்டாயிருக்க ப்ராப்தியில்லாமையாலே தவிர்ந்தாள், எனக்கு ஶக்தியுமில்லை யென்கிறார். (கலந்தசுற்றம்மற்றிலேன) நெஞ்சுக்குப்பொருந்தின பந்துவர்க் கத்தை வேறுடையேனல்லேன். உத்பாதகரான மாதா பிதாக் கள் தைவம் ரக்ஷிக்கிறதென்று காட்டிலேவிட்டுப் போனார்கள், வளர்த்தவர்களை “పితరంమాతరందారాన్” “பிதரம்மாதரம்தாராந்” என்கிறபடியே நான்விட்டேன். “భ్రాతాభర్తాచబన్ధుశ్చపితాచమమరాఘ వః” “ப்ராதாபர்த்தாச பந்துஶ்ச பிதாச மமராகவ:” என்கிற படியே ஸர்வவிதபந்துவும் தேவரீரேயென்கிறார். பிராட்டிக்குத் தனியிருப்பிலே திருவடிவந்து முகங்காட்டினார், அப்படியேயிருப் பதொரு குளிர்ந்தவிழியும் தேவரீரை யொழிய எனக்கில்லை யென் கிறார். ஜநககுலத்தில் பிறந்தவாபிஜாத்யமுண்டு அவளுக்கு. “குல ங்களாயவீரிரண்டிலொன்றிலும் பிறந்திலேன்” என்றிறோ நீசொன்ன

---

தொண்ணூற்றோராம்பாட்டு. பிராட்டியோட்டை ஸாம்யமு ண்டானால் அசோகவநிகைஸ்தாநம் இவனுக்கேதென்ன; அருளிச் செய்கிறார் (ஜ்ஞாநம்பிறந்தபின் இத்யாதி.) ... ... (கூக)

(எண்ணிலாதமாய) அஸங்க்யேயமானவாஸ்சர்ய சக்தியையுடைய வனல்லேயோ. இத்தால் - நிஹீநஜந்மாவாய சாஸ்த்ராதிகாரியும ன்றிக்கே யிருந்துள்ள பக்ஷிக்கு மோக்ஷங்கொடுத்த சக்தியன்றோ தேவரீருடைய ஶக்தியென்கை. ராவணன்குறியழியாமே யிருக்க இக்கரையிலே அவன்தம்பியை லங்காராஜ்யத்துக்கு அபிஷேகம் பண்ணிற்று அவன் ஜந்மம்பார்த்தோ. "[illegible]" "அபி ஜ்ஞோராஜதர்மாணும்" என்கிறபடியே அவன் ஜ்ஞாநாதிகயென்ன; * அன்று சராசரங்களை வைகுந்தத்தேற்றிற்று ஜ்ஞாநாஜ்ஞாநங்களி ல் உள்மானம் புறமானம் பார்த்தோ. (நின்னையென்னுள் நீக்கல்) ஸர்வசக்தியாயிருந்துள்ள 'வுன்னை, அகிஞ்சநனாயிருந்துள்ள வென் பக்கல்நின்றும், க்ஷுத்ரமான வுபாயாந்தரங்களைக்காட்டியகற்றுதொ ழியவேணும். (என்றுமே) நான்கலங்கினவன்றும என்னை விடா தொழியவேணும். ... ... ... ... (கூக)

அ.—தொண்ணூற்றிரண்டாம்பாட்டு. "நின்னையென்னுள் நீக் கல்" என்றீர், நாம் உம்மையகலாதொழிகைக்கு நம்மளவிலே நீர் செய்ததென், நாம் உமக்குச்செய்யவேண்டுவதென்னென்ன; நிரு பாதிகசரண்யரான தேவரீர்திருவடிகளிலே ப்ரவணனான என்னை "உன்னுடையகார்யம் எனக்குபரம், நீ பயப்படவேண்டா" என்று என் பயந்தீர "[illegible]" "[illegible]" என்னவேணுமென்கிறார்.

விடைக்குலங்களேழடர்த்துவென்றிவேற்கண்மாதரார்
கடிக்கலந்ததோள்புணர்ந்துகாலியாய! வேலைநீர்
படைத்தடைத்ததிற்கிடந்துமுன்கடைந்தநின்றனக்கு
அடைக்கலம்புகுந்தவென்னையஞ்சலென்னவேண்டுமே. (கூஉ)

ப - ரை.—முன் - முதல் முதலில், வேலைநீர்படைத்து - ஏகார்ணவத்தை ஸ்ருஷ்டித்து, அதில் கிடந்து - க்ஷீராப்தியிலே கண்வளர்ந்தருளி, அடைக்கலம் புகுந்த இந்த்ராதி தேவர்களுக்காக, கடைந்து-அதனைக்கடைந்து அம்ருதத்தைக் கொடுத்து, ராவணாதிகளால் குடியிருப்பிழந்த தேவர்கள் நிலைநிற்கைக்காக, அடைத்து - ஸேதுபந்தம்பண்ணி, குலம் - நாநாவர்ணமான, விடையேழடர்த் து - ரிஷபங்களேழையும் ஊட்டியாக நெரித்து, ஸர்வரையும் கண்களாலே தோற்பிக்கும் தேவரீரையும், வென்றி - வெற்றிகொள்ளத்தக்கதாய், வேல் - வேல்போன்ற, கண் - நோக்கையுடையளான, மாதரார்- நப்பின்னைப்பிராட்டி யுடைய, கடிக்கலந்த - பரிமளிதமான, தோள்புணர்ந்து - தோளையநுபவித்து, அவளுக்குப்ரியமாக, காலி - பசுக்களை மேய்க்கும், ஆய - இடையனே, நின்ற னக்கு - தேவரீர் திருவடிகளை, அடைக்கலம் புகுந்த வென்னை - சரணமாக ப்பற்றினவென்னை, அஞ்சலென்னவேண்டும் - பயப்படாதே யென்று ஒருவார் த்தை யருளிச்செய்யவேணும். (கூஉ)

வ்யா.—(விடைக்குலமித்யாதி) "முன் - வேலைநீர்படைத்து அதிற்கிடந்து-கடைந்து-அடைத்து - விடைக்குலங்களேழடர்த்து வென்றிவேல்கண் மாதரார் கடிக்கலந்ததோள்புணர்ந்த காலியாய - நின்மனக்கடைக்கலம் புகுந்தவென்னை யஞ்சலென்னவேண்டும்" என்றந்வயம். (முன்வேலைநீர்படைத்து) "అప ఏవ ససర్జాదౌ" "அபஏவ ஸஸர்ஜாதௌ" என்கிறபடியே ஏகார்ணவ ஸ்ர்ஷ்டியைப்பண்ணி. "வேலைநீர்" என்று - எல்லையான கடலென்னுதல்; திரைக்கிளர்த்தியை யுடைத்தான கடலென்னுதல். "வேலை" என்று - எல்லையும், திரையும். "நீர்" என்று - கடல். (அதில்கிடந்து) - அதிலே கிடந்து. ஸ்ர்ஷ்டமான ஜகத்திலே சேதநர்க்கு ஆச்ரயணருசிபிறந்தவன்று சரண்யரானநாம்தூரஸ்தராகவொண்ணாதென்று க்ஷீராப்தியிலே கண்வளர்ந்தருளி. (கடைந்து) அக்கிடைபலித்து தேவதைகள் ஐச்வர்யத்தை யிழந்து, "శరణం త్వామనుప్రాప్తాః సమస్తా దేవతాగణాః" "ஶரணம்த்வாமநுப்ராப்தாஸ் ஸமஸ்தாதேவதாகணா:" என்கிறபடியே சரணம்புகுர; அவர்கள்இழந்தவற்றை, கடலைக்கடைந்து அக்கடலிலே யுண்டாக்கிக்கொடுத்தவனென்கை. (அடைத்து) அந்ததேவதைகளைக் குடியிருப்பழியும்படி அதிக்ரமத்திலே நடந்த ராவணநிரஸநார்த்தமாக. தசரதாத்மஜனாய் வந்தவதரித்து லவணார்ணவத்தை யடைத்து. (விடைக்குலமித்யாதி) ப்ரஹ்மாதிகளுக்கு சரண்யனாய் அவர்களாபத்திலே யுதவினவளவன்றிக்கே, தாழ்ந்தார்க்கு முகம்கொடுக்கைக்காக கோபஸஜாதீயனாய்வந்தவதரித்து ரக்ஷித்தபடி சொல்லுகிறது மேல் (விடைக்குலங்களேழடர்த்து) விடையேழடர்த்தென்னுதல், விடைக்குலமடர்த்தென்னுதல் செய்யாதே இப்படி சொல்லுகிறது, "చాతుర్వర్ణ్యం మయా సృష్టమ్" "சாதுர்வர்ண்யம்மயாஸ்ர்ஷ்டம்" என்கிறபடியே கோஜாதியிலும் வர்ணபேதமுண்டாகையாலே. நாநாவர்ணமான ரிஷபங்களேழையுமடர்த்து. நப்பின்னைப்பிராட்டியோட்டை போசத்துக்கு இடைசுவராகையாலே நாநாஸ்வபாவங்களானவிடையேழையு மூட்டியாகநெரித்து. குலம்-வர்ணம். "குலங்களாய வீரிரண்டிலொன்றிலும் பிறந்திலேன்" என்றாரிறே. (வென்றிவேல்கண் மாதரார் கடிக்கலந்ததோள்புணர்ந்த காலியாய) "జితన్తే పుణ్డరీకాక్ష" "ஜிதந்தேபுண்டரீகாக்ஷ" என்றும், "தூதுசெய்கண்கள்" என்றும் சொல்லுகிறபடியேஸர்வரையும்கண்களாலேதோற்பிக்கும்தேவரீரையும் தோற்பிக்கவல்லநோக்கையுடைய நப்பின்னைப்பிராட்டி

---

தொண்ணூற்றிரண்டாம்பாட்டு. இழந்தவற்றை-இழந்தபதார்த்தத்தை. (கடிக்கலந்த) கலக்கை—எங்கும் வ்யாபிக்கையாய், அத்தால் - மிகுதிசொல்லுகிறது.

யுடைய பரிமளிதமான தோளையநுபவித்து, அவளுக்குப்ரியமாக ரக்ஷகா பேக்ஷையுடைய பசுக்களுடைய ரக்ஷணமே ப்ரயோஜநமாயிருக்கு மவனே. "సర్వగన్ధః" "ஸர்வகந்த:" என்கிற அவன் திருமேனியையும் பரிமளிதமாக்கும் தோளென்கை. "యువతిశ్చ కుమారిణీ" "யுவதிஶ்சகுமாரிணீ" என்கிறபடியே ஸ்வஸத்ர்ஶமான பருவத்தை யுடையவளாகையாலே செவ்வியையுடைய தோளென்னவுமாம். (வென்றிவேல்கண்) வென்றியை விளைக்கும் வேல்போலே நோக்கையுடைய கண். "கடி" என்று - செவ்வியும், நாற்றமும். (நின்றனக்கடைக்கலம் புகுந்தவென்னை) "యో బ్రహ్మాణం విదధాతి పూర్వమ్" "முமுக்ஷுர்வை ஶரணமஹம்ப்ரபத்யே" "யோப்ரஹ்மாணம்விததாதிபூர்வம்" "முமுக்ஷுர்வை சரணமஹம்ப்ரபத்யே" என்று-ஜகத்காரண வஸ்து சரண்யமென்னுமிடம் சுருதிஸித்தம். "శరణన్త్వామనుప్రాప్తాః" "ஶரணம்த்வாமநுப்ராப்தா:" என்றும், "లోకనాథంపరోధర్మః" "லோகநாதம்வம்பரோதர்ம:" என்றும்-வ்யூஹவிபவங்களில் ஶரண்யதை ஆப்தவாக்யஸித்தம். அங்ஙனன்றிக்கே, "మామేకం శరణం వ్రజ" "மாமேகம்ஶரணம்வ்ரஜ" என்று, தேவரீர்திருவடிகளிலே ப்ரவணனான வென்னை. (என்னை) அநந்யஶரணனான வென்னை. அடைக்கலம்புகுருகையாவது - என்கார்யம் தேவரீர்க்கே பரமென்று பற்றுகை. "త్వయి వాస్మి హి భరః" "த்வயிவாஸ்மிஹிபர:" என்னக்கடவதிறே. (அஞ்சலென்னவேண்டுமே) தேவரீர்பூர்த்தியையுமென் சிறுமையையும் இடைச்சுவரான விரோதியின்கநத்தையும்பார்த்து நானஞ்சாதபடி "మాశుచః" "மாஶுச:" என்று ஒருவார்த்தை யருளிச்செய்யவேணும். "మామేకం శరణం వ్రజ" "மாமேகம்ஶரணம்வ்ரஜ" என்றதேவரீர்க்கு, "సర్వపాపేభ్యో మోక్షయిష్యామి" "ஸர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமி" என்கைஅரிதோ. ... ... (கூ௨)

அ.—தொண்ணூற்றுமூன்றாம்பாட்டு. "அடைக்கலம் புகுந்த வென்னை யஞ்சலென்னவேண்டும்" என்று-என்பயங்கெட "మాశుచః" "மாஶுச:" என்னவேணுமென்றார் - கீழ், இவ்வளவமையுமேயென்ன; உபாயாந்தரங்களைக் காட்டி என்னை யகற்றுதொழிகைக்காகச் சொன்ன வார்த்தையன்றோவது, தேவரீருடைய நிரதிஶயபோக்யதையைக்கண்டு அநுபவிக்க ஆசைப்படுகிறவெனக்கு விஷயாந்தர நிவ்ர்த்திபூர்வகமாக தேவரீரையே நான் அநுபவிக்கும்படி என்பக்கலிலே யிரங்கியருளவேணுமென்று பெரியபெருமாள் திருவடிகளி லநுபவத்தை யபேக்ஷிக்கிறார்.

---

"நின்றனக்கு" என்கையாலே – வ்யூஹவிபவாந்தரங்களை வ்யாவர்த்திக்கிறது. ... ... ... ... ... (கூ௨)

சுரும்பரங்குதண்டுழாய்துதைந்தலர்ந்தபாதமே
விரும்பிநின்றிறைஞ்சுவேற்கிரங்கரங்கவாணனே
கரும்பிருந்தகட்டியேகடற்கிடந்தகண்ணனே
இரும்பரங்கவெஞ்சரந்துரந்தவில்லிராமனே. (கூக)

ப - ரை.—கரும்பிருந்தகட்டியே - ஸ்வாபாவிகமான ரஸத்தையுடையகனைல்போலே நிரதிசயபோக்யனானவனே, கடல்கிடந்த கண்ணனே - திருப்பாற்கடலிலே அபேக்ஷாநிரபேக்ஷமாகக்கண்வளர்ந்தருளுமவனாய், இரும்பு அரங்க - இரும்புபோன்ற எதிரிகள் சரீரத்திலே யழுந்துமபடி, வெஞ்சரம் - க்ரூரமான அம்புகளை, துரந்த - விட்ட, வில் இராமனே - வில்லையுடைய தசரதாத்மஜனாய், அரங்கவாணனே - கோயிலுக்கு நிர்வாஹகனாய்க்கொண்டுகண்வளர்ந்தருளுமவனாய், சுரும்பு - வண்டுகளானவை, அரங்கு - படிந்த, தண் - குளிர்ந்த, துழாய் - திருத்துழாய்த்தாரானது, துதைந்து - நெருங்கி, அலர்ந்த - விகஸியாநின்றுள்ள, பாதமே - திருவடிகளிலே, விரும்பி நின்று - அநுபவருசிபிறந்து, இறைஞ்சுவேற்கு - அநுபவிக்கையிலே யிழிந்தவென விஷயத்திலே, இரங்கு - க்ருபை பண்ணியருளவேணுமெனகிறார். (கூக)

வ்யா.—(சுரும்பரங்குதண்டுழாய்த்துதைந்தலர்ந்தபாதமே) வண்டுபடிந்து ச்ரமஹரமான திருத்துழாய்த் தாரானது அலர்ந்து வருகிற திருவடிகளையே. இத்தால் - திருத்துழாயோட்டை ஸம்பந்தத்தாலே ஸர்வாதிக வஸ்துவென்னு மிடத்தையும், திருவடிகளோட்டைச் சேர்த்தியாலே திருத்துழாய்க்குச் செவ்வியும் விகாஸமு முண்டாகையாலே, திருவடிகளோடே சேர்ந்ததற்கு செவ்வியும் விகாஸமுமுண்டாமென்னு மிடத்தையும், திருத்துழாயாலே அலங்க்ர்தமா யிருக்கையாலே நிரதிசயபோக்யமென்னு மிடத்தையும் சொல்லிற்று.(விரும்பிநின்றிறைஞ்சுவேற்கிரங்கு) அநுபவருசி பிறந்து அநுபவிக்கையிலே யிழிந்த வெனக்கு இரங்கு. இவன் நாசகரமான விஷயாந்தரத்தில்நின்றும் மீளுவான், நிரதிசயபோக்யமானநம்மை யநுபவிப்பானென்று க்ர்பைபண்ணி யருளவேணும். தேவரீர்க்கு ஒருஇரக்கமாத்ரம், அது இவ்வாத்மாவுக்கு உஜ்ஜீவநம்; ஆனபின்பு இத்தனையும்செய்தருளவேணும்.(அரங்கவாணனே) கோயிலுக்கு நிர்வாஹகனாய்க்கொண்டு கண்வளர்ந்தருளுகிறவனே. தந்தாம்பக்கல் முதலின்றிக்கே யிருக்க வநுபவத்திலே யிழிந்தவர்களுக்கும் தேவரீரழகாலே விஷயாந்தரப்ரவண்யத்தைத் தவிர்த்து, தேவரீர்பக்கல் ஆதரத்தைப்பிறப்பித்து அநுபவிப்பிக்கைக்காகவன்றோ கோயிலிலே வந்து கண்வளர்ந்தருளுகிறது. "போதரோ யென்று சொல்லிப்புந்தியில்புகுந்து தன்பாலாதரம்பெருகவைத்த வழகன்" என்னக்கடவதிறே.

---

தொண்ணூற்றுமூன்றாம்பாட்டு. (துதைந்து) செவ்வியாய், இரக்குமெனக்கு ஜீவநமென்று பூரிப்பது.

(கரும்பிருந்தகட்டியே) இவர்க்கு ருசிபிறப்பித்த வுபாத்யாயரைச் சொல்லுகிறது. கோதுண்டாதல் கழிக்குமம்சமுண்டாதலின்றிக்கே ஸர்வதோமுகமாய் ஸாரஸ்யத்தையுடைத்தாய், பாகவிசேஷத்தால் வந்த ஸாரஸ்யமின்றிக்கே ஸ்வாபாவிகமான ஸாரஸ்யத்தை யுடைத்தாயிருப்பதொரு கன்னல்போலே நிரதிசயபோக்யனானவனே. (கடல்கிடந்த கண்ணனே) பெரியபெருமாளுடைய அகந்தத்தைச் சொல்லுகிறது. திருப்பாற்கடலிலே அபேக்ஷாநிரபேக்ஷமாகக் கண்வளர்ந்தருளுகிற ஸௌலப்யத்தையுடையவனே. ப்ரஹ்மாவுக்கு க்ஷீராப்திநாதன் உகந்தருளினபடியாலே அங்குத்தைஸௌலப்யமும் வடிவழகும் பெரியபெருமாள்பக்கலிலே ப்ரத்யபிஜ்ஞை பண்ணலாம்படியிறே யிருப்பது. (இரும்பரங்க வெஞ்சரந்துரந்த வில்லிராமனே) எதிரிகள்சரீரத்திலே யழுந்தும்படி *தீப்தபாவக ஸங்காசமான அம்புகளைவிட்ட வில்லையுடைய தசராதாத்மஜனே. இத்தால் - "நஞ்சேவகனார் மருவிய பெரியகோயில்" என்கிறபடியே சக்ரவர்த்தித்திருமகனுடைய வீரமும்அபிராமதையும் பெரியபெருமாள்பக்கலிலே அநுபவிக்கலாயிருக்கை. "மேகஶ்யாமம் மஹாபாஹும் ஸர்வஸத்வமனோஹரம்" "மேகஶ்யாமம் மஹாபாஹும் ஸர்வஸத்வமநோஹரம்" என்னக்கடவதிறே. ப்ராப்தராய் ஸந்நிஹிதராய நிரதிஶய போக்யபூதராய விரோதிநிரஸந ஶீலராய் தேவரீரிருக்க இத்தலையில ருசியுண்டாயிருக்க நான் இழக்கவேண்டுகிறதென்? இரங்கி யருளவேணுமென்கை. "கரும்பிருந்தகட்டியே-கடல்கிடந்தகண்ணனே - இரும்பரங்கவெஞ்சரந்துரந்தவில்லிராமனே - அரங்கவாணனே-சுரும்பரங்குதண்டுழாய் துதைந்தலர்ந்த பாதமேவிரும்பிநின்று இறைஞ்சுவேற்கிரங்கு"என்றந்வயம்(கூரு)

அ.— தொண்ணூற்றுநாலாம்பாட்டு. த்வதநுபவ விரோதிகளைப் போக்கவும், அதுக்கநுகூலங்களானவற்றை யுண்டாக்கவும், அநுபவந்தன்னை அவிச்சிந்நமாக்கவும் வேணுமென்றபேக்ஷிக்கப்ராப்தமாயிருக்க, "இரங்கு" என்று - இவ்வளவபேக்ஷிக்கவமையுமோ வென்ன; உனக்கு ப்ரகாரமாயிருக்குமதொழிய ஸ்வதந்த்ரமாயிருப்பதொருபதார்த்தமில்லாமையாலே என்னபிமதஸித்திக்கு உன்னிரக்கமே யமையுமென்கிறார்.

ஊனின்மேயவாவிநீயுறக்கமோடுணர்ச்சிநீ
ஆனின்மேயவைந்துநீயவற்றுள்நின்றதூய்மைநீ
வானினோடுமண்ணுநீவளங்கடற்பயனுநீ
யானுநீயதன்றியெம்பிரானுநீயிராமனே. (கூசு)

---

ஆடிக் கட்டியாகையன்றிக்கே, "இருந்தகட்டி" என்று-இருந்தபடியே கட்டியென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (கோதுண்டாதலித்யாதி.) கந்தம்—அவதாரமூலம். ... (கூரு)

ப - ரை.—உறக்கமோடு - தமோகுணப்ரபவத்தால்வந்த நித்ரையும், உணர்ச்சியோடு - ஸத்வகுணகார்யமான வுணர்த்தியும், நீ - உன்னதீநமாயிராநின்றது; வளம - கண்டார்க்கு ஆகர்ஷகமான, கடல பயனும் - கடலிலுண்டாகும் அம்ர்தமும் ரத்நாதிகளும, நீ - உன்னதீநமாயிராநின்றது; ஆனில்மேய வைந்தும்-பசுக்களிடத்திலுண்டாகும் சுத்திகரமான பஞ்சகவ்யமும், நீ-நீயிட்டவழக்காயிராநின்றது; அவற்றுள் நின்றதூய்மை-அந்தபஞ்சகவ்யங்களுக்குண்டானசுத்தியும், நீ - உன்னதீநம; வானிலோடு - நிராலம்பமான ஆகாசத்திலே வாய்வாதிகள் ஸஞ்சரிக்கிறதும, மண்ணும - நீரிலேகிடக்கிற பூமிகளை யாதே ஸகலாதார பூதையாகிறதும், நீ - உன்னாலே; யானும் - பத்தனான நானும், நீ-உனக்குப்ரகாரபூதன; அதன்றி - அதுவொழிய, இராமன - சக்ரவர்த்தித் திருமகனான நீயே, எம்பிரான - அங்ஙனநாயான வெங்கள்குஸ்வாமி. (கச)

வ்யா.—(உறக்கமோடுணர்ச்சி நீ - வளங்கடல் பயனும் நீ - ஆனில்மேயவைந்தும் நீ, அவற்றுள் நின்ற தூய்மைநீ - ஊனில் மேயவாவிநீ - வானிலோடு மண்ணும்நீ-யானும் நீ, அதன்றியெம்பிரானும்நீ இராமனே'' என்றந்வயம். (உறக்கமோடுணர்ச்சிநீ) தமோகுணப்ரபவத்தால் வந்த நித்ரையும், ஸத்வகுணகார்யமான வுணர்த்தியுமுன்னதீநம். இததால் - சேதநர்க்கு விஷயப்ராவண்ய ஹேதுவான அஜ்ஞாநமும், பகவத்ப்ராவண்ய ஹேதுவான ஜ்ஞாநமும் நீயிட்டவழக்கென்கை. "అనాదిమాయయా సుప్తః" "அநாதிமாயயாஸுப்த:'' என்று அஜ்ஞாநத்தை நித்ரையாகச் சொல்லக்கடவதிறே. (வளங்கடல்பயனும்நீ) கண்டார்க்கு ஆகர்ஷகமான கடலில் அம்ர்தமும் ரத்நாதிகளும் உன்ஸங்கல்பாதீநம். இது-ப்ரயோஜநாந்தரங்களுக்கும் உபலக்ஷணம். இத்தால் - உன்பக்கல் ப்ராவண்யத்துக்கு விரோதியாய் அஜ்ஞாநகார்யமான பந்தகபதார்த்தங்களெல்லாம் நீயிட்டவழக்கென்கை. (ஆனில்மேயவைந்தும்நீ) பசுக்களில் சுத்திகரமாகச்சொல்லுகிறபஞ்சகவ்யமும் உன்னதீநம். (அவற்றுள் நின்றதூய்மைநீ) அந்த பஞ்சகவ்யங்களுக்குண்டான சுத்தியும் உன்ஸங்கல்பாதீநம. பரமபாவநரான தேவரீரோட்டை ப்ரத்யாஸத்தியிறே பதார்த்தங்களுக்கு சுத்திஹேது.' கோப்ராஹ்மணர்க்கு பகவத்ஸமாராதநோபகரணங்களாகையாலேயிறே சுத்திஹேதுத்வம். "బ్రాహ్మణానాం గవాంచైవ కులమేకం ద్విధాకృతం। అన్యత్ర మన్త్రాస్తిష్ఠన్తి హవిరన్యత్ర తిష్ఠతి" ப்ராஹ்மணாநாம்கவாஞ்சைவ குலமேகந்த்விதாக்ர்தம்। அந்யத்ரமந்த்ராந்திஷ்டந்தி ஹவிரந்யத்ரதிஷ்டதி'' என்னக்கடவதிறே. கர்மத்துக்கு சுத்திஹேதுத்வம் பகவத்ஸமாராதநமாகையாலே ஜ்ஞாநத்துக்கு சுத்திஹேதுத்வம் பகவத்விஷயமாகையாலே, "క్షేత్రజ్ఞస్యేశ్వరజ్ఞానాద్విశుద్ధిః పరమా మతా" "க்ஷேத்ரஜ்ஞஸ்யேஶ்வரஜ்ஞாநாத் விஶுத்தி: பரமாமதா'' என்னக்கடவதிறே. "పావనస్సర్వలోకానాం త్వమేవ" "పవిత్రాణాం హి గోవిన్దః పవిత్రం పరముచ్యతే" "பாவநஸ்ஸர்வலோகாநாம் த்வமேவ" "பவித்ராணாம்ஹிகோவிந்தஃ பவித்ரம் பரமுச்யதே."

இத்தால் – அநாதிகாலம் விஷயாந்தரப்ராவண்யத்தால் வந்தஅசுத்திபரிஹாரமான பாவநபதார்த்தங்களும் நீயிட்டவழக்கென்கை. (ஊனில்மேயஆவிநீ) சரீரத்திலே தாரகமாக வர்த்திக்கிற பஞ்சவர்த்திப்ராணனும் நீயிட்டவழக்கு. இத்தால்-சரீரஸ்திதியும் ஶரீரவியோகமும் நீயிட்டவழக்கென்கை. (வானிேனாடு மண்ணும்நீ) நிராலம்பநமான ஆகாசத்திலே வாய்வாதிகள் ஸஞ்சரிக்கிறதும், நீரிலே கிடக்கிற பூமிகளையாதே ஸகலாதாரபூதையாகிறதும உன்னாலே. அதவா, பந்தகமான ஸம்ஸாரமும் முக்தப்ராப்யமான நித்யவிபூதியும் நீயிட்டவழக்கென்றுமாம். (யானும்நீ) பத்தனான நானும் உனக்குப்ரகாரபூதன். இத்தால் - எனக்குருசியில்லாதவன்றும், “ததாமி புத்தியோகம்” “ததாம்புத்தியோகந்தம்” என்கிறபடியே என்னுடைய ருசி நீயிட்டவழக்கு. (அதன்றி) அதொழிய. (எம்பிரானும் நீயிராமனே) நினைத்தார்க்கு நினைத்ததைக் கொடுக்கவல்லவனென்கைக்கு உதாஹரணம் சொல்லுகிறது. சக்ரவர்த்தித் திருமகனான நீயே அகிஞ்சநரான வெங்களுக்குஸ்வாமி. “அபிவ்ருக்ஷா: பரிம்லாநா:” “அபிவ்ர்க்ஷா:பரிம்லாநா:” என்கிறபடியே-ஸ்தாவரபர்யந்தமாக அழகாலும சீலத்தாலும் பிரிந்து தரிக்கமாட்டாதபடி பண்ணின நீயே எங்களுக்கு நிர்வாஹகன். “அலமத்யஹி புக்தேந பரமார்த்தைரலஞ்சந:। யதாபஶ்யாமி நிர்யாந்தம் ராமம் ராஜ்யே ப்ரதிஷ்டிதம்” “அலமத்யஹிபுக்தேந பரமார்த்தைரலஞ்சந:। யதாபஶ்யாமிநிர்யாந்தம் ராமம்ராஜ்யேப்ரதிஷ்டிதம்.” [புற்பாமுதலாவித்யாதி] “யாகதிர் யஜ்ஞஶீலாநாம்” “யாகதிர்யஜ்ஞஶீலாநாம்” என்று ஒருபக்ஷிக்கு மோக்ஷங்கொடுத்தவனே எங்களுக்கு நிர்வாஹகன்; * அன்று சராசரங்களை வைகுந்தத்தேற்றினவனே எங்களுக்கு நிர்வாஹகன். (கூச)

அ.—தொண்ணூற்றஞ்சாம்பாட்டு. “எம்பிரானும் நீயிராமனே” என்று நினைத்தார்க்கு நினைத்தத்தைக்கொடுக்கவல்ல சக்தனுமாய் ஸ்வதந்த்ரனுமான சக்ரவர்த்தித்திருமகனே யுபாயமென்றார் - கீழ்; இதில் - உபாயத்தில் தமக்குண்டான அத்யவஸாயத்தை யருளிச்செய்கிறார். பாஹ்யவிஷயருசியைத் தவிர்த்து, உன்பக்கலிலே ருசியைப்பிறப்பித்து, கைங்கர்யத்தை ப்ரார்த்திக்கும்படி புகுர நிறுத்தினநீ, என்னை யுபேக்ஷித்து விஷயாந்தர ப்ரவணனும்படி கைவிட்டாலும் உன்னையொழிய வேறொருசதியில்லையென்று தம்முடைய அத்யவஸாயத்தை யருளிச்செய்கிறார்.

---

தொண்ணூற்றுநாலாம்பாட்டு. “ராம: - ராம:” என்கையாலே-நினைத்தார்க்கு நினைத்தத்தைக் கொடுக்குமென்கிறது. அழகாலும் சீலத்தாலும் மோக்ஷபர்யந்தம் வேண்டினார்க்கு வேண்டினது கொடுப்பானென்கைக்கு ப்ரமாணங்கள் பலவுமருளிச்செய்கிறார் (அலமத்யஹி புக்தேந – அலமத்புஹிசிக்தேநஎன்றுதொடங்கி.) (கூச)

அடக்கரும்புலன்களைந்தடக்கியாசையாமவை
துடக்கறுத்துவந்து நின்றொழிற்கண்நின்றவென்னைநீ
விடக்கருதிமெய்செயாதுமிக்கோராசையாக்கிலும்
கடற்கிடந்தநின்னலாலோர்கண்ணிலேனெம்மண்ணலே. (கூரு)

ப - ரை.—அடக்கரும் - அடக்கவரிதான, புலன்களைந்து - செவிமுதலிய வைம்புலன்களையும், அடக்கி - விஷயங்களில் போகாதபடி மீட்டு, ஆசையாமவை - அவ்விஷயங்களிலுண்டான ருசியை, துடக்கறுத்து - வாஸனையோடே போக்கி, வந்து - மோக்ஷேச்சையாலேவந்து, நின்தொழிற் கண்நின்ற வென்னை - உன்திருவடிகளிலே கைங்கர்யத்தை ஆதரித்து நின்றவென்னை, எம்மண்ணலே - எனக்கு நிருபாதிகஸ்வாமியாய, நீ - இந்த்ரியஜயமேதொடங்கி இவ்வளவும் புகுராநின்றதின நீ, விடக்கருதி - உபேக்ஷிக்கும்படி நினைத்து, மெய்செயாது - ஆரம்பித்த ஆத்மோஜ்ஜீவநத்தை முடிய நடத்தாதே, மிக்கோராசையாக்கிலும் - விஷயாந்தரங்களில் மிக்க ருசியையுண்டு பண்ணினாலும், கடல கிடந்தநின்னலால் - எனநிமித்தமாகத் திருப்பாற் கடலிலே கண்வளர்ந்தருளின வுன்னையொழிய, ஓர் கண்ணிலேன - வேறொரு நிர்வாஹகரையுடையேனல்லேனென்கிறார். (கூரு)

வ்யா.—(அடக்கரும்புலன்களைந்தடக்கி) ஆசார்யோபதேசத்தாலும் சாஸ்த்ரவாஸனையாலும் இந்த்ரியங்களை நியமிக்கவிழிந்தால் நியமிக்கவரிய ச்ரோத்ராதிகளைந்தையும், ஆகர்ஷகமான தன்வடிவைக்காட்டி விஷயங்களில் போகாதபடி மீட்டு, அவற்றுக்குத் தானே விஷயமாம்படி நியமித்தது. ஈச்வரன் வடிவழகைக்காட்டி மீட்டானென்கைக்கு இங்கு சப்தமுண்டோவென்னில்; கீழே - "புலன்களைந்தும்வென்றிலேன் பொறியிலேன்" என்றவராகையாலே இங்குச்சொன்ன இந்த்ரியநியமநம் ஈச்வரனாலேயென்னுமிடம் அர்த்தாதஸித்தம். தபோபங்கம்பண்ணவந்த ஊர்வசியை மாத்ருபுத்தியாலே நமஸ்கரித்துநின்ற அர்ஜுநனும், "తస్యాహంనిగ్రహంమన్యే వాయోరివసుదుష్కరమ్" "தஸ்யாஹம் நிக்ரஹம் மந்யே வாயோரிவஸுதுஷ்கரம்" என்னும்படியிறே இந்த்ரியநியமநத்தினருமையிருப்பது. (ஆசையாமவைதுடக்கறுத்து) அவ்வடிவில் பாவநத்வத்தாலே விஷயங்களில் ருசியை வாஸனையோடேதவிர்த்து. விஷயாந்தரருசிக்கடி பாபமேயிறே. (வந்துநின்றொழில்கண்நின்றவென்னை) புருஷார்த்தத்தின் மேலெல்லையிலேவந்து உன்திருவடிகளிலே கைங்கர்யத்தை அர்த்தித்து நின்றவென்னை.

(நீவிடக்கருதி) இந்த்ரியஜயமேதொடங்கி இவ்வளவும் புகுராநின்றத்தினநீ உபேக்ஷிப்பாயாக நினைத்து. (மெய்செயாது) ஆரம்பித்த கார்யத்தை முடியநடத்தாதே. மெய்செய்யாதொழிகையாவது - ஆத்மோஜ்ஜீவநத்தை யாரம்பித்து தத்விபரீதமாக ஆசரிக்கும் மித்யாவ்யாபாரம். "అన్యథాసఙ్కల్ప్యాన్యథాచరతీతిమిథ్యాచారస్సఉచ్యతే" "அந்யதாஸங்கல்ப்யாந்யதாசரதீ திமித்யாசாரஸ்ஸஉச்யதே" என்னக்கடவதிறே.

(மிக்கோராசையாக்கிலும்) விஷயாந்தரங்களிலே ருசியை ப்பிறப்பித்தாயாகிலும். ஸ்வவிஷயத்தில் ருசிக்குக்ஷிபண்ணினவன் சப்தாதிவிஷயங்களில் ருசிக்குஉத்பாதகனாகக்கூடாது, அப்படிகூடி னாலும். (கடல்கிடந்தநின்னலாலோர்கண்ணிலேன்) நான் அபேக்ஷி யாதிருக்க என்னுடைய ஹிதார்த்தமாக த்ரிபாத்விபூதியி லிருப்பை விட்டு விஸத்ர்சமான ஸம்ஸாரத்திலே திருப்பாற்கடலிலே கண்வ ளர்ந்தருளுகிற வுன்னையொழிய வேறொரு நிர்வாஹகனை யுடையே னல்லேன். (எம்மண்ணலே) அபேக்ஷாநிரபேக்ஷமாக என்னுடைய ஹிதத்தை ப்ரவர்த்திப்பிக்கைக்கடி எனக்கு நிருபாதிகஸ்வாமியாகை யாலே யெனகிறார். உபேக்ஷித்தாலும் விடமாட்டாமைக்கடி நிரு பாதிகஸ்வாமியாகையாலே. அண்ணல் - ஸ்வாமி. ... (கூரு)

அ.—தொண்ணூற்றாரும்பாட்டு. தம்முடையவ்யவஸாயத்தை யருளிச்செய்தார் - கீழ்ப்பாட்டில்; இதில் - "அஞ்சலென்னவேண் டுமே" என்றும், "இரங்கரங்கவாணனே" என்றும் பலபடியாக அபேக்ஷியாநின்றீர், உம்முடையப்ராப்யத்தை நிர்ணயித்துச்சொல் லீரென்ன; நான் ஸம்ஸாரத்தையறுத்து உன்திருவடிகளிலே பொ ருந்தும்படியாக ப்ரஸாதத்தைப் பண்ணியருளவேணுமென்று தம் முடைய ப்ராப்யத்தை ப்ரார்த்திக்கிறார்.

வரம்பிலாதமாயைமாயவையுமேழுமெய்ம்மையே
வரம்பிலூழியேத்திலுமவரம்பிலாதகீர்த்தியாய்
வரம்பிலாதபலபிறப்பறுத்துவந்துநின்கழல்
பொருந்துமாதிருந்தநீவரஞ்செயபுண்டரீகனே. (கூசு)

ப - ரை.—வரம்பிலாத-அளவிறந்தஸ்வரூபத்தையும் அளவிறந்த மஹதாதி பரிணாமங்களையுமுடைத்தான, மாயை - ப்ரக்ர்திதத்வத்தை ஸ்வாதீநமாகவுடை யனுய, மாய - ஆச்சர்யமான ஜ்ஞாந சக்த்யாதி கல்யாணகுணங்களை யுடைய னுய, வையமேழும் - ஸப்தலோகங்களிலுள்ளவர்களும், மெய்ம்மையே-அநந் யப்ரயோஜநராய்க்கொண்டு, வரம்பில ஊழி - அஸங்க்யாதமானகல்பங்களெ ல்லாம், ஏத்திலும் - ஸ்தோத்ரம் பண்ணினாலும், வரம்பிலாத - எல்லைகாண வொண்ணாத, கீர்த்தியாய் - ரக்ஷகத்வ ப்ரஸித்தியையுடையானுய், புண்ட ரீகனே - தாமரைமலரையொத்த அவயவங்களை யுடையவனே, வரம்பிலாத- அளவில்லாத, பல்பிறப்பு அறுத்து-பலவகைப்பட்ட பிறப்பையறுத்து, வந்து- அர்ச்சிராதி மார்க்கத்தாலே ஒருதேச விசேஷத்திலேவந்து, நின்கழல் - ஸுஸ்ரீ போக்யமான வுனதிருவடிகளை, பொருந்துமா - பொருந்தும்படியாக, திருந்த- கைங்கர்ய ஸுகமே ஸுகமாம்படி, நீ-என்னுடைய உஜ்ஜீவநார்த்தமாக * ஆள் பார்த்து ஸஞ்சரிக்கிறநீ, வரமசெய்-ப்ரஸாதத்தைப்பண்ணியருளவேணு மென் கிறார். (கூசு)

வ்யா.—(வரம்பிலாதமாயை) அளவிறந்த ஸ்வரூபத்தையும் அளவிறந்த மஹதாதிபரிணாமங்களையுமுடைத்தான ப்ரக்ர்தி தத்வ த்தை ஸ்வாதீநமாகவுடையவனே. மாயை-ப்ரக்ர்தி.

"అనన్తస్యనతస్యాన్తం సఙ్ఖ్యానం వాపివిద్యతే" "அநந்தஸ்யநதஸ்யாந்தம்ஸங்க்யாநம்வாபிவித்யதே" என்னக்கடவதிறே. இத்தால்-பந்தகமான ப்ரக்ருதிநீயிட்ட வழக்கென்கை. (மாய) ஆச்சர்யமானஜ்ஞாநசக்த்யாதிகல்யாணகுணங்களை யுடையவனே. மாயம்-ஆஸ்சர்யம். இத்தால்-கீழ்ச்சொன்ன ப்ரக்ருதியிலே பத்தராய் தந்நிவர்த்த்யர்த்தமாக தேவரீரை யாச்ரயித்த சேதநர்க்கு தத்ஸம்பந்தததை யறுத்துக்கொடுக்கைக்கடியான ஜ்ஞாநசக்த்யாதி குணங்களையுடையவனென்கை. (வையமேழும்மெய்ம்மையே வரம்பிலூழியேத்திலும் வரம்பிலாத கீர்த்தியாய்) ஸப்தலோகங்களும் ஸ்தோதாக்களாக, தந்தாமுடைய சேஷத்வத்தை யுணர்ந்து ஸ்வரூபாநுரூபமாக அநந்யபரராய்க்கொண்டு அஸங்க்யாதமான கலபங்களெல்லா மேத்தினாலும் எல்லைகாணவொண்ணாத ரக்ஷகத்வப்ரதையையுடையவனே. இத்தால் - அசித்ஸம்ஸர்க்கத்தையறுத்துத் திருவடிகளோடேசேர்த்து ரக்ஷித்துப்போந்த ரக்ஷகத்வ ப்ரதையை பரிசசேதிக்கவொண்ணாதென்கை. "వర్ణాయుతైర్యస్యగుణానుశక్యా వక్తుం సమేతైరపి సర్వలోకైః। చతుర్ముఖాయుర్యదికోటివక్త్రః" "வர்ணாயுதைர்யஸ்யகுணாநுஶக்யா வக்தும்ஸமேதைரபிஸர்வலோகை:| சதுர்முகாயுர்யதிகோடிவக்த்ர:."

(வரம்பிலாதபல்பிறப்பறுத்து) நம்மைப்புகழாதே அபேக்ஷிதத்தைச்சொல்லீரென்ன; அஸங்க்யேயமான பலவகைப்பட்ட பிறப்பையறுத்து. பலவகையாவது-தேவ திர்யங் மநுஷ்ய ஸ்தாவரங்கள். அஸங்க்யாதமாவது-ஒருஜாதியிலேபிறக்கும் ஜந்மத்துக்குந்தொகையற்றிருக்கை. காலம் அநாதி, ஆத்மாநித்யன், பண்ணிவைக்கவல்லகர்மங்களுக்கு அவதியில்லாமையாலே கர்மாநுகுணமாகப்பிறக்கவிருக்கிற பிறவிக்குத் தொகையில்லை, ஜந்மங்களையறுத்து. (வந்துநின்கழல்பொருந்துமா) அர்ச்சிராதிமார்க்கத்தாலே ஒருதேஶவிஶேஷத்திலேவந்து, ஸுரிபோக்யமான திருவடிகளிலே, "ఛాయావా సత్త్వమనుగచ్ఛేత్" "சாயாவாஸத்வமநுகச்சேத்" என்கிறபடியே ப்ரதக்ஸ்திதயநர்ஹமாகப் பொருந்தும்படியாக. (திருந்த) "నోపజనం స్మరన్నిదం శరీరమ్" "நோபஜநம்ஸ்மரந்நிதம்ஶரீரம்" என்கிறபடியே திருவடிகளுக்குப் புறம்பானவற்றை ஸ்மரியாதே கைங்கர்யஸுகமே ஸுகமாம்படி. (நீவரஞ்செய்) என்னுடைய உஜ்ஜீவநார்த்தமாக *ஆள்பார்த்துழிதருகிற நீ ப்ரஸாதத்தைப்பண்ணி யருளவேணும். (புண்டரீகனே.) புண்டரீகாவயவனே. புண்டரீகாக்ஷனே. திருக்கண்களே ப்ரசுரமாயிருக்கையாலே புண்டரீகனென்கிறார். "విజ్ఞానం యజ్ఞం తనుతే" "விஜ்ஞாநம்யஜ்ஞம்தநுதே" என்னக்கடவதிறே. இத்தால்-ப்ரஸாதத்தைப் பண்ணுகையாவது- ஒருவிஶேஷகடாக்ஷமென்கை.

அ.—தொண்ணூற்றேழாம்பாட்டு. "வரஞ்செய்புண்டரீகனே" என்றுநின்றீர், நம்முடையவிஶேஷகடாக்ஷத்துக்கு உம்முடையபக்கலிலே யொருமுதல் வேண்டாவோவென்ன; திருமார்விலே பிராட்டியெழுந்தருளியிருக்கத் திருக்கையிலே திவ்யாயுதங்களிருக்க ஒருமுதல்வேணுமோ, அங்ஙனேயொருநிர்ப்பந்தம் தேவரீர்க்குண்டாகில்என்விரோதியைப்போக்கியுன்னைக்கிட்டியடிமைசெய்கைக்கு ஹேதுவாயிருப்பதொருவுபாயத்தை தேவரீரே தந்தருளவேணுமென்கிறார். அகிஞ்சநனாய் தேவரீர்கைபார்த்திருக்கிற வெனக்கு ப்ராப்யமான கைங்கர்யத்தோடுதது பாயத்தோடுவாசியறதேவரீரே தந்தருளவேணு மத்தனையன்றோவென்கிறார்.

வெய்யவாழிசங்குதண்டுவில்லும்வாளுமேந்துசீர்க்
கைய!செய்யபோதில்மாதுசேருமார்ப!நாதனே!
ஐயிலாயவாக்கைநோயறுத்துவந்துநின்னடைந்
துய்வதோருபாயநீயெனக்குநல்கவேண்டுமே. (கூஎ)

ப-ரை.—வெய்ய - எதிரிகள் சுடல்குழம்பும்படி வெவ்விதான, ஆழி-திருவாழியையும், சங்கு - ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும், தண்டு - கௌமோதகீயென்னும் கதையையும், வில்லும்-ஸ்ரீசார்ங்கமென்னும்திருவில்லையும், வாளும்-நந்தகமென்னும் திருக்குற்றுடைவாளையும், ஏந்து - எப்போதும தரித்த, சீர்-அழகிய, கைய - திருக்கைகளையுடையனாய், செய்யபோதில் - சிவநத தாமரை மலரைப்பிறப்பகமாகவுடைய, மாது - பெரியபிராட்டியார், சேரும் - நித்ய வாஸம் பண்ணுகிற, மாாப - திருமார்பையுடையனாய், நாதனே- ஸர்வஸ்வாமியானவனே; ஐயிலாய - ச்லேஷ்மத்தை பரக்ர்யாக வுடைத்தான, ஆக்கை நோயறுதது -சரீரமாகிறநோயை யறுத்து, வந்து - ஒருதேச விசேஷத்திலே வந்து, நின அடைநது - நிரதிசயபோக்யனான வுன்னை ப்ராபிதது, உய்வதோருபாயம் - அடிமைசெயது உஜ்ஜீவிப்பதொருவழியை, நீ - எனக்கு இல்லாதவையெல்லாம் தரககடவநீ, எனககு - உனகைபாாததிருககிறவெனக்கு, நல்கவேண்டும் - தந்தருளவேணுமெனகிறார். (கூஎ)

வ்யா.—(வெய்யவாழிசங்குதண்டு வில்லும்வாளுமேந்துசீர்க்கைய) காணவே யெதிரிகள் தறைப்படும்படியான ஸ்ரீபஞ்சாயுதங்களையும் அநவரதம் வாதஸல்யத்தாலே திருக்கையிலே யேந்தினவனே. வெறும்புறத்திலே ஆலத்தி வழிக்கவேண்டும்படி யிருக்கிற கையிலே திவ்யாயுதங்களை யேந்தினவனே யென்றுமாம். திவ்யாயுதங்களை யேந்தினபடியேயிருககிறது தேவரீர்க்கு ஒருவிரோதியுண்டாயோ, என்விரோதியைப்போக்குகைக்காகவன்றோவென்கை. "எப்போதுங்கைகழலாநேமியான்நம்மேல்வினைகடிவான்" என்னக்கடவதிறே. (செய்யபோதில்மாதுசேருமார்ப) சிவந்ததாமரைப் பூவைப்பிறந்தகமாகவுடையளாயிருக்கையாலே ஸுகுமாரையாய்த் திருமேனிக்கு பரபாகரூபத்தாலே ஆபரணபூதையான பிராட்டி "அகலகில்லேனிறையும்" என்று சொல்லப்படும் திருமார்வையுடையவனே.

---

தொண்ணூற்றேழாம்பாட்டு. சீர்-வாத்ஸல்யமாதல்; அழகாதல்.

இத்தால்-ஆச்ரயண விரோதிபாபத்தைப் பொறுப்பிக்கைக் குப் பிராட்டி ஸந்நிதியுண்டாயிருக்க அநுபவவிநாஶ்யமாய் பக வத்ப்ராப்தி விரோதிகளை யழியச்செய்கைக்கு பரிகாரமுண்டாயிரு க்க,மாத்ர்பித்ர்ஸந்நிதியிலே நோவுபடுவாரைப்போலே, சரீரஸம்பந் தத்தாலே நோவுபடக்கடவேனோ வென்கை. (நாதனே) ஸர்வ ஸ்வாமியானவனே. இத்தால்-இவள் புருஷகாரமாகாதே கையிலே பரிகாரமுமின்றிக்கே யொழிந்தவன்றுதான் ஆருடைமை நோவுபடு கிறது.

இப்படியிருக்க, புருஷார்த்த ஸித்திக்கு என்தலையிலேயுமோ ருபாயம் வேணுமென்று தேவரீர்க்கு நிர்ப்பந்தமுண்டாகில் அத் தை தேவரீரோ தந்தருளவேணுமென்கிறார் மேல்(ஐயிலாயவாக்கை நோயறுத்து) ச்லேஷ்மத்தை ப்ரக்ருதியாகவுடைய சரீரமாகிற நோ யையறுத்து. தேஹாத்மாபிமாநிகளுக்கு ப்ரார்த்தநீயமானசரீரம் ஜ்ஞாநம்பிறந்தால்வ்யாதியாயிறேயிருப்பது."ஏய்ந்ததமமெய்குந்த மாகவிரும்புவர்" என்னக்கடவதிறே. (வந்துநின்னடைந்து) ஒரு தேசவிஶேஷத்திலேவந்து நிரதிசயபோக்யனானவுன்னைப்ராபித்து. (உய்வதோருபாயம்) அடிமைசெய்து உஜ்ஜீவிப்ப தொருவழியை. (நீயெனக்குநல்கவேண்டுமே) ச்ரியஃபதியாய் திவ்யாயுதோபேத னாய் எனக்கில்லாதவையெல்லாம் தரக்கடவநீயே, எல்லாவற்றுக்கு முன்கைபார்த்திருக்கிற வெனக்குத் தந்தருளவேணும். நல்குதல்- கொடுத்தல். அதாகிறது-தருதல். ... ... ... (கூஎ)

அ.—தொண்ணூற்றெட்டாம்பாட்டு. நமமுடைய விஶேஷ கடாக்ஷத்துக்கு உம்முடைய தலையிலே ஒருமுதல்வேணுமே, என்னை நீயே தரவேணுமென்னக்கடவீரோ வென்று பகவதபிப் ராயமாக; புருஷார்த்தருசியாலே வந்த ப்ராதிகூல்ய நிவ்ர்த்தியும புருஷார்த்த ருசியுமே ஆலம்பநமாக நான் ஸம்ஸாரதுரிதத்தைத் தப்பும்படி நீயேபண்ணி யருளவேணுமென்கிறார்.

மறந்துறந்துவஞ்சமாற்றியைம்புலன்களாசையும்
துறந்துநின்கணாசையேதொடர்ந்துநின்றநாயினேன்
பிறந்திறந்துபேரிடர்சுழிக்கணின்றுநீங்குமா
மறந்திடாதுமற்றெனக்குமாயநல்கவேண்டுமே. (கூஅ)

ப - ரை.—மாய - ஆச்சர்யமான சக்தியையுடையவனே; மறம்துறந்து- பிறர்மினுக்கம் பொறுதொழிகையும் பிறருக்குத தீங்கை நினைக்கையுமா கிறவிவற்றைவிட்டு, வஞ்சம்மாற்றி - க்ர்த்ரிமத்தைத் தவிர்த்து, ஐம்புலன்க ளாசையும் துறந்து - இந்த்ரியங்களுக்கு இதரவிஷயங்களிலுண்டான ஆசை யைவிட்டு, நின்கண் ஆசையே தொடர்ந்து நின்ற - உன்பக்கலாசையையே

மெய்குந்தமாக - சரீரத்தை குத்ஸிதமாக. (கூஎ)

ஆதரித்துநின்ற, நாயினேன் - தண்ணியனான நான், பிறந்திறந்து - பிறப்பது சாவதான, பேரிடர் - மஹாதுக்கமாகிற, சுழிக்கண்நின்று - சக்ரத்தினின்றும், நீங்குமா - நீங்கும்படி, மறந்திடாது - ஸம்ஸாரத்தில நான்பட்ட துக்கத்தை மறவாமல், எனக்கு - விரோதி நிரஸநத்திலே அசக்தனான வெனக்கு, நல்க வேண்டும் - புருஷார்த்தத்தைத் தந்தருளவேணுமென்கிறார். (௯அ)

வ்யா.—(மறம்துறந்து) மறமாது - கோபம். அதினெல்லை-பரஸம்ர்த்தி பொருதொழிகையும், பராநர்த்தசிந்தையும். அத்தை விட்டு. (வஞ்சம்மாற்றி) க்ர்த்ரிமத்தைத் தவிர்த்து. அதாகிறது-அநுகூலனாய்த்தோற்றி ப்ராதிகூல்யத்தோடே 'தலைக்கட்டுகை. வஞ்சம் - பொய். (ஐம்புலன்களாசையும் துறந்து) இந்த்ரியங்களுக்கு இதரவிஷயங்களிலுண்டான ஸங்கத்தையும் விட்டு. கீழ்-"பொறியிலேன்" என்றத்தை யகப்பாடாகச் சொன்னார்; இதிலே - கீழ்ச் சொன்ன கோப க்ர்த்ரிமங்களுக்கு ஹேதுவான விஷயாந்தர ஸங்கத்தையும் விட்டு. அவைதான் புருஷார்த்தருசி பிறந்தார்க்கு அஸம்பாவிதங்கள். (நின்கணாசையேதொடர்ந்துநின்ற) உன்பக்கலாசையையே ஆதரித்துநின்ற. அதாகிறது-பகவத்ப்ரேமம் வேணுமென்றிருக்கிற ஆதரம். தொடர்வு - உறவு. (நாயினேன்) ப்ராதிகூல்ய நிவ்ர்த்தியும் புருஷார்த்த ருசியுமொழிய, புருஷார்த்த ஸித்திக்கு முதலொன்றுமின்றிக்கே யிருக்கிற அநந்யகதி.

(பிறந்திறந்து பேரிடர் சுழிக்கண் நின்று நீங்குமா) பிறப்பது சாவதான மஹாதுக்க சக்ரத்தினின்றும் நீங்கும்படி. "பிறந்து" என்கிறவிது - ஷட்பாவவிகாரத்துக்கும் உபலக்ஷணம். "இறந்து" என்கிற விது - நரகாதிகளுக்கும் உபலக்ஷணம். (மறந்திடாது மற்றெனக்கு மாயநல்கவேண்டுமே) ஸம்ஸாரத்திலேநான்பட்ட துக்கத்தையுமென்னுடைய பூர்வவ்ர்த்தத்தையும் தேவரீருடைய ஸ்வாதந்த்ர்யத்தையும்பார்த்து விஸ்மரியாதே, அபேக்ஷாமாத்ரத்தையும் ஸம்பந்தத்தையும் பார்த்து, விரோதிநிரஸநத்திலே அசக்தனான வெனக்கு தந்நிவ்ர்த்தி பூர்வகமாக புருஷார்த்தத்தைத் தந்தருளவேணும். "மற்று" என்கிறது - விரோதிநிவ்ர்த்தி ஸமநந்தரத்திலேலபிக்குமதாகையாலே. (மாய) "மமமாயா" "மமமாயா" என்கிறபடியே ஸம்ஸாரச்க்ரத்தை யறுத்து நித்யஸூரிகளோடே யொருகோவை யாக்கவல்ல வாச்சர்யசக்தியுக்தனே. (௯அ)

---

தொண்ணூற்றெட்டாம்பாட்டு. (விட்டு) அவன் விடுவிக்கவிட்டபடி சொல்லுகிறானென்று பூரிப்பது. அவைதான் - ப்ராதிகூல்யநிவ்ர்த்திதான். மற்றெனக்கு - விரோதிக்கு. மற்றான புருஷார்த்தம். ... ... ... ... ... (௯அ)

அ.—தொண்ணூற்றென்பதாம்பாட்டு.புருஷார்த்தருசிபிறந்த பின்பு அத்தால்வந்த ப்ராதிகூல்ய நிவர்த்தியை உம்முடையபக்கல் முதலாகச சொல்லாநின்றீர், அநாதிகாலம் நரகஹேதுவாகப பண்ணின ப்ராதி கூல்யங்களுக்கு போக்கடியாகநீர் நினைத்திருந்த தென்னென்ன;நப்பின்னைப்பிராட்டி புருஷகாரமாக"ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" "ஸர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமி" என்றவுன் திருவடிகளிலே ந்யஸ்தபரனான விதுவொழிய வேறுபோக்கடியுண்டோ, ஆனபின்பு கீழ்ச்சொன்ன க்ரமமடியாக வருகிற யமவஶ்யதை யைத் தவிர்த்து,எனக்கு உன்திருவடிகளிலே அவிச்சிந்நமானபோகத்தைத் தந்தருளவேணுமென்கிறார்.

காட்டிநான்செய்வல்வினைப்பயன்றனால்மநந்தனை
நாட்டிவைத்துநல்லவல்லசெய்யவெண்ணினாரெனக்
கேட்டதன்றியென்னதாவிபின்னைகேள்வநின்னொடும்
பூட்டிவைத்தவென்னைநின்னுள்நீககல்பூவைவண்ணனே. (கூகூ)

ப-ரை.—பின்னை - நப்பின்னைப்பிராட்டிககு, கேள்வ-வல்லபனாய், பூவை வண்ணனே - காயாமபூப்போன்ற திருநிறததையுடையவனே; நானசெய - நான்செய்த, வல்வினை - ப்ரபலமானபாபங்களை, காட்டி - யமபடர்க்குக் காட்டி, "இநத பாபபலம் நமக்கு அநுபவிகக ப்ராப்தம" என்று, பயன்றனால்- பலத்திலே, மநநதனை-மநஸ்ஸை, நாட்டிவைதது - பூட்டிவைத்து, நல்லவல்ல செய்யவெண்ணினாரென - கொடியசெயல்களைச் செய்யவெண்ணினாரென்று, கேட்டதன்றி - கேட்டுப்போநதவறறையகற்றி, எனனதாவி - பாபபரசுரனாய் அகிஞ்சநனான வென்னுடைய ஆத்மாவை, நின்னொடும் - உன்விஷயத்திலே, பூட்டிவைததவென்னை - ஸமாப்பிததவெனனை, நினனுள் - உனபககல்நினறும், நீக்கல-அகற்றுதொழியவேணும். (கூகூ)

வ்யா.—(காட்டிநான்செய்வல்வினை) நான்செய்த ப்ரபலமான பாபங்களை யமபடர் எனக்குக்காட்டி. வாசிகமாயும் மாநஸமாயுமுள்ள பாபங்களை யொழிய, செய்தவையாய், நரகப்ரவேசம் பண்ணி அநுபவிக்கவேண்டும ப்ரபலபாபங்களை. இத்தால் - இவர்கள் என்னை நலிகிறார்களென்று நான் நினையாதபடி பண்ணுமவர்களைன்கை. (பயன்றனால்மநந்தனைநாட்டிவைத்து) இந்தபாபபலம் நமக்கு இவ்வளவும் அநுபவிகக ப்ராப்தமென்று பலத்திலேயும் என் மநஸ்ஸைப்பூட்டிவைத்து. (நல்லவல்லசெய்யவெண்ணினார்) கொடியசெயல்களைச்செய்ய வெண்ணினார். இவனுக்கு முதலிலேபண்ணின பாபத்தை யறிவித்து இப்பாபபலம் நாம் இவ்வளவு மநுபவிக்க வேணுமாகாதே! என்று நெஞ்சைப்பிறப்பித்துப் பின்னையாய்த்து க்ரூரமான செயல்களை யவர்கள்செய்ய நினைப்பது.

---

தொண்ணூற்றென்பதாம்பாட்டு. பாபத்தைக்காட்டி நலிகையாலே,நான் நினையாதபடி-நான் வெறுக்காதபடி பண்ணுமவர்களைன்கை. "நல்லவல்லசெய்யவெண்ணினார்" என்றபதத்தையும் கூட்டி அருளிச்செய்கிறார். (இந்தபாபபலமித்யாதி.) ... (கூகூ)

(எனக்கேட்டதன்றி) என்று கேட்டுப்போந்தவற்றையகற்றி. இப்படி சாஸ்த்ரத்திலே கேட்டுப்போந்த யமவச்யதையைத் தவிர்த்து. (என்னதாவிபின்னைகேள்வ நின்னொடும்பூட்டிவைத்தவென்னை) நப்பின்னைப்பிராட்டிக்கு வல்லபனுகையால் வந்த நீர்மையையுடைய க்ர்ஷ்ணனே! பாபப்ரசுரனாய் அகிஞ்சநனான என்னுடைய ஆத்மாவை உன்பக்கலிலே ஸமர்ப்பித்த வென்னை. “காலியாய-நின்றனக் கடைக்கலம்புகுந்தவென்னை” என்றத்தை ஸ்மரிப்பிக்கிறூர். பூட்டிவைக்கையாவது - நீவிடக்கருதி மெய்செயாது மிக்கோராசையாக்கிலும்-நின்னலாலோர்கண்ணிலேன்” என்றத்தைஸ்மரிப்பிக்கிறூர். (நின்னுள்நீக்கல் பூவைவண்ணனே) பூவைப்பூப்போலேநிறத்தையும்ஸௌகுமார்யத்தையுமுடைய வடிவையுடையவனே! நின்பக்கல்நின்றும் அகற்றுதொழியவேணும். புஷ்பஹாஸஸௌகுமாரமான வடிவழகை ஸர்வகாலமும் விச்சேதியாதேயநுபவிக்கும்படிபண்ணிருளவேணும். “பின்னைகேள்வ - என்னதாவி நின்னொடும் பூட்டிவைத்த வென்னை - காட்டி நான்செய்வல்வினைப் பயன்றனுல்மநத்தை நாட்டிவைத்து நல்லவல்லசெய்யவெண்ணினூனெனக்கேட்டதன்றி - பூவைவண்ணனே-நின்னுள் நீக்கல். (௯௯)

அ.—நூறும்பாட்டு. இப்படிஅவிச்சிந்நமான அநுபவத்துக்கு பரபக்தி யுக்தனுகவேண்டாவோவென்ன; அப்பரபக்தியைத் தந்தருளவேணுமென்கிறூர்.

பிறப்பினோடுபேரிடர்ச்சுழிக்கணின்றுநீங்குமஃ
திறப்பவைத்தஞானநீசரைக்கரைக்கொடேற்றுமா
பெறற்கரியநின்னபாதபத்தியானபாசநம்
பெறற்கரியமாயனேயெனக்குநல்கவேண்டுமே. (௧௦௦)

ப-ரை.—பிறப்பினோடு - ஜந்மத்தோடேகூடின, தாபத்ரயரூபமான, பேரிடர்-மஹாதுக்கத்தை விளைக்கக்கடவதான, சுழிக்கண்நின்று - ஸம்ஸாரமாகிற சக்ரத்தினின்றும், நீங்குமஃது-நீங்குகைக்குறுப்பான தத்வஹிதங்களை, இறப்பவைத்த-மறைத்துவைத்த, ஞானநீசரை-ஸர்வோத்தமமாகத்தங்களை அபிமாநித்திருக்கும்நீசரை, கரைக்கொடேற்றுமா - கரையிலேகொண்டேற்றுகைக்கு உபாயமாக,பெறற்கரிய-பெறுதற்கு அரிய, நின்னபாதம-உன திருவடிகளைவிஷயமாகவுடைத்தான, பத்தியான-பத்தியாகிற, பாசனம்-டஜநத்தை, உன்கர்பையாலேயொழிய, பெறற்கரிய - வேறொருவழியாலே பெறக்கூடாத, மாயனே-ஆச்சர்யசக்தியுக்தனே, எனக்கு - உனக்ர்பையல்லதறியாதவெனக்கு, நல்கவேண்டும்-பக்தியைத்தந்தருளவேணும். (௧௦௦)

வ்யா.—(பிறப்பினோடுபேரிடர் சுழிக்கண்நின்று நீங்குமஃதிறப்பவைத்த) ஜந்மத்தோடேகூடின தாபத்ரயரூபமான மஹாதுக்கத்தைவிளைக்கக்கடவதான ஸம்ஸாரசக்ரத்தில் நின்றும் நீங்குகைக்குறுப்பான தத்வஹிதங்களை மறைத்துவைத்தவர்கள்.

தத்வஹிதங்களை "அஃது" என்றது-ச்ருதிப்ரஸித்தியாலே. அதாவது-ஸ்வர்க்கதத்ஸாதநங்களை வேதார்த்தமென்றிருக்கை. "వేద వాదరతాః పార్థ నాన్యదస్తీతి వాదినః" "வேதவாதரதா꞉ பார்த்தநாந்யதஸ்தீதிவாதிந꞉" என்றிறே அவர்கள் நிர்ணயம். இறக்கையாவது - நசிக்கை. அதாகிறது - "నశఅదక్నే" "நஶ அதர்ஹணே" என்கிறபடியே மறைக்கை. (ஞாநநீசரை) ஸர்வஜ்ஞராகத் தங்களை யபிமாநித்திருக்கும் நீசரை. "யாரும்வையகத்தொன்றிநின்று வாழ்தலின்மைகண்டுநீசர்" என்றவர்கள் கேவலநீசர்; இவர்கள் ஜ்ஞாநநீசர். (கரைக்கொடேற்றுமா) இவர்களைக் கரையிலேகொண்டேற்றுகைக் குபாயமாக. "సోఽధ్వనః పారమాప్నోతి తద్విష్ణోః పరమం పదమ్" "ஸோத்வந꞉பாரமாப்நோதி தத்விஷ்ணோ꞉பரமம்பதம்" என்கிறபடியே - ஸம்ஸாராத்வாவுக்குக் கரையாவது - பகவத்விஷயமிறே. அத்தை லபிக்கைக்கு உபாயமாக வேதாந்தங்களில் சொல்லிவைத்த.

(பெறற்கரியநின்னபாத பத்தியானபாசநம்) பெறுதற்கரிய உன்திருவடிகளை விஷயமாகவுடைத்தான பரமபக்தியாகிற பாஜநத்தை. ப்ராப்யனானவனிற் காட்டில் தத்விஷயபக்தி துர்லபமிறே. "యా ప్రీతిరవివేకానామ్" "யாப்ரீதிரவிவேகாநாம்" என்றும், "ముక్తిస్తస్య కరేస్థితా" "முக்திஸ்தஸ்யகரோஸ்திதா" என்றும், "సమస్తజగతాం మూలే యస్య భక్తిః స్థిరా త్వయి" "ஸமஸ்தஜகதாம்மூலேயஸ்யபக்திஸ்திராத்வயி" என்றும்சொல்லக்கடவதிறே. பாசநம்-மரச்கலம். அத்தாலே-தநத்தைலக்ஷிக்கிறது. "தநமாயதானேகைகூடும்" என்னக்கடவதிறே. "యమైవైష వృణుతే తేన లభ్యః" "யமைவைஷவ்ர்ணுதேதேநலப்ய꞉" என்றும், "హృదా మనీషా మనసాభిక్లృప్తః" "ஹ்ர்தாமநீஷாமநஸாபிக்ல்ப்த꞉" என்று - வேதாந்தங்கள் உன்திருவடிகளைப்பெறுகைக்கு ஸாதநமானபக்தியை யுபதேசித்துவைத்ததிறே; அந்தபக்தியை (பெறற்கரியமாயனே) உனகேவலக்ர்பையையொழிய வேறொருவழியாலே யுன்னைப்பெற விருப்பார்க்கு ஸித்தியாத ஆச்சர்யபூதனே. லோகத்தில் ஸாத்யங்களுக்கெல்லாம் ஸாதநமுண்டாயிருக்க அநந்யஸாத்யனான ஆச்சர்யபூதனே. (எனக்குநல்கவேண்டுமே) பெறவேண்டுமவையெல்லாவற்றுக்கும் உன்க்ர்பையையல்லதறியாத வெனக்கு அந்த பக்தியைதேவரீர்தந்தருளவேணும்.

---

நூற்றும்பாட்டு.—அஃது-தத்வஹிதங்கள். அதாவது - மறக்கையாவது. ப்ரயோஜநாந்தரபரரான ஸ்வர்க்காதிபோக பரரைக் கரையேற்றுகைக்காக வேதாந்தங்களிலே பக்தியை உபாயமாகச் சொல்லிவைத்ததென்றபடி. பாசநம்-பாஜநமென்றாய், பக்திரூபமான ஸமாச்ரயணமென்றபடி. உபதேசிக்கை - ஸ்ரீ கீதையிலே. (க00)

ப்ரயோஜநாந்தரபரர்க்குமோக்ஷருசியைப் பிறப்பித்து தத்ஸாதநமானபக்தியைக் கொடுத்தருளக்கடவ தேவரீர், அநந்யப்ரயோஜநனாய் அநந்யஸாதநனாயிருந்துள்ள வெனக்கு த்வதநுபவபரிகரமான அந்தபக்தியைத் தந்தருளுகை தேவரீர்க்கு அபிமதமன்றோ, அத்தைத் தந்தருளவேணுமென்றபடியாய்த்து. ... (க00)

அ.—நூற்றோராம்பாட்டு. நீர் நம்மை ப்ரார்த்திக்கிற பரபக்தி விஷயாந்தரங்களினின்றும் நிவ்ருத்தமான இந்த்ரியங்களைக் கொண்டு நம்மை அநவரதபாவனைபண்ணுமத்தாலே ஸாத்யமன்றோவென்ன; அங்ஙனேயாகில் ஜிதேந்த்ரியனாய்க்கொண்டு அநவரதபாவனை பண்ணுவேனாக தேவரீர் திருவுள்ளமாகவேணுமென்கிறார்.

இரந்துரைப்பதுண்டுவாழியேமநீர்நிறத்தமா
வரந்தருந்திருக்குறிப்பில்வைத்ததாகில்மன்னுசீர்ப்
பரந்தசிந்தையொன்றிநின்றுநின்னபாதபங்கயம்
நிரந்தரம்நினைப்பதாகநீநினைக்கவேண்டுமே. (க0க)

ப - ரை.—திருவடிகளிலேவிழுந்து, இரந்து - தேவரீரை தலையாலே யிரந்து, உரைப்பதுண்டு-விண்ணப்பம் செய்யப்புகுகிற தொருகார்யமுண்டு; வாழி-உனவடிவழகுக்கு மங்களமுண்டாகக்கடவது; ஏமம் நீர- அபரிச்சிந்நமான கடலபோலே யிருக்கிற, நிறத்த-திரு நிறத்தையுடைய நிருபாதிகபந்துவே; மனனு - இவ்வாத்மாவுக்குஸ்வரூபாநுரூபமான, சீர் - நன்மைகளையும், வரம் - ஆச்ரிதரபேக்ஷிதவரங்களையும, தரும்-தந்தருளுகிற, திருககுறிப்பில்-திருவுளளத்திலே, வைததாகில - எனககுததா நினைததாகில, பரநத-சப்தாதி விஷயங்களிலே பரந்த, சிந்தை - எனனுடைய மானஸஸு, ஒனறி நினறு - உன்பக்கலிலேபொருநதி நின்று, நினனபாதபங்கயம - ப்ராப்யமுமாய் நிரதிசயபோக்யமுமானவுன் திருவடித்தாமரைகளை, நிரநதரம் நினைப்பதாக-நிரநதரமாகநினைக்கும்படி, நீநினைககவேண்டும் - நீதிருவுள்ளம்பறறியருளவேணும். (க0க)

வ்யா.— (இரந்துரைப்பதுண்டு) "శిరసా యాచతస్తస్య" "ஶிரஸாயாசதஸ்தஸ்ய" என்கிறபடியே திருவடிகளிலே பக்நாபிமாநனாய்க்கொண்டுவிழுந்து, தலையாலே தேவரீரையிரந்துவிண்ணப்பம் செய்யப்புகுகிற தொருகார்யமுண்டு. வகுத்தவிஷயத்திலே ஸ்வரூபப்ரயுக்தமான அநவரதபாவனையேஅர்த்திக்கிறாராகில்இப்படிகூசிச் சொல்லுகிற தென்னென்னில்; தம்முடையபூர்வ வ்ருத்தத்தைப்பார்த்தும்,தத்வத்தினுடைய உத்துங்கதையைப்பார்த்துமருளிச்செய்கிறார். பூர்வவ்ருத்தத்தைப் பார்த்தால் கிட்டக்கூசவேணும், கிட்டினாலும் உத்துங்கதையைப்பார்த்தால் அநாதரிக்கிறானோவென்று கூசவேணும். (வாழி) அவன்முகம் பார்க்கைக்காக மங்களாசாஸநம்பண்ணுகிறானென்னுதல்; அநவரதபாவனைக்கு விஷயமான வடிவழகை யநுஸந்தித்து மங்களாசாஸநம்பண்ணுகிறானென்னுதல்.

(ஏமநீர்நிறத்தமா) "அப்ரமேயோமஹோததி:" "அப்ரமேயோமஹோததி:" என்கிறபடியே-அபரிச்சிந்நமான கடல்போலே யிருக்கிற திருநிறத்தையுடைய நிருபாதிகபந்துவே.ஏமம்-உறவு."ஸுஹ்ருத்" "ஸநோபந்து:" என்றும், "ஸுஹ்ருதம்ஸர்வபூதாநாம்" "அஹம்வோபாந்தவோஜாத:" என்றும் சொல்லக்கடவதிறே.இத்தால்-இரந்தல்லது நிற்வொண்ணாதபடியையும் மங்களாசாஸநம்பண்ணி யல்லதுநிற்கவொண்ணாதபடியான வடிவழகையும், ப்ராப்தியையும் சொல்லுகிறது.(வரந்தருந்திருக்குறிப்பில்வைத்ததாகில் மன்னுசீர்) இவ்வாத்மாவுக்கு ஸ்வரூபாநுரூபமான நன்மைகளை, அபேக்ஷித்தார் அபேக்ஷித்த வரங்களைத்தந்தல்லது நிற்சமாட்டாத திருவுள்ளத்திலே வைத்ததாகில். சீர்-நன்மை. அதாகிறது கைங்கர்யஸாமராஜ்யம்.

இந்தகைங்கர்யத்துக்கடியாயிருந்துள்ள அநவரதபாவனையை அபேக்ஷிக்கிறார்மேல் (பரந்தசிந்தையொன்றிநின்று) சப்தாதிவிஷயங்களிலேபோந்த வென்னுடைய மநஸ்ஸு, மற்றொன்றில்போகாதே உன்பக்கலிலே யொன்றிநின்று. (நின்னபாதபங்கயம்) ப்ராப்தமுமாய் நிரதிஶய போக்யமாகையாலே ஆகர்ஷகமுமானஉன்திருவடிகளை. (நிரந்தம் நினைப்பதாக நீ நினைக்கவேண்டும்) அம்மநஸ்ஸு நிரந்தரமாக நினைக்கவற்றாம்படி நீ திருவுள்ளமாகவேணும். என் நினைவும் என்செயலும் அகிஞ்சித்கரம், உன் நினைவுக்கே பலவ்யாப்தியுள்ளதென்கை. ... ... ... (கoக)

அ.—நூற்றிரண்டாம்பாட்டு. விச்சேத ப்ரஸங்கமில்லாத அநவரதபாவனைக்கு ஶரீரஸம்பந்தமறவேணுங்காணுமென்ன; எனக்கு ருசியுண்டாயிருக்க தேவரீர் ஸர்வசக்தியாயிருக்க அநுவர்த்திக்கிற இவ்வசித் ஸம்ஸர்க்கத்தை தேவரீரறுத்துத்தந்தருளுமளவும் நான் தரித்திருக்கும்படி இன்னபடி செய்கிறோமென்று ஒரு வார்த்தை யாகிலும் அருளிச்செய்யவேணுமென்கிறார்.

வின்விலாதகாதலால்விளங்குபாதபோதில்வைத்து
உள்ளுவேனதூனநோயொழிக்குமாதெழிக்குநீர்
பள்ளிமாயபன்றியாயவென்றிவீரகுன்றினால்
துள்ளுநீர்வரம்புசெய்ததோன்றலொன்றுசொல்லிடே. (கoஉ)

ப - ரை.—தெழிக்கும் - கோஷிக்கிற, நீர - கடலிலே, பள்ளி - ஆச்ரிதார்த்தமாகக்கண்வளர்ந்தருளுகிற, மாய - ஆச்சர்ய பூதனே, பன்றியாய - மஹாவராஹமாய் யுத்தரணம்பண்ணி, வென்ற - ஹிரண்யனைவென்ற, வீர - வீரத்தையுடையனாய், துள்ளுநீர் - திரைக்கிளர்த்தியையுடைய கடலிலே, குன்றினால் - நீரிலே ஆழக்கடவ மலைகளைக்கொண்டு, வரம்புசெய்த - அணைசெய்த, தோன்றல் - சக்ரவர்த்தித்திருமகனே; வின்விலாத - விச்சேதமில்லாத,

நூற்றோராம்பாட்டு, ஏம நீர் - ஏமம்-நெடுமை. ... (கoக)

காதலால்-ப்ரேமத்தாலே, விளங்கு-உஜ்வலமான, பாதபோதில்-திருவடித்தாம ரைகளிலே,வைத்து - நெஞ்சைவைத்து, உள்ளுவேனது - அத்திருவடிகளையே தஞ்சமாக நினைத்திருக்கிறவெனக்கு, ஊனம் - ஊனத்தைவிளைக்கும், நோய்-ஸம்ஸாரமாகிற நோயை, ஒழிக்கும் ஆவொன்று-போக்கநினைத்திருக்கிறதோ ருபாயம், சொல்லு - அருளிச்செய்யவேணும். (கO௨)

வ்யா.—(வில்விலாதகாதலால்) ப்ரயோஜநாந்தரங்களைப்பற்றி நெகிழாதே அநந்ய ப்ரயோஜநனாய்க்கொண்டு திருவடிகளில் பண்ணின ப்ரேமத்தாலே. "வில்லை வில்லாமைவிரும்பி" என்னக் கடவதிறே. (விளங்குபாதபோதில்வைத்து) அந்த ப்ரேமத்தாலே உஜ்வலமான திருவடித்தாமரைகளிலே நெஞ்சைவைத்து. அநந்ய ப்ரயோஜநரான ஆச்ரிதருடைய ஸந்நிதியிலே அலருமதிறே திருவடித்தாமரைகள். இத்தால் – நான் ப்ரயோஜநாந்தரபரனாய் அசித் ஸம்பந்த மநுவர்த்திக்கிறதோ, தேவரீர் ஆச்ரிதவத்ஸலரல்லாமே யநுவர்த்திக்கிறதோவென்கை. (உள்ளுவேனதூனநோயொழிக்குமா) அத்திருவடிகளையே தஞ்சமென்று நினைத்திருக்கிற வெனக்கு ஊனத்தை விளைக்கும் சரீரஸம்பந்தமாகிற நோயைப்போக்க நினைத்திருக்கிற விரகும். ஊனமாகிறது – ஸ்வஸ்வரூபவிஷயமான ஜ்ஞாநஸங்கோசமும், பகவத்ஜ்ஞாநஸங்கோசமும், பகவதநுபவ சங்கோசமும் இவற்றை விளைக்குமதிறே தேஹஸம்பந்தம். "சரீரம்" என்றும், "வ்யாதி" என்றும்-பர்யாயமிறே. இத்தால்–வேறொன்றைத்தஞ்சமென்றிழக்கிறேனோ, சரீரத்திலாதரமுண்டாயிழக்கிறேனோ.

(தெழிக்குநீர்ப்பள்ளிமாய) தேவரீரோட்டை ஸ்பர்சத்தாலே கோஷிக்கிறகடலிலே ஆச்ரிதாநுகரஹார்த்தமாகக் கண்வளர்ந்தருளுகிற ஆச்சர்யமான ஸௌலப்யாதிகுணயுக்தனே. தெழிக்கை–முழங்குகை. (பன்றியாயவென்றிவீர) விஸத்ர்ஶமான ஸம்ஸாரத்திலே ஆச்ரிதாநுக்ரஹார்த்தமாக கண்வளர்ந்தருளுகிற விவ்வளவேயன்றிக்கே, நீருகக்கும் சேற்றுக்குமிறுயாத மஹாவராஹமாய் பாதாளகதையான பூமியை யெடுத்து ஹிரண்யாக்ஷனை வென்ற வீரத்தை யுடையவனே. (குன்றினால்துள்ளுநீர்வரம்புசெய்ததோன்றல்)தன்னில்கிடக்கும்பதார்த்தங்களைக்கரையிலே பொகடுந்திரைக்கிளர்த்தியையுடைய கடலிலே யழுந்தக்கடவ மலைகளைக்கொண்டு அணைசெய்த சக்ரவர்த்தித்திருமகனே. தோன்றல் – அரசன். பரமபதநிலயனான தேவரீர் ஆச்ரிதார்த்தமாக ஸம்ஸாரத்திலேவந்து ஸாலபராயும் தேவரீரையழிய மாறி நஷ்டோத்தரணம்பண்ணியும், ஆச்ரிதவிரோதிகளை யழியச்செய்தும், அதிமாநுஷசேஷ்டிதங்களைப் பண்ணியும், இப்படி நீர்மையாலும் சக்தியாலும் குறைவற்றதேவரீர்க்கு, என்சரீரஸம்பந்தத்தை யறுக்கைக்கு என்கையில் பொருளுண்டோவென்கை.

(ஒன்றுசொல்லிடே) இரண்டு தலையிலும் குறைவற்ற பின்பு இது அநுவர்த்திக்கிறது நீ நினையாமையிறே. தேவரீர் நினைக்குமளவும் தரிக்கும்படி "இன்னவளவிலேசெய்கிறோம்" என்று ஒரு வார்த்தை யருளிச்செய்யவேணும்.

தெழிக்குநீர்ப்பள்ளிமாய பன்றியாய வென்றிவீர குன்றினால் துள்ளுநீர்வரம்புசெய்ததோன்றல—விள்விலாதகாதலால் விளங்குபாதபோதில் வைத்து உள்ளுவேனதூனநோயொழிக்குமா—ஒன்று சொல்லிடே" என்றந்வயம். ... ... (கO௨)

அ.—நூற்றுமூன்றாம்பாட்டு. அசித்ஸம்பந்தம்தேஹாவஸாநத்திலே போக்குகிறோம், நீர் பதறுகிறதென்னென்ன; அங்ஙனேயாகில் தேவரீருடைய மேன்மைக்கும் நீர்மைக்கும் வடிவழுக்கும் வாசகமான திருநாமங்களை நான் இடைவிடாதே மநநம்பண்ணிப் பேசுகைக்கு ஒருப்ரகார மருளிச்செய்யவேணுமென்கிறார்.

திருக்கலந்துசேருமார்பதேவதேவதேவனே
இருக்கலந்தவேதநீதியாகிநின்றநின்மலா
கருக்கலந்தகாளமேகமேனியாயநின்பெயர்
உருக்கலந்தொழிவிலாதுரைக்குமாறுரைசெயே. (கOஙு)

ப - ரை.—திரு - பெரிய பிராட்டியார், கலந்து - தேவரீரோடே ஸம்ச்லேஷித்து, "அகலகில்லேனிறையும்" என்று, சேரும - நித்யவாஸம பண்ணுகிற, மார்ப - திருமார்பையுடையவனே, தேவதேவதேவனே - நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனே, இருக்கலந்த - நிக்ப்ரசுரமான, வேதம் - வேதத்தாலே ப்ரதிபாதிக்கையையே, நீதியாகிநின்ற - ஸ்வபாவமாகவுடையையாய் நின்ற, நிமலா - ஹேயப்ரத்யநீகனே, கருக்கலந்த - பொனபோலே புகர்த்து, காளமேகம்-கறுத்தமேகம்போலே யிருக்கிற, மேனி - திருமேனியையுடைய, ஆய - க்ர்ஷ்ணனே, ச்ரியாபதி * அயர்வறுமமரர்களதிபதி ஹேயப்ரத்யநீகன விலக்ஷணவிக்ரஹயுக்தன் ஆச்ரிதஸுலபன் எனறு, நினபெயர் உருக்கலநது - உன்திருநாமங்களை மநநமபண்ணி, ஒழிவிலாது - இடைவிடாதே, உரைக்கும் ஆறு - பேசும் வழியை, உரைசெய் - அருளிச்செயயவேணும். (கOஙு)

வ்யா.—(திருக்கலந்துசேருமார்ப) பிராட்டி தேவரீரோடே ஸம்ச்லேஷித்து, அந்த ஸம்ச்லேஷத்தில் அதிசங்கித்து "அகலகில்லேனிறையும்" என்று நித்யவாஸம்பண்ணுகிற திருமார்வையுடையவனே. பத்தரோடு முக்தரோடு நித்யரோடு வாசியற "ईश्वरीं सर्वभूतानाम्" "ஈச்வரீம்ஸர்வபூதாநாம்" என்கிறபடியே - ஸர்வர்க்கும் அபாச்ரயபூதையான பிராட்டி தான் நித்யஸாபேக்ஷையாம்படியன்றோ தேவரீருடையபெருமை. (தேவதேவதேவனே) "यत्र पूर्वे साध्याः सन्ति देवाः" "யத்ரபூர்வேஸாத்யாஸ்ஸந்திதேவா:" என்கிறபடியே ப்ரஹ்மாதிகளுக்கு மோக்ஷருசி பிறந்தவன்று ப்ராப்யரான நித்யஸூரிகளுக்கு நித்யாநுபாவ்யனாய் கொண்டு நிர்வாஹகனானவனே. தேவரீரும் பிராட்டியும் சேர்ந்

சேர்த்தியிலே யெடுத்துக் கைநீட்டுகையே யாத்ரையாயிருக்கும் நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனென்கை. (இருக்கலந்த வேதநீதி யாகிநின்ற நிமலா) ரிக்ப்ரசுரமான வேதத்தாலே ப்ரதிபாதிக்கை யே ஸ்வபாவமாகவுடையையாய்நின்றஹேயப்ரத்யநீகனே. நீதி-ஒழுக்கம். அதாகிறது – ஸ்வபாவம். "ஹ்ரீஶ்ச தே லக்ஷ்மீஶ்ச பத்ந்யௌ" "ஹ்ரீஶ்ச தேலக்ஷ்மீஶ்சபத்ந்யௌ" "தத்விஷ்ணோ: பரமம் பதம் ஸதா பஶ்யந்தி ஸூரய:" "தத்விஷ்ணோ:பரமம்பதம்ஸதாபஶ்யந்திஸூரய:" "அபஹதபாப்மா" "அபஹதபாப்மா" இத்யாதிவாக்யங்களாலேச்ரிய:பதித்வமென்ன, ஸூரிபோக்யதை யென்ன, ஹேயப்ரத்யநீகதையென்ன, இப்படிகளாலே வேதைக ஸமதிகம்யனென்கை.

(கருக்கலந்த காளமேகமேனியாய) பொன்போலே புகர்த்துக் கறுத்து மேகம்போலே யிருக்கிற திருமேனியையுடைய க்ர்ஷ்ணனே. கரு-பொன். "நீலதோயதமத்யஸ்தா வித்யுல்லேகேவ பாஸ்வரா" "நீலதோயதமத்யஸ்தா வித்யுர்லேகேவபாஸ்வரா" "அஜாயமாநோ பஹுதா விஜாயதே" "அஜாயமாநோபஹுதாவிஜாயதே" என்று – விக்ரஹத்தையும் அவதாரஸௌலப்யத்தையும் சொல்லிற்றிறே. "நவமாஸத்ருதம் கர்ப்பம்" "நவமாஸத்ர்தம்கர்ப்பம்"என்னுமாப்போலேநீரையுள்ளேயுடைய காளமேகமென்னவுமாம். கரு - கர்ப்பம். இத்தால் – தாபஹரமாய் ஆகர்ஷகமுமானவடிவோடேக்ர்ஷ்ணனாய்வந்தவதரித்து ஆச்ரிதர்க்கு ஸுலபனானவனென்கை. (நின்பெயருருக்கலந்தொழிவிலாது உரைக்குமாறுரைசெயே) ச்ரிய:பதி, * அயர்வறுமமரர்களதிபதி, ஹேயப்ரத்யநீகன், விலக்ஷண விக்ரஹயுக்தன், ஆச்ரித ஸுலபனென்று நிர்தோஷப்ரமாண ப்ரதிபாத்யனான வுன்குணங்களுக்கு வாசகமானதிருநாமங்களை வடிவழகோடே இடைவிடாதே நான்பேசுகைக்கு வழியை யருளிச்செய்யவேணும். ... (௧0௩)

அ.—நூற்றுநாலாம்பாட்டு. "யத்கரோஷி யதஶ்நாஸி" "யத்கரோஷியதஶ்நாஸி" என்றும், "த்ரவ்யயஜ்ஞாஸ் தபோயஜ்ஞா:" "த்ரவ்யயஜ்ஞாஸ்தபோயஜ்ஞா:" என்று மிதயாதிகர்மத்தாலே விரோதிபாபத்தைப் போக்கி, "ஸததம் கீர்த்தயந்த:" "ஸததம்கீர்த்தயந்த:"என்கிறபடியே நம்மை யநுபவிக்கும்வழி சொல்லிவைத்திலோமோ, "உரைசெய்" என்கிற தென்னென்ன; நீ ப்ரதிபந்தக நிரஸநஸமர்த்தனா யிருக்க நான் கர்மத்தாலே விரோதியைப்போக்கவென்பதொன்றுண்டோ, நீயே என் விரோதியைப்போக்கி உன்னை நான் மேல்விழுந்து இடைவிடாதே யநுபவிக்கும்படி பண்ணித் தந்தருளவேணுமென்கிறார்.

---

நூற்றுமூன்றாம்பாட்டு. ( கருக்கலந்த ) கரு - பொன்னாதல்; கர்ப்பமாதல். ... ... ... ... (௧0௩)

கடுங்கவந்தன்வக்கரன்கரன்முரன்சிரமவை
இடந்துகூறுசெய்தபல்படைத்தடக்கைமாயனே
கிடந்திருந்துநின்றியங்குபோதுநின்னபொற்கழல்
தொடர்ந்துவீள்விலாததோர்தொடர்ச்சிநல்கவேண்டுமே. (௧௦௪)

ப-ரை.—கடும்-மிகக்கொடியனுன, கவந்தன் - கபந்தனுடையவும், வக்கரன் - தந்தவக்ரனுடையவும், கரன - கரனுடையவும், முரன - முரனுடையவும், சிரமவை - தலைகளை, இடந்து - தள்ளி, கூறுசெய்த - சின்னம் பின்னமாக்கின, பல்படை - பலவகைபபட்ட ஆயுதங்களை, தடம் - ஆச்ரிதனாக குளிரும்படி தடவக்கடவ, கை - திருக்கைகளிலே தரித்த, மாயனே - ஆச்சர்ய சக்தியுக்தனே; கிடந்திருந்து நின்றியங்குபோதும் - கிடக்கும்போதும் இருக்கும்போதும் நிற்கும்போதும் ஸஞ்சரிக்கும்போதும், நின்ன - வகுத்த சேஷியானதேவரீருடைய, பொற்கழல் தொடர்ந்து - ஸ்ப்ருஹணீயமான திருவடிகளைப் பின்சென்று, வீள்விலாததோர்தொடர்ச்சி - இடைவிடாதபடியான ஸ்வபாவத்தை, நல்கவேண்டும் - எனக்குத் தந்தருளவேணும். (௧௦௪)

வ்யா.—(கடுங்கவந்தன் வக்கரன் கரன்முரன் சிரமவை) அற வெட்டியனுனகபந்தன், தந்தவக்ரன், கரன், முரன், இவர்களுடைய தலைகளை. அல்லாதாரிற்காட்டில் கபந்தனுக்கு வெட்டிமையாவது - பிராட்டியைப்பிரிந்து கடலும் மலையும் விசும்பும் தேடுகிறதசையிலே எதிரம்புகோக்கவந்த வெட்டிமையைநினைத்து வெறுக்கிறுர். (இடந்துகூறுசெய்த) அவர்கள் தலைமண்டையை யிடந்து சரீரங்களை "ఛిన్నం భిన్నం శరైర్దగ్ధమ్" "சிந்நம்பிந்நம்ஶரைர்த்தக்தம்" என்கிறபடியே சகலமாக்கினவனே. அஸுரராக்ஷஸர்களை யழியச்செய்தாப்போலே என்னுடைய பாபரூபமான ப்ரதிபந்தகங்களையழியச்செய்யவேணுமென்கை. (பல்படைத்தடக்கைமாயனே) அவர்களை யழியச்செய்கைக்குப் பலவகைப்பட்ட ஆயுதங்களை, ஆச்ரிதரைக் குளிரத்தடவக்கடவ திருக்கையிலேதரித்த ஆச்சர்ய சக்தியுக்தனே. ஒன்றே ப்ரதிகூலர்க்கு பாதகமாய் அதுதானே யநுகூலர்க்கு ரக்ஷகமாயிருக்கை ஆச்சர்யமிறே. என்னுடைய விரோதியைப்போக்குகைக்கு திவ்யாயுதங்கள்வேண்டா, இரங்கவமையுமென்கை. "అప్యేష పృష్ఠే మమ హస్తపద్మం కరిష్యతి శ్రీమదనన్తమూర్తిః" "அப்யேஷப்ர்ஷ்டே மமஹஸ்தபத்மம் கரிஷ்யதிஶ்ரீம தநந்தமூர்த்தி:" என்றும், "அணிமிகுதாமரைக்கையை யந்தோவடிச்சியோந்தலைமிசை நீயணியாய்" என்றும் - ஆச்ரிதரை உஜ்ஜீவிப்பிக்குங் கையிறே. தடம்-குளிர்த்தி. ஆனாலும் உமக்குச் செய்யவேண்டுவதென்னென்ன (கிடந்திருந்து நின்றியங்குபோதும்) "ఆసీనో వా శయానో వా తిష்ఠన్ యత్ర కుత్ర వా" "ஆஸீநாவாஶயாநாவா திஷ்டந்தோ யத்ரகுத்ரவா" என்கிறபடியே - கிடந்தும் இருந்தும் நின்றும் ஸஞ்சரித்தும் இப்படிகளாலே தேஹயாத்ரை நடக்கும்போதும். (நின்னபொற்கழல்) வகுத்த சேஷியான தேவரீருடைய ஸ்ப்ருஹணீயமான திருவடிகளை

தேஹயாத்ராசேஷமான காலமுமவிடவொண்ணாத திருவடிகளென்கை. (தொடர்ந்து வீள்விலாத தோர்தொடர்ச்சி நல்கவேண்டுமே) மேல்விழுந்து இடைவிடாதபடியான ஸ்வபாவத்தை யெனக்குப் பண்ணித் தந்தருளவேணும். தொடர்ச்சி - செறிவு. இத்தால்-அநுபவ விரோதிகளைத் தேவரீரேபோக்கவும், ஸர்வகாலமும் ஸ்ப்ருஹணீயமான தேவரீர் திருவடிகளை இடை விடாதே யநுபவிப்பேறாகவும் பண்ணித் தந்தருளவேணுமென்றதாய்த்து. ... (௧0௪)

அ.—நூற்றஞ்சாம்பாட்டு. நான்சொன்ன உபாயங்களி லிழியாதொழிகைக்கும் நான்செய்தபடி காண்கையொழிய போகத்திலே த்வரிக்கைக்கும ஹேதுவென்னென்ன; பிராட்டி புருஷகாரமாக குறுதிகரான தேவரீர் விஷயீகாரத்தையே தஞ்சமென்றிருக்குமவனுகையாலே உபாயாந்தராபேக்ஷையில்லை, தேவரீர் வடிவழகிலன்வயமே போகத்தில த்வரிக்கைக்கடியென்கிறார்.

மண்ணையுண்டுமிழ்ந்துபின்னிரந்துகொண்டளந்தமண்
கண்ணுளல்லதில்லையென்றுவென்றகாலமாயினாய்
பண்ணைவென்றவின்சொல்மங்கைகொங்கைதங்குபங்கயக்
கண்ணநின்னவண்ணமல்லதில்லையெண்ணும்வண்ணமே. (௧0௫)

ப-ரை.—மண்ணையுண்டு - ப்ரளயாபத்திலே லோகங்களை யடையத்திருவயிற்றிலே வைத்து, உமிழ்ந்து - ஸ்ருஷ்டிகாலத்திலே வெளிநாடு காணப்புறப்படவிட்டு, பின் - ஸ்ருஷ்டமானபின்பு, அஜ்ஜகத்தை மஹாபலி அபஹரிக்க, இரந்து - அவன் பக்கலிலே அர்த்தியாய்ச்சென்றிரந்து, கொண்டு - நீரேற்றுப்பெற்றுக்கொண்டு, அளந்த - திருவடிகளாலே அளந்தருளின, மண் - பூமியானது, கண்ணுள்ளல்லதில்லையென்று - நம் கடாக்ஷத்தில் நின்றதொழிய வேறு ஸ்திதியில்லையென்று, வென்ற - ஸர்வபதார்த்தங்களும் தன் கையிலே அகப்படும்படி ஸகலபதார்த்தங்களுக்கும் நிர்வாஹகமான, காலமாயினாய் - காலதத்வத்துக்கு நிர்வாஹகனாய், பண்ணை - இசைகளை வென்றுகொண்ட, இன்சொல் - இனிய பேச்சையுடையளாய், மங்கை - மங்கைப்பருவத்தை யுடையளான பெரியபிராட்டியாருடைய, கொங்கை - திருமுலைத்தடத்திலே, தங்கு - பொருந்தி வர்த்திக்கிற, பங்கயக்கண்ண - புண்டரீகாக்ஷனே, எண்ணும் வண்ணம் - தேவரீரையிடைவிடாதே அநுபவிக்கவேணுமென்கிற மநோரதப்ரகாரத்துக்கு ஹேது, நின்னவண்ணமல்லது இல்லை - உன் வடிவழகல்லது வேறொன்றில்லை. (௧0௫)

வ்யா.—(மண்ணையுண்டுமிழ்ந்து) ப்ரளயாபத்திலே அபேக்ஷியாதிருக்க ஆபத்தே முதலாக வரையாதே இஜ்ஜகத்தைத்திருவயிற்றிலேவைத்துரக்ஷித்து, உள்ளிருந்துநோவுபடாதபடிஸ்ருஷ்டிகாலத்திலே உமிழ்ந்து. இத்தால்-தன்பக்கல் விமுகராநாரளவிலும் வத்ஸலனென்கை. (பின் இரந்துகொண்டளந்து) ஸ்ருஷ்டமானபின்பு அஜ்ஜகத்தை மஹாபலியபஹரிக்க அவன்பக்கலிலே அர்த்தியாய்ச்சென்றுஇரந்து, இந்த்ரனுக்குத்த்ரைலோக்யராஜ்யத்தைக்கொடுத்து,

அவ்வளவுக்கு மேலே சதுர்த்தசபுவநத்தி லுண்டான ஸகல சேதநர்தலையிலும் உன்திருவடிகளைவைத்து. இத்தால் - விமுகரானு ரளவிலும் சீலவானுமாய் ஸுலபநுமாயிருக்குமவனென்கை. தன்னை யழியமாறித்தாழ நிற்கையிறே-சீலம, எல்லார்தலையிலும் திருவடிகளை வைக்கையிறே - ஸௌலப்யம். (மண்கண்ணுளல்லதில்லையென்று) விமுகரான ஸம்ஸாரிகளைக்குறித்து இப்படி செய்தருளுகைக் கடியென்னென்னில்; இஜ்ஜகத்துக்கு நம்கடாக்ஷ மொழிய வேறு ஸ்திதியில்லையென்று. (வென்றகாலமாயினுய்) ஸகல பதார்த்தங்களும் தன்கையிலே யடிப்படும்படி ஸகலபரிணாமத்துக்கும் நிர்வாஹகமான காலத்துக்கும் நிர்வாஹகனானவனே. இத்தால் - ஸ்ர்ஷ்ட்யாதிகளுக்கு கர்மீபவித்தும் அங்கசேஷத்வத்தால் முறையழிந்தும், இப்படிகாலவச்யரான சேதநர்க்கு தேவரீரல்லது காலத்தை ஜயிக்க விரகில்லையென்கை. “కాలసంపచతేయత్రనకాలస్తత్రవైప్రభుః” “காலஸம்பசதேயத்ரநகாலஸ்தத்ரவைப்ரபு:” என்னக்கடவதிறே. “மண்கண்ணுளல்லதில்லையென்றுவென்ற” என்று கீழே அந்வயிக்கவுமாம். அப்பக்ஷத்தில, மஹாபலி, ப்ரயளயம் முதலான விரோதிகளை உன்பேறாகவென்றவென்கை.

(பண்ணைவென்றவின்சொல்மங்கைகொங்கைதங்குபங்கயக்கண்ண) “మధురామధురాలాపా” “மதுராமதுராலாபா” – என்கிறபேச்சையும்பருவத்தையுமுடைய பிராட்டியுடைய திருமுலைத்தடத்தையே அபாச்ரயமாகவுடைய புண்டரீகாக்ஷனே. இதநால்-பருவத்தாலும் பேச்சாலும்அவயவசோபையாலும் விலக்ஷணையானபிராட்டிக்கு வல்லபனானையாலே பூர்வவ்ர்த்தத்தை விஸ்மரித்து, என்பக்கலிலே கீழ்ச்சொன்ன ஆபத்ஸகத்வாதிகுணப்ரேரிதமான விசேஷ கடாக்ஷத்தைப் பண்ணினவனென்கை. (நின்னவண்ண மல்லதில்லையெண்ணும் வண்ணமே) தேவரீரை இடைவிடாதே யநுபவிக்க வேணுமென்கிற மநோரதப்ரகாரத்துக்கு ஹேது உன்வடிவழகல்லது வேறொன்றில்லை. உன்னுடைய விசேஷகடாக்ஷத்துக்கடியான வாத்ஸல்யாதி குணங்களொழிய உன்வடி வழகே யெனக்கு இம் மநோரதத்துக்கும் ஹேதுவென்கை. ... ... (கoரு)

அ.—நூற்றாறாம்பாட்டு. “நின்னவண்ணமல்லதில்லை” என்று-தாம் வடிவழகிலே துவக்குண்டபடி சொன்னார் - கீழ்; இதில் - தேவரீருடைய ஆபத்ஸகத்வத்துக்கல்லது நான்நெகிழிலும் என்னெஞ்சுவேறொன்றில் ஸ்நேஹியாதென்கிறார்.

கறுத்தெதிர்ந்தகாலநேமிகாலனோடுகூடவன்
றறுத்தவாழிசங்குதண்டுவில்லும்வாளுமேந்தினாய்
தொறுக்கலந்தவூனமஃதொழிக்கவன்றுகுன்றமுன்
பொறுத்தநின்புகழ்க்கலாலோர்நேசமில்லைநெஞ்சமே. (கoசு)

ப - ரை.—கறுத்து - க்ருத்தனாய், எதிர்ந்த - எதிரிட்ட, காலநேமி - காலநேமியாகிற வஸுரன், காலனொடுகூட - ம்ர்த்யுவோடேகூடும்படி, அன்று - அவனாலே ப்ரஹ்மாதிகளுக்கு ஆபத்துவந்த வன்று, அறுத்த - அவனதலையை யறுத்த, ஆழிசங்கு தண்டு வில்லும் வாளுமேந்தினாய் - திருவாழிதொடக்கமான திவ்யாயுதங்களை தரித்தவனே, தொறுக்கலந்த - பசுக்களுக்குண்டான-ஊனமஃதொழிக்க - அநுபவவிநாச்யமான ஆபத்தைப்போக்குகைக்காக, அன்று-பசுக்களும் இடையருமவருந்துகிறகாலத்திலே, முன - அவைகளுக்கு நாசம்வருவதற்கு முன்னமே, குன்றம்பொறுத்த - கோவர்த்தநத்தை யெடுத்து ரக்ஷித்த நின்புகழ்க்கலால் - உன்கல்யாணகுணத்துக்கல்லது, நெஞ்சம் - என்மநஸ்ஸுக்கு, ஓர் நேசமில்லை - ப்ராவண்யலேசமுமுண்டாகாது. (௧௦௬)

வ்யா.—(கறுத்தெதிர்ந்தகாலநேமிகாலனொடுகூட) க்ருத்தனாய் எதிரிட்ட காலநேமியாகிறவஸுரன் ம்ர்த்யுவோடே கூடும்படி. இந்த்ராதிகளுடைய ஐச்வர்யத்தையும் அவர்கள்பக்கல் ஈஶ்வராநுக்ரஹத்தையும்பொறாதே க்ருத்தனானாய்த்து. "సుహృదం సర్వభూతానామ్" "ஸுஹ்ர்தம் ஸர்வபூதாநாம்" என்கிறவிஷயத்திலேகிடீர் க்ருத்தனாய்த்து. "సనో బన్ధుః" "అహం వో బాన్ధవో జాతః" "ஸநோபந்து:" "அஹம்வோபாந்தவோஜாத:" என்கிறபடியே நிருபாதிகபந்துவின் பக்கலிலேயிறே கோபித்தது. ஓரஞ்சலியாலே பொருநீராகக்கலக்கலாமவிஷயத்திலே துஷ்பரக்ர்தியாகையாலே எதிரம்புகோத்து நஶித்தானென்கை. அநுகூலித்தாரை யுன்னோடே கூட்டுகையும் ப்ரதிகூலித்தாரை யமனோடேகூட்டுகையுமிறே தேவரீர்க்கு ஸ்வபாவம். (அன்று) காலநேமியாலே இந்த்ராதிகளுக்கு ஆபத்து வந்தவன்று. (அறுத்தவாழிசங்குதண்டுவிலலும்வாளுமேந்தினாய்) ஸபரிகரனான காலநேமியைத் தலையையறுத்த. திருவாழிதொடக்கமான ஸ்ரீபஞ்சாயுதங்களை தரித்தவனே. திருவாழியாலே அவன்தலை யறுப்புண்டபின்னும் தேவர்களுக்கு என்னவிரோதம் வருகிறதோ! என்று, "கைகழலாநேமியான்" என்கிறபடியே திவ்யாயுததரனாயிருக்கிறபடி.

(தொறுக்கலந்த வூனமஃதொழிக்க) இந்த்ராதிகளுக்கு அஸுரனால் வந்த ஆபத்தைப்போக்கினபடி சொல்லிற்று-கீழ், இந்த்ரனால் பசுக்களுக்கும் இடையர்க்கும்வந்த ஆபத்தைப்போக்கினபடி சொல்லுகிறதுமேல். பசுக்களுக்கு அநுபவவிநாஶ்யமான ஆபத்தைப்போக்குகைக்காக. அஸுரர்களால் வந்த ஆபத்துக்கு ரக்ஷ்யமான இந்த்ரனால் வந்த ஆபத்தாகையாலே அநுபவித்தேயறுமாய்த்து. (அன்று) "గోగోపీజనసఙ్కులమతీవార్తమ్" "கோகோபீஜநஸங்குலமதீவார்த்தம்" என்கிறதசையிலே. தொறு - பசு. (குன்றமுன் பொறுத்த நின்புகழ்க்கலால்) கோவர்த்தநத்தை தரித்து ரக்ஷித்த வுன்கல்யாண குணத்துக்கல்லது.

இந்த்ரன் ப்ராதிகூல்யத்தில் வ்யவஸ்திதனல்லாமையாலே, அழிச்செய்யும் திவ்யாயுதங்களுண்டாயிருக்கத் தன்னுடைய ரக்ஷ்யவர்க்கத்தை மலையெடுத்து நோக்கினானென்கை. "முன்" என்கிறது - ஒருத்தருக்கு நோவுவருவதற்கு முன் பென்கை. "வரைமுனேந்தும்" என்று - அவன் அநாயாஸேந தரிக்கச்செய்தேயும், அவன் ஸௌகுமார்யத்தை யநுஸந்தித்து "பொறுத்த" என்கிறார் இவர். (ஓர்நேசமில்லை நெஞ்சமே) வ்யக்த்யந்தரத்திலாதல், குணாந்தரத்திலாதல் எனக்கு ப்ராவண்யம் ஸம்பவிக்கிலும் என் மநஸ்ஸுக்கு ப்ராவண்யலேசமில்லை. ஆக, ப்ரயோஜநாந்தரபரரான இந்த்ராதிகளுடைய ஆபத்தை ஆயுதத்தாலே யழித்தும், ஸ்வாபிமாநத்துக்குள்ளே கிடக்கிற பசுக்களுக்கு மிடையருக்கும் வந்தவாபத்தை மலையையெடுத்து ரக்ஷித்தும், இப்படியால் வந்த உன்னுபத்ஸகத்வத்துக்கல்லது என்னெஞ்சுக்கு வேறொரு ஸ்நேஹமில்லையென்று தாத்பர்யம். ... ... ... (க0சு)

நூற்றேழாம்பாட்டு.கீழிரண்டுபாட்டாலே-தமக்கும்தம்முடையதிருவுள்ளத்துக்கு முண்டானபகவத்ப்ரேமத்துக்கடியான வடிவழகையும் ஆபத்ஸகத்வத்தையும் பேசினார்; இதில் - அந்தஸங்கவிரோதியான ப்ரபல ப்ரதிபந்தகங்களை ப்ரபலரான அஸுரர்களை யழியச்செய்தாப்போலே போக்கின வுன்திருவடிகளுக்கல்லது வேறொருவிஷயத்தில் நான் ஸங்கம் பண்ணேனென்கிறார்.

காய்சினத்தகாசிமன்னன்வக்கரன்பவுண்டிரன்
மாசினத்தமாலிமான்சுமாலிகேசிதேநுகன்
நாசமுற்றுவீழநாள்கவர்ந்தநின்கழற்கலால்
நேசபாசமெத்திறத்தும்வைத்திடேனெம்மீசனே. (க0எ)

ப - ரை.—எம்மீசனே - எனக்கு நிர்வாஹகனானவனே; காய் - ஸாதவிகரைக்கொன்றல்லது நில்லாத, சினத்த-கோபத்தையுடைய, காசிமன்னன்-காசிராஜனும, வக்கரன - சந்தவக்ரனும், பவுண்டிரனும் - பௌண்டகவாஸுதேவனும், மாசினத்தமாலி - மிக்ககோபத்தை யுடையனானமாலியும், மான்சுமாலி_மஹானான ஸுமாலியும், கேசி-ஸ்வர்க்கவாஸிகளான தேவர்களுக்குபாதகனானகேசியும், தேநுகன் - பசுக்களுக்கும் இடையர்க்கும் பயங்கரனானதேனுகாஸுரனும், நாசமுற்று - துக்கத்தை யநுபவித்து, வீழ - ம்ருதராய் விழும்படி, நாள்கவர்ந்த - ஆயுஸ்ஸைவாங்கின, நின்கழற்கலால் - உன்திருவடிகளி லல்லது, நேசபாசம் - பக்தியாகிற கயிற்றை, எத்திறத்தும் - எந்ததசையிலும், வைத்திடேன் - வையேனென்கிறார். (க0எ)

வ்யா.—(காய்சினத்தகாசிமன்னன்) காயும் சினத்தை யுடைய காசிராஜன். ஸாத்விகரைக் கொன்றல்லது விடாதகோபத்தையுடையவனென்கை. காய்தல் - கொல்லல். அப்படியிருக்கும்தந்தவக்ரன். (பவுண்டிரன்) "ஈச்வரோஹம்" என்றிருக்கும் பௌண்ட்ரக வாஸுதேவன். (மாசினத்தமாலி) பெரியசினத்தையுடைய மாலி. (மான்சுமாலி) மஹாஜ்ஞாநஸுமாலி. பெரியசினத்தை யுடையனாய் பத்ராகாரனுமா யிருக்குமென்கை. (கேசி) ஸ்வர்க்கவாஸிகளான தேவதைகளுக்கும் பாதகனான கேசி. (தேநுகன்) க்ர்ஷ்ணனை அநுவர்த்திக்கிற இடையர்க்கும் பசுக்களுக்கும் பயங்கரனான தேநுகன். இவ்வாஸுர வர்க்கத்தினுடைய க்ரௌர்யத்தைப் பேசிற்று, தம்முடைய ப்ரதிபந்தகங்களினுடைய க்ரௌர்யம் தோற்றுகைக்காக.

(நாசமுற்றுவீழ நாள் கவர்ந்த) துக்கத்தை யநுபவித்து ம்ர்தராய் விழும்படி ஆயுஸ்ஸை வாங்கின. நாசம் - துக்கம். "வீழ்தல்" என்று - விடுதலாய், ப்ராணனை விடும்படி யென்றுமாம். இத்தால் - ஆச்ரித விரோதிகளை ஸ்வசத்ருக்களைப் போலே கண்ணறு க்ரூரமாக வதித்தபடி. (நின்கழற்கலால் நேசபாசமெத்திறத்தும் வைத்திடேன்) விரோதிநிரஸந சீலனான வுன் திருவடிகளிலல்லது, பக்தியாகிற கயிற்றை எவ்விஷயத்திலும் வையேன். பந்தகமாகையாலே பக்தியைக் கயிறு என்கிறது. "பாடுமேனுடிரண்டேனுங்கயிற்றினால்" என்னக்கடவதிறே. (எம்மீசனே) என்றதனை. விஷயாந்தர ப்ராவண்ய ஹேதுவான பாபங்களையும் தேவரீர்பக்கல் ப்ரேமத்துக்கு விரோதியான பாபங்களையும்போக்கி இவ்வளவும் புகுர நிறுத்து கைக்காடி இத்தையுடையவனானையா லென்னை. ... (௧௦௭)

அ.—நாற்றெட்டாம்பாட்டு. "நின்புகழ்க்கலால் ஓர்நேசமில்லை நெஞ்சம்" என்றும், "நின்கழற்கலால் நேசபாசமெத்திறத்தும் வைத்திடேன்" என்றும் சொல்லக்கடவதிறே, இதுக்கு விஷயமாக நம்மைக்கிட்டி அநுபவிக்கப்பார்த்தாலோ வென்ன; போகமோக்ஷ ஸுகங்களை அநுபவிக்கப் பெற்றாலும் உன்னை ப்ராபிக்கவேணுமென்னுமாசையொழிய மற்றொன்றை விரும்பேனென்கிறார்.

கேடில்சீர்வரத்தனாய்க்கெடுமவரத்தயனரன்
நாடினோடுநாட்டமாயிரத்தனாடுநண்ணினும்
வீடதானபோகமெய்திவீற்றிருந்தபோதிலும்
கூடுமாசையல்லதொன்றுகொள்வனோகுறிப்பிலே. (௧௦௮)

---

நாற்றெட்டாம்பாட்டு. சொல்லக்கடவதிறே - சொன்னீரன்றோ வென்றபடி.

ப-ரை.—கேடில் - அழிவில்லாத, சீர்-ஸம்பத்தையுடையனும்படி, வரத்த ஞய்-பகவத் ப்ரஸாதத்தையுடையனுயிருக்கிற, அயன்நாடினேடு - ப்ரஹ்மாவி னுடைய ஸத்யலோகஸம்பத்தையும், கெடும்-எல்லாம் தன்னுலே அழியுமபடி, வரத்து-பகவத்ப்ரஸாதமபெற்ற, அரன்நாடினேடு-ருத்ரனுடைய கைலாஸஸம் பத்தையும், நாட்டமாயிரத்தன்நாடு - ஆயிரங்கண்களையுடையனான இந்த்ரனு டைய ஸ்வர்க்கலோகஸம்பத்தையும், நண்ணினும்-பெறுகிலும், வீடதான - பரம புருஷார்த்த லக்ஷணமாகிற, போகமெய்தி - போகத்தைப் ப்ராபித்து, வீற்றி ருந்தபோதிலும்-நிரதிசயாநந்த நிர்ப்பாரராயிருந்தபோதிலும், கூடுமாசையல் லது-உன்னைக்கூடவேணுமென்னு மாசையல்லது, ஒன்று-வேறொன்றை, குறி ப்பில் கொள்வனே - நெஞ்சால் நினைப்பனோ வென்கிறு. (௬0அ)

வ்யா.—(கேடில் சீர்வரத்தனுய்க் கெடும்வரத்தயனரன்) (கே டில் சீர்வரத்தனுய் - அயன், கெடும்வரத்தனுய் - அரன்) அழி வில்லாத ஸம்பத்தையுடையனும்படி பகவத் ப்ரஸாதத்தையுடைய னு யிருக்கிற ப்ரஹ்மா, ஸர்வமும் தன்னுலே உபஸம்ஹாரமாம் படி பகவத்ப்ரஸாதம் பெற்ற ருத்ரன். அதவா, அழிவில்லாத ஸம் பத்தையுடையனுய் வரப்ரதாநக்ஷமனுன ப்ரஹ்மாவும், ஸர்வஸம் ஹாரத்தையுடையனுய் வரப்தாநக்ஷமனுன ருத்ரன் என்றுமாம். (நாடினேடு நாட்டமாயிரத்தன் நாடுநண்ணினும்) இவர்களுடைய நாட்டோடேகூட ஸஹஸ்ராக்ஷனுடைய நாட்டையும் பெற்று லும். நாட்டம் – கண். "நாடு" என்று - நாட்டிலுள்ள விஷயங் களை நினைக்கிறது. அதாகிறது - ப்ரஹ்மருத்ராதிகளுடைய மூவ கைப்பட்ட ஐச்வர்யத்தை நாஞெருத்தனும் பெற்றுலும். இவ்வை ச்வர்யம் மூன்றுக்கும் ஏகாச்ரயத்திலே ஸம்பாவனையில்லையிறே; கூடாதது கூடினுலும்.

(வீடதானபோகமெய்தி) அதுக்குமேலே பரமபுருஷா ர்த்த லக்ஷணமாகிற போகத்தை ப்ராபித்து. மோக்ஷமாகிறது-ஸம் ஸாரநிவ்ர்த்தி மாத்ரமாதல், ஒருதேசவிசேஷ ப்ராப்தியாதலன்று, கைங்கர்யபோகமென்கை. (வீற்றிருந்தபோதிலும்) கைங்கர்யோப கரணங்கள் குறைவற்றிருந்தபோதிலு மென்னுதல்; நிரதிசயா நந்த நிர்ப்பரனு யிருந்தபோதிலு மென்னுதல். கைங்கர்யோப கரண ஸம்பத்தி ஸங்கல்பமாத்ரத்தாலே உண்டாமதிறே. போக மோக்ஷங்கள் ஏகாச்ரயத்திலே ஸம்பவிக்கிலும்.

---

வரத்தனுய்-வரத்தை லபித்தவனென்னுதல்; வரத்தைக் கொ டுக்கிறவனென்னுல். வீற்றிருக்கை-மூவருடைய ஐச்வர்யத்தாலும் இவ்வருகுள்ளாரில் வேறுபாடு தோற்றவிருக்கையாதல்; மோக்ஷத் திலே ஆநந்தநிர்ப்பரனு யிருக்கையாதல். ஆநந்தநிர்ப்பரனுயிருந் தால் கைங்கர்யம் வேண்டாவோவென்ன; அருளிச்செய்கிருர் (கை ங்கர்யேத்யாதி.) ... ... ... ... (௬0அ)

(கூடுமாசையல்லதுஒன்றுகொள்வனோகுறிப்பிலே) உன்னைக் கூடவேணுமென்னு மாசையல்லது வேறொன்றை நெஞ்சால் விரும்புவனோ. "ధర్మార్థకామైః కిం తస్య ముక్తిస్తస్య కరే స్థితా । సమస్తజగతాం మూలే యస్య భక్తిః స్థిరా త్వయి" "தர்மார்த்தகாமைஃகிந்தஸ்ய முக்திஸ்தஸ்யகரேஸ்திதா । ஸமஸ்தஜகதாம்மூலே யஸ்யபக்திஸ்திராத்வயி" "జ్ఞానం యద సంప్రాప్తుమ్" "விஜ்ஞாநம் யதிதம்ப்ராப்தம்" என்றிறே பகவத்ஜ்ஞாநபக்திகள் ரஸித்தவர்களுடைய வார்த்தை. ... (கOஅ)

அ.—நூற்றொன்பதாம்பாட்டு. கீழ்-நம்பக்கல் உமக்குண்டாகச் சொன்ன வாசைஸ்வயத்நத்தாலே அநவரதபாவனைபண்ணியும் * ஸததம் கீர்த்தநமபண்ணியும் பெறுவாருடைய ஆசைபோலேயிருந்ததீ!, "நிரந்தரம்நினைப்பதாகநீநினைக்கவேண்டுமே" என்றும், "திருக்கலந்துசேருமார்ப தேவதேவதேவனே" என்றும் தொடங்கி, "நின்பெயருருக் கலந்தொழிவிலாதுரைக்குமா றுரைசெய்" என்றும், "கூடுமாசையல்லதொன்று கொள்வனோ" என்றும் பேசினீரோயென்ன; உனனுடைய ஆச்சர்ய குணசேஷ்டிதங்கள் என்னைப்ரேரிக்க காலக்ஷேபார்த்தமாகப் பேசிநின்றவித்தனை, அதுதானும் வேதங்களும் வைதிகபுருஷர்களும் பேசிப் போரக்காண்கையாலே பேசினே னித்தனையென்கிறார்.

சுருக்குவாரையின்றியேசுருங்கினாய்சுருங்கியும்
பெருக்குவாரையின்றியேபெருக்கமெய்துபெற்றியோய்
செருச்குவார்கள்தீக்குணங்கள்தீர்த்ததேவதேவனென்
றிருக்குவாய்முனிக்கணங்களேத்தயானுமேத்தினேன். (கOசூ)

ப-ரை.—ஒருகர்மத்தாலே ஒருகாலத்தாலே, சுருக்குவாரையின்றியே-ஒருகர்த்தாவாலும சுருககுதலின்றிக்கே, சுருஙகினாய்-வாமநாவதாரம்செய்தருளி, சுருங்கியும்-சுருங்கியிருககச்செய்தயும, பெருக்குவாரையின்றியே-ஒருவரால் பெருக்குதலின்றிக்கே, பெருககமெய்து - பெருககத்தையெய்தும், பெற்றியோய் - ஸ்வபாவத்தையுடையவனே, செருக்குவார்கள்-செருக்கிவர்த்திக்கிற மஹாபலிபோல்வாருடைய, தீகுணங்கள் - அஹங்காரமமகாரமாகிற ஸ்வபாவதளை, தீர்த்த - தன அர்த்திதவத்தால் தவிர்த்து, தேவதேவன்எனறு - இந்த்ராதிதேவாசுளுககுக் குடியிருப்பைககொடுத்த ஸர்வேச்வரனேயென்று, த்ரைவிக்ரமாபதாநதனைபபற்றி,இருக்குவாய்-வேதஸ்தலங்களும்,முனிக்கணங்கள்-வைதிகரான செளநகாதிமுநிஸமூஹங்களும், ஏத்த - ஏத்தக்கண்டபடியாலே, யானும் - தாஸபூதனான நானும், ஏததினேன் - ஸ்தோத்ரம்பண்ணினே னென்கிறார். (கOசூ)

---

நூற்றொன்பதாம்பாட்டு. (பேசினீரோ) அதுஸாதநமாகாதோவென்ன வென்றபடி.

வ்யா.—(சுருக்குவாரை யின்றியே சுருங்கினாய)ஒருகர்மத்தாலே ஒருகாலத்திலே ஒருகர்த்தாவாலுண்டாம் ஹ்ராஸமின்றிக்கே ஆச்ரிதாநுக்ரஹம் ப்ரேரிக்க இச்சையாலே வாமநனாய. சேதநர் கர்மபேதத்தாலும் கர்த்ருபேதத்தாலும் கரிமிகிடங்களாகாநின்றார்களிறே.கலிகாலமும் சேதநரை அங்குஷ்டமாத்ரமாக்காநின்றதிறே.லங்காப்ரவேச ஸமயத்தில்அந்யபாரதந்த்ர்யத்தாலேதிருவடி ஹ்ரஸ்வபூதனானானிறே. (சுருங்கியும்) அப்படியே சிறுகியிருக்கச் செய்தேயும். (பெருக்குவாரை யின்றியே பெருக்கமெய்து பெற்றியோய்) பூர்வோக்தமான வ்ர்த்தி ஹேதுக்களின்றிக்கேயிருக்கப் பெருக்கமெய்தும் ஸ்வபாவனே. பெற்றி - இயல்வு. இத்தால்-அர்த்திதவத்துக்கு ஏகாந்தமான வாமநவேஷத்தைக்கொண்டு, கையிலே நீர்விழுந்த ஸமநந்தரத்திலே செய்தது வாயத்து, ப்ரீதிப்ரகர்ஷத்தாலே வளர்ந்து சதுர்த்தச புவநங்களிலுண்டான ஸகலசேதநர்தலையிலும் வரையாதே திருவடிகளை வைக்கையாலே ஆச்ரிதார்த்தமாக வ்ர்த்தி ஹ்ராஸாதிகள் இவனுக்கு ஸ்வாபாவிகமென்கை.

(செருக்குவார்கள்)இந்த்ராதிகளைநலிந்து த்ரைலோக்யத்தை அபஹரித்து, “[illegible]” “நயஷ்டவ்யமநதாதவ்யம்”என்று ஈச்வராஜ்ஞையை அதிலங்கித்து,இப்படிச்செய்தோமென்னும் அநுதாபமுமின்றிக்கேசெருக்கிவர்த்திக்கிறமஹாபலிபோல் வாருடைய. (தீக்குணங்கள்தீர்த்த தேவதேவன்) அஹங்கார மமகாரமாகிற நாசகரமான ஸ்வபாவத்தைத் தன்னுடைய அர்த்திதவத்தால் தவிர்த்து, இந்த்ராதிகளுக்குக் குடியிருப்பைக் கொடுத்த ஸர்வேச்வரனே. (என்றிருக்குவாய் முநிக்கணங்களேத்த) இப்பாசுரத்தாலே-த்ரைவிக்ரமாபதாநத்தைப்பற்றி வேதஸ்தலங்களும வைதிகரான முநிஸமூஹங்களும்.“[illegible]” “விசக்ரமேப்ர்திவீமேஷவ் தாம”“[illegible]”“தரிதமேதவஃப்ர்திவீமேஷ ஏதாம்” இத்யாதி வேதங்களும், “[illegible]” “ஸநகைஸ் ஸநந்தநாத்யைர் ஸநத்குமாராதிபிஸ்... யோகிபிஸ் ஸ்துத:” இத்யாதிகளாலே சௌநகாதிகளும் ஏத்தக்கண்டவாறே. (யானுமேத்தினேன) தேவரீருடைய ஸௌசீல்யத்தையும் ஸௌலப்யத்தையும் விரோதிநிரஸநசீலத்தையும் பேசி, காலக்ஷேபம்பண்ணி யல்லது நிற்கமாட்டாமையாலே யானுமேத்தினேனித்தனை. இதுவொழிய ஒருஸாதநபுத்த்யா ஏத்தினேனல்லேனென்கை. ... ... ... (க0கூ)

---

கர்த்ர்பேதம - நான் கர்த்தாவாயச் செய்கையன்றிக்கே தனக்கொரு கர்த்தாவுண்டாய், அவனுக்கு பரதந்த்ரனாய்க் கொள்ளும் வடிவு. இது திருவடிபக்கலிலே கண்டோமென்கிறது. (க0கூ)

அ.—நூற்றுப்பத்தாம்பாட்டு. "[illegible]" "தத்விப்ராஸோவிபந்யவ:" என்கிறபடியே அஸ்ப்ருஷ்ட ஸம்ஸாரகந்தரும் தேவர்களும் முநிகணங்களும் ஏத்திப் போந்தவிஷயத்தை நித்ய ஸம்ஸாரியாய்ப் போந்த நான் ஏத்தக்கடவேனல்லேன், தன்செல்லாமையாலே புகழ்ந்தானென்று திருவுள்ளம் பற்றிப்பொறுத்தருள வேணுமென்று, கீழ் "ஏத்தினேன்" என்றதுக்கு, க்ஷாபணம்பண்ணுகிறார்.

தூயனுமன்றியுஞ்சுரும்புலாவுதண்டுழாய
மாயநின்னைநாயினேன்வணங்கிவாழ்த்துமீதெலாம்
நீயுநின்குறிப்பினிற்பொறுத்துநல்குவேலைநீர்ப்
பாயலோடுபத்தர்சித்தமேயவேலைவண்ணனே. (கக0)

ப-ரை.—சுரும்பு-வண்டுகள், உலாவு - ஸஞ்சரியாநின்றுள்ள, தண் - குளிர்ந்த, துழாய் - திருத்துழாய்மாலையாலே அலங்க்ருதனாய, மாய - ஆச்சர்யசக்தியுக்தனாய், வேலைநீர்ப் பாயலோடு - திருப்பாற்கடலில் படுக்கையோடும், கடல்போலே குளிர்ந்தவடிவோடும், பத்தர்சித்தம்-ஆச்ரிதருடைய ஹ்ருதயத்திலுண்டான ஸகலதாபங்களும்போம்படி, மேய - நித்யவாஸம்பண்ணும், வலைவண்ணனே-ஸ்வபாவமுடையவனே, நின்னை-தேவரீரை, தூயனும்-பரிசுத்தனும், அன்றியும்-அபரிசுத்தனுமாய, நாயினேன்-நீசனான நான், வணங்கி - திருவடிகளிலே தலையாரவணங்கி, வாழ்த்தும்-ஈதெலாம்-வாயாரவாழ்த்துகிறவிதுவெல்லாம், நீயும்-பொறுமையை ஸ்வபாவமாகவுடைய நீயும், நின்குறிப்பினில் பொறுத்து-உன் திருவுள்ளத்தாலே பொறுத்து, நல்கு-க்ருபைசெய்தருளவேணும்()

வ்யா.—(தூயனுமன்றியும்) "[illegible]" "க்ஷேத்ரஜ்ஞஸ்யேச்வரஜ்ஞாநாத் விசுத்தி:பரமாமதா" என்கிறபடியே தேவரீருடைய பாவநத்வத்தை அநுஸந்தித்து நான் யோக்யனென்று பரிமாறியும், ஆகர்ஷகமான தேவரீருடையவடிவைக் கண்டு மேல்விழுந்து நான் நித்யஸம்ஸாரியென்று புத்திபண்ணாதே பரிமாறியும். அ[illegible]ர, "[illegible]" "நஹி ஜ்ஞாநேநஸத்ருசம்பவித்ரமிஹவித்யதே" என்கிறபடியே ஸ்வரூபஜ்ஞாநத்தாலே சுத்தனென்று பரிமாறியும், அந்தஸ்வரூபத்துக்கு அஹங்காரமமகாரங்களால்பிறந்த அசுத்தியையும் புத்திபண்ணாதே பரிமாறியும் போந்தேனென்றுமாம். (சுரும்புலாவுதண்டுழாயமாய) தம்தண்மையையும் அத்தலையில் வைலக்ஷண்யத்தையும் பாராதே யோக்யனென்று ப்ரமிக்கைக்கு ஹேது சொல்லுகிறது.

---

நூற்றுப்பத்தாம்பாட்டு. தூயனும்-சுத்தனும். அறியும்-அசுத்தனும். அவனுடைய பாவநத்வத்தையும் தன்னுடைய அயோக்யதையையும் அநுஸந்திக்கை சுத்தி; அவதாரத்தில் ஸஜாதீயபுத்தியும் தன்தோஷம் பாராமல் மேல்விழுகையும் அசுத்தி. இது முந்தின அர்த்தம்.

வண்டுகள் அபிநிவேசிக்கும் திருத்துழாயாலே அலங்க்ர்தமாய் ஆச்சர்யமான குணசேஷ்டிதங்களை யுடையவனே. திர்யக்குக்களுக்கும் ஸ்ப்ர்ஹை பண்ணவேண்டும்படியிறே போக்யதையிருப்பது. ஒப்பனையழகும் குணசேஷ்டிதங்களுமாய்த்து இவரை மேல்விழப் பண்ணிற்று.(நின்னை) ஸர்வாதிகனாய் பரமபாவநனாய் ஸுரிபோக்யனா யிருக்கிறவுன்னை.

(நாயினேன்) உன்னுடைய உத்கர்ஷத்துக்கு அவதியில்லாதாப்போலே என்னுடைய நிகர்ஷத்துக்கு அவதி யில்லை யென்கிறார். (நாயினேன்) திறந்த வாசலெல்லாம் நுழைந்து நுழைந்த வாசலெல்லாவற்றிலும் பரிபூதனாய், தேவரீர் உகந்து தொடிலும் அங்குத்தைக்கு அவத்யம் விளையும்படிஸ்வரூபத்தையுடைய நான். (வணங்கிவாழ்த்து மீதெலாம்) ஒன்றைச் செய்து அதுக்கு க்ஷாமணம் பண்ணுகிறேனோ, திருவடிகளிலே தலையார வணங்கி வாயார வாழ்த்திப் போருகிற இதெல்லாம். (நீயும்) நானும் ப்ரேமத்தாலே தவிரமாட்டுகிறிலன், க்ஷாந்தியை ஸ்வபாவமாகவுடைய நீயும் பொறுக்கவேணும். (நின்குறிப்பினில் பொறுத்து நல்கு) காகசிசுபாலாதிகளுடைய அபராதத்தைத் திருவுள்ளத்தாலே பொறுத்து. என்னபராதத்தையும் திருவுளளத்தாலே பொறுத்து. அவ்வள வன்றிக்கே, இவன் ப்ராதிகூல்யத்தில் வ்யவஸ்தித னல்லனென்று ப்ரஸாதத்தைப்பண்ணியருளவேணும்.(வேலைநீர்ப்பாயலோடு பத்தர்சித்தம் மேய வேலைவண்ணனே) இது தம்மைப் பொறுகைக்கு ஹேது வருளிச்செய்கிறார். திருப்பாற்கடலிலே படுக்கையோடே அக்கடல் செவ்வே நின்றாப்போலே சரமஹரமான வடிவோடே ஆச்ரிதருடைய ஹ்ர்தயத்தில் ஸகலதாபங்களும் போம்படி நித்யவாஸம் பண்ணும் ஸ்வபாவனே. ஆச்ரிதருடைய ஹ்ர்தயத்திலே புகுரக் கணிசித்துத் திருப்பாற்கடலிலே அவஸரப்ரதீக்ஷனாய் வந்து கண்வளர்ந்தருளி, ஆசாலேசமுடையாருடைய ஹ்ர்தயத்தில் ச்ரமஹரமாகப் புகுருமவனாகையாலே, என்னைப்பொறுத்து நல்கவேணுமென்கிறார். ... ... ... ... ... ... (கக0)

அ.—நூற்றுப்பதினோராம்பாட்டு. தம்முடைய தண்மையை அநுஸந்தித்து, ''பொறுத்து நல்கு'' என்றார்-கீழிற்பாட்டில்; இதில்-பகவத் ப்ரபாவத்தை யநுஸந்தித்து காலக்ஷேபார்த்தமாகப்பண்ணின அநுகூலவர்த்தியால் வந்தகுற்றத்தையும் ப்ராமாதிகமாகச் செய்த குற்றத்தையும் குணமாகக் கொள்ளவேணுமென்கிறார்.

---

திருவுள்ளத்தாலே பொறுத்தாப்போலே பொறுத்தென்றபடி. வேலை வண்ணம் - நிறமும், ஸ்வபாவமும். ... ... (கக0)

வைதுநின்னைவல்லவாபழித்தவர்க்குமாறில்போர்
செய்துநின்னசெற்றதீயில்வெந்தவர்க்கும்வந்துனை
எய்தலாகுமென்பராதலாலெம்மாயநாயினேன்
செய்தகுற்றம்நற்றமாகவேகொள்ஞாலநாதனே. (ககக)

ப-ரை.—நின்னைவைது-புகழுகைக்கு விஷயமான வுன்னைவசவுக்கு விஷயமாக்கி, பழித்தவர்க்கும்-உன்னுடைய தூதயஸாரத்யாதிகளை இழிதொழிலாகப் பழித்த சிசுபாலாதிகளுக்கும், மாறில் போர்செய்து - எதிரில்லாதயுத்தத்தைப் பண்ணி, நின்னசெற்றதீயின - உன்னுடைய கோபாக்நியாலே, வெந்தவர்க்கும்-தக்தமான வாலிமுதலானவர்களுக்கும், உனை - ஸர்வாதிகனானவுன்னை, வந்து எய்தலாகுமென்பர் - வந்து கிட்டலாமென்று ரிஷிகள் சொல்லாநின்றார்கள்; ஆதலால்-ஆகையாலே, எம்மாய-தனயமுதலான ஆச்சர்யகுணங்களை எனக்கு ப்ரகாசிப்பித்தவனாய், ஞாலநாதனே-ஜகத்துக்கு நிருபாதிக சேஷியானவனே, நாயினேன் - அநந்யகதியாய் உன்கைபார்த்திருக்கிற நான், செய்த குற்றம் - ப்ராமாதிகமாகச்செய்த குற்றத்தை, நற்றமாகவேகொள் - குணமாகக் கொள்ளவேணுமெனகிறார். (ககக)

வ்யா.—(வைதுநின்னை) "స్తవ్యః స్తవప్రియః" "ஸ்தவ்யஃஸ்தவப்ரியஃ" என்று புகழப்படும் உன்னை பருஷிக்கைக்கு விஷயமாக்கி. பருஷந்தானென்னென்னில; அபிஷிக்தக்ஷத்ரியனன்றிக்கே, அவர்களுக்குப் பெண்கொடுத்து, பெட்டைக்குடியான வம்சத்திலே பிறந்தானென்றும், இடக்கையும் வலக்கையுமறியாத இடைக்குலத்திலே பிறந்தானென்று மாய்த்துப் பருஷிப்பது. (வல்லவாபழித்தவர்க்கும்) அவ்வவர்களுக்கு அவத்யமான தூத்யஸாரத்யநவநீதசௌர்யாதிகளை வ்ர்த்தஹாநியாகப் பழித்து. பழி - குற்றம். வல்லவா பழிக்கையாவது - உள்ளசக்தியெல்லாம் பகவந்நிந்தையிலேயாக்குகை. (மாறில்போர்செய்து நின்னசெற்றதீயில் வெந்தவர்க்கும்) எதிரில்லாத யுத்தத்தைப்பண்ணி, உன்கோபாக்நியாலே தக்தரானவர்களுக்கும். மஹாராஜரோடே வாலிபண்ணின யுத்தத்தை யாய்த்து இவர் மாறில்லாத போர் என்கிறது. அவர்களாகிறார் - சிசுபாலனும் வாலியும் முதலானவர்கள். (வந்துனையெய்தலாகுமென்பர்) ஸர்வாதிகனான வுன்னைவந்துப்ராபிக்கலாமென்று ரிஷிகள் சொல்லாநின்றார்கள். "భగవచ్చక్రేణ వ్యాపాదిత స్తత్స్మరణ దగ్ధాఖిలాఘసంచయో భగవంత ముపనీత స్తస్మిన్నేవలయముపయయౌ" "பகவச்சக்ரேண வ்யாபாதிதஸ்தத்ஸ்மரணத்தக்தாகிலாகஸஞ்சயோபகவந்த முபநீதஸ்தஸ்மிந்நேவலயமுபயயௌ" என்று சிசுபால மோக்ஷத்தைச் சொன்னான் ஸ்ரீபராசர பகவாந்;

---

நூற்றுப்பதினோராம்பாட்டு.பெட்டைக் குடி-கொடுத்துக்கொள்ளுகிற ஸம்பந்த மாத்ரமொழிய அபிஷேகத்துக்கு யோக்யதையில்லாத குடி. வல்லவா – அவன் தோஷமுள்ள வளவுமென்னுதல்; தன்சக்தியுள்ளவளவுமென்னுதல். ... ... (ககக)

"ராமபாணஹதக்ஷிப்ரமாவஹத்பரமாங்கதிம்" "ராமபாணஹதக்ஷிப்ர மாவஹத்பரமாங்கதிம்" என்று வாலியுடைய பரகதிப்ராப்தியைச் சொன்னான் ஸ்ரீவால்மீகிபகவான். (ஆதலால்) உன்னை நிந்தித்தார்க்கும் எதிரிட்டார்க்கு மகப்பட குணப்ரபாவததாலே உன்னைப் பெறலாமென்று மஹர்ஷிகள் சொல்லுகையாலே.

(எம்மாய) ஆச்ரிதருடைய அபராதங்களைப் பொறுக்கைக்கடியான தயாகாங்க்ஷாதயாம்சர்ய குணங்களை எனக்கு ப்ரகாசிப்பித்தவனே. (நாயினேன் செய்தகுற்றம நற்றமாகவேகொள்) அநந்யகதியாய உன்னை பார்த்திருக்கிறநான் ப்ராமாதிகமாகச்செய்த குற்றத்தையும் குணமாகக்கொள்ளவேணும். (ஞாலநாதனே) ஜகத்துக்கு நிருபாதிகசேஷியானவனே. ஜ்ஞாநாஜ்ஞாந விபாகமின்றிக்கே இருந்ததேகுடியாக இஜ்ஜகத்தை யுடையவனென்று குற்றத்தைக்குணமாகக கொண்டருளுகைக்கு ஹேது சொல்லுகிறது.

அ.—நூற்றுப்பன்னிரண்டாம்பாட்டு கீழிரண்டு பாட்டாலே - இத்தலையில் குற்றததைப பொறுக்கவேணுமென்று க்ஷாபணம்பண்ணி, அக்குற்றங்களை குணமாகக கொள்ள வேணு மென்று சொன்னார்; இப்பாட்டில் - திருவுள்ளத்தைக் குறித்து ஆயுஸ்ஸு எனக்கு இன்னபோது முடியுமென்று தெரியாது, அவன்றிருவடிகளிலே வணங்கி வாழ்ந்து காலக்ஷேபம பண்ணப்பாரென்கிறார்.

வாள்களாகிநாள்கள்செல்லநோய்மை குன்றிமூப்பெய்தி
மாளுநாளதாதலால்வணங்கிவாழ்த்தென்னெஞ்சமே
ஆளதாகுநன்மையென்றுநன்குணர்ந்ததனறியும்
மீள்விலாதபோகம்நல்கவேண்டுமாலபாதமே. (கக உ)

ப-ரை.—வாள்களாகி - ஆயுஸ்ஸைஈரும் வாளபோலே, நாளகள் செல்ல-நாள்கள்கழிய, யௌவநாவஸ்தையிலுண்டாகக்கடவ, நோய்மை - பலம், குன்றி-வ்யாதிகளாலே. குறைந்து, மூப்பு எய்தி-பலஹாநியாலே கிழததனததை யடைந்து, ஆயுஸ்ஸானது,மாளுநாளது-முடியும நாளாயத்து, ஆதலால்-ஆகையாலே, எனநெஞ்சமே - என்னுடைய மநஸ்ஸே, ஆளதாகும் நன்மையென்று - அடிமைசெய்கையே புருஷார்த்தமெனறு, நன்குணர்ந்து - நன்றாகவறிந்து, வணங்கி-தலைபடைத்த ப்ரயோஜநம்பெறவணங்கி, வாழ்த்து-வாய்படைத்தப்ரயோஜநமபெற வாழ்த்தப்பார்; வணங்குகையும புகழுகையும் ஸாதநமல்லோவென்ன; மாலபாதமே - ஸர்வாதிகனான ஸர்வேச்வரன் திருவடிகளே நமக்கு, மீளவிலாதபோகம்-பாவநாதமபாவிபான கைங்கர்யபோகத்தை, நல்கவேண்டும்-தந்தருளவேணுமென்கிறார். (கஎ௨

வ்யா.—(வாள்களாகி நாள்கள் செல்ல) ஆயுஸ்ஸையீரும் வாள் போலே நாள்கள்கழிய. தேஹாத்மாபிமாநிகள் தேஹத்தில் விருப்பத்தாலே ஆயுஸ்ஸுப் போகாநின்றதென்று அஞ்சாநிற்பர்கள்; "𑌵𑌿𑌚𑌿𑌤𑍍𑌰𑌾 𑌦𑍇𑌹𑌸𑌮𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌰𑍀𑌶𑍍𑌵𑌰𑌾𑌯 𑌨𑌿𑌵𑍇𑌦𑌿𑌤𑌮𑍍" "விசித்ராதேஹ ஸம்பத்திரீச்வராயநிவேதிதம்" என்கிறபடியே பகவத் ஸமாச்ரயணத்துக்குக் கண்டகாலம் வ்யர்த்தமாய்ப்போகாநின்றதென்று மோக்ஷருசியுடையார் வெறுப்பர்கள்; ஆச்ரயித்தவர்கள் பகவதநுபவத்துக்குக் கண்டகாலம் வ்யர்த்தமே போகாநின்றதென்று வெறுப்பர்கள். (நோய்மைகுன்றி மூப்பெய்தி) யௌவநாவஸ்தையிலுண்டாகக் கடவவ்யாதிகளாலே குன்றி, பலஹாநியே ப்ரக்ருதியாய் மூப்பை ப்ராபித்து. பால்யத்தில் ஜ்ஞாநம் குறைந்திருக்கும்; வார்த்தகத்தில் சக்தி குறைந்திருக்கும்; இரண்டுமுண்டான யௌவநாவஸ்தையில் ரோகாத்யுபாதிகளாலே ஜ்ஞாநசக்திகள் குறைந்திருக்கும். இவையாயத்து உள்ள ஆயுஸ்ஸிலே வரும் ப்ரத்யூஹங்கள். (மாளும் நாளது) மாளும்-அந்த திவஸமாயத்து முடியும், நாளாய்த்து ப்ராப்தமாய் நிற்கிறதென்கை. அதவா, மாளும்-முடியும், நாளது-ஆயுஸ்ஸின் ஸ்வபாவமென்றுமாம். (ஆதலால் வணங்கி வாழ்த்து) ஆயுஸ்ஸு அஸ்திரமாகையாலும், உள்ள ஆயுஸ்ஸுக்கு ப்ரத்யூஹங்கள் பலவுமுண்டாகையாலும், நாளைச் செய்கிறோமென்றிருக்குமதன்று, உள்ளபோதே தலைபடைத்த ப்ரயோஜநம் பெறத் திருவடிகளிலே வணங்கி, "𑌸𑌾 𑌜𑌿𑌹𑍍𑌵𑌾 𑌯𑌾 𑌹𑌰𑌿𑌂 𑌸𑍍𑌤𑍌𑌤𑌿" "ஸா ஜிஹ்வா யா ஹரிம் ஸ்தௌதிம்" என்கிறபடியே - வாய்படைத்த ப்ரயோஜநம்பெற வாழ்த்தப் பார். காலக்ஷேபம் நமக்கு பகவதநுபவத்தாலல்லது செல்லாதாகையாலே வணங்கி வாழ்த்தப்பாரென்றுமாம். (என்னெஞ்சமே) எனக்கு பவ்யமான நெஞ்சமே. உன்னுடைய கார்யமான ஸ்வயர்த்திக்கு நான் சொல்லவேண்டாவிறே யென்கிறார். "நின் புகழ்க்கலால்- நேசமில்லை நெஞ்சமே" என்று தம்மிலும் பகவத்ப்ரவணமாயிறே தம்முடைய திருவுள்ளமிருப்பது.

(ஆளதாகும் நன்மையென்று நன்குணர்ந்ததன்றியும்) கீழ்ச் சொன்ன காலக்ஷேபமேயன்றிக்கே அடிமைசெய்கையே புருஷார்த்தமென்று ஸ்வரூபஜ்ஞாநமடியாக புத்திபண்ணி வணங்கிவாழ்த்தப் பார். (ஆளதாகும் நன்மையென்று நன்குணர்ந்து) "𑌧𑍍𑌯𑌾𑌯𑌨𑍍𑌸𑍍𑌤𑍁𑌵𑌨𑍍𑌨𑌮𑌸𑍍𑌯𑌨𑍍𑌶𑍍𑌚" "த்யாயந்ஸ்துவந்நமஸ்யந்ஸ்ச" என்று பகவத்ப்ராப்திக்கு இவற்றை ஸாதநமாகச் சொல்லாநின்றபின்பு அதுக்காளாலோவென்ன:

நூற்றுப்பன்னிரண்டாம்பாட்டு. "ஆகைவிடும்பொழுதெண்ணே" என்று இருக்கவேண்டியிருக்க ஆயுஸ்ஸுப் போகிறதென்று வெறுப்பானென்னென்ன; அருளிச்செய்கிறார் (தேஹாத்மாபிமாநிகளித்யாதி.) நோய்மை-பலம். ப்ரத்யூஹம்-விக்நம். அவதாரிகையருளிச்செய்கிறார் (𑌧𑍍𑌯𑌾𑌯𑌨𑍍𑌸𑍍𑌤𑍁𑌵𑌨𑍍 - த்யாயந்ஸ்துவந்நித்யாதி.) திருவடிகள் உபாயமாகையாலே ஸ்தோத்ரம் உபாயமென்றபடி. (கக௨)

(மீள்விலாதபோகம் நல்கவேண்டும் மாலபாதமே) ஸர்வாதிகனான ஸர்வேச்வரன் திருவடிகள், நமக்கு "ந-ச புநராவர்த்ததே" "நச புநராவர்த்ததே" என்கிறபடியே யாவதாத்மபாவியான கைங்கர்ய போகத்தைத் தரவேணும்; நீவணங்கி வாழ்த்தப்பார். "ஸமஜ்யோதிஷா ...ஸ:" "நமஇத்யேவவாதிந:" "...வ:" "தத்விப்ராஸோ விபந்யவ:" என்றிவை ப்ராப்யாந்தர்ப்பூதமா யிறே யிருப்பது. நீ இத்தைச் செய்ப்பாரென்று கருத்து. ... .. (ககஉ)

அ.—நூற்றுப்பதின்மூன்றும்பாட்டு. "மீள்விலாதபோகம் நல்க வேண்டும்" என்று கீழ்ச்சொன்ன கைங்கர்யபோகம் பாரதந்த்ர்யத்தினுடைய எல்லையிலே பெறுமதாயிருக்க, தத்விருத்தமான துர்மாநாதிகளாலேஅபஹ்ருதராயிருந்தோம், நமக்குஅந்தப்பேறுபெறுகைகூடுமோவென்ன; திருவுள்ளத்தைக் குறித்து,துர்மாநத்தாலே ப்ரஹ்மசிரஸ்ஸை யறுத்த ருத்ரனுடைய பாதகத்தைப் போக்கினவனே நமக்கு பாரதந்த்ர்ய விரோதியானதுர்மாநத்தைப்போக்கிப் பேற்றைத்தரும்,நீ அவனே உபாயமென்று புத்திபண்ணியிருவென்கிறார்.

சலங்கலந்தசெஞ்சடைக்கறுத்தகண்டன்வெண்டலைப்
புலன்கலங்கவுண்டபாதகத்தன்வன்துயர்கெட
அலங்கன்மார்பில்வாசநீர்கொடுத்தவனடுத்தசீர்
நலங்கொள்மாலைநண்ணும்வண்ணமெண்ணுவாழிநெஞ்சமே. ( )

ப-ரை.—சலங்கலந்த-கங்காசலத்தை தன்னுள்ளே அடக்கினதாய்,செஞ்சடை - சிவந்த ஜடையையும், கறுத்தகண்டன - பாற்கடலிலுண்டான விஷத்தைப்பாநம்பண்ணுகையாலே கறுத்தகண்டத்தையுமுடையனாய், புலன்கலங்க-தன்னுடைய இந்த்ரியங்களை கலங்கும்படி, வெண்தலை - வெளுத்த ப்ரஹ்ம கபாலத்திலே, உண்ட - பிச்சைபுக்கு ஜீவித்துத் திரிந்தவனாய், பாதகத்தன-பாதகத்தையுமுடையனான ருத்ரனுடைய, வன்துயர்கெட - வலிய துக்கம் கெடும்படி, அலங்கல் - திருமாலையையுடைத்தான, மார்வில்-திருமார்வில், வாசம்-பரிமளிதமான, நீர்-நீராலே, கொடுத்தவன - அக்கபாலத்தை நிறைத்து ரக்ஷித்தவனுடைய,அடுத்த-ஸ்வரூபாநுபந்தியான, சீர்-கல்யாண குணங்களால்வந்த, நலங்கொள்-வைலக்ஷண்யத்தையுடைய, மாலை-ஸர்வேச்வரனை, நண்ணும்வண்ணம்-கிட்டும்ப்ரகாரம், எண்ணு-அவனுடைய இரக்கமேயென்று புத்திபண்ணியிரு; நெஞ்சமே-மநஸ்ஸே, வாழி-உனக்கு இந்த வ்யவஸாயம் உண்டாயிடுக.()

வ்யா.—(சலங்கலந்த செஞ்சடைக்கறுத்தகண்டன்) கங்கா ஜலத்தை ஸாகல்யேந தன்னுள்ளே யடக்கினதாய், சிவந்த ஜடையையும் க்ஷீராப்தி ஸமுத்திதமான விஷத்தாலே கறுத்த கண்டத்தையு முடைய ருத்ரன். கங்காதரத்வமும் நீலகண்டத்வமும் இவனுடைய சக்திக்கு ஸூசகமாயிருக்கிறது. சிவந்த ஜடையென்கையாலே-இந்த சக்தி ஸாதித்துப்பெற்றதென்கைக்கு ஸூசகம்.

இப்போது இவனுடையசக்தி சொல்லுகிறதென்னென்னில்; குருபாதகஹேதுவா யிருந்துள்ள இந்த துர்மாநத்துக்கடி இந்த சக்தியென்கைக்காக. ஸத்ப்ரக்ர்திகளுக்குண்டான சக்தி ஸாத்விகர்க்கு நிழலாமாப்போலே, துர்மாநிகளுக்குண்டானது பிறர்க்கும் பாதகமாயிறே யிருப்பது. (வெண்தலை) "முடையடர்த்தசிரமேந்தி" என்கிறபடியே ப்ரஹ்மசிரஸ்ஸை அறுத்தநாள் தொடங்கி சிரகாலம்தரித்துக்கொண்டு திரிகையால் ரக்தாதிஸ்பர்சங்கள்போய் அஸ்திமாத்ரமாகையாலே வெளுத்தசிரக்கபாலத்திலே. (புலன் கலங்க வுண்ட) பூர்வகாலத்திலே, தன்னுடைய சக்தியையும், லோகமடங்க ஆச்ரயிக்கும்படியான ஐச்வர்யத்தையு மநுஸந்தித்து, பின்பு பாதகியாய் சிரக்கபாலத்திலே ஜீவிக்கும்படியான ஸ்வரூபஹாநியையுமநுஸந்தித்து, ஸர்வேந்த்ரியங்களும் க்ஷுபிதமாம்படி அதிலே ஜீவித்துத் திரிந்தவன். (பாதகத்தன் வன்துயர்கெட) பிதாவுமாய் லோககுருவுமாயிருந்துள்ளஅவன் தலையையறுக்கையாலே வந்த பாதகத்தையுடையவனுடைய வலியதுக்கம் கெட. "வன்துயர்" என்கிறது-ப்ராயச்சித்த ஸாத்யமாதல் அநுபவ விநாச்ய மாதலன்றிக்கே, ஒரு ஸர்வசக்தி போக்கவேண்டும்படியிருக்கையாலே.

(அலங்கல்மார்வில் வாசநீர்கொடுத்தவன்) திருமாலையையுடைத்தான திருமார்வில் பரிமளிதமான நீராலே அக்கபாலத்தை நிறைத்தவன். "அலங்கல் மார்வு" என்றது - ப்ரயோஜநாந்தரபரரோடு அநந்ய ப்ரயோஜநரோடு வாசியற ஆபத்தே முதலாக ரக்ஷிக்கைக்கிட்ட தனிமாலையென்று தோற்றுகைக்காக. "வாசநீர்" என்றது; - அதுதான் "ஸர்வகந்தஃ" "ஸர்வகந்த:" என்கிற விக்ரஹத்திலே உத்பந்நமான ஜலமாகையாலே. முன்பு "ஊறு செங்குருதி" என்றது-பரிகரஹித்த விக்ரஹத்தினுடைய ஸஜாதீய பாவத்தினுடைய மெய்ப்பாடு தோற்றுகைக்காக. (அடுத்தசீர்நலங்கொள்மாலே) ஸ்வரூபாநுபந்தியான கல்யாண குணங்களால் வந்த வைலக்ஷண்யததையுடைய ஸர்வேச்வரனே. (நண்ணும் வண்ணமெண்ணு) இப்படி துர்மாநியானவனுடைய பாதகத்தைப் போக்கினவன், அநந்யப்ரயோஜநரான நம்முடையதுர்மாநாதிகளைப்போக்குவிக்கக் குறையில்லை. நீ அவனைப்ராபிக்கும்ப்ரகாரம் அவனிரக்கமேயென்று புத்திபண்ணியிரு. அதாகிறது -' அவனை நம்தலையாலே ப்ராபிக்க விரகில்லை, அவன்றானேயிரங்கித் தன்னைத்தந்தருள வேணுமென்று வ்யவஸ்திதனா யிருக்கை. (நெஞ்சமே-வாழி) நெஞ்சமே, உனக்கு இந்தவ்யவஸாயம் ஒருபடிப்படவுண்டாகிடுக. ( )

அ.—நூற்றுப்பதினெலாம்பாட்டு. இப்படியானால் நமக்குக்ர்த்ய மென்னென்ன; ஜ்ஞாநப்ரதாநமே தொடங்கி பரமபதப்ராப்தி பர்யந்தமாக நம்பேற்றுக்குபாயம், நஷ்டோத்தரணம் பண்ணின ஸ்ரீவராஹநாயனார் திருவடிகளேயாகநினைத்து, சரீராவஸாநத்தளவும் காலக்ஷேபார்த்தமாக அவனை வாழ்த்தப்பாரென்கிறார்.

ஈனமாயவெட்டுநீக்கியேதமின்றிமீதுபோய்
வானமாளவல்லையேல்வணங்கிவாழ்த்தென்னெஞ்சமே
ஞானமாகிநாயிறாகிஞாலமுற்றுமோரெயிற்
றேனமாயிடந்தமூர்த்தியெந்தைபாதமெண்ணியே. (ககச)

ப-ரை.—ஈனமாய-சேதநர்க்குக்குறையான, எட்டும்நீக்கி-அவித்யாதிகளைந்தையும் தாபத்ரயங்களையும் நீக்கி, ஸாம்ஸாரிகமான துக்கங்களும் நீங்கி, மீது-லீலாவிபூதிக்குமேலே, போய-அர்ச்சிராதிமார்க்கத்தாலேபோய், வானமாளவல்லையேல்-பரமபதத்தைஆளவிரும்புவாயாகில், உள்ளுண்டானஅஜ்ஞாநாந்தகாரத்தைப்போக்குகைக்கு, ஞானமாகி-ப்ரகாசகமானஜ்ஞாநமாய், நாயிறாகி-புறம்புள்ளவற்றைக்காட்டும் ஆதித்யனாய், ஏனமாய்-வராஹாவதாரஞ்செய்தருளி, பூமியையடங்க, ஓர்-அத்விதீயமான, எயிறு-எயிற்றாலே, இடந்த-பிளந்த, மூர்த்தி-விலக்ஷணவிக்ரஹயுக்தனாய், எந்தை-என்னையெழுதிக்கொண்ட ஸ்வாமியுடைய, பாதம்-திருவடிகளை, எண்ணி-உபாயமாக வநுஸந்தித்து, என்னெஞ்சமே-எனக்குபகவதநுபவத்துக்கு ஸஹகாரியான நெஞ்சே, வணங்கி-அவன திருவடிகளை வணங்கி, வாழ்த்து-வாழ்த்தப்பார். (ககச)

வ்யா.—(ஈனமாயவெட்டும் நீக்கி) சேதநர்க்குக்குறையான அவித்யாதிகளைந்தையும் சரீரஸம்பந்தப்ரயுக்தமான தாபத்ரயங்களையும்நீக்கி. இவை இவனுக்கு ஜ்ஞாநஸங்கோசகரமாகையாலே, "ஈனம்" என்கிறது. ஈனம்-குறைவு. (ஏதமின்றி) ஸாம்ஸாரிகமான ஸகல துக்கங்களும்போய். துக்கஹேதுவான அவித்யாதிகள் போகையாலே தத்கார்யமான துக்கங்களும் போமிறே. ஏதம் - துன்பம். (மீதுபோய்வானமாளவல்லையேல்) துக்கஸம்பந்தமுள்ள லீலாவிபூதிக்குமேலே அர்ச்சிராதி மார்க்கத்தாலே போய், பரமபதத்திலே, "ஸ்வராட்பவதி" "ஸஸ்வராட்பவதி" என்கிறபடியேகுறைவற்ற விருப்பைவேண்டியிருந்தாயாகில். (வணங்கிவாழ்த்தென்னெஞ்சமே) உன்வழியே என்னைக்கொண்டுபோகையன்றிக்கே, பகவதநுபவத்துக்கு ஸஹகாரியான நெஞ்சே!, காலக்ஷேபார்த்தமாக அவன் திருவடிகளிலே வணங்கி வாழ்த்தப்பார்.

---

நூற்றுப்பதினெலாம்பாட்டு. (அவித்யாதிகளித்யாதி) அவித்யாஸ்மிதா பிநிவேசராக த்வேஷங்களாகிற வைந்தும். அவித்யகர்மவாஸந ருசிப்ரக்ர்தியாகவுமாம். ... ... ... (ககச)

வணங்கிவாழ்த்துகை காலக்ஷேபமாகில் கீழ்ச்சொன்ன பேற்றுக்குமுதலேதென்ன; இன்னதென்கிறதுமேல் (ஞானமாகி நாயிறாகி) ஆந்தரமான அஜ்ஞாநாந்தகாரத்தைப்போக்குகைக்கு ப்ரகாசகமான ஜ்ஞாநமாய், பாஹ்யபதார்த்த ப்ரகாசகனான ஆதித்யனாய். இத்தால் – ஆத்மஜ்ஞாநஹேதுவுமாய் ஐந்த்ரியிகஜ்ஞாந ஹேதுவுமென்றதாய்த்து. பாஹ்யவிஷயங்களை உள்ளபடி யறிந்தாலாய்த்து விடலாவது; ஆத்மவிஷயத்தை உள்ளபடி அறிந்தாலாய்த்து புருஷார்த்தருசியுண்டாவது. ஆக, ஜ்ஞாந ப்ரதனும் ஸர்வேச்வரனென்கை. (ஞாலமுற்று மோரெயிற்றேனமா யிடந்தமூர்த்தி) மஹாவராஹமாய்,பூமியையடங்க அத்விதீயமானஎயிற்றாலேயிடந்தவிலக்ஷணவிக்ரஹயுக்தன். "மூர்த்தி" என்று - ஸர்வாதிரிபோக்யமான பூர்ணஷாட்குண்ய விக்ரஹத்தையுடையவனைச்சொல்லுகிறது. அவ்வடிவையுடையவன்கிடீர் தன்னையழியமாறி நஷ்டோத்தரணம் பண்ணினானென்று கருத்து. (எந்தை) அந்நீர்மையைக்காட்டி என்னையெழுதிக்கொண்டவனென்னுதல். அவ்வடிவை யுடையவன் தன்னையழியமாறுகைக்கடி இத்தையுடையவனாகையாலேயென்னுதல். (பாதமெண்ணியே) அவன்திருவடிகளை உபாயமாக அநுஸந்தித்து. மஹாவராஹமாய் ப்ரளயார்ணவத்தினின்றும் பூமியை உத்தரித்தாப்போலே, ஸம்ஸாரார்ணவத்தினின்றும் நம்மை உத்தரிக்குமென்று அத்யவஸித்து "வணங்கி வாழ்த்து" என்கிறார்.

"ஏனமாயவெட்டும்நீக்கி யேதமின்றி மீதுபோய் வானமாளவல்லையேல்-ஞாலமாகிநாயிறாகிஞாலமுற்றுமோரெற்றேனமா யிடந்தமூர்த்தியெந்தைபாதமெண்ணியே-வணங்கிவாழ்த்தென் னெஞ்சமே" என்றந்வயம். ... ... ... (ககச)

அ.—நூற்றுப்பதினைந்தாம்பாட்டு. அவன், "[Grantha]" "அவாகயநாதர:" என்கிறபடியே ஸ்வயம்நிரபேக்ஷன், நாம் அநேக ஜந்மங்களுக்கடியான கர்மங்களைப்பண்ணிவைத்தோம், அவன் திருவடிகளே உபாயம் என்று நினைத்தமாத்ரத்திலே நம்மை ரக்ஷித்தருளக்கூடுமோ வென்று சோகித்த திருவுள்ளத்தைக குறித்து, ஸர்வவிதபந்துவுமாய், ஸகலவிரோதிகளையும்போக்கித்தன்னைத் தருவானாக ஏறிட்டுக்கொண்டான், நீஇனிசோகிக்கவேண்டாவென்று திருவுள்ளத்தைக்குறித்து, "[Grantha]" மாஶுச:" என்கிறார்.

அத்தனாகியன்னையாகியாளுமெம்பிரானுமாய்
ஒத்தொவ்வாதபல்பிறப்பொழித்துநம்மையாட்கொள்வான்
முத்தனார்முகுந்தனார்புகுந்துநம்முள்மேவினார்
எத்தினாலிடர்க்கடற்கிடத்தியேழைநெஞ்சமே. (ககரு)

ப-ரை.—முத்தனார் - சற்றேனும் ஸம்ஸாரகந்தமற்றவராய், முகுந்தனார்- முக்திபூமிப்ரதானவர், ஒத்தொவ்வாத-ஒத்தும்ஒவ்வாமலுமிருக்கிற, பல்பிறப் பொழித்து - எண்ணிறந்த ஜந்மங்களைத்தவிர்த்து, நம்மை-நித்ய ஸம்ஸாரியாய்ப் போந்த நம்மை, ஆள்கொள்வான்-அடிமைகொள்ளுகைக்காக, அத்தனாகி-ஹிதமேப்ரவர்த்திப்பிக்கும் பிதாவுமாய், அன்னையாகி-ப்ரியமே ப்ரவர்த்திப்பிக்கும் மாதாவுமாய், ஆளும் - அடிமைகொள்ளக்கடவ, எம்பிரானுமாய் - என்ஸ்வாமியாய், நம்முள்புகுந்து - நிக்ரஹத்துக்கு விஷயமான நம்முடைய மநஸ்ஸிலே புகுந்து,மேவினார்-ஒரு நீராகபபொருந்தினார்;இப்படியிருக்க, ஏழைநெஞ்சமே- அறிவில்லாதநெஞ்சே, எதனால் - என்னஹேதுவினாலே, இடர்க்கடல்கிடத்தி- துக்கஸாகரத்தில் கிடக்கிறாய். (ககரு)

வ்யா.—(அத்தனாகி) ஹிதமே ப்ரவர்த்திப்பிக்கும்பிதாவுமாய், ப்ரியமே ப்ரவர்த்திப்பிக்கும் மாதாவுமாய். பிதாசெய்யு முபகாரத்தை மாதாசெய்யமாட்டாள்;மாதாசெய்யு முபகாரத்தை பிதாசெய்யமாட்டான். இரண்டுவகைப்பட்ட வுபகாரத்தையும் அவன் ஒருவனே செய்யவல்லனா யிருக்கை. "ஸர்வேஷாமேவ லோகாநாம் பிதா மாதா ச மாதவ:" "ஸர்வேஷாமேவலோகாநாம் பிதாமாதாசமாதவ:" என்றும், "உலகுக்கோர் முந்தைத்தாய்தந்தை" என்றும் சொல்லக்கடவதிறே. அதவா, (அத்தனாகி அன்னையாகி) ஜ்ஞாநத்துக்கு உத்பாதகனுமாய,உத்பந்நஜ்ஞாநத்துக்குவர்த்தகனுமா யிருக்குமவனென்னவுமாம். "கரீயாந் ப்ரஹ்மத: பிதா" "கரீயாங்ப்ரஹ்மதஃபிதா" என்று ஜ்ஞாநோத்பாதகனை பிதாவென்று சொல்லக்கடவதிறே. இவ்வளவால் – கீழ்ப்பாட்டில் "ஞானமாகி" என்றதை விவரிக்கிறது. (ஆளும் எம்பிரானுமாய்) அடிமைகொள்ளக்கடவ என்ஸ்வாமியாய். உத்தமான ஜ்ஞாநகார்யமாய்க்கொண்டு, கைங்கர்யருசிபிறந்தால் அடிமைகொள்ளுகைக்கு ஸ்வாமியுமாயென்கை. இவைதான் ஸர்வவித பந்துவுமா யிருக்கிறபடிக்கு உபலக்ஷணம். "மாதா பிதா ப்ராதா நிவாஸ: ஶரணம் ஸுஹ்ருத் கதிர் நாராயண:" "மாதாபிதாப்ராதாநிவாஸஶரணம் ஸுஹ்ருத்கதிர்நாராயண:" என்றும், "எம்பிரானெந்தையென்னுடைச்சுற்ற மெனக்கரசென்னுடைவாணாள்" என்றும்சொல்லக்கடவதிறே.(ஒத்தொவ்வாதபல்பிறப்பொழித்து நம்மை யாள்கொள்வான்)இப்படி ஸர்வவித பந்துவுமாய்த்து ஏதுக்காக வென்னில்; விரோதி நிவர்த்தி பூர்வகமாகஸ்வரூப ப்ராப்தமான அடிமைகொள்ளுகைக்காக வென்கிறார். (ஒத்தொவ்வாத பல்பிறப்பொழித்து) ஒன்றுக்கொன்று நெடுவாசிபட்டு,இப்படி அஸங்க்யாதமான ஜந்மத்தைத் தவிர்த்து.

---

நூற்றுப்பதினைந்தாம்பாட்டு. இவ்வளவால் - இந்தயோஜநையால் புநருக்தியாகாமல் விவரணமென்றபடி. ஒத்து ஒவ்வாத - ஒரு வ்யவஸ்தையில்லாத என்று முந்தின அர்த்தம். ... (ககரு)

ஆத்மஸ்வரூபம் ஏகமாயிருக்க,ஒருத்தனுக்கு ஒருத்தனுடைய ஜந்மம் ப்ராப்யமாயும், அவன்றனக்கே ஒருத்தனுடைய ஜந்மம் த்யாஜ்யமாயுமிறே யிருப்பது. அதவா, ஓராசாரத்திலே ஒத்தும் ஓராகாரத்திலே வைஷம்யப்பட்டு மிருக்கும ஜந்மங்களொன்றுமாம். ஜ்ஞானைகாகாரதயா ஏகரூபமாய், கர்மத்தாலேதேவ திர்யங் மநுஷ்ய ஸ்தாவரரூபத்தாலே விஷமமாயு மிருக்கை. "மகிழலகொன்றேபோல் மாறும் பல்யாக்கை" என்னக்கடவதிறே. (நம்மை ஆள் கொள்வான்) நித்யஸம்ஸாரிகளாய்ப் போந்த நம்மை நித்யஸூரிகளைக் கொள்ளும் அடிமைகொள்ளுகைக்காக. ஜந்மங்கள்தோறும் உடன்கேடாய்ப் போந்த தாகையாலே திருவுள்ளத்தைக் கூட்டி "நம்மை" என்கிறார்.

(முத்தனார்) அஸ்பர்ஷ்ட ஸம்ஸாரகந்தரானவர். "முத்தர்" என்று – ப்ரத்வம்ஸாபாவத்தைச் சொல்லுகிறதன்று, தன்னுடைய ஹேயப்ரத்யநீகதை ஸ்வாபாவிகமாகையாலே ப்ராகபாவத்தைச் சொல்லுகிறது. (முகுந்தனார்) முகதிபூமிப்ரதரானவர். இத்தால்–நித்யவ்யாவ்ர்த்தி சொல்லுகிறது. ஆக இரண்டாலும் - விரோதி நிவர்த்தி ஹேதுவான ஜ்ஞாநசக்த்யாதி பூர்த்தியையும் மோக்ஷப்ரதத்வத்துக்கடியான ஔதார்யத்தையும சொல்லிற்றாயத்து. (புகுந்து நம்முள்மேவினார்) "ஜீஷாஜீ" "க்ஷிபாமி" எனகிறபடியே த்யாக விஷயமாம்படி சூழ்த்துக்கொண்ட நம்முடைய நெஞ்சில், ஹேய ப்ரத்யநீகரானவர் புகுந்து ஒரு நீராகப்பொருந்தினார். நம்முடைய தண்மை பாராதே தம்முடையபெருமைபாராதே ஸர்வபரத்தையும் தாமேறிட்டுக்கொண்டு செயவாராகப் புகுந்து பொருந்தினாரென்கிறார். (எத்தினாலிடர்ககடல்கிடததி) நம்முடைய ஹிதமறிகைக்கு நாம் ஸர்வஜ்ஞராயோ, அவன் அஜ்ஞனாயோ; ஹிதத்தை ப்ரவர்த்திப்பிக்கைக்கு நாம் சகதராயோ, அவன அசகதனாயோ; கார்யம் செய்துகொளளுகைககு நாம் ப்ராப்தராயோ, அவன் அப்ராப்தனாயோ.தன்மேன்மை பாராதே தாழநின்று உபகரிக்குமவனாயிருகக, துஃகஸாகரத்திலே கிடக்கிறது எத்தினாலே. (ஏழை நெஞ்சமே) பகவத்விஷயத்தில் கைவைப்பதற்கு முன்புசோகிக்கவுமறியாதே,, ஆனைக்ஈமுத்திலே யிருந்தாப்போலிருக்கிறஅறிவுகேடுபோலேகாண், நம்காரியத்துக்கு அவனகடவனானபின்பு இன்று சோகிக்கிற வறிவுகேடு மெனனகை. ஏழையர் - அறிவிலோர்.

"முத்தனார் முகுந்தனார் - ஒத்தொவ்வாத பல்பிறப்பொழித்து நம்மை யாளகொளவான் - அத்தனாகி அன்னையாகி ஆளுமெம்பிரானுமாய் - நம்முள்-புகுந்து-மேவினார்; ஏழைநெஞ்சமே - எத்தினால் இடர்க்கடல் கிடததி" என்றநவயம். ... ... (கக௫)

அ.—நூற்றுப்பதினாறும்பாட்டு.மேலுள்ள ஜந்ம பரம்பரைகளுக்கடியான கர்மத்தைப்போக்கி அடிமை கொள்ளுவானாக ஏயிட்டுக்கொண்டானென்றார்-கீழ்; இதில்-நரகஹேதுவான பாபத்தைப்பண்ணி, நாம் அத்தாலே யமவச்யராயன்றோ விருக்கிறதென்ற திருவுள்ளத்தைக் குறித்து; நமக்குத்தஞ்சமான சக்ரவர்த்தித் திருமகனார்,தம்மோடே நம்மைக் கூட்டிக்கொண்டபின்பு யமனால் நாம் செய்தகுற்றம் ஆராயமுடியுமோவென்கிறார்.

மாறுசெய்தவாளரக்கனுலப்பவன்றிலங்கை
நீறுசெய்துசென்றுகொன்றுவென்றிகொண்டவீரனார்
வேறுசெய்துதம்முளென்னைவைத்திடாமையால்நமன்
கூறுசெய்துகொண்டிறந்தகுற்றமெண்ணவல்லனே. (ககசு)

ப-ரை.—மாறுசெய்த - எதிரிட்டுக்கொண்டவனாய், வாள்அரக்கன்-ருத்ரனிடத்தில் பெற்ற வாளையுடையனான ராவணனுடைய, நாள்உலப்ப-ஆயுஸ்ஸை முடிக்கைக்காக, அன்று - பிராட்டியைப்பிரிந்தவன்று, இலங்கை நீறுசெய்து- திருவடியை இட்டுவித்துலங்கையைபஸ்மமாக்கின விடத்திலும், * வணங்கலிலரக்கனாயிருந்தபடியாலே, சென்று - ஸேதுபந்தம்பண்ணிச்சென்று, லங்கையை முற்றிகையிட்டு, கொன்று - பரிகரங்களோடேகூட ராவணனைக்கொன்று, வென்றிகொண்ட வீரனார் - ஜயிசதவீர ஸ்ரீயோடே நின்ற சக்ரவர்த்திதிருமகனார்; வேறுசெய்து-இவன நமக்குப்புறமபாயிருப்பானொருவனென்று, தம்முள-தம் திருவுள்ளத்தில், என்னை வைத்திடாமையால் - என்னை நினையாமையாலே, நமன் - அவரவர்கள் செய்த குற்றங்களை ஆராய்பவனான யமன், கூறு செய்து கொண்டு - பிரிந்துக்கொண்டு, இறந்தகுற்றம் - செய்து கழிந்த பாபங்களை, எண்ணவல்லனே - நினைக்கவல்லனோ. (ககசு)

வ்யா.—(மாறுசெய்த) எதிரிட்டுக்கொண்ட. "[illegible]" "[illegible]" "ரிபூணாமபிவத்ஸல:" "யுத்வாராவணஸ்ஸ்வயம்" என்றிருக்கிறவிஷயத்தையிறே எதிரிட்டுக்கொண்டது. தம்பியோபாதி அநுகூலித்துப் பிழைத்துப்போகலாயிருக்க துஷ்ப்ரக்ருதியாகையாலேயிறே எதிரிட்டுக்கொண்டது (வாளரக்கன் நாள்உலப்ப) வாலியைக்கொன்று அவ்வரசிலே மஹாராஜரை அபிஷேகம்பண்ணினபடியைக் கேட்டிருக்கச்செய்தே எதிரிட்டது, ருத்ரன்பக்கல் பெற்றவாளையும்,ப்ரஹ்மா தனக்குக்கொடுத்தவாயுஸ்ஸையும் தனக்கு பலமாகவிச்வஸித்திருக்கையாலே. நம்கையில்வாளிருக்க ஒருவராலும் ஜயிக்கவொண்ணாது, வரத்தால்வந்த ஆயுஸ்ஸுண்டாயிருக்க ஒருவரால கொல்லவொண்ணாதென்றிருந்தானாயிற்று. (வாளரக்கன் நாள்உலப்ப) ராவணனுடைய அந்தவாளையும ஆயுஸ்ஸையும் முடிக்கைக்காக. யாதொன்றைத்தனக்குபலமாக விச்வஸித்திருந்தான், அத்தையாய்த்து அழித்தது.உலப்பு-முடிவு."உலப்பிலானே" என்றும, "உலப்பில்கீர்த்தியம்மானே" என்றும் சொல்லக்கடவதிறே. (அன்று) "சுரிகுழற்கனிவாய்த்திருவினைப்பிரித்த கொடுமையின்கடுவிசையரக்கன்" என்கிறபடியே - அவன் ப்ராதிகூல்யத்திலேகைவளர்ந்தவன்று. பரஹிம்ஸை பண்ணின வளவன்றியே, தேவதைகள் குடியிருப்பை யழித்தவளவே யன்றியே, "[illegible]" "நயஷ்டவ்யம் நதாதவ்யம்நஹோதவ்யம்" என்கிறபடியே ஈச்வராஜ்ஞாதி லங்கநம் பண்ணினவளவேயன்றிக்கே, ஜகஜ்ஜீவாதுமான மிதுநத்தை, கடலுக்கு அக்கரையும் இக்கரையுமாம்படிபண்ணின ப்ராதிகூல்யமிறே.

(இலங்கைநீறுசெய்து) இப்படி செய்யச்செய்தேயும் அநுகூலிக்குமாகில் இவனை வ்யர்த்தமே யழியச்செய்கிறதென்னென்று பார்த்தருளி, ஒருதனியாளைப்போகவிட்டு லங்கையை பஸ்மமாக்கி. (சென்று) அவ்வளவிலும் அநுகூலியாமையாலே ரிச்யமூகத்தில் நின்றும கடற்கரையிலே சென்றுவிட்டு, லங்கைக்கரணான கடலை யணைசெய்து, லங்கையைச்சென்று அடைமதிள்படுத்தி. (கொன்று) அவ்வளவிலும் "ந நமேயம்" "நநமேயம்" என்கிற ப்ரதிஜ்ஞைகுலையாமையாலேஸபரிகரமாக ராவணனைக்கொன்று. (வென்றிகொண்டவீரனார்) அவனைஜயித்து வீரஸ்ரீயோடேநின்றவர்.

(வேறுசெய்து தம்முளென்னை வைத்திடாமையால்) இவன் நமக்குப் புறம்பாயிருப்பானொருவனென்று தம்முடைய திருவுள்ளத்தில என்னை நினையாமையாலே. "வேறுசெய்து" என்கிறது-நாம் பண்ணின கர்மத்துக்கு கர்த்தாவும் போக்தாவும் நாமேயென்றிருக்கை. "என்னை" என்று-அவன்திருவடிகளிலே பரந்யாஸம் பண்ணினவென்னையென்றபடி. எனக்கு எதிரிகளானவர்கள் தமக்கு எதிரிகளாம்படி. தமக்கு அந்தரங்கனாக்கிவைக்கையாலேயென்கை. (நமன்கூறுசெய்துகொண்டு) செய்தார் செய்தகுற்றங்களை ஆராய்கைக்கடவ யமன், என்னை விபஜித்துக்கொண்டு. ஆண்பிள்ளையான சக்ரவர்த்தித் திருமகனார், தம்மோடே கூட்டிக்கொள்ள யமனாலேபிரிக்கலாமோ. இப்பாட்டு-சக்ரவர்த்தித் திருமகனைச்சொல்லுகிறது;—"அன்றுசராசரங்களை வைகுந்தத்தேற்றி" என்றுசொல்லுகிறபடியே - யமவச்யமான ஸ்தாவர ஜங்கமங்களை இருந்தபடியே விஷயீகரித்து பரமபதத்தேறக் கொண்டுபோன ஏற்றத்தை நினைத்து. கூறுசெய்கை-பிரிக்கை. (இறந்த குற்றமெண்ணவல்லனோ) செய்துகழிந்தபாபத்தை எண்ணவல்லனோ. கீழ்க்கழிந்த பாபமாவது - அநுதாபதசையையும் ப்ராயச்சித்த தசையையுங்கழித்து, நரகாநுபவம்பண்ணியே கழிக்கவேண்டுமவையென்கை. "எண்ணவல்லனோ" என்றது - பாபம் பண்ணினோமென்று தனிக்க்ருஹத்திலேயிருந்து நினைக்கவும் சக்தனல்லன். ... (ககசு)

அ.—நூற்றுப்பதினேழாம்பாட்டு. யமவச்யதாஹேதுவான கர்மங்கள்போனாலும் தேஹாரம்பகமாயிருந்துள்ளப்ராரப்தகர்மம் கிடந்ததில்லையோவென்ன; அந்த ப்ராரப்த கர்மத்தையும் ததாச்ரயமான தேஹத்தையும்போக்கி பரமபதத்திலேகொண்டுபோவானானபின்பு நம்பேற்றுக்கு ஒருகுறையில்லையென்கிறார். பூர்வாகமாகிறது - தேஹபரம்பரைக்கு ஹேதுவாயும், நரகஹேதுவாயும், ப்ராப்தமாய் அநுபவ விநாச்யமாயும் மூன்றுவகைப்பட்டாயிருப்பது. அதில் உபாஸகனுக்கு ப்ராரப்தகர்ம மொழிந்தவை

நஷ்டமாகக் கடவது; ப்ராரப்தகர்மம் அநுபவவிநாச்யமாகக் கடவது; ப்ரபந்நனுக்கு பகவத்ப்ரஸாதத்தாலே த்ரிவிதகர்மங்களிலும் அநுபவிக்கவேண்டுவதில்லை.

அச்சநோயொடல்லல்பல்பிறப்பவாயமூப்பிவை
வைத்தசிந்தைவைத்தவாக்கைமாற்றிவானிலேற்றுவான்
அச்சுதனநந்தகீர்த்தியாதியந்தமில்லவன்
நச்சுநாகணைக்கிடந்தநாதன்வேதகீதனே. (கக௭)

ப-ரை.—அச்சுதன் - ஆச்ரிதரை ஒருக்காலும் நழுவவிடாதவனாய், அநந்தகீர்த்தி - அபரிச்சேத்யமான குணப்ரதையையுடையனாய், ஆச்ரிதவிஷயத்தில் செய்ய நினைத்திருக்குமவற்றுக்கு, ஆதியந்தமில்லவனை-முதலும் முடிவுமின்றிக்கேயிருக்குமவனாய், நஞ்சு-பரதிகூலர்பக்கல் விஷத்தை உமிழ்கிற,நாகணைக்கிடந்த - திருவநந்தாழ்வானமேலே கணவளாகக்கருளுகிற, நாதன-ஸர்வஸ்வாமியாய், வேதகீதன்-நாராயணனுவாகத்திலே ப்ரஸித்தனாகச்சொல்லப்படுமவனானவன்; அச்சம்-பயமும், நோயொடு-வ்யாதியும், அல்லல்-ஆதிவ்யாதியும், மூப்பு-ஜரையும், பல்பிறப்பவாயவிவை - அநேகஜந்மங்களாலாகிற விவைகளை, வைத்த-அநுஸந்திக்கிற, சிந்தை-மாஸ்ஸையும், வைத்த - அந்த மாஸ்ஸுக்கு ஆச்ரயமான. ஆக்கை - சரீரத்தையும், மாற்றி-தவிர்த்து, வானிலேற்றுவான்-பரமபதத்தில் ஏறப்பண்ணும் ஸ்வபாவனென்கிறார். (கக௭)

வ்யா.—(அச்சநோயொ டல்லல் பல்பிறப்பவாய மூப்பிவை) பயம், வ்யாதி, அத்தோடே கூடின ஆதி, ஜரை அநேகஜந்மமாகிற விவை. பயமாவது - ஆதிகளிலே ஒன்றாயிருக்க ப்ரதமத்திலெடுத்தது, ஆதிவ்யாதிகள் எல்லார்க்கும் ஸாதாரணமாயிருக்கையாலே, ஆதாகிறது – ஆகாமியான துக்கத்துக்கு ஹேதுவான லிங்கதர்சநத்தாலே வரும் மாநஸதுக்கம் - பயமாகிறது. அது ஸர்வதுக்க ஸாதாரணமிறே. வ்யாதியாகிறது - சிரோரோகாதிகள். ஆதியாகிறது-காமக்ரோதாதிகள். "நோயொடல்லல்" என்றது - இரண்டும் ஆத்யாத்மிகமாகையாலே. அதுதான் ஆதிபௌதிகத்துக்கும் ஆதிதைவிகத்துக்கும் உபலக்ஷணம். ஜரையாகிறது – பால்யயௌவநாதிகளுக்கும் உபலக்ஷணம். ப்ராரப்தகர்மங்களை, அநேகஜந்ம ஸம்பவங்களையாலே "பல்பிறப்பு" என்கிறது "ஆய - இவை" என்கிறது ஸங்கிஹிதங்களான அநுபவங்களைச் சொல்லுகிறது. (வைத்தசிந்தை) உக்தமான விவற்றை யநுஸந்திக்கிற மநஸ்ஸையும். (வைத்த வாக்கை) அந்த மநஸ்ஸுக்கு ஆச்ரயமான சரீரத்தையும்.(மாற்றி) ஆக-ப்ராரப்த கர்மபலமான ஆதிவ்யாதிகளையும்,அவற்றை யநுபவிக்கிற கரணங்களையும், ஸர்வத்துக்கும் ஆச்ரயமான தேஹஸம்பந்தத்தையும்,இவற்றை யடங்கத்தவிர்த்து. (வானிலேற்றுவான்) "நோபஜநம்ஸ்மரந்நிதம்சரீரம்" "நோபஜநம்ஸ்மரந்நிதம்சரீரம்" என்கிறபடியே இவற்றை ஸ்மரிக்கைக்கும் அவஸரமில்லாத பரமபதத்தே ஏறப்பண்ணும் ஸ்வபாவன்.

இஸ்ஸ்வபாவத்தையுடையவனுமொன்ன(அச்சுதன்) திருவடிகளை ஆச்ரயித்தாரை ஒருநாளும் ஒருபடியாலும் நழுவவிடாதவன்.(அநந்தகீர்த்தி)இப்படி ஆச்ரிதரக்ஷணத்தைப் பண்ணுகையாலுண்டான அபரிச்சேத்யமான குணப்ரதையை யுடையவன்.(ஆதியந்தமில்லவன்) ஆத்யந்தரஹிதன். அதாகிறது-ஆச்ரிதவிஷயத்தில் செய்யுமவை த்திருக்கு மவற்றுக்கு முதலும் முடிவுமின்றிக்கே யிருக்கை.(நச்சுநாகணைக்கிடந்த நாதன்) ஆச்ரிதரை ஒருக்காலும் பிரியமாட்டாத ஸர்வஸ்வாமி ப்ரதிகூலர்பக்கலிலே நஞ்சை உமிழ்வானுமாய், ஜாதிப்ரயுக்தமான மென்மை குளிர்த்தி நாற்றங்களையுடையனுன திருவநந்தாழ்வானுகிற படுக்கையிலே கண்வளர்ந்தருளுகிறவன். (நாதன்) தாழநின்று உபகரிக்கைக்கும ஆசரிதரைப் பிரியமாட்டாமைக்கும் ஹேதுவுடையவனுகையாலே (வேதகீதனே) அச்யுதனுகவும் வகுத்த ஸ்வாமியாகவும் நாராயணுநுவாகத்திலே ப்ரஸித்தனுனவன். "శాశ్వతంశివమచ్యుతం నారాయణమ్" "ஶாஶ்வதம் சிவமச்யுதம் நாராயணம்" என்னக்கடவதிறே. ... ... (௧௧எ)

அ.—நூற்றுப்பதினெட்டாம்பாட்டு."வைத்தசிந்தைவைத்த வாக்கைமாற்றி" என்று ப்ராரப்த கர்மாவஸாநமான விரோதி நிவ்ர்த்திக்கும், "மீள்விலாதபோகம் நல்கவேண்டும்" என்றும், "நம்மையாட்கொள்வான்" என்றும், "வானிலேற்றுவான்" என்றும் சொன்ன ப்ராப்யஸித்திக்கும, ஈச்வரனே கடவானென்று திருவுள்ளத்தைக்குறித்து அருளிசசெய்தார் - கீழ்ப்பாட்டில்; ஈச்வரனை நோக்கி, தம்முடைய திருவுள்ளத்துக்குண்டான ப்ராப்ய ருசியை ஆவிஷ்கரிக்கிறுர் - இதில்.

சொல்லினுந்தொழில்களுந்தொடக்கறாதவன்பினும்
அல்லினும்பகலினேடானமாலைகாலையும்
அல்லிநாண்மலர்க்கிழத்திநாதபாதபோதினைப்
புல்லியுள்ளம்வீள்விலாதுபூண்டுமீண்டதில்லையே. (௧௧அ)

ப-ரை.—சொல்லினும் - வாசகமானஸ்துதிகீர்த்தநங்களிலும், தொழிற்கணும்-காயிகமானப்ரதக்ஷுஞ்சலியாதிகளிலும,தொடக்கறுத-பந்தம் நீங்காத, அன்பினும் - மாநஸமான ப்ரேமத்திலும், நல் அல்லும் - பகவதவிஷய ப்ரவணயத்தோடு செல்லக்கடவராதரியும், நனபகலும்-ஆதமயாதராசேஷமாகப்போக்கக்கடவபகலும், அல்ஆன-ராத்ரியோடே கூடின, மாலை-ஸாயம் ஸந்தயையும், பகல் ஆன-பகலோடுகூடின, காலையும்-ப்ராதஸ்ஸந்தயையும், அல்லி-படர்ந்து, நாள்-அப்போதலர்ந்த, மலர்க்கிழத்தி-தாமரைப்பூவைப் பிறப்பகமாகவுடையளான பெரிய பிராட்டியார்க்கு வல்லபனுனவனே!, உள்ளம் - என் மநஸ்ஸானது, பாதபோதினைப்புல்லி - உன்திருவடிகளாகிற தாமரைப்பூவைப்பற்றி, வீள்விலாது - விச்சேதமில்லாதபடி, பூண்டு - அதிப்ரவணமாய், மீண்டதில்லை-அதினின்றும் வேறுகுணங்களில் மீளப்பெற்றதில்லை. (௧௧அ)

வ்யா.—(சொல்லினும் தொழிற்கணும் தொடக்கருதவன்பினும்) வாசிகமானஸ்துதி கீர்த்தநாதிகளும், காயிகமான ப்ரதக்ஷிணாஞ்சலியாதிகளும்,மாநஸமானப்ரேமமும். ஆக,மநோவாக்காயவ்யாபாரங்களுக்கு பகவத்விஷயமே விஷயமாகை.தொடக்கருதவன்பாகிறது-விஷயாந்தரஸ்பர்சமில்லாதப்ரேமம். (அல்லும் நன்பகலினோடனைமாலைகாலையும்)தமோபிஷூதையோடும்விஷயாந்தரப்ராவண்யத்தோடும் செல்லக்கடவராத்ரியும்,தேஹயாத்ராசேஷமாகப் போதுபோக்கக்கடவஅஹஸ்ஸும், ராத்ரியோடே கூடின ஸாயம்ஸந்த்யையும், அஹஸ்ஸோடே கூடின ப்ராதஸ்ஸந்த்யையும். கரணத்ரயங்களுக்கும் ஏகம் விஷயமானாப்போலே, ஸர்வகாலத்துக்கும் விஷயமதுவேயாகை. "நன்பகல்" என்றத்தை எல்லாக்காலத்துக்கும் கூட்டி, நன்றான இரவும், நன்றானபகலும்,நன்றானஸந்த்யையுமென்கிறார் - பகவத் விஷயத்தோடே செல்லுகையாலே.

(அல்லிநாண்மலர்க்கிழத்திநாத) படர்ந்த செவ்வித்தாமரைப்பூவைப்பிறப்பாகவுடையவளாகையாலே ஸௌகந்த்யஸௌகுமார்யாதிகளாலே அதிகையான பிராட்டிதான், "அகலகில்லேனிறையும்" என்று மேலவிரும்பும் ஸர்வாதிகனே. அல்லிபோலேயாய் செவ்வித்தாமரைப்பூவைப்பிறப்பாகவுடையவளென்றுமாம். இத்தால்-இவர்திருவுள்ளத்துக்கு ஒருமிதுநமே ப்ராப்யமென்ற தாய்த்து. (பாதபோதினைப்புல்லி) உன்திருவடிகளாகிற தாமரைப்பூவைப்பற்றி. ச்ரியப்பதியான வுன திருவடித்தாமரைகளை மநோவாக்காயங்களிலுலே ஸர்வகாலமும்பற்றியென்றபடி. புல்லல் - புணைதல். (உள்ளம் வீள்விலாதுபூண்டு) என் மநஸ்ஸு ஒருகாலும விச்சேதமில்லாதபடி அதிப்ரவணமாய். (மீண்டதில்லையே) இருவரும் சேர்ந்த சேர்த்தியழகிலே அநுபவிக்கவிழிந்து அதில் பர்யாப்தி பிறவாமையாலே குணாந்தரங்களிலும மீண்டதிலலை. ... ... (கக அ)

அ.—நூற்றுப்பத்தொன்பதாம்பாட்டு. கரணத்துக்கும் கர்த்ர்பாவம் பிறக்கும்படியாக வுமக்கு நமபக்கலிலே பிறந்த அபிநிவேசம் ஸம்ஸாரத்தில் கண்டறியாததொன்றா யிருந்தது, இவ்வபிநிவேசத்துக்கடியென்னென்ன; பெரியபெருமாள்! கேட்டருள;உம்முடைய வடிவழகையும் சீலத்தையும் காட்டி தேவரீர் பண்ணின கர்ஷிபலித்தபலமன்றோ வென்கிறார்.

பொன்னிசூழரங்கமேயபூவைவண்ணமாயகேள்
என்னதாவியென்னும்வல்வினையினுட்கொழுந்தெழுந்து
உன்னபாதமென்னநின்றவொண்சுடர்க்கொழுமலர்
மன்னவந்துபூண்டுவாட்டமின்றியெங்குநின்றதே. (ககக)

ப-ரை.—பொன்னிசூழ்-காவேரிசூழ்ந்த, அரங்கம்மேய-கோயிலிலே என் நிமித்தமாக நித்யவாஸம்பண்ணுகிற, பூவைவண்ணா - காசாம்பூப்போன்ற திருநிறத்தையுடையனாய், மாய-ஆச்சர்யமான சீலஸௌலப்யங்களையுடையவனே, கேள்-உன விஷயத்தில் எனக்குப்பிறந்த ருசிவிசேஷத்தைக் கேட்டருளவேணும்; என்னதாவியென்னும் - என்னுடைய ஆத்மாவென்றுபேராய், வல்வினையினுள்-க்ரூரமான பாபராசியிலே, கொழுந்தெழுந்து - ச்ரத்தையாகிற கொழுந்து உதித்து, ஒண்சுடரென்ன நின்ற-வேதாந்தங்களிலே தேஜோமயனாகச் சொல்லப்படுவதாய், கொழுமலர் - செவ்வியமலர்போலே ஸுகுமாரமான, உன்ன-உன்னுடைய, பாதம் - திவ்யவிக்ரஹத்தை, மனனவந்து பூண்டு - பிரியாதபடி வந்து பூண்டு, எங்கும் வாட்டமின்றி-க்ஷுத்ரவிஷயங்களாலே சலிப்பிக்க ஒண்ணாதபடி, உன்னுடைய ஸ்வரூபகுணவிபூதிகளை, நின்றது-எனக்கு ப்ராப்யமாய் நின்றது. (கககூ)

வ்யா.—(பொன்னிசூழரங்கமேயபூவைவண்ண) காவேரி சூழ்ந்தகோயிலிலே மதர்த்தமாக நித்யவாஸம் பண்ணுகிற பூவைவண்ணனே. கோயிலுக்கு ஒருதோள்மாலையிட்டாப்போலே அலங்காரமாயாய்த்துத் திருப்பொன்னி. பரமபதத்திலே நித்யவாஸம், அஸ்ப்ர்ஷ்ட ஸம்ஸாரகந்தரான நித்யஸூரிகளை அநுபவிப்பிக்கைக்கு; க்ஷீராப்தியில் நித்யவாஸம், ச்வேதத்வீபவாஸிகளை காதாசித்கமாக அநுபவிப்பிக்கைக்கு; கோயிலில் நித்யவாஸம், பாபராசியான வெனக்கு தேவரீர்பக்கலிலே ருசிபிறப்பித்து அநுபவிப்பிக்கைக்கு. நிறத்தாலும் ஸௌகுமார்யத்தாலும் பூவைப்பூவை ஒப்பாகச்சொல்லும்படியாக ஆகர்ஷகமான வடிவையுடையவனென்கை. (மாய) இப்படி வேறொருவ்யக்தியிலே காணவொண்ணாத ஆச்சர்யமானசீலத்தையும் ஸௌலப்யத்தையுமுடையவனே. (கேள்) உன்னுடைய அழகாலும் சீலத்தாலும் எனக்குப் பிறந்தருசிவிசேஷத்தைக்கேட்டருள வேணும். உபகரித்த தேவரீர் விஸ்மரித்தாலும் உபகாரஸ்ம்ருதியையுடைய வென்பக்கலிலே கேட்டருளீரென்கிறார்.

(என்னதாவியென்னும் வல்வினையினுள் கொழுந்தெழுந்து) என்னுடைய ஆத்மாவென்றுபேராய பாபராசியான அதின்பக்கலிலே உன்னைக்குறித்து ச்ரத்தையானது உதித்து. கர்மயோகத்தாலே விரோதிபாபம் போனால் பிறக்கக்கடவச்ரத்தை, பாப ப்ரசுரனான தசையிலும் தோற்றும்படியிறே தேவரீருடைய ஸௌந்தர்யத்தினேற்றமிருப்பது. ஸ்வஸ்வரூபத்தை ஜ்ஞாநாநந்த லக்ஷணமாக நினைத்திருக்கையன்றிக்கே, * अपराधानामालयः - அபராதாநாமாலயமாகவாய்த்து இவர் நினைத்திருப்பது. (உன்னபாதமென்னநின்ற வொண்சுடர்கொழுமலர்) உன்னுடைய திவ்யவிக்ரஹ மென்று வேதாந்தங்களிலே தேஜோமயமாகவும், கொழுவிய மலர்போலே ஸுகுமாரமாகவும் சொல்லப்படுகிறபடியே, கீழ்ப்பிறந்த ச்ரத்தைக்குத்தேஜோமயமாய், "युवा कुमारः" "யுவாகுமார:" என்கிறபருவத்தையுடைத்தாய் அத்யந்தஸுகுமாரமானவடிவே விஷயமென்கை.

"பாதம்" என்று சேஷபூதன்வ்யவஹாரமிருக்கிறபடி. (மன்னவந்துபூண்டு) பிரியாதபடி வந்துபூண்டு. பூண்கையாகிறது-வ்யக்த்யந்தரங்களிலும் அந்வயியாதொழிகை. வாட்டமின்றியெங்கும் நின்றதே) க்ஷுத்ரவிஷயவாஸனையால் சலிப்பிக்கவொண்ணாதபடி உன்னுடையஸ்வரூபரூபகுணவிபூதிகள்எனக்குப்ராப்தமாய் நின்றது. அவ்விக்ரஹந்தான் ஷாட்குண்யவிக்ரஹமென்னும்படி குணப்ரகாசகமாகையாலே குணங்களிலே மூட்டிற்று; அக்குணங்கள் தான்ஸ்வாச்ரயமான திவ்யாத்மஸ்வரூபத்திலே மூட்டிற்று; அஸ்ஸ்வரூபந்தான் ஸ்வநியாம்யமான விபூதியிலேமூட்டிற்று. ஆக, என்னுடைய ஆதரத்துக்குள்ளே, ஸ்வரூபரூபகுண விபூதிகளெல்லாம் அந்தர்ப்பூதமாய்த்தென்கை. ... ... ... ...(௧௧௯)

அ.—நூற்றிருபதாம்பாட்டு. "உன்னபாதமென்ன நின்ற வொண்சுடர்க்கொழுமலர் மன்னவந்துபூண்டு" என்று - வடிவழகிலே பிறந்த ஆதரத்துக்கு அவ்வடிவே விஷயமானபடியைச் சொன்னார் - கீழ்; இதில்-கிடந்தானை கண்டேறுமாப்போலே தாமேஅவ்விக்ரஹத்தைப்பற்றுகையன்றிக்கே, நிர்ஹேதுகமாகப்பெரிய பெருமாள், தம்முடைய விக்ரஹத்தை என்னுள்ளே பிரியாதபடிவைக்கையாலே விரோதிவர்க்கத்தை யடையப்போக்கி, அபுநராவ்ருத்திலக்ஷணமாய் நிரதிசயாநந்த ரூபமான கைங்கர்யத்தைப் பெற்றேனென்று, "என்னவாவறச்சூழ்ந்தாயே" என்று உபகாரஸ்ம்ருதியோடே தலைக்கட்டுகிறார்.

இயக்கறாதபல்பிறப்பிலென்னைமாற்றியின்றுவந்
துயக்கொண்மேகவண்ணனண்ணியென்னிலாயதன்னுளே
மயக்கினான்தன்மன்னுசோதியாதலாலென்னாவிதான்
இயக்கெலாமறுத்தறாதவின்பவீடுபெற்றதே. (௧௨௦)

திருமழிசைப்பிரான் திருவடிகளேசரணம்,

ப-ரை.—உயக்கொள-பக்திரூபாபந்நஜ்ஞாநத்தைத்தருமவனாய், மேகவண்ணன் - காளமேகநிபச்யாமமானவடிவையுடைய ஸர்வேச்வரன், என்னை-நித்யஸம்ஸாரியாய்ப்போந்தவென்னை, இயக்கறாத-இடைவிடாதேவருகிற, பல்பிறப்பில்-தேவாதி சதுர்விதஜந்மங்களினின்றும், மாற்றி - மாற்றநினைத்து, இன்று-உன்னைஸ்மரியாதிருக்கிற இப்போது, வந்துநண்ணி - நானிருந்தவிடத்தேவந்துகிட்டி, தன்னிலாய-தனக்கு ப்ரகாரமான, என்னுளே-என்ஹ்ருதயத்திலே,தன்-தன்னுடைய, மன்னுசோதி—திவ்யமங்களவிக்ரஹத்தை, மயக்கினான்-பிரிக்கவொண்ணாதபடி கலந்தான்; ஆதலால்-ஆகையாலே, என் ஆவிதான்-என்னாத்மாவானது,இயக்கெலாமறுத்து - அவித்யாகர்மவாஸநாருசி ப்ரக்ருதி ஸம்பந்தங்களையறுத்து, அறாத-யாவதாத்மபாவி விச்சேதமில்லாத, இன்பவீடுபெற்றது-நிரதிசயாநந்தமான கைங்கர்யரூபமோக்ஷத்தைப்பெற்றதென்கிறார். (௧௨௦)

வ்யா.—(இயக்கறுத பல்பிறப்பிலென்னை மாற்றி) "மாறிமாறிப் பலபிறப்பும் பிறந்து" என்கிறபடியே - விச்சேதியாதே தேவதிர்யங் மநுஷ்யஸ்தாவராத்மகமான பலவகைப்பட்டிருந்துள்ள ஜந்மங்களி னின்றும், அஜ்ஞனாய் நித்யஸம்ஸாரியாய்ப்போந்த வென்னை மாற்ற னைத்து. இயக்கறுமையாவது - ஒருதேஹத்துக்கு ஆரம்பகமான கர்மத்தை யநுபவிக்கவிழிந்து, அநேகதேஹாரம்பகமான கர்மத் தைப்பண்ணுகையாலே தேஹபரம்பரைக்கு விச்சேதமின்றிக்கே செல்லுகை. இயக்கு-நடையாட்டம். "இயக்கல்" என்று வல்லொ ற்றாய்க்கிடக்கிறது. மாற்றினைத்தத்தை "மாற்றி" என்பானென் னென்னில்; 'உயிர்முதலாய் முற்றுமாய்" என்றாப்போலே. (இன்று வந்துயக்கொள் மேகவண்ணன் நண்ணி) விஷயாந்தர ப்ராவண்ய த்தைத்தவிர்த்து, தன்பக்கலிலே பக்திரூபாபந்நஜ்ஞாநத்தைத்தரும் காளமேகநிபச்யாமமானவன், எனக்கு நினைவின்றிக்கேயிருக்க, இன்று நிர்ஹேதுகக்ருபையினாலே நானிருந்தவிடத்தே வந்துகிட்டி. நண்ணுதல்-அணைதல். "நச்சுநாகணைக் கிடந்தநாதன்" என்றும், "பொன்னிசூழரங்கமேயபூவைவண்ணன்" என்றும் சொல்லிப்போ ந்தவராகையாலே, இங்கும், "உயக்கொள்மேகவண்ணன்" என் னும் பெரியபெருமாள் திருமேனியைத்தமக்கு உஜ்ஜீவநஹேது வென்கிறார். (என்னிலாயதன்னுளே) அஹம்புத்தி சப்தங்கள் தன்னளவிலே பர்யவஸிக்கும்படி, தனக்கு ப்ரகாரமான என்னு டைய ஹ்ருதயத்திலே. "தத்த்வமஸி" "தத்த்வமஸி" என்று உபதேசித் து, "அஹம்ப்ரஹ்மாஸ்மி" "அஹம்ப்ரஹ்மாஸ்மி" என்று அநுஸந்தித்துப் போந்த அர்த்தமிறே இவர் இங்கு அருளிச்செய்கிறார். இந்த சரீராதம ஸம்பந்தம் இங்குச் சொல்லுகிறது, தன்பேறாக வுபகரித்தவிதுக்கு ஹேதுவாக.

(மயக்கினான் தன்மன்னுசோதி) அபிமதமாய் அநுரூப மாய் ஜ்யோதிர்மயமான திவ்யமங்கள விக்ரஹத்தைப் பிரிக்க வொண்ணாதபடிகலந்தான். மயக்கம் - செறிவு. அதாவது-தன்னை யொழிய எனக்கு ஒரு க்ஷணகாலமும் செல்லாதபடி பண்ணினா னென்கை. (ஆதலால்) இப்படி தான்மேல்விழுந்து இவ்வளவும் புகுர நிறுத்துகையாலே. (என்னாவிதான்) தனக்கு அநந்ய சேஷ மாய், ஸ்ரீகௌஸ்துபம்போலே அபிமதமுமான என்னாத்மாவா னது. (இயக்கெலாமறுத்து) அந்யோந்யகார்யகாரண பாவத்தாலே

ஒழுக்கறுத அவித்யாகர்மவாஸநாருசி ப்ரக்ருதி ஸம்பந்தங்களை யறுத்து. "இயக்கறுதபல்பிறப்பில்" என்று - காரணமானதேஹ ஸம்பந்தங்களைச்சொல்லிற்றாய், தத்கார்யமான அஜ்ஞாந கர்மங்களென்ன, ததாச்ரயமான வாஸநாருசிகளென்ன இவற்றையுங்கூட்டி "எலாமறுத்து" என்கிறார். (அருத இன்பவீடுபெற்றதே) யாவதாத்மபாவிவிச்சேதமில்லாத நிரதிசயாநந்தமான கைங்கர்யரூப மோக்ஷத்தைப்பெற்றது. ... ... ... (கஉ0)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

அடிவரவு.— பூ ஆறு ஐந்து மூன்று நின்று நாகம் ஒன்று ஆதி தாது தன்னுள் சொல்லு; சொல் உலகு இன்னை தூய்மை அங்கம் தலை ஏகம் விடத்த புள கூசம் அரங்கன்; அங்கன் பண்டு வானிறம் சங்கை வரத்தில் ஆண் விண் படை பரத்தில் வானகம் காலன்; காலன் குரக்கினம மின் ஆதி அம்புலாவு காய்த்தகடம் வெற்பு ஆனை ஆயன்; ஆயன் வேறு வெஞ்சினம் பாலின் மண் தோடு காரோடொத்த குன்று கொண்டை வெண்டிரை சரம்; சரம் பொற்றை மோடி இலை மன்னு இலங்கை சங்கு மரம் சாலி செழு நடந்த; நடந்த கரண்டம் நன்று நின்று நிற்பதும் இன்று காணில் குந்தம் வண்டு; வண்டு போதில் மரம்பொத அறிந்து ஒன்றி புன்புலம் எட்டுச் சோர்வு பத்தின் வாசி கடை; கடை எத்திறம் மட்டு பின்பு நச்சராச் சாடு நெற்றி வெள்ளை பார்மிகுத்த குலங்களாய பண்ணுலாவு; பண்ணுலாவு விடை சுரும்பு ஊனின் மேய அடக்கரும் வரம்பில் வெய்யவாழி மறம் காட்டி பிறந்து இரந்து; இரந்து விள்விலாத திருச்கலந்து கடுங்கவந்தன் மண்ணை கறுத்தெதிர்ந்த காய்சினத்த கேடில் சீர் சுருக்குவாரை தூயனும் வைதுநின்னை; வைதுநின்னை வாள்களாகி சலங்கலந்த ஈனமாய அத்தனாகி மாறுசெய்த அச்சநோயொடு சொல்லினும் பொன்னிசூழ் இயக்கறுத காவலில்.

ஆ பாசுரம்-கஉ0:

பெருமாள் திருமொழிவரையில் பாட்டு-எசசு.

ஆ பாசுரம்-அசுசு.

திருச்சந்தவிருத்த வ்யாக்யாநம் ஸம்பூரணம்.

---

ஸ்ரீமதேராமாநுஜாயநமஃ.

# பிள்ளைலோகஞ்சீயரருளிச்செய்த

## தனியன் வ்யாக்யாநம்.

—:0:—

அவதாரிகை.—(மற்றொன்றும் வேண்டாமநமே) இதில் மநஸ்ஸைக்குறித்து, பகவத்விஷயததிலே வாசிகமாக அடிமைசெய்த ஆழ்வார்திருநாமத்தை நிரந்தராநுஸந்தாநம் பண்ணும்படி சொல்லுகிறது.

மற்றொன்றும்வேண்டாமநமேமதிளரங்கர்
கற்றினம்மேய்த்தகழலிணைக்கீழ் – உற்ற
திருமாலைபாடுஞ்சீர்த்தொண்டரடிப்பொடியெம்
பெருமானையெப்பொழுதும்பேசு.

வ்யா.—(மற்றொன்றும வேண்டா மநமேயென்று) "சிந்தை மற்றொன்றின்திறத்ததலலா" என்கிறபடியே, இங்கு "மற்றொன்றும்" என்று - பரத்வாதிகளின்பேறைப் பற்றச்சொல்லுகிறதாதல்; புருஷார்த்தாந்தரங்களைச் சொல்லுகிறதாதல். "மற்றொன்றும்வேண்டா" என்று-ப்ரிஹ்ஹிதங்களுக்கு குறுப்பாக வேறொன்றும் வேண்டாவென்கிறது. (மநமே)பந்தமோக்ஷங்களிரண்டுக்கும் பொதுவான மநஸ்ஸை, அந்தப்பொதுவான ஆகாரத்தைக்குலைத்து, அதில் ஒன்றையே என்றும் அநுபவிக்கப்பார். அதென்னென்னில்;(மதிளரங்கர் கற்றினம்மேய்த்த கழலிணைக்கீழுற்ற திருமாலை பாடுஞ்சீர்த் தொண்டரடிப்பொடி யெம்பெருமானை யெப்பொழுதும்பேசு) என்கிறது. (மதிளரங்கர்) "மதிள்திருவரங்கத்தானே" என்று இவர் பேசும்படி திருமங்கையாழ்வார் கட்டின மதிளையிட்டு நிரூபிக்கும்படியான கோயிலையுடையவர். "ஆயபொன்மாமதிள்சூழ் அழகார் தென்னரங்கமே" என்று அவர் தாமு மருளிச்செய்தார். "திண்கொடிமதிள்சூழ் திருவரங்கத்தாய்" என்னும்படியான அரங்கர். (கற்றினம் மேய்த்த கழலிணைக்கீழுற்ற திருமாலைபாடும்) அதாவது- "கற்றினம்மேய்த்த வெந்தைகழலிணை" என்று உபக்ரமித்து, "மழைக்கன்று வரைமுனேந்தும் மைந்தனே" என்றும், "வளவெழுந்தவளமாட மதுரைமாநகரந்தன்னுள், கவளமால் யானைகொன்ற கண்ணனை யரங்கமாலை, துளபத்தொண்டாய தொல்சீர்த் தொண்டரடிப்பொடிசொல்" என்றும் அவதாரத்தோடே கூட அரங்கமாலை யநுஸந்தித்துத் தலைக்கட்டிற்று. இதிலே தேங்கினமடுவிறே அர்ச்சாவதாரம். விக்ரஹைகதேசமான திருவடிகளைச் சொன்னது விக்ரஹத்துக்கு முபலக்ஷணம். "அழகியதைம்பொன்" இத்யாதி

பெரியபெருமாள்திருவடிகளை ஸேவித்தவாறே, "கற்றினம் மேய்த்த வெந்தைகழலிணை" என்னு மாகாரந்தோற்றி யிருக்கும். அதாவது - "கன்றின்பின் சிறுக்குட்டச் செங்கமலவடியும் வெதும்பி உன்கண்கள் சிவந்தாயசைந்திட்டாய் நீயெம்பிரான்" என்று வடிவிலே தொடைகொள்ளலாம்படியாயிருக்கும். "காவிரித்தென்னரங்கம் மன்னியசீர் மதுசூதனை - உன்னை யிளங்கன்றுமேய்க்கச் சிறுகாலே யூட்டி யொருப்படுத்தேன்" என்றும், "காவிரித்தென்னரங்கன் பண்டவன்செய்த கிரீடை" என்றுமிறே பட்டர்பிரானருளிச் செய்தது. "வண்டினங்கள், ஆலிக்குஞ்சோலை அரங்கத்தரவணையான் காலிப் பின்போனகழல்" என்னக்கடவதிறே. திருக்கைகளைக் கண்டவாறே, "மழைக்கன்று வரைமுனேந்தும்" "கொடியேறு செந்தாமரைக்கை" என்னலாயிருக்கும்; "குன்றேந்திக்கோநிரைகாத்தவன்" என்றும்; * ஆயனாயன்று குன்றமொன்றெடுத்தான் அரங்கமாநகரமர்ந்தானிறே. திருமுகமண்டலத்தைக்கண்டவாறே, "வெண்ணெயுண்டவாயன்" என்று - கவ்யஸேவை பண்ணின. ஆகாரந்தோற்றியிருக்கும்; பர்வத்ரயம் இப்படி ஸர்வசேதந ஸம்ரக்ஷண ஸமர்த்தங்களாயிருக்கும். * கேயத்தீங்குழலூதிற்றும் நிரைமேய்த்ததும் *நீடுலகுண்டதிறங்களாவாய் * வையமேழுங்கண்டாள் பிள்ளைவாயுள் *முற்றுமுண்டகண்டமிறே. வாயிலும் வயிற்றிலும் வைத்திறே நோக்குவது. (கற்றினம் மேய்த்தவெந்தை கழலிணைக்கீழ்ற்ற திருமாலைபாடும்) ஆசிதரக்ஷணத்துக்குறுப்பாய் அதிஸௌலபமான திருவடிகளுக்கு ஒக்கும்படியான வழிலே யூன்றியடிபட்டு, "அடிசூட்டலாகு மந்தாமம்" என்னும்படி அரங்கமாலுக்கும் திருமாலையைப்பாடித் திருவடிகளிலே சூட்டும். "செய்ய சுடராழியானடிக்கே சூட்டினேன் சொன்மாலை" என்னக்கடவதிறே. (பாடுஞ்சீர்) பாடுகைதானே இவர்க்கு ஸ்ரீயாய்த்து. (சீர்த்தொண்டரடிப் பொடி) * துளபத்தொண்டாய தொல்சீர்த்தொண்டரடிப்பொடியிறே. (தொண்டரடிப்பொடியெம்பெருமானை) அவர்கு "அரங்கநகரெம்பிரான்" என்னும்படி, * இலங்கையர்கோன் வழிபாடுசெய் கோயிலெம்பெருமான் நம்பெருமாளாயிருப்பர்; இவுகு - * தொண்டரடிப்பொடி யெம்பெருமானுயிருக்கும். ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு சேஷபூதரான ஆகாரத்தாலே நமக்கு நாதராயிருப்பா. இப்படிநமக்கு ஸ்வாமியானவரை, "எப்போதுமீதேசொல்" என்கிறபடியே- ஸர்வகாலத்திலும் அநுஸந்தித்துப்போரும். இத்தால் - "[illegible]" "குரோர்நாமஸதாஜபேத்" என்னு மர்த்தஞ் சொல்லிற்று.

---



ஸ்ரீமதேராமாநுஜாய நம:.

## பெரியவாச்சான்பிள்ளைவ்யாக்யாநாவதாரிகை.

———:O:———

நித்யஸூரிகளோடொத்த ப்ராப்தி தமக்குண்டாயிருக்க அத்தை அறியாதே, அநாதிகாலம் "தேஹமே ஆத்மா" என்றும் சப்தாதிவிஷயங்களே போக்யமென்றும் விரும்பி, ஸம்ஸாரத்தில் கைகழிந்த ஆழ்வாரை, பெரியபெருமாள் தம்முடையஸ்வரூபரூபகுண விபூதிகளுக்கு வாசகமான திருநாமப்ரபாவத்தை நிர்ஹேதுகமாகக்காட்டியருளக்கண்டு, தாமுமநுபவித்து அநுபுபூஷுக்களையும் அநுபவிப்பிக்கவும் வல்லராய்ப் பெரியபெருமாளையும் உகப்பித்துத் தலைக்கட்டுகிறார்.

ஸம்ஸாரிகளாகிறார் ஐஹிகத்தில் புண்யபாபரூபமான கர்மங்களை ஆர்ஜித்தும், ஆமுஷ்மிகத்தில்ஸ்வர்க்கநரகங்களிலே அதினுடைய பலாநுபவத்தைப் பண்ணியும்; இப்படிகதாகதம்பண்ணித்திரிவார் சிலராய்த்து. அதுதனனிலும் புண்ய பாபரூபமான கர்மங்களைஸ்வர்க்கநரகங்களிலே அநுபவித்து கர்மசேஷத்தோடே பூமியிலேகர்ப்பவாஸம்பண்ணுகைககுவரும்வழியிலே இவ்வாத்மா படும் எளிவரவைவேதாந்ததிலே பஞ்சாக்நிவித்யையென்று ஒரு ப்ரதேசத்திலே ஓதிவைத்தது. அதாவது-யாதநாசரீரத்தாலே நரகாநுபவம் பண்ணி அச்சரீரத்தை அங்கேபொகட்டு, அநந்தரம் புண்யசரீரத்தை பரிக்ரஹித்து ஸ்வர்க்காநுபவமபண்ணி, அங்கே அச்சரீரத்தைப்பொகட்டு, ஸூக்ஷ்ம சரீரத்தோடே நிராலம்பநமான ஆகாசத்திலே பதிக்ககடவன்;

---

## அரும்பதவிளக்கத்தின் அவதாரிகை.

பரமகாருணிகரான ஆச்சான்பிள்ளை இவ்வாழ்வாருடைய திருநாம வைபவஜ்ஞாநம் பகவந்நிர்ஹேதுககடாக்ஷலப்தமென்று ப்ரமாத்ர்வைப வகதநபூர்வகேந இப்ப்ரபந்த தாத்பர்யத்தை ஸங்க்ரஹேணவருளிச்செய்கிறார (நித்யஸூரிகளோடொத்த இத்யாதி.) முதல் மூன்று பாட்டாலே - தாமுமநுபவித்து, மேல்பதினொரு பாட்டாலே - அநுபுபூஷுக்களையும அநுபவிப்பித்து, "எம்பிராற்கினியவாறே" என்று பெருமாளையுகப்பித்துத் தலைக்கட்டுகிறாரென்றபடி. திருநாமத்துக்கு ப்ரபாவம் ஏதென்ன; ஏவம் விதராநஸம்ஸாரிகளை உஜ்ஜீவிப்பிக்கை என்று ஸம்ஸாரஸ்வபாவத்தை ஸப்ரகாரமாக அருளிச்செய்யா நின்றுகொண்டு, திருநாமவைபவத்தை அருளிச்செய்கிறார் (ஸம்ஸாரிகளாகிறாரென்று தொடங்கி, திருநாமத்தினுடைய வைபவமிருப்பதென்னுமளவும்.)

இவள்கால்நலத்தாலேதநமுண்டாம், பக்வையான்வளவிலே காமரஸம், ததநந்தரத்திலேபுத்ரஸம்பத்தென்றுப்போலே யிறே இவன் அபிமாநித்திருப்பது. "உய்ப்பான்" என்றது - இவன்இப் படி பாரித்துப்போமதொழிய அவ்விஷயத்தி லநுபாவ்யமா யிருப் பதொரு ரஸமில்லை. நிஹீநவிஷயமாகையாலே நெடுநாள் சென்று லும் இன்னது அநுபவித்தோ மென்றுப்ரத்யபிஜ்ஞைபண்ணலாவ தொன்றில்லை. இவனுடைய பாதிஸம்வாதமே யுள்ளது. அவர்கள் த்ரவ்யபரைகளாய் அநாதரித்தாலும் அவ்வநாதரமேஹேதுவாக ஶ்ரத்தைமிகும் இவனுக்கு. (பெரியதோரிடும்பைபூண்டு) அத்தா லே காலன்கொண்டும் பரஹிம்ஸைபண்ணியும் துஶ்ஶகமான மஹாதுக்கங்களைஏறிட்டுக்கொள்ளும்."பூண்டு"என்றது-கழுத்தில் புக்கவாயோடுபோலே தன்னால் கழற்றவொண்ணுதிருக்கை. அளவி றந்த ஸுகத்தை அநுபவிக்கவேணுமென்றுகோலி அளவிறந்த துக்கத்தையாய்த்து ஏறிட்டுகொள்வது. ஓரஞ்சலியுண்டறுக்கமா ட்டாதவிஷயத்தையன்றேபற்றிற்று."ஸுஸுகம்கர்த்தும்" "ஸுஸுகம்கர்த்தும்"என்கிறபடியேஸாதநவேளையேதொடங்கி ரஸிக்கும்விஷய மன்றே; "தூயவமுதைப் பருகிப்பருகி யென்மாயப்பிறவிமயர்வறுத்தேன்" என்னக்கடவதிறே. இங்கே ஸாத்யஸாதநங்க ளிரண்டும் துக்கரூபமாயிருக்கும். (உண்டிரா) இராவுண்டு. ஜீவிக்கவு மவஸர மில்லாதபடி பகலெல்லாம், தட்டித்திரிந்து அஸ்தமயவேளையிலே யாய்த்து ஜீவிப்பது.முதல் ஸ்வஶரீர ரக்ஷணதைப்பண்ணிக்கொ ண்டு நின்று பின்னையிறே விஷயாநுபவம் பண்ணப்பார்ப்பது.(கிட க்கும்போது) அநந்தரம் ஓரிடத்திலே விழவிடுகை அபேக்ஷிதமா யிருக்கும், அப்போது ஶிதிலனுகையாலே விஷயங்களை அநுஸந்தி த்தல் அநுபவித்தல்செய்ய க்ஷமனல்லன்.

---

"சுகங்கள்" என்றதுக்கு-போகரஸங்களென்றுஅர்த்தாந்தரம் விவக்ஷித்து, "உய்ப்பான்" என்றதுக்கு தாத்பர்யம் (இவனிப் படியித்யாதி.) "உய்ப்பான்" என்றதுக்குத் தாத்பர்யாந்தரம் (இவனுடைய வித்யாதி.) அதாவது - அவர்கள த்ரவ்யபரைக ளாகையாலே இவனுக்கு போகங்கொடார்களென்றபடி. இவர் கள் அநாதரித்தால் இவன் மேல்விழுவானென்னென்ன; (அவர் களித்யாதி.) ஶ்ரத்தை மிகுகைக்குஹேது பாபப்ராசுர்யம். அத்தாலே - விஷயஸுகாபேக்ஷையும். அதுக்கு இப்போது ஏதென்ன; (ஓரஞ்ஜலீத்யாதி.) அன்றே பற்றிற்று (துராராதரைாயி றே) ஆகையாலே என்றபடி. "பெரியதோரிடும்பை பூண்டு" என்று ஸாதநமதுக்கரூபமாகையன்றிக்கே ஸுகங்களுக்கும் "உய்ப்பான்" என்றஸத்யமும் துக்கரூபமென்கிறுர் (ஸுஸுகம்-ஸுஸுகமித்யாதி.) ஸாதநஸமயத்திலும் ரஸிக்குமென்றதுக்கு ப்ரமாணம் (தூயவ முதையித்யாதி).

(உடலுக்கே கரைந்துநைந்து) நானோ இவற்றை ரக்ஷித்து நாமும் ஜீவித்தோமாய்விடவல்லோம் என்று சிந்தியாநிற்கும். அவதாரணத்தாலே - தேஹாதிரிக்தமாயிருப்பதொரு ஆத்மவஸ்து உண்டென் றிருக்கிலிறேயதுக்கு மொருக்கால் கரைய வேண்டுவது, ஶரீரஸமநந்தரத்தில் வகுத்த புருஷார்த்தத்தை லபிக்கும் விரகேதோ, நரகத்தையும் கர்ப்பவாஸத்தையும் தப்பும் விரகேதோவென்று கரையவிறேயடுப்பது, அதுக்கு யோக்யதையில்லாமையாலே தேஹதாரணத்துக்கே கரையாநிற்கும். "கரைந்து நைந்து" என்றது - பகவத்குணவித்தரா யிருப்பார் "நினைதொறும் சொல்லுந்தொறும் நெஞ்சிடிந்துகும்" என்று படுமதடங்க தேஹத்திலே படுமாய்த்து இவன். (தண்டுழாய் மாலைமார்பன்தமர்களாய்ப் பாடியாடி) ஸர்வேஶ்வரனை அநுபவித்து, "அஹமந்நமஹமந்நம்" "அஹமந்நமஹமந்நம்" என்று களித்துச் செருக்குக்குப் போக்குவிட்டுத் திரியக்கடவ சேதநர் படுமநர்த்தமே யென்கிறார். (தண்டுழாய்மாலைமார்பன்) ஸர்வேஶ்வரத்வஸூசகமான திருத்துழாய்மாலையாலே அலங்க்ர்தனானவன். இவர்கள் பற்றின துராராத விஷயங்கள் போலன்றியே தன்வெறுமையை முன்னிட்டு என்னைப்பற்றுமவனை ரக்ஷிக்கக்கடவனென்று தனிமாலை யிட்டுக் கொண்டிறே அவனிருப்பது. அவன் ரக்ஷகனாகாதவன்றும் கிட்டுவார்க்கு அவ்வடிவும் ஒப்பனையுமே ப்ரயோஜநம் போருங்கிடீர். (தமர்களாய்) இவ்விஷயத்தில்இவனுக்குஸாத்யம்ஒன்றில்லை,ஸ்வாபாவிகஸம்பந்தத்துக்கு அநுமதிபண்ணுமித்தனையேவேண்டுவது. இவ்வாத்மாவுக்கு நிலைநின்ற ஸ்வரூபமிதிறே. அவனை, "பதிம்விஶ்வஸ்ய" "பதிம்விஶ்வஸ்ய"என்றும், இவனை,"யஸ்யாஸ்மி" "யஸ்யாஸ்மி"என்றும், "தாஸோஹம்" "தாஸோஹம்" என்றுமிறே நிர்த்தோஷப்ரமாணங்கள் சொல்லுகிறது. தமர் - அடியார். கீழ்ச்சொன்னவை யடங்க இவன்றானே யேறிட்டுக் கொண்டவையிறே.

(பாடியாடி) பகவதநுபவ ஜநிதப்ரீதிக்குப் போக்குவீடாகப் பாடி, அதுதான் இருந்தவிடத்தி லிருக்கவொட்டாமையாலேயாடி. "காயந்திகேசித் ப்ரணமந்திகேசிந் ந்ர்த்யந்திகேசித்" "காயந்திகேசித் ப்ரணமந்தி கேசிந் ந்ர்த்யந்திகேசித்" என்று மதுவநத்தில்புக்க முதலிகள்படியாய்த் திரியக்கடவனிறேஇவன். ஒருதேசவிஶேஷத்திலே சென்றாலும், "ஹாவு ஹாவு" "ஹாவுஹாவு" என்று ப்ரீதி ப்ரகர்ஷத்தாலேபாடிஸஸம்ப்ரமநர்த்தம்பண்ணியிறே திரிந்திருப்பது. (தொண்டுபூண்டு) அடிமைபூண்டு. தனக்குவகுத்த ஶேஷவ்ர்த்தியையேயிட்டுக்கொண்டு. "உறும்" என்று ஏறிட்டுக்கொள்ளுகை யன்றிக்கே உகந்து ஏறிட்டுக்கொண்டு.

---

தாத்பர்யாந்தரம் (இவகர்ள்பற்றினவித்யாதி.) போக்யதையைப்பற்ற மூன்றாமர்த்தம் (அவனித்யாதி.)

(பூண்டு)இவ்வாத்மாவுக்குதாஸ்யமேயிறே ஆபரணம். "ద్రుమశిరాలఙ్కృతః" "த்ருமசிரோலங்க்ருத:" என்றது ஆபரணமானாப் போலே. நம்பெருமாளுக்குச் சேரசுந்தரபாண்டியன் தம்பிரான் பதக்கம்போலே இவனுக்கு தாஸ்யமாகிறவாபரணம். அவனுக்கும் அது நெஞ்சிலே கிடப்பதொன்று; இவனுக்கும் இது நெஞ்சிலே கிடப்பதொன்றிறே. "இடும்பைபூண்டு" என்கிறதுபோலன்றே யிது. "అహం సర్వం కరిష్యామి" "அஹம்ஸர்வம்கரிஷ்யாமி" என்றும் "வழுவிலாவடிமை செய்யவேண்டும் நாம்" என்கிறதிறே இது. "பூண்டு" என்கிற ஶப்தம் இரண்டிடத்திலும் ஒத்திருக்க நெடுவாசிப்பட அர்த்தம் சொல்லுவானென்னென்னில்; அர்த்தபலத்தாலே;- அப்ராப்ய விஷயத்தில்ஸேவையை "సేవా శ్వవృత్తిః" "ஸேவாஶ்வவ்ருத்தி:" என்றும், ப்ராப்தவிஷயத்தில் பாரதந்த்ர்யத்தை "పారతన్త్ర్యం పరే పుంసి" "பாரதந்த்ர்யம்பரேபும்ஸி" என்றும், "సా కిమర్థం న సేవ్యతే" "ஸாகிமர்த்தம்நஸேவ்யதே" என்றும் விஷயம் பேதித்தாப்போலே இங்கும் அர்த்தபலத்தாலே பேதித்துச் சொல்லுகிறது. (அமுதமுண்ணு) ஸ்வரூப ப்ராப்தமாய் நித்யாநுபாவ்யமா யிருக்கு மம்ர்தமாய்த்து இது. "తవ దాస్యసుఖైకసఙ్గినామ్" "தவதாஸ்யஸுகைகஸங்கிநாம்" என்றும், "తవ దాస్యం మహారసజ్ఞ" "தவதாஸ்யம்மஹாரஸஜ்ஞ" என்றும் சொல்லக்கடவதிறே.(தொழும்பர்)இதினுடையபோக்யதையை யறியாதே அபோக்யமாய் அப்ராப்தமா யிருந்துள்ள க்ஷுத்ரவிஷயங்களை விரும்பும் நீசர். தொழும்பர் – தண்ணியர். ப்ராப்தியில்லாமே யித்தை யிழக்கிறாரல்லர்; லபிக்கையில் நேர்த்தியுண்டா யிழக்கிறாரல்லர். க்ஷுத்ரவிஷயங்களுக்கும் இதுக்குமுள்ள நெடுவாசியறியும் சேதநருமாயிருக்க, துராராதமாய் அபோக்யமாயிருக்கிற விஷயத்திலேமண்டப்பண்ணிற்றிறே † பாபபலம்.(சோறுகக்குமாறே) மண்ணில்காட்டில் சோற்றுக்கு வாசியறிந்து ஜீவிக்கிறபடி யெங்ஙனே. நித்யமான ஆத்மவஸ்துவுக்கு பகவத்சேஷத்வமே தாரகமென்றறியாதவன், அநித்யமான தேஹத்துக்குச் சோறுதாரகமென்றறிந்து ஜீவிக்கிறானே. புத்ராதிகள் ஜீவிக்கக் காண்கிற வாஸனைகொண்டு ஜீவிக்கிறானித்தனையிறே. வாசியறியுமவனாகில் ஆத்மாவுக்கு நன்மையெண்ணானோ; ஒன்றிலே விஶேஷஜ்ஞாநமுண்டாகில் மற்றையதிலும் அறிவு உண்டாகாதோ. ... ... (ரு)

---

அர்த்தாந்தரம் (இவனுக்கித்யாதி.) "தண்டுழாய்மாலைமார்பன்" என்றத்தைப்பற்ற (ப்ராப்தியில்லாமையித்யாதி.) "தமர்களாய்" என்றத்தைப்பற்ற (லபிக்கையிலேயித்யாதி.) ... (ரு)

---

† "[illegible]பலம்" என்றும் பாடம்.

அ.—ஆரும்பார்ட்டு (மறஞ்சுவர்) விஷயங்களுக்கு அல்பாஸ்திரத்வாதி தோஷங்களநேகமுண்டானாலும் எங்களுடைய த்யாகத்துக்கு ஹேதுவாகமாட்டாது. ஏகவிஷயத்தில் பூர்ணாநுபவம்பெற்றிலோமேயாகிலும் விஷயங்க ளநேகமுண்டானபின்பு ஒன்றிலில்லாதநன்மை மற்றையதிலே கூட்டிக்கொண்டநுபவிக்கிறோமென்ன; அப்படியேயானாலும் அந்தபோக்தாதான்ஸ்திரனாக வேணுமே, அவ்விஷயங்களோபாதி போக்தாவும் அஸ்திரனென்று போக்தாவினுடைய நிலையில்லாமையைச் சொல்லுகிறார்.

மறஞ்சுவர்மதிளெடுத்துமறுமைக்கேவெறுமைபூண்டு
புறஞ்சுவரோட்டைமாடம்புரளும்போதறியமாட்டீர்
அறஞ்சுவராகிநின்றவரங்கனார்க்காட்செய்யாதே
புறஞ்சுவர்கோலஞ்செய்துபுட்கவ்வகிடக்கின்றீரோ. (சு)

ப-ரை.—மறம் - க்ரௌர்யமாகிற, சுவர்-சுவரை, மதிளெடுத்து - மதிளாகவெடுத்தும், மறுமைக்கு - ஆமுஷ்மிகத்துக்கு, வெறுமைபூண்டு - தாரித்ர்யத்தைமேற்கொண்டும், புறஞ்சுவர் - வெளிச்சுவராய், ஓட்டை - அஸ்திரமான, மாடம் - சரீரமானது, புரளும்போது-தரையில்விழும்காலத்தை, அறியமாட்டீர்-அறியமாட்டீர்களென்ன; பின்னைசெய்கிறதென்னென்னில்; அறம்சுவராகிநின்ற-தர்மமேப்ரகாரிபாகநின்ற, அரங்கனார்க்கு-கோயிலிலேவந்துகண்வளர்ந்தருளுகிற அழகியமணவாளனுக்கு, ஆள்செய்யாதே - அடிமைசெய்யாதே, புறஞ்சுவர் - வெளிச்சுவரானவுடம்பை, கோலஞ்செய்து - அலங்கரித்து, புள்-பக்ஷிகள், கவ்வ - கவ்வும்படி, கிடக்கின்றீரோ - அநர்த்தப்பட்டுக் கிடக்கிறீர்களே யென்று வெறுக்கிறார் ... .. ... ... (சு)

வ்யா.—(மறஞ்சுவர்மதிளெடுத்து) மறமாகிற சுவரையரணாக வெடுத்து. க்ரௌர்ய ஸமுதாயத்தையாய்த்துத் தனக்கு அரணாக நினைத்திருப்பது. அமாநித்வாத்யாத்ம குணங்க ளெல்லாவற்றுக்குமாக. இவன்பக்கலுள்ளது க்ரௌர்யமேயாய்த்து. மறம்—அருளின்மையும், கோபமும், தறுகண்மையுமாம். அதாவது - இவன் அதிக்ரூரவ்வர்த்தியாநின்றான், தனக்கு அநர்த்தத்தைத் தானேசூழ்த்துக் கொள்ளா நின்றானென்று ஸத்துக்கள் ஐயோ! என்று தனக்கு ஹிதம்சொல்ல நினைத்தால் தன்பக்கலணுகவொண்ணாதபடிக்ருத்தனாயிருக்கும். ஒருஸாத்விகர தன்பக்கல்கிட்டாமைக்கு இடுமரண் இதுவிறே. ராவணனுக்கு, மாரீசன் மால்யவான் கும்பகர்ணன் ஸ்ரீ விபீஷணாழ்வான் இவர்களெல்லாரும் ஹிதம் சொன்னவிடத்தில் சொன்னஹிதம்கேளாமையாலேதன்னோடுசேர்ந்தகும்பகர்ணனும் மாரீசனும் முடிந்துபோனார்கள்; அல்லாதார்விக்ரதரானார்கள். இது விறேதுஷ்ப்ரக்ருதிக்குஹிதம் சொன்னால் படுமெளிவரவு.

"மதிளெடுத்து" என்றது - இந்தக்கார்யம் ஸ்வரூபப்ராப்தமாய் வந்ததொன்றன்று, ஒருநாள்வரையிலே பகவத்விஷயீகாரமடியாக அழிவதொன்றென்று தோற்றுகைக்காக. வீரஸுந்தரப்ரஹ்மராயன் சோழக்குடியிலிட்ட மதிள்போலேயிறே இவன்றான் பண்ணிக் கொள்ளுமரண் விநாஶபர்யந்தமாய்முடியும்படி. இவன் இத்தால்பெற்ற ப்ரயோஜநம் சொல்லுகிறது (மறுமைக்கே வெறுமைபூண்டு) இவனிருந்தகாலத்தில் செய்த கார்யம் அத்ர்ஷ்டத்துக்கு தாரித்ர்யததைக் கூடுபூரித்த வித்தனை. ஶரீரதாரணத்தோபாதி ஆத்மதாரணமாயிருப்பதொரு நன்மையும் வேணுமென்று இருந்தானாகில, ஈஶ்வரன் அத்தைதயே நினைத்துரக்ஷிக்குமிறே. "ధాతుసామ్యే స్థితే స్మర్తా" "தாதுஸாமயேஸ்திதே ஸ்மர்த்தா" என்கிறபடியே ஆத்மோஜ்ஜீவநார்ததமாக ஒருககால நினைத்தானாகில், "అహంస్మరామి" "அஹம்ஸ்மராமி" என்று அதுதன்னை யொன்றையுமே கொண்டு முடிய நடத்துமிறே ஈஶ்வரன. ஶரீரவிஶ்லேஷஸமநந்தரத்திலே அவ்வருகேயொரு குளிர்ந்தவிழியில்லாதபடி பண்ணிக்கொண்டானாய்த்து. இம்மையிலே வெறுமையாகில் ஆகமாபாயிகளுமாய் ஶரீரத்தளவுமாயிறேயிருப்பது. மறுமையிலே வெறுமையாகிறது-நித்யமான ஆத்மாவுக்குப்பிறந்ததாகையாலே வந்ததாரித்ர்யம் நித்யமிறே. இதுக்குமுன்பு ஒன்றினறிக்கே யொழிந்தாலும் மேலேஒரு நன்மை தேடிககொளளுகைக்கு அடுத்தானிலலையே என்கிறார்.

(புறஞ்சுவரோட்டைமாடம் புரளும்போதறியமாட்டீர்) புறஞ்சுவரெனகிறது - தேஹததை. புருஷார்த்தோபயோகியாக ஈஶ்வரன் தந்தஶரீரத்தைககொணடு விஷயாநதரப்ராவண மாக்குகையாலே"புறஞ்சுவர்"எனகிறது.இத்தைககொண்டு ஆத்மாவுககுஒரு நன்மை தேடிறைகில் அதுதானே உததேஶ்யமாயிறே.

---

ஆறும்பாட்டு.—(மறஞ்சுவரிதயாதி.)ஸபாபர்வணிதர்மபுத்ரஸ்ய ராஜஸூயகாததவ்யாதாவிமர்ஶஸமயேகர்ஷ்ணகமந வேளாயாம், "భూతభవ్యభవన్నాథః కేశవః కేశిసూదనః। ప్రాకారస్సర్వవృష్ణీనామాపత్స్వభయదోஂరిహా" "பூதபவ்யபவந்நாதஃ கேசவஃகேசிஸூதநஃ|பராகாரஸ்ஸர்வவர்ஷ்ணீநாமஆபதஸ்வபயதோரஹா." தறுகணமை-வீரம். ஐஹிகத்திலே மண்டினவிவாஅர்தாஷ்டஹேதுவாக ஒன்றைச்சேர்த்துக் கொண்டு ரக்ஷயாககுகை கூடுமோவெனன; (ஶரீரதாரணேத்யாதி.) அத்ர்ஷ்டத்துக்கு தாரித்ர்யமாவது-ஆத்மோஜ்ஜீவநார்த்தமான ஹிதசிந்தாபாவமென்று கீழேயொருதாத்பர்யமருளிச்செய்து, கைங்கர்யாபாவமேதாரிதாயமெனறுதாத்பர்யாந்தரம்விவக்ஷித்து, அத்தால் வ்யாவ்ர்த்தியை யருளிசசெயகிறார் (இம்மையிலேவெறுமையாகிலித்யாதி.)விஷயாந்தர ப்ரவணமாக்குகையாலேஎன்றது-இவ்விஷயாந்தரப்ராவண்யத்துக் குடலாககுகையாலே என்றபடி. உத்தேஶ்யமாமிறே என்றது - உள்சுவராய உத்தேஶ்யமாமிறே என்றபடி.

(ஓட்டைமாடம்)"* அப்போது விழுந்தது, இப்போது விழுந்தது" என்னும்படி அஸ்திரமாயிருக்கையாலேசொல்லுகிறார். (ஓட்டைமாடம்)ஓடும்பூட்டுங்கொண்டு ஸமாதாநம்பண்ணிநிற்கவேண்டும்படியிருக்கை. "மாடம்" என்கிறது - ஸம்ஸாரிகளபிப்ராயத்தாலே. நீர்ஹிதம்சொல்லுகிறது இப்போதன்றே, க்ரமத்திலே செய்கிறோமென்ன; (புரளும்போதறியமாட்டீர்) ஜீவிக்குங்காலமின்னவளவென்று அறியமாட்டிகோள். கெடுவிகாள்! மரணமன்றோ தோள்தீண்டியாக வந்து நிற்கிறது, க்ரமத்திலேசெய்கிறோமென்று ஆறியிருக்கலாமோ. இருக்கும் நாள் அந்யபரராய்க்கொண்டு உங்களுக்கு நன்மையைப்பார்த்திலிகோள், இனிமரணவேளையில்தானே மூக்கறல்லிகோள், நீங்கள் என்று நன்மைதேட விருக்கிறிகோள், இனி முடிந்துபோ மித்தனையாகாதே! யென்கிறார்.

(அறஞ்சுவராகிநின்ற) தர்மமே ப்ரக்ருதியாகநிற்கிறவர். "లోకా నాంత్వంపరోధర్మః" "రామోవిగ్రహవాన్ధర్మః" "కృష్ణంధర్మంసనాతనమ్" "லோகாநாம்த்வம்பரோதர்ம:" "ராமோவிக்ரஹவாந்தர்ம:" "க்ருஷ்ணம்தர்மம்ஸநாதநம்" என்கிறபடியே ஸித்ததர்மமாயிருக்கிற இருப்புப்ரக்ருதியிறே. "ఉపాయోపేయత్వేతదిహతవతత్వంనతుగుణౌ" "உபாயோபேயத்வேததிஹதவதத்வம்நதுகுணௌ" என்னக்கடவதிறே. (ஆகிநின்ற) உபாயாந்தரங்கள்போலே ஸாத்யமன்றிக்கேஸித்தமாய்க்கொண்டு சமைந்து நின்றவர். ஸாத்ய தர்மங்களுக்கு பலவேளையில்வந்தால் அவன்கைபார்த்திருக்கவேணும், அவன் றன்னைப்பற்றினார்க்குவேறொன்றை அபேக்ஷிக்கவேண்டாவே: இனி இவனுக்கு வேண்டுவது இவ்வரணிலொதுங்கோமென்னுமையாய்த்து. "ప్రాకారస్సర్వవృష్ణీనామ్" "ப்ராகாரஸ்ஸர்வவ்ருஷ்ணீநாம்" என்றதிலே ஒதுங்குவோமென்னுங் குறைவாளர்க்கு அரணாகச்சொல்லக்கடவதிறே. (நின்ற) "ఆశ్రయాయదివారామః" "ஆஶ்ரயாயதிவாராம:" என்கிறபடியே அவன் அவஸரப்ரதீக்ஷனாய் நிற்கிறபடி. (அரங்கனார்க்கு) விஷயம் தூரமென்னுங் குறையுமில்லைகிடீர். "நம்மைக்கொள்ளுவாரார்" என்று கிடக்கிறவராய்த்து. (ஆள்செய்யாதே) இவன்தலையிலநுஷ்டாநமில்லாதபின்பு பலத்திலே அந்வயிக்கு மித்தனையிறே. இவனுக்கு ஸ்வரூபப்ராப்தமான பலமாகச்சொல்லுகிறது அடிமையையிறே; இத்தையிறே இழந்து போந்தது.

---

ஓடும்-தட்டோடும், சாய்ந்து புரளும்போது அஶக்த்யாஹிதத்தையறிந்து அதுக்குடலாக ஒன்றைச்செய்யமாட்டிகோளென்று விவக்ஷித்து அர்த்தாந்தரம் (இருக்கும் நாளித்யாதி.) ஸாதநாநுஷ்டாந பூர்வகமன்றோ ஸாத்யஸித்தி, ஸாதநத்தையநுஷ்டியுங்கோளென்ன வேண்டாவோவென்ன; (இவன் தலையி லித்யாதி.) இத்தையிழந்துபோருகைக் கடி ஏதென்ன; பாரதந்த்ர்யத்துக்கு இசையாமையாலே என்றுபார்த்து அடிகண்டெழுந்திருக்கிறார் (இவனுக் கித்யாதி.)

இவனுக்கு ஓரிடத்திலும் பாரதந்த்ர்யம் தவிராது. கர்மபார ந்த்ர்யமாதல்; ஈஶ்வரபாரதந்த்ர்யமாதல். அதில் கர்மபாரதந்த்ர்யத் துக்கு இசைந்தான் - வாஸனையாலே; ஈஶ்வரபாரதந்த்ர்யத்துக் கிசைந்திலன் - பாபத்தாலே. (ஆட்செய்யாதே) "உண்ணாதே" என்றாப்போலே யிருக்கிறதாய்த்து இவர்க்கு.

(புறஞ்சுவர்கோலஞ்செய்து) "அஸந்நேவ ஸ பவதி" "அஸந்நேவ ஸபவதி" என்கிறபடியே ஆத்மஸ்வரூபம் அஸத்ஸமமாய்க்கிடக்க வந்தேறியான வுடம்பை யொப்பித்துத் திரிகிறீகோளிறே. ஆத்மா வை அலங்கரிக்கையாவது .- அடிமை செய்கையிறே. புத்தகங்களை யகவாய்ப் பெருச்சாளியறுத்துக்கிடக்கத் தெருவுபாட்டை நூலும் துரும்பும்வைத்து அலங்கரிக்குமாப்போலேயாய்த்து உடம்பைப் பேணுகை. (புள்கவ்வ) மாமஸ பக்ஷணம்பண்ணித் திரியக்கடவ பக்ஷிகளும்முந்துறகதவ்வி, பின்னை "கர்தக்நமாம்ஸம்" என்றுபொ கட்டுப்போம். (கிடக்கின்றீரோ) வகுத்த விஷயம் ஸந்நிஹிதமாயிரு க்க இங்ஙனேஅந்தரப்படுகிறீகோளே! என்று வெறுக்கிறார். பரா நர்த்தம் பொறுக்கமாட்டாமையாலே சொல்லுகிறார். * கோவை வாயாளில்படியே அவன் சாததும்படியான வுடம்புபடும்பாடே! என்று வெறுக்கிறார். இவர்கள் செத்துக்கிடக்கச் செய்தேயோ இவ்வார்த்தை சொல்லிற்றென்னில்; அங்ஙனன்று, இவர்கள் உண்டு உடுத்துத் திரியாநிற்கச் செய்தே "கிடக்கின்றீரோ" என்கிறார். "நேயமஸ்தி புரீலங்கா" "நேயமஸ்தி புரீலங்கா" என்று திருவடி சொல் லிற்று இராவணன் ஸிம்ஹாஸநஸ்தனா யிருக்கச் செய்தேயிறே. துர்யோதனாதிகள் பூசற்களத்திலே பட்டுக்கிடக்க அவர்களை ஸ்ரீ வேதவ்யாஸபகவான்கண்டு, "நான் சொல்லிற்றுச் செய்யாதே பட்டுக் கிடக்கிறீகோளே"! என்று வெறுத்தாப்போலேவெறுக்கிறா னென்றுமாம். ... ... ... ... ... ... (சு)

அ.—ஏழாம்பாட்டு. (புலை) "தொண்டுபூண்டமுதமுண்ணாத் தொழும்பர்" என்றும், "புள்கவ்வக்கிடக்கின்றீர்" என்றும், எங் களை நிந்திக்கிறதென், ஸம்ஸாரஸ்வபாவம்! இங்ஙனே யிருந்தது, "தண்டுழாய் மாலைமார்பன்" என்று ஆச்ரயணீயனாகச் சொன்ன வன் தூரஸ்தனானையாலே எங்களுக்குக் கிட்டவரிது, இன்னமும் ஆச்ரயிப்பார்க்கு விலக்கடிகள் பலவுமுண்டாயிருந்தது, அந்தத் தடையையு மறுத்து ஆச்ரயணீயனையுங் காட்டித் தாருமென்ன; இங்கேவந்தவதரித்து விரோதிநிரஸநஶீலனான தஶரதாத்மஜனை ஆச்ரயியுங்கோளென்கிறார்.

---

* நூலும் துரும்பும்வைத்து அலங்கரிக்கையாவது-காமன்பிட ற்றில் நூல்பிடித்துத்துரும்புபிடித்துக் காமன் வீடலங்கரிக்கை.()

புலையறமாகிநின்றபுத்தொடுசமணமெல்லாம
கலையறக்கற்றமாந்தர்காண்பரோகேட்பரோதான்
தலையறுப்புண்டுஞ்சாவேன்சத்தியங்காண்மினையா
சிலையினாலிலங்கைசெற்றதேவனேதேவனாவான். (எ)

ப-ரை.—கலை - ஸ்மிருதிஇதிஹாஸபுராணங்களை, அறக்கற்ற - நன்றாக அப்யஸித்த, மாந்தர் - கூரத்தாழ்வான்போல்வார், புலையறம் - நீசதர்மமாய், ஆகி - வைதிகதர்மத்துக்கு விருத்தமாய், நின்ற-பழையதாய்ப்போருகிற. புத்தொடு- பௌத்தமதத்தையும், சமணத்தோடு - க்ஷமணமதத்தையும், எல்லாம் - மற்ற மதங்களையும், காண்பரோ-நெஞ்சாலேதான் ஆராய்வார்களோ; அல்லது, கேட்பரோ - செவியாலேதான்கேட்பர்களோ; அது நிற்கப்ரத்யக்ஷத்திலே, தலை- என்தலையானது, அறுப்புண்டும் - அறுக்கப்பட்டாலும், சாகேன்-நான் சாகமாட்டேன்; ஐயா - ஸ்வாமிகளே, சத்தியம் - இந்தப்ரத்யக்ஷமானப்ரத்யயத்தை, காண்மின் - காணுங்கோள்; சிலையினால் - வில்லினாலே, இலங்கை- லங்கையை, செற்றதேவனே - ஜயிக்கையால்வந்த தேஜஸ்ஸை யுடையவனே; தேவனாவான் - ஆச்ரயணீயனாவான். (எ)

வ்யா.—(புலையறமாகிநின்ற புத்தொடுசமணமெல்லாம்) சதுர்விதமான பௌத்தர் க்ஷமணர்முதலானவை யெல்லாம். புலையறம் - நீசதர்மம். அதாகிறது - ஜ்ஞாந விஷயமான பதார்த்தங்களும் ஜ்ஞாநமுமேயுள்ளது, இதில் ப்ரமாணம் ப்ரத்யக்ஷமும்அநுமாநமுமே என்பாரும், பதார்த்தங்கள் அநுமேயங்கள்ஜ்ஞாநமேயுள்ளதென்பாரும், அநுமேயமாயும் பதார்த்தங்களில்லை கேவல ஜ்ஞாநமேயுள்ளதென்பாரும், அந்தஜ்ஞாநமுமில்லை ஸர்வம்ஶூந்யம் என்பாரும், ஸர்வத்தையும் ஶூந்ய மென்னலாமோ, ஜகத்து கார்ய காரண ரூபத்தாலே நித்யமாயும், அநித்யமாயும், பிந்நமாயும், அபிந்நமாயும், ஸத்யமாயும், அஸத்யமாயும், இப்படி அநேகமென்பாரும்; ஆக இப்படி சொல்லுகிற நீசதர்மம். (ஆகிநின்ற) நெல்லுக்குக்களைபோலே வைதிகதர்மத்துக்கு விருத்தமாய்ப் பழையதாய்ப்போருமென்கை. "எல்லாம்"என்றது-ஸாங்க்யன், வைஶேஷிகன், பசுபதிமதம் முதலானவை. இவைநீசதர்மமானபடியெங்ஙனேயென்னில்; - ஈஶ்வர விபூதியிலே ஒருவனை ஹிம்ஸித்தார்க்குச்சொல்லுகிற பாபங்களுக்கு அவதியில்லை, ஈஶ்வரனையும், ஈஶ்வரவிபூதியையும், அஜ்ஞாநவாஸியாலே அழிக்கப்பார்க்கிறவர்களிறே; அகண்டகண்டநப்ரவர்த்தரிறேயடங்க.

(கலையறக்கற்றமாந்தர்) ஶ்ருதிஸ்மிருதிஇதிஹாஸங்களில் நிலைநின்றவர்களாய் வேததாத்பர்யம் கைப்பட்டவர்கள். அவர்களாகிறார் - கூரத்தாழ்வான் போல்வாரிறே. (காண்பரோ கேட்பரோதான்) இவற்றை நெஞ்சாலே ஆராய்தல்,செவியாலே கேட்குதல் செய்வர்களோ.

ஆழ்வான், இஷ்டஸித்தி வாசிக்கிறவர்களோடேயிருந்து தாழ்த்துவர ஆழ்வானுக்குச் சொன்ன வார்த்தையை அநுஸந்திப்பது. பாஹ்யகுத்ர்ஷ்டிகள் ஸத்தயா அஸஹ்ய மாகையும், பகவத்விஷயம் ஸத்தயாதாரகமாயிருக்கையுமிறே தர்மநிஷ்டையாவது. (தலையறுப்புண்டுஞ் சாகேன் சத்தியங்காண்மின்) நிர்த்தோஷ ஶ்ருதிப்ரமாணமென் றிருக்குமளவில்லாதார்க்கு மிதுவே ஆஶ்ரயணீய வஸ்துவென்னுமிடம். ப்ரத்யக்ஷத்தாலே ஸாதிக்கிறேன், அத்தைக்காணுங்கோள். மழுவைக்காய்ச்சிக்கையிலே இட்டால் அக்நி தன்கார்யம் செய்யமாட்டாதொழிகிறது அர்த்தத்தினுடைய ஸத்யதையாலேயிறே; அப்படியே என்னுடைய ஶிரச்சேதத்தைப் பண்ணினால் அதின் கார்யமான மரணமின்றிக்கேயிருந்ததாகில் தசரதாத்மஜனே ஆஶ்ரயணீயனென் றிருங்கோள். "ధర్మాత్మా సత్యసన్ధశ్చ" "தர்மாத்மா ஸத்யஸந்தஶ்ச" என்கிற ப்ரதிஜ்ஞையாலே, வரபலத்தாலே அறுக்கக்கடவதல்லாததலை யறுக்கக் கண்டோமிறே; அப்படியே அற்றதலையின் கார்யமான மரணம்பிறவாதபடியிறே இவர் ப்ரதிஜ்ஞை. தலையறுக்கச் செய்தேயும் மரணமின்றிக்கே யொழியக்கூடுமோ வென்னில்; (சத்தியங்காண்மின்) ப்ரத்யக்ஷிக்கப் புகுகிறவற்றிலே ஸம்ஶயிக்கிறதென், நான் பண்ணுகிற ஶபதத்தைக் காணுங்கோள்.

(ஐயா) அவர்கள் இர்ஷ்யாதேகாண்கைக்காக இரக்கிறார். நீர் இனி ப்ரத்யயம்பண்ணவேண்டா, பண்ணின ப்ரதிஜ்ஞையே அமையும், ஆஶ்ரயணீயன் இன்னானென்று சொல்லலாகாதோ வென்ன; (சிலையினாலிலங்கைசெற்ற தேவனே தேவனாவான்) வரங்கொடுத்த தேவதைகள் தரம் குலையாமே சக்ரவர்த்தித் திருமகனாய்வந்தவதரித்து, கையில்வில்லாலே லங்கையை அழியச செய்தவனே ஆஶ்ரயணீயன்.

---

ஏழாம்பாட்டு.— (புலையிதயாதி) இஷ்ட ஸித்தி யென்றது- ஸாங்க்ய வாசஸ்பதி என்று பேரானஸாங்க்ய ஶாஸ்த்ரம். ஆழ்வானுக்குச் சொன்னவார்த்தையாவது - இத்தனை போது தாழ்த்ததென்னென்ன; இவ்வர்த்தாந்தத்தை யருளிச்செயய; "கலைஅறக் கற்றமாந்தர்காண்பரேர் கேட்பரோ" என்றருளிசசெய்து புநஸ்ஸ்நாநம்பண்ணுவித்தருளி ஸ்ரீபாததூளியு மிடுவித் தருளினாராம். "தலையறுப்புண்டுஞ் சாவேன்" என்றது - ப்ரதிஜ்ஞாமாத்ரமொழிய சாவாதிருக்கக் கூடுமோவென்ன (மழுவையித்யாதி.) அர்த்தத்தினுடைய ஸத்யதையாலே ப்ரதிஜ்ஞை கார்யகரமாமென்னுமதுக்கு உதாஹாரம் "ధర్మా - தர்மாத்மா" இத்யாதிஶ்லோகம், இந்த்ரஜித்வதஸமயத்தில் இளையபெருமாளுடைய்ப்ரதிஜ்ஞை. ... ... ... ... ... (எ)

தேவதைகள் தங்களளவறியாதே ராவணனுக்கு வரங்கொடுத்து, பின்னை தங்கள்குடியிருப்பிழக்கும்படி அவனாலே நெருக்குண்டு போக்கற்றவளவிலே திருவடிகளிலே வந்து விழுவர்கள், அதுக்குப்போக்கடிசெய்கை ஈஶ்வரனுக்கே பரமிறே. ப்ரஹ்மாதிகள் வரபலத்தாலே பூண்கட்டினலங்கையை ஸங்கல்பத்தாலன்றியேகையில்வில்லாலே யழியச்செய்தவனே உங்கள்விரோதியையும்போக்கி ரக்ஷிக்குமென்கை. (தேவனே) ராவணவதஸமநந்தரத்தில் கையும்வில்லுமாய்நின்றபோதை வீரஸ்ரீயால்வந்த புகரையுடையவனே ஆஶ்ரயணீயனாவான். ... ... ... ... ... (எ)

அ.—எட்டாம்பாட்டு. (வெறுப்பு) இப்படி வைதிகமர்யாதைகளிலே நின்ற தசரதாத்மஜனே ஆஶ்ரயணீயனென்று சொன்னவிடத்தில், அங்குத்தை குத்ருஷ்டிகளை புத்திபண்ணி ஆஶ்ரயியாதே, ஸம்ஸாரிகள் விக்தராயிருந்தபடியைக்கண்டு, இதுக்கடி பாஹ்யதர்ஶநருசிகளாகையிறே; ஆனபின்பு இவர்கள் வத்யரென்று பெரிய பெருமாளைக்குறித்து அருளிச்செய்கிறார்.

வெறுப்பொடுசமணர்முண்டர்விதியில்சாக்கியர்கள்நின்பால்
பொறுப்பரியனகள்பேசில்போவதேநோயதாகிக்
குறிப்பெனக்கடையுமாகில்கூடுமேல்தலையையாங்கே
அறுப்பதேகருமங்கண்டாயரங்கமாநகருளானே. (அ)

ப-ரை.—அரங்கமாநகருளானே - ஆச்ரிதவிரோதிநிரஸநார்த்தமாகக்கோயிலிலே வந்து கண்வளாநிற்குமவனே; வெறுப்பொடு-பகவத்விஷயத்தைக் கேட்கப்பொறாதே வெறுத்துப்போகிற, சமணர் - க்ஷமணர்களும், முண்டர்-சைவர்களும், விதியில் - பகவத்ஸமாச்ரயணம்பண்ணி அநுபவிக்கபாக்யமில்லாத, சாக்கியர்கள்-பௌத்தரும், நின்பால் - ஸர்வஸ்மாத்பரனானவுன்விஷயத்திலே, பொறுப்பரியனகள - பொறுக்கவரியனவாயிருப்பனசிலவற்றை, பேசில்-சொல்லுவார்களாகில், ஸாதவிகன், அதுவே-அவன்நிந்தையே, நோயதாகி-நோயாகி, போவது-முடிந்துபோவான்; அங்ஙனன்றிக்கே, எதிரிகள் நசிக்கும்படி, எனக்கு,—குறிப்பு அடையுமாகில்-இலக்குவாய்த்து, கூடுமேல்-என்கையில் சிக்கும்படி எனக்கு சக்தியுமுண்டானால், ஆங்கே-பகவந்நிந்தைபண்ணினவிடந்தன்னிலே, தலையையறுப்பதே-அவன்தலையையறுத்துத்தள்ளுகையே, கருமம்கண்டாய் - கர்த்தவ்யங்கிடாயெனகிறார். (அ)

வ்யா.—(வெறுப்பொடுசமணர்முண்டர்) அர்த்தகாமநியந்தனமாகவன்றிக்கே நிர்ணிபந்தனமாக பகவத்துக்சர்ஷங்கேட்டவாறே சிவீலென்றிருப்பர்கள். வேதப்ரதிபாத்யதயாவரும் பகவதுத்கர்ஷமும், தத்ஸமாராதநார்த்தகமான ஜ்யோதிஷ்டோமாதிஹிம்ஸையும், அமணர்க்கும் சைவர்க்கும் அஸஹ்யம். திருநாளிலெழுந்தருளாநின்றால் நான்றுகொள்வாரும், "கொம்பூதிற்று" என்று முட்டிக்கொள்வாருமாயிறேமுண்டரிருப்பது. முண்டர்என்கிறது-சைவரை.

"முண்டன்நீறன்" என்கிறபடியே அவனுடையவடிவையிறே இவர்களும் தரித்திருப்பது. சமணராகிற முண்டரென்னவுமாம். (விதியில்சாக்கியர்கள்) பகவதுத்கர்ஷத்தையறிந்து தத்ஸமாஶ்ரயணத்தைப்பண்ணி அநுபவிக்கைக்கீடானபாக்யமில்லாதபௌத்தர்.

: (நின்பால்பொறுப்பரியனகள்பேசில்) ஸர்வஸ்மாத்பரனாய் குணாதிகனான உன்பக்கலிலே பொறுக்கவரியனவாயிருப்பனசிலவற்றைச் சொல்லுவார்களாகில். ஈஶ்வரஸத்பாவத்தையும் தத்விபூதிஸத்பாவத்தையும் இல்லைசெய்வாரும், ஒருக்ஷேத்ர ஜ்ஞனை பாதேவதை யென்பாருமானால், வைதிகர்க்குப் பொறுக்கப்போகாதிறே. அவர்கள் சொல்லும் பாசுரம் தம்வாயால் சொல்ல மாட்டாமையாலே"பொறுப்பரியனகள்"என்கிறார்."தான்நீங்குறினைந்த"என்றும், "அன்றின்னாதனசெய் சிசுபாலன்" என்றுமிறே இவர்கள் வார்த்தை யிருப்பது. "பேசில்" என்றது-செவிகேட்கச் சொல்லுவர்களாகி லென்றபடி. மஹாபலி, ஸ்ரீப்ரஹ்லாதாழ்வான் பக்கலிலேசென்று"எனக்கு ராஜ்யஶ்ரீகுறைந்து வாராநின்றது இதுக்கு அடியென்" என்று கேட்க;"அஸுரர்களுக்காக தேவர்களை நெருக்கினாய்,அவர்கள் க்ஷீராப்தியிலே சென்று ஆசரயிக்க அவர்கள் விஜயார்த்தமாக அதிதிவயிற்றிலே புகுந்தருளினான், உன்ஐஶ்வர்யம் முடிந்ததுகாண்" என்ன;அவன் பகவந்நிந்தையைப் பண்ண;செவி புதைத்துக்கொண்டு "கெடுவாய்!என்முன்னேபகவந்நிந்தையைப் பண்ணினாய், என் தலையை யறுத்தாயாகில்எனக்கு உபகரித்தாயாயிற்று, நீயிப்படி சொன்னதுக்காக ராஜ்யப்ரஷ்டனாவாய்" என்று சபித்தான். "விரக்தனானவன் ராஜ்யத்தை யொன்றாக நினைத்து இப்படி ஶபிப்பானேன்" என்று நஞ்சீயர் பட்டரைக்கேட்க; "நாயைதண்டிக்கை யாகிறது அது தின்கிறஅமேத்யத்தை விலக்குகையன்றோ" என்றருளிச்செய்தார்.ராஜகுமாரனை தண்டிக்கையாவது - சாந்தியும் வெற்றிலையையும் விலக்குகையிறே.(போவதே நோயதாகி) திருநறையூரரையரைப்போலே ஸத்வப்ரசுரனாயிருந்தானாகில் அவன் நிந்தையே நோயாக முடிந்துபோவது.

எட்டாம்பாட்டு.—(வெறுப்பித்யாதி) "பேசில்"என்ற யதிரூப்தத்துக்கு-பேசார்களென்று அந்யதாப்ரதிபாதந முண்டாகையாலே அத்தை வ்யாவர்த்திக்கைக்காகவருளிச்செய்கிறார்(பேசிலென்றதுசெவிகேட்கச்சொல்லுவர்களாகிலென்றபடியென்று.) "பொறுப்பறியனகள்" என்று-பகவந்நிந்தை. அது அஸஹ்யமென்னுமதுக்கு உதாஹரணம் (மஹாபலீத்யாதி.) போவதே நோயதாகி-அதுவே நோயாகிப் போவது என்றந்வயத்தை விவக்ஷித்து (திருநறையூரரையரித்யாதி.)

அதவா-கேட்டார் பொறுக்க மாட்டாதபடி அஶக்தனாயிருந் தானாகில் அவர்கள்முகத்திலே விழியாதே போவதென்றுமாம். "గురోర్యత్రపరీవాదో నిన్దావాపిప్రవర్తతే। 'కర్ణౌతత్రపిధాతవ్యౌ గన్తవ్యంవా తతోన్యతః'' "குரோர்யத்ரபரீவாதோ நிந்தாவாபி ப்ரவர்த்ததே। கர்ணௌதத்ரபிதாதவ்யௌகந்தவ்யம்வாத தோந்யதஃ."

(குறிப்பெனக்கடையுமாகில்) அங்ஙனன்றிக்கே எதிரி நஶிக்கும்படி இலக்குவாய்க்குமாகில். குறித்தல் - நினைத்தலும் கருத்திலது கிட்டலும். (கூடுமேல்)தான் அவன்கையிலேயகப்படாதபடி யெதிரியை நிரஸித்துத் தப்பவல்லஶக்தியோகமுண்டாகில்.(தலையை யாங்கே அறுப்பதே கருமம்) பகவந்நிந்தை பண்ணின விடந்தன்னிலே தலையை யறுக்கையிறேகர்த்தவ்யம். கருமம் என்றது-அவன்கார்யமென்னவுமாம்; ஸ்வகார்யமென்னவுமாம். பின்னை அவன் நிந்தைபண்ணக் கேளாதொழியலாம், பகவந் நிந்தை பண்ணிஅவன் தனக்கநர்த்தத்தை விளைதுக் கொள்ளா தொழியலாம். * அக்நீஷோமீய ஹிம்ஸையில் யஜமாநனுக்கும் பசுவுக்கும் ஸ்வர்க்க ஸித்தியுண்டாகச் சொல்லாநின்றதிறே. (கண்டாய்) ஸ்ரீதண்டகாரண்யத்தில் ரிஷிகளுக்கு விரோதியான ராவணாதிகளை யழியச்செய்ததேவரீர்க்கிறேஇதுசொன்னாலேறுவது. (அரங்கமாநகருளானே) கோயிலில் வந்து கண்வளர்ந்தருளுகிறது அவதாரத்தில் பிற்பாடரானவருடைய விரோதிகளைப் போககுகைக்காக வன்றோ வென்கிறார். ஆந்ருஶம்ஸ்யப்ரதாநராய பரமசாந்தரான இவ்வாழ்வார்"வதமாம்"என்றுவிதிப்பானென்னென்னில்;"న హింస్యాత్స‌ర్వ- భూతాని" "நஹிம்ஸ்யாத் - பூதாநி" என்கிறதன்றே, அக்நீஷோமீயஹிம்ஸைபோலே யிருப்பதொன்றிறே இது. பகவந்நிந்தை பண்ணுவார்க்கும், பகவதஸாதாரணரா யிருப்பாரக்கும், பாத்ய பாதக ஸம்பந்தமே யுள்ளது."எண்ணாத மானிடத்தை யெண்ணாத போதெல்லாம் இனியவாறே" என்னக்கடவதிறே. • ... ...(அ)

---

கேட்டார் பொறுக்கப்போகாதபடி யென்றது - பொறுக்கபோகாதபடியானவற்றைக்கேட்டாரென்றபடி.கருத்தில் காட்டில இலகு."கருமம்"என்றதுக்கு-கர்த்தவ்யமென்றுமுந்தினவர்த்தம். கார்யமென்றதிலே அர்ததத்வயம்.கார்யம் என்ற பக்ஷத்தில் அர்த தத்வயத்துக்கும் ஸம்வாதம் (அக்நீஷோமீயேத்யாதி.) இவருடைய ஆந்ருஶம்ஸ்ய ஸ்வபாவத்துக்குச் சேராமையே யன்று ப்ரமாண விருத்தமுமென்கிறார் (நஹிம்ஸ்யாதித்யாதி.)(என்னாநின்றதிறே)என்றுவநந்தரம் இரண்டுக்கும் சேரும்படி எனனென்னிலென்று ஶங்கையைப் பூரிப்பது. இவ்விரண்டுக்கும் வ்யுத்க்ரமேண பரிஹாரமருளிச்செய்கிறார் (அக்நீஷோமீயேத்யாதி வாக்யத்வயத்தாலே.)பாத்ய பாதகஸம்பந்த முண்டென்னுமதுக்கு ப்ரமாணம் (எண்ணாதமானிடத்தை யித்யாதி.) .... ... ...(அ)

அ.—ஒன்பதாம்பாட்டு. (மற்றுமோர்) அவர்கள்ப்ரஷ்டர்களைக்கண்டு இதர தர்சநருசியால் ஆச்ரயியாதிருந்தோமல்லோம்; தசரதாத்மஜனையிறே ஆச்ரயிக்கச்சொல்லிற்று. அவனுகிறான் தூரஸ்தனும் தடையுமாய் எங்களுக்குக் கிட்டவொண்ணுதா யிருப்பானொருத்தன், கிட்டினுலும் வஸிஷ்டாதிகள் அருகேயிருந்து அயோக்யரோ யோக்யரோ வென்னுநிற்பர்கள், ஆகையாலே பராவஸ்தையோடு ராமாவதாரத்தோடு வாசியில்லை, எங்களயோக்யதைபாராதாநொருத்தன் ஆச்ரயணீயனுகவேணும், அவனைக்காட்டித் தாரீர் என்ன; ஆகில்யோக்யதாயோக்யதைபாராதே தானேமேல்விழுந்து விஷயீகரிக்கும்க்ர்ஷ்ணனை ஆச்ரயியுங்கோளென்கிறர்.

மற்றுமோர்தெய்வமுண்டேமதியிலாமானிடங்காள் !
உற்றபோதன்றிநீங்களொருவனென்றுணரமாட்டீர்;
அற்றமேலொன்றறியீரவனையல்லால்தெய்வமில்லை;
கற்றினமேய்த்தவெந்தைகழலிணைபணிமினீரே. (௯)

ப-ரை.—மதியிலா - வேதாந்தஜ்ஞானமில்லாத, மானிடங்காள் - மநுஷ்யர்களே, மற்றும் - நான்சொல்லுகிறவனையொழிய, ஓர்தெய்வம் - வேறேயொருபரதேவதை, உண்டே - உண்டோ; உற்றபோதன்றி - உங்களுக்கு ஆச்ரயணீயரான தேவதைகள் ராவணாதிகள்கையிலகப்பட்டுநெருக்குண்ணும்போதல்லது, ஒருவனென்று-ஸர்வாதிகன ஒருவனுளனென்று, உணரமாட்டீர்-நீங்கள் அறியப்போகிறதில்லை; அற்றம - உள்ளுண்டானபொருளை, ஒன்று-ஏகதேசமும், அறியீர் - அறியமாட்டீர்கள்; அவனையல்லால் - அவனையொழிய, தெய்வம் - ஆச்ரயணீயதேவதை, இலலை - வேறே இல்லை; ஆதலால், நீர் - நீங்கள், கற்றினம்மேய்த்த - கன்றுகதிரளைமேய்த்தவனும், எந்தை - நமக்கு ஸ்வாமியான கர்ஷ்ணனுடைய, இணை - ஒன்றுகொன்றொப்பான, கழல் - திருவடிகளை, பணிமின் - ஆச்ரயியுங்கோள். (௯)

வ்யா.—(மற்றுமோர் தெய்வமுண்டே) நான் சொல்லுகிற இவனை யொழிய வேறேயொரு ஆச்ரயணீய தத்த்வமுண்டே. "ஈஶ்வரோஹம்" என்றிருப்பாருண்டானுலும ஆச்ரயணீயனுமாய் ப்ராப்தனுமாயிருப்பான் வேறொருவனில்லை. "ஏऽப்யந்யதேவதாபக்தா:" "யேப்யந்யதேவதாபக்தா:" என்று அந்யராகவிறே இவன் சொல்லும்போதுஞ் சொல்லுவது. (ஓர்தெய்வம்) கட்டைகுடியனுச் சிறிதுபோதைக்குப்போலியாய் நின்று பின்னைவிவேகித்தால் கழிக்கலாவதொன்றுமில்லை. (உண்டே) இவனோடு ஸமாநராயிருப்பாருண்டோவென்று கேட்கிறுரல்லர். கிம் - க்ஷேபார்த்தமாதல்.

---

ஒன்பதாம்பாட்டு.—(மற்றித்யாதி) "உண்டே" என்கிறதென், அவர்கள் தங்களை ஆஶ்ரயணீயராக நினைத்திருக்கிறுர்களேயென்ன; (ஈஶ்வரோஹமித்யாதி.) "மற்று" என்று பிரியச்சொன்னதுக்கு ப்ரமாணம் (ஏऽப்யந்ய-யேப்யந்யேத்யாதி.)

“ஏழுலகுமீபாவஞ்செய்து அருளாலளிப்பாரார்” என்றால், “அவ னென்று எதிரிகளுக்கு உத்தரமாம்படிஸம்ப்ரஸித்தமான அர்த்த மென்னிறாதல்; ஸம்ப்ரதிபந்நமான வர்த்தத்தை யொருவராலு மிசையாதொழிய வொண்ணாதிறே. (மதியிலாமானிடங்காள்) “ஶ்ரீ ஶோபூஸஹஸ்ராணாம்ஸ்த்ருணம் ... ” “த்ரீணிஶதாத்ரீஸஹ ஸ்ராண்யக்நிம்த்ரிம்ஶச்ச தேவாநவசாஸபர்யந்” என்கிறபடியே ஆராத்யரநேகரொன்னுமிடம் ஶ்ருதிஸித்தமன்றோவென்ன; வே தாந்த ஜ்ஞாநமில்லாதார் பாக்யஹீநரிறே. “... ” “...” “...” “சது ர்ஹோதாரோயத்ரஸம்பதம் கச்சந்திதேவைஃ” “அஹம்ஹிஸர்வ யஜ்ஞாநாம்போக்தா” “யேயஜந்திபித்ருந்தேவாந்” என்கிறஶ்ருதி ஸ்ம்ருதிகளில்ஜ்ஞாநமில்லாதாரிறே. அறிவுக்கு யோக்யதையுள்ளஜந் மத்திலே ஜநித்து அறிவின்றிக்கேயிருக்கிற பாக்யஹீநர்காள். “ஆன் விடையேழன்றடர்த்தார்க்காளானாரல்லாதார்மானிடவரல்லரென் றென்மனத்தேவைத்தேனே” என்றும், “செங்கண்மால் நாமம்மறந் தாரைமானிடமாவையேன்” என்றும், “...” “அஸந்நேவ ஸபவதி” என்றும் சொல்லக்கடவதிறே. “...” “தத்ஜ்ஞாநமஜ்ஞாநமதோந்யதுக்தம்” என்றும், “ஒண்டாமரையா ள்கேள்வனொருவனையே நோக்குமுணர்வு” என்றும்-வகுத்தவிஷய த்தில் ஜ்ஞாநமேஜ்ஞாநமாவது; அல்லாதவை - அஜ்ஞாநஸமாநம். “...” “வித்யாந்யாஶில்பநைபுணம்.” செருப்புக் குத்தக்கற்ற ஜ்ஞாநத்தோபாதியிறே இதரஜ்ஞாநங்கள்.

எங்களுக்கு அறிவில்லையாகில் அறிந்த நீர் அருளிச்செய்ய மாட்டீரோ வென்ன; (உற்றபோதன்றிநீங்களொருவனென்றுணர மாட்டீர்) நான்சொன்னாலும் ப்ரளயம்வந்து கிட்டினபோது ஆஶ்ர யணீயரான தேவதைகளும் நீங்களும் ஒருபுகுவாசல் தேடித்திரியு மன்றல்லது ஸர்வாதிகனொருவ னுளனென்று உங்கள்நெஞ்சில் படமாட்டாது.

---

“ஏழுலகும்” என்றவாக்யவிவரணம் (அவனென்றித்யாதி.) உக்தவிவரணம் (... - சதுர்ஹோதாரஇத்யாதி.) மானிடங் களாயிருந்துவைத்து மதியில்லாதே யிருக்கிறிகோளென்றருளிச் செய்து, மதியில்லாதே யிருக்கவும் மானிடங்களாயிருக்கிறிகோ ளென்று க்ஷேபமாகவிவக்ஷித்து, அப்படிபகவத்ஜ்ஞாநமில்லாத துகொண்டு மநுஷ்யரல்லரென்றுசொன்னபே ருண்டோவென்ன; (ஆன்விடையேழித்யாதி.) “மதியிலா” என்கிற ஸாமாந்யஶப்தம் ப்ரஹ்மவிஷயஜ்ஞாநாபாவத்தைக்காட்டுமோவென்ன; அருளிச் செய்கிறார் (... -தத்ஜ்ஞாநமித்யாதி.)

உங்களுக்கு ஆஶ்ரயணீயரான தேவதைகள், ராவணாதிகள் கையிலே நெருக்குண்டு கூப்பிடுமன்றிறே ரக்ஷகனொருவனுண்டென்று உங்கள் நெஞ்சிலே படுவதென்றுமாம். (ஒருவனென்றுணரமாட்டீர்) தேவதாந்தரங்களை ஆராதிக்கிற நீங்கள் ஆபத்தசைகளை யொழிந்தபோது அவர்களோபாதி இவனும் ஒருவனென்று புத்திபண்ண மாட்டிகோள். அபுநராவ்ர்த்தி லக்ஷணமோக்ஷத்தைத் தருமிவன்பக்கல் க்ஷுத்ரபலப்ரதரான தேவதைகள்பக்கல் பண்ணின ஆதரமுமின்றிக்கேயிருக்கிறதிறே ஸம்ஸாரிகள் மதிகேடு.

(அற்றமேலொன்றறியீர) அற்றம் - மறைபொருள். அறியாமைக்கடி அபிதாநவ்ர்த்திக்கு மேல்பட தாத்பர்யவ்ர்த்தி யறிகிலீகோள். "వచసాంవాచ్యముత్తమమ్" "వేదైశ్చసర్వైరహమేవవేద్యః" "నారాయణ పరావేదాః" "வசஸாம்வாச்யமுத்தமம்" "வேதைஶ்சஸர்வைரஹமேவவேத்ய:" "நாராயணபராவேதா:" என்னக்கடவதிறே. (அவனையல்லால் தெய்வமில்லை) அவனையொழிந்த தேவதைகளுடைய ஸத்பாவத்தை யில்லையென்கிறாரல்லர், ஈஶ்வரனுக்கு ப்ரகாரமாய்க்கொண்டு அத்தேவதைகளுமுளர், ஆஶ்ரயணீய ரில்லையென்கிறார். "அவனை" என்றுகொண்டு - மேலசொல்லுகிற க்ர்ஷ்ணனை நினைக்கிறார்.

"அவனை" என்று நீரருளிச்செய்கிறவனை இன்னானென்று விஶேஷியீர், நாங்களாஶ்ரயிக்கவென்ன; (கற்றினம் மேய்த்தவெந்தை கழலிணைபணிமினீரோ) என்கிறார். "க்ர்ஷ்ணன்" என்னாதே "கற்றினம்மேய்த்த" என்றது - தேவதாந்தரங்களைப்போலே துராராதனன்றிக்கே ஸர்வஸுலபனென்கைக்காக. பசுமேய்க்கை, * அயர்வறுமமரர்களதிபதியா யிருந்தத்தோடொக்கும்; கன்று மேய்க்கையிலே யாய்த்தது திருவுள்ள முகந்திருப்பது. ஸ்வரக்ஷணத்தில் குறைய நின்றார் பக்கலிலே யிறே திருவுள்ளம் மண்டியிருப்பது. "திவததிலும பசுநிரை மேயப்புவத்தி" என்கிறபடியே - பசுமேய்க்கையில் உகப்பு; கன்றுகளை மேய்க்குமிடத்தில் இனிதுகந்திருக்கும். கற்று - கன்று. (எந்தை.) நானகப்பட்ட துறையிலே நீங்களுமகப்படப்பாருங்கோள் (கழலிணைபணிமினீரோ) அச்செயலுக்குத்தோற்று "గుణైర్దాస్యముపాగతః" "குணைர்த்தாஸ்யமுபாகத:" என்கிறபடியே நான் அவன் திருவடிகளிலே விழுந்தேன, நீங்களுமப்படியே ஆஶ்ரயியுங்கோள்.

---

"கற்றினம்மேய்த்த" என்றதுக்குமேலே ஓர்த்தஶிக்ஷைபண்ணுவாராக, "கன்றுமேய்த்தினிதுகந்த" என்றவிடத்தை உட்கொண்டருளிச்செய்கிறார் (கன்றுமேய்க்கையிலேயித்யாதி.)

தான் சிறியனாய் நின்ற நிலையிலே தன்னை யாஸ்ரயித்தாரைப் பொறுப்பிக்குமவனை ஆஸ்ரயியுங்கோள். யயாதி இந்த்ரனோடே ஏகாஸநத்தி லிருந்தவளவிலே, கர்மபூமியிலே புண்யகர்த்துக்களாய்ப் போருவாராரோவென்ன; அஸத்யஞ் சொல்லலாகாதென்னும் நினைவாலே நான்வர்த்திக்கிற நாளிலே என்னைச் சொல்லுவார்களென்ன; ஏகாஸநத்திலிருந்தது பொறாமையாலே ஆத்மப்ரஸம்ஸை பண்ணினாயென்று, "த்வம்ஸ" "த்வம்ஸ" என்று தலைகீழ்ப்படத் தள்ளினானென்று உண்டாயிருந்தது; வேதோபப்ர்ஹ்மணார்த்தமாக ப்ரவ்ர்த்தமான மஹாபாரதத்தில் இதுஎன்ன வேதார்த்தஞ் சொல்லுகிறதென்று குறைப்பட்டிருக்குமென்ன; அவனே ஆஸ்ரயணீயனென்னு மிவ்வர்த்தஞ் சொல்லுகிறதென்றருளிச்செய்தார். ... ... ... ... ... (கூ)

அ.—பத்தாம்பாட்டு. (நாட்டினான்) "தண்டுழாய் மாலைமார்பன்" என்கிற தேஸவிப்ரகர்ஷம் தீர ராமாவதாரத்தை யருளிச்செய்தீர், அநந்தரம் அதிலும் ஸுலபமான க்ர்ஷ்ணாவதாரத்தை யருளிச்செய்தீர், ராமாவதாரத்தோடு க்ர்ஷ்ணாவதாரத்தோடு வாசியென் இரண்டுக்கும் பிற்பாடரான வெங்களுக்கென்ன; தேஸகாலத்தால் வந்தகுறைதீரக் கோயிலிலேவந்து பெரியபெருமாளாய்க் கண்வளர்ந் தருளுகிறார், அங்கே ஆஸ்ரயியுங்கோள், அவனையொழிய மோக்ஷார்த்தமாக வொருதேவதைகளை ஆச்ரயிக்கையாவது - அஸ்ரீவாசலிலே ஐஸ்வர்யம் வேண்டி யிருப்பாரோ பாதிகிடிகோளென்கிறார்.

நாட்டினான்தெய்வமெங்குநல்லதோரருள்தன்னாலே
காட்டினான்திருவரங்கமுய்பவர்க்குய்யும்வண்ணம்
கேட்டிரோநம்பிமீர்காள்கெருடவாகநனுநிற்கச்
சேட்டைதன்மடியகத்துச்செல்வம்பார்த்திருக்கின்றீரே.(கo)

ப-ரை.—ரஜஸ்தமப்ப்ரசுரர்களுக்கு, எங்கும்-எல்லாவிடங்களிலும், தெய்வம் - ஐயன்பிடாரி முதலான தாமஸதேவதைகளை, நாட்டினான் - நிலைநிறுத்தினான் ; உய்பவர்க்கு - உஜ்ஜீவநாபேக்ஷை யுள்ளவர்களுக்கு, நல்லது-

---

"கற்றினம்மேய்த்த" என்றதுக்குதாத்பர்யாந்தரம் (தான்சிறியனானவித்யாதி.) தன்னைஆஸ்ரயித்தாரைப்பொறுக்கைக்கு ஸம்வாதம் (யயாதீத்யாதி.) என்ன வேதார்த்தஞ் சொல்லுகிறதென்று கேட்க; ஸர்வேச்வரனையொழிந்ததேவதைதங்களை ஆஸ்ரயித்துப் பெற்றாலும் அத்தை இத்தைச்சொல்லித் தள்ளிவிடுவர்கள், ஸர்வேஸ்வரனொருவனுமே தன்னையாஸ்ரயித்தவர்களுக்கு எல்லாம் கொடுத்தாலும் "ஒன்றுங்கொடுத்திலோம்" என்று குறைப்பட்டிருக்குமென்று இவ்வளவுங்கூட்டி நிர்வஹிப்பது ... (கூ)

விலக்ஷணமாய், ஓர்-அத்விதீயமான, அருள்தன்னாலே-க்ருபையினாலே, திருவரங்கம்காட்டினான் - கோயிலைக்காட்டி யருளினான்; நம்பீர்காள் - பரிபூர்ணராயிருப்பவர்களே, கேட்டீரோ - இவ்வர்த்தத்தைக்கேட்டீகோளே; கெருடவாகனன்நிற்க - பெரியதிருவடியை வாஹனமாகவுடையவன் இருக்கச்செய்தே, சேட்டைதன்மடியகத்து - மூதேவியின் மடியிலுண்டான, செல்வம்பார்த்திருக்கின்றீரோ - தனம்வாங்கவிருக்கிறீர்களே யென்கிறார். (௧௦)

வ்யா.—(நாட்டினான்) ஸத்வப்ரசுரராய்த் தன்னைப் பற்றுமவளவுடையவரன்றிக்கே யிருக்கும் ரஜஸ்தமப்ரசுரர்க்கும் தேவதைகளை நாட்டினான். அதுக்கடி தன்னரசுபோலே ஸ்வதந்த்ரராய் மூலையடியே திரியப்புக்கவாறே, ஸ்வஸ்வகுணாநுகூலமாக தேவதைகளை ஆஶ்ரயித்து, பின்னை சேதநரிறே நம்வாசியறிந்து நம்மைப்பற்றுகிறார்களென்னும் நினைவாலே யாய்த்து தேவதைகளை நாட்டிற்று. (நாட்டினான்) உபகநத்தைப்பெறாத கொடிபோலே யாய்த்து ஈஶ்வரனுடைய ஆத்மபாவத்தை யொழியில் தேவதைகளுடைய ஸத்தாதிகளிருப்பது. சுள்ளிக்கால்நாட்டினாப்போலே யிருக்கிறதாய்த்து. "நிறுத்தினான் தெய்வங்களாக" என்னக்கடவதிறே. (தெய்வமெங்கும்) "ஐயன்" என்றும், "எழுமூர்த்தி" என்னுமிதெல்லையாக ஆசனடாளமாசரயணீயனைக் கற்பித்தான். "விஷ்ணுராத்மா பகவத:" "விஷ்ணுராத்மாபகவதः" என்றும், "இறையவரவரவர் விதிவழியடையநின்றனரோ" என்றுஞ் சொல்லக்கடவதிறே. முதல்தன்னிலே இவற்றை முமுக்ஷுவிஸ்ருக்ஷயா ஸ்ருஷ்டித்துப் பின்னை வேதசக்ஷுஸ்ஸையுங் கொடுத்துவிட்டால், குணாநுகூலமாக தேவதையை ஆஶ்ரயித்து, அவற்றினுடைய ஸ்வபாவங்களையும் தன்வாசியையும் அறிந்து நம்பக்கலிலே வருகிறனவென்றாய்த்து தேவதைகளை ஸ்ருஷ்டித்தது, அதுபோய்க்கொள்கொம்பு மூடப்படாந்து அவர்கள் பக்கலிலே ஆதரத்தைப்பண்ணித் தன்பக்கலிலே வைமுக்யத்தைப் பண்ணும்படியாயவிட்டது.

---

பத்தாம்பாட்டு.—(நாட்டினானித்யாதி) "நாட்டினான்"என்றதுக்குதேவதைகளுக்கு அந்தராத்மத்வேநநின்று அவர்களை ஸ்திதிப்பித்தானென்று அர்த்தாந்தரம்விவக்ஷித்து அருளிச்செய்கிறார் (உபகநத்தையித்யாதி.) முந்தினவர்த்த விவரணம்(சுள்ளிக்காலித்யாதி.) இரண்டாமர்த்தத்துக்கு ப்ரமாணம் (நிறுத்தினானித்யாதி.) ஈஶ்வரனுடைய ஆத்மபாவத்தையொழிய இவற்றின் ஸத்தையில்லையென்னுமதுக்கு ப்ரமாணம் (விஷ்ணுராத்மா - விஷ்ணுராத்மேத்யாதி.) "நாட்டினான்" என்றதின் முந்தினவர்த்தத்திலே நோக்காக "நல்லதோரருள்தன்னாலே" என்றதுக்கவதாரிகை (முதல்தன்னிலேயித்யாதி.)

(நல்லதோரருள்தன்னாலே) தானே நினைத்தவழிய தனனுடைய ஹிதமறிந்து போராதே நோவுபட்டிருந்தன வாகாதே! யென்று கர்மைபின்னணிறுைத்து.

(நல்லதோரருள்) இவற்றினுடைய கர்மாநுகுணமாகவாதல், ஆஶ்ரயாநுகுணமாகவாதல் பண்ணுமருள்போலன்றியே, "க்ருபயா கேவலம்" "க்ர்பயாகேவலம்" என்கிறபடியே இவற்றினுடைய துர்க்கதியைக் கண்டுபண்ணுமருள்; இவர்கள் தந்தாந்தசையை யறிந்து அநுஸந்தித்து அதுக்கநுதபிக்கவு மறியாதிருக்கச்செய்தே பண்ணுமருளிறே. "நல்லதோரருள்" என்கையாலே-கீழ்தேவதைகளை யுண்டாக்கிவைத்ததும் அருளின்கார்யமென்கிறது. (அருள் தன்னாலே காட்டினான் திருவரங்கம்) சிலர்எஙகளுக்குக் காட்டவேணு மென்னக் காட்டுகையன்றிக்கே, மூலைகடிப்புத் தீரத்தனையிலே பிச்சுவானைப்போலே தன் செல்லாமையாலே காட்டினானுய்த்து. இருந்தகிழிச்சிறையோடே ரத்நத்தைக்கொடுப்பானைப்போலே கோயிலோடே கூடவாய்த்துத் தன்னைககாட்டிக்கொடுத்தது. இவர்களோடு இவர்களாஶ்ரயிக்கிற தேவதைகளோடு வாசியறத் தந்தாம் நிலையையுணர்ந்து,ரக்ஷாபேக்ஷை யுண்டானவன்று நாமறியோமாக வொண்ணாதென்று ரக்ஷகனானதான் தன்னை ஸந்நிஹிதனாக்கிவைத்தான். இதுதான் ஆர்க்கென்னில்;(உய்பவர்க்கு) உஜ்ஜீவிப்போ மென்பாரொல்லார்க்கு மொகருமிது; இந்நிழலில் ஒதுங்கோமென்னாமையேவேண்டுவது. இது உஜ்ஜீவநமானவோபாதி தேவதாந்தரபஜநமும் பந்தகமாகையாலே ஸம்ஸார ஹேதுவென்கை.

(உய்யும்வண்ணம்) தேவதாந்தரமுகமாக தசசரீரியை ஆராதிக்கையும் உஜ்ஜீவநப்ரகாரமானாலும் அது அதிக்ர்தாதிகாரம், கோயிலைவந்து ஆஶ்ரயித்து உஜ்ஜீவிக்கை ஸர்வாதிகாரம். (கேட்டிரோ நம்பிமீர்காள்) பகவத்வ்யதிரிக்த விஷயலாபத்தாலே பூர்ணராயிருந்துள்ளநீங்கள் இவ்வர்த்தத்தைக் கேட்டிகோளே யென்கிறார். ஸர்வேஶ்வரன் ஸந்நிஹிதனாயிருக்க தேவதாந்தரங்களை ஆஶ்ரயித்து அத்தாலே பூர்ணராயிருந்துள்ளநீங்கள் கேட்டிகோளே யென்றுமாம். ஸம்ஸாரிகள் ஆனைக்குப்பாடுவானைப்போலேயிருக்கையாலேஉணர்த்தி"கேட்டிரோ" என்கிறார்.

---

ஆஶ்ரயாநுகுணமாக-அதிகாராநுகுணமாகவென்றபடி. "ஆஶ்ரயணாநுகுணமாகவாதல்" என்றும் பாடமுண்டு; அறியோம்.

(கெருடவூாகநுநிற்க) கருட்வாஹநனிறே ஆஸ்ரயணீயன். பெரியதிருவடிகழுத்திலேநற்றரிக்க விருத்தல், திருவாழி[illegible] சலியாதே பிடித்தல், ஸாக்ஷால்லக்ஷ்மியையெனக் கென்னுதல் செய்யுமிவற்றிலே யொன்றேயமையுமிறே ஸர்வேஶ்வரனுகைக்கு. தன் பக்கலாஶ்ராலேசமுடையா ரிருந்தவிடத்தேகொடுவந்துகாட்டும்பரிகரத்தையுடையவன்நிற்க. "நிற்க" என்கிறது-"ஆஶயாயதிவாராம:" "ஆசயாயதிவாராம:" என்கிறபடியே அவஸரப்ரதீக்ஷனாய் நிற்கை. தேவதாந்தரங்கள்பக்கலபோமிடத்தில் இவனை அதிக்ரமித்துப் போகவேண்டும்படி இவனுடைய ப்ரத்யாஸத்தியைச் சொல்லிற்றாகவுமாம்.

(சேட்டைதன் மடியகத்துசசெல்வம் பார்த்திருக்கின்றீரோ) அஸ்ரீகிழிசசீலையிலே தநம்வாஙகவிருக்கிறிகோள். அல்லக்ஷ்மீ பக்கலிலே ஐஶ்வர்யத்தை ஆகாங்க்ஷித்திருக்கிறிகோளே. இதர தேவதைகளை ஆச்ரயித்து மோக்ஷம்பெறவிருக்கையாகிற விது அஸ்ரீபக்கலிலே ஐஶ்வர்யம் வேண்டியிருக்கையிறே. பந்தகமாய் க்ஷுத்ரமான பலஙகளைத்தரும் தேவதைகளை ஆச்ரயித்து அபுநராவ்ர்த்திலக்ஷணமோக்ஷத்தை லபிககப்போமோ; அயணனைக்கூறைவேண்டுகிறது - கொலையைக்கருதியிறே. அப்படியே யிவர்கள் மதிப்பையறுகைகயிறே; ரஜஸ்தமஃபரசுரரை ஆஶ்ரயித்து நித்யஸதவஸ்தர் பெறும்பேறறை எஙஙனே பெறுமபடி. பகவதப்ரவணரானவர்கள் தேவதாந்தரஙகளை த்ர்ணீகரிததிறே யிருப்பது. "ருத்ரனும் தேவியும் போகாநிற்க, பகவத்ப்ரவணனாயிருப்பானொருவன்' அவர்களையநாதரித்துத் தன்வஸ்த்ரத்தைக் குத்தினான்" என்கிறத்தை நினைப்பது. ... .. ... ... ... (கo)

அ.—பதினோராம்பாட்டு. (ஒருவில்) இப்படி ஸௌலப்யகாஷ்டையை உபதேசியாநிற்கச்செய்தேயும் அவிக்ர்தரா யிருக்கிற ஸம்ஸாரிகளைக குறித்தது, நான் ஆஶ்ரயணீயனாகச்சொன்ன சக்ரவர்த்தித்திருமகன், பிற்பாடர்க்கு முதவுகைக்காகவந்து கண்வளர்ந்தருளாநிற்க பாக்யஹாநியாலே திருநாமத்தைச் சொல்லிப் பிழைக்கமாட்டாதே காலத்தை வ்யர்த்தமே போக்குகிறிகோளேஎன்று இன்னாதாகிறார்.

---

"கருடவாகநன்" என்றதுக்கு தாத்பர்யாந்தரம் (தன்பக்கலித்யாதி.) "நிற்க" என்றதி னிரண்டாமர்த்தத்துக்கு ஶப்தநிர்வாஹம்-ப்ராப்த விஷயமாகையாலே தூரஸ்தனே யாகிலும் ஸந்நிஹிதனென்று சொல்லலாம்படியான ப்ரத்யாஸத்தியைச்சொல்லுகிறது. "சேட்டைதன்மடியகத்துச் செல்வம் பார்த்திருக்கின்றீரோ" என்று-தேவதைகளா யிருக்கிறவர்களை அநாதரித்துச் சொல்லலாமோவென்ன (பகவத்ப்ரவணரித்யாதி.) இதுக்கு ஸம்வாதம் (ருத்ரனுமித்யாதி.) .. ... ... ... ... (கo)

ஒருவில்லாலோங்குமுந்நீரடைத்துலகங்களுய்யச்
செருவிலேயரக்கர்கோனைச்செற்றநஞ்சேவகனார்
மருவியபெரியகோயின்மதிட்டிருவரங்கமென்னாக்
கருவிலேதிருவிலாதீர்காலத்தைக்கழிக்கின்றீரே. (௧௧)

ப-ரை.—ஒருவில்லால்-கைக்கெட்டிற்றொருவில்லாலே, ஓங்கு-கொந்தளிக்கிற, முந்நீர் - ஆற்றுநீர் ஊற்றுநீர் வர்ஷஜலமாகிய மூன்றுவகைப்பட்ட நீரையுடைய ஸமுத்ரத்தை, அடைத்து-மலைகளைக்கொண்டு அணைகட்டி, உலகங்கள்-பாதாளம்முதலியலோகங்களிலுள்ளார், உய்ய-வாழும்படி, செருவிலே-நேரானயுத்தத்திலே, அரக்கர்கோனை - ராக்ஷஸராஜனான ராவணனை, செற்ற-ஜயித்தருளினவனாய், நம்சேவகனார்-ஆச்ரிதரான நம்முடைய அஞ்சலிக்குத்தோற்குமவரான அழகிய மணவாளன, மருவிய - திருவுள்ளம்பொருந்தி நித்யவாஸம் பண்ணுகிற, பெரியகோயில் - பெரிய கோயிலென்றும் பேரையுடைத்தாய், மதிள் - உயர்ந்தமதிளையுடைத்தான, திருவரங்கமென்னா - திருவரங்கமென்று சொல்லாதவர்களாய், கரு-சர்ப்பத்திலுங்கூட, திருவிலாதீர்-பகவத்கடாக்ஷமில்லாதவர்களே, காலத்தை - ஸர்வேச்வரனை ஆச்ரயித்துத் தொண்டுசெய்து வாழுகைக்குச்கண்டகாலத்தை, கழிக்கின்றீரே - வ்யர்த்தமாகப்போக்குகிறிகோளேயென்று வெறுக்கிறார். (௧௧)

வ்யா.—(ஒருவில்லால்)கைக்கெட்டிற்றொருவில்லாலேயாய்த்துக் கடலையடைத்தது. அதுக்கடியென்னென்னில்; ஸமுத்ரத்தை அர்த்தித்து வழிவேண்டிக்கிடந்தவிடத்திலே வந்து முகங்காட்டிற்றில்லை, இது குணத்துக்கு முகங்காட்டுமதாயிருந்ததில்லை, “చాప మానయ సౌమిత్రే” “சாபமாநயஸௌமித்ரே” என்கிறபடியே-கொண்டுவாதக்கானையென்று கையிலே வில்லைவாங்கி, அவ்வில்லு எதிரிகள் பக்கல் தண்ணளிபண்ணிலும் பண்ணாத * ஆஸீவிஷோபமமான அம்புகளை விட்டார். (ஓங்குமுந்நீர்) கடலினுடைய ஸ்வாபாவிகமான வேஷத்தைச் சொல்லுகிறதன்று, கையும் வில்லுமாய்நின்ற வீரவுறைப்பைக்கண்டு, கீழ்மண் கொண்டு மேல்மண்ணெறிந்து கொந்தளித்தபடியைச் சொல்லுகிறது. இதுதான் ஆர்த்திக்கிரங்குமதன்றே, அம்புக்கிரங்குமதிறே. உபாத்யாயன்கையில் கசை கண்டு சிறுப்ரஜைகள் காலிலே விழுமாப்போலே திருவடிகளளவும்வந்து வெள்ளங்கோத்ததாய்த்து. “సముద్రస్య తతః క్రుద్ధో రామో రక్తాన్తలోచనః” “ஸமுத்ரஸ்யததஃக்ருத்தோ ராமோரக்தாந்தலோசநஃ” என்னக்கடவதிறே.

---

பதினோராம்பாட்டு.—(ஒருவிலலாலித்யாதி.) உபாத்யாயன் கையில்கசைகொண்டு சிறுப்ரஜைகளை நியமிக்கும்போது கோபஸஹிதனாய் நியமிக்குமாப்போலே, இவரும்வில்லைக்கொண்டு ஸமுத்ரத்தை அடர்க்கும்போது கோபஸஹிதராகவே அடர்த்தாரென்று த்ர்ஷ்டாந்தத்திலே பலிப்பித்து அதுக்குப்ரமாணம் (సముద్రస్య-ஸமுத்ரஸ்யேத்யாதி.)

(அடைத்து) நாலிரண்டம்பு விட்டவாறேவந்து மூக்கைக்காட்டி முதுகெடுத்துக்கொடுத்தவாறே அதின்மேலேயாய்த்து அணைகட்டிற்று. ஆகையாலே கல்லாலன்று அடைத்தது, வில்லாலேயென்கை. இங்ஙனன்றாகில் விட்டவிட்ட மலைகளெல்லா மாழ்ந்துபோய் அடைத்ததாய்த் தலைக்கட்டாது.

(உலகங்களுய்ய) பாதாளம் பூம்யந்தரிக்ஷஸ்வர்க்கம் இவ்வுலகங்கள்உய்ய.ராவணனுடையபாஹுபலத்தாலே இவ்வுலகங்களெல்லா மழிந்திறே கிடந்தது. ''ந யஷ்டவ்யம் ந தாதவ்யம் ந போக்தவ்யம் கதஞ்சந'' ''நயஷ்டவ்யம் நதாதவ்யம்நபோக்தவ்யம்கதஞ்சந'' என்று யஜ்ஞாதிகளை விலக்கியும் அம்பாலே இந்த்ராதிகளை ஜெயித்தும் பஹுமுகமாக நலிந்தான், இவனை யழித்த பின்பாய்த்து லோகங்கள்ஜீவித்தது. அங்ஙனன்றியே, ''ஸேதும் த்ருஷ்ட்வா ஸமுத்ரஸ்ய'' ''ஸேதுந்த்ருஷ்ட்வாஸமுத்ரஸ்ய''என்கிறபடியே அசுத்தரானவர்களும் அத்தை தர்சித்து சுத்தராம்படி யடைத்து என்று கீழே யோஜிக்கவுமாம். (செருவிலே) மாயாம்ருகத்தைககாட்டி ராஜபுத்ரர்களை யகற்றி, திறந்து கிடந்த வாசலிலே நாயபுகுருமாப்போலே, தனியிருப்பிலேவந்து பிரித்த கோழைப்பையலைப்போ லன்றியே,பத்தும் பத்தாகயுத்தத்திலே. (அரக்காகோனை) நான் ராக்ஷஸராஜனென்று தன்பரிகரத்தைப் பார்த்து அபிமானித்திருந்தவனை. தானே யதிக்ரமம் பண்ணுமளவின்றியே துரவர்க்கத்துககடைய வொதுங்கநிழலா யிருந்தவனை. (செற்ற) அவன் கண்முகப்பே பரிகாபூதரை யழித்து, ப்ரஜைகளை யழித்து, தன்தலைதனையிலே புரளக்கண்ணாலேகாண் பாரில்லையாம்படி யிருகக, தானகாணும்படி ஓரோதலையாக வறுத்திறே அழியச்செய்தது. ''கச்சாநுஜாநாமி'' ''கச்சாநுஜாநாமி.'' (நஞ்சேவகனார்) ஈஸ்வரதவத்தாலே''சேவகனார்''எனகிறாரல்லர், ஸேவகவாசியாலே. அதாகிறது-கையிலகைககுசசேவிககுமவனெனகை. அதாகிறது - ஓரசஙிககும்தான்உள்ளதனையு இவனை ஸேவிக்குமென்கை. * தாயதலையற்றற்றுவீழதொடுதத தலைவனிறே.

தாத்பர்யாநதரம(தானே அதிகரமமித்யாதி.)''செற்ற'' என்றதுக்கு ஒருநாளல்லா ஒருநாளாகிலு மநுகூலிககுமோ வென்று குணுதிக்யந்தோற்ற வருளிசசெய்கிறார் (அவன் கண்முகப்பே யித்யாதி.) அப்படி யொருநாளல்லா ஒருநாளாகிலும் இவன் அநுகூலிக்குமோ வென்னும் நினைவு பெருமாளுக்கு முண்டென்னுமதுக்கு நியாமகமேதென்ன; (கச்சாநுஜாநாமி-கச்சாநுஜாநாமி இத்யாதி.) அதவா, வக்ஷ்யமாணமான அவருடைய மௌனயத்துக்கு ப்ரமாணமாதல்; அந்தப்பக்ஷத்தில்,''அவன்கண் முகப்பே'' என்ற வாக்யம் சித்ரவுதத்திலே நோக்காசக்கண்டுகொள்வது. ''சேவகனார்''என்றதுக்கு அர்த்தாந்தரம் (அதாகிறதித்யாதி.) ''சேவகவாசியாலே'' என்ற முந்தின வர்த்தத்துக்கு ப்ரமாணம்(தாய்தலையித்யாதி.)

அநந்யகதியான நம்விரோதிவர்க்கத்தைப் பிராட்டியோட்டை ஸம்ச்லேஷ விரோதியைப்போக்கினப்போலே போக்குமாண்பிள்ளையென்னுதல்; எல்லார்க்குந் தஞ்சமான பிராட்டிக்குஉதவுகையாலே நமக்குதவினனென்று எல்லார்க்குஞ் சொல்லலாம்படி யிருக்கையாலே "நஞ்சேவகனார்" என்னுதல். நஞ்சீயர் இப்பாட்டைக் கேட்டவன்று தம்மிலே அநுஸந்தித்துப்போகாநிற்க, ஒருஸேவகனும் ஸ்த்ரீயும் விவாதம்பண்ணின்வளவிலே அவனுக்குஇவள்சொன்ன வார்த்தையைக்கேட்டு வித்தரானவார்த்தையை யநுஸந்திப்பது;- அதாகிறது - பிணங்கினவளவிலே உன்றால் என்னை யென்செய்யலாம், ஏழைக்கும்பேதைக்குமன்றோ சாமந்தனார் பத்திரங்கட்டிற்றென்றான். பட்டரை ஆச்ரயித்த சோழசிகாமணி பல்லவராயர்க்கு "రామలక్ష్మణగుప్తా" "ராமலக்ஷ்மணகுப்தா" என்கிற ச்லோகத்தை யருளிச்செய்து கடற்கரையில் வெளியைநினைத்திருக்குமென்றத்தை யநுஸந்திப்பது. அத்தைக் கூடக்கேட்டிருந்த நஞ்சீயரும் பிள்ளைவிழுப்பரையரும் நம்பிஸ்ரீகோவர்த்தந தாஸருமாக இதுக்குச சேர்ந்திருந்ததென்று, "இலைதுணைமற்றென்னெஞ்சே" என்கிறபாட்டை யநுஸந்தித்தார்கள். ஆகஅநந்யகதிகளான நமக்குத் தஞ்சம் சக்ரவர்த்தித் திருமகனென்கை. (சேவகனார் மருவியபெரியகோயில்) ராவணவதம் பண்ணி வினையற்ற பின்பும் அவதாரத்தில் பிற்பாடர்க்கு முதவுகைக்காகவாய்த்துக் கோயிலிலே வந்து கண்வளர்ந்தருளுகிறது. ரேபாந்தமாகச் சொல்லிற்று பூஜ்யவாசியன்று, சேவகத்தி லுறைப்பைசசொல்லிற்று. (மருவிய) திருவுள்ளம் பொருந்தி நித்யவாஸம் பண்ணுகிறதேசம்பரவ்யூஹ விபவங்களில்காட்டில் கோயிலில் பொருத்தஞ் சொல்லுகிறது. (பெரியகோயில்) கோயில்பரப்பை நினைக்கிறதன்று, ராஜா இன்னவிடத்திலே யிருந்து நினைப்பிட்டானென்றால் பின்னை அவன் றன்னாலும்மாற்ற நினைப்பிடவொண்ணாத தேஶகௌரவத்தைப்பற்றச் சொல்லுகிறது. அதாகிறது - ஸம்ஸாரிகள்கார்யம் வீடறுக்கையிறே. "దేశోయం సర్వకామధుక్" "தேஶோயம்ஸர்வகாமதுக்" "విష్ణోరాయతనం యయౌ" "விஷ்ணோராயதநம்யயௌ." (மதிள்திருவரங்கம்) கண்வளர்ந்தருளுகிறவருடைய ஸௌகுமார்யத்தைக் கண்டு அஞ்சவேண்டாதபடி மதிளையுடைத்தாயிருக்கை. இவ்வஸ்துவின் சீர்மையையறிந்திருக்கும் திருமங்கையாழ்வார்போல் வாரிட்டமதிளறே.

---

அன்றிக்கே "செற்ற" என்றுசொன்ன சித்ரவதத்துக்கு ப்ரமாணமாதல்; "நம்" என்றதின் முந்தினவர்த்தத்திலே ஐதிஹ்யங்கள். ஸாமந்தனார்-ராஜா. பெருமைக்குஸர்வாபேக்ஷிதப்ரதத்வம் சொல்லுகிறதென்று அர்த்தாந்தரவிவக்ஷயாப்ரமாணம் (దేశోయమి- தேஶோயமித்யாதி.)

(என்று) உடம்புநோவவேண்டா, ஒருக்திமாத்ரமே யமையும். அவருடைய குணசேஷ்டிதங்களைப் பற்றின திருநாமம். தேஜஸ்பர்ஶியான திருநாமமேயமையும்.

(கருவிலேதிருவிலாதீர்) ஸுகரமா யிருக்க நீங்கள் அநாதரிக்கிறது. கர்ப்பத்திலும் பகவத்கடாக்ஷமில்லையிறே. "ஜாயமாநம் ஹி புருஷம் யம் பஶ்யேந் மதுஸூதந:" "ஜாயமாநம்ஹிபுருஷம்யம்பஶ்யேந்மதுஸூதந:" என்கிறபடியே கர்ப்பவாஸ ஸமயத்தில் தயநீயதையைக் கண்டு குளிர நோக்குவதொருநோக்குண்டு, அது இவனுக்கு பகவத்ப்ராவண்யமாகிற ஸம்பத்துக்கடி, அதுவும் பெறுதவர்களாகாதே! நீங்களென்கிறார். "கருவரங்கத்துட் கிடந்து கைதொழுதேன் கண்டேன்" என்றும, "கருக்கோட்டியுட்கிடந்து கைதொழுதேன்" என்றுஞ் சொல்லக்கடவதிறே. (காலத்தைக் கழிக்கின்றீரோ) "விசித்ரா தேஹஸம்பத்தி ரீஶ்வராய நிவேதிதும்" "விசித்ராதேஹஸம்பத்திரீஶ்வராயநிவேதிதும" என்று-பகவத்ஸமாச்ரயணாதிக்குக் கண்ட காலத்தை வ்யர்த்தமே போக்குகிறிகோளே. காலக்ருத பரிணாமமில்லாத தேசத்தில நின்று மிங்கேவந்துகிடக்க, நீங்கள் காலத்தை வ்யர்த்தமேபோககுவதே!. நித்யஸூரிகள்நித்யாநுபவம்பண்ணுகிற அதனைவிட்டு உஙகளவஸரம பார்த்துக்கிடக்க, நீங்கள் காலத்தை வ்யர்த்தமேபோக்குவதே!. நித்யஸூரிகளநுபவம்உங்களுக்கும வேணுமென்று அது ஸாதமிக்கைக்காக இங்கே சிரமசெய்விக்கைக்கு வந்துகிடகக நீங்கள் அந்யபரராய்த் திரிகிறிகோளே! யென்கிறார். ... ... ... ... (கக)

அ.—பன்னிரண்டாமபாட்டு. (நமனும்) வாயாலே திருநாமததைச் சொல்லசசொன்னீர், எங்கள்பாபத்தாலே பஹுஜல்பம் பண்ண க்ஷமராகாநின்றோம,திருநாமஞ்சொல்ல ஶக்தராகிறிலோமென்ன; ஆகில் ஶ்ரவணமாத்ரததாலே திருநாமமுத்தாரகமென்று முதகலேஈபாக்யாந முகததாலே சொல்லி, இப்படிப்பட்ட ப்ரபாவத்தையுடையவனூர் கோயிலென்று உஜ்ஜீவிக்கலா யிருக்க துக்கப்படுகிறவாவதே ! என்று இவர்களநர்த்தத்தைப் பொறுக்கமாட்டுகிறிலேனென்கிறார்.

நமனுமுறகலனுமபேசநரகிலநின்றார்கள்கேட்க
நரகமேசுவர்ககமாகுமநாமஙகளுடையநம்பி
அவனதூரரங்கமென்னுதயர்த்துவீழ்ந்தளியமாந்தர்
கவலையுட்படுகின்றாரென்றதனுககேகவர்கின்றேனே. (கஉ)

---

கர்ப்பத்தில் கடாக்ஷம் பகவத் ப்ராவண்யஹேதுவென்றதுக்கு ஸம்வாதம்(கருவரங்கத்துளித்யாதி.) தாத்பர்யாந்தரம் (நித்யஸூரிகளநுபவமித்யாதி.) ... ... ... (கக)

ப-ரை.—நமனும் - யமதர்மராஜாவும், முற்கலனும - முதகலபகவானும, பேச - ஸம்வாதம்பண்ண, அத்தை, நரகில் நின்றார்கள் - நரகத்திலுள்ளவர்கள், கேட்க - பாபபலாநுபவம்பண்ணுகிற ஸமயத்தில்கேட்க, அத்தாலே, நரகமே - அந்நரகந்தானே, சுவர்க்கமாகும் - போகபூமியோடொக்கவினைக்கத்தக்க, நாமங்களுடைய - திருநாமங்களையுடையனுகையாலே, நமபி - பூர்ணனுயிராநின்றான்; இப்படியிருக்க, திருநாமம்சொல்லுகைக்கு யோக்யமான நாக்குப்படைத்த, அளியமாந்தர் - அருமருந்தன்னமநுஷ்யர், அவனதுஊர் - அந்த ஸர்வேச்வரன் நித்யவாஸம்பண்ணுகிற தேசம், அரங்கம் என்னுது - திருவரங்கமென்னுமல், அயர்த்து - அவன் திருநாமங்களைமறந்து, வீழ்ந்து - விஷயப்ரவணராய்க் கொண்டு தலைகீழாகவிழுநது, கவலையுள்படுகின்றாொன்று-துக்கத்திலே யகப்படுகிறார்களேயென்று, அதனுக்கே - அதறகாகவே, கவர்கின்றேன் - க்லேசப்படாநின்றேனென்கிறா. (கஉ)

வ்யா.—(நமனுமுற்கலனும்பேச)பண்டுமுத்கலனென்பானொருவன் பாப ப்ரசுரனுய் வர்ததிக்கிற நாளிலே தேநுவைதாநம்பண்ணுகிற ஸமயத்திலே, "க்ர்ஷ்ணுய" என்றுகொடுத்தான்; பின்புஅவனுடைய மரணதசையிலேயமபடர்வந்துநெருக்கி யமன்பக்கலிலே கொண்டு செல்ல, யமன்தான் இவனை யெதிர்கொண்டுஸம்பாவிக்க, "உன்னுடையபடர் என்னை நெருக்கிக கொண்டுவர நீஸம்பாவியாநின்றாய், இதுக்கு ஹேதுவென்" என்ன; "உன்னுடையப்ரபாவம் அவர்களுமறிந்திலர், நீயுமறிந்திலை, ஒருககால்திருநாமத்தைச்சொன்னுய்காண்" என்றுஅத்தைப்ரசம்ஸிக்க; இங்ஙனேப்ரஸக்தாநுப்ரஸக்தமானவித்தைநரகாநுபவம் பண்ணுகிறவர்கள் கேட்டவநந்தரம் அவ்விடந்தானே ப்ராப்யபூமியாய்த்தென்றுசொல்லிப்போருவதொருகதையுண்டு,அத்தையிங்கேசொலலுகிறது.(நமனுமுற்கலனும்பேச) முத்கலபகவாந் ஸதகாரத்துக்குஹேதுவென்னென்று சொல்ல, யமன் முன்பே திருநாமஞசொன்னுய்காணென்று சொன்னவிவ்வளவே யாய்த்துப் பிறந்தது. யமன்தனக்குப் பாவநமாகத் திருநாமத்தைச்சொன்னுனல்லன், முத்கலபகவாந்கேட்கஅவனுக்குஉபதேசித்தா னல்லன்,நாரகிகளைத் தனகைசலிக்க நலிந்து இவற்றுக்குஇனிபோக்கடியீதென்றுசொன்னுனுமல்லன்,திருநாமஞ்சொன்னுனொருவன். நரகம்புக்கானென்றுதன்பதத்துக்குஹாநிவருகிறதோவென்றுசொன்னுனித்தனை, "కిం త్వయా నార్చితో దేవః కేశవః క్లేశనాశనః" "கிந்த்வயாநார்ச்சிதோதேவꣳகேசவꣳக்லேஶநாஶநঃ" என்று அவர்களை கர்ஹித்துச் சொன்னுனு மல்லன். (நரகில்நின்றார்கள் கேட்க) பாபம் பண்ணுகிற ஸமயத்திலே அநுதபித்து மீண்டு ப்ராயஶ்சித்தம் பண்ணும் ஸமயத்தில் கேட்டாருமல்லர், பாபத்தினுடைய பலாநுபவம் பண்ணுகிற ஸமயத்திலேயாய்த்துக் கேட்டது. அப்போதுதானும் ஸமித்பாணிகளாய்க் கேட்டாருமல்லர், ப்ராஸங்கிகமாகத் திருநாமஞ் செவிப்பட்ட வித்தனை.

---

பன்னிரண்டாம்பாட்டு.—(நமனுமித்யாதி)(சொல்லிப்போருவதொருகதையுண்டு) ஸ்ரீவிஷ்ணுதர்மத்திலே இதிஹாஸঃ.

பாபம் பண்ணுகிற வேளையில் ப்ராஸங்கிகமாகவு மொருத்தர் திருநாமஞ் சொல்லுவாரில்லையோ, அப்போது கேளா தொழிவா னென்னென்னில்; அப்போது விஷய ப்ராவண்யத்தால் வந்த செருக்காலே செவிப்படாது, இப்போது துக்கா நுபவம் பண்ணுகிற வளவாய் ஆரோநல்வார்த்தை சொல்வா ரென்னுந் தசையாகையாலே செவிப்படுமே.

(நரகமேசுவர்க்கமாகும்) அந்தநரகந்தான் போகபூமியோ டொத்து மாறின்னைப்பிடு மித்தனையிறே வேண்டுவது. "ఐశ్వర్యం లంకాయాం విభీషణ మకంటకమ్" "விபீஷணவிதேயம் ஹி லங்கை ஶ்வர்யமிதம்க்ர்தம்" என்கிறபடியே - ராவண ஸம்பந்தத்தாலே துஷ்ப்ரக்ர்திகளுக்கு ஸ்தாநமான லங்கையை ஸாத்விகர்க்கு ஸ்தாநமாக்கிக் கொடுத்தாப்போலே. இப்படி நரகந்தானே ஸ்வர்க்கமாம்படி பண்ணுகிறுன் நாமியோவென்னில்; (நாமங்கள்) திருநாமப்ரபாவத்தாலே வந்ததாய்த்து. (நாமங்களுடைய நம்பி) இத்திருநாமங்களையுடையவனுகையாலே புஷ்கலனுயிருக்குமவன். எல்லாநன்மைக்குந் தன்னைப்பற்றிப பெறவேண்டியிருக்கு மவனுக்கும் ஏற்றத்தைப் பண்ணிக் கொடுக்கவற்றூயாய்த்துத் திருநாமமிருப்பது. "దేవో నామసహస్రవాన్" "தேவோநாமஸஹஸ்ரவாந்" என்றும், "பேராயிரங் கொண்டதோர பீடுடையன்" என்றுஞ் சொல்லக்கடவதிறே. "நாரணன்தம்மன்னை நரகம்புகாள்" "నారాయణశబ్దమాత్రమ్-நாராயணஶப்தமாத்ரம்." (அவனதாரங்கமென்னுது) இப்படி பூர்ணனுனவன் நித்யவாஸம் பண்ணுகிற தேசம் கோயிலென்னுமிவ்வளவுகிடீர் இவனுக்குநேர்த்தி. நேர்த்தி அல்யமாய் பலம்கனத்திருக்கச்செய்தேயுமஇத்தைச்சொல்லவொட்டாதபாபத்தின் கனமிருந்தபடியென். இப்படி திருநாமஞ் சொல்லுவார் அருகிருகக லாகாதென்பாரும், அவர்களை நாட்டில் நின்றும் போகத்துரத்துவாரும், திருநாமஞ் சொன்னதுவே ஹேதுவாக ஹிம்ஸிப்பாருமாயிறே ஸம்ஸாரந் தானிருப்பது. ஒருவனுடைய அந்திமஸமயத்திலே திருமந்த்ரத்தையுபதேசித்து இத்தைச்சொல்லாயென்ன; அவனும் "ஆமாகில்சொல்லிப்பார்க்கிறேன்" என்று இத்தை அநேகமுருச் சொல்லி அதுதன்னைச் சொல்லாதே செத்துப்போனுன். இரண்டும்அக்ஷரமொத்திருக்கச்செய்தேசொல்லவொட்டிற்றில்லையிறே பாபபலம்.

---

துர்கைகதாநமானநரகம் ஸாகைகதா நமானஸ்வர்க்கமாகக் கூடுமோவென்ன; (மாறியித்யாதி.) நாமஸஹஸ்ரவாந், தஸ்மாத் தேவ:. திருநாம ப்ரபாவத்தாலே வந்ததாய்த்து என்றதே கீழ், அப்படி நாமியை யொழியவும் நாமமேரக்ஷகமென்றதுக்கு ப்ரமாணம் (நாரணன் தம்மன்னை இத்யாதி.) నారాయణశబ్దమాత్రమ్ - நாராயணஶப்தமாத்ர மென்றதுக்கடி "ఆర్తా విషణ్ణా-ஆர்த்தாவிஷண்ணு" இத்யாதி. நாட்டில் நின்றும் போகத்துரத்துவாருமென்றது - கைசிக வ்ர்த்தாந்தத்தைப்பற்ற. ஹிம்ஸிப்பார்-ஹிரண்யாதிகள்.

(அயர்த்துவீழ்க்து) வருத்தவன்திருநாமத்தை விஸ்மரித்து, விஷயப்ரவணராய்க்கொண்டு தலை கீழாக விழுந்து. "மறந்தே னுன்னை முன்னம்" என்றும், "யஸ்ய ஸ்ம்ருத்யா ச நாமோக்த்யா" "யந்மு ஹுர்த்தம்க்ஷணம்வாபி" என்றுஞ்சொல்லக்கடவதிறே.

(அளியமாந்தர்) திருநாமஞ் சொல்லுகைக்கு யோக்யமான நாக்குப்படைத்த அருமந்த மநுஷ்யர். "தாமுளரோ" என்கிறபாட்டையும், "நாவாயிலுண்டே" என்கிறபாட்டையுஞ்சொல்லிக்கொள்வது. (கவலையுள் படுகின்றா ரென்று) துக்கத்தே யகப்படுவதே! என்று. (அதனுக்கே கவர்கின்றேனே) அதனுக்கேக்லேசப்படா நின்றேனென்கிறார். ஸுகரூபமான திருநாமஸ்பர்ஶத்தாலே ஆநந்த நிர்ப்பரராயிருக்கைக்கு யோக்யரானவர்கள், துக்கபாகிகளாவதே! யென்றிறே இவர்க்லேசப்படுகிறது. அவதாரணத்தாலே-எனக்குக்கரைதல், எனக்கும் பிறர்க்கும் கரைதல் செய்யவொண்ணாதபடி ஸம்ஸாரிகள் துக்கம்எனக்கு ஆற்றப்போகிறதில்லையென்கிறார். கவலை - துன்பம். ... ... ... ... ... (கஉ)

பதின்மூன்றும்பாட்டு.— (எறியுநீர்) ஸம்ஸாரிகளை நோக்கி ஹிதம் சொல்லுகைதான் அவர்களுக்கு அஸஹ்யமா மளவானவாறே, இவர்கள் துஷ்ப்ரக்ருதிக ளென்று பாராதே துர்க்கதியைப் பார்த்து, ஸ்வகத மாக இவர்கள்ஸ்வரூபம் பகவதர்த்தமாயிருக்கிறபடியை அறிந்திலர்களே யாகிலும், ஒருபாதியின்றியே வாயாலே "திருவரங்கம்" என்பார்களாகில் ஸம்ஸாரம் கரம்பெழுந்துபோமாகாதே! என்கிறார்.

எறியுநீர்வெறிகொள்வேலைமாநிலத்துயிர்களெல்லாம்
வெறிகொள்பூந்துளபமாலைவிண்ணவர்கோனையேத்த
அறிவிலாமனிசரெல்லாமரங்கமென்றழைப்பராகில்
பொறியில்வாழ்நரகமெல்லாம்புல்லெழுந்தொழியுமன்றே. ()

ப-ரை.—எறியும் - அலையெறியாநின்றுள்ள, நீர் - நீரையும், வெறிகொள் - புலால்நாற்றத்தையுமுடைத்தான, வேலை - கடலாலேசூழப்பட்ட, மாநிலத்துயிர்களெல்லாம் - மஹாப்ருதிவியிலுள்ளசேதநரெல்லாரும்; வெறிகொள் - பரிமளத்தையும், பூ - செவ்வியையுமுடைத்தான, துளபமாலை - திருத்துழாய் மாலையையுடையனை, விண்ணவர்கோனை - *அயர்வறுமமரர்களதிபதியை, ஏத்த - ஸ்தோத்ரம்பண்ணுகைக்கு, அறிவிலா - ஜ்ஞாநமில்லாத, மனிசரெல்லாம்-மநுஷ்யரெல்லாம், அரங்கமென்றழைப்பராகில்-வாய்படைத்த ப்ரயோஜநம்பெற "திருவரங்கம்" என்றுசொல்லுவர்களானால், பொறியில்வாழ் - இந்த்ரியங்களுக்கு வசப்பட்டுநடக்கிற, நரகமெல்லாம் - ஸம்ஸாரமெல்லாம், புல்லெழுந்தொழியும் - கரம்பாய்ப்போமென்கிறார். (கங)

---

பதின்மூன்றும்பாட்டு.— (எறியுமித்யாதி) நாலாம்பாட்டுத் தொடங்கிப் பதினொருபாட்டு பரோபதேசமாயிருக்க, இப்பாட்டு ஸ்வாநுஸந்தாந ரூபமாக அருளிச்செய்கிற விது ப்ரகரண விருத்தமென்று தோற்றுமாகையாலே அதுக்கீடாக அவதாரிகை யருளிச்செய்கிறார் (ஸம்ஸாரிகளையித்யாதி.) ... (கங)

வ்யா.—(எறியுநீரித்யாதி) எறியாநின்றிருந்துள்ள நீரையு டைத்தாய் அஸாதாரணமான கந்தத்தையு முடைத்தான கடல் சூழப்பட்ட மஹாப்ர்திவியிலுள்ளசேதநவர்க்கமடங்கலும். "எறி யுநீர்" என்கிறது - த்ரிபாத்விபூதியிலே அஸங்குசிதமாகவிருக்கை க்கு யோக்யரான சேதநர். "வெள்ளத்திடைப்பட்ட நரியினம் போலே" என்கிறபடியே க்ஷுபிதமான நீர்வெள்ளத்துக் குள்ளே யிருக்கிற ஸங்கோசந் தோற்றுகைக்காக."வெறிகொள்வேலை" என் றது-சாத்தின திருத்துழாயின் பரிமளத்தை அநுபவிக்கைக்கு யோ க்யரான சேதநர் ஸமுத்ரத்தினுடைய துர்க்கந்தத்துக்கு இலக்கா யிருக்கிறஅநர்த்தம்தோற்றுகைககாக. (மாநிலம்)பஞ்சாசத்கோடி விஸ்தீர்ணையானப்ர்திவி. (உயிர்கள்) தேஹஸம்பந்தமற்றால் ஸ்ரீ கௌஸ்துபமபோலே ஈஶ்வரனுக்கு ப்ரியவிஷயமான வஸ்து கிடீ ரென்கை. (எல்லாம்) ஸ்வாதந்த்ர்யத்தையே முடிய நடத்தக்கடவ தான தேவவர்க்கத்தோடு அவர்களுக்குக் குடிமக்களானமநுஷ்ய வர்க்கத்தோடு வாசியற ஸகலசேதநரும.

(வெறிகொள்பூந்துளபமாலை விண்ணவர்கோனை யேத்த) பரி மளத்தையுஞ் செவ்வியையு முடைத்தான திருத்துழாய் மாலையா லே அலங்க்ர்தனா யிருக்கு மிருப்புக்குத் தோற்று நித்யஸூரிகள். ஏத்துமாப்போலே இவர்களையு மேத்த வாயத்துக் கண்டது. "ஸ்ரஷ்டஸ்த்வம்வநவாஸாய" "ஸ்ர்ஷ்டஸ்த்வம்வநவாஸாய" என்று இளைய பெருமாளைப்போலே, ஸம்ஸாரிகளையும் முதலிலே ஸ்ர்ஷ்டித்தது தன்னையநுபவிகைகக்காக வாய்த்து.

இதுஞ்ஞாநப்ரதாநர் பெறும்பேறாயிருந்தது, அத்தனை யறிவி ல்லாத க்ஷுத்ரஸம்ஸாரிகளுக்குக் கிட்டுமோ வென்னும் ஶங்கை யிலே மேல்சொல்லுகிறது (அறிவிலாமனிச ரெல்லா மரங்கமென் றழைப்பராகில்) மநுஷ்யஜந்மத்திலே பிறந்துவைத்து அறிவின்றி க்கே யிருந்தார்களாகிலும், திருவரங்கப்ராவண்யம்வேண்டா, உக் திமாத்ரமே அமையும். "ஆகில" என்றது - பாபப்ரசுரர்க்கு இது தானும் ஸித்தியாதென்கை.(பொறியில்வாழ்நரகம்) இந்த்ரியங்க ளுக்குக்குடிமக்களாய் வர்த்திக்கிற லீலாவிபூதி. எல்லா வவஸ்தை யிலும் தப்பாதபடி தன்பக்கலிலேயகப்படுத்திக்கொள்ளவற்றுகை யாலே, "பொறி" என்று-இந்த்ரியங்களைச் சொல்லுகிறது(நரகம்) அவிவேகிகளுக்கு நரகம் யமனுடைய தண்டல்; அறிவுடை யார்க்கு நரகம் ஸம்ஸாரம். "நன்றுமஞ்சுவன்நரகம் நானடைதல்" என்னக்கடவதிறே. (எல்லாம் புல்லெழுந் தொழியுமன்றே) லீலா விபூதி கட்டடங்கத் தரிசாய்ப்போமிறே. ... ... (கரு)

அ.—பதினொராம்பாட்டு. (வண்டினம்) பிறர்முகம்பார்த்துச் சொல்லியும் தம்மிலே சொல்லியும் இப்படி ஹிதம் சொன்ன விடத்திலும் அவர்கள் விமுகராகையாலே அவர்களை வெறுத்து, அவர்களோட்டை ஸஹவாஸத்தால்வந்த க்லேசமந்திர கர்ப்பூரநிகரத்தை வாயிலே யிடுவாரைப்போலே கோயிலை யநுபவித்து, இப்படி தங்களுக்குச் சொல்லப்ராப்தமா யிருக்கஇத்தை அநாதரிப்பதே! என்று அவர்களை உபேக்ஷாவசநத்தைப் பண்ணி இவர்பரோபதேசாந்நிவர்த்தராகிறார். இது ஸ்வாநுபவமா யிருக்க பரோபதேசமாகத் தலைக்கட்டுகிறது; ஸத்துக்களநுபவஜ்ஞாநம் பிறர்க்கு கர்த்தவ்யமாகக் கடவதிறே.

வண்டினமுரலுஞ்சோலைமயிலினமாலுஞ்சோலை
கொண்டன்மீதணவுஞ்சோலைகுயிலினங்கூவுஞ்சோலை
அண்டர்கோனமருஞ்சோலையணிதிருவரங்கமென்னா
மிண்டர்பாய்ந்துண்ணுஞ்சோற்றைவிலக்கிநாய்க்கிடுமினீரே. ()

ப-ரை.—வண்டினம் - மதுபாநத்தாலே மதித்தவண்டுகள், "தாழைமடலூடுருஞ்சித்தவள வண்ணப்பொடியணிந்து யாழினிசைவண்டினங்கள் ஆளம் வைக்கும்" என்கிறபடியே, ஆளம்வைக்கும்-ஆளத்திவையாநின்றுள்ள, சோலை-திருச்சோலைகளையுடைத்தாய், இனம்- இனமினமாக, மயில் - மயில்களானவை, ஆலும் - நர்த்தநம்பண்ணாநின்றுள்ள, சோலை - சோலைகளையுடைத்தாய், கொண்டல் - மேகங்களானவை, மீது - மேலே, அணவும் - வந்துபடியாநிற்கும், சோலை - சோலைகளையுடைத்தாய், குயிலினம் - குயிலினங்களானவை, கூவும்- ஒன்றையொன்று அழையாநின்றுள்ள, சோலை - சோலையையுடைத்தாய், அண்டர்- அண்டாந்தர்வர்த்திகளான தேவர்களுக்கு, கோன்-நிர்வாஹகனான ஸர்வேச்வரன்; அமரும் - நித்யவாஸம்பண்ணுகிற, சோலை - சோலைகளை, அணி - ஆபரணமாகவுடைத்தான, திருவரங்கமென்னா - திருவரங்கம் என்றுவாயாற் சொல்லாத, மிண்டர்- நன்றிகெட்டவர்களான மூர்க்கர், பாய்ந்து- மேல்விழுந்து, உண்ணும் சோற்றை-உண்கிற சோற்றை, விலக்கி - நீக்கி, நீர - நீங்கள், அத்தை, நன்றியறியும் குணமுள்ள, நாய்க்கிடுமின - நாயக்கிடுங்கோளென கிறார். (கசு)

வயா.—(வண்டினமுரலுஞ்சோலை) திண்ணகத்திலிழிவார்திரளாகவிழியுமாப்போலே மதுவெள்ளத்தாலே வண்டுகள் திரள் திரளாக வாய்த்துஇழிவது. கழுத்தேகட்டளையாகமதுபாநத்தைப்பண்ணி, புக்கத்ரவ்யம் இருந்தவிடத்திலிருக்கவொட்டாமையாலும், தான் வாய்விடமாட்டாமையாலும் ஆளத்திவையா நிற்கு மாய்த்து. முக்தர் திரள்திரளாக பகவதநுபவம் பண்ணி, போக்குவீடாகஸாமகாநம் பண்ணிக்களிக்குமாப்போலே, இவ்வூரில்திர்யக்குக்களும் களித்து வர்த்திக்குமென்கை. (மயிலினமாலுஞ்சோலை) வண்டுகளுடையத்வநியைக்கேட்டும்சோலையின்பசுமையைக்கண்டும்வர்ஷாவில் மேகங்களாக நினைத்து இனமினமாக மயில்களானவை ஸஸம்ப்ரமநர்த்தம் பண்ணாநிற்கும். ஆலுதல்-ஆடுதலும், களித்தலும்

(மகரணடல்மீ தணவுஞ்சோலை) இவற்றினுடைய ஆலிப்பையும் சோலைப் பசுமையையுங்கண்டு மேகங்களானவை ஸமுத்ரமாகக் கொண்டு படியாநிற்கும். அன்றிக்கே, மேகபதத்தளவுஞ்செல்லத் திருச்சோலைதான் ஓங்கியிருந்தபடியைச்சொல்லிற்றாகவுமாம். இவ் வூரில் பொழிலும் * மயல்மிகுபொழிலாயிருக்கிறபடி. திருமலையில் பொழிலின் இருட்சியாலே புக்கவிடமும் புறப்பட்டவிடமுந்தெரி யாது, இவ்வூரில்வஸ்துவை வஸ்த்வந்தரமாகப்ரமிப்பிக்கும்.(குயி லினங்கூவுஞ்சோலை) கீழ்ச்சொன்னவவற்றின் வ்யாபாரமின்றிக் கே,குயிலினங்களானவையிருந்தவிடத்திலே யிருந்து, தாந்தாமிரு ந்தப்ரதேசத்தில்குளிர்த்தியாலே அந்யோந்யம் அழையாநின்றன.

(அண்டர்கோனமருஞ்சோலை)வண்டு மயில்கொண்டல்குயில் இவற்றோபாதி இவனுஞ் சோலைப்பரப்பையும் போக்யதையையுங் கண்டு விடமாட்டாதே கிடக்கிறானாய்த்து. ரக்ஷ்யபூதரான ஸம்ஸா ரிகளுக்கு ப்ராப்யமானவோபாதி ரக்ஷகனான ஈஶ்வரனுக்கும் ப்ரா ப்யமாய்க்காணு மித்தேசமிருப்பது. (அண்டர்கோன்) அண்டாந் தர்வர்த்திகளை நிர்வஹிக்கைக்காக வென்னுதல்; பரவ்யூஹவிபவ ஸ்தாநங்களை விஸ்மரித்து நித்யவாஸம் பண்ணுகிற தேசமென்னு தல். (சோலையணிதிருவரங்கம்) சோலையை ஆபரணமாக வுடை த்தான கோயிலென்னுதல்; ஸம்ஸாரத்துக்கு ஆபரணமானகோயி லென்னுதல். (திருவரங்கமென்னுமிண்டர்) அவன் தங்களுக்காக வந்து கண்வளராநிற்க, அவனிருந்ததேஶத்தை வாயாலேசொல் லவுங்கூடமாட்டாத மூர்க்கர். மூர்க்கராகிறார் - விழுக்காடறியாத வர்கள்.அதாகிறது-நரகவாஸம் கர்ப்பவாஸம் முதலானவையிடரி யைப்பிடித்துக்கொண்டுநிற்க, கேவலம் தேஹபோஷண பரரா யிருக்குமவர்கள். (பாய்ந்துண்ணுஞ் சோற்றை விலக்கி நாய்க்கிடு மினீரே)திருவரங்கமென்னமாட்டாத மூர்க்கராயிருப்பார்ஜீவிக்கி றது வழியல்லாவழியே அபஹரித்து ஜீவிக்கிறார்களித்தனை, அத் தை விலக்கி,நாய்கக்கிடுங்கோள். தங்களை யுத்தேசித்து வந்து கண் வளர்ந்தருளுகிற அந்த உபகாரத்தை யறியாத க்ர்தக்நர் ஜீவிக்கிற ஜீவநத்தை விலக்கி ஒருநாள் ஒருபிடிசோறிட்டவன் வாசலைப்பற் றிக்கிடக்கும் அத்தனைக்ர்தஜ்ஞமான நாய்க்கிடுங்கோள். இது தான் "యోసాధుభ్యోర్థమాదాయ సాధుభ్యస్సంప్రయచ్ఛతి" "யோஸாதுப்யோர் த்தமாதாய ஸாதுப்யஸ்ஸம்பரயச்சதி" என்னும் நிர்வாஹகரைக் குறித்திறே சொல்லிற்று. ... ... ... (கசு)

---

பதினாலாம்பாட்டு.— (வண்டித்யாதி) இரண்டாமர்த்தத்தில் "அண்டர்கோன்" என்று நித்யவிபூதியோகம் சொன்னது - வ்யூ ஹவிபவஸ்தாநங்களுக்கு முபலக்ஷணம். இரண்டாமர்த்தத்துக் குச்சோலையையுடைத்தாய் ஸம்ஸாரத்துக்காபரணமான வென்ற படி. நிர்வாஹகரைக் குறித்தென்றது - திருமங்கையாழ்வார்போல் வாரையென்றபடி. ... ... ... ... ... (கசு)

அ

அ.—பதினஞ்சாம்பாட்டு. (மெய்யர்க்கே) முதல்மூன்றுபாட்டாலே ஸ்வரூபத்தைப்பேசி, அநந்தரம் பதினொருபாட்டாலே பரோபதேசம்பண்ணி, அது தன்னை ஸம்ஸாரிகள்ஸ்வீகரியாமையாலே அவர்கள் பக்கல் நின்றும் கால்வாங்கினாராய்நின்றார்-கீழ்;இவர்களிலே அந்யதமனாயிருந்துள்ளவென்னைப் பரோபதேசம்பண்ணவல்லேனாம்படி 'ஸ்வவிஷயத்தில் ஸம்சயநிவர்த்திமுதலாக பரமபக்தி பர்யந்தமாகப்பிறப்பிப்பதே! யென்று, பெரியபெருமாள்தமக்கு நிர்ஹேதுகமாகப்பண்ணின மஹோபகாரத்தை மேல்பத்துப்பாட்டாலே யருளிச்செய்கிறார்.இதிறே க்ர்தஜ்ஞருடையஸ்வபாவமிருக்கும்படி."என்னைத்தீமனங்கெடுத்தாய் உனக்கென்செய்கேன்" என்னாநிற்பர்களிறே.இப்பாட்டில் அத்வேஷம்பிறந்தவளவிலேதன்படிகளையெல்லாங் காட்டிக்கொடுக்குமென்றும், தானு மொருவனுளன் என்றறிந்தவளவிலே ஸம்ஶய நிவர்த்தியைப் பண்ணிவைக்குமென்னு மிவ்வர்த்தத்தை எனக்கு அத்வேஷம் பிறந்தவளவிலே காட்டித்தர அநுபவிக்கப்பெற்றேனென்கிறார்.

மெய்யர்க்கேமெய்யனாகும்விதியிலாவென்னைப்போலப்
பொய்யர்க்கேபொய்யனாகும்புட்கொடியுடையகோமான்
உய்யப்போமுணர்வினார்கட்கொருவனென்றுணர்ந்தபின்னை
ஐயப்பாடறுத்துத்தோன்றுமழகனூரரங்கமன்றே, (கரு)

ப-ரை.—புட்கொடியுடையகோமான்- பெரியதிருவடியைத்வஜமாகவுடையஸர்வஸ்வாமியானவன், எனனைப்போல - என்னைபபோன்ற, மெயயர்க்கு - அத்வேஷமுடையவனுக்கு, மெய்யனாகும் - மெய்யனாயிரா நினறான்; என்னைப்போல-என்னைப்போனற, பெய்யாக்கு-விமுகரானார்க்கு, பொய்யனாகும்- பொய்யனாயிராநின்றான்; உய்யப்போ முணர்வினார்கட்கு-உஜ்ஜீவிக்கும் வகை தேடவேணும் என்னும் அறிவுபிறநதவர்களுக்கு, ஒருவனென றுணர்ந்தபின்னை- ஸர்வேச்வர னொருவனுளனெனகிற ஜ்ஞானமபிறநத பினப, ஐய்யப்பாடு- தானே ப்ராப்யனும் விரோதியைப்போக்குவானும் என்கிறவிஷயத்திலுண்டான ஸந்தேஹததை, அறுத்து - அறுத்துக்கொண்டு, தோனறும் - தோன்றுகின்ற, அழகனூர் - அழகியவடிவுபடைத்தவனுடையதேசம், அரங்கம்-கோயிலென்கிறார். (கரு)

வ்யா.—(மெய்யர்க்கே மெய்யனாகும்) இங்கு "மெய்" என்று சொல்லுகிறது - பொய்தவிர்ந்தமாத்ரமானவத்வேஷத்தையாய்த்து. இவன்பக்கலுள்ளது அத்வேஷமானாலும்அவன் இவன்பக்கலிருக்கும்படி யென்னென்னில்; (மெய்யனாகும்) மெய்யானபரிமாற்றமுடையார் திறத்திலிருக்கக்கடவ படிகளை இவன்பக்கலிலேயிருக்கும். அதாகிறது - தன்படிகளை யடங்க இவனுக்குக் காட்டிக் கொடுக்கும்.

---

பதினஞ்சாம்பாட்டு.(மெய்யர்க்கேயித்யாதி)(பரோதேசம்பண்ண வல்லேனாம்படி )என்றவநந்தரம்"பண்ணினான்"என்று கூட்டுவது

இரண்டிடத்திலும் ஶப்தமொத்திருக்க இது அர்த்தமாகிற படி யெங்ஙனே யென்னில்; குணப்ரகரண மாகையாலும் ஸம ஸ்த கல்யாண குணாத்மகனுக்கு இதோரேற்றமாகச் சொல்லவொ ண்ணாமையாலும், இம்மாத்ரமே பற்றாசாக ரக்ஷிக்கைக்கடியான ஸ்வாபாவிக ஸம்பந்தமுண்டாகையாலும், அவாப்தஸமஸ்தகாமனா கையாலே இதுக்குமேல் வேண்டாதபடி நிரபேக்ஷனா யிருக்கையா லும், இதுதான் ஸம்ஸாரிகளிலே சிலர்க்கு ஸம்பாவித மாகையா லும், ஈஶ்வரனுக்குக்குற்றமல்லாமையாலும், ஶப்தத்தைநெருக்கி யே அர்த்தம் சொல்லுகிறோம். இன்னம் கண்ணழிவற்ற மெய் யாரய்ப் பரிமாறுவார் நித்யஸூரிகளேயாகையாலும், அந்தமெய் ஸம்ஸாரிகள்பக்கல்ஸம்பவியாமையாலும், இனித்தான்ஸம்ஸாரிகள் பக்கலுள்ள தொன்றாலே பேறாகவேண்டியிருக்கையாலும், "ஸ்ருஹ்ருதா வேநஸம்ப்ராப்தம்" "மித்ர்பாவேந ஸம்ப்ராப்தம்"என்கிற தர்மிக்ராஹக ப்ரமாணத்தோடு சேருகையாலும், இதுவே அர்த்தமாகவேணும். இந்த அத்வேஷத்தைஸாதநமாக்க வொண்ணாதிறே சேதநனாகை யாலே. இந்தருசி ஸ்வரூபாந்தர்ப்பூதமாகையாலும்அநுபவ வேளை யிலே யுள்ளதொன்றாகையாலும் ஸாதநமாகமாட்டாது.

(பொய்யர்க்கே பொய்யனாகும்) மெய்யென்று பேரிடலாவ தொருபொய் இவ்வாச்ரயத்திலினியுண்டாகமாட்டாதென்று தோற் றினால் பின்னை கண்ணநீரோடே யாய்த்துக் கால்வாங்குவது. ஸர் ப்பதஷ்டனை நெற்றியைமோந்துப் பார்த்தால் பசையில்லையா கில மர்தனென்று மீளுமோபாதி, இவன்பக்கல் ஜீவநஹேது வில்லையென்று ஈடுபாட்டோடே யாய்த்து மீளுவது. "மெய்யர்க் கே" என்கிற அவதாரணத்தாலே- அத்வேஷமாத்ரத்தையே சொ ல்லுகிறது. "பொய்யர்க்கே" என்கிற அவதாரணம்- மெய்க்கு ப்ர ஸங்கமில்லாத பொய்யனைச் சொல்லுகிறது. மெய்யென்று சொல் லுகிறது - ஸத்யத்தை. ஸத்யமென்கிறது - பகவத் விஷயத்தைப் பற்றின வறிவை.

---

குணப்ரகரணமாகையாலுமென்றது - ஸமஶ்யநிவர்த்திமுத லாகபரமபக்திபர்யந்தமாக உபகரிக்கிற ஔதார்யகுண ப்ரகரண மாகையாலு மென்றபடி. நித்யஸூரிகளேயாகையாலு மென்ற து - நித்யஸூரிகளே ஆகையாலே என்றபடி. மெய்யென்றுபேரி டலாவது ஒரு பொய்யென்றதுக்கு-"நன்மையென்று பேரிடலாவ து-ஒரு தீமையுங்காணாதே" என்ற ஶ்ரீவசநபூஷணவாக்யத்துக்கு ஜீயரருளிச்செய்தவதுவே அர்த்தமாகக்கண்டுகொள்வது.

"பொய்" என்று சொல்லுகிறது-பகவத் வ்யதிரிக்தமான பதார்த்தங்களை விஷயீகரித்த ஜ்ஞாநத்தை. மெய்யர்க்கு மெய்யனாய்ப் பொய்யர்க்குப்பொய்யனாய்ப் போந்தமை யெங்கேகண்டோமென்னில்;(என்னைப்போல) நான் நெடுநாள் தன்பக்கல் வைமுக்யம் பண்ணிப் போந்தவிடத்தில் என்னைக் கிட்டமாட்டாதே நின்றான்; எனக்குஅத்வேஷம்பிறந்தவளவிலே மேல்விழுந்து விஷயீகரித்தான்;இவை யிரண்டும் என்பக்கலிலே கண்டேன்.(விதியிலா வென்னை) அவனுடையசீலமிதுவாயிருக்க அநாதிகாலம் விஷயாந்தரப்ரவணனாய் பகவத்விஷய விமுகனாய்ப்போந்த பாக்யஹீநனென்று முன்பிழந்த இழவுக்கு வெறுக்கிறார். "பழுதேபலபகலும் போயின" என்று-பெற்ற பேற்றிற் காட்டில் இழந்தஇழவே மேற்படும்படியிறே இவ்விஷயத்தில்கைவைத்தார்படி யிருப்பது. "[Grantha text]" "நிந்திதஸ்ஸவஸேல்லோகே ஸ்வாத்மாப்யேநம் விகர்ஹதே" என்னக்கடவதிறே.இப்படிமெய்யென்று பேரிடலாவதொரு பொய்யைக்கொண்டு விஷயீகரிக்கிறவன்றான் ஆளில்லாதானொருவனோ வென்னில்; (புட்கொடியுடையகோமான்) மெய்யான பரிமாற்றத்தையுடையா ரநேகருடையபடிகளை ஒருவன் செய்யவல்லவனும்படி சமைந்தாரநேகரையுடையானொருவனாய்த்து."கொடி" என்று- "[Grantha text]" "தாஸஸ்ஸகாவாஹநம்" இத்யாதிக்குஉபலக்ஷணம். "[Grantha text]" "நிவாஸஶய்யா" இத்யாதி.(கோமான்) * அயர்வறுமமரர்களதிபதியாகையாலே மேனாணிப்பையுடையனா யிருக்குமவன். ஸம்பந்நரா யிருக்குமவர்களேயாகிலும்தநலோபத்தாலே ஒருகாசு விழுந்தவிடத்தே போய்த் தேடாநிற்பர்களாய்த்து. தந்தாம் வஸ்துவை விடமாட்டாமையாலே.

(உய்யப்போமுணர்வினார் கட்கு) கீழ்-பொய்யிலே வ்யவஹிதராய்நின்றநிலையில்நின்றும் கால்வாங்கி நாம்உஜ்ஜீவிக்கும் ப்ரகாரமேதோவென்று வெளிச்செறிப்பையுடையவர்களுக்கு.ஈதொழியமுடியப்போ முணர்வுண்டுபோலேகாணும். "[Grantha text]" "புத்திநாஶாத்ப்ரணஶ்யதி" என்னக்கடவதிறே.உய்யப்போ முணர்வாகிறது - யாத்ர்ச்சிகமாக விளைந்ததொரு ஸுக்ர்தமடியாக, நாமார் நாம்நின்றநிலையேதென்றும், மேல் நமக்குப்போக்கடியேதென்றும் பிறக்கு முணர்வு. (ஒருவனென் றுணர்ந்தபின்னை) ஈஶ்வரனு மொருவனுளனென்று அறிவுபிறந்த பின்பு. கேவலதேஹமேயன்றுஉள்ளது,தேஹாதிரிக்தமா யிருப்பதொரு ஆத்மாவுண்டு, அவனுக்கு ஸ்வாமியாயிருப்பா னொரு ஈஶ்வரனுமுண்டு என்னும் அறிவுடையார்க்கு.

---

"என்னைப்போல" என்றத்தைப்பற்ற (எனக்கத்வேஷமித்யாதி. இழந்தஇழவே மேற்பட்டிருக்குமென்கிறதுக்கு ப்ரமாணம் ([Grantha text] - நிந்தித இத்யாதி.)

“ பஞ்சவிம்மகனாத்மா ” என்றால் இசைவாருண்டு; ஷட்விம்மகன் ஈம்வரனென்றால் இசைவாரில்லையிறே.

(ஐயப்பாடறுத்துத்தோன்றும்)ஈம்வரஸத்பாவத்தையிசையாதாரிறே இவனுக்கு, ஸம்மயமுள்ளது. தானேப்ராப்யனென்னுமிடத்திலும், தானே விரோதி போக்குமென்னு மிடத்திலு முண்டான ஸம்மயங்களை யறுத்துக்கொண்டுவந்துதோன்றும். இவனுக்குஸம்மய நிவர்த்தி பண்ணுவது எத்தாலேயென்னில்; (அழகன்) “ஶிஷ்யஸ்தேஹம் ஶாதி மாம் த்வாம் ப்ரபந்நம்” “மிஷ்யஸ்தேஹம் மாதிமாம்த்வாம்ப்ரபந்நம்” என்றுஅர்ஜுநனுக்குஉபதேசத்தாலே ஸம்சயத்தையறுத்தானத்தனை, அளவில்லாதார்க்கு அழகாலே ஸம்மயத்தையறுத்துக்கொண்டுவந்து, தோன்றும்-ப்ரகாமிக்கும். “திருமேனியடிகளுக்கு” என்றும், “கண்டவாற்றாற்றனதேயுலகெனநின்றான்” என்றும்சொலலுகிறபடியே-கண்டபோதேஸர்வாதிகவஸ்துவென்று நிர்ணயிக்கலாம்படியிறே திருவடிவுதானிருப்பது. (ஊரரங்கமன்றே)இவ்வழகு ஒருதேமவிமேஷத்திலே போனாலன்றோ அநுபவிக்கலாவதென்ன; அதுவேண்டா, ஸம்ஸாரத்துக்குள்ளே கோயிலிலே அநுபவிக்கலா மென்கிறார். பரமபதம் கலவிருக்கை, நததமகோயில் என்னும்படியாயாய்த்துக் கோயிலில்நித்யஸந்நிதியிருப்பது. ... ... ... ... (கரு)

அ.—பதினாறும்பாட்டு. (சூதனாய்) ப்ராப்யமும் ப்ராபகமுந்தானே யென்னுமிடத்தில் ஸம்மயத்தை யறுத்துத் தந்தாப்போலே, ததநந்தரபாவியான ஆதரத்தைத் தன்பக்கலிலே விஷயாநுகுணமாகப் பெருகும்படி பண்ணினானென்கிறார்.

சூதனாய்க்கள்வனாகித்தூர்த்தரோடிசைந்தகாலம்
மாதரார்கயற்கணென்னும்வலையுட்பட்டழுந்துவேனைப்
போதரேயென்றுசொல்லிப்புந்தியிற்புகுந்துதன்பால்
ஆதரம்பெருகவைத்தவழகனூரரங்கமன்றே. (கசு)

ப-ரை.—சூதனாய் - ஈச்வரனும தர்மாதர்மங்களுமில்லை என்றுசொலலுமவனாய், கள்வனாகி - ஈச்வரசேஷமான ஆதமவஸ்துவையென்னதென்றுசொல்லுமவனாய், தூர்த்தரொடு - விஷயாநதர ப்ரவணரோடே, இசைந்தகாலம்-பொருந்திப்போநதகாலததிலே, மாதரார் - ஸ்திரீகளுடைய, கயல்-கயல்போலே அழகிதான, கணணென்னும - கண்களாகிற, வலையுள்பட்டு - வலையிலே

---

ஷட்விமமகனீம்வரனென்றவிடத்திலே “தம் ஷட்விம்ஶகமித்யாஹுஸ்ஸப்தவிம்ஶம் ததாபரே” “தம்ஷட்விம்மக மித்யாஹுஸ்ஸப்தவிம்மந்தாபர:”. இத்யாதி. வடிவழகுஸர்வாதிகத்வ ப்ரகாமகமானாப்போலே ப்ராப்யப்ராபகவிஷயமான ஸம்மயத்தையும் அநுவர்த்திப்பிக்குமென்று, “திருமேனியடிகளுக்கு” இத்யாதி வாக்யங்களுக்கு தாத்பர்யம். ... ... ... ... ... (கரு)

யகப்பட்டு,அழுந்துவேனை - அழுந்திக்கிடக்கிறவென்னை, போதரேயென்றுசொல்லி - வாவென்றுசொல்லி, புந்தியுள்புகுந்து- என் மநஸ்ஸிலேவந்துபுகுந்து, தன்பால்-தன்விஷயத்திலே, ஆதாரம்பெருகவைத்த - அன்பை மிகவும் பெருகப்பண்ணின, அழகன் உளர் - அழகைநிரூபகமாக வுடையவனுடைய தேசம், அரங்கமன்றே - கோயிலன்றோ வென்கிறார்.

(சூதனாய்க்கள்வனாகி) தம்முடைய பூர்வவ்ர்த்த மருளிச்செய்கிறார். சூதாவது - பரஹ்யதோஹாரத்வம். களவாவது-பரத்ரவ்யத்தை யென்னதென்றிருக்கை. ப்ரமாண விஷயமான வர்த்தத்தையில்லையென்கை. இனி காஷ்டாபஹாரம் பண்ணினவனுக்கும், ரத்நாபஹாரம் பண்ணினவனுக்கும் அபஹாரமொத்திருக்க, த்ரவ்ய வைஷம்யத்தாலே தோஷமும் நெடுவாசி பட்டிருக்கும்; சண்டாள த்ரவ்யத்தை அபஹரித்தார்க்கும் வஸிஷ்டத்ரவ்யத்தை அபஹரித்தார்க்கும் த்ரவ்யம் ஒன்றானாலும் ஸ்வாமிகளுடைய வைஷம்யத்தாலே தோஷம் நெடுவாசி பட்டிருக்கும். இத் த்ரவ்யம் ஸ்ரீ கௌஸ்துபம்போலே ஈஸ்வரனுக்கு ஸ்ப்ருஹணீயமான ஆத்ம த்ரவ்யம்,உடையவனும் ஸர்வேஸ்வரனாகையாலே தோஷத்துக்கு அவதியில்லையென்கை. ஆக, களவாகிறது - ஈச்வர சேஷமான வாத்மவஸ்துவை "என்னது" என்றிருக்கை.சூதாவது-பரஹ்யதோ ஹாரத்வம். அதாவது - ஸத்வ்ர்த்தனா யிருப்பானொருவன் பரஹேஷமாய்க் கொண்டு ஆத்மஸ்வரூபமுண்டு, ஹேஷியான ஈஸ்வரனுமுண்டு, தர்மா தர்மங்களு முண்டென் றிருந்தால்,அவை யெல்லாம் பொய்காணென்று அவனை விப்ரலம்பித்துத் தன்படியாக்கிக் கொள்ளுகை.அகவாயில் நினைவு இதுவானால் பின்னையிதுக்கு வர்த்தகரா யிருப்பாரோடேயிறே ஸஹவாஸம்பண்ணுவது (தூர்த்த ரோடிசைந்தகாலம்)ப்ராப்தனான ஸர்வேஸ்வரனைவிட்டு அப்ராப்த விஷயங்களிலே அதிப்ரவணரோடே பொருந்திப்போந்தகாலம். இப்படிப் போந்தகாலத்தை ஸ்மரிக்கையுங்கூட அஸஹ்யமா யிருக்கிறதாய்த்து இவர்க்கு. இப்படி அநர்த்தப்பட்டுப் போந்தகாலத்துக்குத் தொகையில்லை கிடீர்.

---

பதினாறும்பாட்டு.—(சூதனாயிதயாதி) பரத்ரவ்யத்தை யென்னதென்றிருக்கையாவது - பகவதீயமான வாத்மவஸ்துவை என்னதென்றிருக்கையென்றுவிவக்ஷித்து, அதினுடையக்ரௌர்யத்தை ஸதர்ஷ்டாந்தமாக வருளிச்செய்கிறார் (இனி காஷ்டாபஹார மித்யாதி.) "த்ருணகாஷ்டாபஹரேண-த்ர்ணகாஷ்டாபஹரேண" இத்யாதி. தூர்த்தரோடிசைந்துமாதரார்கயல்கணென்று வலையில்பட்டு அழுந்துவேனையென்னாதே, "காலம்" என்று விஸேஷித்ததுக்கு தாத்பர்யம் (இப்படி பொருந்தினலித்யாதி.) ஆனால போது என்னாதே, "காலம்" என்பானென்னென்ன; நிரூபகதகாலஸம்பந்தம் காலதைர்க்ய பரமாகையைப்பற்றவென் றருளிச்செய்கிறார் (இப்படி அநர்த்தப் பட்டித்யாதி.)

ஆத்மாவுக்கு நிலைநின்ற ஸ்வரூபம் வைஷ்ணவ ஸஹவாஸமேயா யிருக்க, அநர்த்தஹேதுவான ஸ்வபாவத்தை யுடையவர்களோடே காலத்தைப் போக்குவதே. பாகவத ஸஹவாஸம் பகவத் விஷயத்தோடே மூட்டிவிடுமோபாதி, விபரீதருடைய ஸஹவாஸம் விஷயப்ராவண்யத்தோடே மூட்டிவிடுமிறே. (மாதரார் கயற்கணென்னும் வலையுள்பட்டழுந்துவேனை) ஸ்த்ரீகளுடைய கயல்போலே முக்த்தமாயிருந்துள்ள கண்ணென்கிற வலையிலே யகப்பட்டுக் கால்வாங்கமாட்டாத வென்னை. ஜாதிமாத்ரமே பற்றாசாக மேல்விழுமதொழிய ஜந்மவ்ர்த்தங்க ளாராயவறியான், கண்ணினுடைய ஆகர்ஷகமே யறியு மித்தனை. அகவாய்மயிர்க்கத்தியாயிருக்க இவனையொழியத் தங்களுக்குச்செல்லாமை தோற்றும்படியாயாய்த்துப் பார்ப்பது. "கண்" என்றுபேராய்வலையின் கார்யமேயாய்த்துபலிப்பது. அதுதானும் மணிவலையிறே. கண்ணுக்குள்ளே மணியுமுண்டிறே; அத்தைப்பற்ற "வலை" என்கிறது. புறம்பு கால்வாங்கவொண்ணாதபடி கண்ணைக்காட்டி, தாம் கிட்டாதே அகலாநிற்கும் ஸ்வபாவத்தை யுடையவர்களோடே கலந்தானாய்த்து. அதுக்கடி, கிட்டினவன்று அபிநிவேஶத்தோடே போகோபகரணங்களைக் கொண்டிழிந்த விவன் தனக்கு ஸ்நாநீயங்கொண்டு புறப்படவேண்டும்படி யிறே அதின் தண்மையிருப்பது. இவன்றான் அவிவேகியாகையாலே அகவாயாராயமாட்டாதேவாய்கரையிலேயழிந்திநோவுபடாநிற்கும். (வலையுள்பட்டழுந்துவேனை) மீண்டு கால்வாங்கவொண்ணாது, அதுதன்னில் அநுபாவ்யமொன்றில்லை, கிடந்து உழைக்குமித்தனை. விஷயப்ராவண்யத்தால்ஸித்தித்தது க்லேசமே யாய்விட்டது. இவ்வோவிஷயங்களிலே யகப்பட்டுக்கால்வாங்கமாட்டாதே நோவுபடுகிறபடியைக்கண்டு, பெரியபெருமாள், ஆழ்வீர், நீர் நினைத்திருப்பதென், ஆசைப்பட்டிருப்ப தென்னென்ன; இப்படி யென்னை நோவுபடுத்தின கண்ணை ஒருதார்மிகன் கொண்டுவந்து காட்டுமாகிலாமிறே யென்றுகண்ணழகியாரை யுகப்பேனென்ன; "கண்ணின் வாசியறிந்தார்" என்றுதிருத்திரையைவிட்டு நின்று திருமுகத்தைக் காட்டினன். * உயிர்க்கெல்லாம் தாயாயளிக்கின்ற தண்டாமரைக்கண்களைக் காட்டி யருளி, ஆழ்வீர்! நீர் ஆசைப்பட்ட கண்ணுடையார் இங்கே காணும், இங்கே பாரீரென்ன;

---

"தூர்த்தரோடு" என்றதுக்கு வாஸனை (ஆத்மாவுக்கித்யாதி. வலையின்கார்யமின்னதென்று உபபாதகம் (புறம்பித்யாதி.) (அது கிட்டின) இத்யாதிவாக்யத்துக்கு தாத்பர்யம் - ஸ்வதோஷந் தங்களுக்கு அவிதிதமாகையாலே அதில் நிற்பர்களென்றபடி.

"இவைசிலகண்களிருந்தபடி யென்" என்று தாம் முன்பு அநுபவித்தகண்களிற்காட்டில் விலக்ஷணமுமாய் ப்ராப்தமுமாயிருக்கையாலே இவருடைய நெஞ்சு விஷயாந்தரங்களில் நின்றும் மீண்டது. "రామః కమలపత్రాక్షః సర్వసత్త్వమనోహరః । రూపదాక్షిణ్యసంపన్నః ప్రసూతో జనకాత్మజే" "ராமகமலபத்ராக்ஷ ஸ்ஸர்வஸத்வமநோஹர:। ரூபதாக்ஷிண்யஸம்பந்ந: ப்ரஸூதோஜநகாத்மஜே."

(புந்தியுள்புகுந்து) இவ்வளவிலே விலக்குகைக்குபரிகரமில்லாதபடிநினைவுக்குவாய்த் தலையைப்பற்றினன். நாம்புகுமிடத்தில் இவர்க்கு விலக்காமையுண்டா யிருந்ததென்று இதுவே பற்றாசாக விவர் திருவுள்ளத்திலே வந்து புகுந்தானென்றுமாம். புகுந்து செய்ததென்னென்னில்; (தன்பாலாதரம் பெருகவைத்த) அப்ராப்தவிஷயத்தில் பண்ணிப்போந்த ஆதரம் தன்பக்கலிலே யாம்படியாகப் பண்ணினன். பாழிலேபாய்கிறநீரைப் பயிரிலே வெட்டிவிட்டாப்போலே ஆதரத்தை ஸப்ரயோஜநமாக்கினன். (பெருக) "அதனில்பெரிய" என்னுமாப்போலே அநுபாவ்யனான தன்னளவன்றிக்கே பெருகும்படியாக வைத்த. இதுக்கடியாகத் தந்தலையிலொன்றுங் காணாமையாலே ஈதொருதண்ணீர்ப்பந்தல்வைத்தானத்தனை கிடீரென்கிறார். இப்படி ஆதரத்தைக் கரைபுரளப் பண்ணின பரிகரமேதென்னில்; (அழகன்) "பேரமர்காதல்கடல்புரைய விளைவித்த காரமர்மேனி" என்னக்கடவதிறே. பக்தி வர்த்தகமான கர்மஜ்ஞாநஸ்தாநத்திலே நிற்கிறதாய்த்து இவர்க்குவடிவழகு. இவர்க்கு ஸம்ஶயத்தை அறுக்கைக்கும், ஆதரத்தைப் பெருக்குகைக்கும், ஸாமக்ரி ஒன்றேயாய்த்து. (அழகன்) அழகையே நிரூபகமாகவுடையவன். (ஊரரங்கமன்றே) இவர் திருவுள்ளத்தில் புகுருகைக்குஅவஸரப்ரதீக்ஷனா யிருந்தவனூர் கோயிலென்கிறார். பரமபதம் கலவிருக்கை யென்னும்படி நித்யவாஸம்பண்ணுகிறதேசம். ருசிபிறந்தபோது புக்கநுபவிக்கலாம் தேஶமிறேயிது. ... ... (௧௬)

அ.—பதினேழாம்பாட்டு. (விரும்பி) கீழ் - ஆதரம் பெருகினபடிசொல்லிற்று; இதில் - அகவாயில் ஆதரம் விளைந்து புறவாய் கட்டழியாமலிருக்கையன்றிக்கே, சக்ஷுராதிகரணங்களும் தன்னைக் கண்டுசேதநஸமாதியாலே களிக்கும்படி பண்ணினனென்கிறார்.

விரும்பிநின்றேத்தமாட்டேன் விதியிலேன்மதியொன்றில்லை
இரும்புபோல்வலியநெஞ்சமிறையிறையுருகும்வண்ணம்
சுரும்பமர்சோலைசூழ்ந்தவரங்கமாகோயில்கொண்ட
கரும்பினைக்கண்டுகொண்டென்கண்ணிணைகளிக்குமாறே. (௧௭)

---

(நித்யவாஸம் பண்ணுகிற தேஶம்) என்றதால் பலிதம் (ருசிபிறந்தபோதித்யாதி.) ... ... ... ... ... (௧௬)

ப-ரை.—விரும்பி - ஆதரத்தோடே, நின்று - ஒருபடிப்பட நின்று, ஏத்த மாட்டேன் - ஸ்தோத்ரம் பண்ணமாட்டாதவனாய், விதியிலேன் - அஞ்ஜலியஞ் தம் முதலிய காயிகவ்யாபாரங்கள் பண்ணுதவனாய், மதியொன்றில்லை-ஸர்வே ச்வர னொருவனுளனென்று அறியாதவனாய்,இரும்புபோல்-இரும்பைப்போலே வலிய - பலிஷ்டமான, நெஞ்சம் - என்னுடைய மநஸ்ஸானது, இறை யிறை- கொஞ்சம் கொஞ்சமாய், உருகும் வண்ணம் - உருகும்படிக்கீடாக, சுரும்பு- வண்டுகள், அமர் - பொருந்தியிருந்துள்ள, சோலைசூழ்ந்த-சோலையாலே சூழ பபட்டிருப்பதாய், மா-ச்லாக்யமான, அரங்கம் - திருவரங்கத்தை, கோயில் கொண்ட - வாஸஸ்தாநமாகக் கொண்டிருக்குமவனாய், கரும்பினை - கரும்பு போலே ரஸாவஹனானவனை, இணை - ஒன்றுக்கொன்றொப்பான, என்கண்-என் கண்கள், கண்டுகொண்டு - பார்த்தவண்ணமாய், களிக்குமாறே - களித்துப் போரும்படி யென்னென்று ப்ரீதராகிறார். (கள)

வ்யா.—(விரும்பிநின்றேத்தமாட்டேன்) மநோ வாக்காயங்க ளுடைய பூர்வவர்த்தத்தையருளிச்செய்கிறார். விஷயம் விலக்ஷண மானால் அத்யாதரத்தோடே வ்யவஹிதனாய் நின்று ஸ்தோத்ரம் பண்ணவேணுமிறே, அதுசெய்யமாட்டிற்றிலேன். "సోహంస్తౌతునచ సామర్థ్యవాన్" "ஸோஹம்ஸ்துதௌ நசஸாமர்த்யவாந்" என்னு மாப்போலே பகவத்விஷயத்தைப்பேசவென்றால் வாகிந்த்ரியத்து க்கு ஶக்தியில்லை, வ்யதிரிக்தவிஷங்களைப்பேசவென்றால் ஆதரமுண் டாய் ஶக்தியுமுண்டாயிருக்கும். வாக்வ்யாபாரம்புறம்பேயானாலு ம் காயிகவ்யாபாரங்களில் நம்பக்கல்பண்ணிற்றேதேனுமுண்டோ வென்னில்;(விதியிலேன்) "విధిర్విధానమ్" "விதிர்விதாநம்" என்கிற படியே காயிகவ்யாபாரத்தைச் சொல்லுகிறது. உன்னை யுத்தேஶி த்து உன்பக்கலநுகூலமாக விதுக்கு முன்பு கையால் ஒன்றுஞ்செ ய்திலேன். "సాంజలిర్హ్రియా హరింస్తౌతి" "ஸாஞ்ஜலிஹ்ரியா ஹரிம்ஸ்தௌதி" என்கிறவதுவும, "యౌతకపూజాకరౌకరౌ" "யௌதகபூஜாகரௌக ரௌ" என்கிறவதும், புறம்பேதப்பிற்றாகிலும்நெஞ்சாலேதான்நம் மை நினைத்தீரோவென்ன; (மதியொன்றில்லை) உன் வாசியறியா தொழிந்தால நீயொருவனுண்டென் றிருக்கு மறிவுங் கூட இல்லை. உன்னையொழிந்த ஸகலபதார்த்தங்களினுடைய ஸ்வரூப ஸ்வபாவ ஙகளையுள்ளபடி யறியக்ஷமனாயிருப்பன்;உன்னளவில்வந்தால் உன் ஸத்பாவத்திலும்ஜ்ஞாநமில்லை. "అసద్బ్రహ్మేతివేదచేత్ - అసన్నేవసభవతి" "அஸத்ப்ரஹ்மேதி வேதசேத்-அஸந்நேவஸபவதி" என்னக்கட வதிறே. "విద్యాన్యాశిల్పనైపుణమ్" "விதயாந்யாஶில்பநைபுணம்."

---

பதினேழாமபாட்டு.—(விரும்பியித்யாதி.) (ஸத்பாவத்திலும் ஜ்ஞாநமில்லை)என்கைக்கு,இது இல்லாவிடில்வருமநர்த்தமேதென் ன; (அஸத்ப்ர்ஹ்மேதீத்யாதி.)ப்ரஹ்மவேதநமில்லாததுகொண்டு "అసన్నేవ" "அஸந்நேவ" என்று அவதரிக்கிறதென்,அல்லாதபதா ர்த்தவிஷயஜ்ஞாநமுண்டேயென்ன; (విద్యాన్యా-வித்யாந்யேத்யாதி.)

இப்படிமனோவாக்காயங்களை அந்யதாவாகக் கார்யங்கொண்டீராகில்,ப்ரதாநமான மநஸ்ஸை மேலேதிருத்திக் கொள்ளுகிறோமென்ன; (இரும்புபோல் வலியநெஞ்சம்) தேவரீர்க்குத் திருத்திக் கொள்ளுகைக்கு யோக்யதையில்லை. இரும்பாகில் அக்நியாலே நிமிர்த்துக்கொள்ளலாம்; இது ஒருபடியாலும் திருத்தவொண்ணாதென்கை. இதுக்குமுன்பு-பூர்வாவஸ்தையில்தாம்நின்றநிலையை யருளிச்செய்தாராய்,இதுக்குமேல்-அத்தலையில்ப்ரபாவஞ்சொல்லுகிறார்(இறையிறையுருகும்வண்ணம்)இவ்வன்மையோடே முடிந்து போகாதபடி இப்போதுஎன்மநஸ்ஸை சிதிலமாம்படிபண்ணினான். கடிநஸ்தலத்திலேவர்ஷித்தால்காடிந்யமடங்க் நெகிழ்ச்சிக்குறுப்பாமாப்போலே, விஷயாந்தரத்தாலே மநஸ்ஸு அதிகடிநமானாலும்சிதிலமாம்படி வயிரவுருக்காயிறே பகவத்ப்ரபாவமிருப்பது. (சுரும்பமரித்யாதி) உருக்கினவிஷயந்தானிருக்கிறபடி. வண்டுகள்பொருந்தி விடமாட்டாத சோலை; பரிமளம் படிந்தாப்போலே தன்னிலே பிறந்ததென்னும்படியாயாய்த்து வண்டுகள்படிந்து கிடக்கும்படி.மதுமாறிலிறே அது கால்வாங்குவது.மதுமாறுவது செவ்விமாறிலிறே.ஆக நித்யவஸந்தமான சோலையென்கை.சோலையின்போக்யதை புரணியென்னும்படியாயாய்த்து ஊரில்போக்யதை யிருப்பது.பரமபதத்தோபாதி ஸ்லாக்யமான கோயிலாகக் கொண்டான். (கரும்பினை) "கரும்பு"என்றது-கைதொட்டால் பிசகுநாறுதேயிருக்கும் போக்யமான வஸ்துவை. ப்ராப்தமுமாய் ஸுஶீலமுமா யிருக்கச்செயதேயும்போக்யதையாய்த்துமிக்கிருப்பது;"கன்னல்"என்று தொழிந்தது-பாகவிசேஷத்தாலே ஆக்கனுய்வந்தஸாரஸ்யமல்ல, ஸத்தாப்ரயுக்தமான ஸாரஸ்யமென்கைக்காக. "[Grantha]" "ரஸோவைஸ:" என்னக்கடவதிறே. (கண்டுகொண்டு) "நிதியெடுத்துக் கொண்டு"என்னுமாப்போலே கண்ணாலே பருகும் கரும்பாய்த்து இது."[Grantha]""லோசநாப்யாம்பிபந்நிவ."(என்கண்ணிணைகளிக்குமாறே) நரகாவஹமானவிஷயங்களைக்கண்டுகளித்துப போந்த வென்கண்கள்கிடீா இவ்விஷயத்தைக்கண்டுகளிக்கின்றன. (இணை) களிப்புக்கு ஒன்றுக்கொன்று ஒப்பாமித்தனைபோக்கிவேறுபமாநமில்லை. முக்தர்ஸதாதர்ஶநம் பண்ணிக் களிக்கும் களிப்பும் இக்கண்ணாலே யிப்படி களிக்கிற விதுக்கு ஸத்ருஶமன்றிறே.காணுதிபனுன என்னையொழியத் தானே களியா நின்றன.

---

இரும்புபோலிமாத்ர மென்னும்படி வலியநெஞ்சமென்றபடி. புரணி-ஸப்ளா. "என்கண்ணிணை" என்றத்தால்வ்யாவ்ர்த்தி(முக்தரித்யாதி.)இக்கண்ணாலே என்றது-விஷயாந்தரப்ரவணமான இக்கண்ணாலேஎன்றபடி . தாத்பர்யாந்தரம் (காணுதிபதியித்யாதி.)()

இந்த்ரியங்கள் ஜ்ஞாந ப்ரஸரத்வாரமென்கிறவநுபவத்துலேந்து சேதநஸமாதியாலே தானே களியா நின்றன.] ராமம்மேநுகதாத்ருஷ்டி:- ராமம்மேநுகதாத்ர்ஷ்டி:] கர்த்தாவையொழியவே கரணங்களுக்கே அந்வயவ்யதிரேகங்களிலே சோகஹர்ஷங்க ளுண்டாம்படியிறே விஷயஸ்வபாவமிருப்பது. ... .. . (கள)

அ.—பதினெட்டாம்பாட்டு. (இனிதிரை) கண்களினுடைய் களிப்புக்குப் போக்குவீடான ஆநந்தாஶ்ருக்கள் ப்ரவஹிக்கையாலே குட்யாதி வ்யவதாநம்போலே அநுபாவ்ய விஷயத்தைமறையாநின்றதென்று வெறுக்கிறார்.

இனிதிரைத்திவலைமோதவெறியுந்தண்பரவைமீதே
தனிகிடந்தரசுசெய்யுந்தாமரைக்கண்ணனெம்மான்
கனியிருந்தனையசெவ்வாய்க்கண்ணனைக்கண்டகண்கள்
பனியரும்புதிருமாலோவென்செய்கேன்பாவியேனே. (கஅ)

ப-ரை.—இனிது-இனிதாக, திரை-திரைகளிலுண்டான, திவலை-சிறுதிவலைகளானவை, மோத-அடிக்க, எறியும் - கிளராநிற்பதாய், தண் - குளிர்ந்திருந்துள்ள, பரவைமீது - ஸமுத்ரத்தை யொத்த காவேரி மத்யத்திலே, தனிகிடந்து-தனியனாய்க் கண்வளர்ந்தருளி, அரசுசெய்யும்-சேதநருடைய அஹங்காரத்தைப்போக்குகிற, தாமரைக்கண்ணன் - புண்டரீகாக்ஷனாய், எம்மான-என்னை யெழுதிக்கொண்ட ஸர்வேச்வரனுடைய, கனியிருந்தனைய - கனியையொத்து, செம் - சிவந்திருந்துள்ள, வாய் - திருவதரத்தையும், கண்ணனை - திருக்கண்களையுமுடையவனை, கண்டகண்கள - காணப்பெற்ற கண்களானவை, பனி- குளிர்ந்த, அரும்பு - ஆநந்தாசருக்கள, உதிரும் - ப்ரவஹியாநிற்கையாலே, பாவியேன் - நன்றாக ஸேவிக்கைக்கு பாக்யம்பண்ணாத நான், என்செய்கேன்- செய்யக்தக்க தெனனென்று அநுபவிக்கிறார். (கஅ)

வ்யா.—(இனிதிரைத்திவலைமோத) "ஒண்சங்கதை வாளாழியான்" என்னுமாப்போலேஇவ்விடமுமொருகடைக்குறைத்தலாயிருக்கிறதாய்த்து. இனிதாகத் திரைகளிலுண்டான திவலையானது ஸ்பர்சிக்க. மீலைபோலே சிலபெருந்திரைகள்வந்துமுறிந்து சிறுதிவலையாய், துடைகுத்தயுறங்குவாரைப்போலேதிருமேனியைஸ்பர்சியாநிற்கும்; அவை அங்குத்தைக்கநுகூலமாக ஸ்பர்சியாநிற்கச்செய்தேயும், இதுவும் பொறாததிருமேனியின் ஸௌகுமார்யத்தை யநுஸந்திக்கையாலே, "மோத" என்கிறாராய்த்து இவர். "அரக்கர்கோனைச்செற்றநஞ்சேவகரை" என்று- ஆஶ்ரயண வேளையிலேசக்தியையருளிச்செய்தார்; இப்போதுபோகவேளையாகையாலேஸௌகுமார்யத்தையநுஸந்திக்கிறாரிறே. (எறியுந்தண்பரவைமீதே) திரைக்கிளர்த்தியையுடைத்தாய்ச்ரமஹரமாயிருந்துள்ளஸமுத்ரத்தின்மேலே சாய்ந்தருளுமாப்போலே வந்து கண்வளர்ந்தருளுகிறவனென்னுதல்; அன்றிக்கே, பரப்பாலும் ஜலஸம்ருத்தியாலும் இதுதன்னையே ஸமுத்ரமாகச் சொல்லிற்றாகவுமாய்

(தனிகிடந்து) நினைவறிந்துபரிமாறுவார் ஒருநாடாகவுடையவன்கிடீர் இங்கேவந்து தனியே கண்வளர்ந் தருளுகிறான். இப்படிக்கண்வளர்ந்தருளாநிற்க ஒருகார்யமற்று அந்யபராராய்த் திரியாநின்றார்களிறே ஸம்ஸாரிகள். "தனியேன் வாழ்முதலே" என்பாரொருதனியனைக் கிட்டுமோவென்னும் நசையாலேயிறே தனியேவந்துகண்வளர்ந்தருளுகிறது. அதுக்குடலாகச்செய்கிற கார்யந்தா னேதென்னில்; (அரசுசெய்யும்) அரசுசெய்கையாவது-வன்னியமறுக்கை.வன்னியமாகிறது-"அஹம்" என்றிருக்கை. அத்தை அறுக்கையாகிறது - "நம:" என்னப் பண்ணிக்கொள்ளுகை. "நமஉக்திமேவ வாதிந:" "நம இத்யேவவாதிந:" என்கிறபடியே-நித்யஸூரிகளுடைய யாத்ரையே இங்குள்ளார்க்கும் யாத்ரையாம்படி பண்ணிக்கொள்ளுகை. இவ்வன்னியமறுக்கைக்குப் பரிகரமேதென்னில்; (தாமரைக்கண்ணன்) கையிலேப்ரஹ்மாஸ்த்ர மிருக்க வெல்லவொண்ணாத விடமில்லையிறே; அங்குள்ளாரைவென்ற பரிகாரத்தைக்கொண்டாய்த்து இங்குள்ளாரைவென்றது. "தாமரைக் கண்ணனைவிண்ணோர் பரவுந் தலைமகனை" என்னக்கடவதிறே. அவர்களுக்குபோகோபகரணமானவித்தைக்கொண்டுகிடீர் இங்குள்ளாருடையவிரோதியைப்போக்குவது. இப்ப்ரஹ்மாஸ்த்ரத்துக்குஅகப்பட்டாராரொன்னில்; (எம்மான்)நான் தோற்று என்னை யெழுதிக்கொடுத்தேன். ஸம்ஸாரிகளுக்கும், இவ்வருகானவென்னைத் தோற்பித்தகண்களுக்கு இனிவெல்ல வொண்ணாத நிலமுண்டோ.

(கனியிருந்தனையசெவ்வாய்) அக்கண்ணாலே நிரமமரானார்க்கு அநுபாவ்யமான விஷயமிருக்கிறபடி. கண்டபோதே நுகரலாம் கனிபோலேயாய்த்துத்திருவதரத்தில்போக்யதையிருப்பது. "இருந்து" என்றது-அச்செவ்வி என்றுமொக்க ஏகஸ்ரூபமாயிருக்கிறபடி. "ஸதைகரூபரூபாய" "ஸதைகரூபரூபாய" என்னக்கடவதிறே (கண்ணனை)பெரியபெருமாளைத்திருவடித்தொழுதால், "அவதாரத்தில் பிற்பாடர்க்கு முகவுகைக்காக க்ருஷ்ணன் வந்து கண்வளர்ந்தருளுகிறான்" என்று ஸ்மரிக்கலாம்படியாயத்திருப்பது.

---

பதினெட்டாம்பாட்டு.—(இனிதிரையித்யாதி)அப்படிநித்யஸூரிகளை யுடையவன் இங்கே தனியே கண்வளர்ந்தருளுகைக்குஹேதுவேதென்ன; அருளிச்செய்கிறார் (தனியேன்வாழ்முதலித்யாதி.) அதுக்குடலாக-இவனைப் பெறுகைக்குடலாக வென்றபடி. (அவர்களுக்கு) இத்யாதி வாக்யம் தாத்பர்யாந்தரமாதல். "எம்மான்" என்று கண்ணழகுக்குத்தோற்றவர்நீரொருவருமேயானால் ஸம்ஸாரிகளை வன்னிய மறுக்கைக்குக்கண்ணழகு பரிகரமாய்த்ததில்லையேயென்ன; அருளிச்செய்கிறார்(ஸம்ஸாரிகளுக்கு மித்யாதி.)

யசோதைப்பிராட்டி பிள்ளைமனங்கன்றாமல் தீம்பிலே கை வளரும்படி வளர்த்தமொசுப்பெல்லாம் தோற்றியிருக்கும் பெரிய பெருமாளைக்கண்டால் என்றும், வஸிஷ்டாதிகளாலேஸஶிக்ஷிதரா ய் வார்ந்துவடிந்த விநயமெல்லாந்தோற்றும்படியான சக்ரவர்த்தி த்திருமகனை ஸ்மரிக்கலாம்படியிருக்கும் நம்பெருமாளைக்கண்டால் என்றும் பட்டரருளிச்செய்வர். (கண்டகண்கள்) அநாதிகாலம் இழந்த விழவு தீரக்காணப்பெற்ற கண்கள்.

(பனியரும்புதிருமாலோ)கண்டநுபவிக்கப்பெற்றப்ரீதியாலே ஆநந்தாஶ்ருப்ரவஹியாநின்றது. அநுபவஜநித ஹர்ஷமடியாக வந்ததாகையாலே அதிசீதளமாய், வறுத்தபயறு முளைக்கும்படி யிருக்குமென்கை. விரகமடியாகவந்ததாகிலிலே உஷ்ணமாயிருப் பது. "ఆహ్లాదశీతనేత్రాంబు" "ஆஹ்லாதஶீதநேத்ராம்பு" என்னக்கட வதிறே.(என்செய்கேன்பாவியேனே)கண்ணநீர் அருவிகள்போலே மறைக்கையாலே,"என்செய்கேன்"என்கிறார். பெறுதற்கரியவிஷய த்தைக்கண்டநுபவிக்கப்பெற்றிருக்க இதுக்குஇடைச்சுவருண்டா வதே! "என்செய்கேன் பாவியேன்என்கிறார்.""ஆலோ"என்றது- விஷாதாதிசயஸூசகம். அத்தலையில்வைலக்ஷண்யத்தையளவுபடு த்தவொண்ணாது, அநுபவஜநிதஹர்ஷத்தை அளவுபடுத்தப் போகி றதில்லை,என்செய்கேன்பாவியேனென்கிறார். கண்ணநீர்ஊற்றுமா றுதபடிவெள்ளமாய்ச்செல்லுகையாலே இத்தைமாற்றியொருக்கா ல்கண்டதாய விடப்போகிறதில்லை, இவ்விஷயத்தை அநாதிகாலம் பாபத்தாலே அநுபவிக்கப்பெற்றிலேன்,இன்றுகண்ணநீர்மறைக்க அநுபவிக்கப்பெற்றிலேன்,என்கார்யம்வெள்ளக்கேடும்வறட்கேடு மாய்த்தென்கிறார். அங்ஙனன்றியே,இப்போது இழவுண்டாய்"பா வியேன்"என்கிறாரல்லர், பாட்டுக்கேட்டு ஈடுபட்டுப் பாவியேனெ ன்பாரைப்போலே பாவியேனென்கிறொன்றுஞ் சொல்லுவர்கள்.

அ.—பத்தொன்பதாம்பாட்டு. (குடதிசை)சக்ஷுராத்யவயவ ங்களுக்குப் பிறக்கிற விக்ருதிகளேயன்றிக்கே, ததாச்ரயணமான அவயவியான சரீரந்தான் கட்டழியாநின்றதென்கிறார்.

குடதிசைமுடியைவைத்துக்குணதிசைபாதம்நீட்டி
வடதிசைபின்புகாட்டித்தென்றிசையிலங்கைநோக்கிச்
கடல்நிறக்கடவுளெந்தையரவணைத்துயிலுமாகண்
டுடலெனக்குருகுமாலோவென்செய்கேனுலகத்தீரோ. (௧௯)

---

மொசுப்பு-செருக்கு. "பனி" என்று-குளிர்த்தியைச் சொன் னதுக்குதாத்பர்யம் (அநுபவஜநிதேத்யாதி.) பயறுமுளைக்கும்படி யென்றது - பயிர்குளிர்ந்தநிலத்திலே முளைக்குமாகையாலே, இங் கும் கண்ணீரின் குளிர்த்தியாலே பயிர்முளைக்கும்படி யிருக்குமெ ன்றபடி. ... ... ... ... (௧அ)

ப-ரை.—கடல்நிறம் - கடலோடொத்த நிறத்தையுடைய, கடவுள் - ஸர்வேச்வரனுய், எந்தை - என்னை யெழுதிக்கொண்டவன்; குடதிசை - மேலைத்திக்கிலே, முடியை - உபயவிபூதிக்கு மாகச் சூடின திருவபிஷேகத்தையுடைத்தான திருமுடியை, வைத்து - வைத்தருளி, குணதிசை - கீழைத்திக்கிலே, பாதம் - சேதநர் வாழுகைக்கு இழியும் துறையான திருவடிகளை, நீட்டி - என்னளவும் வர நீட்டி, வடதிசை-ஸம்ஸ்கர்த முரணரான வடதிசையிலுள்ளார்க்கு, பின்பு - பின்னழகை, காட்டி-காட்டியருளி, ஸ்ரீவிபீஷணுழ்வானுக்காக, தென்திசை - தெற்குதிக்கிலுள்ள, இலங்கை - லங்கையை, நோக்கி-கடாக்ஷித்துக்கொண்டு, அரவணை-திருவந்தாழ்வானுகிறதிருவணையிலே, துயிலுமாகண்டு - கண்வளர்ந்தருளுகிறபடியைக் கண்டு, எனக்கு-என்னுடைய, உடல்-சரீரமானது, உருகும் - உருகாநின்றது; உலகத்தீரோ-லோகத்திலுள்ளவர்களே, என்செய்கேன்-என்னசெய்யப் புகுகிறேன். (கக)

வ்யா.—(குடதிசைஇத்யாதி) இவரையுருக்கினபரிகரந்தானிருக்கிறபடி. பூமியை ஸ்ர்ஷ்டித்தது புண்யபாப மிச்ரங்களாயும்பாபப்ரசுரங்களாயுமிருந்துள்ள-மநுஷ்யதிர்யக்ஸ்தாவரங்களாயு மிருந்துள்ளபதார்த்தங்கள் வர்த்திக்கைக்காகவென்றும்,ஆகாஸத்தை ஸ்ர்ஷ்டித்தது புண்யயோநிகளான தேவதைகள் வர்த்திக்கைக்காக என்றும் நினைத்திருப்பர். நடுவில் திக்குக்களுக்கு ஒரு விநியோகமில்லை, இதுவ்யர்த்த ஸ்ர்ஷ்டியோவென்றிருப்பர்;இப்போது அங்ஙனன்று, இதுவும்ஸப்ரயோஜநமென்னுமிடமுங்கண்டார்;—சேதநஸ்ர்ஷ்டி முமுக்ஷு ஸிஸ்ரக்ஷு யானுப்போலேயும், சேதநர் வர்த்திக்கைக்கு லோகஸ்ர்ஷ்டியானுப்போலேயும்,திக்குக்களை ஸ்ர்ஷ்டித்ததும்சேதநர்க்குருசிஜநகமான ஸ்வவ்யாபாரார்த்தமாகக் கண்டதாகாதே! என்றிருக்கிறுர். (குடதிசைமுடியைவைத்து)மேலைதிக்குஸப்ரயோஜநமாம்படி' உபயவிபூதிக்குமாகச்சூடின திருவபிஷேகத்தை யுடைத்தான திருமுடியைவைத்து. "முடியானே"என்கிறபடியே சேஷித்வத்தை யநுஸந்தித்து அத்திககாக வாழும்படியிறே திருமுடியை வைத்தது. (குணதிசைபாதம்நீட்டி) "மூவுலகுந்தொழுதேத்துஞ் சீரடியான்" என்கிறபடியே-ஸகலலோகங்களும்வாழுகைக்கு இழியுந்துறையான திருவடிகளை,கீழைத்திக்குவாழும்படியாகநீட்டி."நீட்டி"என்றது-என்னளவும்வரநீட்டின திருவடிகள் என்கிறுர்.துர்யோதநஸ்தாநம்இங்ஙனேவாழ்ந்துபோனுல்அர்ஜுநனிருப்புவாழச்சொல்லவேண்டாவிறே, "ஆளவந்தார் திருவடித்தொழவெழுந்தருளினுல்'துர்யோதநஸ்தாநம்'என்றுதிருமுடிப்பக்கத்தில்ஒருப்ரதேசத்தில் ஒருநாளுமெழுந்தருளியிருந்தறியார்;திருவாசலுக்குக்கிழக்கு எழுந்தருளியிராத ப்ரதேசமில்லை"என்று பட்டரருளிச்செய்வர்.

---

பத்தொன்பதாம்பாட்டு. (குடதிசையித்யாதி) ஸித்தமான ஆகாரத்தை இவர் இப்போது அருளிச்செய்கிறதுக்கு ப்ரயோஜநமருளிச்செய்கிறுர் (பூமியை ஸ்ர்ஷ்டித்ததித்யாதி.) திருமண்டங்குடி கோயிலுக்குக் கிழக்கேயிறே. என்னளவிலே வரநீட்டினவென்றது - என்னை விஷயீகரிக்கைக்காக வரநீட்டினவென்றபடி.

(வடதிசைபின்புகாட்டி)வடக்குதிக்கு ஆர்யபூமியாகையாலே ஸம்ஸ்க்ருதமுரணராய், ஆழ்வார்களீரச்சொல்லும் நடையாடாத தேசமாகையாலே அத்திக்கைத்திருத்தும்போது பின்பழகெல்லாம் வேணும் என்றிருந்தார். "பூர்வாங்கதநிகாபராங்ககலஹம்" "பூர்வாங்காதநிகாபராங்ககலஹம்" என்னக்கடவதிறே. (தென்திசையிலங்கைநோக்கி)இதுக்குமுன்புத்தைதிக்குக்களைக்கடாக்ஷித்தது அவ்வோ தேசங்களின் வெறுமை தீருகைக்காக; இது தங் குறைதீருகைக்காக. அவை க்ர்பாகார்யம்; இது தன்செல்லாமையாலேயாய்த்து. "அன்பொடு தென்திசைநோக்கிப் பள்ளிகொள்ளும்"என்னக்கடவதிறை.ஸ்ரீவிபீஷணாழ்வானுக்கு வன்னியமறுத்து ராஜ்யத்தைக்கொடுத்து அவன் ஸம்ர்த்தியைப் பார்த்துகொண்டு கண்வளர்ந்தருளுகிறபடியாய்த்து.மாதா ப்ரஜைகளுக்குமுலைகொடுத்து அவற்றின்முகமலர்த்தி காண்கைக்குப் பாங்காகச்சாயுமாப்போலே. "செல்வவிபீடணற்குவேறாக நல்லானை"என்னக்கடவதிறே."விபீஷணன் புகுருமாகில நானும் என்பரிகரமும் விடைகொள்ளுமித்தனை" என்று மஹாராஜர்சொல்ல;"அன்றீன்றகன்றின்பக்கல் வாத்ஸல்யத்தாலேமுன்னணைக்கன்றைக் கொம்பிலும் குளம்பிலும்கொள்ளும் ஸுரபியைப்போலே, ஸபரிசரரான வும்மை விடவேண்டுமளவிலும் விபீஷணனை விடோம்" என்றாரிறே.அந்தமஹாராஜர் தமக்கு ஒருநலிவுவரப்புக்கவளவிலே,"கிம்கார்யம்ஸீதயாமம" "கிம்காயம்ஸீதயாமம" என்றாரிறே.

(கடல்நிறக்கடவுள்)நித்யஸூரிகளுக்கு நித்யாகாங்க்ஷிதமான வடிவையுடைய பரதேவதைகிடீர்-ஒருஸம்ஸாரியைக்குறித்து ஸாபேக்ஷனாய்க்கிடக்கிறான். கடல்போலே கண்டார்க்கு சரமஹரமாயாய்த்து வடிவிருப்பது கடல் வர்ணத்துக்குப்போலியாமித்தனை போக்கிஅப்ராகர்தவஸ்துவுக்குக்குஒப்பாகமாட்டாதிறேயென்கை. (எந்தை) அவ்வடிவைககாட்டி யென்னை யெழுதிக்கொண்டவன். பழங்கிணறு கண்வாருகிறதென், ப்ரக்ருதிவஶ்யனை தாழ்வுக்கெலையானவென்னளவும்வரவன்றோவெள்ளம்கோத்தது."நீசனேன் நிறைவொன்றுமிலேன் என்கண் பாசம்வைத்த பரஞ்சுடர்ச்சோதிக்கே" என்னக்கடவதிறே.(அரவணைத்துயிலுமாகண்டு) விலக்ஷணமான ரத்நத்தை விலக்ஷணமான தகட்டிலே யழுத்தினாப்போலே, திருவநந்தாழ்வான்மேலே சாய்ந்தபின்பாய்த்து இவ்வஸ்து மஹார்க்கமாய்த்து.

---

துர்யோதநஸ்தாநமென்ற ப்ரஸங்கத்தில் ஐதிஹ்யம்.(ஸ்ரீவிபீஷணாழ்வானுக்கு) இத்யாதிவாக்யம். தாத்பர்யாந்தரம்.முந்தினதாத்பர்யத்துக்குச்சேர ப்ரமாணம்(செல்வவிபீடணற்கித்யாதி.) அப்ராக்ர்தவஸ்துவுக்கு என்றது-"கடவுள்" என்றத்தைப் பற்ற ."ஈசன்வானவர்க்கு" என்கிற பாட்டெல்லாம் விவக்ஷிதம்.

(உடலெனக்குருகுமாலோ) திருவநந்தாழ்வான்மேலே கண் வளர்ந்தருளுகிறபடியைக்கண்டு சேதநன்உருகுகையன்றிக்கேஜட மான சரீர முருகா நின்றது. "భగవత్స్వరూపతిరోధానకరీమ్" "பகவத்ஸ் வரூபதிரோதாநகரீம்" என்கிறபடியே - திரோதாயகமான சரீரம் கட்டழியா நின்றது. "దేహయోగాద్వాసోఽపి" "தேஹயோகாத்வா ஸோபி" என்கிறபடியே ஜ்ஞாநஸங்கோசகமான சரீரம், அநுபவ ஜநிதஹர்ஷத்தாலே அழிகிறதிறே. கூடப்புக்க ஸம்ஸாரிகள் எங்க ளுக்கு உடலுருகக் காண்கிறிலோமென்ன; (எனக் குருமாலோ) "ஆலோ" என்று ஆற்றுப்பெருக்கிலே அருக்குகொல்லைகளுடைந் தால் நோக்குகிறவர்கள் கைவிட்டுக் கடக்க நின்று கூப்பிடுமாப் போலே கூப்பிடுகிறார். (என்செய்கேன்! உலகத்தீரே) பெரியபெரு மாளழகைக்கண்டுவைத்துக் குறியழியாதே புறப்படுகிற ஸம்ஸா ரிகளைப் பார்த்து, உங்களைப்போலே தரித்திருக்கைக்கு ஒருவிரகு சொல்லவல்லிரோளே! என்கிறார். தம்மோடுஸஜாதீயரா யிருக்கிற ஆழ்வார்களைக் கேட்கில் ஒட்டையோடத்தோடே யொழுகலோ டமாமித்தனையிறே. "என்செய்கேன் பெருமாளே" என்று அவர் தம்மைக்கேட்கில்தம்மெளிமையறிவித்ததாய்,அத்தாலேஎதிர்த்தலை யழிந்ததாகாதே என்றுஅவாமேனுணித் திருககக்காணுமதாய்த்து பலம்.இவ்விஷயத்தைக் கண்டுவைத்துக குறியழியாதே யிருக்கிற ஸம்ஸாரிகளைப் பார்த்து உங்களிறுக்கவாத பரிஹாரத்திலே யென க்கு மொருசிறுங்கை யிடவல்லிகோளே' யென்கிறார். (கக)

அ.—இருபதாம்பாட்டு. (பாயுநீர்) இவ்விஷயத்தில் ப்ராவண் யத்தைத்தவிர்த்து எங்களைப்போலே தேஹயாத்ரா பரராய் வர்த்தி க்கவே தரிக்கலாமென்ன; கண்வளர்ந்தருளுகிற வழகைக் கண்டு வைத்து "இஸ்ஸம்ர்த்தியடங்க எங்களுக்கு" என்னும்படியானஸ்வ ரூபஜ்ஞாநமுடையஎங்களுக்கு, "అహంమమ" "அஹம்மம" என்கிற உங்களைப்போலே அகலவிரகுண்டோ வென்கிறார்.

பாயுநீரரங்கந்தன்னுட்பாம்பணைப்பள்ளிகொண்ட
மாயனார்திருநன்மார்பும்மரகதவுருவுந்தோளும
தூயதாமரைக்கண்களுந்துவரிதழ்ப்பவளவாயும்
ஆயசீர்முடியுந்தேசுமடியரோரர்க்ககலலாமே. (உ0)

ப-ரை.—பாயும் - பாயாநின்றுள்ள, நீர - காவேரியால்சூழப்பட்ட, அர ங்கநதன்னுள் - கோயிலிலே, பாமபணை - திருவநந்தாழ்வானமேலே, பள்ளி கொணட - கண்வளர்நதருளுகிற. மாயனார்-ஆச்சர்யசக்தியுகதனுடைய, திரு- பிராட்டியாலே, நல் - விலக்ஷணமான, மார்வும் - திருமார்வும், மரகதம்-மரத கரதநத்தை யொத்த, உருவும் - திருவடிவும், தோளும் - திருக்தோள்களும்,

---

தாத்பர்யாந்தரம் (பகவத்ஸ்வரூபேத்யாதி.) "దేహయోగాద్వాసో ఽపి తిరోధానభావః। దేహయోగాద్భవతివాశబ్దోఽపకల్పార్థః। వ్యవస్థితశ్చవికల్పః" "தேஹ யோகாத் வாஸோபிதிரோதாநபாவ:, தேஹயோகாத்பவதிவாசப் தோவிகல்பார்த்த:, வ்யவஸ்திதஸ்சவிகல்ப:

தூய - பரிசுத்தமான, தாமரை - தாமரைமலரையொத்த, கண்களும் - திருக்கண்களும், துவர் - சிவந்த, இதழ் - திருவதரமும், பவளம் - பவளம்போன்ற, வாயும் - திருவாயும், ஆய - பண்டேயாய், சீர்-சீர்மையையுடைத்தான, முடியும் - திருவபிஷேகமும், தேசும்-ஸமுதாயசோபையும், கண்டால், அடியரோர்க்கு - ஸ்வரூபஜ்ஞாநமுடையவர்களுக்கு, அகலலாமே-அகலப்போமோ.

வ்யா.—(பாயுநீரரங்கம்) அடைத்தேற்ற வேண்டாதபடி நீருக்குப் பள்ளநாலியான கோயில். இது உபலக்ஷணம். பாவநமாயும் ப்ரஸந்நமாயுமுள்ள பதார்த்தங்களுக்குப் பள்ளமடையாயிறே கோயிலிருப்பது. [రమణీయంప్రసన్నాంబు సన్మనుష్యమనో యథా - ரமணீயம்ப்ரஸந்நாம்பு ஸந்மநுஷ்யமநோயதா] நீருக்கு ஸாத்விகர் நிதர்சநமாயிறே இருப்பது. (தன்னுள் பாம்பணை) அந்நீருறுத்தாமைக்குப்படுத்தபடுக்கையாயத்து த்திருவநந்தாழ்வான். "வெள்ளைவெள்ளத்தின்மேலொருபாம்பை மெத்தையாகவிரித்து" என்னக்கடவதிறே. (பள்ளிகொண்டமாயனார்) கண்வளர்ந்தருளும் போதையழகு ஆஶ்சர்யமாயாய்த்திருப்பது. "సమయాబోధితశ్శ్రీమాన్ సుఖసుప్తః పరంతపః" "ஸமயாபோதிதஶ்ஶ்ரீமாந்ஸுகஸுப்த:பரந்தப:" என்னக்கடவதிறே. நிற்றல்இருத்தல் செய்தாராகிலும் அகலலாங்கிடீர் "ஏரார்கோலந்திகழக்கிடந்தாய்" என்றும், "ஆனையில்கிடந்த கிடக்கைகண்டிடப் பெற்றிலேன்" என்றும் சொல்லக்கடவதிறே. ஆனையில்கிடக்கை - ஆனைபோலே கிடக்கை.

(திருநன்மார்பும்) பிராட்டியாலே விலக்ஷணமான மார்பும். பிராட்டியுடைய செம்பஞ்சின் குவடுகளும் கழித்தமாலைகளுமாய்க் கிடக்குமாய்த்து. பிராட்டி "அகலகில்லேனிறையும்" என்றுபிரியமாட்டாதவைலக்ஷண்யத்தையுடைய மார்வமென்னவுமாம். (மரதகவுருவும்) கண்டார் கண்குளிரும்படி நீர்வெள்ளத்தைத் திறந்துவிட்டாப்போலே யாய்த்து வடிவிருப்பது. (தோளும்) கீழ்லவை போலே இடுசிவப்பிலாத தோளும். அவ்வெள்ளத்திலே அழுந்துகிறார்க்கு தெப்பம்போலே யிருக்கிற திருத்தோளும்.

(தூயதாமரைக்கண்களும்) பிராட்டியோடு ஹிரண்யாதிகளோடு வாசியறக் குளிரநோக்குகிற திருக்கண்களும். நோக்குக்குத் தூய்மையாவது-நிர்ஹேதுகமாகக்கடாக்ஷிக்கை.

---

இருபதாம்பாட்டு.—(பாயுநீரித்யாதி) பள்ளநாலி-பள்ளமடை. இதுஉபலக்ஷணமென்றது-இதுக்கும் உபமாநமானஸாத்விகஹ்ருதயத்துக்குப் பள்ளமடையென்னுமதுக்கும் உபலக்ஷணமென்றபடி. கீழ் அபிப்ரேதமானவர்த்தத்தை உபபாதிக்கிறார் (பிராட்டியுடையவித்யாதி.) இரண்டாமர்த்தத்துக்கு-திருவுக்கு நன்றானமார்வென்றபடி. உபமாநமுகேநச் சொல்லாமைக்கு தாத்பர்யமருளிச்செய்து, ரூபகமாகவருளிச்செய்கிறார் (அவ்வெள்ளத்திலே யித்யாதி.) தூய்மைக்கு மூன்று தாத்பர்யம். முந்தின தாத்பர்யம் (பிராட்டியோடித்யாதி.) இரண்டாவது (நோக்குக்கித்யாதி.)

"సుహృదం సర్వభూతానామ్" "ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம்" என்கிறபடியே - அநுகூலப்ரதிகூலவிபாகரஹிதமாயாய்த்து ஸௌஹார்த்தமிருப்பது. "దేవానాం దానవానాఞ్చ సామాన్యమధిదైవతమ్" "தேவாநாம்தாநவாநாஞ்சஸாமாந்யமதிதைவதம்" என்கிறபடியே ஸம்பந்தமொத்தாய்த்திருப்பது. இப்படியிருக்க, சில பதார்த்தங்களுக்குக் கடாக்ஷம் அநர்த்த ஹேதுவாகிறது ப்ரகர்திதோஷத்தாலே. ஸர்வாநுகூலமான தென்றலானது ஒருபதார்த்தத்திலே வந்தால் ரோகமாகாநின்றதிறே. மென்மை குளிர்த்தி நாற்றமிவற்றுக்கு தாமரை ஒருபோலியா' மித்தனைபோக்கி அகவாயில்தண்ணளிக்கு த்ர்ஷ்டாந்த மாகமாட்டாதே. (துவரிதழ்ப்பவளவாயும்)சிவந்ததிருவதரத்தையும் பவளம்போலே யிருந்துள்ள தந்தபங்தியையுமுடைய வாயும். "అవాక్యనాదరః" "அவாக்யநாதர:" என்கிற காம்பீர்யம் குலைந்து, கிட்டினாரை ஸாந்தவவாதநம்பண்ணுகிற திருப்பவளமும, ஸ்வாபராதத்தை யநுஸந்தித்துக் கிட்ட வஞ்சினவர்களுடைய அபராதத்துக்கு நேர்த்தரவுகொடுக்க ஸ்மிதமபண்ணுந்திருப்பவளமுமென்கை.

(ஆயசீர்முடியும)பண்டேயாயச்சீர்மையையுடைத்தானமுடியும். ஸித்தமாய் ஐஸ்வர்ய ஸூசகமான திருவபிஷேகமும். இத்தனையாலுமாக அவயவஶோபை சொல்லிற்று. (தேசும) இததால் ஸமுதாயஶோபை சொலலுகிறது.(அடியரோர்க்கு கலலாமே)இஸ்ஸம்ர்த்தியைக்கண்டால்ஸ்வரூபஜ்ஞாநமுடையார்க்கு அகலப்போமோ. இதுக்குப்புறமபாய "நான், என்னது" என்றிருப்பாரககன்றோ அகலலாவது. 'ஆமே" என்றது - எதிரிகளுக்கும் அகலப்போகாதென்னவேண்டும்படியாயிற்ற அர்த்தத்தின் மெய்ப்பாடிருப்பது. ... ... ... ... (உ0)

அ.—இருபத்தோராமபாட்டு. (பணிவிஞல்) அகலப்போகாதாகில் பரிச்சேதித்தநுபவிக்கப பார்த்தாலோ வென்கிற திருவுள்ளத்தைக் குறித்து,இவ்விஷயத்தில துணிவிலலாமையாலே அநாதிகாலமிழந்த வறிவுகேடுபோலே யிருப்பதொன்றுகாண் இப்போது பரிச்சேதித தநுபவிக்கலாமென்று கணிசிககிற விதுவு மென கிருர்.

பணிவிஞல்மனமதொன்றிப்பவளவாயரநகனுர்க்குத
துணிவிஞல்வாழமாட்டாத்தொல்லைநெஞ்சேநீசொல்லாய
அணியனுர்செமபொனுயவருவனாயனையகோயில்
மணியனுர்கிடந்தவாற்மைமனத்திஞல்நினைக்கலாமே. (உக)

---

முந்தினதின் உபபாதநம் (సుహృదం సర్వభూతానామ్ - ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாமித்யாதி.) இது தனக்கு அடியேதென்ன ; அருளிச்செய்கிருர் (దేవానామ్-தேவாநாமித்யாதி.) ஒருபதார்த்தம்-தாமரை தந்தபங்தி தோற்றுகையாலே இவ்விரண்டையு மருளிச்செய்கிரு (అవాక్యనాదరః- அவாக்யநாதர: இத்யாதிவாக்யத்வயததாலே.)(உ0

-ப-ரா.—பவளம் - பவளம்போன்ற, வாய் - திருவதரத்தையுடையனாய், அரங்கனூக்கு - கோயிலிலே யெழுந்தருளியிருக்கிற அழகியமணவாளன் விஷயத்திலே, மனது - மநஸ்ஸை, பணிவினுகொன்றி - பணிவதாகவொருப்பட்டு, துணிவினுல் - துணிவினுலே, வாழமாட்டா-வாழமாட்டாத, தொல்லை நெஞ்சே - அநாதிகாலமாக பகவத்விஷயத்தையிழந்திருக்கிற நெஞ்சே, நீசொல்லாய் - நீயேசொல்லிக்காண்; அணியினுர் - அழகுமிக்கிருப்பதாய், செம்பொனுய - செம்பொன்னுலாகிய, அருவரையனைய - அருமையான மஹாமேருவையொத்த, கோயில்-திருவரங்கததிலே, மணியனுர் - நீலமணியையொத்த அழகியமணவாளர், கிடநதவாறறை-கண்வளர்நதருளுகிற ப்ரகாரத்தை, மநத்திளுல் - மநஸ்ஸினுலே, நினைக்கலாமே - பரிச்சேதித்தறியலாமோவென்கிருர்.

வ்யா.—(பணிவினுல் மனமதொன்றி) பணிவதாகவந்தொருபட்டு. இதரவிஷயங்களில் நின்றும இவ்விஷயத்திலே மநஸ்ஸைப் பணிவதாகவொன்றி. ஒன்றுகை-ஒருப்படுகை. இதரவிஷயங்களிலே போகிற நெஞ்சை அவற்றினின்றும்மீட்டு ப்ராப்தவிஷயத்திலே ப்ரவணமாக்குவோமென்னும் உத்யோகமாத்ரமேயாய்த்து இவ்விஷயத்துக்கு வேண்டுவது. இங்கு மநஸ்ஸென்கிறது-மநோவ்ர்த்தியை. பகவத்வ்யதிரிக்த விஷயங்களில் பணிவுதானுண்டாகிலும் இரங்குகை பாக்ஷிகம்; இரக்கமுண்டானுலும் பலிப்பதில்லை. பகவத்விஷயத்தில் "నన మేయమ్" "நநமேயம" என்கிற ப்ரதிஜ்ஞைகுலையும்மாத்ரமே யமையும்; சேதநனுடைய ஆபிமுக்யத்துக்காக ஸ்ர்ஷ்ட்யவதாரங்களைப் பண்ணிப்போந்த ஈஶ்வரனுக்கு விஷயீகார ஸூசகமாத்ரமே யமையும். ப்ராணமந் தன்னைப் பண்ணினுலும் அதுவன்றே பலப்ரதம, ஈச்வரனுடைய இரக்கமிறே. இவன்பண்ணுகிற வ்யாபாரங்கள் அங்கு பலிப்பதொன்றின்றியே யிருக்க, அவனுடைய இரக்கத்துக்கு ஹேதுவானபடி யென்னென்னில்;-ஒருத்தனை யொருவன் கையோங்குவது எதிரி ஸ்பர்ஶிப்பதொன்றின்றியே யிருக்க உளளதனையும என்னைப் பரிபவித்தானென்றிருக்கைககு ஹேதுவாகாநின்றதிறே; இவ்வோபாதி அஞ்சலியுமஎலலாவற்றையுந கொடுத்து, பின்னையும் "నజాతుహీయతే" "நஜாதுஹீயதே" என்னுமபடி ப்ரியவிஷயமாயிறே இருப்பது. "ఏకోఽపి కృష్ణే సుకృతః ప్రణామః" "అఞ్జలిః పరమా ముద్రా క్షిప్రం దేవప్రసాదినీ" "ஏகோபிக்ர்ஷ்ணே ஸுக்ர்த:ப்ரணாம," "அஞ்ஜலி:பரமாமுத்ராக்ஷிப்ரம் தேவப்ரஸாதிநீ."

(பவளவாயரங்கனூர்க்கு) இவ்வளவாநுகூல்ய முடையாரை முன்புத்தையிழவுக்கு ஸாந்த்வநம்பண்ணும் திருவதரத்தை யுடையவர்க்கு.

---

இருபத்தோராம்பாட்டு.—(பணிவினுலித்யாதி) (உத்யோகமாத்ரமே யிவ்விஷயத்துக்கு வேண்டுவதித்யாதி.) அப்யுபகம்ய மருளிச்செய்கிருர் (ப்ரமாணந் தன்னையித்யாதி.) இரக்கமிறேவேண்டுவது, ஆனபின்பு இவனுடைய வுத்யோகம் அவனுடைய இரக்கத்துக்கு ஹேதுவென்று தாத்பர்யம்.

(அரங்கனூர்க்கு) எப்போதோ நம்மைக் கிட்டுவதென்று நித்யஸந்நிஹிதரா யிருக்கிறவர்க்கு. (துணிவினால் வாழமாட்டா) வடிவழகுதான்பணிவையு முண்டாக்கித்துணிவையுமுண்டாக்கி, பின்னை அநுபவத்திலே மூட்டிவிடுமாய்த்து. (பவளவாயரங்கனார்க்கு - பணிவினால் மனமதொன்றி - துணிவினால் வாழமாட்டா) இவ்விஷயத்தை யநுபவிக்கைக்கு வ்யவஸாயமேயாய்த்து வேண்டுவது. "వ్యవసాయాదృతే బ్రహ్మన్ నాసాదయతితత్పరమ్" "வ்யவஸாயாத்ருதே ப்ரஹ்மந்நாஸாதயதிதத்பரம்" என்று-ப்ராஹ்மப்ராப்திக்குக்கண்ணழிவற்றஸாதநம்வ்யவஸாயங்காணென் றுபதேசித்தானாய்த்து-தன்னுசார்யனை வேதவ்யாஸனில்காட்டில் புருஷார்த்தஸாதநத்திலே தெளிவுடையனானஜநகன். (தொல்லைநெஞ்சே) ஓரத்யவஸாயமாத்ரத்தாலே இவ்விஷயத்தை அநுபவிக்கமாட்டாதவிவ்விழவு,நெஞ்சே! உனக்குஅநாதியிறே. (நீசொல்லாய்) இவ்விஷயத்தைப் பரிசசேதித்தநுபவிக்கலாமென்று நீதான் சொல்லிக்காணாய். (அணியித்யாதி) அழகுமிக்கிருப்பதாய், செம்பொன்னானவருவரை யுண்டு-மஹாமேரு,அத்தோடொத்திருந்துள்ளகோயில். ஸம்ஸாரத்துக்கு ஆபரணமாய்தர்ஶநீயமாய் ஸ்திரமாய்ஸர்வாதாரமாயிக்கை.(மணியனார்கிடந்தவாற்றை) அம்மேருவைப்புடைபடத்துளைத்து அதுவிம்மும்படி யொருநீலரத்நத்தை யழுத்தினாப்போலே யாய்த்துக் கோயிலாழ்வார்க்குள்ளே பெரியபெருமாள் கண்வளர்ந்தருளுகிறபடி. (கிடந்தவாற்றைமனத்தினால்நினைக்கலாமே) கண்வளர்ந்தருளுகிற வழகைக்கண்டால் நெஞ்சாலே பரிச்சேதிக்கலாம்படி யிருந்ததோ. ஸ்வரூபத்தைப் பரிச்சேதிக்கிலும், ததாச்ரயமான கல்யாணகுணங்களைப்பரிச்சேதிக்கிலும், வடிவழகைப்பரிச்சேதிக்கவொண்ணாதென்கை. நினைவுக்கு பரிகரமானத்தையொழிய வேறேயொரு கரணத்தாலே நினைக்கில் நினைக்கு மித்தனைகாணும். (உக)

அ.—இருபத்திரண்டாம்பாட்டு. (பேசிற்றே) நினைக்கவொண்ணாதாகில் வாய்விட்டுப்பேசினாலோவென்ன; * మనఃపూర్వో వాగుత్తరః *மநஃபூர்வோவாகுத்தர: அன்றோ,மநஸ்ஸாலேபரிசசேதிக்கவொண்ணாதவிஷயத்தைப்பாசுரமிட்டுமுடிக்கப்போமோ,பேசலாமென்கிற வறிவுகெட்ட நெஞ்சே! சொல்லாயென்கிறார்.

பேசிற்றேபேசலல்லாற்பெருமையொன்றுணரலாகாது;
ஆசற்றார்தங்கட்கல்லாலறியலாவானுமல்லன்;
மாசற்றார்மனத்துளானைவணங்கினாமிருப்பதல்லால்
பேசத்தானாவதுண்டோபேதைநெஞ்சேநீசொல்லாய். (உஉ)

---

"அணி" என்றது - கோயிலுக்கு விசேஷணம்.... (உக)

ப-ரை.—பேதைநெஞ்சே - அறிவில்லாதநெஞ்சே; பேசிற்று - வேதங்களும் வைதிகபுருஷர்களும் பேசிப்போந்தவற்றை, பேசலல்லால் - சொல்லுமித்தனையொழிய, பெருமை - ஸர்வேச்வரனுடைய ஸ்வரூப குண விக்ரஹ விபூதிகளிலே, ஒன்று - ஏகதேசமும், உணரலாகாது - அறியக்கூடாது; ஆசற்றார்தங்கட்கல்லால்-உபாயாந்தரமாகிற குற்றமற்றவர்களுக்கல்லது, அறியலாவானுமல்லன்-அறியக்கூடாதவனுமிராநின்றான்; ஆகையால், மாசற்றார்மனத்துளானை-தன்பக்கலிலே ஸர்வபர ந்யாஸம்பண்ணியிருக்குமவர்களுடையநெஞ்சிலேநித்யவாஸம்பண்ணுகிறவனை, நாம் - அவன் பக்கலிலேஸர்வபரந்யாஸம் பண்ணினநாம், வணங்கி - அநுபவித்து, இருப்பதல்லால் - தரிக்குமதொழிய, அவன் பெருமையை அநுஸந்தித்தால், பேசததானுவதுண்டோ-பாசுரமிட்டுப்பேசக்கூடுமோ; நீசொலலாய் - சாபலம்பண்ணுகிற நீயேசொல்லிக்காணென்கிறார்.

வ்யா.—உக்திப்ராக்ர்தவிஷயங்களைப் பேசுகிறதில்லையோவென்ன;அவை-பரிச்சிந்நமாகையாலே;இது அபரிசசிந்நமாகையாலே பேசவொண்ணாது. ஆனால்,''ஸாஜிஹ்வயாஹரிம்ஸ்தௌதி'' ''ஸாஜிஹ்வாயாஹரிம்ஸ்தௌதி''என்கிற விஷயத்தைக்கைவாங்கியிருக்குமத்தனையோவென்னில்;(பேசிற்றேபேசலல்லால்)முன்புவேதங்கள் வைதிகபுருஷர்கள் பேசிப்போந்தவைதன்னையேசொன்னோமாமித்தனைபோக்கி இவ்விஷயத்துக்கு ஸத்ர்சமாக வொருபாசுரமிட்டுப் பேசித்தலைக்கட்ட வொண்ணாது. பேசிபபோந்தவைதா னெங்ஙனேயென்னில்; ''நீலதோயதமத்யஸ்தாவித்யுல்லேகேவ'' ''நீலதோயதமத்யஸ்தாவித்புல்லேகேவ'' ''நீலமுண்டமின்னன்னமேனி'' ''அதஸீபுஷ்பஸங்காசம்'' ''அதஸீபுஷ்பஸங்காசம்'' ''ஹிரண்மயபுருஷோத்ர்ஶ்யதே'' ''ஹிரண்மயபுருஷோத்ர்ஶ்யதே'' ''ருக்மாபம்'' ''ருக்மாபம்'' ''சுட்டுரைத்தநன்பொன்னுன்திருமேனியொளியொவ்வாது'' இந்த ப்ராக்ர்தபதார்த்தங்கள் அபராக்ர்தவஸ்துவுக்கு விஸத்ர்ஶமிறே. இதுதன்னைக்கொண்டிழிவானென்னென்னில்; அதீந்த்ரியவிஷயத்திலிழியும்போது ஒருநிதர்ஶநத்தைக்கொண்டிழியவேண்டுகையாலே சொன்னவித்தனையொழிய உள்ளபடி சொல்லித் தாயத் தலைக்கட்ட வொண்ணாது. வேதங்கள் பேசினபடியே பேசுமத்தனையல்லது நம்மால் பேசிமுடியாது. அவை பேசினபடியென்னென்னில்;-''அப்ராப்ய''''அப்ராப்ய'' என்று பேசினவித்தனை. அப்படியேபேசவொண்ணாது என்று பேசுமத்தனை என்றாகவுமாம. அதுக்கடி யென்னென்னில்; (பெருமையொன்றுணரலாகாது)இன்னதுபோலேயென்றுஸத்ர்சத்ர்ஷ்டாந்தமுண்டாதல், ஏவம்பூதமென்றுபரிச்சேதித்தல் செய்யவொண்ணாது.

---

இருபத்திரண்டாம்பாட்டு.—(பேசிற்றேயித்யாதி)(உக்திப்ராக்ர்தவிஷயங்களைப் பேசுகிறதில்லையோ)இத்யாதி சங்காபரிஹாரங்களுக்கு அத்யந்தம் ப்ரயோஜநம். தாத்பர்யம் (இந்தப்ராக்ர்தபதார்த்தங்களித்யாதி.)

இதரவிஷயங்களில்வந்தால் உபமாநத்தளவும்உபமேயம் வர மாட்டாது; இவ்விஷயத்திலே உபமேயத்தளவுமுபமாநம் வரமாட்டாது ஸ்வரூபமென்ன, குணங்களென்ன, விக்ரஹமென்ன, விபூதியென்ன, இவற்றிலொன்றையும் பரிச்சேதிக்கவொண்ணு

ஆனால் இவ்வஸ்து ஒருவர்க்குமறியவொண்ணாதோ வென்னில்; (ஆசற்றார்தங்கட்கல்லாலறியலாவானுமல்லன்)ஆசு-குற்றம். இனி இத்தை விஷய விபாகம்பண்ணிககொள்ளுமித்தனை. அதாகிறது - உபாயவிஷயமாகவருங்குற்றம். அதாகிறது-பாரதந்த்ர்யத்துக்குச் சேராதவை. அஹங்காரகர்ப்பமான அசேதநக்ரியாகலாபங்களை ஸாதநமாக நினைத்திருக்கை. இதரோபாயங்கள பலப்ரதமாமிடத்தில் அவனுடையஅநுக்ரஹம பார்ததிருக்கவேணும;தான் உபாயமாமிடத்தில் ஸஹாயாந்தராபேக்ஷை யில்லை; இதரோபாயங்களை விட்டுத் தன்னையே உபாயமாகப்பற்றினார்ககலலது தன்னை உள்ளபடி யறியலா யிருப்பானொருவனல்லன்.

(மாசற்றா) இதுவுமொரு மாநஸதோஷமாயிற்று; அதாகிறது - ப்ராப்யாபாஸஙகளிலே ப்ராப்ய புத்தியைப்பண்ணியிருக்கை. அவன் றன்னையே பற்றி ஐஸ்வர்யாதிகளை லபித்துப்போகாநிற்பார்கள். அங்ஙனன்றியே அவன்றன்னையே பெறவேணுமென்றிருக்கை- மாசறுகைமாவது. (மனத்துளானை) இப்படி எல்லாவற்றையும்விட்டு ஸம்ஸாரநிவ்ர்த்திபூர்வகமாக ஒருதேசவிசேஷத்திலேநித்யாநுபவம்பண்ணவேணுமென்று தன்பககலிலே ஸர்வபரந்யாஸம் பண்ணியிருக்குமவர்களுடைய நெஞ்சிலே நித்யவாஸமபண்ணுமவன். இவர்கள்நெஞ்சுக்குப்புறம்பு, காட்டுத தீயோபாதியாக வாய்த்து நினைத்திருப்பது. ஜலசரபதார்த்தஙகள் ஜலத்தை யொழிய தரிக்க மாட்டாதாப்போலே இவர்கள்நெஞ்சொழிந்த விடத்தில் தரிக்க மாட்டானாய்த்து. திருபபதிகளில் நித்யவாஸம் பண்ணுகிறதும் ஒருசுத்தஸ்வபாவனுடைய ஹ்ருதயத்தைக்கணிசித்திறே. "என்னிலாதமுன்னெலாம்" என்னக கடவதிறே. (வணங்கிநாமிருப்பதல்லால்)ஆச்ரிதர் நெஞ்சைவிட்டுப்போகாதவனானபின்பு, அவன் பக்கலிலே ஸர்வபரந்யாஸம்பண்ணின நாம்,அவனைஅநுபவித்துத் தரிக்குமதொழிய வேறு க்ர்தயமுண்டோவென்கிறார். வணக்கமென்று-ஸர்வப்ரகாராநுபவத்துக்கு முபலக்ஷணம்.

---

"ஒன்று" என்றதுக்கு தாத்பர்யம் (ஸ்வரூபமென்ன வித்யாதி.) உபாயவிஷயமான குற்றத்தை ப்ரகாராந்தரேணவருளிச்செய்துஆனால் உகந்தருளின நிலங்களிலே நித்யவாஸம் பண்ணுகிறானில்லையோவென்ன; அருளிச்செய்கிறார் (திருப்பதிகளி லித்யாதி.)

(பேசத்தானுவதுண்டோ) அவன் பெருமையை யநுபவித்தால் பாசுரமிட்டுப்பேசலாயிருந்ததோ. (பேதைநெஞ்சே) அந்த விஷயங்களைப் பேசிப்போந்தவாஸநையாலே இவ்விஷயத்தையும் உன்மதிகேட்டாலே பேசலாமென்றிருக்கிறாயிறே. (நீசொல்லாய்) என்வார்த்தையொழிய இவ்விஷயஸ்வபாவமிருந்தபடியாலே பரிச்சேதித்துப்பேசலாயிருந்ததோ, சாபலம்பண்ணுகிறநீதான்சொல்லிக்காணென்கிறார். ... ... ... (உஉ)

அ.—இருபத்துமூன்றாம்பாட்டு. (கங்கையில்) நினைக்கவும்பேசவுமொண்ணாதாகில் இவ்விஷயத்தை விஸ்மரித்துதரித்தாலோவென்னில்; பெரியபெருமாளுடைய கிடைபழகிலே அதிசபலனானநான் விஸ்மரித்து எங்ஙனே தரிப்பேனென்கிறார்.

கங்கையிற்புனிதமாயகாவிரிநடுவுபாட்டுப்
பொங்குநீர்பரந்துபாயும்பூம்பொழிலரங்கந்தன்னுள்
எங்கண்மாலிறைவனீசனகிடந்ததோர்கிடக்கைகண்டும்
எங்ஙனமறந்துவாழ்கேனேழையேனேழையேனே. (உ௩)

ப-ரை.—கங்கையில் - கங்காநதியைககாட்டிலும், புனிதமாய - பரிசுத்தமான, காவிரிநடுவுபாட்டு - திருக்காவேரியின்நடுவில், பொங்கு - பெரியகிளர்த்தியோடேவாராநிற்கிற; நீர் - வெள்ளமானது, பரந்துபாயும் - பலமடைகளிலேபரந்து பாயாநிறபதாய, அதனாலே, பூ - புஷ்பிதமிருந்துள்ள, பொழில் - சோலைகளாலே சூழப்பட்ட, அரங்கந்தனனுள - கோயிலிலேயெழுந்தருளியிருக்கிற; எங்கள் - ஆச்ரிதரான எங்கள் பக்கல், மால் - வ்யாமுக்தனாய், இறைவன - ஸாவஸ்வாமியாய், ஈசன - நியாமகனான அழகியமணவாளன, கிடந்தது - கண்வளர்ந்தருளுகிற, ஓர்கிடக்கை - அசலிதியமானசயநத்தை, கண்டும - கண்டநுபவிக்கப்பெறறபினபும், ஏழையேன ஏழையேன - அதிசபலனானநான, எங்ஙனம் - எநதப்ரகாரத்தாலே, மறந்து - மறநது நின்று, வாழ்கேன் - ஜீவித்திருக்கப்புகுகிறேன. (உ௩)

வ்யா.—(கங்கையில்புனிதமாயகாவிரி) கங்கையில்காட்டிலும் பாவநமான காவேரி. தர்சநீயதையாலும், போக்யதையாலு முண்டானவேறுறமொழிய, வேறுபாவநத்வத்தாலும் ஏற்றத்தையுடைததாயத்துககாவேரியிருப்பது. "గఙ్గాసామ్యంపురాప్రాప్తాదేవదేవప్రసాదనాత్" "கங்காஸாம்யம்புராப்ராப்தாதேவதேவப்ரஸாதநாத்" [ గఙ్గావతరణాదూర్ధ్వంఅధికత్వమవాపసా - ரங்காவதரணாதூர்த்த்வம் அதிகத்வமவாபஸா], கங்கைக்கு ஒருநாளிலே திருவடிகளோட்டை ஸ்பர்ஶத்தால் வந்தசுத்தியோகமிறேயுள்ளது. "పావనార్థం జటామధ్యేధారితశిరసాహరః" "பாவநார்த்தம்ஜடாமத்யே தாரிதஶிரஸாஹர:"

பெருமையை, அநுபவித்தாலென்றது - அறிந்தாலென்றபடி. ஆக அசுகிஸ்பர்ச முண்டென்கிறார் (పావనార్థమ్ - பாவநார்த்தமித்யாதி.)

என்கிறபடியே - தன்னுடைய அசுத்தி போக்குகைக்காக ருத்ரன் சிரஸாதரிக்கையாலே ரௌத்ரமென்று சொல்லுவதொரு குற்றமுண்டு; அவனோட்டை ஸ்பர்ஶமுள்ளதொருபதார்த்தங்கள நிர்மால்யமென்று ததீயரான சைவர்க்கும் அஸ்ப்ர்ச்யமாயிறேயிருப்பது. அப்படி அடியுடையாளானாலும் தன்னுடைய பாவநத்வத்துக்கும் ஈரப்பாடுண்டாய்த்து.*ஆறுபொதிசடையோனிறே. ஆகையாலே நாற்றமும்பிற்பாடுமுண்டே; அதில்லாதபடியாலும், பெரியபெருமாள் நடுவே பள்ளிகொள்ளுகையாலும் புனிதமிறே. ஆயிருக்கச்செய்தேயும்திருவடிகளோட்டைஸ்பர்ஶத்தாலே எங்கேனும் புகினும்பாவநத்வம்மேற்பட்டிருக்குமாய்த்து. "உன்றனடிசேர்ந்தருள்பெற்றாளன்றே" என்னக்கடவதிறே. அப்படிப்பட்ட திருவடிகளையுடையவன்தானேவந்து படுகாடுகிடக்கிறவேற்றமுண்டிறே காவிரிக்கு. (நடுவுபாட்டு) நடுவிடத்து. யஶோதைப்பிராட்டி மடியிலே சாய்ந்தாப்போலே யாய்த்துக் காவேரியின் நடுவேகண்வளர்ந்தருளுகிறபடி.

(பொங்குநீர்பரந்துபாயும்பூம்பொழிலரங்கந்தன்னுள்) ஜலஸம்ருத்தியாலே கோயிலைக்கிட்டுகிறோமென்கிற ப்ரீதிப்ரகர்ஷத்தாலே பெரியகிளர்த்தியோடே வாராநிற்கும்.(பரந்துபாயும்) ஒருமடையாலன்றியே தன்னபிநிவேசமெல்லாந்தோற்ற எங்குமொக்கப் பாயாநிற்கும். (பூம்பொழில் அரங்கந்தன்னுள்) ஜலஸம்ருத்தியாலே பொழில்களும் பூமாறாதே செல்லுமாய்த்து. பெரியபெருமாளுடைய ஸௌகுமார்யத்துக்கு அநுகூலமான ஜலஸம்ருத்தியையும் நித்யவஸந்தமான பொழிலையுமுடைய சரமஹரமான தேசம். இதுதால் - கோயிலினுடைய பாவநத்வமும் போக்யதையுஞ் சொல்லிற்றாய்த்து.

(எங்கண்மால்) ஆச்ரிதர் பக்கல் வ்யாமோஹம் ஒருவடிவு கொண்டாப்போலேயிருக்கை. "எங்கள்"என்று-தமமைப்போலே பெரியபெருமாள் பக்கலிலே ந்யஸ்தபரரா யிருப்பாரையும்கூட்டிக் கொள்ளுகிறார்.கோயிலில் பாவநதவபோக்யத்வங்களைக்கண்டுசாயந்தருளினானென்று பேராய், நிரூபித்தால் ஆச்ரிதவ்யாமோஹமே ஹேது. வ்யாமோஹமேயாய் ஸம்பந்தமன்றியே யிருக்கையன்றியே (இறைவன்) இவற்றையுடையனா யிருக்கை. (ஈசன்) உடையவனானாலும் நியமிக்க சக்தனன்றிக்கே யிருக்கையன்றியே நல்வழி போக்குகைக்கு க்ஷமனாயிருக்கை. ஸ்நிகதனாய் ப்ராப்தனாய் சக்தனாயிருக்குமவனென்கை. குணத்ரயவஶ்யதையைத்தவிர்த்து, நித்யாநுபவம்பண்ணும் தேசத்தேறக்கொடுபோக நினைத்து, வாத்ஸல்யப்ரோரிதனாய் வந்து தன்னுடைமையைத் தன்கருத்திலேநடத்துகைக்காகக் கிடக்கிறபடி.

---

இம்மூன்று பதங்களாலும்பலித்த தாத்பர்யத்தைத் தொகுத்தருளிச்செய்கிறார் (குணத்ரயேத்யாதி.)

(கிடந்ததோர்கிடக்கை) கீழ்ச்சொன்ன ஆத்மகுணங்களை விஸ்மரித்துக் கிடையழகிலே யகப்பட்டார். நிற்றல் இருத்தல் செய்தாராகில் மறக்கலாய்த்திறே. நாட்டில் அழகியரா யிருப்பார்க்கு நிற்றல் இருத்தல் செய்தபோது அழகுதோற்றிச் சாய்ந்தால் தோற்றுவது வைரூப்யமேயாயிருக்கும்; இவ்விஷயத்தில் சாய்ந்தபோதாய்த்து அழகு மினுங்கியிருப்பது. "ஸ்ரீமாந் ஸுகஸுப்தபரந்தப:" "ஸ்ரீமாந் ஸுகஸுப்தபரந்தப:" என்னக்கடவதிறே. (ஓர்கிடக்கை) ஒருக்கடித்தோ மல்லாந்தோ கண்வளர்ந்தருளுகிற தென்று தெரியாதிருக்கும். இவர்கள்தான், நின்றானாகில் "நிலையார நின்றான்" என்பர்கள்; இருக்கக்கண்டால், "பிரானிருந்தமைகாட்டினீர்" என்பர்கள்; சாயக்கண்டால், "கிடந்ததோர் கிடக்கை" என்பர்கள்.

(கண்டுமெங்ஙனம் மறந்து வாழ்கேன்) இவ்விஷயத்தைக்கண்டநுபவிப்பதற்கு முன்பாகில்மறக்கவுமாம், கண்டநுபவித்தபின்பு இனித்தானெந்தப்ரகாரத்தால் மறப்பது. (வாழ்கேன்) இவ்விஷயத்தைவிட்டுப்போய் மணலே முக்கவோ. அநுபவித்தால் மறக்கவொண்ணாது; மறந்தால் புறம்பு தரிக்கவொண்ணாது. (ஏழையேனேழையேனே) நானோ அத்யந்த சபலனாய், கிட்டினால நுபவிக்கமாட்டேன்; பிரிந்தால தரிக்கமாட்டேன்; (ஏழையேன் ஏழையேனே) முன்பு இதரவிஷயங்களிலே அகப்பட்டு சிதிலனாயிருப்பன்; இப்போது பகவத்விஷயத்திலே அகப்பட்டு புறம்பு கால்வாங்கமாட்டாதே யிருப்பன்; அதுகர்மத்தாலே வந்த சைதில்யம்; இது விஷய வைலக்ஷண்யத்தாலே வந்த சைதில்யம். ... (உரு)

---

அத்விதீயத்வமென்னுதல், அன்றிக்கே, கிடக்கும் ப்ரகாரம் உபயாகாராவலம்பையாயிருக்கையாலே த்ர்ஷ்டங்களுக்கு ஸம்சயஜநகமாகையால்வந்த அதவிதீயத்வமாதல்,இத்யாதிஸௌந்தர்யாதிசயத்தைச் சொலலுகையாலே பலித்ததாத்பர்யமென்று ஏகார்த்தமாதல்.(நிற்றல் இருத்தல் செய்தாராகில் மறக்கலாய்த்திறே) என்கைக்கு அவ்வோவவஸ்தைகளுக்கு ஆகர்ஷகத்வ மில்லையோவென்ன; அருளிச்செய்கிறார் (இவர்கள்தானிதயாதி.) மறக்கவொண்ணாதாகில் அநுபவிககவல்லீரோ வென்ன; அருளிச்செய்கிறார் (ஏழையேனேழையேனேயென்று.) அர்த்தாந்தரம் (முன்பித்யாதி.) முந்தினவர்த்தத்துக்கு வீப்ஸைக்கர்த்தம் - அத்யந்த சாபலம். விலக்ஷணவிஷயமாகையாலே அநுபவிக்கமாட்டேன், பிரிந்தால் தரிக்கவும் மாட்டேனென்றபடி.இரண்டாமர்த்தத்துக்கு"ஏழை" என்று - சாபலயமாய், அத்தால் - பகவத்விஷயத்தில் சைதில்யத்தைச்சொல்லுகிறதாய்,"ஏழை" என்ற வீப்ஸைக்கு தாத்பர்யம்- முன்பு இதரவிஷயங்களிலுண்டான சைதில்யத்தைச் சொல்லுகிறது. இப்போது இதரவிஷயங்களில் சைதில்யம் சொன்னதுக்கு த்ர்ஷ்டாந்தார்த்தம். ... ... ... (உரு)

அ.—இருபத்துநாலாம்பாட்டு. (வெள்ளநீர்) "மனத்தினால் நினைக்கலாமே" என்றும், "பேசத்தானாவதுண்டோ" என்றும், "எங்ஙனம் மறந்து வாழ்கேன்" என்றும், இவர் மறக்கப்புகுகவாறே இவரை நினைப்பிக்கைக்காக இவர்பக்கல் தமக்குண்டான ப்ரேமத்தைக் காட்டக்கண்டு, இவ்விஷயத்தில் நமக்குண்டான ப்ரேமம் அஸத்ஸமமாயிருந்ததீயென்றும், இன்னமும் இவ்விஷயத்தினுடைய வைலக்ஷண்யத்தை அநுஸந்தித்துத் தமக்குப் பிறந்தபக்தி விஷயாநுரூபமாகப் போராமையாலும், பித்தோபஹதனுக்குப் பிறந்த ப்ரேமம் அசித்ஸம்ஸ்ருஷ்டனுக்குப் பிறந்த தெளிவுபோலே விச்வஸிக்கவொண்ணாமையாலும் அநுதபித்து, திருவுள்ளத்தைக்குறித்து, உனக்கு இதரவிஷயத்தோபாதி இவ்விஷயத்திலும் க்ர்த்ரிமஸ்நேஹமாய் விட்டதாகாதே! என்றுதிருவுள்ளத்தைநிந்திக்கிறார்.

வெள்ளநீர்பரந்துபாயும்விரிபொழிலரங்கந்தன்னுள்
கள்வனார்கிடந்தவாறுங்கமலநன்முகமுங்கண்டும்
உள்ளமேவலியைபோலுமொருவனென்றுணரமாட்டாய்;
கள்ளமேகாதல்செய்துன்கள்ளத்தேகழிக்கின்றாயே. (உச)

ப-ரை.—வெள்ளம் - பெரியப்ரவாஹத்தையுடைய, நீர்-காவேரியானது, பரந்து - நாற்புறத்திலும்பரவி, பாயும்-பாய்கையாலே, விரி - விஸ்த்ர்தமான, பொழில் - சோலைகளாலேசூழப்பட்ட, அரங்கந்தன்னுள் - கோயிலிலே, கள்வனார்-ஆச்ரிதர்ஸ்வாதந்த்ர்யத்தை அபஹரிக்குமவரான அழகியமணவாளன், கிடந்தவாறும் - பள்ளிகொள்ளும் ப்ரகாரத்தையும், கமலம் - தாமரைமலர்போலே, நல் - விலக்ஷணமான, முகமும் - திருமுகமண்டலத்தையும், கண்டும்-கண்டநுபவிக்கப்பெற்றும், உள்ளமே - மநஸ்ஸே, வலியைபோலும் - நீகடினையாயிராநின்றாய்; ஒருவனென்று - அவன் அத்விதீயனென்று, உணரமாட்டாய் - அறியமாட்டுகிறிலை; இவ்விஷயத்தில், கள்ளமேகாதல்செய்து - க்ர்த்ரிமமாகபக்திபண்ணி, உன்கள்ளத்தே - உன்னுடைய க்ர்த்ரிமச்செய்கையிலேயே, கழிக்கின்றாய் - காலத்தைககழியாநின்றாயென்கிறார். (உச)

வ்யா.—(வெள்ளநீர் பரந்துபாயும்) காவேரி ஸஹ்யமே தொடங்கிக் கோயிலைநோக்கிவருகிறதாகையாலே தன் அபிநிவேசமெல்லாந் தோற்றும்படி பெருவெள்ளமாக நீரைக்கொடுவந்து சிலர்க்குக் குலைசெய்து தகையவொண்ணாதபடி ஸர்வதோதிக்கமாகப் பாயாநிற்கும். அபிநிவேசம் முடியாமையாலே பாய்ந்து தலைக்கட்டாது. (விரிபொழிலரங்கம்) நீர்பாய்ந்த பரப்படங்கலும் சோலையும் விரிந்து வாராநிற்கும்.

---

இருபத்துநாலாம்பாட்டு.— (வெள்ளநீரித்யாதி.) செவ்வை பரிகரமானாப்போலே யென்றது - சேஷத்வம் பரிகரமானாப்போலே யென்றபடி.

(அரங்கந்தன்னுள்கள்வனார்) பரமபதத்தில் அக்த்ரிம ரான நித்யஸூரிகளோட்டைப் பரிமாற்றத்துக்குச் செவ்வை பரிகரமானாப்போலே, க்ர்த்ரிம ஸம்ஸாரிகளை வசீகரிக்கைக்கு சௌர்யம்பரிகரமாக வாய்த்துக் கோயிலிலே வந்து கண்வளர்ந் தருளுகிறது. நீர்வாய்ப்பும் சோலைவாய்ப்புங் கண்டு சாய்ந்தானெ ன்கிறது வ்யாஜமாய், ஸம்ஸாரிகளுடைய வசீகாணத்திலே நினை வாயாய்த்திருப்பது. நிலவருஞ்சென்றுபுக்கால் முற்பட சௌர்ய கந்தியாயாய்த்துத் திருமுகமிருப்பது. அதாகிறது-ஒரு உபாதியா லே தம்மைவந்து கிட்டினாருடைய ஆத்மவஸ்துவை யபஹரித்து சட்டைப் புரைக்குள்ளே யிட்டுக்கொள்வொன்று தோற்றியிருக் கும். அதாகிறது-தமக்கு அந்தரங்கமாக்கிக்கொள்ளுகை. இன்னமுந் தான் ஆத்மவஸ்துவைத்தன்னதாக வபிமாநித்துப்போந்தான், நாம் இவன் அபிமாநித்த அத்தைமீட்போம் என்று பார்த்துத்தம்மழ கைக்காட்டி, "ஜிதந்தே" "ஜிதந்தே" என்னப்பண்ணுமவராய்த்து. அவ னதான வஸ்துவை இவன் நெடுநாள்பட அபஹரித்துப் போந்த படி. தன்னத்தைத்தானே கொள்ளுகை அபஹாரமாம்படியிறே சேதநனுடைய ஆத்மாபஹாரம் காழ்ப்பேறினபடி. ஆத்மஸமர்ப் பணமும் ஆத்மாபஹாரமிறேயென்னும்படியான இவ்வஸ்துவிறே இப்படி யெளிவரவு பட்டது. ஆத்மஸமர்ப்பண மாகிறதுதான் மஹாபலிதாநம்போலே யிருப்பதொன்றிறே.

(கிடந்தவாறும்) வசீகரணபரிகரந்தானும் சீலாதிகளான ஆத்மகுணங்களுமல்ல, அவயவசோபையானரூபகுணங்களுமல்ல, "கிடந்ததோர் கிடக்கை" என்னும் கிடையழகாய்த்து. (கமல நன்முகமும்) விகாஸம்செவ்விகுளிர்த்தி பரிமளம என்றாப்போலே சொல்லுகிறவற்றைப்பற்றத் திருமுகத்துக்குத்தாமரையையொரு பேரலியாகச்சொல்லு மித்தனைபோக்கி, ஸர்வதாஸத்ர்சமல்லாமை யாலே "நன்முகம்" என்கிறார். சுத்தஸத்வமாய்ஜோதிர்மயமான மு கத்துக்கு ப்ராக்ர்தவஸ்து ஸத்ர்சமாகவற்றோ; ஆச்ரிதவிஷயத்தில் பேதுசெய்யாதமுகத்துக்கு த்ர்ஷ்டாந்தமுண்டோ; ஸம்ஸாரத்துக் குள் குளிர்ந்தமுகம்இதொன்றுமே யென்கிறார். (கண்டுமுள்ளமே வலிதைபோலும்) கண்வளர்ந்தருளுகிற வழகைக்கண்டு வைத்தும் நெஞ்சே! ஒருவிகாரம் பிறவாதே திண்ணிதாயிருந்தாயீ!. கீழ்ப்பி றந்தவிகாரமெல்லாம் விஷய வைலக்ஷண்யத்தைப்பற்ற அஸத்ஸம மா யிருக்கிறதாய்த்து இவர்க்கு.

---

நிலவர் என்றது - ஸம்பந்தஜ்ஞாநமுடையவர்களை. "கள்வ னார்" என்றதுக்கு, கீழே-முகத்தில் தண்ணளியைக்காட்டி அபஹ ரிக்குமென்றருளிச்செய்து, திருமுகத்தில் ஸௌந்தர்யத்தாலும் அபஹரிக்குமென்கிறார் (இன்னமுமித்யாதி.) குணத்திலே நோக் காக நன்மைக்கு தாத்பர்யாந்தரம் (ஸம்ஸாரத்துக்குளித்யாதி.)

*இப்போது எனக்குவந்தவன்மை யென்னென்னில்; (ஒருவ னென்றுணரமாட்டாய்) அத்விதீயனென்று உணரமாட்டுகிறிலை. ஒருவனென்று உணரப்புக்கால் அவனை யுள்ளபடியுணரவேணும், அப்படி யுணர்ந்தால் அத்தலையில் வாத்ஸல்யத்துக்கு ஸத்ர்சமாக வும் விஷயவைலக்ஷண்யத்துக்கு ஸத்ர்ஶமாகவும் விடாய்பிறக்க வேணும், அதுபிறவாமையாலே "வலியை" என்கிறார்.

இப்படியாகில், கீழ், "கண்ணிணைகளிக்குமாறே" என்றும் "பனியரும்புதிருமாலோ" என்றும், "உடலெனக்குருகுமாலோ" என்றும், சொல்லிப் போந்தவை யெல்லாம் என்னென்னில்; (கள்ளமேகாதல்செய்து) உனக்கு ப்ரக்ர்திவிஷயத்தில் பண்ணிப்போந்தவாஸனை இங்குமநுவர்த்தித்துப்போந்த வித்தனையொழிய இவ்விஷயத்துக்கு ஸத்ர்சமாக ஸ்நேஹித்தாயல்லையே. விஷயாந்தரங்களில் பண்ணிப்போந்ததும் பலபக்தியாகையாலே இங்கும் பலபக்திபண்ணிற்று. (உன்கள்ளத்தே கழிக்கின்றாயே) இந்த க்ர்த்ரிமபக்தியானது பண்டே யுன்பாழியிறே, இங்கும் அதுதன்னையே முடிய நடத்திறு யித்தனையிறே. விஷயாந்தரங்களோபாதியாக இது தன்னையும் நினைத்தாயித்தனை போக்கி இவ்விஷயத்துக் கநுரூபமன்றிறே உன்னுடைய ப்ரேமம் என்கிறார். ... (௨௪)

அ.—இருபத்தஞ்சாம்பாட்டு. (குளித்து) தமக்குப்பிறந்த வாதாம் விஷயாநுரூபமாகப்போராமையாலும், அசித்ஸம்ஸர்க்கயுக்தனுக்குப் பிறந்ததாகையாலே பித்தோபஹதனுக்குப் பிறந்ததெளிவுபோலே விஶ்வஸிக்க வொண்ணாமையாலும், என்செய்தோமென்றுதிருவுள்ளத்தைக்குறித்து அநுதபித்தாராய்நின்றார்-கீழ்; இனி- அசித்ஸம்ஸர்க்கமற்று ஒருதேசவிஷேத்திலே நித்யாநுபவம்பண்ணுகைக்கு நங்கையில் முதல் காண்கிறிலோம், நாம் விஷயத்தை யிழந்தேபோ மித்தனையாகாதே! யென்று சோகிக்க; நீர்சோக்கிற தென், அசித்ஸம்ஸர்க்கமற்று நம்மைப் பெறுகைக்கு சாஸ்த்ரங்களிலே த்ரைவர்ணிகாதிகாரமாயும், ஸர்வாதிகாரமாயுமுண்டான ஸாதநங்கள் ப்ரஸித்தமன்றோ, அவற்றிலேயொன்றை யநுஷ்டித்து நம்மை லபிக்கமாட்டீரோவென்ன; எனக்கு அவையொன்றிலும் யோக்யதையே தொடங்கி யில்லையென்று மேல் பத்துப்பாட்டாலே தம்முடைய உபாயஶூந்யதையை யருளிச்செய்கிறார்.

---

பலபக்தி - ப்ரயோஜநார்த்தமான பக்தியென்றபடி. பாழி- ப்ரக்ர்தி.... ... ... ... ... ... ... (௨௪)

இருபத்தஞ்சாம்பாட்டு.—(குளித்தித்யாதி.) (இங்கேபித்தோபஹதனுக்கு) என்கிறவாக்யத்தாலே ஒருஹேது சொல்லுகையாலே, கீழில்பாட்டில் அவதாரிகையில் சொன்னஹேதுத்வயத்தோடே இதுவுமொருஹேதுவாகக் கண்டுகொள்வது.

ஆனால் பின்னை, கீழ் இவர்க்குப் பிறந்ததாகச்சொன்ன ஜ்ஞாந பக்திகள் என்னன்புதாய்த்தென்னில்; பகவத்ப்ரஸாதத்தாலே பிறந்த போகோபகரணமான ஜ்ஞாநபக்திகளாய்த்து-அங்குச்சொல்லிற்று; அவை ஸாதநகோடியில் அந்தர்ப்பவியாது, அவ்வநுபவம் காதாசித்கமன்றிக்கே நித்யமாகைக்குத் தன்கையில் ஸாதநமில்லை யென்கிறார்-இங்கு. இதில் முதற்பாட்டில்-ப்ரஸித்தமாய் த்ரைவர்ணிகரானவர்களுக்கு அதிகாரமான ஜ்ஞாநபக்திகளில் எனக்கோரந்யமில்லையென்கிறார்.

குளித்துமூன்றனலையோம்புங்குறிகொளந்தணன்மைதன்னை
ஒளித்திட்டேனென்கணில்லைநின்கணும்பத்தனல்லேன்;
களிப்பதென்கொண்டுநம்பிகடல்வண்ணாகதறுகின்றேன்;
அளித்தெனக்கருள்செய்கண்டாயரங்கமாநகருளானே. (௨௫)

ப-ரை.—குளித்து - நித்யஸ்நாநம் முதலான ஸ்நாநங்களைப் பண்ணி, மூன்றனலை - கார்ஹபத்யம் ஆஹவநீயம் தக்ஷிணாக்நியாகிற மூன்றக்நிகளை, ஓம்பும் - ஆதரித்துப்போருமதாய, குறிகொள் - மந்த்ரலோபாதிகள் வாராமே காக்கவேண்டிய, அந்தணமைதன்னை - ப்ராஹ்மண்யத்தை, ஒளித்திட்டேன் - பாழேபோக்கினேன்; என்கணில்லை-என்விஷயமாக எனக்கொன்றுமில்லை; நின்கணும்-உன்விஷயத்திலும், பத்தனல்லேன் - ஸ்நேஹமில்லாதவனாயிராநின்றேன்; இப்படியிருக்க, என்கொண்டுகளிப்பது - நான் எதைக்கொண்டுகளிப்பது; நம்பி - சீலாதிகுணபரிபூர்ணராய், கடல்வண்ணா - கடல்போலே கறுத்த நிறத்தையுடையனாய், அரங்கமாநகருளானே - கோயிலிலே நித்யவாஸம் பண்ணுமவனே, கதறுகின்றேன் - கர்ணகடூரமாகக்கூப்பிடாநின்றேன்; எனக்கு-என்னை, அளித்து - உன் க்ருபைக்குவிஷயமாக்கி, அருளிசெய் கண்டாய் - க்ருபையும் செய்தருளவேணுங்கிடாயென்கிறார். (௨௫)

வ்யா.—(குளித்துமூன்றித்யாதி) ஜந்மமாத்ரத்தையே கொண்டு நீ அவற்றை யநுஷ்டித்துவாவென்னுமித்தனைபோக்கி, ஜந்ம ப்ரப்ருதி ப்ராஹ்மண்யத்துக்கு அநுரூபமாயிருப்பதோரநுஷ்டாந மில்லையென்கிறார். (குளித்து) நித்யஸ்நாநம், நைமித்திகஸ்நாநம், ப்ராயச்சித்தஸ்நாநமென்று ஸ்நாநம்பஹுவிதமாயிருக்கும். நித்ய ஸ்நாநம் நைமித்திக ஸ்நாநத்துக்குடலன்று; அந்த நைமித்திக ஸ்நாநம்ப்ராயச்சித்தஸ்நாநத்துக்குடலன்று; இவைதனித்தனியே ஸ்வதந்த்ரங்களாயிறேயிருப்பது. கர்மாநுஷ்டாநந்தானொழியயோக்யதாபாதகங்கள்பண்ணிப்போரத்தான் அரிதாயிறே இருப்பது.

---

ஜ்ஞாநபக்திகளென்றது - "ஐயப்பாடறுத்துத் தோன்றுமழகன், ஆதரம் பெருகவைத்தவழகன்" என்றபதங்களைப்பற்ற.

உபாயசூந்யதை சொல்லுகிற ப்ரகரணத்திலே ஸ்நாநாதிராஹித்யம் சொல்லுவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (கர்மாநுஷ்டாநந்தானொழியவித்யாதி.) மூன்றனலாவது - கார்ஹபத்யாஹவநீயதக்ஷிணாக்நிகள். ஓம்புகையாவது - ஹோமஸாதநங்களைக் கொண்டு வளர்க்கை. இத்தையருளிச்செய்கிறார் சவலைப்ராஜையித்யாதி.)

(மூன்றனலை) அக்நி என்னாதே, "அனல்" என்றது-ஆராதியாவிடில் அபர்யாப்தியே ஸ்வபாவமாயிருக்குமென்று தோற்றுகைக்காக. (மூன்றனல்) ஒன்றே துராராதமாயிருக்க மூன்றையிறே விதித்தது. (ஓம்பும்) சவலைப்ப்ரஜைகளுக்குச் சோறும் நீரும் மூடிக்கொண்டு திரியும் மாதாவைப்போலே, உமியும் இந்தமூங் கொண்டு திரியவேண்டும் விஷயமென்கை.

(குறிகொள்) மந்த்ரலோபம், க்ரியாலோபம், த்ரவ்யலோபம், காலபேதம், தேவதாத்யாகம் என்கிற இவற்றிலொன்றுண்டாமாகில் நிஷ்பலமாயிருக்கையாலே, கரணம்பிழைக்கில் மரணமென்கை. பண்ணின அக்ர்த்யங்களை க்ஷாந்திக்கு விஷயமாக்கி ஓரஞ்ஜலியாலே ஸுப்ரஸந்நமாம் விஷயமன்றே. (அந்தணமை) இப்படியிருக்கிற தேதென்னில்-ப்ராஹ்மண்யம்; அது தன்னை யொளித்திட்டேன்-ப்ராஹ்மண்யமில்லாமை யென்னளவேயாய்ப் போகையன்றியே இவ்வர்ணந்தான் தண்ணிது என்னும்படி பண்ணினேன். விஶிஷ்டராயிருப்பாரைக் கண்டால் இன்னானதிகரித்த வர்ணத்திலே சிலவரன்றோவென்றுகொண்டு அவர்களுக்கும் அவத்யமாம்படி திரிந்தேன். இதிறே நான் கர்மயோகத்தில நினறநிலை.

ஆனால் ஜ்ஞாநயோகமிருந்தபடியெங்ஙனேயென்னில்; (எனகணில்லை) என்விஷயமாக எனகவொன்றில்லை. ஆத்மவிஷயஜ்ஞாநமெனக்கில்லையென்கை. கர்மயோகமில்லையென்றபோதேதத்ஸாத்யமான ஜ்ஞாநயோக மில்லையென்னு மிடம் அர்த்தஸித்தமன்றோ வென்னில்; இஜ்ஜந்மத்தில் அநுஷ்டித்ததொரு கர்மமில்லையாகிலும் பூர்வஜந்மத்தில்கர்மயோகம் பக்வமாய, அவ்வளவிலேதேஹவிஶ்லேஷம்பிறந்து அநந்தரஜந்மத்தில் ஜ்ஞாநம் நைஸர்க்கிகமாயிருககுமிறே, அதுவுமில்லையென்கை. ஆனால் பக்தியோகமிருந்தபடியென்னென்னில்; (நின்கணும்பத்தனல்லேன) கண்டார்க்குஸ்பர்ஹைபண்ணியல்லது நிற்கவொண்ணாதநின்பக்கல்எனக்கு ஸ்நேஹலேசமில்லை. கர்மஜ்ஞாநங்க ளிரண்டுமில்லையாயிருக்க உபயஸாத்யமான பக்தி யில்லை யென்னு மிடம் சொல்ல வேணுமோ வென்னில்;

---

"ஜ்ஞாநகர்மங்களிரண்டு முண்டானால் பக்தி கூடியல்லதிராது" என்கிற ஈட்டுவாக்யத்தோடே, "கர்மஜ்ஞாநங்க ளிரண்டுமில்லையாயிருக்க" என்றவாக்யத்துக்கு விரோதமுண்டேயாகிலும், * நோற்றநோன்பிலருளிச்செய்தது - "பரிநிஷ்பந்நஜ்ஞாநனுக்கு அநந்தரக்ஷணத்திலேபக்திபிறந்து" என்றத்தைப்பற்ற; இவ்விடத்தில் சொன்னது-அபரிபக்வ கர்மஜ்ஞாநனுக்குகாலாந்தரத்திலே பக்தி பிறக்கையைப்பற்றச் சொன்ன தாகையாலே விரோதமில்லை என்று கண்டுகொள்வது.

"జన్మాన్తరసహస్రేషు తపోజ్ఞానసమాధిభిః। నరాణాం క్షీణపాపానాం కృష్ణే భక్తిః ప్రజాయతే" "ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு தபோஜ்ஞாநஸமாதிபி:। நராணாம் க்ஷீணபாபாநாம் க்ருஷ்ணே பக்திப்ரஜாயதே" என்கிறபடியேயுண்டாகலாமிறே, அதுவுமில்லையென்கை. அதவா, கர்மஜ்ஞாநபக்திகள் மூன்றையுந் தனித்தனியே உபாயமாகச்சொல்லுவாருமுண்டு; அந்தப்ரகாரத்திலே சொல்லிற்றாகவுமாம்.

"కర్మణైవహి సంసిద్ధి మాస్థితా జనకాదయః" "సర్వం కర్మాఖిలం పార్థ జ్ఞానే పరిసమాప్యతే" "భక్త్యా త్వనన్యయా శక్యః" "கர்மணைவஹிஸம்ஸித்திமாஸ்திதாஜநகாதய:" "ஸர்வம்கர்மாகிலம்பார்த்த ஜ்ஞாநேபரிஸமாப்யதே" "பக்த்யாத்வநந்யயாஶக்ய:" என்னக்கடவதிறே. இதிறே, கர்மஜ்ஞாநபக்திகளில் நான் நின்றநிலை. மற்றும் இவ்விஷயத்திலறிவுடையார், "நோற்றநோன்பிலேன்" என்றும், "கறவைகள் பின்சென்று" என்றும், "నధర్మనిష్ఠోస్మి" "நதர்மநிஷ்டோஸ்மி" என்றும், தந்தாம்வெறுமைகளைப் பேற்றுக்குடலாக முன்னிட்டுக் கொண்டுபோகக் கடவதாயிறே இருப்பது.

பெரியபெருமாள் தம்முடைய க்ர்பைக்கு இவர்கள் சொன்ன வெறுமைகளும் அரிதாகையாலே பேற்றுச்குடலாக, ஆழ்வீர் நீர், நிரபேக்ஷரொன்றீரென்ன; (களிப்பதென்கொண்டு) கீழ்நின்றநிலையில்லனக்கநுதாபமுண்டாயோ, அதடியாக "మాశుచః" "மாஶுச:" எனவுண்டாயோ, ஏது ஆலம்பநமாகக்களிப்பது. இத்தால்-அகிஞ்சநனென்றபடி. உமக்கநுதாபமில்லையாகில் விடுமித்தனையன்றோ வென்னில்; என்பக்கல்முதலிலலையாகுல்உன்பக்கலுமில்லையோவென்கிறார் (நம்பி) நான்உபாயாந்தரங்களில்வெறுமையில் அபூர்ணனானவோபாதி தேவரீர் ஸ்ரீலாதிகுணபரிபூர்ணரல்லீரோ-தேவரீருடைய பூர்த்திஸஹகாரநிரபேக்ஷமன்றோ. "அறிவொன்று மில்லாத"என்றவநந்தரம், "குறைவொன்றுமில்லாத கோவிந்தா" என்றுளிறே

---

தம்முடையக்ர்பைக்குஎன்றது - தாமக்ர்பை பண்ணுகைக்கு உறுப்பாகவென்றபடி. வெறுமைகளு மரிதாகையாலே யென்றது-வெறுமைகளைமுன்னிடுகையும் அல்லாதார்பக்கல அரிதாகையாலென்றபடி. (இத்தால் அகிஞ்சநனென்றபடி) என்றதுக்கு தாத்பர்யம் - இப்படி வெறுமையை முன்னிடுகிறது அநுதாபபூர்வகமல்லாமையாலே அகிஞ்சநனென்றபடி. "நம்பி" என்றதுக்கு தாத்பர்யாந்தரம் (தேவரீருடைய பூர்ததியித்யாதி.) இந்த பக்ஷத்தில் உபாயாந்தரங்களில் அந்வயமில்லையாகில் ப்ரதிபத்தியிலே அந்வயமுண்டே யென்று ஸங்கதிகண்டுகொள்வது. ப்ரமாணம் உபயார்த்த ஸாதாரணம்.

(கடல்வண்ணா) தேவரீருடைய ஸ்ரீலாதிகுண பூர்த்தியெல்லாம் வேணுமோ, வடிவழகே யமையாதோ என்பேற்றுக்கு. ஒருகடலோடே ஸ்பர்த்தை பண்ணி ஒருகடல் சாய்ந்தாப்போலேயிறே பெரியபெருமாள் கண்வளர்ந்தருளுகிறது. "ஐயப்பாடறுத்துத்தோன்றுமழகன்" என்றும், "ஆதரம் பெருகவைத்தவழகன்" என்றும், இவ்வடிவழகேயிறே இவர்பற்றுசாகச் சொல்லிப்போந்தது. இத்தால்-சரண்யனென்றபடி.

உம்முடைய வெறுமையையும், நம்முடைய பௌஷ்கல்யத்தையும் அறிந்தீராகில் இதற்குமேற்பட உமக்கு வேண்டுவதென்னென்ன; (கதறுகின்றேன்) அந்நிலையிலேதான் நிற்கப்பெற்றேனோ, ஸாதநாநுஷ்டாநம் பண்ணிப்பலம்தாழ்த்துக் கூப்பிடுவாரைப்போலே ச்ரவணகடுகமாகக் கூப்பிடாநின்றேன். ஸ்வரக்ஷணத்தில் கைவாங்கி, தேவரீர் கண்வளர்ந்தருளுகிறவழகுக்கு மங்களாசாஸநம் பண்ணுகையே யாத்ராயா யிருக்கிறேனே. இத்தால் பலித்ததாய் விட்டது - ஆசாலேசமுடையார்க்கு முகங்கொடுக்கக்கடவவர் ஒராச்ரிதன் கூப்பிடாநிற்க அநாதரித்து நிற்பதே! என்று நாட்டார் சொல்லும்படி தேவரீர்க்கு ஓரவத்யத்தைத் தந்தேனித்தனையிறே.

இப்படி உமக்கொருநன்மைகளுமில்லையாகில் பின்னைநம்மைச் செய்யச்சொல்லுகிறதென்னென்னில்; (அளித்தெனக் கருள்செய்கண்டாய்) என்னை தேவரீர்க்குக்ருபாவிஷயமுமாக்கிக்ருபையும்பண்ணவேணும். அதாவது - அநுதாபத்தைப்பிறப்பிக்க வேணுமென்கை. என்றான்? நமக்குஇங்ஙனே அடியேதொடங்கிச் செய்யவேண்டுகிறநிர்ப்பந்தந்தானென்னென்னில்;(அரங்கமாநகருளானே) தந்தாமுக்கென்ன ஒருமுதலுமில்லாதாரை ரக்ஷிக்கைக்காக வன்றோ இங்குவந்து சாய்ந்தருளிற்று. குறைவற்றாரை ரக்ஷிப்பார்க்கு இங்குவரவேணுமோ, அங்கே யிருக்கவமையாதோ. இங்கே வந்து கிடையழகுகாட்டியும் அர்ச்சகபராதீநமான சீலவத்தைக் காட்டியும் ருசியேதுடங்கியுண்டாக்கி ரக்ஷிக்கைக்காகவன்றோ. (உரு)

அ.—இருபத்தாறும்பாட்டு. (போதெல்லாம்) த்ரைவர்ணிகாதிகாரமானவுபாயமில்லையாகில் ஸர்வாதிகாரமான அர்ச்சநஸ்தவநாதிகள்தானுண்டோ வென்னில்; அதுவுமில்லையென்கிறார்.

போதெலாம்போதுகொண்டுன்பொன்னடிபுனையமாட்டேன்;
தீதிலாமொழிகள்கொண்டுன்றிருக்குணஞ்செப்பமாட்டேன்;
காதலால்நெஞ்சமன்புகலந்திலேனதுதன்னாலே
ஏதிலேனரங்கர்க்கெல்லேயென்செய்வான்தோன்றினேனே. ()

---

"கடல்வண்ணா" என்றபதத்தோடே கூட்டி, "கதறுகின்றேன்" என்றதுக்கு தாத்பர்யாந்தர மருளிச்செய்கிறார் (ஸ்வரக்ஷணத்தி லித்யாதி.) (உரு)

ப-ரை—போதெலாம் - ஸர்வகாலங்களிலும், போதுகொண்டு - புஷ்பங்களைக்கொண்டு, உன் - உன்னுடைய, பொன் - அழகிதான, அடி - திருவடிகளிலே, புனையமாட்டேன்-ஸமர்ப்பிக்கக்ஷமனாகிறிலேன்; தீதிலா-குற்றமற்ற, மொழிகள்கொண்டு - வார்த்தைகளைக்கொண்டு, உன் - உன்னுடைய, திருக்குணம் - கல்யாணகுணங்களை, செப்பமாட்டேன் - சொல்லமாட்டுகிறிலேன்; காதலால் - காதலடியாகிற, அன்பு - அன்பை, இதுக்குமுன்பு, நெஞ்சம்கலந்திலேன்-நெஞ்சில்ஸ்பர்சித்ததில்லை; அதுதன்னாலே - அதினாலே, அரங்கற்கு - அழகிய மணவாளனுக்கு, ஏதிலேன் - ஒருகாரணத்தாலும் ஸ்பர்சிக்கப்பெற்றிலேன்;என் செய்வான் தோன்றினேன் - ஏதுக்காகப்பிறந்தேனென்கிறார். (உசு)

வ்யா—(போதெலாம் போதுகொண்டுன்பொன்னடிபுனைய மாட்டேன்) அழகிய செவ்விப்பூக்களைக்கொணடு ஸர்வகாலமும் உன்னுடைய ஸ்ப்ர்ஹணீயமான திருவடிகளிலே புனையவிறேயடுப்பது, அதில்ச்ரத்தையில்லாமையேயன்று, சக்தியேயில்லையென்கிறார். உன்னை யொழிந்தவிஷயங்களிலே செய்யவென்றால் சர்த்தா சக்திகளிரண்டு முண்டாயிருக்கும். "యౌ తత్పూజాకరౌ కరౌ" "யௌதத்பூஜாகரௌகரௌ"என்கிறபடியே-தேவரீர்திருவடிகளையே ஆராதிக்கக்கண்டகைகளைக்கொண்டு, அப்ராப்தமாய் அநர்த்தாவஹமாயிருந்தவிஷயங்களை ஆராதித்துப்போந்தேன். காலமெல்லாம் மாட்டேன், ஒருக்கால் வல்லேன் என்கிறாரல்லர்; ஸர்வகாலமும் மாட்டேனென்கிறார். ஒருகாலத்தில் சக்தனாகில் அதுதானே பேற்றுக்குப்போரும்படியாயிறேதேவரீர் ப்ரபாவமிருப்பது. "సకృదుచ్చరితం యేన" "ஸக்ருதுச்சாரிதம்யேந" என்றும், "సకృత్స్మృతోపి గోవిందః" "ஸக்ருத்ஸ்மர்த்தோபிகோவிந்த:" என்றும், "సకృదేవ ప్రపన్నాయ" "ஸக்ர்தேவப்ரபந்நாய" என்றுஞ் சொல்லக்கடவதிறே. .

காயிகமானவ்யாபாரத்தை புறம்பேவிநியோகங் கொண்டீரோயாகிலும் உம்முடையபேச்சுக் குற்ற மற்றிராநின்றது, ஆனபின்பு நம்குணங்களைப் பேசமாட்டீரோவென்ன; (தீதிலாமொழிகள்கொண்டுன் திருக்குணஞ்செப்பமாட்டேன்) பேச்சுக் குற்றமற்றாலும் உன்னுடைய கல்யாண குணஙகளைப் பேசவென்றால் க்ஷமனாகிறிலேன். ஹேயகுணயுக்தமான க்ஷுத்ரவிஷயங்களைப் பேசவென்றால்வாச்சியிடனைகநறுக்கறப்பேசவல்லேன்;"సా జిహ్వా యా హరిం స్తౌతి" "ஸாஜிஹ்வாயாஹரிம்ஸ்தௌதி" என்கிற குணங்களில் வந்தால் நாப் புரளாது.

---

இருபத்தாறும்பாட்டு. (போதெல்லாம்) வாச்சியிடனைக-வாச்சியிட்டு வெட்டினாப்போலே யென்றபடி.

அவையிரண்டுக்கும் விஷயம் புறம்பேயாக்கினீராகில் நெஞ்சாலே நம்மைஸ்நேஹிக்க வல்லீரோவென்ன;(காதலால் நெஞ்சமன்புகலந்திலேன்) காதலடியாக வருமன்பு இதுக்குமுன்பு நெஞ்சில் ஸ்பர்சித்ததில்லை. அதாகிறது - "ஸங்காத் ஸஞ்ஜாயதே காம:" "ஸங்காத்ஸஞ்ஜாயதேகாம:" என்கிறப்ரேமம்புறம்பே யொருவிஷயத்திலுண்டாகிலிறே அத்தை அங்குநின்றும் மீட்டுப்போந்து தேவரீர் பக்கலிலே யாக்கவேண்டுவது. முன்பு ஸ்த்ரீபதார்த்தங்களில் பண்ணிப்போந்தப்ரேமம் அவர்கள்பக்கல் அர்த்தாதிகளை அபஹரிக்கைக்காகவாய்த்தல்லது அவர்களேஉத்தேஸ்யமென்னும்ப்ரேமமும் இல்லை. "ஸ்மரபரவஶோவஞ்சநபர:" "ஸ்மரபரவஶோவஞ்சநபர:" என்னக்கடவதிறே. "பரமஸுஹ்ருதி பாந்தவே களத்ரே ஸுததநயா பித்ருமாத்ருப்ருத்யவர்கே। ஶடமதிருபயாதி யோர்த்ததிருஷ்ணாம் தமதம சேஷ்டமவைஹி நாஸ்ய பக்தி:" "பரமஸுஹ்ருதி பாந்தவேகளத்ரேஸுததநயாபித்ர்மாத்ர் ப்ர்த்யவர்க்கே। ஶடமதிருபயாதியோர்த்ததர்ஷ்ணம்தமதம சேஷ்டமவைஹிநாஸ்ய பக்தி:" என்னக்கடவதிறே.

(அதுதன்னாலே ஏதிலேன்) மநோவாக்காயங்கள் ஒருபடிப் பட்டிருப்பார் பெறும்பேற்றுக்கு இவற்றிலொன்றாகிலும் வேண்டியிருக்க, அதுவு மெனக்கின்றிக்கே யிருக்கையாலே, ஏதிலேன்- ஏதுமில்லேன். (அரங்கற்கு-ஏதிலேன்) "ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம்" "ஸுஹ்ர்தம்ஸர்வபூதாநாம்" என்கிற ஸௌஹார்த்தத்தையும், "ருஜு:" "ருஜு:" என்கிறபடியே-ஆச்ரிதவிஷயத்தில் மநோவாக்காயங்கள்மூன்றும் செவ்விதாயிருக்கிற ஆர்ஜவ குணத்தையும் கேட்டேபோகாமே அநுஷ்டாநசேஷமாக்குகைக்காகக் கோயிலிலே ஸந்நிஹிதரானதேவரீர்க்கு, ஒன்றுமாகப்பெற்றிலேன்-ஒருகரணத்தாலும் தேவரீரை ஸ்பர்சிக்கப் பெற்றிலேன். (எல்லே) என்னே. அஸந்நிஹிதராயிழந்தேனல்லேன்;ப்ராப்தியில்லையாயிழந்தேனல்லேன்; செய்த அம்சத்திலே பிழைபிடிக்குமவராயிழந்தேனல்லேன்;என்னிழவுக்கடிபாபமேயிறே. ஸ்ரீகௌஸ்துபம்போலே உகப்பானவஸ்துகிடீர்இப்படிவ்யர்த்தமாயப்போய்த்தது. *அரங்கத்துறையுமின்துணைவர்க்குக்கிடீர் நான்தூரஸ்தனாய்த்து. கஷாயபானம் பண்ணுமாப்போலே ஹிதபுத்தியாலே ஸேவிக்கவேண்டும் விஷயமாய்த்தானிழந்தேனோ; பாலேமருந்தானாப்போலே தர்சநீயரான தேவரீரே மோக்ஷப்ரதராயிருக்கவன்றோ இழந்தது.

---

நெஞ்சிலே அன்புபண்ணமாட்டிற்றிலே னென்றதே, "கலந்திலேன்" என்றதுக்கு தாத்பர்யம் (புறம்பேயித்யாதி.) "தமதம சேஷ்டமவைஹி நாஸ்ய பக்தி:" "தமதமசேஷ்டமவைஹிநாஸ்யபக்தி:" இதிச்லோகசேஷ:. "போதெல்லாம்" இத்யாதிக்கு ப்ரதிகோடித்வேந தாத்பர்யம் (ஸுஹ்ருதம்-ஸுஹ்ர்தமித்யாதி.) ... (உகூ)

(என்செய்வான்தோன்றினேனே)"[illegible]" "[illegible]தேஹலம்பத்நி:" என்கிறபடியே-தேவரீர்க்குறுப்பான ஜந்மமாயிருக்க நான்ஏதுக்காகப்பிறந்தேன். "என்செய்வான்பிறந்தேன்"என்னாதே, "தோன்றினேன்" என்கிறது-உத்பாதங்கள்போலே அநர்த்தஹேதுவாகப் பிறந்தேனென்கை. உத்பாதங்களுடையதோற்றந்தான் தமக்கும் ப்ரயோஜநமின்றிக்கே பிறர்க்கும்அநர்த்தமாயிறே யிருப்பது; அதுபோலேயாய்விட்டதிறேயென்ஜந்மமென்கிறார். ()

அ.—இருபத்தேழாம்பாட்டு. (குரங்குகள்) மநுஷ்யாதி காரமானவையொன்றுமில்லையாகில், திருவடி திருவநந்தாழ்வான் முதலானவர்களைக்கொள்ளு மடிமையை, சாஸ்த்ரவஶ்யதை யின்றிக்கேயிருந்துள்ள திர்யக்குக்களைக் கொள்ளுவதாக நாம்வந்தவரித்த காலத்தில், திர்யக்ஸாமாந்யத்தாலே அணில்கள் சுத்தபாவனையோடேபண்ணிற்றின சிலகிஞ்சித்காரமுண்டு, அதுதானுண்டோவென்னில்; அதுவுமில்லையென்கிறார்.

குரங்குகள்மலையை நூக்கக்குளித்துத்தாம்புரண்டிட்டோடித்
தரங்கநீரடைக்கலுற்றசலமிலாவணிலும்போலேன்;
மரங்கள்போல்வலியநெஞ்சவஞ்சனேன்நெஞ்சுதன்னால்
அரங்கனார்க்காட்செய்யாதேயளியத்தேனயர்க்கின்றேனே. ()

ப-ரை.—குரங்குகள்-வாநரவீரர்களானவர்கள், கிஞ்சித்கரித்துஸ்வரூபம்பெறுகைக்காக, மலையை - பர்வதத்தை, நூக்க - தள்ளிக்கொண்டுவர, தாம்-தாங்கள், குளித்து - நீரிலேமுழுகி, புரண்டிட்டு-கரையிலுள்ள உலர்ந்த மணலிலே புரண்டு, ஓடி - ஸேதுபந்தம் சடக்கெனத்தலைக்கட்ட வேணுமென்கிறத்வராதிசயத்தாலே ஓடி, தரங்கம் - திரையையுடைத்தாய், கிளர்ந்திருந்துள்ள, நீர்-கடலை, அடைக்கலுற்ற-அடைக்கையிலே ஒருப்பட்டனவாய், சலமிலா - குற்றமற்றனவான, அணிலும் - அணில்களையும், போலேன்- ஒவ்வேன்; இதுவன்றியும், மரங்கள்போல் - மரங்களைப்போலே, வலியநெஞ்சம் - கடிநசித்தத்தையுடையனாய், வஞ்சனேன் - வஞ்சநபரனாய், அளியத்தேன் - அருமந்தமநுஷ்யனான நான், அரங்கனார்க்கு - கோயிலிலே கண்வளர்ந்தருளுமவருக்கு, நெஞ்சுதன்னால் - ப்ரவ்ருத்தியாலே, ஆட்செய்யாதே - அடிமைசெய்யாமல், அயர்க்கின்றேனே - மறந்து அநர்த்தப்படாநின்றேனென்கிறார். (உஎ)

வ்யா.—(குரங்குகள் மலையைநூக்க) மலைகளாலே கடலைத் தூர்க்கிறவிடத்தில் மலைகளுக்குத்தொகையுண்டாய் ஸ்ரீவாநரவீரர்களுக்குத் தொகையில்லாமையாலே ஒருமலையை அநேகர் கூடித் தொட்டுக்கொண்டு வருவார்களாய்த்து.

---

இருபத்தேழாம்பாட்டு.(குரங்குகளித்யாதி) "மலை" என்றஏகவசநத்துக்கு தாத்பர்யம் (மலைகளாலே யித்யாதி.) உபாத்யாயன், கசைகொண்டுவரச்சொன்னால் அவன்முகமலர்த்திக்காக எல்லாரும்தொட்டுக்கொண்டு வருமாப்போலே யென்றபடி.

ஒருமலை ஒருவர்க்குப்பாத்தம்போராதபடிபெருமிடுக்கராயிருக்கச்செய்தேயும் உபாத்தியாயர்களைபோலே எல்லாரும்கிஞ்சித்கரித்துஸ்வரூபம்பெறவேணுமென்றிருக்குமவர்களாகையாலே இப்படிச்செய்கிறார்களாய்த்து. ஸ்வரூபஜ்ஞானமுடையாரோடு இல்லாதாரோடுவாசியறத்துரும்பெழுந்தாடும்படியிறே, அடிமைகொள்ளுகிறவர்கையும் வில்லுமாய்நின்றநிலைதான். (மலையைநூக்க) கடலிலே பொகட என்னாதே "நூக்க" என்றது-ஒருத்தனுக்கு ஒருமலை விஷயமாகப்போராமையாலே வேறேயொருத்தன்வந்துபற்ற அவர்கள் பக்கலிலே நூக்க இப்படி கைமேலேபோயாய்த்து மலை கடலிலேபுகுவது. "అవగాహ్యార్ణవం స్వప్స్యే" "அவகாஹ்யார்ணவம் ஸ்வப்ஸ்யே" என்றுகொண்டு, பெருமாளுக்கு ஆற்றாமைகரைபுரண்டு செல்லாநிற்க அக்காரியத்துக்குவேண்டுவார் ப்ரவர்த்தியாநின்றார்களென்று ஆறியிருக்கவொண்ணாதிறே. கடல் தூர்ப்புண்டு அக்கரைப்பட்டதாய்விடவற்றேயென்னும் த்வரையாலே எல்லாருமொக்க ப்ரவர்த்தித்தாராய்த்து.

(குளித்து இத்யாதி) ஸ்ரீவாநரவீரர்களுடைய த்வரைதான் அணில்களுக்குப்போந்திராமையாலே, பெருமாளுக்கு ஆற்றாமைகரைபுரளாநிற்க முதலிகளுக்கு இத்தனை மெத்தனவெல்லாமென்தான்? இருந்தபடியால் சடக்கெனக்கடலடைக்கிறவர்களுக்கு சக்தியில்லை, ஆனபின்பு, மலையாலே தூர்ப்புண்டப்ரதேசத்துக்கு மணல் சுமக்கப் பரிகரமில்லையிறே என்று, அணில் நீரிலேபுக்குத் தோய்கையும் கரையிலே யேறினால் மணல் தொற்றுகையும், உதறினவாறே விட்டுக்கழிகையும் இவை முன்பேகைகண்டபடியாலே இப்ப்ரகாரத்தாலே கடலைத்தூர்ப்போமெனறு பார்த்துக் கடலிலேபுக்கு முழுகுமாய்த்து. இம்முழுக்குதன்னாலே நீர்சுவறும், மணலுங்கொண்டு வரலாமென்றாய்த்து நினைவு. (தாம்) கடலில் நீர்சுவறுவதும் மணல் தொற்றுவதும் தம்முடம்பிலே யென்றறியாதாய்த்து அடிமையில் த்வரையாலே. தாழ்வுபட்ட கார்யமடங்கத் தங்களாலே தலைக்கட்டுகிறதாக வபிமானித்துத் திரிகிறபடியாலே "தாம்" என்னவுமாம். (புரண்டிட்டோடி) புக்கமலைகளுக்கு நொய்மணல்புக்குச்சொரிந்துகொண்டு வருகிறபடிபோராதென்றுபார்த்து மணலிலேபுரண்டோடித் திரியாநிற்குமாய்த்து. உள்ளமணலும் வழியிலேயுதிரும்படியாகவோட இடையிலே நின்றவர்கள் இவற்றின்த்வரையைக்கண்டு என்றான் இத்தனை வியக்கமென்றால்?

---

விஷயமாகவும் போராமையாலே யென்றது-போராதிருக்கச் செய்தேயுமென்றபடி. ஒருத்தனுக்கும் விஷயம் போராதிருக்க வேறே சிலர்வந்து பற்றுகிறதுக்கு ஹேதுவேதென்ன; அருளிச்செய்கிறார் (అవగాహ్యార్ణవం - அவகாஹ்யார்ணவமித்யாதி.)

பெருமாளுக்குப்பகலமுதுலங்கையில்வடக்குவாசலில் விடுவித்ததாயிருக்கும், உங்களுக்குத்வரையற்றிருந்ததி! என்னுமாப்போது. ருசியுரானது தந்தா மளவைப்பார்க்கவொட்டாதிறே.

(தரங்கநீர் அடைக்கலுற்ற) திரையை யுடைத்தாய்க்கிளர்ந்திருந்துள்ள கடலை யடைக்கையிலே சமைந்த. (உற்ற) கடலடைக்கிறார்கள் தாங்களாய்,'முதலிகளும் தங்களுக்கு எடுத்துக் கைநீட்டுகிறவர்களாயாய்த்து இவற்றினுடைய அபிமாநம். (சலமிலாவணிலும்போலேன்) இவற்றினுடைய வ்யாபாரம் அங்குத்தைக்கு கிஞ்சித்காரமாய்ப் பலிப்பதொன்றில்லையாகில் இது அடிமையாகிறபடி யெங்ஙனேயென்னில்; அடிமை கொள்ளுகிறவனுக்கு இவற்றின் பாவசுத்தியே யமையுமென்கை. சலமிலாமையாவது- "கடல்தூர்ப்புண்டு பெருமாள் அக்கரைப்பட்டாராகவல்லரோ" என்கிறபாவத்தில் புரையற்றிருக்கை. சலம் - வ்யாஜம். இலா - இல்லாமை-நின்ற நிலைபோராதே நிற்கை.சாஸ்த்ரவச்யதையுமின்றிக்கே வர்ணாச்ரமநியமமுமின்றிக்கே, ஹஸ்தபாதாதிகரணமுமன்றியிலே யிருக்கிற திர்யக்ஸாமாந்யமாத்ரமான இவை, குளிப்பது ஓடுவது புரளுவதாகிற இவற்றினுடைய பாவமும்எனக்கில்லையென்று, "குளித்து மூன்றனலை-ஒளித்திட்டேன்" என்கிறார். அவாப்தஸமஸ்தகாமனுக்கு எதிர்த்தலையில் பாவசுத்தியொழிய அவனுக்குவேண்டுவதில்லை, இவனுற் செய்யலாவது மொன்றில்லை, நமக்குள்ள ஜ்ஞாநசக்திகளைகொண்டு பூர்ணனுக்கு நாமொன்று செய்கையாவது என்னென்று கைவாங்குமவர்கள் பாக்யஹீநர், அந்த பூர்த்திதான் நாமிட்டதுகொண்டு த்ர்பதனைக்குறுப்பென்று சுத்தபாவராய் மேல்விழுகைக்குறுப்பாம் பாக்யவான்களுக்கு; இப்பாவசுத்திதான் ஒருவர்க்குங் கிடையாமையாலே எல்லார்க்குஞ் செய்யலாவதொன்றென்னவொண்ணாது. ஆக அணில்களுக்குள்ளவாநுகூல்யமும் எனக்கில்லையென்கிறார்.

(மரங்கள்போல் வலியநெஞ்சவஞ்சனேன்) இவ்விஷயத்தில் தம்நெஞ்சில நெகிழ்ச்சியில்லாதபடிக்கு த்ர்ஷ்டாந்தஞ்சொல்லுகிறார்.

---

ஆகையாலே கடல்தூர்ப்புண்ணுமென்றபடி. "சலம்" என்று வ்யாஜமாய், அத்தாலே-அஹ்ர்தயமென்றபடியாய், அதின்றிக்கேயிருக்கையாவது - பாவத்தில்புரையற்றிருக்கை. அதவா, "சலம்" என்றதுக்கு அர்த்தாந்தரம் (சலம்வ்யாஜமென்று;) இங்ஙனேயாகவுமாம். மித்ரகார்யபுத்த்யாசெய்கிற முதலிகளைப்போலன்றிக்கே நிருபாதிகமாயிருக்கை. "மித்ரகார்யம்க்ர்தமிதம் பவத்பிர்வாநரோத்தமா:" "மித்ரகார்யம்க்ர்தமிதம் பவத்பிர்வாநரோத்தமா:" என்றாரிறே பெருமாள்.

"இரும்புபோல் வலியநெஞ்சம்" என்றவர் அதுக்கு மவ்வருகே ஒருவன்மை சொல்லுகைக்காக "மரங்கள்போல் வலியநெஞ்சம்" என்கிறார். அக்னியிலேயிட்டு உருக்கி நினைத்தகார்யம்கொள்ளலாம்இரும்பு, இத்தை நெருப்பிலேயிட்டால் கரிந்துபோய் முன்புநின்ற நிலையும் கெடுமித்தனை. (வஞ்சனேன்) இப்படி நெஞ்சு திண்ணிதாயிருக்கச்செய்தே இது த்ரவத்ரவ்யமோவென்று தேவரீரும் ப்ரமிக்கும்படி பாவித்துக்காட்டாநிற்பன். அகவாயில் நினைவு ஒன்றாயிருக்க "இவனத்தனை பகவத் ப்ரேமமுடையாரில்லை" என்று ப்ரமிக்கும்படி மறைத்துவர்த்திப்பன். "இறையிறையுருகும் வண்ணம்" என்று கீழ்ச்சொன்னதத்தை யநுசயிக்கிறார். (நெஞ்சுதன்னுலரங்கனுர்க்காட்செய்யாதே) அணில்கள்பக்கலிலும் பாவசுத்தியேயிறேயுள்ளது, அந்நெஞ்சைக்கொண்டு ஸந்நிஹிதனுன வுன்பக்கலிலே அல்பாநுகூல்யம் பண்ணுதே. இந்த பாவசுத்திமாத்ரத்தையே பரிபூர்ணசேஷவ்ர்த்தியாகக்கொள்ளும் பகவதபிப்ராயத்தாலே "ஆள்செய்யாதே" என்கிறார். (அளியத்தேன்) "అహం సర్వం కరిష్యామి" "அஹம்ஸர்வம் கரிஷ்யாமி" என்னும் இளையபெருமாளைப்போலே ஸர்வவித கைங்கர்யங்களுக்கும் அர்ஹமான அருமந்தவஸ்து கிடீர்இது. (அயர்க்கின்றேனே) விஸ்மரித்து அநர்த்தப்பட்டுப்போவதே! இவ்விஷயம் ஸந்நிஹிதமல்லாமையாலேயாதல், இத்தலையில் யோக்யதையில்லாமையாலே யாதலன்றிறே; "மறந்தேனுன்னைமுன்னம்" என்கிறபடியே விஸ்ம்ர்தியாலேயிறே அநர்த்தப்பட்டது. சலமிலாமரங்கள்போலென்னவுமாம்; மரங்கள்போலே சலமிலாவென்னவுமாம். மரத்தை ஓராயுதத்தாலே சலிப்பிக்கவுமாம், நெஞ்சையொன்றாலும் சலிப்பிக்கவொண்ணுதென்றபடி. (உஎ)

அ.—இருபத்தெட்டாம்பாட்டு. (உம்பரால்) அணில்கள் திர்யக்காய்வைத்து நமக்கு கிஞ்சித்கரிக்கவுத்யோகிதபாவசுத்தி உமக்கில்லையாகில், ஸ்ரீகஜேந்த்ராழ்வான் பொய்கையிலே புக்கு இடர்பட்டு நாம்சென்று தனக்குதவக்கடவதாக நினைத்ததொருநினைவுண்டு, அதுதான் உமக்குண்டோவென்ன; அதுவுமில்லையென்கிறார்.

உம்பராலறியலாகாவொளியுளாரானைக்காகிச்
செம்புலாலுண்டுவாழும்முதலைமேற்சீறிவந்தார்;
நம்பரமாயதுண்டேநாய்களோஞ்சிறுமையோரா
எம்பிராற்காட்செய்யாதேயென்செய்வான்தோன்றினேனே. ()

---

(விஸ்ம்ர்தியாலே யிறே அநர்த்தப்பட்டது) என்றவிடத்திலே, "విపదో నైవ విపదస్సంపదో నైవ సంపదః॥ విపద్విస్మరణం విష్ణోస్సంపత్తస్యైవ సంస్మృతిః" "விபதோநைவவிபதஸ்ஸம்பதோநைவஸம்பதः। விபத்விஸ்மரணம்விஷ்ணோஸ்ஸம்பத்தஸ்யைவஸம்ஸ்ம்ர்திः" என்றதநுஸந்தேயம்.

ப - ரை.—உம்பரால் - ப்ரஹ்மாதி தேவர்களால், அறியலாகா - இப்படிப்பட்டதென்று பரிச்சேதித்தறியவொண்ணாத, ஒளியுளார் - தேஜோமயமான பரமபதத்திலுள்ள ஸர்வேச்வரன், ஆனைக்காகி-திர்யக்காயிருந்துள்ள கஜேந்த்ராழ்வானுக்காக, செம் - சிவந்த, புலால் - மாம்ஸத்தை, உண்டு - புஜித்து, வாழும் — வர்த்திக்கிற, முதலைமேல் - முதலைமேலே, சீறி - பெருங் கோவமுடையராய்க்கொண்டு, வந்தார்-அவன் இடர்பட்ட மடுவின் கரையிலே அரைகுலையத்தலைகுலையவந்தார்; இப்படி ஆச்ரிதபக்ஷபாதியாய் ரக்ஷிக்குமவனிருக்க, நம்பரமாயதுஉண்டே-நம்முடையரக்ஷணத்தில்நமக்கொருபாரமுண்டோ;நாய்களோம் - நாய்கள்போலே தண்ணியரான நம்முடைய, சிறுமையோரா-குற்றத்தில் கண்வையாதவராய், எம் - நமக்கு வகுத்த சேஷியுமாய், பிரார்க்கு-உபகாரகனுமாயிருக்குமவனுக்கு, ஆட்செய்யாதே - அடிமை செய்யாமல், என் செய்வான் தோனறினேன் - ஏதுக்காகப்பிறந்தேனென்கிறார். (உஅ)

வ்யா.—(உம்பர் இத்யாதி) ப்ரஹ்மாதிகளா லறியவொண்ணாத,ஒளியுண்டு-ஸ்ரீவைகுண்டம்; அத்தை வாஸஸ்தாநமாகவுடையவர். "అథయదతః పరో దివో జ్యోతిర్దీప్యతే" "அதயததஃபரோதிவோ ஜ்யோதிர்த்திப்யதே" என்றும், "అత్యర్కానలదీప్తం తత్స్థానం విష్ణోర్మహాత్మనః" "அத்யர்க்காநலதிப்தம் தத்ஸ்தாநம் விஷ்ணோர்மஹாத்மநஃ" என்னக்கடவதிறே. ஜ்ஞாநாதிகரானாலும் "ఈశ్వరోహమ్" "ஈஶ்வரோஹம்" என்றிருப்பார்க்கு நிலமன்றே பரமபதம்; ப்ராபிக்க முடியாமையேயன்று, அறியவும் முடியாதென்கை. "యన్న దేవా న మునయో న చాహం న చ శఙ్కరః। జానన్తి పరమేశస్య తద్విష్ణోః పరమం పదమ్" "யந்நதேவாநமுநயோநசாஹம்நசஶங்கரஃ। ஜாநந்திபரமேஶஸ்யதத்விஷ்ணோஃ பரமம்பதம்." * கலங்காப்பெருநகரத்திலே நித்யஸூரிகளை அநுபவிப்பித்திருக்கிறவர்கிடீர் ஸம்ஸாரத்திலே ஆர்த்தரக்ஷணத்துக்காக வந்தார். (ஆனைக்காகி) இப்படி கரைபுரண்ட மேன்மையை யுடையவன்றான் பதறிவந்து கார்யம்செய்தது ஒருபிராட்டி திருவநந்தாழ்வான் போல்வார்க்கோவென்னில்; ஒருதிர்யக்குக்காகக்கிடீர். இடர்பட்ட அதினளவேது, உதவினவனளவேதென்கிறார். ஆச்ரிதரொருதலையானால் தன்மேன்மை பார்த்தல், அவர்களுடைய சிறுமைபார்த்தல் செய்யுமவனன்றிக்கே, அவர்கள்பக்கல்பார்ப்பது அத்தலையில் ஆபத்தும் தன்னோட்டை ஸம்பந்தமுமேயாய்த்து. ஆச்ரிதர் சிறுமைபார்த்தொழிந்தால் தன்சீற்றத்துக்கு நேர்நிற்க வல்லதொன்றுண்டோ.

---

இருபத்தெட்டாம்பாட்டு. (உம்பராலித்யாதி.) "அறியலாகா" என்றதுக்கு இரண்டுதாத்பர்யம்; இவ்விரண்டையு மருளிச்செய்கிறார் (ஜ்ஞாநாதிகாரனாலு மித்யாதி வாக்யத்வயத்தாலே.) முந்தினது - அஹங்காரிகளானவர்கள் அறியுமது அவத்யமாகையாலே நிஷேதிக்கையிலே தாத்பர்யம்; இரண்டாவது-சக்யநிஷேதம்.

சிறிவந்தது ஆர்மேலேயென்னில்; (செம்புலாலுண்டுவாழும் முதலைமேல்) தன்னிலும் க்ஷுத்ரமாயிருப்பதொரு நீர்ப்புழுவை பக்ஷ்யமாகக்கொண்டு, அத்தாலே*வீற்றிருந்தேழுலகுந்தனிக்கோல் செல்ல விருப்பாரைப்போலே பூர்ணம்மந்யமாநமாயிருப்பதொரு நீர்ப்புழுவையிலக்காகக்கிடீர்வந்தது. "పరావరేశంశరణంప్రవ్రజధ్వమసురార్దనమ్" "பராவரேசம் ஶரணம்வ்ரஜத்வமஸுரார்த்தநம்" என்கிறபடியே - ப்ரஹ்மாதிகள் போக்கற்றுச் சரணம்புக, ஹிரண்ய ராவணாதிகளை அழியச்செய்யுமவர்கிடீர் ஒரு க்ஷுத்ரபதார்த்தத்தை யிலக்காக அணைகுலையத்தலைகுலையவந்தார். "క్రోధమాహారయత్తీవ్రమ్" "க்ரோதமாஹாரயத்தீவ்ரம்" "అథరామోమహాతేజాః" "அதராமோ மஹாதேஜா:" இத்யாதிப்படியே ஆச்ரயத்திலில்லாததொன்றை ஏறிட்டுக்கொண்டாய்த்துவந்தது. தம்மளவில்*நித்யம்ப்ரசாந்தாத்மாவாயிருப்பர்; ஆச்ரிதபரிபவத்தில் வந்தால் "కోపస్యవశమేయివాన్" "கோபஸ்யவஶமேயிவாந்" என்கிறபடியே-க்ரோதமிட்ட வழக்காயிருப்பர். "கொடியவாய்விலங்கினுயிர்மலங்கக்கொண்ட சீற்றமொன்றுண்டு" என்று ஆச்ரிதர் தங்களுக்குத்தஞ்சமாக நினைத்திருப்பதொன்றிறேயிது. (வந்தார்) இருந்தவிடத்தேயிருந்து ஸங்கல்பத்தாலேசெய்யலாயிருக்கமடுவின்கரையிலே அணைகுலையத்தலைகுலைய வந்தாராய்த்து. ஜகதுபஸம்ஹாரமாகிலிறே ஸங்கல்பத்தாலே செய்யலாவது, ஆச்ரிதவிரோதிகளை யழியச்செய்யு மிடத்துக் கைதொடாராய்ச்செய்யாதவன்று சீற்றம் மாறமாட்டார்; அற்றை வரவு தமக்கு உதவினப்போலேயிருக்கிறதாய்த்து இவர்க்கு. முதலையின் வாயிலகப்பட்டார்தாமென்றுதோற்றியிருக்கும்படியாக, "கொடியவாய்விலங்கு" என்றாரிறே யொருவர். ஆச்ரிதரிலே யொருவர்க்கு உதவினது தந்தாமுக்கென்றிராதவன்று நமக்கு பகவத்ஸம்பந்தமில்லையென்றிருக்கவாய்த்து அடுப்பது.

(நம்பரமாயதுண்டே) இப்படி ஆச்ரிதவிஷயத்தில் பக்ஷபாதியாய் ரக்ஷிக்குமவனையின்பு, நம்முடைய ரக்ஷணத்தில் நமக்கொருபாரமுண்டோ. தன்மேன்மைபார்த்தல், நம் சிறுமைபார்த்தல் நம்முடைய பாபத்தின் கனத்தாலேசீறி, சிலநாளநுபவித்தால் பின்பு செய்கிறோமென்றாறியிருக்குமவனுதலாய்நங்காரியத்துக்கு நாங்கடவோமாகிறோமோ. (நாய்களோம்) அவ்வானை ஸநகாதிகளுடைய ஸ்தாநத்திலேயாம்படியிறே நம்முடைய தண்மை. திறந்தவாசலெல்லாம் நுழைந்தாலும் நம்மைக்கொள்வாரில்லாதபுகலறுதியையுடையோம்.

---

* நின்றார் என்னாதே, "வந்தார்" என்றதுக்கு தாத்பர்யம் (அற்றைவரவித்யாதி.) "நாய்களோம்" என்றதுக்கு நிஹீநதையிலே நோக்காகத்தாத்பர்யாந்தரம். (திறந்தவாசலித்யாதி.)

வளர்த்தவனுக்குத் தொட்டால் குளிக்கவேண்டும்படியான தண்மையையுடைய பதார்த்தம். (சிறுமையோராவெம்பிரானு) எத்தனையேனும் தண்ணியோமானாலும் தண்மையில் கண்ணில்லா தவர்க்கு. தோஷதர்சநத்தில அவிஜ்ஞாதாவாய்குணதர்சநத்தில் ஸஹஸ்ராம்சுவா யிருப்பா. "[Grantha script]" "யஸ்ஸர்வஜ்ஞஸ் ஸர்வவித்" என்று ஓதப்படுகிற வவனுக்கு அவிஜ்ஞாதர்த்வமாவது - இத்தலையில் தோஷங்கண்டு பொறுத்து உபகரித்தானாயிராதொழிகை.

(எமபிராம்காட்செய்யாதே) தோஷம்பாராதே ஆபத்தேஹேதுவாக ரக்ஷிக்கிறது வகுத்தவிஷய மாகையாலே. வகுத்தசேஷியுமாய் உபகாரகனுமாயிருக்குமவனுக்கு அடிமை செய்கையிறே ப்ராப்தம், அதுசெய்யாதே.எங்கள்கார்யம்தமக்கே பரமாக வேறிடடுக்கொண்டால் நமமுடைய கரணங்களுக்கு ஸ்வரூபாநுரூபமான வ்ர்த்தியிலே அநவயிக்கையிறே ப்ராப்தம.

(என்செய்வான தோன்றினேனே) வ்யர்த்தஜந்மாவானேன். "[Grantha script]" "ஸ்ர்ஷ்டஸ்த்வம்வநவாஸாய" என்கிறபடியே ஜந்மப்ரயோஜநம் அடிமையானால் அதுக்கசலான என்ஜந்மம் வ்யர்த்தமேயிறே. பிறநதேனஎனனாதே, "தோன்றினேன்" என்றது, "[Grantha script]" "அஹம்ஸர்வம் கரிஷ்யாமி" என்ற இவையபெருமாள்பிறவிபோலேயாகிலிறே மறந்தே னெனனலாவது, அதில்லாமையாலே "தோனறினேன" என்கிறார். ... (உஅ)

அ —இருபததொன்பதாம்பாட்டு. (ஊரிலேன்) ஆனைஇடர்பட்டபோது,அது,தனக்குதவுகைககாகநினைதத நினைவு உமக்கிலலையாகில ஸ்ரீஸாளக்ராமம் திருவயோதயை கோயிலமுதலாக நாம் உகந்த நிலஙகளில் ஒருவனுக்கு ஜநமாதிகளுண்டானால, அவனை நமககு ரக்ஷித்தே நீரவேணும, அங்ஙனே இருப்பன சிலவுணடோ வென்னில், அவையு மெனககிலலையென்கிறார்.

ஊரிலேன காணியில்லையுறவுமறறொருவரில்லை,
பாரில்நின பாதமூலம்பற்றிலேன், பரமமூர்த்தி!
காரொளிவண்ணனே கண்ணனே கதறுகினறேன,
ஆருளர்களைகணமமாவரஙகமாநகருளானே. (உகூ)

ப - ரை.—ஊரிலேன - [illegible] நித்யஸந்நிதி பண்ணுகிற ஸ்ரீஸாளக்ராமம முதலான திருப்பதிகளில் பிறவாதவனாய, காணியில்லை - திருப்பலலாண்டு பாடுகைமுதலானதறகாகவிட்ட காணியாட்சியிலலாதவனாய, உறவிலலை - பநதுககளிலலாதவனாய, மறறொருவரிலலை-ஸநேஹிகளிலலாதவனாய,பாரில-தண்ணிதானபூமியிலே வஸிதது, நினபாதமூலம - உனதிருவடித்தாமரைகளை, பறறிலேன - தஞசமாகப்பற்றாதவனா யிராநினறேன, பரமமூர்த்தி - பரமசேஷியாய், ஒளி - புகாமிககிருநதுள்ள, காரவண்ணனே - வாஷாகவலாஹகத்தை யொததிருநிறத்தையுடையனாய,கண்ணனே-ஆச்ரித ஸுலபனானவனே,கதறு

---

நிஹீநதையினுடைய உபபாதநம (வளர்ததவனுக்கித்யாதி.)
"பிரான்" எனறதுக்கு தாத்பர்யமஇரண்டு.... ... ... (உஅ)

இன்றேன் - பலம் தாழ்த்தாரைப்போலே கூப்பிடாநின்றேன்; அம்மா-ஸர்வஸ்வாமியாய், அரங்கமாநகருளானே-ஆச்ரிதர் கூப்பீடு கேட்கைக்காகக்கோயிலிலே வந்து கண்வளர்ந்தருளுமவனே, அடியேனுக்கு, களைகண் ஆருளர்-தேவரீரையொழிய ரக்ஷகர் வேறே ஆரிருக்கிறார்கள்; உன்னையொழிய வேறே ரக்ஷகரில்லையென்றுகருத்து. வர்ஷுகவலாஹகம்-மழைக்காலத்துமேகம். (௨௯)

வ்யா.—(ஊரிலேன்) இங்கு "ஊர்" என்று இவர்நினைக்கிறது-ஸ்தாபகவத்ஸந்நிதியுண்டான ஸ்ரீஸாளக்ராமமென்ன, அவதாரஸ்தலமான திருவயோத்யாதிகளென்ன, கோயில்முதலாயிருந்துள்ளதிருப்பதிகளென்ன, இவற்றையாயத்து. "ஊர்" என்கிறஸாமாந்யவாசிசப்தம் 'இவ்விசேஷங்களைக சாட்டுமோவென்னில்; சேதநரிலே ஒருகுருச்சியில் பிறவாதாரில்லையிறே; அவைதான் அத்ர்ஷ்டஹேதுவென்கைக்கு ஒருப்ரமாணமுமில்லை: இங்கு உபாயசூந்யதையைச் சொல்லிப்போருகிற ப்ரகரணத்தோடு சேரவேண்டுகையாலே இச்சப்தம் இவ்விசேஷங்களையே சொல்லிற்றாகக்கடவது. நாமபிமாநித்திருந்த வெல்லைக்குள்ளே பிறந்தானென்று தேவரீர்க்குப்பற்றாசுப்பிடிக்கலாவதொருதேசத்தில் பிறக்கப்பெறறிலேன். தேசவாஸமாத்ரமே ஆத்மோத்தாரகமென்கைக்கு ப்ரமாணமென்னென்னில்; "దేశో௨యం సర్వకామధుక్" "భవద్విషయవాసినః" "తిర్యగ్యోనిగతాశ్చాపి సర్వేరామమనువ్రతాః" "தேசோயம் ஸாவகாமதுக்" "பவத்விஷயவாஸிநः," "திர்யக்யோநிகதாஸ்சாபி ஸர்வேராமமநுவ்ர்தா॰" என்றுஞ் சொல்லக்கடவதிறே. (காணியில்லை) அப்படி அத்தேசங்களில் ஜந்மமில்லையாகில் ஏதேனுமோருபாதியாலே அவ்வோவிடங்களிலே க்ஷேத்ரஸ்பர்சமுண்டாகக் கூடும், அதுவுண்டோவெனனில்; அதுவுமில்லையென்கிறார். அதாவது-தேஹயாத்ராசேஷமாகத் திருப்பல்லாண்டு பாடுகை முதலான நிமித்தங்களிலே அந்வயித்தல், "திருநந்தநவநம்" என்றாப்போலே சிலவுண்டாதல், தாநத்தாலும விலையாலுமுண்டாய் அவ்வூரிலே சென்று காணியாளவேண்டும்படியான ஸ்பர்சமுண்டாயிருக்கை.

அவையொன்றுமில்லையாகில் அவ்வூரிலுள்ளாரோடே ஒருகொள்கொடையால் வரும் ஸம்பந்தமாதல், மந்தரஸம்பந்தமாதலுண்டோவென்னில்; (உறவில்லை மற்றொருவரிலலை) இவையின்றிக்கேயொழிந்தால் கண்பழகியிருப்பாரொருபந்துக்களுண்டோவெனனில்; அதுவுமில்லையென்கிறார். ஆனால் உமக்கு வாஸமெங்கேயென்ன; (பாரில்) ஒருபற்றாசு பெறாவிடில் தரிக்கவொண்ணாதபடி அநந்தக்லேசபாஜநமான பூமியிலே வாஸம.

---

இருபத்தொன்பதாம்பாட்டு. (ஊரிலேன்) "பாரில்" என்றதுக்கு உன்விஷயீகாரத்துக்கு யோக்யதையில்லாத ஸம்ஸாரத்திலேயென்று ஒருதாத்பர்யத்தை விவக்ஷிப்பிதது; அன்றிக்கே, "ஊரிலேன்" இத்யாதியாலே - பற்றாசில்லாமையைச் சொன்னவநந்தரம் "பாரில்" என்று விசேஷித்ததற்கு தாத்பர்யாந்தரம் (ஒருபற்றாசித்யாதி.) இப்போது பற்றாவிடில் க்ரமத்திலே கொள்ளுகிறோமென்று ஆறியிருக்கவொண்ணாதோ வென்ன வென்று ஸங்கதியாக்கக்கடவது.

* கலங்காப் பெருநகரி லிருக்கிறேனே நிர்ப்பரனுயிருக்கைக்கு, ஒருவர்கூறை யெழுவருடுக்கிறபயஸ்தாநத்திலே யன்றோ எனக்கு வாஸம். ஆகையால் (நின்பாதமூலம் பற்றிலேன்) ஸர்வ ப்ரகாரத்தாலும் புகலொன்றில்லார்க்குப் புகலான உன்திருவடிகளில் எனக்கோரந்வயமில்லை. "தமேவம் ஶரணம் கத:" "தமேவம்ஶரணம்கத:" என்று ப்ரஹ்மாஸ்த்ரத்துக்கு இலக்கான காகத்துக்குங்கூடப் புகலிடமாயிறே தேவரீர்திருவடிகளிருப்பது. ஆனால் பின்னை யொருவழியாலும் உமக்கொரு நன்மையில்லையாகில் பின்னைஇழக்குமித்தனையன்றோவென்ன; (பரமமூர்த்தி) ஸ்வகதமாக ஒரு உஜ்ஜீவநோபாயமில்லையென்றே னத்தனைபோக்கி உன்பக்கலிலும் இல்லையோ. ஸர்வாதிகனாய் பரமசேஷியாயிருக்குமவனல்லையோ. சேஷத்வ ப்ரதிஸம்பந்தியாயிறே சேஷித்வமிருப்பது. இவன் "ஶேஷோஹம்" "ஸ்வதந்த்ரோஹம்" என்றுப்ரமித்தவன்றும் இவன் ப்ரதிபத்தி யொழியஸ்வரூபத்தை மாறாடவொண்ணாதே.

ஸ்வரூபத்தையழிக்க வொண்ணாதாகில் ஸ்வரூபாநுரூபமான ஸித்திக்கு வழியேதென்ன; (காரொளிவண்ணனே) முதலடியிலே ருசிஜநகமாய்ருசிபிறந்தார்க்கு உபாயமுமாயன்றோ வுன்வடிவழகிருப்பது. (கண்ணனே) வடிவழகுண்டானாலும் உத்துங்கதத்வமன்றோவென்ன வொண்ணாதபடி ஸௌலப்யாதி கல்யாணகுணயுக்தனல்லையோ.

---

ஆகையால் என்றது-"ஊரிலேன்" இத்யாதியிலேஸித்தமான பற்றொன்று மில்லாமையாலே யென்றபடி. புகலொன்றில்லார்க்குப் புகலான வென்றது - உபாயாநுஷ்டாநத்துக்கு யோக்யதையில்லாதார்க்கு ஒருபற்றாசை வ்யாஜமாகக்கொண்டு புகலானவென்றபடி. பரமமூர்த்தி - பரமசேஷி; ஸர்வாதிகனாகையாலே பரமசேஷியென்றபடி. (பரமசேஷி) என்றதுகொண்டு ஈச்வரனுடைய உபாயபாவத்தைக் காட்டுமோவென்ன; அருளிச்செய்கிறார் (சேஷத்வ ப்ரதிஸம்பந்தியாயிறே யித்யாதி.) ஆகையாலே சேஷத்வ நிர்வஹணத்வாரா உபாயமென்று தாத்பர்யம். ஆனால் சேஷத்வத்தை நிர்வஹிக்கும்போது இவன்பக்கலிலும் ப்ரதிபத்தியுண்டாகவேண்டாவோ வென்ன; அருளிச்செய்கிறார் (இவன் ஸ்வதந்த்ரோஹமித்யாதி.) ஆகவித்தால் அவன்றானறிந்த ஸம்பந்தமே ஹேதுவாக விஷயீகரிக்குமென்றபடி. ஸ்வரூபாநுரூபமான ஸித்திக்கு வழியேதென்னவென்றது - ருசியுண்டாகவேண்டாவோ வென்றபடி.

பரமசேஷியாய் விலக்ஷண விக்ரஹோபேதனாய் ஸௌலப்யாதிகல்யாணகுணயுக்தனாயிருக்கிற நீயிருக்க எனக்குஇழக்கவேணுமோ. வகுத்தசேஷியாவது, சேஷித்வஸம்பந்தமில்லையாகிலும் விடவொண்ணாத வடிவழகையுடையனாவது, இவையிரண்டுமில்லையாகிலும் விடவொண்ணாத நீர்மையையுடையனாவது, இப்படிப்பட்ட தேவரீருள்ளீராயிருக்க எனக்கு ஓரிழவுண்டோ. (கதறுகின்றேன்) தேவரீருடைய இந்தவைலக்ஷண்யங்களை அநுஸந்தித்து ஸாதநாநுஷ்டாநம் பண்ணிபலந்தாழ்த்தாரைப்போலே கூப்பிடாநின்றேன்.

(ஆருளர்களைகண்) நான் இப்படி கூப்பிடாநிற்க தேவரீர் ஆறியிருக்கிறது தேவரீரை யொழிய வேறார் ரக்ஷகராக. நான் எனக்கு ரக்ஷகனாகவோ, என்னளவும் புகுரநிலலாத பிறர் எனக்குரக்ஷகராகவோ. (அம்மா) உடைமை நசித்தால் இழவு உடையவனதன்றோ. (அரங்கமாநகருளானே)உடையவனானாலும் ஸந்நிஹிதனல்லனென்றுதான் ஆறியிருக்கிறேனோ. ஸம்ஸாரத்தில் நன்மை பெறவேணுமென்று கூப்பிடுவாருமுண்டாகக் கூடுமோ என்னும்நசையாலேயன்றோ கோயிலிலேவந்து கண்வளர்ந்தருளுகிறது. (உ௯)

, அ.—முப்பதாம்பாட்டு. (மனத்தில்) ப்ரஸித்தமான கர்மாத்யுபாயங்களில்லை, ஸ்த்ரீஶூத்ராதிகாரமான த்யாநஸங்கீர்த்தநாதிகளுமில்லை, அணில்களுக்குண்டான பாவஶுத்தியுமில்லை, ஆனையிடர்பட்டபோது நினைத்த நினைவுமில்லை, புண்யதேசவாஸத்தால் வரும் நன்மையுமில்லையென்றார் – கீழஞ்சுபாட்டாலே; இந்நன்மைகளொன்றுமில்லையாகிலும உம்முடையபக்கல் தீமைகளில்லையாகில் உம்மால் வருமிழவில்லாமையாலே உம்மை யங்கீகரித்து உம்முடைய கார்யங்களுஞ் செய்கிறோம், அதுஇருந்தபடி யென்னென்று பெரியபெருமாள் கேட்டருள; நன்மைகளொன்றுமில்லாதவோபாதி தீமைகளெனக்கில்லாததில்லையென்கிறார் - மேலஞ்சுபாட்டாலே. அதில் இப்பாட்டில்-ஆநுகூல்யாபாவத்தை அநுபாஷித்துக்கொண்டு, தம்முடைய பரஸம்ர்த்யஸஹத்வமாகிற அநாத்மகுணத்தைப்பேசுகிறார்.

மனத்திலோர்தூய்மையில்லைவாயிலோரின்சொலில்லை;
சினத்தினாற்செற்றம்நோக்கித்தீவிளிவிளிவன்வாளா;
புனத்துழாய்மாலையானேபொன்னிசூழ்திருவரங்கா!
எனக்கினிக்கதியென்சொல்லாயென்னையாளுடையகோவே. ()

---

"வகுத்தசேஷியாவது" இத்யாதிவாக்யத்தில், "காரொளி வண்ணனே கண்ணனே", என்றதுக்கு, கீழருளிச்செய்த ரீதியொழிய ரீத்யந்தரேண தாத்பர்யமென்று கண்டுகொள்வது. (உ௯)

புனை.—புனம் - தன்னிலத்திலேயுண்டான துழாய் மாலை திருமார்பிலே செவ்வி பெறும்படியான, மாலையானே - திருத்துழாய் மாலையையுடையனாய், பொன்னிக்கு ... காவேரியாலே சூழப்பட்ட, திருவரங்கா-கோயிலிலே கண்வளர்ந்தருளுமவனாய், என்னையாளுடைய கோவே - என்னை அடிமையாகக்கொண்ட சேஷியானவனே, மனத்தில் - மனஸ்ஸிலே, ஓர்தூய்மை-காமக்ரோதாதிகள் இல்லாமையாகிற தூய்மை, இல்லை - இல்லாதவனாய், வாயில் - வாயிலே, ஓரின்சொல் இல்லை - பிறரிடத்தப்ரியமாக வசியாதவனாய், சினத்தினால் - கோபத்தாலே, செற்றம்நோக்கி - பகைமை தோற்றப்பார்த்து, தீவிளிவிளிவன் - மிகக்கொடுமையாக வார்த்தைசொல்லாநிற்பன; இனி-தேவரீராக ரக்ஷகமாகப் பற்றினபின்பு, எனக்கு - இப்படிப்பட்ட க்ரூரகுணங்களையுடையனான வெனக்கு, கதியென் - போக்கடியென், சொல்லாய் - அருளிச்செய்யவேணும். (ஙூ0)

வ்யா.—(மனத்திலோர் தூய்மையில்லை) "மந:பூதம்" "மநஸாதுவிஶுத்தேந" என்றும், "ஜ்ஞாநவிஶுத்தசேதஸ:" "யேதுஜ்ஞாநவிஶுத்தசேதஸ:" என்றும் - மநசசுத்தியைப் பேற்றுக்குப் பரிகரமாகச்சொல்லக்கடவதிறே; அந்தசுத்தியெனக்கில்லையென்கிறார். ஓர்தூய்மையென்றது - காமக்ரோதலோப த்வேஷாதிகளில்ஒன்று குறைந்து அதில் சுத்தனாகப் பெற்றிலேன். கலுஷம்காதாசித்கமாக இல்லையாகவும் பெற்றிலேன. (வாயிலோர் இன்சொலில்லை) மநச்சுத்தியில்லையானல் வாயில ப்ரியவசநங்கள்தா னுண்டோவென்னில்; அதுவுமில்லை யென்கிறா. ஓரின்சொல்லாவது-இதுக்குமுன்பு ஒருவரைக்குளிர என் னென்றறியேன். குளிர என் என்றார் திறத்திலும் அநுகூலமாக வொருமறுமாற்றஞ் சொல்லியு மறியேன். "நெடுஞ்சொலால் மறுத்த நீசனேன்"என்கிறபடியே அபிமதவிஷயங்களை யுகக்கும்போது ச்ரவணகடுகமாயாய்த்திருப்பது. ஆக இவ்விரண்டுபதத்தாலும்-கீழ் அஞ்சுபாட்டாலும் சொன்னவர்த்தத்தை அநுபாஷிததாராயதது.

(சினத்தினால் செற்றமநோக்கி) இவையில்லாமையே யனறிக்கே பரஸம்ர்த்திகண்டால் நிர்ணிபந்தநமாக இவர்களுக்கநர்த்தங்களையே தேடாநிற்பன். நெஞ்சிலே கோபத்தாலே சாத்ரவந்தோற்றப்பாராநிற்பன். செற்றம் - ரோபம. சினம் என்றும் - கோபம். மிக்ககோபத்தாலே. * ஒராளுமொருநோக்கும் நேராகவாய்த்துப் பார்ப்பது. (தீவிளிவிளிவன்) நோக்கேயன்றியே வாய்விட்டால் கேட்டார்க்கு நெருப்பை வழியட்டினாப்போலேயாய், குடிபழியும்படியாக வாய்த்து வாய்விடுவது. (வாளா) இதெல்லாஞ் செய்கிறது தான் ஒருகாலைக்கு வெற்றிபெறப் பார்க்கவோ வென்னில்; இதுதானே ப்ரயோஜநமாயிருப்பன்.

---

முப்பதாம்பாட்டு. (மனத்திலோரித்யாதி) அர்த்தாந்தரம் (செற்றம் கோபமித்யாதி.)

ப்ரயோஜனத்துக்கு ப்ரயோஜநம் வேண்டாவிறே. ஸாத்விகர், பரப்ரயோஜனத்தையே ப்ரயோஜநமாக நினைத்திருக்குமாப்போலே பாரார்த்தத்தையே ப்ரயோஜநமாக நினைத்திருப்பன்.

உம்முடையபடி இதுவாகில் நம்மை நிர்ப்பந்திக்கிறதென்னென்ன; (புனத்துழாய் மாலையானே) நம்தன்மைபார்த்து அகலவொண்ணாதபடி 'அபேக்ஷாமாத்ரமே ஹேதுவாக ரக்ஷிக்கக் கடவோமென்று ரக்ஷணதர்மத்திலே தீக்ஷித்துத் தனிமாலை யிட்டன்றோ தேவரீரிருக்கிறது, ப்ராப்தியாலும் போக்யதையாலும் என்னாலுன்னை விடப்போமோ. தன்னிலத்தில்போலே திருமார்பிலே செவ்வி பெறும்படியான திருத்துழாய் மாலையை யுடையவனே. (பொன்னிசூழ் திருவரங்கா) ரக்ஷகனாய் தூரவிராதே ஸந்நிஹிதனாகவும்பெற்றேன். எத்தனையேனும் தண்ணியர்க்கும் ஆச்ரயிக்கும்படியன்றோ தேவரீர் கோயிலிலே வந்து கண்வளர்ந்தருளுகிறது. இட்டதிருத்துழாய் மாலைக்குப்புறமாலைபோலே யாய்த்துத் திருப்பொன்னியோட்டைச் சேர்த்தியிருக்கிறபடி.

(எனக்கு) கீழே தண்மையை யுபபாதித்தாரிறே. இப்படி தோஷப்ரசுரனானவெனக்கு. (இனி) என்தோஷத்தையநுஸந்தித்து நான்எனக்குரக்ஷணத்தை தவிர்ந்துதேவரீர்பக்கலிலே ந்யஸ்தபரனானபின்பு. (கதியென்சொல்லாய) போக்கடிசொல்லாய். போக்கடியறச்சூழ்த்துக்கொண்டுவைத்து "அவனைச்சொல்லாய்" என்னும்படியிறே ப்ராப்தியிலூற்றமிருப்பது. நீர் போக்கடி சொல்லென்றபோதாக நமக்குச்சொல்லவேண்டுகிற தென்னென்னில்; (என்னையாளுடையகோவே) இத்தலையில் சேஷத்வமும் அத்தலையில் சேஷித்வமும் வ்யவஸ்திதமாயன்றோ விருப்பது, வெறிதுக்குக் கடவாரார். இது ஆருடையவஸ்துவாய் நோவுபடுகிறது. ... (௩0)

அ.—முப்பத்தோராம்பாட்டு. (தவத்துளார்) சாஸ்த்ரீயமாய மோக்ஷார்த்தமான விஹிதங்களில் எனக்கோரந்வயமில்லை யென்றீர், ஸ்வர்க்கபலார்த்தமாகவாதல், விப்ரலம்பகராய் த்ர்ஷ்டபலார்த்தமாக வாதல், ஸத்கர்மாதிகளைப் பண்ணிப்போந்தீராகில் அவற்றில் உபாதிகளைப்போக்கி நன்மையிலே மூட்டுகிறோம், அவைதானுண்டோவென்னில்; அவையொன்றுமில்லை, ஸ்வப்ராப்திக்கு பரிகரமாக தேவரீர்தந்த ஜந்மத்தை விஷயப்ரவணனாய் ப்ரத்வேஷத்தாலே விநாசஹேதுவாகத் தந்தீராகக்கொண்டே னென்கிறார். ஆனால் கீழ்ப்பாட்டோடோ இதுக்கு ஸங்கதியென்னென்னில்; பாரஸம்ர்த்த்ய ஸஹத்வமே யன்றிக்கே விஷயாந்தர ப்ராவண்யத்தாலே பந்துஜநங்களுக்கும் அசலானே னென்கிறார்.

---

"என்னையாளுடைய கோவே" என்றத்தைப்பற்ற (ப்ராப்தியாலுமென்றது.)

தவத்துளார்தம்மிலல்லேன்; தனம்படைத்தாரிலல்லேன்;
உவர்த்தநீர்போலவென்றனுற்றவர்க்கொன்றுமல்லேன்;
துவர்த்தசெவ்வாயினார்க்கேதுவக்கறத்துரிசனானேன்;
அவத்தமேபிறவிதந்தாயரங்கமாநகருளானே. (௩௪)

ப - ரை.—தவத்துளார் தம்மிலல்லேன் - மோக்ஷார்த்தமாக தபஸ்ஸை அநுஷ்டித்தார் கூட்டத்தில சேராதவனாய், தனம்படைத்தாரிலல்லேன் - திருமங்கை யாழ்வார போல்வாரைபபோல பாகவதாராதநத்துக்குத்ரவ்யார்ஜநம் செய்தவர்கள் கூட்டத்தில்சேராதவனாய்; உவர்த்தநீர்போல - உவர்நீரைமுகத்திலே இறைத்துக்கொண்டால் அதுகண்விழிக்க வொண்ணாதபடி கரிக்குமாப்போலே, என்றனுற்றவாக்கு -எனபந்துக்களுக்கு, ஒன்றுமல்லேன் - ஒருவகையாலும் நல்லனாய்ப் போகதேனல்லேன; பினபு நான்செயதுபோந்தபடி யென்னென்னில்; துவர்ந்தசெவவாயினாக்கு - மிகச்சிவநதிருநதுள்ள அதரத்தையுடைய ஸ்த்ரீகளுக்கு, துவக்கற - பநதமற, துரிசனானேன - கள்ளனாயினேன; அரங்கமாநகருளானே - கோயிலிலே கண்வளர்நதருளுமவனே, இப்படிப்பட்ட எனக்கு, பிறவி - ஜநமத்தை, அவததமே தநதாய் - வ்யர்த்தமாகத்தநதருளினீரென்கிறார். (௩௪)

வ்யா.—(தவத்துளார் தம்மிலல்லேன்) "యజ్ఞేన దానేన తపసానాశకేన" "யஜ்ஞேநதாநேநதபஸாநாஶகேந" என்று-தபஸ்ஸை மோக்ஷார்த்தமாக விதித்ததிறே. முமுக்ஷுக்களாய தபஸ்ஸை யநுஷ்டித்தாரில கூட்டாகப் பெருமையே யன்றிககே ஸ்வர்க்காதிப்ரயோஜநாந்தர பரராய் அது தன்னையே பண்ணுவாருமுண்டு, அவர்களுக்குங் கூட்டாகப் பெற்றிலேன். இவை யித்தனையு மன்றியிலே யொழிந்தால் ஒருதபஸ்ஸை ஆரம்பித்து அதில் வைகல்யத்தாலே ப்ராயஶ்சித்திகளானார்தங்களில்தான கூடப்பெற்றேனோ. ஆக, தபஸ்பர்சமுடையார ஒருவரிலுங கூடப்பெற்றிலேன் என்கிறார். (தனம்படைததாரி லல்லேன்) அர்த்தலாபத்தையும் புருஷார்த்த ஸாதநமாகச் சொலலக்கடவது விலக்ஷணவிஷயத்தில் வ்யயிக்குமன்று. "యజ్ఞేన దానేన" "யஜ்ஞேநதாநேந" என்றும், "యజ్ఞో దానం తపశ్చైవ పావనాని" "யஜ்ஞோதாநம தபஶ்சைவபாவநாநி" என்றும், "తద్దానం సాత్త్వికం స్మృతమ్" "தத்தாநமஸாத்த்விகம்ஸ்மர்தம" என்றுஞ் சொல்லக்கடவதிறே.

---

முப்பததோராமபாட்டு. (தவததுளாரிதயாதி) தவத்தோர் தம்மிலல்லேன் என்னாதே, "தவத்துளார" என்றதுக்கு தாத்பர்யம் (யஜ்ஞே-யஜ்ஞேநேத்யாதி.) "தவத்துளார்" எனறது-தபஸ்ஸில் கூட்டப்பட்டவர் என்றாய், அத்தாலே- கிஞ்சிதந்வயமுடையாரைச் சொல்லுகிறதென்று தாத்பர்யம். "தவத்துளார்தம்மிலல்லேன்" என்கிற பஹுவசநத்தாலேபலித்ததாத்பர்யம் (இவையித்தனையுமித்யாதி.)

“ [illegible] ” “யயாகயாசவித யா பஹூவஸ்ஸம்ப்ராப்நுயாத்” என்றும்-ஸத்விஷயத்திலே வ்யயிக்குமன்று த்ரவ்யார்ஜநத்துக்கு ப்ரகாரநியதியில்லையென்றுஞ் சொல்லிற்றிறே; இம்முகத்தாலே த்ரவ்யார்ஜநம் பண்ணுவாரில் கூட்டல்லேன். திருமங்கையாழ்வார்போல்வார் அநுஷ்டிப்பதுஞ் செய்தார்களிறே. இவையின்றிக்கே யொழிந்தாலும், “[illegible]” “யத்துப்ரத்யுபகாரார்த்தம்பலமுத்திஶ்யவாபுநः” என்கிற ராஜஸதாநமாதல், “[illegible]” “அஸத்க்ருதமவஜ்ஞாதம்” என்கிற தாமஸதாநமாதல், இவை யுண்டோவென்னில்; அவையொன்று மில்லையென்கிறார். இவையிரண்டு மில்லாதாரும் பந்துக்களுக்குறுப்பா யிருப்பர்களிறே, அதிருந்தபடி யென்னென்னில் ; (உவர்த்தநீர்போலவென்றனுற்றவர்க் கொன்று மல்லேன்) உவர்நீரை முகத்திலேயேறிட்டுக்கொண்டால் அது கண்விழிக்க வொண்ணாதபடி கரிக்குமாப்போலே, என்னை நேர்முகம்பார்க்கவொண்ணாதபடியாயாய்த்து நான் அவர்கள் திறத்தில் அவத்யபூதனாய் வர்த்தித்தபடி. அவிஜ்ஞபந்துக்கள் என்முகத்தே விழித்தால் அற்றைக்கு ஜீவிகமொட்டாதபடியாயாய்த்து அவர்களுக்கு அவத்யபூதனாய் வர்த்தித்தபடி. அவர்களுக்கு ப்ரியமே பண்ணுகையாலே ப்ரியவிஷயமாகவும் பெற்றிலேன், அவர்களுக்கு அஹிதமெண்ணுகையாலே ஹிதைஷியாகவும் பெற்றிலேன், எனக்கும் அநாத்தங்களை விளைத்துக்கொள்ளுகையாலே தனக்குத்தானு முளனென்னு மவ்வும் பெற்றிலேன், அவர்களுக்கவத்யபூதனாய்ப் போனேன்.

இன்ன வழியாலே தநம்படைத்தார் மன்றிகே, ஸாமாந்யேந சொல்லுவானென்னென்ன; ([illegible] - யயாகயாசேத்யாதி.) தநஸம்பாதநம்பண்ணினவற்றுக்கு ஸாத்விகராஜஸதாமஸதாநங்களுண்டாகையாலே, அதில ஸாத்விகதாநாபாவத்தை, “விலக்ஷண விஷயத்தை” இத்யாதி வாக்யத்தாலே பலிப்பித்து, ராஜஸதாமஸதாநாபாவத்தை அருளிச்செய்கிறார் (இவை யின்றிக்கேயொழிந்தாலுமித்யாதி.)இவையின்றிக்கேயொழிந்தாலுமென்றது-ஸாத்விகதாநமும் ததர்த்தமாக த்ரவ்யார்ஜநமுமின்றிக்கேயொழிந்தாலுமென்றபடி.“என்றனுற்றவர்க்கொன்றுமல்லேன்” என்றது-எனக்கு மூத்தவர்க்கு ஒன்றுமல்லேனென்றபடி. ப்ரியஹிதகரத்வரூபமான அதிசயாவஹனல்லன் என்றவித்தால் பலித்தது-அவத்யகர்த்வமிறே; அத்தையருளிசசெய்கிறார் (அவர்களுக்கித்யாதி.)

பந்துக்களுக் காகாதவர்களும் தந்தாமுக்கு அபிமதைகளான ஸ்த்ரீகளுக்கா யிருப்பர்களே, அதிருந்தப்படி யென்னென்னில்; (துவர்த்த வித்யாதி) அகவாயில் அநாத்மகுணங்களை மறைத்து அதர்த்தில் பழுப்பைக்காட்டி யகப்படுத்திக் கொள்ளுமவர்களாய்த்து; இவனும் உள்வாயில் தண்மையறியான், தன்னோடு அவர்களுக்கொருபந்தமில்லாமையு மறியான், இவனும் அவ்வதரத்தில் பழுப்புக்கவ்வருகுபோகமாட்டாதே அகப்படுமாய்த்து. அகவாயில் அநாத்மகுணங்களை மறைக்கைக்குப் புறம்புள்ளாரோடு இவனுக்குண்டானதுவக்கறுக்கைக்கும்அதரத்தில் பழுப்பேயாய்த்து அவர்களுக்குப் பரிகாரம். புறம்புள்ள ஸகலபந்துக்களையும்விட்டுப் பற்றினவர்களுக்கும் தூர்ப்பரனாய்த் தலைக்கட்டினேன். அதாகிறது-அவர்கள்பக்கலிலும் அபகாரகனாய்ப் போந்தவனாகையாலே அவர்களுக்கும் இவனோட்டை ஸம்பந்தமறவேணுமென் றிருக்கை. துரிசன்-கள்ளன். "ஶ்ரீசஞ்ச ..." "தேநசாஸ்ம்யவமாநிதஃ" என்று - நீசனான ராவணனுக்கு மாகாதா னொருவனென்று அவன் சொன்னாப்போலே, தண்மைக்கெல்லையான ஸ்த்ரீகளுக்குமாகாதே அவர்களாலே பஹிஷ்கரிக்கப்பட்டேன் நானொருவனென்கிறார்.

ஆனபின்பு (அவத்தமேபிறவிதந்தாய்) தேவரீர் எனக்கு ஜந்மத்தை வ்யர்த்தமே தந்தருளினீராய்பலித்தது. தம்முடைய கர்மமடியாகவந்த அநர்த்தத்தை அத்தலையிலே ஏறிடுவா னென்னென்னில்; கர்மஸ்வரூபத்தை உள்ளபடி யறிந்தவராகையாலே அருளிச்செய்கிறார். கர்மமாவது- ஈஶ்வரஹ்ருதயத்திலே நிக்ரஹரூபேண நின்று பலிப்பதொன்று. ஸகலப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளும் ஈச்வராதீநமாம்படியாயாயத்து ஸ்வரூபமிருப்பது; கர்மத்தைப் பொறுத்தோமென்னப்போமதொன்று. "ததாமி புத்தியோகம் தம்" "ததாமி புத்தியோகம்தம்" என்கிறபடியே-புத்திப்ரதாநம் பண்ணி நல்வழி போக்குமிடத்தில் நிவாரகரில்லை; ஆக இவ்வளவு உணர்ந்தவிவர்க்குச் சொல்லலாமிறே. கிணற்றில விழுந்த ப்ரஜையைக்கண்டு பேசாதேயிருந்தால், "தாய்தள்ளினாள்" என்னக்கடவதிறே. (அரங்கமாநகருளானே) சாஸ்த்ரங்களாலே மீட்கவொண்ணாதபடி கர்மபரதந்த்ரராய் விஷயாந்தர ப்ரவணரா யிருப்பாரை, அழகாலும் சீலத்தாலும் மீட்கைக்காகவன்றோ கோயிலிலே வந்து கண்வளர்ந்தருளுகிறது. ... ... ... (௯௧)

---

**"செவ்வாயினார்க்கே" என்கிற அவதாரணம் சம்பந்தத்திலே யாக்கிதாத்பர்யம் (ஶ்ரீசஞ்ச-தேநசேத்யாதி.) கிருசஸம்பந்தத்தாலும் இத்தலையால்வந்த இழவை அத்தலையில் ஏறிடலாமென்று விவக்ஷித்து அதுக்கு த்ருஷ்டாந்தம் (கிணற்றிலித்யாதி.) (௯௧)**

அ.—முப்பத்திரண்டாம்பாட்டு. (ஆர்த்து) நம்பக்கல் விமுகரான ஸம்ஸாரிகளுக்குங்கூட ஆகாதபடி வர்த்தித்தநீர் நம்பக்கல் வந்தபடியென்னென்னில்; ப்ரதிபந்தகாரிகளாயிருப்பார் செய்யுமவற்றுக்கோரடைவுண்டோ, என்மௌர்க்க்யத்தாலே வந்தேனென்கிறார்.

ஆர்த்துவண்டலம்புஞ்சோலையணிதிருவரங்கந்தன்னுள்
கார்த்திரளனையமேனிக்கண்ணனேயுன்னைக்காணும்
மார்க்கமொன்றறியமாட்டாமனிசரில்துரிசனாய
மூர்க்கனேன்வந்துநின்றேன்மூர்க்கனேன்மூர்க்கனேனே. ()

ப-ரை.—வண்டு - மதுபானம் பண்ண விழுந்தவண்டுகள், ஆர்த்து - சப்தித்துக்கொண்டு, அலம்பும் - அலையா நிற்பதாய், அணி - ஸம்ஸாரத்துக்கு ஆபரணம் போன்ற, திருவரங்கந்தன்னுள் - கோயிலிலே கண்வளர்ந்தருளுமவனாய், கார்த்திரளனைய - மேகஸமூஹத்தையொத்த, மேனி - திருமேனியை யுடையனாய், கண்ணனே - ஆச்ரிதஸுலபனானவனே, உன்னைகாணும் மார்க்கமொன்று - உன்னைப்பெறுகைக்கு ஒருபாயம், அறியமாட்டா- அறியமாட்டாதவனாய், மனிசரில் - மநுஷ்யர்களுக்குள், துரிசனாய - க்ரத்ரிமனாய், மூர்க்கனேன்- பிடித்தது விடமாட்டாததண்ணியனான நான, வந்துநின்றேன்—; மூர்க்கனேன் மூர்க்கனேனே - மிகவும் மூர்க்ககுணமுடையேனாயிராநின்றேனென்று தம்முடைய நிஹீநதையையருளிச்செய்கிறார். (௩௨)

வ்யா.— (ஆர்த்துவண்டலம்புஞ்சோலை) திருச்சோலையில் மதுவைப்பாநம் பண்ணவிழுந்த வண்டுகளானவை, அபிநிவேசத்தாலே பரிச்சேதித்திழிய வறியாதே யிழிந்து கழுத்தே கட்டளையாகப்பருகி,புக்கமது இருந்தவிடத்தி லிருக்கவொட்டாமையாலே ஆர்த்துக்கொள்ளாநிற்கும். முக்தர் பகவதநுபவஜநிதஹர்ஷத்துக்குப் போக்குவீடாக ஸாமகாநம் பண்ணுமாப்போலே ஒருதேசவிசேஷத்திலே பகவதநுபவத்தாலே முக்தர்க்குப் பிறக்கும் விகாரம் திர்யக்குக்களுக்கும் பிறக்கும்படியாயாய்த்துக் கோயிலின்போக்யதையிருப்பது. "गायन्ति केचित्प्रणमन्ति केचित् नृत्यन्ति केचित्" "காயந்திகேசித்ப்ரணமந்திகேசித்ந்ருத்யந்திகேசித்" என்று-மதுவநமழித்தமுதலிகள், ஹர்ஷத்துக்குப் போக்குவிட்டுப்பாடுவார், ஆடுவார், ஒருவரையொருவர் சுமப்பார், ஒருவரையொருவர் பொகடுவாரானார்களிறே; இவர் தம்முடையஸத்தையுண்டாகைக்குக் கூப்பிடுகிறார்; இவை ப்ரீதிக்குப் போக்குவீடாகக் கூப்பிடுகிறன.(வண்டலம்புஞ்சோலை) மதுபாநம் பண்ண விழுந்தவண்டுகள் மதுவின்மிகுதியாலே ப்ரளயத்தி லகப்பட்டலைகிற மார்க்கண்டேயனைப்போலேயும், விண்ணகத்திலகப்பட்ட திருச்சோலைபோலேயும் அலையாநிற்குமாய்த்து. அலம்பல்-தளும்பல்.

---

முப்பத்திரண்டாம்பாட்டு. (ஆர்த்தித்யாதி) "அலம்பல்" என்று-அவகாஹநத்தைச்சொல்லி, அத்தாலே பலித்ததாத்பர்யம்-அலைதல்.

(அணிதிருவரங்கத்தனான்) ஸம்ஸாரத்துக் காயரணம்போலேயாய்த்துக் கோயிலிருப்பது. லீலாவிபூதிக்கு நாயகனொருவனுண்டே யாகிலும் கோயிலிலேவந்து ஸந்நிஹிதரல்லாதபோது தாலிகட்டா ஸ்த்ரீகள்போலே யாய்த்து லீலாவிபூதி.(சோலையணி திருவரங்கம்) சோலையை ஆபரணமாகவுடைய கோயிலென்னவுமாம். (கார்த்திரளனையமேனி) மதுவெள்ளத்தைக்கண்டு கடலென்று ப்ரமித்து, மேகஸமூஹங்கள் கழுத்தே கட்டளையாகப் பருகி, நெகிழ்ந்து போகமாட்டாதே அவைஉள்ளே புகுந்து சாய்ந்தாப்போலேயாய்த்துப்பெரியபெருமாள் கண்வளர்ந்தருளுகிறபடி. வடிவில் கறுப்பாலும், குளிர்த்தியாலும், பரோபகாரமேஸ்வபாவமாயிருக்கையாலும்,தனக்கென்ன வொன்றுவையாமையாலும்,மேகத்தையொருவகைக்குப் போலியாகச் சொல்லும்படியாயாய்த்திருப்பது."தொக்க மேகப்பல்குழாங்கள்' என்று-வடிவுக்கு ஸ்மாரகமாக மேகஸமூஹங்களைச் சொல்லக்கடவதிறே. (கண்ணனே) மேகத்திற்காட்டில் வ்யாவ்ர்த்திசொல்லுகிறது; - கடக்கநின்று ஜலத்தையுபகரிக்குமதிறே மேகம்; ஸஜாதீயனாய் வந்துகிட்டித் தன்னையாய்த்து உபகரிப்பது.பெரியபெருமாளைக்கண்டால் யசோதைப்பிராட்டிவைத்த வெண்ணெயைக்களவுகண்டமுதுசெய்து மூலையடியே திரிந்துவளர்ந்த செருக்குததோற்றியாய்த்திருப்பது."கொண்டல் வண்ணனைக் கோவலனாய் வெண்ணெயுண்ட வாயன்" என்னக் கடவ

(உன்னைக்காணும் மார்க்கமொன்றறியமாட்டா) உன்னைப்பெறுகைக்குறுப்பாக நீயுபதேசித்துவைத்த, மார்க்கமுண்டு-வழி, அதாகிறது - உபாயம்; அவையாகிறன - கர்மயோகம், தத்ஸாத்யமான ஜ்ஞாநயோகம், உபயஸாத்யமான பக்தியோகம், அவதாரரஹஸ்யம, புருஷோத்தமவித்யை, அநுக்தமான திருநாமஸங்கீர்த்தநம், புண்யக்ஷேத்ரவாஸம், இப்படி சேதநபேததோபாதி போருமிறே உபாயபேதமும். இவற்றிலே யொன்றை யநுஷ்டிக்க மாட்டாமையேயன்றிக்கே அறியவும மாட்டாதவனாய்த்து. (மனிசரில்) அறிவுககடைவில்லாததிரியக்யோநியாயிழககவுமாமிறே, அறிகைக்கு யோக்யமான மநுஷ்யஜந்மத்தைப பெற்றுவைத்திறேஇழக்கிறது.

---

"భర్తానామపరంనార్యా భూషణంభూషణాదపి" "பர்த்தாநாம பரம் பார்யாபூஷணம்பூஷணாதபி"என்கிற ந்யாயத்தாலே-விபூதிநாதனானைச்வரனன்றோ விபூதிககுஆபரணமென்ன;(லீலாவிபூத்யாதி.) "கார்த்திரளனையமேனி" என்று ஸாம்யம் சொன்னால், வ்யாவ்ர்த்தி சொல்லும்போதும் அவரைச்சொல்லாதே, "கண்ணன்" என்பானென்னென்ன; (பெரியபெருமாளை யித்யாதி.) பெரிய பெருமாளே க்ர்ஷ்ணனாகையாலே ஸஜாதீயத்வப்ரயுக்தோபகாரிகத்வரூபவ்யாவ்ர்த்தியும் பெரியபெருமாளுக்கேயென்றபடி.(அநுக்தமான) பகவத்கீதாயாமிதிசேஷ:.

(துரிசனைய)அவர்கள்தாங்கள் நித்யஸூரிகள் கோடியிலே யாம்படி அவர்களுக்கு த்யாஜ்யனை க்ர்த்ரிமன். திர்யக்ஜந்மமாய் அயோக்யனென்று ஆறியிருக்கிறேனல்லேன், மநுஷ்ய ஜந்மத்தாலுள்ள ப்ரயோஜநம் பெற்றிலேன். [மானுஷ்யம்ப்ராப்ய - மாநுஷ்யம் ப்ராப்ய] உபயவிலக்ஷணனானேனென்கிறார். துரிசு-களவு.

இப்படியிருக்கிறநீர் என்பக்கல் வருவானென்னென்னில்; (மூர்க்கனேன்வந்துநின்றேன்) என்தண்மை பாராத மூர்க்கனுகையாலே வந்துகொடுநின்றேன். என்தண்மையையுமறிந்து உன்வைலக்ஷண்யத்தையு மறிந்துவைத்து "அயோக்யன்" என்று அகலவிறேயடுப்பது; அத்தைச்செய்யாதே வந்துகொடுநின்றேன். தண்ணீர் குடிக்கிற ஆற்றிலே நஞ்சையிடுவாரைப்போலே, விலக்ஷணயோக்யமானவிஷயத்தைக்கிட்டி அழித்தேனென்கிறார். "கள்ளன்" என்றது அங்குத்தைக்காகாதாரில்லையிறே,அத்தையே பற்றி வந்து நின்றேன்.(மூர்க்கனேன் மூர்க்கனேனே)இதொருமௌர்க்க்யமேயென்கிறார்.வீப்ஸையால் - இரண்டு தலையையும் அநுஸந்தித்து அத்தலைக்குவந்த அவத்யத்தைப்பார்த்தும் தம்முடைய தண்மையைப்பார்த்து மருளிச்செய்கிறார். ... (௩௨)

அ.—முப்பத்துமூன்றும்பாட்டு. (மெய்யெல்லாம்) இப்படி நன்மைகளுமில்லை, தீமைகளாலுங் குறைவில்லை, நான் இங்குத்தைக்காகாதானொருவனென்கிறார். அநந்தரம், கீழ்ப்பாட்டோடு இப்பாட்டுக்கு ஸங்கதியென்னென்னில்; "மூர்க்கனேன்வந்து நின்றேன்" என்றீர், அந்தமௌர்க்யம் ஸார்தயத்திலேபட்டுச் சொல்லுகிறீரோவென்னில்; அதுவும் பொய்யென்கிறார். ஆனால் நம்மைக்கிட்டுகைக்கொரு உபாயமில்லையாகில் மேல்போக்கென்னென்று கேட்க; தேவரீர்திருவடிகளோட ஸம்பந்தமும் க்ருபையுமொழிய வேறுண்டோவென்று சரமோபாயமான க்ருபையை வெளியிடுகிறார்.

மெய்யெல்லாம்போகவிட்டுவிரிகுழலாரிற்பட்டுப் [றேன்;
பொய்யெல்லாம்பொதிந்துகொண்ட போழ்க்கனேன்வந்துநின்
ஐயனேயரங்கனேயுன்னருளென்னுமாசைதன்னால்
பொய்யனேன்வந்துநின்றேன்பொய்யனேன்பொய்யனேனே()

---

அவன் பக்கலிலே வந்து நிற்கைக்குஹேது மூர்க்கனுகையாலே என்றருளிச்செய்து, நீகண்ணனாகையாலேயென்று ஹேத்வந்தரம் (கண்ணனென்றதித்யாதி.)இந்தப் பக்ஷத்தில் மூர்க்கனாயிருந்துவைத்து நீ கண்ணனானது கொண்டு, "வந்து நின்றேன்" என்று நிர்வாஹம். "மூர்க்கனேன்" என்றதின் அநுபாஷணம் "மூர்க்கனேன்மூர்க்கனேன்"என்றது. ... ... ... (௩௨)

ப-ரா.— மெய்யெல்லாம் - மெய்யான நினைவையும் மெய்யானசொல லையும்,மெய்யானசெயலையும, போகவிட்டு-கைசோரவிட்டு, விரி-விரிக்கப்பட்ட, குழலாரில் பட்டு - கூந்தலையுடைய ஸ்த்ரீகள்வலையிலே அகப்பட்டு, பொய்யெல்லாம் - பொய்யென்று பேர்பெற்றவையெல்லாவற்றையும், பொதிந்து கொண்ட - நிறைத்துக்கொண்டவனாய், போழ்க்கனேன் - அடைவுகேடனானை யாலே, வந்து நின்றேன் - நிர்லஜ்ஜனாய்வந்து நின்றேன்; ஐயனே - எனக்கு ஸ்வாமியாய், அரங்கனே - கோயிலிலே வந்து கண்வளர்ந்தருளுமவனே,உன்னருளென்னு மாசைதனால் - உன்க்ருபையில் எனக்குண்டான ஆசையாலே, வந்துநின்றேன - வந்தேன; நான் எப்படிப்பட்டவனென்றால், பொய்யனேன் பொய்யனேன பொய்யனேன-எல்லாப்படியாலும் பொய்யனாகவேயிரா நின்றேனென்கிறார். (ருரு)



வயா.—(மெய்யெல்லாம்) மெய்யாகிறது - பூதஹிதமாய் யதார்த்தமாயிருக்குமர்த்தமாயத்து.கீழ்ச்சொன்ன நன்மைகளெல்லாவற்றுக்கும் ப்ரதமசிலையாயாய்த்து ஸத்யந்தானிருப்பது. "ஸத்ய மூலமிதம் ஸர்வம்" "ஸத்யமூலமிதம்ஸர்வம்" என்னக்கடவதிறே. ஜந்மவ்ருத்தத்தால் குறையநின்றகைசிகன், "பகவத்விஷயத்திலே அவகாஹித்தாரில் பொயசொல்லக்கடவாரில்லைகாண்" என்று தன்னை பக்ஷிக்க நின்ற ப்ரஹ்மராக்ஷஸனைக்குறித்துச் சொன்னானிறே பகவத்விஷயத்திலே நாலடிவர நிற்கையாலே. (எல்லாம்) இவைதான் பலவகையாயத்திருப்பது. மநஸ்ஸால் நினைப்பதும் மெய்யாய, அதோடே சேரச்சொல்லுவதும் மெயயாய், செய்வதும மெயயாயிருக்கை 'பந்துவாயிருப்பா னொருவனுக்கு மெய்யைச்சொல்லிப் புறம்பேயாராகக்கு அஸத்யனாயிருக்கவுங் கூடுமிறே, அதுவுமில்லை; இவையெல்லாம் நானிருக்கிற நாட்டிலும நடையாடாதபடி ஸவாஸனமாகப் போகவிட்டே னென்கிறார். தன்னோடே பரிமாறுமவர்கள்பக்கலிலே மெயயிருக்குமாகில் தன்பக்கலிலே வந்து பொசியக்கூடுமென்று அவர்களபக்கலிலும் மெய்நடையாடாதபடி பண்ணினேன். ஸமஸாரிகள் அஜ்ஞாநத்தாலேபொய்யோடுரு செல்லும; மெயகொண்டேநடக்க வேண்டும் தேவரீர் திருவடிகளிலேயிறே அஸத்யனாய்த்து.

நீர் இப்படிமெயயை நேராகப்போகடுகைக்கு வாஸநை பண்ணிற்று எங்கேயென்ன; (விரிகுழலாரில்பட்டு)உன்கோஷ்டிக்குப்பொயயாகாதாப்போலேயிறே இவர்கள்கோஷ்டிக்கு மெய்யாகாதபடி.

---

முப்பத்துமூன்றாமபாட்டு. (மெய்யெல்லாமித்யாதி)கீழ்ப்பாட்டிற்சொன்ன நன்மையில்லாமையை அநுபாஷிக்கிற விடத்திலே,"மெய்யெல்லாம்போகவிட்டு"என்பானென்னென்ன;அருளிச்செய்கிறார் (கீழ்ச்சொன்னவித்யாதி.)"ப்ரதமசிலை" என்றதுக்கு நியாமகத்வேந"ஸத்யம் தமோ தமஸ்ஸம""ஸத்யம்தபோதமஶ்ஶம" இத்யாதியையருளிச்செயவர்.

ஸத்வனுமிருக்குமவனுக்கு ஸ்த்ரீகளோடொரு க்ஷணகால மும் ஸம்ஸர்க்கமரிதாயாய்த்திருப்பது. (விரிகுழலாரில்) மயிர்முடி த்திருக்கில் "இதொரு மயிர்முடியே! மாலைசுற்றின வாக்கே!" என்று அதிலே வித்தனுயிருக்கும்; விரித்திருக்கில் "ஓசமழக்காக மயிரைவிரித்துப்போகட்டபடியே!" என்று அதிலே வித்தனுயிரு க்கும். "என்னையுன்செய்கை நைவிக்கும்" என்று-பகவத் விஷய த்தில் ஸாத்விகர் படுமதெல்லாம் படுமாய்த்து. (பட்டு) வலையிலே யகப்பட்ட சிலபதார்த்தங்களைப் போலே தன்னால் மீளவொண்ணு தபடி யகப்படுகை. ஆசார்யோபதேசத்தாலே வகுத்தவிஷயத்தில் * பனியிருங்குழல்களைக் கண்ணாலே காணுநிற்க,நெஞ்சு ஸ்த்ரீகள் பக்கலிலே யாம்படியிறே அதிலகப்பாடிருப்பது.

(பொய்யெல்லாம் பொதிந்து கொண்ட) மெய்யைக்குடநீர்வழி த்தாப்போலே பொய்களைக் கூடுபூரித்தேன்.பகவத் விஷயஸம்ஸர் க்கம் பொய்யரை மெய்யராக்குமாப்போலேயாய்த்து- இவ்விஷயம் ஸத்யரை அஸத்யராக்கும்படி. (எல்லாம்) மெய்க்குச் சொன்ன வ கைகளெல்லாம் இதுக்கு முண்டிறே. "பொய்" என்று பேர்பெற் றவையெல்லாவற்றையுந் தம்மோடே சேர்த்துக் கொண்டாரா ய்த்து. (பொதிந்துகொண்ட) அவற்றிலொன்றுஞ் சோராதபடி பொதிந்து கொண்டேன். நாட்டார் தந்தாமபிமத விஷயங்களுக் குக் கார்த்திகைக்கு ஒருபொய் சொல்லவேண்டினால், அவர்களும் என்பக்கலிலேவந்து கேட்டுப்போம்படி பொதிந்துகொண்டேன். எட்டுப் புரியுங்கட்டினாராய்த்து. (போழ்க்கனேன் வந்து நின்றே ன்) என்னை யநுஸந்தித்தால்,பொய்யனென்றோ,அங்குத்தைக்காகா தவனென்று மீளவிறே யடுப்பது; பண்ணறையனாகையாலே நிர் லஜ்ஜனாய் வந்துகொடுநின்றேன். (நின்றேன்) ஸாதநாநுஷ்டாநம் பண்ணிபலத்துக்கு அவஸரப்ரதீக்ஷராய் நிற்பாரைப்போலே வந் துநின்றேன். (போழ்க்கனேன்) போழ்க்கமை - பண்ணறை.

இப்படிப்பட்ட நீர் சமதமாத்யுபேதர்வரும் நம்பக்கலிலேவரு வானென், விரிகுழலார்பக்கல் போகீரோ்ன்ன; (ஐயனே) என்னா லழித்துக் கொள்ள வொண்ணாத நிருபாதிக ஸம்பந்தமடியாக வந் தேன். எத்தனையேனும் அநீதியிலே கைவளர்ந்த ப்ரஜைகளுக்கும் மாதாபிதாக்களிருக்குமிடத்தில், பிறர்காணாதபடி புழக்கடையாலே வந்து புகுரலாம்படியிறே ப்ராப்தியிருப்பது. (அரங்கனே) நம் மை "நிருபாதிக பந்து" என்றறிந்தது சாஸ்த்ர வாஸனையாலே யோ, ஆசார்யோப தேசத்தாலேயோ வென்ன; அவற்றாலன்று, கோயிலிலேவந்துகண்வளர்ந்தருளுகிறபடியைக் கண்டறிந்தேன்.

---

ப்ரதமசிலை - ஆதாரசிலை. விளைக்கோட்டைக்கு எட்டுப்புரி கட்டுவர்கள்.பண்ணறை - அடைவுகேடு. ... ... (௩௩)

நித்யவிபூதியிலிருப்பைக் காற்கடைக்கொண்டு, [illegible]தமான ஸம்ஸாரத்திலே ஸம்ஸாரிகளுடைய வுஜ்ஜீவநமேப்ர[illegible]மாகக் கண்வளர்ந்தருளுகிறபடியாலே,இஜ்ஜந்துக்களில் தேவரீர்திருவடி[illegible]ளுக்காகாதாரில்லை யென்னுமிடத்தையும் இக்கிடைதானே யுபதேசிக்கிறதில்லையோ.நம்பக்கலிலேவந்து நீர்கொள்ளப்புகுகிற கார்யமென்னென்ன; (உன்னருளென்னுமாசைதன்னால் - வந்துநின்றேன்) தேவரீர்க்ருபையின்பக்கல் எனக்குண்டான நசையாலே வந்தேன். தந்தாமை முடியச்சூழ்த்துக் கொண்டவர்களுக்கும் தேவரீர் க்ருபையில் நசைபண்ணலாம்படியிறேதேவரீர்க்ருபையிருப்பது. ப்ரஹ்மாஸ்த்ரத்தாலே யழியச்செய்ய தேவரீர்உத்யோகித்த தசையிலும காகத்துக்குத் திருவடிகளிலே புகுரலாம்படியிறே தேவரீர்க்ருபையிருப்பது. " [Telugu-script Sanskrit quotation] " " வதார்ஹமபிகாகுத்ஸ்த; க்ருபயாபர்யபாலயத் " என்னக்கடவதிறே.

உம்முடையபக்கல நன்மைகளில்லாமையுமறிந்து தீமைகளுண்டென்னுமிடமுமறிந்து வந்தீரல்லீரோ, அதிகாரிகளில் இப்படிப்பட்ட வும்மையன்றோ நாம் தேடியிருக்கிறது, இதுதான் மெய்யோ என்ன; (பொய்யனேன்) நிரூபித்தவிடத்தில் இதுவும் பொய்யாயிருந்ததென்கிறார். ஸ்வதஸ்ஸர்வஜ்ஞரானதேவரீர் ஸந்நிதியிலே மெய்யென்றுசொல்லலாவது என்பக்கலுண்டோவென்கிறார். (பொய்யனேன்)"தீமைகள்எனக்கில்லாதனவில்லை"என்று சொன்னவிவ்வார்த்தைகள், "[Telugu-script Sanskrit quotation]" "அஹமஸ்ம்யபராதாநாமாலய:" என்னும வார்த்தை. இவ்வதிகாரத்துக்கு தேவரீர் ஸந்நிதியில் விலைசெல்லும வார்த்தையென்று சொனனேனித்தனை, என்தண்மை யென்னெஞ்சில் பட்டுச சொன்னே னல்லேன். (பொய்யனேனே) ஸ்வதஸ்ஸர்வஜ்ஞரான தேவரீர இப்பொய்தன்னை மெய்யென்று ப்ரமிக்கும்படியன்றோ நான்பொய் சொன்னபடி. தாம் கீழ் "ஆதரம்பெருகவைத்தவழகன்" என்றும், "கண்ணிணைகளிக்குமாறே" என்றும,"பனியருமபுதிருமாலோ" என்றும், "உடலெனக்குருகுமாலோ" என்றுஞ்சொன்ன பொய்ம மாலைகளை அநுஸந்தித்து "பொய்யனேன் பொய்யனேனே" என்கிறார். மெய்கொண்டு பரிமாறவேண்டுந் தேவரீர்திருவடிகளிலே எத்தனைபொய்சொன்னே னென்கிறார். ... (௩௩)

அ.—முப்பத்துநாலாம்பாட்டு. (உள்ளத்தே) ஜ்ஞாநப்ரஸரத்வாரமான மநஸ்ஸிலே நித்யவாஸம்பண்ணுமவனாய் நங்குற்றங்களை நேராகவறியும் ஸர்வஜ்ஞனை விவனை பொய்யனை நான் இட்டி அவத்யத்தைவிளைத்து என்னகாரியம் செய்தேனென்று லஜ்ஜித்து,

இதிற் காட்டில் நங்குற்ற மறிகைக்கு ஜ்ஞாநமின்றிக்கே யிருக்கிற ஸம்ஸாரிகளோடே முடிந்துபோகையே நன்றென்று பெரியபெருமாள்திருவடிகளிலே நசையற்று அகலுகிறார்.

உள்ளத்தேயுறையும்மாலையுள்ளுவானுணர்வொன்றில்லாக்
கள்ளத்தேன்நானுந்தொண்டாய்த்தொண்டுக்கேகோலம்பூண்டு
உள்ளுவாருள்ளிற்றெல்லாமுடனிருந்தறிதியென்று,
வெள்கிப்போயென்னுள்ளேநான்விலவறச்சிரித்திட்டேனே. ()

ப-ரை.— உள்ளத்து - நெஞ்சிலே, உறையும் - எப்போதும் வர்த்திக்கும், மாலை - ஸர்வாதிகனானவனை, உள்ளுவான் - அநுஸந்திக்கைக்கிடான, உணர்வொன்றில்லா - ஆத்மஜ்ஞாநமென்ன பகவத்ஜ்ஞாநமென்ன தேஹஸ்வபாவஜ்ஞாநமென்ன இவற்றில் ஒன்றுமில்லாதவனாய், கள்ளத்தேன் - ஜ்ஞாநஹீநனென்று என்னை நாட்டாரறியாமல் மறைத்துப்போந்தவனாய், நானும் - ஒருவகை நன்மையு மின்றிக்கே யிருக்கிற நானும், தொண்டாய் - உன்னுடைய அடிமையிலே அநவயித்தவனாய், தொண்டுக்கே கோலம்பூண்டு - அடியாள்போல நாமரூபங்களை தரித்து, உள்ளுவாருள்ளிற்றெல்லாம் - அநுஸந்திப்பாரநுஸந்திக்குமதெல்லாம், உடனிருந்தறிதியென்று - கூடவிருந்து அறிவாயென்று, நான்—, என்னுள்ளே - எனக்குள்ளே, வெள்கி, லஜ்ஜைப்பட்டு, விலவறச்சிரித்திட்டேன் - விலாக்களொடியும்படி சிரித்தேனென்கிறார். (நூச)

வ்யா.—(உள்ளத்தே) நினைவுக்கு வாய்த்தலையானநெஞ்சிலேயிருக்குமவனாய்த்து. புறம்புள்ளானொருவனாகிலிறே கண்ணால்கண்டதுக்கவ்வருகறியானென்றிருக்கலாவது. (உறையும்) ஸதாஸந்நிஹிதனாயிருக்கை. போக்குப்பகுதியுண்டாகிலிறே போனபோதாக மூலையடியே நடக்கலாவது. (மாலை) ஸர்வாதிகனை. ஆத்மாவுள்ளே வர்த்தியாநிற்கச்செய்தே ஸர்வத்தையும் அறியமாட்டான்; ஆகாசம் வ்யாபியாநிற்கச்செய்தே வ்யாப்யத்தைக்குறித்து அதுக்கு நியந்த்ருத்வமில்லை; இவன் ஸர்வஜ்ஞனாய் ஸர்வநியந்தாவாயிருக்கும். (உள்ளுவானுணர்வு) நம்முள்ளே வர்த்தியாநின்றான் என்று அநுஸந்திக்கைக்கிடான ஜ்ஞாநமில்லை. (உணர்வொன்றில்லா) ஆத்மஜ்ஞாநமுண்டாகிலிறே பகவத்ஜ்ஞாநமுண்டாவது. அதில் ப்ரதமத்திலே யறியவேண்டு மாத்மஜ்ஞாநமில்லை; ஈஶ்வரவிஷயஜ்ஞாநமுமில்லை; தேஹஸ்வபாவத்திலும் ஜ்ஞாநமில்லை.

(கள்ளத்தேன்) ஜ்ஞாநஹீநனென்று என்னை நாட்டாரறியாமல் பகட்டி மறைத்துப்போந்தேன். நமக்கோராத்மகுணமில்லையென்றுசொல்லும்போது என்னந்தராத்மாவ்றியவில்லையென்பன்;

---

முப்பத்துநாலாம்பாட்டு. (உள்ளத்தேயித்யாதி.) (ஸம்ஸாரிகளோடே முடிந்து போகையே) என்றவிடத்திலே, ஸம்ஸாரிகளோடே கூடி முடிந்துபோகையே என்று கூட்டி நிர்வஹிப்பது. "உள்ளுவானுணர்வொன்றில்லா" என்று - ஈச்வரவிஷயஜ்ஞாநமொன்றுமில்லாவென்றது தத்பூர்வபாவியான ஆத்மஜ்ஞாநமும் தேஹஸ்வபாவஜ்ஞாநமு மில்லையென்றபடி.

அத்தாலே அவர்களும், இவனுக்கு ஆத்மவிஷயஜ்ஞாநமும் பரமாத்மவிஷயஜ்ஞாநமு முண்டென்று நினைத்திருக்கும்படியாக அவர்களையும் மறைத்துப்போந்தேன். அடியில் அநர்த்தமுணா முண்டாயிருக்கவிறே யில்லையென்பது, அக்களவுக்கு உன்னையும் பெருநிலையாகநிறுத்திக் களவுகண்டு போந்தேன். (நானுந்தொண்டாய்) ஒருநன்மையுமின்றிக்கே யிருக்கிற நானும், ஆத்மகுணோபேதர் அதிகரிக்குமுன்னுடைய அடிமையிலே அந்வயியாநின்றேன். ஆர் செய்யக்கடவ வடிமையிலே ஆர் அந்வயிக்கிறார். சண்டாளன் வேதாத்யயநத்தை அதிகரித்தால் நாட்டார் கர்ஹிப்பார்களென்று, "[Grantha text]" "ஸ்வாத்மாப்யேநம்விகர்ஹதே" என்றுதானும் அருவராநிற்குமிறே; அப்படியேபடுகிறார். (தொண்டுக்கே கோலம்பூண்டு) உன்னைக்களவுகண்டுவிடுமதன்றிக்கே ஸாத்விகர்சிரஸாவஹிக்கும்படி ரூபநாமங்களை தரித்துப்போந்தேன். பரப்புமாறத் திருநாமத்தை யிடுவது, ஸ்ரீபஞ்சாயுதங்களை தரிப்பது, அஹர்தயமாகத்திருநாமத்தைச்சொல்லுவது, உன்போக்யதையைச் சொல்லுவது, யமாதிகள் தலையில்என்காலென்பதாய், நானுமொருவனுய் பரோபதேசம்பண்ணுவதாய், எத்தனை செய்தேன்-எத்தனை ஜல்பித்தேனென்கிறார். (உள்ளுவாருள்ளிற்றெல்லா முடனிருந்தறிதியென்று) நினைவுக்கு வாய்த்தலையைப்பற்றியிருக்கையாலே அநுஸந்திப்பார நுஸந்திக்கு மதெல்லாவற்றையும் கூடவிருந்தறிதியென்று. "[Grantha text]" "ஏகோஹமஸ்மீதிசமந்யஸேத்வம்" இத்யாதி. ஸர்வஜ்ஞனுய ஸாவகியந்தாவாயிருக்கிற நீஉடனேயிருக்கவோ நான்இவ்வமணக கூததெல்லாம் அடித்தேனென்கிறார்.

(வெள்கிப்போய்) தம்முடைய க்ர்த்ரிமத்வத்தையும், அவனுடைய ஸர்வஜ்ஞத்வத்தையும், அவனுடைய ஸந்நிதியையும், அநுஸந்தித்து லஜ்ஜாவிஷ்டரானார். (போய்) ஸந்நிதியிலே லஜ்ஜித்துக் கவிழ்தலையிட்டு நிற்கமாட்டாமையாலே கடக்கப்போந்தார். அவனில்லாத விடம்தேடிப்போகிறாரிறே யிவர். பாஹ்யவிஷயங்களிலே லஜ்ஜித்தால் அங்குநின்றும் அது இல்லாதவிடந்தேடிப் போருவரோ, அவ்வாஸனையாலே போருகிறாராய்த்திங்கும். (என்னுள்ளே) இவ்வர்த்தத்தில் ஸம்ஸாரிகள் இவர்க்குக் கூட்டல்லர்கள், பெரியபெருமாள்பக்கல்நின்று மகன்றாராய்நின்றார், அவர் ஸந்நிதியுண்டானாலும் அவர் இதுக்குக் கூட்டல்லர், இனி இவர் தம்மிலே சிரிக்குமத்தனையிறே. தம்முடைய அபஹாஸ்யதைக்குத் தாமே ஸஹகாரியா மித்தனையிறே.

---

இவ்வர்த்தத்தில்-அபஹாஸரூபமான அர்த்தத்தில். ஸம்ஸாரிகள் லஜ்ஜாசூந்யராகையாலே இவ்வபஹாஸத்துக்குக்கூட்டல்லர், இப்படி லஜ்ஜிக்கை ஈச்வரனுக்கு அநபிமதமாகையாலே பெரியபெருமாள் இதுக்குக் கூட்டல்லவென்றபடி.

(விலவறச்சிரித்திட்டேனே) விலாக்கவொடியும்படி சிரித்தாராய்த்து. அபஹாஸ்யதைக்கவகியுண்டானுலிறே சிரிப்புக்கவகியுண்டாவது. அகலகினேத்தவராகையாலே, திப்பாய்வார், வெற்றிலை தின்று பூட்டிப் பூச்சூடித் திப்பாய்வாரைப்போலே சிரிக்கிறாராய்த்து. அர்ஜுநன் இவ்விஷயத்தில் நசைகிடக்கையாலே சோகித்துக் கைவாங்கினுன்; இவர் நசையறநீங்குகிறாராகையாலே சிரித்துக் கைவாங்குகிறார். ... ... ... ... (௩௪)

அ.—முப்பத்தஞ்சாம்பாட்டு. இவர், இப்படி கைவாங்கினவாறே பெரியபெருமாள், இவரை யிழந்தோமாகாதே! என்று நொந்து, ஆழ்வீர்! நீர் அகலநினைத்ததுக்கு ஹேதுவென்னென்று கேட்டருள; ஸர்வஜ்ஞான தேவரீர் திருமுன்பே க்ர்த்ரிமங்களைச்சொல்லி உம்மைக்கிட்டி அவத்யாவஹனுவதிற்காட்டில் என்னகவாயறியாத ஸம்ஸாரிகளும் நானுமாயிருக்கப் பார்த்தேனென்ன; நீர் கிட்டின ப்ரயோஜநமழகியது, நாம் தோஷத்தில் அவிஜ்ஞாதா, அவர்கள் தோஷத்தில் ஸர்வஜ்ஞர், நாம் குணஸர்வஜ்ஞர்; ஆகையாலே நம்வாசல் ஸர்வாதிகாரங்காணுமென்ன; இது உக்திமாத்ரமேயோ, அநுஷ்டாநமுமுண்டோவென்ன; பண்டே அடிபட்டுக்கிடக்கிறதுகாணுமென்று த்ரிவிக்ரமாபதாநத்தைக் காட்டிக்கொடுத்தான்; த்ரைவிக்ரமாபதாநம் கேட்டறியீரோ, வஸிஷ்ட சண்டாள விபாகமற எல்லார்தலையிலும் நங்கால் பொருந்தினபடி யறியீரோவென்று, சீலாதிக்யத்தையும் தன்செல்லாமையையும் காட்டி ஸமாதாநம்பண்ண ஸமாஹிதராகிறார்.

தாவியன்றுலகமெல்லாந் தலைவிளாக்கொண்டவெந்தாய்
சேவியேனுன்னையல்லாற்சிக்கனச்செங்கண்மாலே
ஆவியேயமுதேயென்றனுருயிரனையவெந்தாய்
பாவியேனுன்னையல்லாற்பாவியேன்பாவியேனே. (௩௫)

ப-ரை.—அன்று-மஹாபலிபாலே அபஹ்ருதமானவன்று, உலகமெல்லாம்-ஸகலலோகங்களையும், தாவி தலைவிளாக்கொண்ட - எல்லாதலைக்கும் அவ்வருகாம்படிதாவியளந்தருளினவனுய. எந்தாய்-எனக்குசேஷியாய், செங்கண்மாலே - புண்டரீகாக்ஷனுன ஸர்வேச்வரனே, உன்னையல்லால் சேவியேன் - உன்னையொழிந்தவர்களுக்கு ஆட்செய்யேன்; ஆவியே - எனக்குப்ராணபூதனுய், அமுதே - அம்ர்தம்போலே ரஸாவஹனுய், என்றனுருயிரனைய - என்னருமந்தப்ராணனுக்கு அநதராதமாவாய், எந்தாய்-என்ஸ்வாமியானவனே, பாவியேன் பாவியேன் - மஹாபாபியான நான், உன்னையல்லால்-உனனையொழிய, பாவியேன்-புறம்பொருவரை நெஞ்சாலும் நினையேனென்கிறார். (௩௫)

---

விலாக்கள் - பார்ச்வஸந்திபந்தங்கள். ஆனுல் அர்ஜுநன் இவ்விஷயத்தை அகலுமென்று சோகித்தானில்லையோ வென்ன; அருளிச்செய்கிறார் (அர்ஜுநனித்யாதி.) ... ... (௩௪)

வ்யா.— (தாவி) உங்கள்தலையிலே நாம் கால்வைக்கப் புகாநின்றோமென்னில்; தர்மாநவாஸனையாலே ஸம்விதைப்போதே ஆணையிடுவர்களிறே. "திருவாணை நின்னாணை" என்று-ஸாதனக்கர் திருவடிகளை லபிக்கைக்கு மறுக்கவொண்ணாதபடி யிடுமாணையை, திருவடிகளைக் கிட்டாமைக்கு இடுவர்களாய்த்து; இவர்களறியாதபடி அநாயாஸேந எல்லார்தலையிலும் திருவடிகள்பட வளர்ந்தான். தாவுதல் – கடத்தல். (அன்று) மஹாபலியாலே அபஹ்ருதமாய், தன்னுடைய சேஷித்வமும் ஸம்ஸாரிகளுடைய சேஷத்வமும் அழிந்துகிடந்தவன்று. (உலகமெல்லாம்) மஹாபலியால் அபஹ்ருதமான வளவேயன்றியேப்ரஹ்மலோகபர்யந்தமாக ஸகல லோகங்களையும், வஸிஷ்ட சண்டாள விபாகமற எல்லார்தலையிலும் திருவடிகள் படும்படி வளர்ந்தபடி. (தலைவிளாக்கொண்ட) ரக்ஷ்யத்தினுடைய வளவல்லவாய்த்து ரக்ஷகனுடைய பாரிப்பு. "அத்யதிஷ்டத்தசாங்குலம்" "அத்யதிஷ்டத்தஸாங்குலம்" என்னக்கடவதிறே. (எந்தாய்) "அமரர்சென்னிப்பூவினை" என்று-நித்யஸூரிகள் சிரஸாவஹிக்கும் திருவடிகளை விமுகரான ஸம்ஸாரிகள்தலையிலே வைக்கைக்கு ஹேதுவென்னென்னில்; அவர்ஜநீயஸம்பந்தமென்கிறார். தந்தலையிலும் திருவடிகளை வைக்கையினாலே "எந்தாய்" என்கிறார். உறங்குகிற ப்ரஜையைக் கட்டிக்கொண்டு கிடக்கும் தாயைப்போலே அன்று தன்பேறாகவிறே ரக்ஷித்தது. அன்றறியாத குறைதீர முறையறிந்தவின்று உபகாரஸ்ம்ருதியாலே "எந்தாய்" என்கிறார். ஸம்ஸாரிகள் இன்றுமறிந்தவர்களே, அவர்களுக்குமாகத் தாம் உகக்கிறாரிறே.

(சேவியே னுன்னையல்லால்) இப்படிப்பட்ட நம்மைவிட்டுப் புறம்பேபோக நினைப்பானென்னென்ன; உன்னுடைய நீர்மையறியாதே நினைத்தேனத்தனை, உன்னைவிட்டுப் புறம்பே போகேனென்கிறார். உன்னையிழந்தால் நானும் பிறருமிறேயுள்ளது, இரண்டிலும் அந்வயிக்கப் பார்த்திலேன். அவையிரண்டுமிறே ப்ரணவத்திலும் மத்யமபதத்திலும் சொல்லுகிறது. சேஷத்வவாஸனையாலே புறம்புபோனாலும் ஸேவிகருமத்தனையாய்த்து இவர். இது எத்தனை குளிக்கு நிற்குமென்ன; (சிக்கன) இதெல்லாக் குளிக்கும் நிற்கும் - யாவதாத்மபாவி. ஸர்வேச்வரனைக்குறித்து "மாம்ச:" "மாமஸ" என்கிறார் இவர்.

---

முப்பத்தஞ்சாம்பாட்டு. (தாவியித்யாதி) தலைவிளாக்கொண்ட-எல்லார்தலைக்கும் அவ்வருகே போனவென்றபடி. "எந்தாய்" என்றதுக்கு அபரபாவித்வேநதாத்பர்யாந்தரம் (தன்தலையிலுமித்யாதி.) முந்தின வர்த்தத்துக்குச்சேர (உறங்குகிறவித்யாதி.) இரண்டாமர்த்தத்துக்குச்சேர (அன்றறியாதவித்யாதி.)

(செங்கண்மாலே) இது ஸ்வபாவகதமன்று, தாத்காலிக விசேஷணம்; இவர் "சிக்கன" என்றவாறே, திருவுள்ளம் இவர் பக்கலிலே ப்ரஸந்நமாய், இவர்பக்கல் வ்யாமோஹமுள்ளடங்காமையாலே கண்வழியே புறப்பட்டு ப்ரகாசிக்கிறபடி. (செங்கண்மாலே) வ்யாமோஹத்தாலே குதறிச்சிவந்த கண்களையுடையவனே. ஸ்ரீவிபீஷணாழ்வானைக் குறித்து மஹாராஜர், "வத்⁴யதாம்" "வத்யதாம்" என்றபோது பெருமாள் திருவுள்ளமழிந்தாப்போலே யாய்த்து, இவர் "விலவறச்சிரித்திட்டேன்" என்றபோது பெரியபெருமாள் திருவுள்ளமழிந்தபடி; பின்பு திருவடிவார்த்தையாலே "அதராமப்ரஸந்நாத்மா" "அதராமப்ரஸந்நாத்மா" என்றுபெருமாள் உளராளுப்போலே யாய்த்து, இவர் "சிக்கன" என்றபின்பு பெரிய பெருமாளுளரானபடி. திருவடி அவதாரத்திலே "மாஶுச:" "மாஶுச:" என்றான்; இவர் அர்ச்சாவதாரத்திலே "மாஶுச:" "மாஶுச:" என்கிறார். (செங்கண்மாலே) என்ஸ்வரூபலாபத்துக்கு முகம்மலரும்படி வ்யாமுக்தரான தேவரீரையொழிய புறம்பு எங்கேபோவேன்.

அவ்வளவேயோ (ஆவியே) என்ப்ராணனைவிட்டுப் புறம்பே போகவோ. இவர்க்கு ஒருவாயுவிசேஷமன்று ப்ராணன், "என் திருமகள் சேர் மார்வனே யென்னு மென்னுடைய ஆவியேயென்னும்" என்கிறபடியே ஒருமிதுநங்காணும் இவர்க்குப்ராணன். (அமுதே) தாரகமாத்ரமேயா யிருக்கையன்றிக்கே நிரதிசய போக்யமுமாய், சாவாமல் காக்கும் மருந்தாயிருக்குமவனல்லையோ. அவ்வளவேயோ (என்மனத்துருயிரனைய) என்னாத்மாவன்றோ நீ; ஆத்மாவைவிட்டு சரீரத்துக்குப்புறம்பே போக்குண்டோ. (எந்தாய்) அயோக்யனென்று அகலப்புக்க வென்னை நசியாதபடி மீட்ட என்ஸ்வாமியல்லையோ. வத்ஸலனைவிட்டுப் புறம்பே போகவோ; ப்ராணனைவிட்டுப் புறம்பேபோகவோ; போக்யவஸ்துவைவிட்டுப் புறம்பேபோகவோ; என்னை நல்வழிபோக்குவித்த ஸ்வாமியைவிட்டுப் புறம்பேபோகவோ என்கிறார்.

வார்த்தைகள் அழகிதாயிருந்தது, கீழே "ஐயனேயரங்கனே" என்றும், "என்னையாளுடையகோவே" என்றும் அபுத்த்யாசொன்னவை போலன்றிறே யென்ன; (பாவியேனுன்னையல்லால்) உன்னையொழிய புறம்பொருவரை நெஞ்சாலும் நினையேன். (பாவியேன் பாவியேனே) பாபப்ரசுரரான ஸம்ஸாரிகளை விடமாட்டாதே எல்லார்தலையிலும் திருவடிகளை வைத்த வுனக்கு அயோக்யனென்று அகலநினைத்ததுக்கு ஹேது என்பாபமேயிறே. (பாவியேன்) குற்றங் காணமாட்டாத வளவேயோ, உபேக்ஷித்த ஸம்ஸாரிகளையும் உபேக்ஷிக்கமாட்டாதவுன்னை அகலநினைத்ததுக்குஹேது என்பாபப்ராசுர்யமேயன்றோ.

என்னைக்கொண்டகன்று என்ஸத்தையை யழிக்கப்புக்கவள வேயோ, எல்லார்க்கும் ஸத்தாஹேதுவான வுன்னையும் உன்னை யொழிந்தவெல்லாருடைய ஸத்தையையும் நசிப்பிக்கைக்குக்கிலர் நான் நினைத்ததென்கிறார். ... ... ... (௩௫)

அ.—முப்பத்தாறும்பாட்டு. (மழைக்கு) அயோக்யனென்று அகலாதபடிதன்நீர்மையைக்காட்டிச் சேரவிட்டுக்கொண்டானென்றார்-கீழிற் பாட்டில்; இதில் - தம்முடையவயோக்யதை கழிந்தவாறே ப்ராப்யத்தில்த்வரைமிக்கு,யோக்யரைக் கொண்டுபோய் அடிமைகொள்ளும் தேசத்தேறக்கொடுபோகவேண்டியிருந்தார், அது செய்யக்கண்டிலர்; அதுக்கடி இவரை அகலாமே சேரவிடுகைக்குத் தான்பட்டபா டறியுமவனுகையாலே ஆமமற்றுப் பசிமிக வேணுமென்று பேசாதிருந்தான்; விஷயங்கள் நடையாடுகிற தேசத்திலே யிருந்து க்லேசபபட்டேபோமித்தனையாகாதே! என்று ப்ராப்யத்தில் த்வரையாலும் விரோதியில் அருசியாலுமாக, பெரியபெருமாள் கண்வளர்ந்தருள வரிதாம்படி, கேட்டா ரொல்லாரும் நீராம்படி பெருமிடறுசெய்து கூப்பிடுகிறார்.

மழைக்கன்றுவரைமுனேந்தும்மைந்தனேமதுரவாறே
உழைக்கன்றேபோலநோக்கமுடையவர்வலையிற்பட்டு
உழைக்கின்றேற்கென்னைநோக்காதொழிவதேயுன்னையென்னே
அழைக்கினறேனுதிமூர்த்தியரங்கமாநகருளானே. (௩௬)

ப-ரை.—மழை - இந்த்ரனேவின ஸமவர்த்தகம் என்கிற மேககணங்களாலே, அன்று - இடையரும் பசுக்களும் வருந்தினவன்று, வரை - கைக்கெட்டிறபெருமலையை, முன - அவை நலிவுபடுவதற்கு முன்னமே, ஏந்தும் - தரித்த, மைந்தனே - பெருமிடுக்கனுய், மதுரஆறே - இனிதான நதியையொத்தவனே; உழைக்கன்றேபோல நோக்கமுடையவர் வலையில்பட்டு - மானகன்றையொத்த விழியையுடையரான ஸ்தரீகளுடைய வலையிலே அகப்பட்டு, உழைக்கின்றேற்கு - துடிக்கிறவனுன, என்னை -, நோக்காதொழிவதே - கடாக்ஷியாதொழிகிறுயே; ஆதிமூர்த்தி - ஜகத்காரணபூதனுய, அரங்கமாநகருளானே - கோயிலிலே கண்வளர்ந்தருளுமவனே, உன்னை - ரக்ஷயவாக்கம தேடித்திரிகிற தேவரீரை, அழைக்கின்றேன - ரக்ஷாபேக்ஷயுடையனுய்க்கொண்டுகூப்பிடாநிறக, என - ரக்ஷித்தருளாமல ஆமஸிப்பதற்கு ஹேதுவென்னென்கிறா. (௩௬)

வ்யா.—(மழைக்கு) மழையென்றுலும் ஆனையென்றுலும் வ்யவஸ்திதமாயாய்த்து இவர்களகோஷ்டியிருப்பது. இப்போது கோவர்த்தநோத்தரணத்தைச் சொல்லுவானென்னென்னில்; அவனைப்பற்றித் தம்முகேநிவர்த்தியைப பண்ணிககொள்ள நினைத்தவராகையாலே அவனுடைய ஆபத்ஸகத்வத்தை யருளிசசெய்கிறார்.

---

"பாவியேன்" என்றதுக்கு, "தாவி" இத்யாதியைக்கடாக்ஷித்தருளிச்செய்து, "ஆவி" என்றத்தைக் கடாக்ஷித்தருளிச்செய்கிறார் (என்னைக் கொண்டித்யாதி.) ... ... ... (௩௫)

முப்பத்தாறும்பாட்டு. (மழைக்கித்யாதி) ஆனை என்றது-ஸ்ரீகஜேந்த்ராழ்வானை.

பசித்தவர்கள் "சோறே! என்பசியைப்போக்கவேணும்" என்னுமாப்போலே ஆபத்ஸகனே! என்துக்க நிவர்த்தியைப் பண்ணித்தரவேணுமென்கிறார். (அன்று) "𑌗𑍋𑌗𑍋𑌪𑍀𑌜𑌨𑌸𑌙𑍍𑌕𑍁𑌲𑌮𑌤𑍀𑌵𑌾𑌰𑍍𑌤𑌮𑍍" "கோகோபீஜனஸங்குலமதீவார்த்தம்" என்கிறபடியே-கன்றுகளும், பசுக்களும், இடையரும், நடுங்கினவன்று. அன்று மின்றுமே யாய்த்து ஆபத்து. அன்று கல்வர்ஷத்தகப்பட்டாரை ரக்ஷித்தாப்போலே இன்று துக்கவர்ஷத்தே யகப்பட்ட வென்னை ரக்ஷிக்கவேணும். கல்வர்ஷத்திலே நோவுபடவேணுமோ ரக்ஷிக்கும்போது; துக்கவர்ஷத்தே நோவுபட்டாரை ரக்ஷிக்கலாகாதோ: ஒருவூராகநோவுபடிலோ ரக்ஷிக்கலாவது; அவ்வூராகப்பட்டநோவை யொருவன்பட்டால் ரக்ஷிக்கலாகாதோ.

(மலை) இந்த்ரனேவ ஸம்வர்த்தகமேககணம் வர்ஷிக்கவுத யோகித்தவாறே திருவாழியை நியமிக்கவவஸர மில்லாமையாலே கைக்கெட்டிற்றொரு மலையை யெடுத்து ரக்ஷித்தானாய்த்து. இத்தால் - இன்னத்தைப் பரிகரமாகக் கொண்டு இன்னத்தை ரக்ஷிக்கவேணுமென்னும் நியதியில்லை யென்கை. என்னுடைய ரக்ஷணத்துக்குப்பரிகரம் உதவப்பார்த்திருக்கவேணுமென்னுங்குறையில்லை யென்கை. (முன்) மழையிலேபசுக்கள்நோவுபடுவதற்கு,முன்னே-ஏற்கவே ரக்ஷித்தபடி. "𑌬𑌹𑍁𑌧𑌾𑌸𑌨𑍍𑌤𑌤𑌦𑍁𑌃𑌖𑌵𑌰𑍍𑌷𑌿𑌣𑌿" "பகுதாஸந்ததது:கவர்ஷிணி" என்கிறபடியே - து:கவர்ஷத்தில் நோவுபட்டுக் கூப்பிடவும் பேசாதிருப்பதே!. (ஏந்தும்) ஏழுதிருநக்ஷத்ரத்திலே மலையை யெடுத்த விடத்தில் ஒரு பூம்பந்தை யெடுத்தாப்போலே வருத்தமற்றிருந்தபடி. ரக்ஷணதர்மத்தில் உனக்கு வருத்தமுண்டாய்த்தானிழக்கிறேனே. சேஷபூதர் * சூட்டுநன்மாலைகளேந்தினபோலேயாய்த்து சேஷிமலையேந்தினபடி. (மைந்தனே) மலையை அநாயாஸேந எடுக்கைக் குடலானபெருமிடுக்கையுடையவனே. "மைந்தன்" என்று - பாலனாய், இத்தை ரக்ஷிக்கப்பெற்ற ப்ரியத்தாலே இளகிப் பதித்தபடி யென்றுமாம். தந்தாம ஜீவநம் பெற்றவாறே இளகிப்பதிக்குமத்தனையிறே. ஸ்வரூபாநுரூபமாகவிறே ஜீவநமிருப்பது. உன்பேற்றுக்கு நான் கூப்பிட-வேண்டுவதே! யென்கிறார்.

(மதுரவாறே) ரக்ஷகனன்றியே பக்ஷகனானாலும் விடலாயோவுன்வடிவிருப்பது. (மதுரவாறே) ஸமுத்ரம் என்னாதே, "ஆறு" என்பானென்னென்னில்; கடலானால் விநியோகயோக்யமன்றிக்கேயிருக்கும்; இது, விடாய்த்தார்க்குக்குளித்தல், முகத்திலே இறட்டிக்கொள்ளுதல், பாநம் பண்ணுதல் செய்யலாயிருக்கும்; விடாயில்லாதபோதும் அழுக்கைக்கழற்றிக் கொள்ளலாயிருக்கும்:

---

ரக்ஷணம் ஜீவநமாமோவென்ன; (ஸ்வரூபாநுரூபேத்யாதி.) இத்தால் பலிதம் (உன்பேற்றுக்கித்யாதி.)

கடலாலும் இவனிருந்தவிடத்திலோடாது; இது இவனிருந்தவிடத்தே வருகையாலும், விண்ணகமெடுத்தால் நடுவுள்ளவற்றை முறித்துக்கொண்டு வருமாப்போலே யிவ்வாறும் அயோத்யாதாரஸந்தானத்தாலிட்டவணைகளையும் முறித்துக்கொண்டு வருமத்து. நின்றார் நின்றவிடங்களிலே உபஜீவிக்கலாம்படியாயிறே யிருப்பது; பரமபதத்தில்நின்றும்போந்து இடைச்சேரியிலேவந்து பிறந்தபடியை நினைக்கிறார்.

இந்த்ரனடியாக மழையால்வந்த ஆபத்தைப் போக்கினோம்-அங்கு; உமக்குஆபத்துக்கடியென்னென்ன; (உழைக்கன்றித்யாதி) ஸ்த்ரீகளுடைய நோக்காகிற வலையிலே அகப்பட்டு நோவுபடுகிறவனன்றோ நான். முக்தமான மானினுடையவிழிபோலேயகவாயிலொன்றுமின்றிக்கே யிருக்க அஹர்தயமாகஅநங்யப்ரயோஜனைகளைப்போலே தங்கள்செல்லாமை தோற்ற நோக்குகிறவர்களுடைய நோக்காகிற வலையிலே யகப்பட்டுத் துடிக்கிறவென்னை. உழை - மான். வலையாகிறது - அகப்படுத்திக் கொள்ளவற்றாய், கால்வாங்கிப்போகவொண்ணாதபடி பண்ணுமதாய், அதுதன்னில் ப்ரயோஜநமின்றிக்கே யிருக்குமதிறே. பகவத்விஷயத்தில் போகமே துவக்குகைக்கு வேண்டுவதுண்டாய் அதுதன்னிலே யோக்யதை யின்றிக்கேயிருக்கை.

(என்னை) பசுக்களைப்போலன்றிக்கே நோவுபடுவதும்செய்து நோவுபட்டேனென்றறிவதுஞ் செய்து ரக்ஷாபேக்ஷை யுடையேனாய் ரக்ஷகன் நீயே என்றிருக்கிறவென்னை நோக்காதொழிவதே!. கல்லால்வந்த ஆபத்துக்கு கல்லாலே நோக்கினாய்; கண்ணாலேவந்தவாபத்தைக் கண்ணாலே நோக்கவேண்டாவோ. என்னைரக்ஷிக்கும்போது மலையை யெடுக்க வேணுமோ, குளிரநோக்குமத்தனையன்றோ செய்யவேண்டுவது. நோக்கவேணுமென்னாதே, "நோக்காதொழிவதே" என்று கிலாய்க்கிறாரிறே ஸம்பந்தத்தாலும், நீர்மையினூற்றத்தாலும், ஶீலத்தாலும். இவர் இப்படி கிலாய்த்துச்சொன்னபின்பும்,இவர், நாமகிட்டக்கொள்ளஅயோக்யனென்றுஅகலக்கூடும், ஆமமறுங்கிடீஒன்று பேசாதே கிடந்தார். வ்யாதிக்ரஸ்தமானப்ரஜைகள் வ்யாதிதலைசாய்ந்து சோறுசோறென்று கூப்பிடப்புக்கால் த்வஜிதானேதாய்க்கு உகப்பாமாப்போலே இவர் கூப்பீடுதன்னையே கேட்டுக்கொண்டுகிடந்தான். (உன்னையென்னையழைக்கின்றேன்) வேறேயொருகாபுருஷன் வாசலிலேயோ நான் கூப்பிடுகிறது ; ரக்ஷ்யம்தேட்டமாயிருக்கிறதேவரீரை ரக்ஷாபேக்ஷையுடையேனாய்க்கொண்டு கூப்பிடாநிற்கச் செவிப்படாதொழிகைக்குப் புறம்பு அங்யபரதையென்? ஜகத்வ்யாபாரமும் மதர்த்தமன்றோ ?.

---

"வ்யாதிக்ரஸ்தமான" என்ற வாக்யம் பேசாமைக்கு ஹேதுவந்தரமென்று தோற்றியிருக்கிறது.

நீர் அழைக்குங்காட்டில் அப்போதே உம்முடைய கார்யஞ்செய்யவேண்டுகிற தேவையென்னென்ன; (ஆதிமூர்த்தி) இது உருமாய்ந்து கிடந்தகாலத்திலே அபேக்ஷாநிரபேக்ஷமாக "ஸதேவ ஸோம்ய" "பஹுஸ்யாம்" என்கிற ஸங்கல்பத்தாலே இவற்றையுண்டாக்கின வுனக்கு இதினுடைய ரக்ஷணம் பண்ணுகை பரமன்றே. பெற்றார்க்குரக்ஷிக்கையும்பரமன்றே.எங்கேனும்இடறிலும்"அம்மே! என்ன ப்ராப்தியில்லையோ, என்னுடைய ரக்ஷணத்துக்கு ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகள் தேடிப் பழங்கிணறு கண்வாருகிறதென். (அரங்கமாநகருளானே) பரமபதத்தைவிட்டுக் கோயிலிலே கண்வளர்ந்தருளுகிறது என்னுடைய ரக்ஷணம் பண்ணவல்லவாகில் இக்கிடைக்கு வேறே ப்ரயோஜநமுண்டோ. கர்மாநுகூலமாக ஸம்ஸாரிகளை ரக்ஷிக்கைக்கு வந்து கிடக்கவேணுமோ. (அரங்கமாநகருளானே - உன்னையென்னை யழைக்கிறேன்) நான்ஏதேனும்பரமபதத்தேவந்து கூப்பிட்டேனோ, ருசிபிறப்பிக்க வந்துகிடக்கிறவிடத்திலே ருசிபிறந்தார் இழந்துபோகவோ. இவர் இப்படி கூப்பிடப் பெரியபெருமாள்ஆறியிருப்பானென்னென்னில்; பரமபதத்திலுள்ளார் போகத்தாலே கூப்பிடக்கேட்டறியவர்; ஸம்ஸாரிகள்விஷயாநுபவத்தாலே கூப்பிடக்கேட்டறிவர்; தம்முடைய க்ருஷிபலமான கூப்பீடு கேட்டறியாமையாலே பேசாதேகிடந்தார். (நகூ)

அ.—முப்பத்தேழாம்பாட்டு. (தெளிவு) இப்படி கூப்பிடச்செய்தேயும் பெரியபெருமாளிரங்கி "மாசுச:" "மாபை:" என்னக்காணாமையாலே தம்மையொழிய வேறே யெனக்கொரு பந்துக்களுண்டாயிருக்கிறாரோ, ப்ரயோஜநாந்தர பரனாய் பந்தகமாயிருந்துள்ள புருஷார்த்தத்தை யபேக்ஷிக்கிறானென் றிருக்கிறாரோ, நம்முடையவனென்று அங்கீகரிக்கநான்பிழைப்பேனால் இத்தனையுஞ் செய்யாதே ஆர்த்தத்வநிகேட்டுக் கண்ணுறங்கும்படி, அம்மே!இவர்திருவுள்ளம் இப்போதுஇங்ஙனே கொடிதாய்த்தாகாதே! என்று இன்னாதாகிறார்.

தெளிவிலாக்கலங்கல்நீர்சூழ்திருவரங்கத்துளோங்கும்
ஒளியுளார்தாமேயன்றேதந்தையுந்தாயுமாவார்
எளியதோரருளுமன்றேயென்திறத்தெம்பிரானார்
அளியநம்பையலென்னாரம்மவோகொடியவாறே. (நஎ)

---

ரஹஸ்யம் தேட்டமாயிருக்கிற வாக்யத்தாலே, "அரங்கமாநகருளானே - உன்னையென்னை அழைக்கின்றேன்" என்று கூட்டியருளிச்செய்து, "ஆதிமூர்த்தி - உன்னையென்னை" என்று கூட்டி தாத்பர்யம் (எங்கேனு மித்யாதி.) ... ... ...(நகூ)

முப்பத்தேழாம்பாட்டு. (தெளிவிலாவித்யாதி.) பந்துக்க ளுண்டாயிருக்கிறாரோவென்றது - பந்துக்களுண்டென்றிருக்கிறாரோவென்றபடி.

ப-ரை.—தந்தையும் தாயுமாவார் - ஹிதபரனை தமப்பனும் ப்ரியபரை யானதாயு மாவார்; தெளிவிலா - தெளிகைக்கு அவகாசமில்லாதபடி மேன்மே லும் பெருகுகையாலே, கலங்கல்-கலக்கம்மாறாத, நீர்சூழ்-காவேரியால் சூழப் பட்ட, திருவரங்கத்துள் - கோயிலிலே, பரமபதத்தினின்றும் இங்குவந்த பின்பு, ஓங்கும் - மிக்குவருகிற, ஒளியுளார்தாமேயன்றே - தேஜஸ்ஸையுடைய வரன்றோ; என்திறத்து-அவர் என்விஷயத்தில் பண்ணவேண்டுவது,எளியதோ ரருளன்றே - ஒருக்கால் குளிரநோக்குவ தித்தனையன்றோ; எம்பிரானார் - எனக்கு உபகாரகரானவர், நம்பையல் - நம்முடைய பையலான இவன்,நம் அளியன் - நம்முடைய க்ர்பைக்கு பாத்ரபூதன், என்னார் - என்றொருவார்த்தை சொல்லுகிறாரில்லை; அம்மஓ! கொடியவாறே - ஆர்த்தத்வநிசேட்டிம் கண்ணுறங் குவதே! இவர்ஸ்வபாவம் மிகக்கொடிதாயிராநின்றதி! யென்கிறார். (௯எ)

வ்யா.—(தெளிவிலாக்கலங்கல்) ஊற்றுமாறித் தெளிகைக்கு அவகாசமில்லாதபடி மேன்மேலும் பெருகுகையாலே கலக்கம்மா றாதாய்த்து. இவரைப்போலேயாய்த்து ஆறும். ப்ராப்திக்குமுன்பு சோகத்தாலே கலங்கியிருப்பர்;கிட்டினால்ப்ரேமத்தாலேகலங்கியிரு ப்பர்: ஆறும் கோயிலுக்குமேற்கு; பெரியபெருமாளைக் காணப்புகா நின்றோமென்னும் ஹர்ஷத்தாலே கலங்கிவரும்;கிழக்குப்பட்டால் பிரிந்துபோகிற சோகத்தாலே கலங்கிப்போம். கோயிலருகுவழி போவாரில் சேதநாசேதந விபாகமில்லைபோலேகாணுங்கலக்கத்து க்கு.(நீர்சூழ்)"அதனில்பெரியஎன்னவாவறச்சூழ்ந்தாயே" என்று பெரியபெருமாள்என்னளவிலிருக்குமாப்போலேயாய்த்து - ஆறும் கோயிலைவிளாககொலைகொண்டிருக்கும்படி. [ஸ்நூடி: - துக்தாப்தி:] இத்யாதி-ரத்நாகரமான க்ஷீராப்திதமப்பனார்; நான் இவ்விடத்தில் ஜநநீ; ஸாக்ஷால்லக்ஷ்மி பெண்; மணவாளப்பிள்ளை ஸர்வலோ கோத்தரரான அழகியமணவாளபெருமாள்;இதுக்கு ஸத்ர்சமாக அங்கமணிசெய்யலாவதேதென்று விசாரித்துக்கொண்டு வருகிறாப் போலே யாய்த்து ஆறும்பெருகி, மத்தகஜமபோலேபிசுகிப் பிற் காலித்து வருகிறபடி. (திருவரங்கத்துளோங்கு மொளியுளார்) ஆற்றுப்பெருக்கைநீக்கித் தரைகண்டு உள்புகவரிதாமாப்போலே யாய்த்துப் பெரியபெருமாள்தேஜஸ்ஸை நீக்கிப் புகுவதுக் காச்ரய மான வடிவழகுகாண வரிதாயிருக்கிறபடி. பரமபதத்தி லொளி பகல்விளக்கென்னும்படியாயாய்த்து,அந்தகாரத்தில்தீபம்போலே குறைவாளரான ஸம்ஸாரிகளுக்கு உதவப்பெற்றபின்பு ஒளிமிக்கி ருக்கிறபடி.

(ஓங்குமொளி) நித்யஸூரிகள்நடுவேயிருக்கிறபோது ஆதி த்யர்கள்நடுவே ஆதித்யனிருக்குமாப்போலேயாய்த் திருப்பது. இங்கு ஆர்த்தர் மிகவுமுண்டாகையாலே தத்ரக்ஷணம் பண்ணி ஒளியும் மிகாநிற்கு மத்தனை.

---

அப்படி விளாக்கொலை கொண்டிருக்குமோ வென்ன;(ஸ்நூடி:- துக்தாத்பிரித்யாதி.) "ஜநநீ" "பர்யே" என்றதிலே நோக்கு.

(ஒளியுளார் தாமேயன்றே தந்தையுந் தாயுமாவார்) அவதாரணத்தாலே "மாதா பிதா" "மாதாபிதா" என்று தொடங்கி, "நாராயண:" "நாராயண:" என்கிற பொதுவில ன்று, வ்யூஹாவஸ்தை, விபவாவஸ்தை என்கிற விசேஷங்களிலு மன்று, இனி எனக்குத் தந்தையுந் தாயுமாவார் பெரியபெருமா ளே யென்கிறார். •தம்மையொழிய வ்யக்த்யந்தரத்திலேயும் ஒருபந் தமுண்டென்றிருக்கிறாரோ. "ஸர்வேஷாமேவலோகாநாம்" "ஸர்வே ஷாமேவலோகாநாம்" இத்யாதி. இஶ்ஶ்லோகந்தான், தர்மபுத்ரா திகள் வநவாஸம்பண்ணுகிற ஆபத்தசையிலே க்ர்ஷ்ணனும் ஸத்ய பாமைப் பிராட்டியும் எழுந்தருள, அத்தைக்கேட்ட பராசராதி மஹர்ஷிகள் வந்து மார்க்கண்டேயபகவானைக்கண்டு பேரோலக்க மாக விருக்க; தர்மபுத்ரன், "இவ்வாபத்துக்காச்வாஸஹேதுவாக எனக்கொரு நல்வார்த்தை யருளிச்செய்யவேணும்" என்று ரிஷிக ளைக்கேட்க; அவர்கள்சொன்னவையடங்கபூர்வபக்ஷித்து ஸ்ரீமார்க் கண்டேயபகவாந் எழுந்திருந்து சொன்னதாயிருக்கு மிஶ்ஶ்லோ கம். பின்பு சிராமப்பிள்ளையுடைய ஆபத்தசையிலே பட்டாருளிச செய்ததா யிருக்கும். (தந்தையுந் தாயுமாவார்) பரியத்துக்குக் கட வார், ஹிதத்துக்குக் கடவார்.

(எளியதோரருளுமன்றே என்திறத்து) என்விஷயத்தில் மலை யையெடுத்து ரக்ஷிக்கவேணுமோ, தம்மையொழிய வேறேயொரு ப்ரயோஜநத்தைக் கணிசித்தேனாய் அத்தைக்கொடுத்து விடுகிறே மென்றிருக்கிறாரோ, ஸ்ரீவிபீஷணாதிகள ரக்ஷணமபோலே வில் லும்கோலும் எடுத்து ரக்ஷிக்கவேணடித்தா னிருக்கிறாரோ, *குளி ர வொருகடாக்ஷம்கிடீர் என்விஷயத்தில் பண்ணவேண்டுவது. (எம்பிரானார்) எனக்கு உபகாரகரானவர். இன்றாகிற தசை யிலும் உபகாரகரொன்பாரெனனென்னில; செய்தவம்சத்தை இல் லைசெய்யுமவரல்லாமையாலே அத்தைமுன்னிடுகிறார். அடியிலே முறையையுணர்த்தி, அதுக்குமேலே ப்ராப்யப்ராபகங்கள்தாமே யென்னுமிடத்தை யுணர்த்தி, இப்போதும் நம்கூப்பீடுகேட்கவந்து ஸந்நிஹிதரா யிருக்கிற ஆகாரமுமுண்டிறே.

(அளியன்நம்பையலென்னார்) "அளி" என்று-தண்ணளி. இவன் நமக்கு நல்லன், நம்முடையபையலென்று ஒருவார்த்தையருளிச் செய்யக் கேட்க வாய்த்து இவராசைப்படுகிறது; ஆழ்வீரொன்று மது இவர்க்கு அஸஹ்யமாய்த்து.

---

"நாராயண:" என்கிற பொதுவிலன்றென்பது-பரத்வத்திலன்றெ ன்றபடி. அவதாரணத்துக்கு தாத்பர்யாந்தரம் (தம்மை யொழிய வித்யாதி.) இவ்வர்த்தத்துக்கு ப்ரமாணம் (ஸர்வேஷாம் - ஸர்வேஷாமி த்யாதி.) (௰எ)

சேஷபூதரான நாம் இவ்வர்த்தங்களை நினைத்திருக்கவமை யாதோ, அவன் சொல்லவேணுமோவென்னில்; அதுபோராது, சேஷியானவனும் இதுக்குமேலெழுத்திடுமென்றாய்த்து சேஷத்வம் நிலநின்றதாவது;-மணக்கால் நம்பிநம்மாணிதிருமகிழ்மாலைமார்வ னுக்குத்திறவென்றாரிறே. பிள்ளைப்பிள்ளையாழ்வான்தம்பி அப்பி ள்ளையாழ்வான்வாயாலே"மாணி" என்னப் பெற்றனென்றாரிறே; (அம்மலைகொடியவாறே)ஆர்த்தத்வநிகேட்டால்எழுந்திருக்கவேண் டாவோ. ஆர்த்தத்வநிகேட்டும்இவர்கண்ணுறங்குவதே!,இவர்திரு வுள்ளம்இங்ஙனேகொடிதாய்த்தாகாதே!அம்மே! இவர்ஸ்வபாவ மிருந்தபடியென்னென்கிறார். ... ... .... ... (௩௭)

அ.—முப்பத்தெட்டாம்பாட்டு. (மேம்பொருள்) மஹாபார தத்துக்குச் சரமச்லோகம்போலே யாய்த்து-இப்ப்ரபந்தத்துக்கிப் பாட்டு. மஹாபாரதமாகிறது - "మథిమన్థానమావిధ్య యేనాసౌ శ్రుతిసాగరాత్। జగద్ధితాయజనితో మహాభారతచన్ద్రమాః" "மதிமந்தாநமாவித்ய யேநா ஸௌஸ்ருதிஸாகராத்| ஜகத்திதாயஜநித: மஹாபாரதசந்த்ரமா:" என்கிறபடியே ச்ருதிஸாரமாய்த்து மஹாபாரதம். ஸர்வேச்வரன் க்ஷீராப்தியைக் கடைந்து தேவர்களுக்கு அமிர்தத்தைக் கொடுத் தான், ஸ்ரீவேதவ்யாஸபகவாந் ச்ருதியைக்கடைந்து ஸர்வாஹ்லாத கரமான மஹாபாரதத்தை ஸம்ஸாரிகளுக்கு ஆத்மோஜ்ஜீவந ஹேதுவாகக் கொடுத்தான். தேவர்களுக்கு ஈஸ்வரன்கொடுத்த அம்ர்தம் பந்தகம்; ஸ்ரீவேதவ்யாஸபகவாந் ஸம்ஸாரிகளுக்குக் கொடுத்த மஹாபாரதம ஸம்ஸார விமோசநமிறே; அம்மஹா பாரதந்தான் கோதென்னும்படியாய்த்து ஸ்ரீகீதை; அதில்ஸார மாய்த்துசரமச்லோகம். இதுசொல்லுகைக்காகக்கீழடங்கச்சொல் லிற்று; இதுக்குமேலே "ఇదంతేనాతపస్కాయ" "இதந்தேநாதபஸ்காய" என்று தொடங்கி இந்த சரமச்லோகத்தினுடைய கௌரவத்தைச் சொல்லுகிறது. அப்படியே இபபாட்ட வதாரிகைக்காகவாய்த்து இப்ப்ரபந்தமவதரித்தது; இதுக்குமேலே ப்ரபந்தசேஷமும் இப் பாட்டில் சொல்லுகிற வர்த்தத்தில் நிஷ்டராயிருப்பாருடைய ஏற் றஞ்சொல்லுகிறது. ஆக, மஹாபாரதஸாரம் சரமஸ்லோகமானாப் போலே இப்ப்ரபந்த ஸாரம் இப்பாட்டு. இதுதான் த்வயத்தினு டைய வர்த்தத்தைச் சொல்லுகிறது. த்வயத்தில் ப்ராபகம் முன் னாய் ப்ராப்யம் பின்னாயிருக்க, இதில் ப்ராப்யம் முன்னாய் ப்ராப கம் பின்னாயிருப்பானென்னென்னில்;வ்யுத்பத்திவேளையில் ப்ராப் யம் முன்னாய் ப்ராபகம் பின்னாயிருக்கக்கடவதிறே.

---

முப்பத்தெட்டாம்பாட்டு. (மேம்பொருளித்யாதி.) மஹாபா ரதத்துக்கு ஆத்மோஜ்ஜீவந ஹேதுத்வம் சரமச்லோகமுகேந என்றபடி. ப்ரபந்தஸாரம் என்றதுக்கு ஹேது(இதுதானித்யாதி.)

"ஸ்வர்க்ககாமோ ஜ்யோதிஷ்டோமேந யஜேத" "ஸ்வர்க்ககாமோ ஜ்யோதிஷ்டோமேயஜேத" என்றிறே வ்யுத்பத்திவேளையிலிருப்பது; அநுஷ்டாந வேளையிலேஜ்யோதிஷ்டோமாநுஷ்டாநபூர்வகமாகவிறேஸ்வர்க்க ஸித்தி, ப்ராபக நிஷ்டையாலேயிறேப்ராப்யஸித்தி; அப்படியேஇப் பாட்டிலேவ்யுத்பத்திவேளையாய்த்வயம்அநுஷ்டாநவேளையாயிருக் கிறது. அதில்பூர்வபாகத்தளவிலேஅநுஸந்தித்தார்நம்மாழ்வார்; உத்தரபாகத்தைஅநுஸந்தித்தாள்ஆண்டாள்; அவையிரண்டையும் சேரவநுஸந்தித்தார் இவ்வாழ்வாரேயாய்த்து. இப்பாட்டுக்குக்கீழ்ப் பாட்டோடேஸங்கதியென்னென்னில்; "அளியன்நம்பய்யல்என்ன அம்மவோகொடியவாறே" என்று கிலாய்த்து வார்த்தைசொன்ன வாறே, விஷயாந்தர ப்ராவண்யகரமான ஸம்ஸாரத்திலேவருத்தபுருஷார்த்தத்தையபேக்ஷிக்கையும, தத்ஸித்திக்கு நம்மைபார்த்திருக் கையும்அதுக்குமேலேவிளம்பம்பொறாதேகிலாய்க்கையும், ஆகவி வ்வளவு புகுரநிற்பாரைப் பெறுவோமே! என்றுபெரியபெருமாள் திருவுள்ளம்ப்ரஸந்நமாய், திருவுள்ளத்தில்ஹர்ஷமடங்கலும் திருமுகத்திலேதோற்றும்படியாயிருக்க; தேவரீரைக்கிட்டி தேவரீர்பக்கலிலேநயஸ்தபரராய்த் தந்தாமுடைய ஹிதத்தில் கைவாங்கியிருப் பாரைக்கண்டால் இங்ஙனேயோ தேவரீர்திருவுள்ளமிருப்பதென்று பெரியபெருமாள் திருமுகத்தைபபார்த்துவிண்ணப் பஞ்செய்கிறார். சரமஸ்லோகம்ப்ரபத்தியைவிதிக்கிறதாயிருக்கும்; அதில்ருசியுடையாருடைய அநுஸந்தாநமாயிருக்கும் த்வயம்; த்வயநிஷ்டர்பக்கல் ஈச்வரனுக்குண்டான வுகப்பைச் சொல்லுகிறது-இப்பாட்டு.

மேம்பொருள்போகவிட்டுமெய்ம்மையைமிகவுணர்ந்து
ஆம்பரிசறிந்துகொண்டுஐம்புலனகத்தடக்கிக்
காம்பறத்தலைசிரைத்துன்கடைத்தலையிருந்துவாழும்
சோம்பரையுகத்திபோலுஞ்சூழ்புனலரங்கத்தானே. (௩அ)

ப-ரை.—சூழ்புனல் - காவேரியால்சூழப்பட்ட, அரங்கத்தானே - கோயிலிலே கண்வளர்ந்தருளுமவனே; மேம்பொருள் - மேன்மையை விளைக்கக்கடவதான ப்ராக்ர்தபதார்த்தங்களை, போகவிட்டு - ஸவாஸநமாகப்போக்கி, மெய்

---

பூர்வபாகத்தளவிலே யென்றது - த்வயத்தில் பூர்வபாகத்தளவிலே யென்றபடி; "அகலகில்லேன்" என்கிறபாட்டிலே அநுஸந்தித்தாரென்றபடி. ஆண்டாளநுஸந்தித்த ."சிற்றஞ்சிறுகாலே" என்றபடி. த்வயார்த்தமான இப்பாட்டிலே - அதில் அநுக்தமான உகப்பைச்சொல்லுகிறதுக்குக் கருத்து - மேலில்பாட்டுகளிலே, த்வயநிஷ்டர்க்கு அல்லாதாரில் ஏற்றத்தைச்சொல்லுகையாலே, இப்பாட்டிலும் த்வயநிஷ்டருடைய ஏற்றத்துக்குடலாகச் சொல்லுகிறதென்று தாத்பர்யம் விவக்ஷித்தருளிச் செய்கிறார் (சரமச்லோகமித்யாதி.)

மையை மிகவுணர்ந்து - ஆத்மாவை உள்ளபடியறிந்து, அம்பரி அறிந்துகொண்டு-சேதநனுக்கு கைங்கர்யமே புருஷார்த்தமென்பதை யறிந்து, ஐம்புலன்-பஞ்சேந்த்ரியங்களையும், அகத்து அடக்கி - விஷயாந்தரங்களில் போகாமே தம்முள்ளே அடக்கி, காம்பு அற - உபாயாந்தரங்களில் தமக்குண்டான ஸம்பந்தமற, தலைசிறைத்து - தம்பக்கலுண்டான துரிதங்களைப்போக்கி, உன்தலைக்கடை - உன்திருவாசலிலே, இருந்து - ஸுப்ரதிஷ்டிதரா யிருந்து, வாழும்-வாழுமவராய், சோம்பரை - ஸ்வஹிதத்தில் சோம்பினவர்களை, உகத்தி போலும் - உகக்குமவனல்லையோ வென்கிறார். (௫-௮)

வ்யா.—(மேம்பொருள்) இதுக்கு மூன்றுபடிநிர்வாஹம். மேலெழுந்தபொருளென்றும், மேவினபொருளென்றும், மேம்பாட்டை விளைக்கும் பொருளென்றும். மேலெழுகையாவது – கர்மமடியாகவந்தேறியாய் பகவத்ஜ்ஞாநம் பிறந்தவாறே மறந்துபோமதாயிருக்கை; இத்தை யோக்யமென்று பார்த்து இழிந்தவனுக்கும் ஆபாதப்ரதீதியில் ஒன்றுபோலே தோற்றி,நிரூபித்தால்அநுபாவ்யமா யிருப்பதொன்று மன்றிக்கே யிருக்கையென்றுமாம்.மேவின பொருள் என்றது – "సత్యయా" "துரத்யயா" என்கிறபடியே சேதநனால் பிரிக்கவொண்ணாதபடியிருக்கை. "దేవోహంమనుష్యోహమ్" "தேவோஹம்மநுஷ்யோஹம்" என்று உடம்பைத் தானாக நினைத்திருக்கும்படியிறே இத்தோட்டைப் பொருந்தமிருப்பது; அத்தைச்சொல்லிற்றாகவுமாம். மேம்பாட்டை விளைக்கையாவது-தன்னைப்பற்றினாரைஸர்வஜ்ஞராகவபிமாநித்திருக்கும்படிபண்ணவற்றாகை. பொருள்என்று-பதார்த்தம்; அதாகிறது - தேஹம். இது தான் தேஹாநுபந்தியான ப்ராக்ர்தபதார்த்தங்களுக்கும் உபலக்ஷணம். (போகவிட்டு) வாஸநையோடே விட்டென்கை. சரீரிகளால் அவை துஷ்கரமாகையாலே ப்ரக்ர்தி ப்ராக்ர்தங்கள் அபுருஷார்த்தமென்கிற ஜ்ஞாநத்தையுடையனாகை; அல்லதுபுகுரவிட்டான்இவனாகிலிறே இவனால் போகவிடலாவது; "మమమాయాదురత్యయా" "மமமாயாதுரத்யயா" என்கிறபடியே ஈஶ்வரன் பந்தித்த பந்தத்தை இவனால் போக்கவொண்ணாதிறே. "అనాత్మన్యాత్మబుద్ధిర్యా" "அநாத்மந்யாத்மபுத்திர்யா" என்கிற ச்லோகத்தின்படியே - தேஹத்தில் ஆத்மபுத்தியையும், தேஹாநுபந்தியான ப்ராக்ர்தபதார்த்தங்களில் மமதாபுத்தியையும், தேஹாதிரிக்தமான ஆத்மாவில் ஸ்வதந்த்ரபுத்தியையும் தவிருகை. அளவுடையரான ஸநகாதிகளுக்கும் செய்யலாவது இவ்வளவே. இரண்டுமரம் கூடநின்றால் ஒன்றைவெட்ட நினைத்தவன் ஒருமரத்திலே கொத்திப் பெருங்காயத்தையிட அதுபட்டு நிற்குமாப்போலே, இப் ப்ரதிபத்திமாத்ரத்திலே யிதுவிடும். "மெய்ம்மையை மிகவுணர்ந்தாம் பரிசறிந்துகொண்டு" என்று மேலும் ஜ்ஞாநப்ரகரணமாகையாலே,"போகவிட்டு" என்று-ப்ரகரணபலத்தாலேஜ்ஞாநத்தைச்சொல்லிற்றாகக்கடவது.

(மெய்ம்மைமையமிகவுணர்ந்து) மெய்யென்கிறது-ஆத்மாவை. "மெய்" என்னை ஆத்மாவைக்காட்டுமோவென்னில்; "[illegible]" "ஸத்யஞ்சாந்ருதஞ்சஸத்யமபவத்" என்கிற ச்ருதிச்சாயையாலே யருளிச்செய்கிறார். ஸத்யசப்தம் அஸத்யவ்யாவ்ர்த்தியைச்சொல்லுகிறதன்று, ஆத்மஸ்வரூபத்தின் நித்யதையைச் சொல்லுகிறது. "மெய்ம்மை" என்றொரு முழுச்சொல்லாய், ப்ரத்யக்விஷயத்தைச்சொல்லுகிறது. "கைம்மை, பொய்ம்மை" என்னுமாப்போலே. ஆக "மெய்ம்மை" என்று-மெய்யானதன்மையென்றபடி. (மிகவுணர்ந்து) "தேஹமே ஆத்மா" என்றிருக்கும் லோகாயதிகனளவன்றிக்கே, "தேஹாதிரிக்தமாய் நித்யமாயிருக்குமாத்மா" என்னும்மீமாம்ஸகனளவன்றிக்கே, "ஜ்ஞாநமாகந்துகம்" எனனும்வைசேஷிகனளவன்றிக்கே, ஸ்வயம்ப்ரகாசமாய், நித்யமாய், ஜ்ஞாநகுணகமாய், அணுபரிமாணமாய், ஈஶ்வரனுக்கு அநந்யார்ஹசேஷமாய், அதுதான் ததியசேஷத்வபர்யந்தமாக வுணருகை. அதாவது-ஆத்மாவையுள்ளபடியுணருகை.

(ஆம்பரிசறிந்துகொண்டு) "ப்ரக்ருதிப்ராக்ர்தங்கள் த்யாஜ்யம்" என்றறிந்து.ஆத்மாவையுள்ளபடி யுணர்ந்தால் பின்னை, ஆம்பரிசாவது- கைங்கர்யமேயாய்த்து. ஆம்பரிசுவாதநிக்கும்படியையறிந்து. ஆத்மாபிமாநரூபமாகவாய்த்து வ்ருத்திஹேதுக்கள்தானிருப்பது. தன்னைத்திர்யக்காக வபிமாநித்தபோது த்ர்ணஸமூஹமாய்த்து வ்ர்த்திஹேதுவாகக்கடவது; "மநுஷ்யோஹம்" "மநுஷ்யோஹம்" என்றபிமாநித்தபோது அந்நம்வ்ர்த்தி ஹேதுவாகக்கடவது; "தேவோஹம்" "தேவோஹம்" எனறபோது அம்ர்தம் வ்ர்த்தி ஹேதுவாகக்கடவது; "தாஸோஹம்" "தாஸோஹம்" எனறபோது கைங்கர்யமே வ்ர்த்திஹேதுவாகக்கடவது. ப்ரக்ருதி பராக்ர்தங்களில் ஸங்கோசம் போய்ஸ்வரூபத்தையுள்ளபடியறிந்தாலஸஹஜ கைங்கர்யமேயிறே வ்ர்த்திஹேதுவாவது. (அறிந்துகொண்டு) "நிதியெடுத்துக்கொண்டு" என்னுமாப்போலே ப்ரக்ருதி ப்ராக்ர்தங்கள் த்யாஜ்யம் என்கிற ஜ்ஞாநமும் ஆத்மாபகவத்பாரதந்த்ரமென்கிற ஜ்ஞாநமும்ப்ராப்யம் கைங்கர்யம் என்கிற ஜ்ஞாநமுமிறே சேதநனுக்குவேண்டுவது; விடுவிக்கையும், பற்றுவிக்கையும், உபாயபூதனான வீஶ்வரன் க்ர்த்யமிறே."மேம்பொருள்,மெய்ம்மை,ஆம்பரிசு" என்கிறவிவை, அவ்வோ பதார்த்தங்களுக்கு வாசகமன்றிக்கேயிருக்க தத்தத்ஸ்வபாவ வாசியான ஶப்தங்களாலேமறைத்தருளிச்செய்கிறார் அர்த்த கௌரவத்தாலே.

---

"மெய்ம்மை" என்கிறதுக் கார்த்தாந்தரம் (ஆகவித்யாதி.) முழுச்சொலென்று முந்தினவர்த்தத்துக்கு த்ர்ஷ்டாந்தரம் (கைம்மையித்யாதி.) ("மெய்" என்று ப்ரத்யயவிசேஷத்தைச் சொல்லுகிறது) என்கிற வாக்யம் ஸந்திக்தம்.

(ஐம்புலனகத்தடக்கி) இந்த்ரியங்களைத் தன்னுள்ளேயாம்படி பண்ணி. அதாவது - தன்வசத்திலே யாம்படி பண்ணுகை. மேம் பொருள்போகவிட்டு'' என்கிற முதல்வார்த்தையிலேபோயிருக்க, "ஐம்புலனகத்தடக்கி'' என்கிறது - கீழ்ச்சொன்ன கைங்கர்யத்தி லே "ஸங்கம்'' "மமேதம்'' என்கிற புத்தியைத்தவிருகை. கைங்கர் யத்திலும் நியமிக்கவேண்டுவன சிலவுண்டு, அவற்றையாய்த்து இங் குச்சொல்லுகிறது. தனக்கினிதாகப்பண்ணும் கைங்கர்யமும் அபு ருஷார்த்தம்; தனக்கும் அவனுக்குமினிதாகப்பண்ணுங் கைங்கர்யமு ம் அபுருஷார்த்தம்; அவனுக்கே ப்ரயோஜநமாகப்பண்ணுமதுவே புருஷார்த்தம். "தனக்கேயாக வெனைக் கொள்ளுமீதே'' என்றும், "ரமமாணாவநேத்ரயः'' "ரமமாணுவநேத்ரயः'' என்றுஞ் சொல்லக் கடவதிறே. ஆக இவ்வளவால் உத்தரகண்டார்த்தமான ப்ராப்யம் சொல்லிற்றாய்விட்டது. "மேம்பொருள் போகவிட்டு'' என்றும், "ஐம்புலனகத்தடக்கி'' என்றும்—நமச்சப்தார்த்தம் சொல்லப்பட் டது. "மெய்ம்மையை மிகவுணர்ந்து''என்கிறவிது, நாராயணபதத் தில் நாரசப்தார்த்தம் சொல்லிற்றாய், அந்த சேஷத்வத்துக்கு ப்ரதி ஸம்பந்தியையொழிய ஸ்திதியில்லாமையாலே சேஷித்வம்ஆர்த்த மாகச்சொல்லிற்றாய், ஆக நாராயணசப்தார்த்தம் சொல்லிற்றாய் தது. "ஆம்பரிசறிந்துகொண்டு'' என்று - சதுர்த்தியி லர்த்தம் சொல்லிற்றாய்த்து. "உணர்ந்து'' என்றுகொண்டு - ஜ்ஞாத்ர்வபர மாகச்சொல்லுகையாலே ப்ரணவார்த்தம்சொல்லிற்றாய்த்து.

இப்பாட்டில்குறையும பூர்வார்த்தத்தில்சொல்லுகிற ப்ராபகத் தைச்சொல்லுகிறது (காம்பறத்தலைசிரைத்து) காம்பற்-உபாயாந் தரங்களில் தனக்குண்டான தொற்றற, தலைசினைத்து - தன்தலையி லுண்டான துரிதங்களைப்போக்கி. தன்தலையில்கிடக்கிற ஸாதநாந் தரங்களின் தொற்றையறுத்தென்றபடி. தலைமயிராகிறதுதான் அபி மாநஹேதுவிறே. கோமுற்றவர் தண்டிக்குமிடத்தில் தலையைச் சிரைக்கிறது அபிமாநத்தைப் போக்குகிறபடியாய்த்து. ஏகாங்கியா யும் ஸந்யாஸியாயும் வபநம்பண்ணுகிறது தன்னபிமாநத்தைத்தா னேபோக்குகிறபடி. தண்டமுகத்தாலே பிறரபிமாநத்தைப்போக்கு வதும்இம்முகத்தாலே; ஸ்வாபிமாநத்தைப் போக்குவதும் இம்முகத் தாலேயிறே. ஆக அஹங்காரகர்ப்பமான வுபாயாந்தர பரித்யாகத் தைச்சொன்னபடி. உபாயாந்தர பரித்யாக பூர்வகமாக விறேவித் தோபாய பரிக்ரஹமிருப்பது. "காம்பறத்தலைசிரைத்து'' என் றவிதுவும் அர்த்த கௌரவத்தாலே மறைத்தருளிச் செய்கிறார்.

---

(கோமுற்றவரித்யாதி)விவரணம் (தண்டமுகத்தாலேயித்யாதி.)

இவரோ யன்று, அர்த்த கௌரவத்தாலே ச்ருதியும் "ஜ்யோதிஷா" "த்வாஸுபர்ணா" இத்யாதிகளாலே அர்த்தங்களை மறைத்துச்சொல்லும்; அந்தச்ருதிச்சாயையாலே யருளிச்செய்கிறார். (உன்கடைத் தலையிருந்து) உன்தலைக்கடையென்றபடி. "ஶரணம்" "சரணௌ" என்கிற ஸ்தானத்திலே "கடைத்தலை" என்கிறார். ஸ்வநிகர்ஷத்தை யநுஸந்தித்துத் திருவடிகளிலே கிட்டமாட்டாமையாலும், ஸம்ஸாரத்தின்தண்மையை யநுஸந்தித்துப் புறம்புபோகமாட்டாமையாலும், திருவாசலைப் பற்றுகிறார். திருக்கண்ணமங்கையாண்டான், ஒரு ஸம்ஸாரி, தன்வாசலைப்பற்றிக்கிடந்ததொரு நாயை நலிந்த வனைவெட்டித் தானும்குத்திக் கொண்டபடியைக்கண்டு, "ஒரு தேஹாத்மாபிமாநியளவிதுவானால் பரமசேதநன் யமாதிகள் கையில் நம்மைவிட்டுக்கொடான்" என்று திருவாசலைப்பற்றிக்கிடந்தானிறே. (இருந்து) விஷயாந்தர ப்ராவண்யத்தாலே பரகுபரகென்று திரிந்தவன், மரக்கலத்துக்கு நங்கூரம்விழவிட்டாப்போலே "அத ஸோऽபயம் கதோ பவதி" "அதஸோ பயங்கதோபவதி" என்று-அபயஸ்தானத்தைப்பற்றி நிர்ப்பயனாயிருந்தபடி. (வாழும்) உபாயம் ஈஶ்வரனேயானால் போகமிறே பின்புள்ளது. "இருந்துவாழும்" என்று-அவ்விருப்புத்தானே வாழ்ச்சியானவிருப்பு என்றுமாம். (சோம்பரையுகத்திபோலும்) உன்பக்கலிலேந்யஸ்தபரராய் ஸ்வஹிதத்தில் சோம்பினவர்களைக்கண்டால் உனக்குத் திருவுள்ள மிங்ஙனே உகந்தாகாதே யிருப்பது. "வாழுஞ்சோம்பர்" என்று - கெடுஞ்சோம்பரை வ்யாவர்த்திக்கிறதென்றுமாம். அதாகிறது-சாஸ்த்ரத்தில் நாஸ்திகராய் கர்த்தவ்யங்களை விடுகையன்றிக்கே ஆஸ்திக்யாதிரேகத்தாலே நிரபேக்ஷோபாயத்தை ஸ்வீகரித்து பகவதநுபவமே யாத்ரையாய் ஸ்வஹிதத்தில் சோம்பியிருக்கைபோலும். நித்யஸூரிகளை யுகக்குமாப்போலே சோம்பரையுகப்புதி. (சூழ்புனலரங்கத்தானே) இது நீரறிந்தபடியெங்ஙனே யென்னில்; கோயிலிலே வந்து கண்வளர்ந்தருளுகிறதுதானேயறிவிக்கிறதில்லையோ. நீர்வாய்ப்பையும், நிழல்வாய்ப்பையும்பற்றக்கண்வளர்ந்தருளுகிறானொன்றுபோராய், "ஒரு சோம்பரைக்கிடைக்குமோ" என்னும்நசையாலேயிறே தேவரீர் சோம்பாதே கண்வளர்ந்தருளுகிறது. "காம்பறத் தலைசிரைத்து" என்றவிடம்-உபாயஸ்வீகாரத்துக்கங்கமான உபாயாந்தரபரித்யாகத்தைச்சொல்லுகிறது. "சூழ்புனலரங்கத்தானே-உன்கடைத்தலை" என்று நாராயணசப்தார்த்தமான ஶீலாதிகளை நினைக்கிறது.

---

அர்த்தகௌரவத்தாலே மறைத்தமாத்ரத்துக்கு த்ர்ஷ்டாந்தம் (ஜ்யோதிஷா-த்வாஸுபர்ணேத்யாதி.) நங்கூரம்-இருப்புத்தடி.

பிராட்டி ஸ்வரூபநிரூபகதர்மமாகையாலும், நாராயண சப்தத்திலே அந்தர்ப்பூதையாகையாலும், "உன்" என்கிறவிடத்திலே லக்ஷ்மீஸம்பந்தம் அநுஸந்தேயம். "கடைத்தலை" என்றது-"ஶரண" "சரணௌ" என்றபடி. "இருந்துவாழும்" என்ற க்ரியா பதத்தில்-உபாயாத்யவஸாயத்தையும், அதுதானே போகரூபமாயிருக்கிறபடியையும் சொல்லிற்று. "சோம்பரை" என்று-"ப்ரபத்யே" "ப்ரபத்யே" என்கிற உத்தமனாலே-ஆக்ஷிப்தனான வதிகாரியைச் சொல்லுகிறது ... ... ... ... (௩௮)

அ.—முப்பத்தொன்பதாம்பாட்டு. (அடிமையில்) மேல் ஆறு பாட்டும்-இநத ஜ்ஞாநமுடையாருடைய ராஜகுலம் சொல்லுகிறது. இவருடைய * பயிலுஞ்சுடரொளி * நெடுமாற்கடிமை யிருக்கிறபடி. ஜந்ம வ்ருத்த ஸ்வபாவங்களால் குறைய நின்றார்களே யாகிலும் அவர்கள் இந்த ஜ்ஞாநமுடையார்களாகில் உத்தேஶ்ய ரென்கிறார். இப்பாட்டால் - எத்தனையேனும் தண்ணிய ஜந்மங்களிலே பிறந்தார்களேயாகிலும் இந்தஜ்ஞாநத்திலே நிஷ்டையுடையார்களாகில் திருத்துழாயோபாதி ஈச்வரனுக்கு சிரஸாவஹிக்கப்படுவரென்கிறார்.

அடிமையிற்குடிமையில்லாவயல்சதுப்பேதிமாரில்
குடிமையிற்கடைமைபட்டகுக்கரில்பிறப்பரோலும்
முடியினில்துளபம்வைத்தாயமொய்கழற்கன்புசெய்யும்
அடியரையுகத்திபோலுமரங்கமாநகருளானே. (௩௯)

ப-ரா.— துளபம்-திருத்துழாய்மாலையை, முடியினில்வைத்தாய்-திருவபிஷேகத்திலே சாத்தியருளி, அரங்கமாநகருளானே - கோயிலிலே கண்வளர்ந்தருளுமவனே; அடிமையில் குடிமையில்லா - ஸர்வேச்வரனான வுனக்கு அடிமைசெய்கையே புருஷார்த்தமென்று நினையாதவர்களாய், அயல் - அதுக்கசலாக, சதுப்பேதிமாரில் - ரிக்யஜுஸ்ஸாமாதர்வணமாகிற நான்குவேதங்களை அத்யயநம்பண்ணினவர்களைக் காட்டிலும், குடிமையில் கடைமைபட்ட - அடிமைசெய்யப்ராப்தியுடையராய், குக்கரில் பிறப்பரேலும் - பஞ்சமஜாதியிலும் தாழ்ந்த குலத்திலே பிறந்தவர்களேயாகிலும், மொய் - நெருங்கின, கழற்கு - உன்திருவடிகளிலே, அன்புசெய்யும் - அந்தரங்கவாத்திபண்ணுகிற, அடியரை - தாஸபூதரை, உகத்தி - உகக்குமவனென்றோ நீயென்கிறார். (௩௯)

வ்யா.—(அடிமையில் குடிமையில்லா) கைங்கர்யம் நமக்குக் கர்த்தவ்யம் என்றிருக்குமவர்களன்றிக்கேயிருக்கை.

---

நாராயணசப்தத்திலே அந்தர்ப்பூதமென்றது-நாரசப்தத்திலேஅந்தர்ப்பூதமென்றபடி. ... ... ... ... (௩-அ)

கைங்கர்யமாகிறது-ஸஹஜம்; அதொழியச்செல்வாதிருக்கையாய்த்து ப்ராப்தம்; அதின்றிக்கேயிருக்குமவர்கள். (அயல்சதுப்பேதிமாரில்) அதுமைக்கசலாண சதுர்வேதிகளாயிருப்பாரில்காட்டில். வேதாத்யயநம் பண்ணுகிறதுக்குப்ரயோஜநம ஈச்வரனையுள்ளபடியறிகையும், கைங்கர்யமஸ்வரூபாநுரூபமானபுருஷார்த்தமென்றறிகையுமாய்த்து. அயலாகையாவது-இந்த ஜ்ஞாநத்துக்குடலாகவேதாத்யயநம்பண்ணுகிறோமென்றுஅறியாதிருக்கை. அத்யயநபலம் அர்த்தஜ்ஞாநமென்றறியாதவர்கள். சதுர்வேதிகளானாலும்நிஷ்ப்ரயோஜநமென்கை. "விஷ்ணுபக்திவிஹீநோயஸ்ஸர்வஶாஸ்த்ரார்த்தவேதயபி। ப்ராஹ்மண்யம்தஸ்யநபலம்..." "விஷ்ணுபக்திவிஹீநோயஸ்ஸர்வஶாஸ்த்ரார்த்தவேத்யபி। ப்ராஹ்மண்யம்தஸ்யநபலேவத்தஸ்யோதபத்திர்நிரூப்யதாம்" என்னக்கடவதிறே. "யதிபுத்ராதிபிதரம..." "யதிபுத்ராதிபிதரமத்வேஷ்டி" இத்யாதி. இனி இவர்களில்காட்டில் ஈச்வரனுக்கு உதக்ர்ஷடரைச்சொல்லுகிறதுமேல் (குடிமையில்கடைமைபட்டகுக்கரில்பிறப்பரோலும்) வேதவிஹிதங்களை யநுஷ்டியாதும், நிஷித்தங்களை யநுஷ்டித்தும் போருகையாலே நிஹீநஜந்மங்களிலே பிறந்தவர்களேயாகிலும், குக்கராகிறார்-சண்டாளரிலும தண்ணியர்சிலர். "பிறப்பரோலும" என்கிறது - பகவத்ஜ்ஞாநத்துக்கு ஜந்மங்களுடைய உத்கர்ஷாபகர்ஷங்களில் நியதியில்லை, "ஸர்வத்ரகலுதர்ஶ்யதே" "ஸர்வத்ரகலுதர்ஶ்யதே" என்கிறபடியே - இந்தஜ்ஞாநம எல்லா ஜந்மங்களிலும் ஸம்பவிக்குமென்கை; - வேதோபப்ர்ஹ்மணார்த்தமாக வவதரித்த ஸ்ரீராமாயணத்திலே, காட்டிலேதிரிவார் சிலவேடரையும, வேடுவிச்சிகளையும், குரங்குகளையும், ராக்ஷஸரையும், மஹாபாரதத்தில், விதுரதர்மவ்யாதாதிகளையும, பிசாசங்களையும், இடையரையும், இடைச்சிகளையும், கண்டோமிறே. "பாம்பணைமேல் பள்ளிகொண்டருளும் சீதனையே தொழுவார் விண்ணுளாரிலும் சீரியரே" என்கிறபடியே -

முப்பத்தொன்பதாம்பாட்டு. (அடிமையிதயாதி) "குடிமையில்லா" என்றவிடத்தில், குடிமையாகிறது - ப்ராப்தி; குடிமையில் கடைமைபட்டவர்கள் – அடிமையில் ப்ராப்தியுடையவர்கள், குக்கரில் பிறப்பரோலு மென்றபடி. ஜ்ஞாநமுண்டானதுகொண்டு இவர்கள் ஜந்மத்தில் தண்மைபாராதே இவர் உத்தேச்யரென்று இபபாட்டிலே சொல்லுகைக்கு ஹேதுவேதென்ன; அருளிச்செய்கிறார் (பாம்பணைமேலித்யாதி.) ... ... (௩௯)

நித்யஸூரிகளில்காட்டில்இங்கேவந்து ஈச்வரன் ஆச்ரிதவர்களாகையாலே இவர்கள் சீரியரென்னகை. அல்லாதபொன்னிற் காட்டில் வேதகப்பொன்னுக்கு ஏற்றமுண்டிறே. (முடியினில் துளபம்வைத்தாய்) திருத்துழாயோபாதி சிரஸாவஹிக்குமவர்களென்கை. திருத்துழாய்மாலை ஸர்வேஶ்வரத்வத்துக்கு ஸூசகமானாப்போலே இவர்களாலே உன்னுடைய ஸர்வேச்வரத்வம் நிறம்பெறுமென்னவுமாம். (மொய்கழற்கன்புசெய்யும்) "ஐம்புலனகத்தடக்கி" என்கிறபடியே உன்னுகப்புக்குப் புறம்பானவற்றைப் பொகட்டு, "உன்செவ்வடி செவ்விதிருக்காப்பு" என்றுதிருவடிகளுக்குப் பரியுமதுவேயாத்ரையாய்; அத்தையேப்ராப்யமாகநினைத்திருக்குமவர்கள்.(அடியரை)கீழ்-உபேயத்தைச்சொல்லிற்று, இத்தால்-உபாயத்தைச் சொல்லுகிறது. "சோம்பர்" என்கிறபடியேஸ்வரூபத்தைஉள்ளபடி யுணர்ந்து ஸ்வரக்ஷணத்தி லந்வயமின்றிக்கே யிருக்குமவர்கள். (அடியா) அடியிலுள்ளாருகப்பதும் திருவடிகளேயாய், தாரகமும் திருவடிகளேயாயிருக்கை. "நிழலுமடிதாறுமானோம்" என்னக்கடவதிறே. (உகத்திபோலும்) இப்படி யிருக்குமவர்களை யுகத்தி. இதுக்குப் புறம்பான சதுர்வேதிகளைக்காட்டில் இவர்களையேயிறே தேவரீருகந்திருப்பது. (அரங்கமாநகருளானே) நிஹீநஜந்மாக்களாய உனக்கு நல்லரா யிருப்பார்க்கு முகங்கொடுக்கைக்காகவன்றோ, இங்குவந்து கண்வளர்ந்தருளுகிறது; உத்க்ர்ஷ்டர்க்கு முகங்கொடுக்குமிடத்தில் பரமபதத்திலே யிருக்கவமையாதோ. ... ... ... ... (நகூ)

அ.—நாற்பதாம்பாட்டு.—(திருமறுமார்வ) ஜந்மத்தால் வந்த தண்மையன்றிக்கே எத்தனையேனும தண்ணிய வ்ர்த்தமுடையாரும்,மேம்பொருளில சொன்ன ஜ்ஞாநத்திலே நிஷ்டராகில்அவர்களுக்குஅந்தகர்மபலம் அநுபவிக்கவேண்டாவென்கிறார்.

திருமறுமார்வநின்னைசசிந்தையுளதிகழவைத்து
மருவியமநத்தராகில்மாநிலத்துயிர்களெல்லாம்
வெருவுறககொன்றுசுட்டிட்டீட்டியவினையரேலும்
அருவினைப்பயனதுய்யாரரங்கமாநகருளானே. (ச0)

ப-ரை.—திரு - பெரியபிராட்டியாரையும், மறு - ஸ்ரீவத்ஸம் என்கிற மறுவையும், மார்வ - திருமார்விலே யுடையவனே, அரங்கமாநகருளானே - கோயிலிலே கண்வளர்ந்தருளுமவனே; மாநிலத்துயிர்களெல்லாம - இந்த மஹாப்ர்திவியிலுள்ளவர்களெல்லாரும், வெருவுற-ஜகத்தடைய நடுங்கும்படி, கொன்று-கொன்றும், சுட்டிட்டு-சுட்டும், இவ்வகைகளாலே, ஈட்டிய-ஸம்பாதித்த, வினையரேலும் - பாதகங்களை யுடையரேயானாலும், நின்னை-ச்ரியஃபதியானவுன்னை, சிந்தையுள் - தங்கள் நெஞ்சிலே, திகழவைத்து - விளங்கும்படிவைத்து, மருவியமநத்தராகில்-த்ர்டாத்யவஸாயத்தை யுடையரா யிருப்பரேயானால், அவர்

கள், அருவினைப்பயனதுய்யார் - மஹாபாதகங்களுடைய பலத்தை, அநுபவிக்கமாட்டார்களென்கிறார். (சுo)

*வ்யா.—(திருமறுமார்வ) திருவையும், மறுவையும்,மார்விலே யுடையவனே. ச்ரியபதியான ஸர்வேச்வரனே. "ஸ்ரீவத்ஸவக்ஷா:" "ஸ்ரீவத்ஸவக்ஷா:" என்கிறவிது ஸர்வேஶ்வரத்வ சிஹ்நமிறே. பிராட்டி திருமார்பிலே யெழுந்தருளியிருக்கிற விருப்பை யநுஸந்திக்கிறார்; அதுதான் வாத்ஸல்யம் தோற்றுகைக்காக. "அலர்மேல்மங்கையுறைமார்பா". என்றும், "நின்வலமார்பினில் வாழ்கின்ற மங்கையும்" என்றுமிறே இவர்கள்வார்த்தை யிருப்பது. இதுதான் *மேம்பொருளில் மறைத்த லக்ஷ்மீ ஸம்பந்தத்தை,அதில் நிஷ்டையுடையவர்களுடைய வைபவம் சொல்லுகிறவிடத்தில் வெளியிடுகிறார். உபாயோபேயங்களிரண்டுக்கும் அவன்ஸம்பந்தமே வேணுமென்னு மிடந்தோற்றுகிறது. (நின்னைச் சிந்தையுள் திகழவைத்து) ச்ரியபதியானவுன்னை உபாயாந்தரங்கள்கலசாமே நெஞ்சிலே விளங்கும்படியாக அத்யவஸித்து. ஸமிதைபாதி ஸாவித்ரிபாதியாக இவன்தலையிலும் சிறிது ஸஹாயமுண்டாகில் அவனுடைய வுபாயபாவம் திகழாதே மழுங்குமென்கை. ரக்ஷிப்பிக்கைக்குப் பிராட்டியும், ரக்ஷிக்கைக்கு ஈச்வரனும,இப்படியறிந்து துணிகைக்குத் தானும், அறிவிக்கைக்கு ஆசார்யனுமொழியவேறொன்றும் வேண்டாதிருக்கை. "வைத்து" என்று-இம்மிதுநத்தினுடைய பவ்யதையைச் சொல்லிற்றாகவுமாம்.

---

நாற்புதாம்பாட்டு. (திருமறுஇத்யாதி) ஸர்வேசவரத்வசிஹ்நமிறே யென்றது - "மருவிய" என்றுசொல்லுகிற ப்ராப்யத்வோபயோகித்வேந.வாத்ஸல்யம தோற்றுகைக்காக வென்றது – "பயனதுய்யார்" என்றதுக்கு உபயோகித்வேந. அன்றிக்கே, "சிந்தையுள் திகழவைத்து மருவியமநத்தராகில்" என்று சொல்லுகிற உபாயோபேய யோகித்வேந சொல்லுகிறதென்று தாத்பர்யாந்தரம் விவக்ஷித்து, அதுக்கு ப்ரமாணம்(அலர்மேல்மங்கையித்யாதி.) "திகழ" என்றதுக்கு - ஸ்வகதஸ்வீகாரம் கலசாமையாலுண்டான ஔஜ்வல்யத்தைச் சொல்லுகிறதென்று தாத்பர்யாந்தரம் (ஸமிதைபாதியித்யாதி.) ஆனால் பிராட்டியை புருஷகாரமாக முன்னிடுகைக்கு முதலாயுள்ளவையுண்டே, அவை நைரபேக்ஷ்ய பஞ்ஜகமன்றோ வென்ன; அருளிச்செய்கிறார் (ரக்ஷிப்பிக்கைக்கித்யாதி.) "ரக்ஷிக்கைக்கு ஈச்வரனும்" என்கிற வாக்யத்துக்கு ப்ரயோஜநம் சிந்த்யம்.

(மருவியமனத்தராகில்) இவ்வம்சம் உபேயாத்யவஸாயத்தைச் சொல்லுகிறது. ப்ரயோஜநாந்தரங்களைவிட்டு ச்ரிய:பதியே பரமப்ரயோஜநமென்று அத்யவஸித்திருப்பராகில். "ஆகில்" என்றவிது-ப்ராபகவிஷயமாகவுமாம், ப்ராப்ய விஷயமாகவுமாம், இத்துணிவு ஒருசேதநனுக்குக் கிட்டுவதொன்றன்றென்னுமிடம் தோற்றுகைக்காக.

(மாநிலத்துயிர்களெல்லாம்வெருவுறக்கொன்று) ஒருஜந்துவை ஹிம்ஸிக்கும்போது ஜகத்தடைய நடுங்கும்படியாகவாய்த்து நலிவது. இத்தால் - இவனுக்கு ஹிம்ஸையினுடைய ருசிசொன்னபடி. (சுட்டிட்டு) சஸ்த்ராதிகளால் நலியுமளவன்றிக்கே ப்ராணனோடே தக்த்தமாக்கி. (ஈட்டியவினையரேனும்) இம்மஹாபாதகங்களை, புருஷார்த்தருசியுடையார் அவ்வோ புருஷார்த்தங்களை ஆதரிக்குமாப்போலேயாய்த்து இவன இவற்றையேறிட்டுக்கொள்ளுவது. ஜ்ஞாநம பிறநதவனுக்கு இது ஸம்பவியாமையாலே பூர்வவ்ருத்தத்தைச் சொல்லுகிறது. (ஏனும்) "జన్మాన్తరసహస్రేషు" "ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு" "బహూనాంజన్మనామన్తే" "பஹூநாம்ஜந்மநாமந்தே" "అనేకజన్మసంసిద్ధాః" "அநேகஜந்மஸம்ஸித்தா:" என்கையாலே இவனால் இதுககுமுன்பு செய்யக்கூடாது, கூடிற்றேயாகிலும். (அருவினைப்பயனதுயயார்) தாங்கள்தேடிஜீவிக்கப்பெறுர்கள். கடனுக்குத் தொடுத்தவம்பை மருகாந்தாரத்திலே விட்டாப்போலே அசல்பிளந்தேறிடுமத்தனை. "ద్విషన్తః పాపకృత్యామ్" "த்விஷந்தஃ பாபகாத்யாம்" என்னக்கடவதிறே. அங்ஙனன்றிக்கே, கர்ணன் விட்ட ஸர்ப்பசிரஸ்ஸைப்போலே கீசகத்தோடே போக்குமென்னுதல்; அங்ஙனன்றியே பகதத்தன்விட்ட சக்தியைமார்பிலேஏற்றாப்போலே தான்அநுபவித்தல், பொறுத்தேனென்னுதல் செய்யுமத்தனை. அவன "సర్వపాపేభ్యో మోక్షయిష్యామి" "ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்றுநிற்க இவர்களுக்கு அநுபவிக்க விரகுண்டோ. (அரங்கமாநகருளானே) இவையெல்லாம் அவதாரஸமயங்களிலேயன்றோ வென்னவொண்ணுதபடி அவதாரத்தில் பிற்பாடர்க்காகவன்றோ கோயிலிலேவந்து கண்வளர்ந்தருளுகிறது.

---

கீசகம - தலைக்கட்டு. "தான் அநுபவித்தல்" என்றதின் விவரணம் (பொறுத்தேனென்னுதலென்று.) இதுககு நியாமகம்- "அசுரர்க்குத் தீமைகள்செய் குந்தா' என்றவிடத்தில், அவன் மார்விலேற்கையாவது பொறுத்தேனென்னத் தீருமத்தனையிறே" என்று ஈட்டின்வாக்யம்.

இதுதான் ஈச்வராஜ்ஞைசப்பட்டே போமத்தனையொழிய இவ்வதிகாரிகளுக்கிது ஸம்பவியாது. ப்ராமாதிகமான புண்யத்தையும் பாதகமென்றிருக்கிறவர்கள் பாபத்திலே யிழிவார்களோ, மார்பிலேயிருக்கிற "தோஷ்யஸ்யாபராதா" "நகஸ்சிந்நாபராத்யதி" என்னுமவள்தானே குறைசொன்னாலும் "செய்தாரேல் நன்றுசெய்தார்" என்னுமவனுமென்னபாபங்களிலே யிழிவர்களோ. வாய்கரையர் நினைக்கவும் நிலமன்றென்கை. ... ... (௪௦)

அ.—நாற்பத்தோராம்பாட்டு. (வானுளார்) இவர்களுக்கு ஜந்ம வ்ருத்தங்களால் வரும் குறையில்லாமையேயன்று, தங்களோடுஸம்பந்தித்த ஸம்ஸாரிகளுக்கும் தங்களங்கீகாரத்தாலே பரிசுத்தராம்படியான வுத்கர்ஷத்தை யுடையவர்களென்கிறார்.

வானுளாரறியலாகாவானவாவென்பராகில்
தேனுலாந்துளபமாலைச்சென்னியாவென்பராகில
ஊனமாயினகள்செய்யுமூனகாரகர்களேனும்
போனகஞ்செய்தசேடந்தருவரேல்புனிதமன்றே. (௪௧)

ப-ரை.—ஊனமாயினகள் செய்யும் - தாங்கள் பிறரைக் கொல்லுவதன்றிக்கே, ஊனகாரகர்களேனும் - பிறரை யிம்ஸித்து ஜீவிப்பவர்களாயிருந்தார்களேயாகிலும்; வானுளார் - உபரிதநலோகங்களிலுள்ள ப்ரஹ்மாதிகளாலே, அறியலாகா - இப்படிப்பட்டதென்று பகுத்தறியவொண்ணாத, வானவா - பரமபதத்திலே நித்யவாஸம் பண்ணுமவனே, என்பராகில் - என்று சொல்லுவாராய், தேனஉலாம் - மதுஸ்ராவியாநின்றுள்ள, துளபமாலை - திருத்துழாய் மாலையை, சென்னியா - திருமுடியிலே யுடையவனே, என்பராகில் - என்று சொல்லுவார்களேயானால், போனகம்செய்த சேடம்-அவர்கள் அமுதுசெய்து மிகுந்தப்ரஸாதம், தருவரேல் - க்ருபைசெய்து கொடுப்பார்களேயாகில், அன்றே - அப்போதே, புனிதம் - பரிசுத்தராவர்கள். (௪௧)

வ்யா.— (வானுளாரறியலாகாவானவா) ப்ரஹ்மாதிகளால் துர்ஜ்ஞேயமானபரமபதத்தேநித்யவாஸம்பண்ணுமவனே. "ஆகா" வென்கிறது-சண்டாளன் அக்நிஹோத்ரத்திலே புகுதலாகாதென்னுமாப்போலே நிஷேதத்தைச்சொல்லிற்றாகவுமாம். பறணிலே யுயரவிருந்தானென்று பரமபதநிலயனை அறியலாமோ; மநுஷ்யர்களில் காட்டில் வ்யாவ்ருத்தியுண்டென்று அதுகொண்டங்கே செல்லலாமோ.

---

"ஈட்டியவினையர்" என்றதுக்குபூர்வாக விஷயமாக வருளிச்செய்ததன்றிக்கே உத்தராகத்தைச்சொல்லுகிறதாக்கி, "ஏனும்" என்றதுக்கு தாத்பர்யம் (இதுதானித்யாதி.) வாய்கரையர்-மேலெழுந்தஜ்ஞாநத்தையுடையவர்கள். ... ... ... (௪௦)

நாற்பத்தோராம்பாட்டு. (வானுளாரித்யாதி.) மூர்த்தினவர்த்தத்திலே நோக்கு "பறணிலே" இத்யாதி வாக்யம்;

"ஆகிஞ்சந:" "அகிஞ்சந:" "அநந்யகதி:" "அநந்யகதி:" என்றிருப்பாரறியுமத்தை, "ஈஶ்வரோஹம்" "ஈஶ்வரோஹம்" என்றிருப்பார்க்கறியலாமோ. "ஆசற்றார் தங்கட் கல்லாலறியலா வானுமல்லன்" என்னக்கடவதிறே. நீஞ்சவல்லவனோடு நீஞ்சமாட்டாதவனோடுவாசியறக் கடலைநீஞ்சவொண்ணாதாப்போலே, சக்தனோடு அசக்தனோடு வாசியின்றிக்கே அஸாத்யமாயாய்த்து பகவத்விஷயமிருப்பது. "அநந்யஸாத்யே" "அநந்யஸாத்யே" என்னக்கடவதிறே. அஸ்ப்ர்ஷ்ட ஸம்ஸாரகந்தனாய் சுத்தஸத்வமயமான விக்ரஹத்தை யுடையனாயிருக்கிறவனுடையபெருமையைப் பார்த்தாலும் அவனே யுபாயமாகவேணும; குணத்ரயவச்யனானவிவன்சிறுமையைப்பார்த்தாலும் அவனே யுபாயமாகவேணும்; ஸ்வரக்ஷணத்தில் ப்ராப்தியில்லாத ஸ்வரூபத்தை யநுஸந்தித்தாலும் அவனேயுபாயமாகவேணும். (என்பராகில்) "மநஸ்பூர்வோ வாகுத்தர:" "மநஸ்பூர்வோ வாகுத்தர:" என்கிறபடியே உள்வாயிலநுஸந்தாநம் வழிந்து சொல்லும்சொல்லையுடையராகை. இத்தால்-"ப்ரார்த்தநாமதிஶ்ஶரணாகதி:" "ப்ரார்த்தநாமதிஶ்ஶரணாகதி:" என்கிறபடியே உபாய ப்ரார்த்தநையைச்சொல்லுகிறது. (ஆகில்) ஸ்வஸாமர்த்யத்தை விடுகையாலுள்ளவருமைசொல்லுகிறது.(தேனுலாந் துளபமாலைச் சென்னியா) கீழ்-உபாயாமசம் சொல்லிற்றாய், இங்கு – உபேயாம்சத்தைச் சொல்லுகிறது. மதுப்ரசுரமான திருத்துழாய்மாலையாலே அலங்க்ருதமான திருமுடியையுடையவனே. ஸர்வாதிகனாய் நிரதிசயபோக்யனாய் அதஏவபரமப்ராப்யனென்னை. (என்பராகில்) இத்தாலும் ப்ராப்யப்ரார்த்தநையைச்சொல்லுகிறது.(ஆகில்)ப்ரயோஜநாந்தரங்களைவிட்டுஇவனையேபரமப்ரயோஜநமென்று நினைக்கையிலுள்ள வருமைசொல்லுகிறது. "ஸமஹாத்மா ஸுதுர்லப:" "ஸமஹாத்மா ஸுதுர்லப:" என்னக்கடவதிறே.

(ஊனமாயினகள்செய்யும்) வயிறு வளர்க்கைக்காக பரஹிம்ஸை பண்ணுமவர்கள், மத்யராத்ரியிலே மாம்ஸார்த்திகளாய் வருவாருண்டாகில் ஹிம்ஸ்யபதார்த்தத்தைப்ராணன்போகாமல் பந்தித்துமாம்ஸத்தை யறுத்துக்கொடுக்குமவர்கள. ஆர்த்ரசம்ஸ்யப்ரதானர் பிறர்க்காகத தங்களுடைய மாம்ஸத்தை யறுத்துக் கொடுப்பர்கள்; அதுக்கெதிர்த்தட்டு இது. (ஊனகாரகர்கள்) தாங்கள் கொல்லுமளவன்றிக்கே பிறரை யிடுவித்துக் கொன்று விக்குமவர்கள்.

---

இரண்டாமர்த்ததுக்குச் சேர, (அகிஞ்சநோநந்யகதி: - அகிஞ்சநோநந்யகதீத்யாதி) "பறணிலே" இத்யாதி வாக்யத்தை ஸதர்ஷ்டாந்தமாகவிவரிக்கிறார் (நீஞ்சவல்லவனோடித்யாதி.)அநந்யஸாத்யமல்லாமைக்குஹேதுவேதென்ன; அருளிச்செய்கிறார் (அஸ்ப்ர்ஷ்டேத்யாதி.)

ஜ்ஞாநம்பிறப்பதற்குமுன்புத்தைவர்த்தனும்சொல்லுகிறது.(ஏனும) முன்புசெய்திலும் இந்த ஜ்ஞாநம் பிறந்தபின்பு ஸம்பவியாது; பிறருடைய ஆர்த்திகாணில் மோஹிக்கில் மோஹிக்குமத்தனை.ஸர்ப்பாஸ்யத்திலே யகப்பட்ட மண்டூகத்தினுடைய ஆர்த்தியைக்கேட்டு இது ஆரறிந்து விடுவிக்கக் கூப்பிடுகிறதென்று ஆழ்வான் மோஹித்தான்; இப்படிப்பட்ட விவன் பரஹிம்ஸையிலே இழிந்தானகில் ஈஶ்வரன் பண்ணுகிற ஹிம்ஸையோ பாதிஹிதரூபமாயாய்த்திருப்பது. (போனகம்) பகவத்விஷயத்தில் சொல்லுமோபாதியாகிலும் சொல்லவேணுமே, அதிலுங்குறையச்சொல்லவொண்ணாதே. (செய்தசேடம்) "த்வதீயபுக்தோஜ்ஜிதஶேஷபோஜிநா" "த்வதீயபுக்தோச்சிதஶேஷபோஜிநா" என்றும, "கலத்ததுண்டு" என்றும், சொல்லுகிறபடியே அமுதுசெய்து கைவாங்கினகலத்தில்ப்ரஸாதம். (தருவரேல்) பகவத் ப்ரஸாதம்போலே பரயோஜநாந்தர ப்ரர்க்கும் பொதுவா யிருக்குமதன்றே இது, அலப்யலாபம் கிட்டிற்றாகில். ஒருநாள் பட்டர் ப்ரஸந்நராய ஜீயர்க்கு இட்ட ப்ரஸாதத்தைநினைப்பது. (புனிதமன்றே) தேசாந்தரோ காலாந்தரோ தேஹாந்தரோயன்றியே ஸ்பர்சவேதியாய் இரும்பு பொனனுமாப்போலே அப்போதே பரிசுத்தம். [தச்சிஷ்டம் ஸுபாவநம் - ததுச்சிஷ்டம்ஸுபாவநம்]பகவத்ப்ரஸாதம்பாவநம; இது ஸுபாவநம.... ... (சக)

அ.—நாற்பத்திரண்டாமபாட்டு. (பழுதிலா) ஜந்மவர்த்தாதிகளால் குறையனின்றே இந்த ஜ்ஞாநமுடையவர்கள்,இந்த ஜ்ஞாநவிதுரராய் ஜந்மவர்த்தாதிகளால் உயர்ந்தவர்களுக்குஸர்வேஶ்வரனைபோதி பூஜ்யராய் ஜ்ஞாநாந்தர ப்ரதிக்ரஹவ்யவஹாரங்களுக்கு மர்ஹராவரொன்கிறார்.

பழுதிலாவொழுகலாற்றுப்பலசதுப்பேதிமாரகள்
இழிகுலத்தவர்களேனுமெம்மடியார்களாகில
தொழுமினீர்கொடுமின்கொண்மினென்றுநினறேடுமோக
வழிபடவருளினுய்போலமதிள்திருவரங்கத்தானே. (சஉ)

---

ஆனால்தலையைஆங்கேயறுபபதேயென்றபடி.(இபபடிப்பட்டவனித்யாதி)"பட்டர்ப்ரஸந்நராய்"என்றதுக்கு, "மைப்படிமேனி" என்கிறபாட்டு தாமருளிச்செய்த வர்த்ததுககு, "இன்னுமொன்றறியேன்" என்றத்தை ஸமவாதமாக ஜீயரருளிச்செய்ததுக்கு ப்ரஸந்நராயென்றபடி யென்று சொல்லுவர்கள். ... (சக)

நாற்பத்திரண்டாம்பாட்டு. (பழுதிலாவித்யாதி) இந்தஜ்ஞாந மென்றது-மெய்பொருள் ஜ்ஞாநமென்றபடி. "இந்த ஜ்ஞாநவிதுரராய்" என்றதுக்கு தாத்பர்யம் - அநுஷ்டாந சேஷமான ஜ்ஞாநமில்லாமையைப் பற்ற; இல்லையாகில் "கொடுமின்" என்றத்தோடு

ப-ரை.—மதிள் - திருமதிளாலே சூழ்ந்த, திருவரங்கத்தானே - கோயிலிலே கண்வளர்ந்தருளுமவனே; ஒழுகல் - ப்ரஹ்மாதொடங்கித் தங்களளவும் நீண்டுவருகிற, ஆறு - பரம்பரையில், பழுதிலா - குற்றமின்றிக்கே யிருக்குமவர்களாய், பலசதுப்பேதிமார்கள் - நான்குவேதங்களையும் அத்யயநம் பண்ணிப்போருமவர்களே; எம்மடியார்களாகில் - நம்மடியாரென்று அபிமாநிக்கலாம்படி யிருக்குமவர்கள், இழிகுலத்தவர்களேலும் - நிஹீநகுலத்தில் பிறந்தார்களேயாகிலும், நீர் - நீங்கள், தொழுமின் - அவர்களைத்தொழுங்கோள்; கொடுமினென்று - உங்கள் பக்கலுள்ள விசேஷார்த்தங்களை அவர்களுக்கு உபதேசியுங்கோளென்றும்; கொள்மினென்று - அவர்களிடத்தில் விசேஷார்த்தங்களுண்டாகில் கேட்டு க்ருதார்த்தராகுங்கோளென்றும், எனக்குமேல் பூஜ்யரில்லாமையாலே, என்னோடுமொக்க-எனக்கு ஸமாநமாகவாகிலும், வழிபட - அவர்களை ஆராதித்துநல்வழிபோம்படி, அருளினாய்-க்ருபைசெய்தருளினாயென்கிறார்.

வ்யா —(பழுதிலாவொழுகலாற்று) ப்ரஹ்மாதொடங்கித் தங்களளவும் வர நெடுகிப்போருகிற வம்ஶ ப்ரவாஹத்திலே ஒரு தோஷமின்றிக்கே யிருக்குமவர்கள். அதாகிறது - உத்பத்திகளிலேயாதல், ஆசாராதிகளிலேயாதல், ஒருவகையாலும் ப்ராஹ்மண்யப்ரச்யுதியின்றிக்கே யிருக்கை. (பலசதுப்பேதிமார்கள்) இவ்வம்சத்தில் சதுர்வேதிகளாயிருப்பா ரநேகரென்னை. "చతుర్వేదారిషయః" "சதுர்வேதாரிஷயः" என்கிறபடியே ரிஷிஸமராயிருக்கை. "சதுப்பேதிமார்கள்" என்று-ஸம்போதநை. ஒழுகல் - நெடுமை. ஆறு-வழி. (இழிகுலத்தவர்களேலும்) இதில் கீழ்ப்பட்டதில்லையென்னும் நிஹீநகுலத்தில் பிறந்தார்களேயாகிலும். (ஏலும்) "బహూనాం జన్మనామన్తే" "பஹூநாம்ஜந்மநாமந்தே" என்கிறபடியே அநேக ஜந்மபுண்யங்களினுடைய வவஸாநத்திலே ஸ்வரூபஜ்ஞாநம்பிறக்குமென்று சொல்லுகையாலேஜ்ஞாநாதிகராயிருப்பார்க்குநிஹீந ஜந்மங்கூடாது, விதுரதர்மவ்யாதாதிகளைப்போலே கூடிற்றேயாகிலும். (எம்மடியார்களாகில) என்னோட்டை அஸாதாரணபந்தத்தை யறிந்து ஜ்ஞாநாநுகூலான ஸ்வாசாரத்தை யுடையராகில். கைங்கர்யமே எல்லா நன்மைகளாக நினைத்திருக்குமவர்களாய், ஈச்வரனும் இவர்கள்திறத்தில் நாமே யிவர்களுக்கு உபாயோபேயங்களும் எல்லாவுறவுமென்றும் நினைத்திருக்கப்படுமவர்கள்.

(தொழுமினீர்) நீங்கள் தொழுங்கோள். "ఏతదవసానమః" "ஏதஜவஸாநமः" என்கிறபடியே உங்களுடைய வித்யாவ்ருத்தங்களும், ஜந்மோத்கர்ஷங்களும், மதஹேதுவாகை யன்றியே தமஹேதுவென்றிருக்கும் நீங்கள் அவர்கள்காலிலே விழுங்கோள். "కాలేష్వపి చ సర్వేషు" "காலேஷ்வபிசஸர்வேஷு" இத்யாதிகளில் சொல்லுகிறபடியே பகவத்ப்ரஸாதமொழிந்த ஸாதநாந்தரங்கள் பயஸ்தாநமென்றிருக்கும்நீங்கள் அவர்களை ஆராதியுங்கோள்.

---

தாத்பர்யாந்தரம் (కాలేష్వపి - காலேஷ்வபிசேத்யாதி.)

"[Telugu script] :" "ப்ரஸ்பரநீச்பாவை:" என்கிறபடியேஸ்வரூபப்ராப்தமான நீசபாவமானது அவர்களுக்குஸ்வரூபஸித்தி, உங்களுக்கு துர்மாநத்தாலே துஷ்கரம்; அவர்களைத்தொழுவே உங்கள் ஸம்ஸாரபீஜமான துர்மாநம்போம். நிஹீநஜந்மத்திலே பிறந்தவன் ப்ராஹ்மணனுக்கு ரக்ஷகனாக எங்கேகண்டோமென்னில்; கைசிக ஸம்பந்தம்ப்ராஹ்மண்யப்ரச்யுதியாலேவந்தப்ரஹ்மராக்ஷஸத்வத்தைப்ராஹ்மணனுக்குப் போக்கிக்கொடுக்கக்கண்டோமிறே.(கொடுமின்கொண்மின்) அவர்கள் உங்கள்பக்கல் ஒருஜ்ஞாநாபேக்ஷை பண்ணில் நீங்கள் ஆதரித்துச் சொல்லுங்கோள்;அவர்கள் பகவத்ஜ்ஞாநத்தை யுங்களுக்கு ப்ரஸாதிக்கில் கேட்டு க்ருதார்த்தராகுங்கோள். ஜாதிநிபந்தநமான ஸம்பந்தம்போலே யாதல், குணநிபந்தநமான ஸம்பந்தம் போலேயாதல், நீர்மேலெழுத்தான ஸம்பந்தமன்றிறே இவர்களோடு பண்ணும் ஸம்பந்தம்;இது யாவதாத்மபாவியான ஸம்பந்தமிறே. (என்று நின்னோடுமொக்க வழிபடவருளினாய்போல்) இப்பாசுரம் பலப்ரதரானதேவரீரோ யருளிச்செய்தபின்பு இதிலொரு ஸம்சயமுண்டோ. (நின்னோடுமொக்க வழிபட) எனக்குமேல் பூஜ்யரில்லாமையாலே என்மாத்ரமாகிலும் அவர்களை ஆராதித்து நல்வழிபோங்கோள். (அருளினாய்) "[Telugu script]" "பக்திரஷ்டவிதாஹ்யேஷா யஸ்மிந்ம்லேச்சேபிவர்த்ததே । ஸவிப்ரேந்த்ரோமுநிஶ்ஶ்ரீமாந் யதிஸ்ஸசபண்டித:॥ தஸ்மைதேயம்ததோக்ராஹ்யம் ஸசபூஜ்யோயதாஹ்யஹம்" என்கிறபடியே. (அருளிய)இந்தாஹஸ்யம்தேவரீர்க்ருபையாலே அருளிசசெய்தவித்தனையிறே. "பூசித்து நல்கியுரைப்பர் தந்தேவியர்க்கே" என்று-பகவத்ஸம்பந்த யுக்தருடைய பாவநத்வம், நித்யஸூரிகளும் தந்தாமுடைய அபிமதவிஷயங்களுக்கு ஸர்வஸ்வதாநம் பண்ணினார்களாய் உபதேசிக்கு மத்தனையிறே. (மதிள் திருவரங்கத்தானே)உபதேசமாத்ரமேயாய்ப் போகாமே கோயிலிலேவந்து லோகஸாரங்க மஹாமுநிகள்தலையிலே திருப்பாணாழ்வாரைவைத்து இவ்வர்த்தத்தை வ்யாபரித்துக்காட்டிற்றிலீரோ. (மதிள் திருவரங்கம்) கோயிலில் மதிளைக்கடக்கிலன்றோ தேவரீர்கட்டின இம்மர்யாதையைக் கடக்கலாவது. (௪௨)

"கொடுமின், கொள்மின்" என்றதுக்கு - ஜ்ஞாநப்ரதாநரூப ஸம்பந்தத்தைச் சொல்லுகிறதாகவேணுமோ, அல்லாத கொடைகொள்கையைச் சொல்லுகிறதானாலோவென்ன ; அருளிச்செய்கிறார் (ஜாதிநிபந்தநமானவித்யாதி.)சொன்னார்என்னாதே, "அருளினார்" என்றதுக்கு தாத்பர்யம் (இந்தாஹஸ்யமித்யாதி.) இந்தாஹஸ்யமென்றது-"தொழுமின்" என்றத்தாலே பலித்த பாவநத்வத்தை. இப்படி ரஹஸ்யமோவென்ன;அருளிச்செய்கிறார்(பூசித்நித்யாதி.)

அ.—நாற்பத்துமூன்றாம்பாட்டு. (அமர) இதிற்சொன்னது ஜந்ம வ்ருத்தாதிகளுக்குமேலேஞ் ஞானாதிகருமானஇவர்கள், ஜந்மவ்ருத் தாதிகளின்றிக்கே இந்தஜ்ஞானமுடையரானவர்களை,பகவத்ப்ரஸா தத்தாலே வந்தவைலக்ஷண்யத்தை புத்திபண்ணாதேகர்மநிபந்த மான ஜந்மாத்யபகர்ஷத்தையேபுத்திபண்ணித் தாழநினைத்தார்க ளாகில்அந்தக்ஷணத்திலே அவர்கள்தான் சண்டாளரென்கிறார்.

அமரவோரங்கமாறும்வேதமோர்நான்குமோதித்
தமர்களில்தலைவராயசாதியந்தணர்களேனும்
நுமர்களைப்பழிப்பராகில்நொடிப்பதோரளவிலாங்கே
அவர்கள்தாம்புலையர்போலுமரங்கமாநகருளானே. (சரு)

ப-ரை.—அரங்கமாநகருளானே-கோயிலிலேவந்து கண்வளர்ந்தருளுமவ னே; ஓர்-அத்விதீயமான, அங்கமாறும்-ஆறுவேதாங்கங்களையும், ஓர் - அத்விதீ யமான, வேதம் நான்கும் - நான்குவேதங்களையும், அமர-ஸாவதானமான, ஓதி- அத்யயநம்பண்ணி, தமர்களில்தலைவராய-தாஸபூதரில்அக்ரேஸரரான,சாதிஅந் தணர்களேனும் - ப்ராஹ்மணவர்ணத்திலே பிறந்தவர்களேயானாலும், நுமர்க ளை-தேவரீருடைய தாஸபூதரை, பழிப்பராகில் - அவர்களுடைய ஜந்மவ்ருத்தங் களைப்பார்த்து தூஷிப்பராகில், ஆங்கே - அப்போதே, நொடிப்பதோரளவில்- அந்தக்ஷணத்திலேயே, அவர்கள்தாம் - அவர்கள், புலையர்போலும் - சண்டா ளர்களாவரென்கிறார். (சரு)

வ்யா.—(அமரவோரங்கமாறும்) அத்விதீயமான ஷடங்கங்களை யும். அழகிதாக பாடங்களையும் தரித்து, அர்த்தத்தையும் தரிக்கு மவர்களாகை. அங்கங்களுக்கு அத்விதீயத்வமாவது - ஓரங்கத்திலே ஜ்ஞானங்குறைவறவுண்டாகில் லோகத்தார் அவனை ஸர்வஜ்ஞனெ ன்றுசொல்லும்படியிருக்கை. "ஶிக்ஷாயாம்வர்ண ஶிக்ஷா" "ஶிக்ஷாயாம்வர் ண ஶிக்ஷா" இத்யாதி. (வேதமோர்நான்கும்) வேதங்களுக்கத்விதீ யத்வம்-அபௌருஷேயத்வம்.சப்தங்களில்காட்டில் வ்யாவ்ருத்தியா தல்;தனித்தனியே விநியோகபேதத்தால் வந்த வ்யாவ்ருத்தியாதல். (ஓதி) அங்கங்களோடுவேதங்களோடுவாசியற ஆசார்யோச்சாரணா நூச்சாரணமுகத்தாலே க்ரஹிக்கை. இப்படிகளாலே எம்பெருமா னையுள்ளபடி யறியு மவர்களாகை. (தமர்களில் தலைவராய) ஜ்ஞா நாநுகூலமான பகவத்விஷயத்தில் ஸம்பந்தமுடையாரில் அக்ரே ஸரராயிருக்கை.

---

நாற்பத்துமூன்றாம்பாட்டு. (அமரவித்யாதி) "அங்கங்கள்" என்றதுக்கு ப்ரமாணம் (ஶிக்ஷாம்-சிக்ஷாயாமித்யாதி.) விநியோ கபேதமாவது – வித்யர்த்தவாதரூபேண வுண்டான விநியோகமெ ன்றபடி.பகவத்விஷயத்தில் ஜ்ஞாநாநுகூலமானபந்தமுடையாரில் என்று அந்வயிப்பது.

(சாதியந்தணர்கள்)கீழ்ச்சொன்னவை க்ஷத்ரியவைஶ்யர்களுக்கும் பொதுவிறே; அவ்வளவன்றிக்கே ஜாத்யாப்ராஹ்மணராயிருக்கை, (ஏலும்) கீழ்ச்சொன்னவை ஒருவர்க்கும் ஸித்திக்குமதல்ல, ஸித்திக்குமேயாகிலும். வைஷ்ணவநிந்தையில் வந்தால் இவையெல்லாம் அஸத்ஸமமென்கை. துர்மாநோபஹதர்க்கு அபசாரஹேதுவுமாய், இவையில்லாதார் தலைமேலேகாலிட்டுத்திரிகைக்குடலாயிற்றனையிறே.

(தமர்களை) தேவரீரபிமாநததுக்குள்ளே யடங்கி ப்ராப்யப்ராபகங்கள்தேவரீரே யென்றுஅத்யவஸித்து, உடையவனே உடைமைக்கு நிர்வாஹகன்,உடைமையை விநியோகங்கொள்ளுவானுமவனேயென்றிருக்குமவர்களை. (பழிப்பராகில்)"பகவத்ப்ரபாவத்தை அஹங்காரத்தாலே விஸ்மரித்து,அவர்களுடைய ஜந்மமாத்ரத்தையேபுத்திபண்ணித் தங்களில் காட்டில் குறையநினைப்பராகில்.'பழிப்பாகிறது-குற்றம். அதாகிறது-பகவதபசாரங்களில் தலையானவபசாரம். உகந்தருளின நிலஙகளில் த்ரவ்யமாத்ரத்தையே புத்திபண்ணிக் குறைய நினைக்குமாப்போலே,வைஷ்ணவர்கள் ஜந்மமாத்ரத்தையேபுத்திபண்ணிக குறையநினைக்கை. (பழிப்பராகில்) கொண்டாடுகையேயாயத்து பராப்தம், அஹங்காரமாகிற முசம்கனேறிபரமித்தபோதிறேஅவர்களைககுறையநினைப்பது; இப்படி கூடிற்றாகில். (நொடிப்பதோரளவிலாஙகே) காலாந்தரோ தேசாநதரோ தேஹாந்தரோ அன்று, அந்த க்ஷணத்திலே அவ்விடத்திலே. "புனிதமன்றே" என்றநன்மைபோலேதீமைவருமிடததிலும் விளம்பமில்லை. (அவாகள்தாம புலையாபோரும) அத்தேஹததோடே சண்டாளராவாகள். த்ரிசங்குவுக்கு ப்ராஹ்மண சாபத்தாலே கழுத்தில்வீரசங்கிலிதானே வாருனைப்போலே, இவனுக்கும் மார்வில் விட்ட பூணூல்தானேவாருய்விடும்.(தாம்புலையர்) கீழ்ச்சொன்ன ஜந்மாதிகளி லுத்கர்ஷங்கள் அபிமாந ஹேதுவாகையாலே அவை தானேஇவாகளுககுஅநர்த்தஹேதுவாய்விட்டது.ஜாதிசண்டாளனுக்கு ஒருகாலத்திலே வைஷ்ணவனாகைக்கதிகாரமுண்டு; இவன உசர ஹேதித்தகா விழுந்தவனாகையாலும், பாகவதாபசாரமாகிற மஹா பாபத்தைப்பண்ணினவனாகையாலும், அவனிலுந் தண்ணியன் கர்மசண்டாளனிறே. பிள்ளைப்பிள்ளையாழ்வானுக்கு ஆத்மஹிதஞ்சொன்ன ஸமநந்தரததிலே ஆழ்வான் பணித்த வார்த்தையை ஸ்மரிப்பது.

---

முசலகன்றென்று - ஒருபேய்க்குப்பேர். "போலும்" என்றதுக்கு போலிமாத்ரமென்றாக்கி தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஜாதிசண்டாளனுக்கித்யாதி.) ஜந்மாதிகளில் உத்கர்ஷம் அபிமாநஹேதுத்வாரா அநர்த்தஹேதுவென்னு மதுக்கு ஸம்வாதம் (பிள்ளைப்பிள்ளையித்யாதி.)

(அரங்கமாநகருளானே) "ஙூஹூஸிவொஙு" "நக்ஷமாமிதாச ந" என்ற தேவரீர்க்கிறே பாகவதாபசாரத்தின் தண்மைதெரிவது. கர்மயோகாத்யுபாய நிஷ்டர்க்குஸ்வகதமான உபாயாந்தரங்களில் ந்யூநாதிரேகங்களைப்பற்றியிருக்கலாம், பகவத்ஸம்பந்தம் கொண்டு பெறவிருக்கிற ப்ரபந்நனுக்கு பாகவதாபசாரமாகிறது பகவத்ஸம் பந்தத்தை யறுக்குமதாகையாலே பெறவிரகில்லை. பெறுகைக்கு அ வர்கள்ஸம்பந்தமே யமைகிறாப்போலேஇழக்கைக்கும்அபசாரமே யமையும்; ஆகையாலே ப்ரபந்நனுக்கு பயப்பட்டு நோக்கவேண்டு வது-தேவதாந்தரஸ்பர்சமும், பாகவதாபசாரமும். பகவத்விஷயத் தில் ஓர் ஆநுகூல்யம் பண்ணவேண்டுவதில்லை, இவை யன்றியிலே யொழிந்தவனுக்கு ஈச்வரன் ஸுலபனும் ... (சங)

அ.—நாற்பத்துநாலாம்பாட்டு. (பெண்ணுலாம்) கீழ்ப்ரதிபா தித்த வர்த்தங்கள் ஸம்பவிக்குமென்னு மிடம், ப்ரஹ்மாதிகளுக் கும் துர்லபமான பேற்றை திர்யக்ஜாதியிலே பிறந்தானொருவன் பெற்றபின்பு சொல்லவேணுமோவென்று அந்யாபதேசத்தாலே ஸ்வலாபத்தைச்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

பெண்ணுலாஞ்சடையினானும்பிரமனுமுன்னைக்காண்பான்
எண்ணிலாவூழியூழிதவஞ்செய்தார்வெள்கிநிற்ப
விண்ணுளார்வியப்பவந்து ஆனைக்கன்றருளையீந்த
கண்ணறாவுன்னையென்னோகளைகணக்கருதுமாறே. (சச)

ப-ரை.—பெண - கங்கையானவள், உலாம்-ஸஞ்சரிக்கிற, சடையினானும்-ஜடையையுடையனான ருத்ரனும், பிரமனும - ப்ரஹ்மாவும், உன்னை - ஸர்வஸ் மாதபரனான வுனனை, காணபான - இபபடிபபட்டவனென று பரிச்சேதித்தறி கைக்காக, எண்ணிலாவூழியூழி-நெடுங்காலமாக, தவஞ்செய்தார் - தபஸ்ஸுபண ணி, வெள்கிநிற்ப - நாணககை—பாலமையாலே வீணே தபஸ்ஸிலே யிழிநதோமெ ன் று லஜ்ஜிததிருக்க, விணணுளாா-நித்யஸூரிகள், வியப்ப-விஸ்மயப்படுமபடி,

---

ஆனாலும் பகவத்ப்ரபந்நனை விவனுககு பாகவதாபசாரமு ண்டானால் அந்த பரபததிதானே இத்தையும் நிவர்த்தமாக்காதோ, பகவத்விஷயத்தை இழக்கைக்குடலாகவேணுமோவென்ன; அரு ளிச்செய்கிறார்(கர்மயோகேத்யாதி.)ந்யூநாதிரேகங்களைப்பற்றியிரு க்கலாமென்றதுககு தாத்பர்யாந்தரம் - ந்யூநாதிரேகங்களுண்டானா லும்ப்ராயச்சித்தத்தாலே போக்கிகிர்ப்பானாயிருக்கலாமென்றபடி. இன்னமும் ஒருவழியாலே இழவுக்குடலென்னுமத்தை அருளிச் செய்கிறார் (பெறுகைக்கித்யாதி.) ... ... (சங)

நாற்பத்துநாலாம்பாட்டு. (பெண்ணுலாமித்யாதி) கீழ்ப்ரதி பாதித்த வர்த்தங்களாவன-பாகவதவைபவம் தொடக்கமானவை; இத்தால் - பகவத் ப்ரபாவத்தாலே கூடுமென்று தாத்பர்யம்.

அன்று-முதலையின் கையிலே அகப்பட்டு வருந்தினபோது, ஆனைக்கு - ஸ்ரீ கஜேந்த்ராழ்வானுக்கு, அருளீந்த-அவன் கையில் பூ செவ்வியழிவதற்கு முன்னே திருவடிகளிலே யிட்டுக்கொண்டருளின, கண்ணறு - நிர்த்தயனானவனே, உனலை- இப்படிப்பட்டவனானவுன்னை, களைகணு-தஞ்சமாக, கருதுமாறு - நினைக்கும் ப்ரகாரம், என்-யாது. இப்படிப்பட்ட தயையுடையனானவுன்னையொழிய வேறோரக்ஷகரார் என்று கருத்து. (௪௪)

வ்யா.—(பெண்ணுலாஞ் சடையினானும்)கங்கையானவள் உள்ளே ஸஞ்சரிக்கும்படியான ஜடையையுடையவன். கங்கையை ஜடைமேலே யடக்கினேனென்னும் பிடாரைக்கொண்டு ஈச்வரனைக்காணலாமோ; "ஆறுசடைக்கரந்தான்" இத்யாதி. (பிரமனும்) அவனுக்குங்கூட ஜநகனாய், "ப்ரஹ்மா ப்ரஹ்மவிதாம்வர:" "ப்ரஹ்மா ப்ரஹ்மவிதாம்வர:" என்கிறபடியே இப்பாலுள்ளார்க்குப் பள்ளியுபாத்யாயராங்காட்டில் இவ்வறிவுகொண்டு எம்பெருமானை யறியப்போமோ. தன்னிலேஸ்ரேஷ்டரானவர்களைத்தான் பரிச்சேதிக்குமித்தனையொழிய அபரிச்சின்னனானவனைப்பரிச்சேதிக்கப்போமோ. "கடிக்கமலத்துள்ளிருந்தும் காண்கிலான் கண்ணனடிக்கமலந்தன்னையயன்" என்னக்கடவதிறே. (உன்னைக்காண்பான்) "யதோ வாசோ நிவர்த்தந்தே" "யதோவாசோநிவர்த்தந்தே" என்கிறபடியே உன்குணங்களிலே யொன்றை அவதிகாணமாட்டாத வுன்னைக்காண்கைக்காக. நித்யஸூரிகள்நித்யாநுபவம்பண்ணாநின்றாலும் எல்லைகாணமாட்டாதவுன்னை. "நிரவத்ய: பராத்பர:" "நிரவத்ய;பராத்பராப்தே:" என்னக்கடவதிறே. பிறராலறியவொண்ணாதவளவே யன்றியே உன்னாலும் உன்னை யெல்லை காணவொண்ணாதவுன்னை "தனக்குந் தன தன்மையறிவரியான்" என்னக்கடவதிறே. (காண்பான்) காணப்பெற்றால் பின்னையன்றோப்ரயோஜநத்தினருகுசெல்லுவது. தானே தன்னைக்கண்ணுக்கு விஷயமாக்கிக்காட்டுமன்றிறே காணலாவது, அல்லது ஸ்வஸாமர்த்யத்தாலே காணும் விஷயமன்றே. "ந சக்ஷுஷா பஶ்யதி கஶ்சனைநம்" "நசக்ஷுஷாபஶ்யதிகஶ்சனைநம்" என்றும், "ந மாம்ஸசக்ஷுஷா த்ரஷ்டும் ப்ரஹ்மபூதஸ்ய ஶக்யதே" "நமாம்ஸசக்ஷுஷாத்ரஷ்டும் ப்ரஹ்மபூதஸ்ஸஶக்யதே" என்று சொல்லக்கடவதிறே. (எண்ணிலாவூழியூழித் தவஞ்செய்தார வெள்கிநிற்ப) நெடுங்காலம் தபஸ்ஸுபண்ணி "நாம்ஆராய்தபஸ்ஸுபண்ணுகிறோம்" என்று லஜ்ஜித்துக் கைவாங்கிநிற்க. பிறர், தங்களைக்குறித்துப்பண்ணுந் தபஸ்ஸுக்குபலம் கொடுக்குமவர்களிறே இவனைநோக்கி தபஸ்ஸுபண்ணுகிறார்கள். "யுககோடி ஸஹஸ்ராணி" "யுககோடிஸஹஸ்ராணி" என்னக்கடவதிறே. (வெள்கிநிற்ப) முதலையின் வாயிலேவிழாதே தபஸ்ஸிலேயிழிந்து என்னகார்யம் செய்தோமென்று லஜ்ஜித்துநிற்கை.

---

தணங்களிலே யொன்றையென்றது - ஆநந்தத்தை. "காண்பான்" என்றதுக்கு வ்யங்க்யமாக (காணப்பெற்றாலித்யாதி.)

"పరమాపదమాపన్నో మనసాచింతయద్ధరిమ్" "பரமாபதமாபந்நோ மநஸா சிந்தயத்தரிம்" என்கிறபடியே ஆபத்தைமுன்னிடாதே நடுவிலே யிழிந்து என்னகாரியம் செய்தோமென்று லஜ்ஜித்துநிற்க.

(விண்ணுளார் வியப்பவந்து) நித்யஸூரிகள், ப்ரஹ்மாதிகள் இப்படிபடாநிற்க, அவர்களையும் எங்களையும் அநாதரித்து ஒரு திர்யக்கின்காற்கடையிலே அரைகுலையத் தலைகுலையவந்து விழுவதே! "எத்திறம்! எத்திறம்!" என்று விஸ்மயப்பட. (வந்து) ஆனை இடர்ப்பட்ட மடுவின் கரையிலே வந்து. "சென்று" என்னாதே "வந்து" என்றது-ஆனைக்குதவினது தம்பேறாயிருக்கிறபடி. ஆனைக்கு ப்ரஹ்மாதிகளுடைய ஜந்மோத்கர்ஷதையாதல், இவனுடைய ஜந்மாபகர்ஷதையாதல், இவற்றை யொன்றையும் பாராதே ஆபத்தைப்பார்த்து ரக்ஷித்தபடி. (அன்று) ஸ்வபல மற்ற வன்று. "గజఆకర్షతే తీరే" "கஜஆகர்ஷதேதீரே" என்றுசென்றகாலத்தில் இவனோடு ப்ரஹ்மாதிகளோடு வாசியில்லை. அன்றுஒருமுதலையின் கையிலே யகப்பட்டவானைக்கருளையீந்தாய்; இன்று அஞ்சு முதலையின் கையிலே யகப்பட்டவெனக்கருளாய். ஆனை ஆயிரம் ஸம்வத்ஸரம் நோவுபட்டது; நான் அநாதிகாலம் நோவுபட்டேன். அவனகப்பட்டது மடுவிலே; நானகப்பட்டது ஸம்ஸாரார்ணவத்திலேயிறே. (அருளையீந்த) அருளுகையாவது-முதலையின்வாயினின்றும்மீட்டு, அவனுடைய நொந்த காலைத்திருக்கைகளாலே தடவியருளி ஆஶ்வஸிப்பித்து, அவனகையில்பூவைத் தன்திருவடிகளிலே யிடுவித்துக்கொள்ளுகை; அப்படி யென்னையும் விஷயாந்தரங்களினின்றும் மீட்டு இழந்த காலத்துக்கு ஸாந்த்வநம்பண்ணியிறே, அடிமையிலேமூட்டுவது. (கண்ணறா) அவன் உபகரித்ததசையிலே, கண்ணறா வென்கிறது - ப்ரீதி தலைமண்டையிட்டுச சொல்லுகிறவார்த்தை. ஸ்வலாபத்தில் ஸ்வயத்நத்தாலே லபிக்க விழிவாரைப்பாராதே அகிஞ்சநர்பக்கலிலே முழுநோக்காயிருக்கிறவிது என்ன கணையுடைமை; என்னபும்ஸ்த்வம். ஸ்வஸாமர்த்யத்தைப்பொகட்டுத் தங்கள்வெறுமையை முன்னிட்டு உன்னைக்காலிலே விழவிட்டுக்கொள்ளமாட்டாதே ஜகத்து இழப்பதே!. (உன்னையென்னே களைகணுக் கருதுமாறே) ஆச்ரிதபக்ஷபாதியானவுன்னை ஜகத்துக்குப்பொதுவான ரக்ஷகனென்று சொல்லுமவர்கள் மதிகேடரென்கிறார்.

---

எங்களையும் அநாதரித்தென்றது - "மஹிஷீ-அநந்த்ரித" இத்யாதியைப்பற்ற. சொன்னகாலத்திலே யென்றது - அஹங்க[illegible]த்தோடே சொன்னகாலத்திலென்றபடி. (வாசியில்லை) உதவாமைக்கு இதிசேஷ:. தாத்பர்யாந்தரம் (அருளுகையாவ தித்யாதி...(௪௪)

"దేవానాం దానవానాఞ్చ సామాన్యమధిదైవతమ్" "தேவாநாம்தாநவாநாஞ்ச ஸாமாந்யமதிதைவதம்" என்கிற பந்தம் கிடக்கச் சிலர்க்காகச்சில ரை யழிக்கிற இவனை ஸர்வரக்ஷகனென்று நினைக்கலாமோ. (௫௪)

அ.—நாற்பத்தஞ்சாம்பாட்டு. (வளவெழும்) நிகமத்தில் குவலயாபீடத்தைப் போக்கினாப்போலே, தம்முடைய ப்ரதிபந்தகத்தைப் போக்கினபடியைச் சொல்லிப் பெரியபெருமாளுடைய ப்ரீதியே தமக்குப்ரயோஜநமென்று முடிக்கிறார்.

வளவெழுந்தவளமாடமதுரைமாநகரந்தன்னுள்
கவளமால்யானைகொன்றகண்ணனையரங்கமாலைத்
துளவத்தொண்டாயதொல்சீர்த்தொண்டரடிப்பொடிசொல்
இளையபுன்கவிதையேலுமெம்பிராற்கினியவாறே. (௫௫)

ப-ரை,—வளவெழும்-அழகுமிக்கிருப்பதாய, தவளம்-மிகவும் வெண்மையான, மாடம் - மாடங்களையுடைத்தான, மதுரைமாநகரந்தன்னுள்-ஸ்ரீமதுராநகரத்திலே, கவளம்-கவளங்கொண்டிருப்பதாய, மால் - பெருத்ததிருந்துள்ள, யானைகொன்ற - குவலயாபீடமென்கிற யானையை நிரஸித்த, கண்ணனை - ஆச்ரிதஸுலபனும், அரங்கம்-கோயிலிலே பள்ளிகொண்டருளுமவனும், மாலை-ஆச்ரிதவிஷயத்தில் பெரும்பித்தனானவனை, துளபத்தொண்டாய - திருத்துழாயாழ்வார்க்கு அடிமைசெய்து போருமவராய், தொல்சீர் - ஸ்வாபாவிகமான பகவச்சேஷத்வத்தின் எல்லையிலே நின்றவரான, தொண்டரடிப்பொடி-தொண்டரடிப்பொடி யாழ்வார், சொல - அருளிச்செய்த, திருமாலையாகிற ப்ரபந்தம், இளைய-சப்தத்தில் இளையதாய, புன்கவிதையேலும் - கவித்வத்தில் குற்றமுடையதாகவிருந்தாலும், எம்பிராற்கு - எனக்கு உபகாரகரான பெரியபெருமாளுக்கு, இனியவாறே-இனிதாயிருந்தபடி யென்னென்று ஈடுபடுகிறார். (௫௫)

வ்யா.—(வளவெழுந்தவளமாட) அழகுமிக்கிருப்பதாய் வெள்ளியாலே செய்தாப்போலே அதிதவளமான மாடங்களையுடைத்தாயிருக்கை. திருவவதரித்தவன்று கோடிக்கப்பெறாத விழவுதீருகிறார். வில்விழவுக்காகக் கம்ஸன்கோடித்தபடியைச சொல்லிற்றாகவுமாம். வளம் - அழகு. எழுச்சி - மிகுதி. (மதுரைமாநகரந்தன்னுள்) ப்ரதமத்தில் வாமநாச்ரமமாய், பின்பு ஸ்ரீசத்ருக்நாழ்வான் படைவீடுசெய்து, பின்பு க்ருஷ்ணன் திருவவதாரம் பண்ணுகையாலுண்டான பெருமையைச்சொல்லுகிறது. இப்படி பகவத்ஸம்பந்தம் மாறாத தேசமாகையாலே வைகுந்தமா நகரில் காட்டில் இது வ்யாவ்ருத்தம். (கவளமால் யானைகொன்ற கண்ணனை) கவளங்கொண்டிருப்பதாய்ப் பெருத்திருந்துள்ள வானையைக்கொன்ற க்ருஷ்ணனை. "களபமால்" என்று பாடமானபோது, "களபம்" என்று - ஒருபருவத்தில் பெருத்த ஆனையென்றபடி. கீழே-"ஆனைக்கன்றருளை யீந்த" என்றார்; இங்கே – ஆனைகொன்ற" என்கிறார்; இத்தால்-"దేవానాం దానవానాఞ్చ" "தேவாநாம்தாநவாநாஞ்ச" என்ற திருந்தது.

நாற்பத்தஞ்சாம்பாட்டு. (வளவெழுமித்யாதி.) மறுத்தைக்கு தாத்பர்யம் (ப்ரதமத்திலித்யாதி.)

அங்குள்ளார் விரோதிகளைப் போக்கித் தன்னை யநுபவித்தாப்போலே, இவர் தம்முடைய ப்ரதிபந்தகங்களைப்போக்கித் தம்மை அநுபவிப்பித்தபடி. திருவவதரித்தவன்று ஒளித்துப்போனவூரிலே கண்காணவந்து விரோதியை யழியச்செய்த வேற்றத்தை அநுபவிக்கிறார். (அரங்கமாலே) அவதாரத்துக்குப் பிற்பாடரான தம்முடைய விரோதியைப்போக்கிக் கோயிலிலே வந்தாராய்த்து. (மாலே) ஆச்ரிதவிஷயத்தில் பெரும்பித்தரானவனை. விரோதிநிரஸநமும் தத்பூர்வகமான ஸ்வாநுப்வமும்தன்பேறாயிருக்கை.

(துளபத்தொண்டாய) திருத்துழாயாழ்வார்க் கடிமைசெய்யுமவர்-புருஷார்த்தத்தின் சரமாவதியிலே நின்றவர். இதுதான் வைஷ்ணவர்களுக்கெல்லாம் திரளவடிமை செய்தபடியாய்த்து. "துளபத்தொண்டாய" என்கையாலே - அபசாரம் தட்டாதகைங்கர்யமென்கை. "தொடையொத்ததுளபமும் கூடையும்பொலிந்துதோன்றியதோள் தொண்டரடிப்பொடி" என்னக்கடவதிறே. (தொல்சீர்) ஸ்வாபாவிகமான பகவச்சேஷத்வத்தின் ஸீமையிலே நின்றவர். ஸஹஜகைங்கர்யத்தினுடைய மேலெல்லை வைஷ்ணவகைங்கர்யமிறே. (தொண்டரடிப்பொடிசொல்) இத்தால்–தொண்டரடிப்பொடியென்று பேரையுடையவர். இவருக்கு ஜ்ஞாநாநந்தங்களன்றுகாணும் நிரூபகம்; "அடிப்பொடி" என்கையாலே- "தொண்டர் தொண்டர் தொண்டர் தொண்டன் சடகோபன்" என்றாப்போலே யிருக்கிறதாய்த்து. (இளையபுன்கவிதையேலும்) சப்தத்தி லிளமையும், கவித்வத்தில் குற்றமுமுண்டேயாகிலும். இளசாயப் புல்லியகவியேயாகிலும்.

---

"கவளமால்யானைகொன்ற" என்றதுக்கு தாத்பர்யாந்தரம் (திருவவதரித்தவனித்யாதி.) முந்தின தாத்பர்யத்துக்குச் சேர (அவதாரத்துக்கித்யாதி.) பாகவதர்களெல்லார்க்கும் அடிமைசெய்தாலன்றோ சரமாவதியிலே நின்றதாவது, "துளவத்தொண்டாய" என்கிறதே என்ன;(இதுதானித்யாதி.) பின்னையுமொருதாத்பர்யம் (துளபத்தொண்டாய வென்கையாலே யித்யாதி.) அதாவது-திருத்துழாயை சுச்ருஷித்து அவ்வழியாலே பெரியபெருமாளுக்கு அடிமையாலே அபசாரம்தட்டாத கைங்கர்யமென்றபடி. அப்படி இதுகொண்டு பெருமாளுக்கு அடிமைசெய்வரோ வென்ன; அருளிச்செய்கிறார் (தொடையொத்த வித்யாதி.) "துளபத்தொண்டாய" என்றபோதே "தொண்டரடிப்பொடி" என்னுமிடம் ஸித்திக்குமாகையாலே புநருக்தமன்றோ வென்ன; அருளிச்செய்கிறார் (இத்தாலித்யாதி.)

(எம்பிராற்கினியவாறே) எம்பிரானுக் கினிதாயிருக்குமிறே. "𑌸𑌂𑌹𑍃𑌷𑍍𑌟𑌮𑌨𑌸𑍍𑌤𑌨𑌮𑍍" "ஸிம்மர்ஷ்டம்ஸாதவசநம்" என்கிறபடியே பெரியபெருமாள் இத்தையுகந்தபடி யென்னென்கிறார். ப்ரஜைகளுடைய மழலைச்சொல்லு தமப்பனார்க்கு இனிதாயிருக்குமிறே. "𑌪𑍍𑌰𑌹𑌰𑍍𑌷𑌯𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌿𑌸𑌨𑌾𑌥𑌜𑍀𑌵𑌿𑌤𑌃" "ப்ரஹர்ஷயிஷ்யாமிஸ்நாதஜீவித:" என்கிறபடியே இவ்வுகப்புத்தானே புருஷார்த்தம். இவன் ஸத்தை பெறுகையாவது - அவன்ப்ரீதிக்குக் கைதொடுமானமாகை. இப்ப்ரபந்தம்கற்றார்க்கு பலம்சொல்லாதொழிந்தது - இவ்வுகப்புத்தானே அவர்களுக்கு பலமாகையாலே. இவ்வாழ்வாரை யுகந்தாப்போலே இப்ப்ரபந்தம்கற்றாரையும்பெரியபெருமாள் உகந்தருளுவரென்கை. "𑌪𑍍𑌰𑌿𑌯𑌤𑍇𑌸𑌤𑌮𑌂𑌰𑌾𑌮𑌃" "ப்ரியதேஸதம்ராம:" என்று ஸ்ரீராமாயணம் கற்றாருடைய பலம்போலேயாய்த்து இப்ப்ரபந்தங் கற்றாருடைய பலமும். ... ... ... ... (௪௫)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

## திருமாலைஸங்கதி.

யாதர்ச்சிகமான திருநாமஸங்கீர்த்தநத்தாலே யமாதிகள்தலையிலே காலைவைத்தே னென்றார் - முதற்பாட்டில; அதினுடைய இனிமையாலே பரமபதம் வேண்டேனென்றார் - இரண்டாம்பாட்டில்; அத்தோடு விரோதிக்கும ஸம்ஸாரமும்வேண்டேனென்றார்-மூன்றாம்பாட்டில்; பாபப்ரசுரர்களுக்குத் திருநாமஞ்சொல்ல அதிகாரமுண்டாயிருக்க இவ்விஷயத்தை யிழப்பதே! என்றார் - நாலாம்பாட்டில்; அஸ்திரத்வாதிதோஷதுஷ்டங்களான ப்ராக்ருதவிஷயங்களைப் பற்றுவார் அவிசேஷஜ்ஞரென்றார் - அஞ்சாம்பாட்டில்; போக்தாவின் நிலையைச் சொன்னார் - ஆறாம்பாட்டில்; முமுக்ஷுக்களாக ப்ரமித்திருக்கிற பாஹ்யரைக் குறித்து ஆச்ரயணீயவஸ்துவை உபதேசித்தார் - ஏழாம்பாட்டில்; இதுகேட்டால் பொறாதவர்கள்

---

இப்ப்ரபந்தத்துக்கு ஒருபலம் சொல்லவேண்டாவோவென்ன; (𑌪𑍍𑌰𑌹𑌰𑍍𑌷𑌯𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 - ப்ரஹர்ஷயிஷ்யாமீத்யாதி.) கேவலம் அவனையுகப்பிக்கையாலேஸநாதஜீவிதனாகவேணுமோ, கைங்கர்யத்தாலேயன்றோ ஸத்தாஸித்தியென்ன; அருளிச்செய்கிறார் (இவன்ஸத்தையித்யாதி.) அதாவது-கைங்கர்யந் தானும் அவனுடையமுகோல்லாஸ ஹேதுவாகையாலே அவனுடையஉகப்பே ப்ரதாநபுருஷார்த்தமென்றபடி. "இளையபுன்கவிதையேலு மெம்பிராற்கினியவாறே" என்று - தம்மளவிலே பெரியபெருமாள் உகந்தபடியன்றோசொல்லிற்று, அது அவர்களுக்கு பலமோவென்ன; அருளிச்செய்கிறார் (இவ்வாழ்வாரையித்யாதி.)

ஜீயர் திருவடிகளே சரணம்.

வத்யரென்றார்-எட்டாம்பாட்டில்;இசைந்தவர்களைக்குறித்து,ஸ்வ பனைக்ருஷ்ணனை ஆச்ரயியுங்கோளென்றார்-ஒன்பதாம்பாட்டில்;பிற் பாடர்க்குதவும்படி கோயிலிலே ஸந்நிஹிதனென்றார்-பத்தாம்பா ட்டில்; அதுக்குக் கண்ணழிவுடையார் கர்ப்பநிர்ப்பாக்யரென்றார்- பதினோராம்பாட்டில்; தாம்பெற்றாலும் பிறாநர்த்தம் பொறுக்க மாட்டேனென்றார் — பன்னிரண்டாம்பாட்டில்; எல்லாருந் திரு நாமத்தைச் சொல்லிப் பிழைப்பதுகாணென்று மநோரதித்தார்- பதின்மூன்றாம்பாட்டில்;அவர்களோட்டை ஸம்ஸர்க்கத்தால் வந்த விடாய்தீரத் திருநாமத்தைச்சொன்னார் - பதினாலாம்பாட்டில்;ஸம் பந்தஜ்ஞாநம் பிறப்பித்தபடி சொன்னார் - பதினஞ்சாம்பாட்டில்; விஷயாநுரூபமாக பக்திபெருகினபடி சொன்னார் - பதினாறாம்பாட் டில்; கண்களித்தபடி சொன்னார் - பதினேழாம்பாட்டில்; அதுபுற வெள்ளமிட்டபடி சொன்னார் - பதினெட்டாம்பாட்டில்; உடனு ருகினபடி சொன்னார் — பத்தொன்பதாம்பாட்டில்; உறவறிந்தார்க் குஅகலவொண்ணாதென்றார்-இருபதாம்பாட்டில்; மநஸ்ஸால் பரிச் சேதிக்கவொண்ணாதென்றார் - இருபத்தோராம்பாட்டில்; பாசுர மிட்டுப் பேசவொண்ணாதென்றார் - இருபத்திரண்டாம்பாட்டில்; மறக்கவொண்ணாதென்றார் - இருபத்துமூன்றாம்பாட்டில்; பிறந்த பக்தி விஷயவைலக்ஷண்யத்துக் கநுரூபமாயிராமையாலே அது க்ர்த்ரிமமென்றார் - இருபத்துநாலாம்பாட்டில்; சாஸ்த்ரீயமான பக்த்யாதிக ளில்லையென்றார் — இருபத்தஞ்சாம்பாட்டில்; ஸ்த்ரீ சூத்ராதிகளுக்குள்ள நன்மையு மில்லையென்றார் — இருபத்தாறாம் பாட்டில்; திர்யக்குக்களுக்குள்ள நன்மையு மில்லையென்றார் - இரு பத்தேழாம்பாட்டில்; ஆனை தன்னிடரிலேநினைத்தநினைவுமில்லை யென்றார்-இருபத்தெட்டாம்பாட்டில்;விலக்ஷணதேசவாஸமில்லை யென்றார் - இருபத்தொன்பதாம்பாட்டில்; இவையில்லாமையே யன்றிக்கே பிறர்க்கு அநர்த்தகரனுமானேனென்றார்-முப்பதாம்பாட் டில்; நீசவிஷயங்களுக்கு மாகாதானொருவனென்றார் - முப்பத் தோராம்பாட்டில்; இப்படியிருக்கவந்து கொடுநின்ற மூர்க்கனென் றார் - முப்பத்திரண்டாம்பாட்டில் அதுக்கடியான நிர்லஜ்ஜனென் றார் — மூப்பத்துமூன்றாம்பாட்டில்; இப்படிப்பட்ட நான் கிட்டி அவத்யத்தை விளைப்பேனல்லேன் என்றார் - முப்பத்துநாலாம் பாட்டில்; நீர்மையாலே சேர்த்துக்கொண்டானென்றார் - முப்பத் தஞ்சாம்பாட்டில்; விசேஷகடாக்ஷம் பண்ணவேணுமென்று பத றினார் முப்பத்தாறாம்பாட்டில்; அதுபெறுமே கிலாய்த்தார் - முப் பத்தேழாம்பாட்டில்; இப்படி த்வரையையுடைய ப்ரபந்நரை யுக் த்தியென்றார் - முப்பத்தெட்டாம்பாட்டில்; அவர்களுக்கு ஜந்மத் தில் தாழ்வால்வரும் குறைவில்லையென்றார்-முப்பததொன்பதாம்

பாட்டில்; அவர்களுக்கு ஹிம்ஸாநிவ்ர்த்தத்தால் உண்டான பலமநுபவிக்கவேண்டாவென்றார் - நாற்பதாம்பாட்டில்; தங்களோடு ஸம்பந்தித்தாரையும் பரிசுத்தராக்குமவரென்றார் - நாற்பத்தோராம்பாட்டில்; இவர்கள் எம்பெருமானோபாதிபூஜ்யரென்றார் - நாற்பத்திரண்டாம்பாட்டில்; இவர்களை ஜந்மவ்ர்த்தாதிகளாலே குறைய நினைத்தவர்கள் சண்டாளரென்றார் - நாற்பத்துமூன்றாம்பாட்டில்; ப்ரஹ்மாதிகளுக்கும் துர்லபமான பேற்றை ஒரு திர்யக்குக்குக் கொடுத்தபடி சொன்னார் - நாற்பத்துநாலாம்பாட்டில்; இப்ப்ரபந்தம் கற்றார்க்கு பலம் அருளிச்செய்தார் - நாற்பத்தஞ்சாம்பாட்டில்.

ஜீயர்திருவடிகளே சரணம்.

அடிவரவு - காவல் பச்சை வேதம் மொய்த்த பெண்டிர் மறம் புலைவெறுப்பு மற்றும் நாட்டினன் ஒருநமனும் எறி வண்டு மெய் சூது விரும்பி இனிது குடபாய் பணி பேசு கங்கை வெள்ளம் குளித்து போது குரங்கு உம்பர் ஊர்மனம் தவம் ஆர்த்து மெய்உள்ளம் தாவி மழை தெளி மேம்பொருள் அடிமை திரு வான் பழுதிலா அமர பெண் வளவெழும் கதிர்.

திருமாலைவ்யாக்யாநம்

ஸம்பூர்ணம்.

---





ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

பிள்ளைலோகம்ஜீயரருளிச்செய்த

# திருப்பள்ளியெழுச்சித் தனியன் வ்யாக்யாநம்.

அவதாரிகை.— (தமேவமத்வேத்யாதி) இச்ச்லோகத்தில் *செய்யும்பசுந்துளபத்தொழில்மாலையைஎப்போதும் செய்துபோருவாராய், விசேஷித்து *செந்தமிழில் பெய்யும் மறைத்தமிழ்மாலையையும் பேராத சீரரங்கத்தையன் கழற்கணியுமவரான தொண்டரடிப்பொடியாழ்வாரை ஸ்துத்யபிவாதநம்பண்ணும்படி சொல்லுகிறது. "திருமாலை" என்கிற திவ்யப்ரபந்தமன்றிக்கே திருப்பள்ளியெழுச்சியையும், "ప్రాబోధకీంయోకృతసూక్తిమాలామ్" "ப்ராபோதகீம் யோக்ர்தஸூக்திமாலாம்" என்றுசொன்மாலையாகவிறே சொல்லுவது. இதுதான் திருப்பள்ளியெழுச்சித் தனியனாயத்திருப்பது.

తమేవమత్వాపరవాసుదేవం రఙ్గేశయంరాజవదర్హణీయమ్।
ప్రాబోధకీంయోకృతసూక్తిమాలాం భక్తాఙ్ఘ్రిరేణుంభగవన్తమీడే॥

வ்யா.—(రాజవదర్హణీయమ్-రఙ్గేశయమ్ - పరవాసుదేవమ్ - మత్వా - ராஜவதர்ஹணீயம் - ரங்கேஶயம் - பரவாஸுதேவம் - மத்வா) அதாவது-ராஜவத்பூஜ்யராய் ரங்கராஜதாநியிலே கண்வளர்ந்தருளுமவரான ஸ்ரீரங்கராஜனை, ச்ருதிப்ரஸித்தரான பரவாஸுதேவராகவே ப்ரதிபத்தி பண்ணியென்றபடி. ராஜவதர்ஹணீயராவது - ராஜவத் பூஜ்யரென்றபடி. ராஜாதிராஜரான சக்ரவர்த்தித் திருமகனாலும் ஆராதநீயராயிருக்கை. (రఙ్గేశయమ్ - ரங்கேஶயம்) அதாவது-"செருவிலேயரக்கர்கோனைச் செற்ற நம்சேவகனார் மருவிய பெரியகோயில்" என்றும்,"పునరపిపురస్కర్తుం శ్రీరఙ్గిణఃఫణిపుఙ్గవే" "புநரபிபுரஸ்கர்த்தும் ஸ்ரீரங்கிண: பணிபுங்கவே" என்றும், "அரங்கத்தரவணைப் பள்ளியான்" என்றும் பேசும்படி, *அரங்கந்தன்னுட் பாம்பணைப்பள்ளிகொள்ளுகை. இப்படி படுக்கைவாய்ப்பாலே பள்ளிகொண்டருளும் பெரியபெருமாளை. (తమ్-పరవాసుదేవమేవ - మత్వా - தம்பரவாஸுதேவமேவ-மத்வா) "వాసుదేవోஸిపూర్ణః" "வாஸுதேவோஸி பூர்ண:" என்கிற அந்த பரவாஸுதேவராகவே புத்திபண்ணி. இங்குத்தையிற்படியை விசாரியாதே அங்குத்தையிற்படியாகவே அநுஸந்தித்து. *ஆதியஞ்சோதியுருவை யங்குவைத்திங்குப்பிறந்த" என்றும், "நெஞ்சினால் நினைப்பான் யவன் அவனாகும் நீள்கடல்வண்ணன்" என்றும் சொல்லக்கடவதிறே. *கடலிடங்கொண்ட கடல்வண்ணனிறே பெரியபெருமாள். ஆகையால் பூர்ணஷாட்குண்யராய் ஸர்வம் பூர்ணமாயாய்த்து இங்குத்தையிலவர்படியிருப்பது. அத்தாலே *யாவரும்வந்தடிவணங்கும்படி ஸர்வஸமாச்ரயணீயமாயாய்த்து இவ்விஷய மிருப்பது. அவதாரணத்தாலே

கைங்கர்யம் பண்ணுமிடத்துக்குமகப்பே கூவி, "క్రియతామితి" "க்ரியதா மிதி" என்று ஏவிக்கொண்டு, * வானுடமரும் குளிர்விழிகளாலே எதிர்விழி கொடுக்கும்விஷயமாகவே இவரை புத்திபண்ணி, "ஆதி மூர்த்தி யரங்கமாநகருளானே" என்றும், "இந்திரலோகமாளு மச்சுவைபெறினும் வேண்டேனரங்கமாநகருளானே" என்றுமன்றோ இவ்விஷயத்திலே இவர் மண்டியிருப்பது. "రాజవదర్హణీయమ్-తమ్-సఙ్గేశయమ్" "ராஜவதர்ஹணீயம் - தம் - ஸங்கேஶயம்" என்று இங்குத்தையில் ஸௌலப்யப்ரஸித்தியைச சொல்லுகிறதாகவுமாம். "பரவாஸுதேவர்" என்கையாலே - வ்யூஹவாஸுதேவரில் வ்யாவ்ருத்தி சொல்லுகிறது. "ఆత్మానంవాసుదేవాఖ్యంచిన్తయన్మధుసూదనః" "ஆத்மாநம்வாஸுதேவாக்யம் சிந்தயந்மதுஸூதந;" என்னும்படி, "இவள்திறத்தென்சிந்தித்தாயே" என்றும் "உறங்குவான்போல்யோகுசெய்தபெருமானை" என்றும் - வ்யூஹஸௌஹார்த்தமு முண்டிறே - இங்கு; இவர்பரிபூர்ணாநுபவம்பண்ணும் பரவிஷயமாகவேபெரியபெருமானை ப்ரீ[illegible]ண்ணி யிருப்பராய்த்து. "కావేరీవిరజాసేయం వైకుణ్ఠం రఙ్గమన్దిరమ్। సవా[illegible]రఙ్గేశః ప్రత్యక్షంపరమంపదమ్" "காவேரீவிரஜாஸேயம் வைகுண்டம்ரங்கமந்திரம்| ஸவாஸுதேவோரங்கேஶ: ப்ரத்யக்ஷம் பரமம்பதம்" என்னக்கடவதிறே. "அண்டாகோனணியரங்கன்" என்றும், "வடிவுடைவானோர்தலைவனேயென்னும் வண்டிருவரங்கனே" என்றும், "பொங்கோதஞ்சூழ்ந்த புவனியும் விண்ணுலகு, மங்காதும் சோராமேயாள்கின்ற வெம்பெருமான், செங்கோலுடைய திருவரங்கச்செல்வர்" என்னும்படியறிவார் அநுஸந்தித்தார்கள். விசேஷித்து, கோயில் திருத்வாதசாக்ஷரி ப்ரதாநமாயிறே திருவாராதநங்கொண்டருளுவது. "ద్వాదశాక్షరమన్త్రోయం మన్త్రాణాం త్రాయ ఉచ్యతే" "த்வாதஶாக்ஷரமந்த்ரோயம் மந்த்ராணாம் த்ராயஉச்யதே" என்கிறபடியே "శ్రీరఙ్గనాథజగన్నాథ" "ஸ்ரீரங்கநாத ஜகந்நாத" என்னும்படி ஆசார்யரான அவரும் ஸர்வர்க்கும் ராஜாவாயிருப்பர்; இங்கும் "రాజవదర్హణీయమ్" "ராஜவதர்ஹணீயம்" என்றதிறே. ஆகையாலே, ராஜாக்களைப் பள்ளியுணர்த்துமாப்போலே அந்த ராஜாக்களுக்கும் ராஜாவான ஸ்ரீரங்கராஜனைத் திருப்பள்ளியுணர்த்தினபடி சொல்லுகிறது. (ప్రాబోధకీమ్ - స్తుతిమాలామ్- యః అకృత - తమ్ - భగవన్తమ్ - భక్తాఙ్ఘ్రిరేణుమ్ - ఈడే - ப்ராபோதகீம் - ஸ்துதிமாலாம் - ய: - அக்ருத - தம் - பகவந்தம் - பக்தாங்க்ரிரேணும் - ஈடே) என்கிறது - அங்குத்தைக்கு அநுரூபமாயிருப்பதாய் ச்ராவ்யமாய்த் திருப்பள்ளி யுணர்த்துமதான பாமாலையை யாதொருத்தர் பணித்தார், அப்படிப்பட்ட வைபவத்தையுடையராய் ஜ்ஞாநாதிகுண பூர்ணரான தொண்டரடிப்பொடி

யாழ்வாரைத் துதித்துத் தொழுகிறேனென்கிறது. "அ[illegible]" கடே என்கிற சப்தம் இரண்டையும் வசிக்கக்கடவது. ராஜவதர்ஹணீயதையாலே - ராஜவதுபசாரமாம்படி திருப்பள்ளியுணர்த்தவேணு மிறே. "அயோத்தியெம்மரசே யரங்கத்தம்மா பள்ளியெழுந்தருளாயே" என்றிறே இவர் திருப்பள்ளியுணர்த்துவது. "శ్రీమాన్రాజరాజేన" "రాజాధిరాజస్సర్వేషామ్" "ஸ்ரீமதாராஜராஜேந" "ராஜாதிராஜஸ்ஸர்வேஷாம்" என்னும்படியான பெருமாளை, "వీరసౌమ్యవిబుద్ధ్యస్వ కౌసల్యానన్దవర్ధన" "కౌసల్యాసుప్రజారామపూర్వాసన్ధ్యాప్రవర్తతే। ఉత్తిష్ఠనరశార్దూల" "வீரஸௌம்யவிபுத்த்யஸ்வ கௌஸல்யாநந்தவர்த்தந" "கௌஸல்யாஸுப்ரஜாராம பூர்வாஸந்த்யாப்ரவர்த்ததே। உத்திஷ்டநரஸார்த்தூல" என்று வந்திகள் உணர்த்துமாப்போலே அவர்களுக்கும பெரியபெருமாளாய்ப் பெரியபெருமாளான ஸ்ரீரங்கராஜனை யிறே இவர் திருப்பள்ளியுணர்த்துவது. இவர்தாம் இப்பரபந்தத்திலே காலாதிக்ரமமானபடியையும், பரஹ்மாதிதேவதைகள்ஸவதாநராய் வந்து திருவாசலிலே காத்துநிற்கிறபடியையும் அங்குத்தையில் ஸம்மர்த்தத்தையும் திருப்பள்ளியுணர்ந்தால் கண்டருளும்படி மங்களவஸ்துக்கள் பாரிததபடியையும், மங்க[illegible]த்யங்கள் முழங்குகிறபடியையும், மஙகளதீபம்போலே ஆதி[illegible]தித்துத் தோற்ற, அதில் அரவிந்தங்கள் தீபிகைபோலே விகஸித்தபடியையும் சொல்லியிறே திருப்பளளியுணர்ததுகிறது. இவையெல்லாம் ராஜவதர்ஹணீயதைக்கு ஏற்கும்படியாயாய்த்திருப்பது. (రక్షేయమ్- ప్రాబోధికీమ్-సూక్తిమాలామ్-అకృత-ரஙகேஸயம - ப்ராபோதகீம்-ஸூக்திமாலாம - அகாத) என்கையாலே-அடிக்கடி, "அரங்கத்தம்மா பள்ளியெழுந்தருளாய்" எனறும், விசேஷித்து, "இலங்கையர்கோன் வழிபாடுசெய்கோயில் எம்பெருமான பள்ளியெழுந்தருளாயே" எனறுமிறே அருளிசசெய்தது. "ప్రాబోధికీమ్ - సూక్తిమాలామ్ - ப்ராபோதகீம் - ஸூக்திமாலாம்" என்கையாலே - திருப்பள்ளியெழுச்சியாகிற சொன்மாலையையிறே இவர் சொல்லிற்று; திருமாலையும் ஸூக்திமாலையிறே. அதிலும "என்னை நோக்காதொழிவதே" "அளியநம்பையலெனனூர்" என்றிறே ஆலோகநாலாபாதிகளை அபேக்ஷித்தது. அதில "கிடநததோர் கிடககை" என்று-கிடையழகை யநுபவித்து, நடையழகு தொடககமானவற்றைக்கண்டு அநுபவிக்கத் * துயிலிடைபாடுகிறூர். இரண்டும்பெரியபெருமாளைப்ரதிபாதித்தப்ரபந்தமிறே; ஆகையால் "సూక్తిమాలామ్-ஸூக்திமாலாம்" என்கிறத்திலே இரண்டுமஅந்தர்ப்பூதம். "భగవన్తమ్-பகவந்தம்" என்கையாலே-ஜ்ஞாநாதிகளைச்சொல்லி, ஜ்ஞாநபலம் ததீயசேஷத்வமென்றது தோற்ற, "భక్తాఙ్ఘ్రిరేణుమ్-பக்தாங்க்ரிரேணும்" என்கிறது. அவரும் "அடியார்க்காட்படுத்தாய்" என்றும், "துளபத்தொண்டாயதொல்சீர்த் தொண்டரடிப்பொடி" என்றுமிறே தலைக்கட்டிற்று. "தொடையொத்த துளபமும் கூடையும்பொலிந்து தோன்றிய தோள் தொண்டரடிப்பொடி" என்கையாலே திருப்பள்ளி யுணர்த்தி,

*குட்டிகன்மாலையிற்படியே-பாகவதமுகோல்லாஸ ஹேதுவானபக
வத்கைங்கர்யத்தை ப்ரார்த்தித்தார் - அவர்; "ஃஜே - ஈடே" என்று-
இதில் அவர்விஷயத்தில் வாசிககாயிகரூபகைங்கர்யத்தைச் சொல்
லித் தலைக்கட்டுகிறது.

அ.— (மண்டங்குடியித்யாதி,) சேஷத்வ ஸீமாபூமியான
தொண்டரடிப்பொடியாழ்வார்திருவவதார ஸ்தலம் * மிக்கவேதிய
ராலே அநுஸந்திக்கப் படுமென்கிறது.

மண்டங்குடியென்பர் மாமறையோர்மன்னியசீர்த்
தொண்டரடிப்பொடிதொன்னகரம்-வண்டு
திணர்த்தவயல்தென்னரங்கத்தம்மானைப்பள்ளி
உணர்த்தும்பிரானுதித்தவூர்.

வ்யா.—(மாமறையோர் – வண்டுதிணர்த்தவயல் தென்னரங்
கத் தம்மானைப்பள்ளி யுணர்த்தும்பிரான் - தொண்டரடிப்பொடி-
உதித்தவூர் - தொல்நகரமான - மண்டங்குடியென்பர்) "கண்
ணங்குடி, குறுங்குடி, புள்ளம்பூதங்குடி" என்று உகந்தருளின
நிலங்களைச்சொ மாப்போலே, இங்கும் "மண்டங்குடியென்பர்
மாமறையோர்" கிறது. இவர் மாமறையோராகையாலே மண்
டங்குடியைச் ல்லுமவர்களும மாமறையோராய்த்து. * மிக்க
வேதியர் வேத னுட்பொருளான ததீயவைபவத்தை யறிந்தவர்
கள்; அதுதான் தொண்டரடிப்பொடி தொன்னகரமிறே. தொன்ன
கரம் - பழையதாய்ப் போருகிற நகரம். நகரங்களிலே யிறே நல்ல
வஸ்துக்களுண்டாவது, "நல்லார் நவில்குருகூர்" என்னுமாப்போ
லே இந நகரமாகைக்கு ஹேதுசொல்லுகிறது (வண்டுதிணர்த்த
வித்யாதியால்) வண்டுகள் நெருங்கின வயலையுடைய."வயலுளிரிந்
தன சுரும்பினம்" என்றருளிச்செய்தாரிறே. "பூங்குவளைப்போ
தில் பொறிவண்டுகண்படுப்ப." இப்படி நீர்ப்பூவிலே வண்டுகள்
நெருங்கின வயல்சூழ்ந்த கோயிலுககு நிர்வாஹகரான பெரியபெ
ருமானை. (வண்டுதிணர்த்த வயல்தென்னரங்கத் தம்மானைப்பள்ளி
யுணர்த்தும) என்கையாலே - "வயலுளிரிந்தன சுரும்பினம்"
இத்யாதிப்படியே; "ஷஜ்ரீஸுப்தப்ருங்கா" "மஞ்ஜரீஸுப்தப்ருங்கா"
என்று பூக்களிலே கண்படுத்த வண்டுகள் உணர்ந்தன. ஸ்ரீரங்க
நாயகியார் ஸ்தநஸ்தபகத்திலே கண்வளர்ந்தருளுகிறஸ்ரீரங்கராஜப்
ருங்கத்தை, "அரங்கத்தம்மாபள்ளி யெழுந்தருளாயே" என்று * ப
ள்ளி யுணர்த்தும்பிரான் திருப்பள்ளியுணர்த்தி, பின்புள்ளார்க்கு
ம் இப்ப்ரபந்தத்தை யுண்டாக்கி உபகரித்தருளினவர். (உதித்தவூ
ர்) அறிவிலா மனிசர்க்கு அறியாதனவறிவித்து அஜ்ஞாநத்தைப்
போக்குகைக்காகவாய்த்து - இவர் அவ்வூரிலே யுதித்தது. "கதிர
வன் குணதிசைச்சிகரம் வந்தணைந்தான் கனவிருளகன்றது" என்
னும்படியாயாய்த்து ஆந்தரமான அந்தகாரத்தைப் போக்கிற்று. ஆ
கையால், தொண்டரடிப்பொடி தென்னகரம் மண்டங்குடியென்பர்

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த

## வ்யாக்யாநாவதாரிகை.

அ.—இவ்வாழ்வாராகிறார் முதலிலே ஸ்வரூபோபாய புருஷார்த்த விவேக சூந்யராய், தேஹத்தில் ஆத்மபுத்தியைப்பண்ணி, ததநுபந்திகளான சப்தாதிவிஷயங்களிலே மண்டி, தம்மோடுசேர்ந்தாரையும் தத்ஸ்வபாவராக்கிப்போராநிற்க,“மாதரார்கயற்கணென்னும் வலையுட்பட்டழுந்துவேனைப், போதரே யென்று சொல்லிப் புந்தியிற் புகுந்து தன்பா, லாதரம்பெருகவைத்த வழகன்” என்கிறபடியே-பெரியபெருமாள்தாம், நிர்ஹேதுக க்ருபையாலே தன்வடிவழகைக்காட்டி, விஷயாந்தர ப்ராவண்யத்தை மாற்றி, ஸ்வரூபாநுரூபமாகத் தன்பக்கலிலே அபிநிவேசத்தைப் பிறப்பிக்க, இவரும் ப்ரீதிகாரிதமான கைங்கர்யத்தைப்பாரித்துக்கொண்டு,பெரியபெருமாள் திருவடிகளிலேசென்றவிட[illegible]லே, திருக்கண்களாலே குளிரநோக்குதல்,கையைநீட்டியணை[illegible],குசலப்ரச்நம் பண்ணுதல், “శిరసా దేవః ప్రతిగృహ్ణాతి” “ஶிரஸாதேவ[illegible]கிர்ஹ்ணதி” என்கிறபடியே-*சூட்டுநன்மாலைகளை சிரஸா வஹித்தல் செய்யாதே பள்ளிகொண்டருளினார் பெரியபெருமாள்;

---

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

## நஞ்சீயரருளிச்செய்தவ்யாக்யாநாவதாரிகை.

“అనాదిమాయయా సుప్తో యదా జీవః ప్రబుధ్యతే” “அநாதிமாயயா ஸுப்தோயதாஜீவஃப்ரபுத்யதே” என்கிறபடியே - அநாதிகாலம் அஜ்ஞாநத்தாலே யுறங்குகிற விவரைப் பெரியபெருமாள் தம்முடைய நிரவதிக க்ருபையாலே யுணர்த்தியருள; உணர்ந்துபெரியபெருமாளே ப்ராப்யரும் ப்ராபகருமென்னுமிடம் “ஐம்புலனகத்தடக்கிக் காம்பறத்தலைசிரைத்துன் கடைத்தலை யிருந்துவாழும் சோம்பரையுகத்தி”என்று இவரையிட்டுநிலையிடுவித்து,இப்ப்ரபந்தத்தாலே நாட்டுக்கு வெளிச்செறிப்புப் பண்ணிவைத்து நிர்ப்பரராய்க் கண்வளர்ந்தருள,அத்தலையித்தலையாய்ப்பெரிய பெருமாளையுணர்த்தி யடிமைசெய்யப்பாரிக்கிறார்.

---

ப்ரவேசே. இவராநுகூலரானபின்பு உறங்குகிறானென்கைக்கு முன்பு உறக்கமில்லையோவென்ன; அருளிச்செய்கிறார் (மாதராரித்யாதி.)

அதற்கு நிபந்தநம் அநாதரமென்னவொண்ணாது ப்ரீதிபூர்வ கையாலே; உண்டதருமையாலே யாதல்தமோபிப்வத்தாலேயாதல் என்னவொண்ணாது சுத்தஸத்வமாகையாலே;பின்பு இதற்குநிபந்த நமென்னென்னில்;"ஆதலால்பிறவிவேண்டேன்"என்னும்படிப்ராக் ர்திஸம்பந்தம் அப்ராப்தமென்னும்படியானஜ்ஞாநவிசேஷத்தையு டையரானபடியையும், "போனகஞ்செய்த சேடந்தருவரேல்புநித ம்"என்னும்படிததியசேஷபர்யந்தமாக ஸ்வரூபயாதாத்ம்யஜ்ஞாந ம்பிறந்தபடியையும், "இச்சுவைதவிர - அச்சுவைபெறினும்வேண் டேன்" என்னும்படிப்ராக்ர்திபுருஷயாதாத்ம்யஜ்ஞாநம் பிறந்தபடி யையும், "காவலிற்புலனைவைத்து" என்னும்படி இந்த்ரியங்களை நியமித்தபடியையும், "குளித்து மூன்றனலையோம்புங் குறிகொள ந்தணமைதன்னை யொளித்திட்டேன்" என்னும்படி உபாயாந்தரங் களில் துவக்கற்றபடியையும், "உன்னருளென்னு மாசைதன்னால் பொய்யனேன் வந்துநின்றேன்" என்னும்படி உபாய யாதாத்ம்ய ஜ்ஞாநம் பிறந்தபடியையு மநுஸந்தித்து, "சோம்பரையுகத்திபோ லும்" என்கிறபடியே இவரை யிப்படிப் பெறுவோமென்கிற ப்ரீதி ப்ரகர்ஷத்தாலும், "ఆత్మానం వాసుదేవాఖ్యం చింతయన్" "ஆத்மாநம்வாஸு தேவாக்யம்சிந்தயன்" என்கிறபடியே இவரைப் புகுரநிறுத்தின தன்வைபவத்தையு மநுஸந்தித்து, "நாகமிசைத் துயில்வான்போ லுலகெல்லாம்நன்கொடுங்கயோகணைவான்"என்கிறபடியே-எல்லா ரையும்இவரைப்போலேநம்பக்கலிலேப்ரவணராக்கும்விரகேதோ! வென்று ததேகாக்ர சித்தராய்க்கொண்டு பள்ளிகொண்டருளினார்.

---

ப்ராப்ய ப்ராபகங்க ளிரண்டுமவனே யென்றறுதியிட்டால் பின்பு திருப்பள்ளியுணரும்படியையும், அழகோலக்க மிருக்கும்ப டியையும், அருகேதிருமாலையெடுத்து அடிமைசெய்யும்படியையும், மநோரதித்துஇவையேயாத்ரையாய்ச்செல்லுமித்தனையிறே.நாய்ச் சியாருக்கு "மாரிமலைமுழஞ்சில்"என்கிறபாட்டிலேஇதுவேயிறே அநுஸந்தாநம்;நம்மாழ்வாரும், * கெடுமாற்கடிமையிலே புருஷார் த்தத்திநுடையசரமாவதியை நிலையிட்டு, அநந்தரம்*கொண்டபெ ண்டீரிலேநாட்டுக்குவேண்டும் ஹிதமருளிச்செய்து,பின்பு "கிடந் தநாள்கிடந்தாய்"என்கிறபாட்டிலேஉணர்த்தி- யெழுப்பியடிமைசெ ய்யப்பாரித்தாரிறே.

“மாதரார் கயற்கணென்னும் வலையுட்பட்டு” என்கிறபடியே இந்த்ரியவஶ்யராய்க்கழிந்தவன்று, “అనిద్రస్సతతంరామః” “அநித்ரஸ்ஸததம்ராமஃ” என்கிறபடியே உறங்காதிருந்த பெரியபெருமாள், “அடியரோர்க்ககலலாமே” என்னும்படி கைபுகுந்தபின்பு கரைச்சல்கெட்டு, மார்பிலே கைவைத்து உறங்கப்புக்கார். “எம்பிராற் காட்செய்யாதேயென்செய்வான் தோன்றினேனே” என்றிருக்குமவராகையாலே கைங்கர்யத்வரையாலே, “ఉత్తిష్ఠనరశార్దూల” “உத்திஷ்டநரசார்த்தூல” “సమయాబోధితః” “ஸமயாபோதிதஃ” “உம்பர்கோமானே யுறங்காதெழுந்திராய்” என்னுமாப்போலே “அரங்கத்தம்மா பள்ளியெழுந்தருளாயே” என்று திருப்பள்ளியுணர்த்தி, “உனக்கேநாமாட்செய்வோம்” என்றாப்போலே “தொண்டரடிப்பொடியென்னுமடியனை யளியனென்றருளி யுன்னடியார்க் காட்படுத்தாய்” என்று-ததீயபர்யந்தமான கைங்கர்யத்தைக் கொண்டருளவேணுமென்று ப்ரார்த்திக்கிறாராயிருக்கிறது.—திருப்பள்ளியுணர்த்துகைக்குநிபந்தநமென்னென்னில்;-“ஆம்பரிசறிந்துகொண்டு” என்கிறபடியே-கைங்கர்யயாதாத்ம்யமறியுமவராகையாலே, “అహంసర్వంకరిష్యామిజాగ్రతస్స్వపతశ్చతే” “அஹம்ஸர்வம்கரிஷ்யாமிஜாக்ரதஸ்ஸ்வபதஸ்சதே” என்றும், “ஒழிவில் காலமெல்லாம் உடனாய்மன்னி” என்கிறபடியே-ஸர்வதேச ஸர்வகாலஸர்வாவஸ்தைகளிலும் ஸர்வவிதகைங்கர்யத்தையும் பண்ணுமிடத்தில் “தனக்கேயாக வெனைக்கொள்ளுமீதே” என்று அவருகந்தகைங்கர்யமாகவேணும், அதுசெய்யுமிடத்தில் “క్రియతామితిమాంవద” “க்ரியதாமிதிமாம்வத” என்றும், “எனக்கேயாட்செய்” என்றும், “முகப்பேகூவிப்பணிகொள்ளாய்” என்றும்சொல்லுகிறபடியே-ஏவிகொள்ளவேணுமென்றிருக்குமவராகையாலே, ப்ரபாதஸூசகங்களைச்சொல்லித் திருப்பள்ளியுணர்த்துகிறார்.

---

விச்வாமித்ரனும், “కౌసల్యాసుప్రజారామ పూర్వాసంధ్యాప్రవర్తతే। ఉత్తిష్ఠనరశార్దూల కర్తవ్యందైవమాహ్నికమ్” “கௌஸல்யாஸுப்ரஜாராம பூர்வாஸந்த்யாப்ரவர்த்ததே। உத்திஷ்டநரசார்த்தூல கர்த்தவ்யம் தைவமாஹ்நிகம்” என்றானிறே; அப்படியே இவரும் பெரியபெருமாள் உணர்ந்தருளும்போதை யழகுகண்டு அடிமைசெய்ய ஆசைப்பட்டுத்திருப்பள்ளியுணர்த்துகிறார்.

---

ஆனால் எழுப்புவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (எம்பிராற்கித்யாதி.) ஆனாலும் நிர்ப்பந்தித்தெழுப்புகைக்கு நிபந்தநமேதென்ன; ப்ரஸங்கா பூர்வகமாக அருளிச்செய்கிறார் (திருப்பள்ளியித்யாதி.)

திருமாலையில்திருப்பள்ளியெழுச்சிக்குவாசி யென்னென்னில்; ஆராதிகாசமயானுப்தரானவிவரைப் பெருமாளுணர்த்தினார் அதில்; இவர்பக்கல் வ்யாமோஹத்தாலேஸாப்தரான அவரைத் திருப்பள்ளி யுணர்த்துகிறார்-இதில்; "புன்கவிதையேனுமெம்பிராற்கினிய வாறே" என்று-வாசிக கைங்கர்யத்தை இனிதாகக் கைக்கொண்டபடி சொல்லிற்று-அதில்; "தொடையொத்ததுளபமும் கூடையும் பொலிந்து தோன்றியதோள் தொண்டரடிப்பொடியென்னு மடியனையளியனென்றருளி" என்கையாலே-காயிககைங்கர்யத்தை இனிதாகக்கைக் கொண்டருளவேணுமென்கிறார் – இதில்; "எம்பிராற்கினியவாறே" என்று-பெரியபெருமாளுக்கினிதானகைங்கர்யத்தைப்பெற்றுநின்றார்-அதில்; "அடியார்க்காட்படுத்தாய்" என்று-ததீயருகந்தகைங்கர்யத்தையபேக்ஷிக்கிறார்-இதில். அதில்-பெரியபெருமாளுடைய க்ருஷி பலித்தபடி சொல்லிற்று; இதில் - இவருடைய க்ருஷிபலித்தபடி சொல்லுகிறது. "எளியதோராருளுமென்றேயென் திறத்து" என்று - தம்மை விஷயீகரிக்க வேணுமென்றார்-அதில்; "அவர்க்குநாளோலக்கமருள" என்று - பரஸம்ருத்தியை ஆஶாஸிக்கும்படி பாகம்பிறந்தபடி சொல்லுகிறது-இதில். ... ... *

அ.—முதற்பாட்டு. (கதிரவனித்யாதி) ஆதித்யனானவன் தன் ஸ்வரூபஸித்திக்காக விளக்காய் வந்து தோற்றினான்; அவனைக் குஶலப்ரஶ்நம் பண்ணவேண்டாவோ வென்கிறார். "வையகத்திருளிரிவிளக்காக" என்றாரிறே.

---

ஆதித்யன் உதயகிரியிலேவந்துதோற்றினான், திருவாராதநத்துக்கு ஸத்ருஶமான ஸகலோபகரணங்களுங்கொண்டு தார்மிகரான தேவஜாதிகளும், ராஜாக்களும், பக்தாபிமாநராய்த் திருக்கண்ணோக்காகத் தெற்குதிக்கிலே ப்ரதமகடாக்ஷத்துக்காக "நான் முற்பட்டேன் நான்முற்பட்டேன்" என்று முற்கோலிக்கொண்டு வந்து நின்றார்கள்; ஸர்வரக்ஷகராய்ச்ரியப்பதியாய் ஆச்ரிதவத்ஸலராய் ஸர்வஸமாச்ரயணீயரான தேவரீர் அடியேனுக்காக உணர்ந்தருள வீரென்கிற தாத்தை அடியேனுக்குகந்தருளி திருப்பள்ளியுணர்ந்து அடியோங்களடிமை கொண்டருளவேணுமென்கிறார். ப்ரஜைகளைக் காட்டி ஜீவநம் வேண்டுவாரைப்போலே ஆராதகரானதேவஜாதியை முன்னிட்டுக்கொண்டு ஸ்வப்ரயோஜநத்தை அபேக்ஷிக்கிறார். ... ... ... ... ... ...*

அ.—முதல்பாட்டில் - "యస్యావతారరూపాణి నమస్యన్తి దివౌకసః" "யஸ்யாவதாரரூபாணி நமஸ்யந்தி திவௌகஸ:" என்னும்படியே-ஆராதகரான தேவஜாதிகள்அவஸரப்ரதீக்ஷராய்வந்துநின்றார்கள், திருப்பள்ளியுணர்ந்தருள வேணுமென்கிறார்.

நாட்டையெல்லா மெழுப்புகிறஆதித்யனுதித்தால் எங்களாதித்யனுதிக்கவேண்டாவோ, பாஹ்யமான அந்தகாரமிறேஅவனாலே போக்கலாவது, ஆந்தரமான அந்தகாரம்போக்கும்போது தேவரீருணர்ந்தருளவேண்டாவோ. ஆதித்யன் உதயபர்வதத்தை வந்தணையாநின்றான், இருள்நீங்காநின்றது, ஸமாராதநோபகரணமான திருப்படித்தாமங்கள் விகஸிதமாகா நின்றன, ஆராத்யர்தேவரீரொன்று ஆராதிப்பாரெல்லாம் தந்தாம்பரிகரங்களோடே வந்தார்கள், இத்தையெல்லா மடைய தேவரீர் திருப்பள்ளியுணர்ந்தருளி விசேஷகடாக்ஷம் பண்ணியருளவேணுமென்கிறார்:

கதிரவன்குணதிசைச்சிகரம் வந்தணைந்தான் கனவிருளகன்றதுகாலையம்பொழுதாய், மதுவிரிந்தொழுகினமாமலரெல்லாம்வானவரரசர்கள்வந்துவந்தீண்டி, எதிர்திசைநிறைந்தனரிவரொடும்புகுந்தஇருங்களிற்றீட்டமும்பிடியொடுமுரசும், அதிர்தலிலலைகடல்போன்றுளதெங்கும் அரங்கத்தம்மாபள்ளியெழுந்தருளாயே.( )

ப-ரை.—கதிரவன்-ஸூர்யனானவன், குணதிசை—கிழக்குதிக்கிலே,சிகரம்-உதயகிரியிலே,வந்தணைந்தான்-வந்துகூடினான்; கனவிருள் - ராத்ரியில்மிக்கிருந்தஇருளானது,அகன்றது-ஸவாஸநமாகப்போயிற்று;திருவாராதநம்செய்கைக்குஉத்யோகிக்கக்கடவ, அம்-அழகிய, காலைபொழுதுஆய் - உதயகாலம்வர, மா - பெரிய, மலரெல்லாம - புஷ்பங்களெல்லாம், விரிந்து - விகஸிதமாய், மதுஒழுகின - தேன்வெள்ளமிடாநின்றன; வானவர் - தார்மிகளான தேவர்களும், அரசர்கள் - ராஜாக்களும், வந்து வந்து — ஒருவர்க்கொருவர் முற்கோலிவந்து, ஈண்டி - திரண்டு, எதிர்திசை - திருக்கண்ணோக்கானதெற்குதிக்கிலே, நிறைந்தனர் - நிறைந்துநின்றார்கள்; இவரொடும்புகுந்த — இவர்களோடே இவர்கள் வாஹநமாகிய, இரும்களிற்றீட்டமும் - பெரிய ஆண்யானைத்திரள்களும், பிடியொடு - பெண்யானைத்திரள்களும், முரசும்-பேரிகைகளும், அதிர்தலில்-சப்திக்கும்போது,எங்கும்-எல்லாதிக்குக்களிலும்,அலை-அலையெறியாநின்ற, கடல்போன்றுளது - ஸமுத்ரகோஷத்தையொத்திருந்தது; ஆதலால்,அரங்கத்தம்மா- *திருவரங்கச்செல்வனாரானதேவரீர், பள்ளியெழுந்தருளாய் — திருப்பள்ளியுணர்ந்தருளி கடாக்ஷித்தருளவேணுமென்கிறார். (க)

வ்யா.—(கதிரவன்குணதிசைச்சிகரம்வந்தணைந்தான்) கண்வளர்ந்தருளுகிற தேவரீர்க்கு ப்ராதக்காலத்திலே ஸந்த்யாதீபங்கொண்டு வருவாரைப்போலே, திநகரனானவன் தன்கிரணங்களெல்லாவற் றோடும் கிழ்திக்கில்உதயகிரியைவந்தணையாநின்றான்.

---

வ்யா.—(கதிரவனித்யாதி) தன்னுடைய ஆயிரங் கிரணங்களாலும் ஜகத்திலந்தகாரத்தை நீக்கி வெளிச்செறிப்பைப் பண்ணவல்ல ஆதித்யனானவன், கிழக்கிலே உதயகிரியிலே வந்து ஸங்கதனானன்.

"கதிரவரவரவர் கைந்நிரைகாட்டினர்" "நாரணன்தமரைக் கண்டுகந்து" என்று- தேவரீருடையார் அர்ச்சிராதிகதியேபோம்போது, ஆதிவாஹிகர்தம் தாம்பதங்கள் நிலைநிற்கைக்காக, தேவருடையார்க்குத் தாங்கொடுத்து விளக்குடையாரோ பாதிவகுத்த விஷயத்தில் இஞ்சித்கரியாதிரார்களிறே. கண்வளர்ந்தருளுகிறதேவரீர் திருப்பள்ளியுணர்ந்தருளுவதெப்போதோவென்று அவஸரப்ரதீக்ஷனாய், "ஸ்ரீஸ்ஸூர்ய:" "பிஷோதேதிஸூர்ய:" என்கிறபடியே, கீழ்த்திக்கி லுதயகிரியிலே வந்து தோன்றினான். குன்றத் திட்டவிளக்காக உதயபர்வதத்தி னருகே ஊரையும் சோலையையும் கண்வளர்ந் தருளுகிறபடியையுங் காண்கையி லுண்டான ஆசைப்பாடுதோன்ற வந்து கொடுநின்றான்.

(கனவிருளகன்றது) ஆதித்யன்வரவுக்குத் தக்கபடியேசெறிந்தவிருளானது குறையவாங்கிற்று. "இருள்வீற்றிருந்தது பார்முழுதும்" என்கிறபடியே ராஜாஜ்ஞையை பங்கித்து வந்நியர் குறும்புசெய்யுமாப்போலே ஸாம்ராஜ்யம்பண்ணிற்று. மதிப்பனான ராஜா ஸபரிகரனாய் எடுத்துவிட்டவாறே ஒருபயணம் குறையவாங்குமாப்போலே இருட்டும் ஒருபயணங் குறையவாங்கிற்று. (காலையம்பொழுதாய் மதுவிரிந் தொழுகின மாமலரெல்லாம்) ட்டுப்போய் நின்றவளவிலே, "ப்ராஹ்மே முஹூர்த்தே சோத்தாய" "ப்ராஹ்மேமுகூர்த்தேசோத்தாய," "சிற்றஞ்சிறுகாலே," என்கிறபடியே ஸமாராதநோபயோக்யமான அழகிய காலமாய், அக்காலத்திலே, தேசாந்தரம் போன பந்துக்கள் வாராநின்றார்கள் என்று அறிந்தவாறே.

---

அவனுக்கடுத்தாப்போலே கோயிலாய்த்துக் காணும்; திருவடிகளும் அத்திக்கிலேயாகப் பெற்றது; அடியிலும் முடியிலும் ஆதித்யர்கள் வந்து நிற்க நடுவேகிடந்து கண்வளர்ந்தருளுகிறதென்?; * கதிராயிரமிரவிகலந் தெரித்தாலொத்த நீண் முடியிறே. "மிக்கசெஞ்சுடர்ப்பரிதி" என்னக்கடவதிறே. (கனவிருளகன்றது) ராத்ரியில் மிக்கஇருளானது ஸவாஸநமாகப்போய்த்து.(காலையம்பொழுதாய்) ஆராதகர்ஆராதநார்த்தமாக உத்யோகிக்கக்கடவ காலமாய்த்து. (மதுவிரிந்தொழுகின மாமலரெல்லாம்) உதயபலமாக ஆராதநோபகரணமான புஷ்பங்கள் விகஸிதமாய் மதுவெள்ளமிடாநின்றது.

---

முதற்பாட்டு.—ஆதித்யனுக்கு உதயாஸ்தமநம் ஸ்வபாவமன்றோ, நமக்குக் கிஞ்சித்கரிக்கைக்கு என்கிறதெப்படியென்ன; அருளிச்செய்கிறார் (கதிரவரவரவரித்யாதி.) விளக்குடையார் - கைவிளக்குப்பிடிக்கிறவர்கள்.

ஸ்வதேசத்திலிருந்தபந்துக்கள் முகமலருமாப்போலே,இவ்வெயிற்கொழுந்து தாமரைப்பூக்களை வந்தணவும்படியான காலவண்ணிமையாலே பூக்கள் ஸ்மிதம் பண்ணினவாறே, பூக்களினுடைய செறிவுநெகிழ்ந்தாப்போலே பூவில் தேன்களடைய வொழுகாநின்றன. மாமலர் - பெரியமலர். "மாமலரெல்லாம்" என்கையாலே புஷ்பஜாதிக்கெல்லாமுபலக்ஷணம். மதுவிரிந்தொழுகின – மதுவெள்ளமிடாநின்றது. (வானவரித்யாதி) ஆராதகரான தேவர்களும் ராஜாக்களும் தந்தாம் பதப்ரம்சம் வராமைக்கு இதுவே யாத்ரையாகவும் ஆராத்யரான தேவரீரைத்திருவடித்தொழுகையிலுண்டான த்வரையாலே முற்பட்டார் முற்பட்டபடி ஒருவரிருவராய் வந்து திரண்டு திக்குக்களெங்கும் நிறையப் புகுந்தார்கள். 'திருக்கண்ணோக்கிலும் அலலாத திககுக்களெங்கும் நிறைந்தார்களென்னவுமாம்; தேவரீருடைய பரிகரமென்னில் இங்ஙனே யிருக்கவேண்டாவோ. (இவரொடுமித்யாதி) இவர்களுடனே வந்த பெரியயானைத்திரள்களும் இனம்பிரியாதபேடைகளுமாய். ஸ்ரீரங்கமிறே!.வாத்யகோஷங்களும, இநத ஸமுதாயமாக முழங்குகிறமுழக்கமானது, உறங்குகிறபிள்ளைகளை யொருவகைகளாலே யெழுப்புமாப்போலே வாத்யகோஷங்களாலே திருப்பள்ளி யுணரும்படி. (அதிர்தலில்) இப்படி கோஷிக்கையில்."குமிறுமோசைவிழவொலி" என்னுமாப்போலே இந்தஸமுதாயகோஷமானதுசந்த்ரோதயத்திலகடல்போலேகிளர்ந்தது,பெருமபுறக்கடலானதேவரீர உணரவேண்டாவோ

(வானவரித்யாதி) தாமாதிகளான தேவர்களும், ராஜாக்களும், பக்நாபிமாநராய், தந்தாமுடைய பலஸித்திக்கும் ஆபந்நிவர்த்திக்கு முடலாக ஒருவர்கொருவர் முற்கோலித்திரண்டனர்கள். (எதிர்திசையித்யாதி) திருககண்ணோக்கான தெற்குதிக்கிலே விவரமறப்புகுந்து நின்றார்கள். (இவரொடும் புகுந்த இத்யாதி) இவர்களேறும வாஹநங்களானகளிறுகளும் பிடிகளும் முரசினுடையத்வநிகளுமாய்த் திரண்டு நெருககிநின்று த்வநிக்கிறதவநியானது அலையெறியாநின்றஸமுத்ரகோஷம்போலே எங்கும் கோஷியாநின்றது.(அரங்கத்தம்மாபள்ளியெழுந்தருளாயே)உபயவிபூதிநாதத்வம் தோற்ற * செங்கோலுடைய திருவரங்கச் செல்வனான தேவரீர் அநந்யகதியான அடியேனுக்காகத் திருப்பள்ளியுணர்ந்தருளி அடிமைகொண்டருள வேணுமென்கிறார். ... (க)

"எதிர்திசை" என்று-முழுச்சொலலாய்-திக்குகளெங்குமென்னுதல். ஆனைகள், பிடிகளோடேவருவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (ஸ்ரீரங்கமிறேயென்று.) பிராட்டியிருக்கிற ஸ்தலமாகையாலே, தாங்களும்பிடிகளோடே வருகின்றனவென்றபடி. "அரங்கத்தம்மா" என்று - இங்குத்தைக்கு நிர்வாஹகத்வம்.. ... (க)

டப்யவிபூதியுக்தரானதேவரீர் திருப்பள்ளியுணர்ந்தருளி," இவர்களுக்கு முகங்கொடுத்தருளி, அடிமை கொண்டருள வேணுமென்னுகருத்து. ... ... ... ... ... ... (க)

அ.—இரண்டாம்பாட்டு. (கொழுங்கொடியித்யாதி) முல்லையின்பரிமளத்தை முகர்ந்துகொண்டு கீழ்காற்றுவந்தது, தாமரைப்பூவில் கிடந்துறங்குகிற ஹம்ஸ மிதுநங்களும் கிளம்பிற்றின, ஸ்ரீகஜேந்த்ராழ்வானுடைய விரோதியை யறுக்க அரைகுலையத் தலைகுலைய வந்து ரக்ஷித்தருளினதேவரீர் கண்வளர்ந்தருளுகிறதென், திருப்பள்ளி யுணர்ந்தருளீரென்கிறார்.

கொழுங்கொடிமுல்லையின்கொழுமலரணவிக் கூர்ந்ததுகுணதிசைமாருதமிதுவோ, எழுந்தனமலரணைப்பள்ளிகொள்ளன்னம் ஈன்பனி நனைந்ததமிருஞ்சிறகுதறி, விழுங்கியமுதலையின்பிலம்புரைபேழ்வாய்வெள்ளெயிறுறவதன்விடததினுக்கனுங்கி, அழுங்கியவானையினருந்துயர்கெடுத்த அரங்கத்தம்மாபள்ளி யெழுந்தருளாயே. (உ)

ப-ரை.—குணதிசைமாருதம் - விடியற்காற்றானது, கொழும் - செழுமை தங்கிய, கொடி - கொடியையுடைததான, முல்லையின் - முல்லையினுடைய, கொழுமலர் – அழகியமலரின பரிமளததை, அணவி - அளைந்துகொண்டு, கூர்ந்தது - விஞ்சிற்று; மலரணை-தாமரைப்பூவாகிறபடுக்கையிலே, பள்ளிகொள்-உறங்குகிற, அன்னம - ஹம்ஸமிதுநங்களானவை, ஈன - மழைபோலேசொரிகிற, பனிநனைநத – பனியாலேநனைந்த, தம் – தங்களுடைய, இரும் - அழகிய, சிறகு-இறகுகளை, உதறி-உதறிக்கொண்டு, எழுந்தன-உறக்கம்விட்டெழுந்தன; விழுங்கிய-விழுங்கின,முதலையின-முதலையினுடைய,பிலம்புரை-பிலத்வாரத்தை பொத்த, பேழ்வாய்-பெரியவாயிலுள்ள, வெள்ளெயிறுற-வெளுததகோரைபற்களூன்ற,அதன்-அம்முதலையினுடைய,விடததுக்கு - பல்லினவிஷத்துக்கு,அனுங்கி-அழுங்கிய - மிகவும் நோவுபட்ட, ஆனையின - ஸ்ரீகஜேந்த்ராழ்வானுடைய,அருந்துயர்-பெரியதுக்கத்தை,கெடுத்த - போக்கின, அரங்கம்மாபள்ளியெழுந்தருளாயே. (உ)

வ்யா.—(கொழுங்கொடியித்யாதி) ஸச்ரத்தமான முல்லையினுடைய ஸச்ரத்தமான பூவையணவி. *அல்லியுந்தாதும் அரும்புமான கந்தல்படாமே அருமிதியானமணததை வாங்கிக்கொண்டு, "புதுமாதவிமீதணவி" என்னுமாப்போலேகீழ்த்திக்கில்காற்றானது, கூர்ந்தது-விஞ்சிற்று. கூருகையாவது – மிகுகை.

---

அ.—இரண்டாம்பாட்டு.போதுவிடிந்தமைக்கடையாளமான கீழ்காற்றும் புஷ்பசாயிகளானஅன்னங்களினுடையப்ரபோதமுமுண்டாயிற்று; ஆச்ரிதவத்ஸலரான தேவரீர் திருப்பள்ளியுணர்ந்தருளவேணுமென்கிறார்.

வ்யா.—(கொழுங்கொடியித்யாதி)ச்ரத்தையையுடைத்தானமுல்லைச்செவ்விமலரின்பரிமளத்தையளைந்துகொண்டு விடிகாற்றானது "நீங்களுறங்குகிறதென்" என்றுஉணர்த்துவாரைப்போலே சூழ்ந்துகொண்டு முகங்களிலே அலையெறியாநின்றது. காலைப் பிடித்துணர்த்துகிறபடி.

ஆதித்யனுக்கு பரஸ்பர யுறவான தாமரைப்பூவினுடைய விகஸ்வமையன்றியேநிலத்தில் பூவானமுல்லைப்பூவும்விகஸித்து, அதின்மணத்தைக்கொண்டுதேவரீரைத்திருப்பள்ளி யுணர்த்துமாப்போலே வந்துகொடுகின்றது."இதுவோ"என்றது-ராஜாக்களுக்கு அந்தரங்கரானவர்கள் வந்தவர்களைக்காட்டுமாப்போலேபார்த்தருளீரென்கிறார். ஸ்பர்ஶேந்த்ரியக்ராஹ்யமானதை "இதுவோ" என்கையாலே-காற்றுக்கு்ஜைததகதித்வம் தவிர்ந்து நின்றாப்போலே யிருக்கிறது.(எழுந்தனமலரணையித்யாதி) இக்காற்று வீசினவாறே விடிந்ததாகாதேயென்று மலராகிறபடுக்கையிலேபள்ளிகொள்ளுகிற ஹம்ஸமிதுநங்களுணர்ந்தன: "பள்ளிகொள்" என்கிறது உகந்தருளின நிலத்திலேயுள்ளவை யாகையாலே வுபசாரமாகவல்லது சொல்லாரிறே. நம்மில்சிறியார் இங்கு வர்த்திப்பாரில்லை யென்றிருப்பர்களே. பூம்படுக்கையாகையாலே தனிப்படுக்கைதணலோடொக்கையாலே மிதுநமாயல்லது சயியாமை தோற்றுகிறது; * மென்மலர்ப்பள்ளி வெம்பள்ளி யாமே. (ஈன்பனிநனைந்த) உண்டான பனியாலேநனைந்ததென்னுதல்; சொரிகிறபனியென்னுதல். "ஒழுகுநுண்பனிக்கொடுங்கிய" இத்யாதி. (இருஞ்சிறகுதறி) "பெரியசிறகையுதறிக் கொண்டுபேடையைச் சிறகுக்குள்ளே வளர்த்தி. தன்சிறகையிட்டுக்கவித்துக்கொண்டாய்த்துக்கிடந்தது. நாடோடியான அன்னங்களெல்லா முணர்ந்தன, * அன்னமாயருமறைபயந்த தேவரீர் திருப்பள்ளி யுணரவேண்டாவோ. (விழுங்கிய வித்யாதி) முதலையின்கையிலே யானை யகப்பட்டதென்றாலோ தேவரீர் அரைகுலையத் தலைகுலையப் புறப்படலாவது.காலிலேமுதலை கடிக்க "விழுங்கிய" என்கிறார்; பசல்கள்கிணற்றின்ருகே போயிற்றென்றால் "இனியிழந்தேன்" என்பாரைப்போலே.

---

(எழுந்தன இதயாதி) தாமரைப்பூவாகிற படுக்கையிலே பனியை மதியாதே படுக்கைவாய்ப்பாலே உறங்குகிற ஹம்ஸமிதுநங்களானவைகாலமுணர்த்த வுணர்ந்தன. இத்தால் -* அருமறைபயந்தவன்னத்தொடு ஸஜாதீயமான அன்னமெழுந்தன, நீயுமெழுந்திராயென்றபடி. (தமிருஞ்சிறகித்யாதி) பனியிலே நனைந்தசிறகுகளை யுதறுகின்றது. (விழுங்கியவித்யாதி) "పరమాపదమాపన్నః" "பரமாபதமாபந்ந:" என்று ஸ்வசக்திமாளும்படி பலத்வாரமென்று சொல்லலாம்படி யிருக்கிற பெரிய பரப்பையுடைய முதலைவாயிலே யகப்பட்டு.

---

இரண்டாம்பாட்டு.—அன்னமென்னுகிற்க, மிதுநத்துக்கு வாசகமெங்ஙனேயென்ன; அருளிச்செய்கிறார் (பூம்படுக்கையித்யாதி.) பனிசொரியுமோ வென்ன; அருளிச்செய்கிறார் (ஒழுகுநுண்பனியென்று.)

(பிலம்புரைபேழ்வாய்)பிலத்வாரத்தோடொத்திருக்கிறபெரிய வாயின்.(வெள்ளெயிறுற)அங்குஆமிஷமில்லாமையாலேமணலைப் றேபகஷிப்பது; ஆகையாலேசாணையிலிட்டசஸ்த்ரம்போலே காணு மிருப்பது.(அதன்விடத்தினுக்கனுங்கியழுங்கியவானையினருந்துய ர்கெடுத்த ஆனையினுடையகாலைப்பற்றினமுதலையினுடையபல்லின் விஷத்தாலேயனுங்கிநோவுபட்டவானையினுடைய.அழுங்கிய-நோ வுபட்ட.(அருந்துயர்கெடுத்த)"ஶத்ரு)ஶசமூபம்ப்ரஹித ஹஸ்தம்" "அத ந்த்ரிதசமூபதிப்ராஹித ஹஸ்தம்" இத்யாதி.(அருந்துயர்)இனியவ்வ ருகில்லையென்னும்படியானக்லேசமென்னவுமாம்.பெறுதற்கரியது மென்றுமாம். ஸர்வேஶ்வரனை வந்துவிழப்பண்ணினநோவிறே. (அரங்கத்தம்மாவித்யாதி)அப்படி ஆர்த்தராஞர்கூக்குரல் கேட்கிற விடத்திலே யுறங்குமத்தனையோ. ஒருமுதலை பிடித்தாலோ வுத வலாவது, ஸம்ஸாரமாகிற பெருங்கடலிலே யாழவிழுந்து இந்த்ரி யங்களாகிற முதலைகளைந்தின் வாயிலேவிழுந்து அகப்பட்டாரையு ணர்ந்தருளிரக்ஷிக்கவேண்டாவோ. ... ... ... (௨)

அ.—மூன்ரும்பாட்டு. (சுடரொளியித்யாதி) ஆதித்ய கிரண ங்களெங்குமபரந்தன,நக்ஷத்ராதிபதியான சந்த்ரனும் விவர்ணஞ ஞன், திருச்சோலையில் மடல்விரிந்த பாளையின் மணத்தைக்கொண் டுவிடிகாற்றூனது வந்தது; கையுந் திருவாழியுமானவழகைக்கொ ண்டு உணர்ந்தருளவேணுமென்கிறார். முதற்பாட்டில் - கீழ்த்திக்கி லுதயகிரியிலே வந்தணைந்தானென்றது; இதில் - நேராகவுதித்து, தன்னுடைய தேஜஸ்ஸை யெங்கும் பரப்பிக்கொண்டு வந்து தோ ன்றினனென்கிறார்.

---

அதினெயிற்றாலே நெருக்குண்டு மிகவுமநோவுபட்டு துதிக் கை முழுகும்படியான தசையிலே பெரிய ஆபத்தைத் தீர்த்து, "கைம்மாதுன்பங் கடிந்தபிரான்"என்று உபகாரஸ்ம்ருதியாலே க்ரு தஜ்ஞரீடுபடும்படியான கையில் பூவின்செவ்வியழியாமே திருவ டிகளிலே யிடுவித்துக்கொண்டு அவனையடிமைகொண்ட மஹோ பகாரகராய், பிற்பாடர்க்கு உதவுகைக்காகக கோயிலிலே நித்யஸந் நிதி பண்ணுகிற தேவரீருணர்ந்தருளும்போதையழகு காண வா சைப்பட்ட அடியோங்களுடைய ஆர்த்தியெல்லாந்திரும்படியுணர் ந்தருளவேணுமென்கிறார். ... ... ... (௨)

அ.—மூன்றும்பாட்டு. நக்ஷத்ராதிகள்ஒளிமழுங்கும்படி ஆதி த்ய னுதித்தான்; கையுந் திருவாழியுமான அழகை அநுபவிக் கும்படி திருப்பள்ளி யுணர்ந்தருளவேணுமென்கிறார்.

---

அனுக்கம்-நோவு. "அழுங்கிய" அழுந்திய. நோவிலே அழு ந்தினவென்றபடி. துக்கத்தைப் போக்கினனென்ன ; அருளிச் செய்கிறார் (ஶத்ரு)ஶ-அதந்த்ரித இத்யாதி.) ... ... (௨)

சுடரொளிபரந்தன சூழ்திசையெல்லாந் துன்னியதாரகைமின்ஞெளிசுருங்கிப், படரொளிபசுத்தனன் பனிமதியிவனோ பாயிருளகன்றதுபைம்பொழிற்கமுகின், மடலிடைக்கீறி வண்பாளைகணாறவைகறைகூர்ந்ததுமாருதமிதுவோ, அடலொளிதிகழ்தருதிகிரியந்தடக்கை அரங்கத்தம்மாபள்ளியெழுந்தருளாயே. (௩)

ப-ரை.—சூழ்திசையெல்லாம் - பார்த்தபார்த்தவிடமெங்கும், சுடரொளி ஆதித்யகிரணங்களானவை, பரந்தன-பரவின; துன்னிய-ஆகாசத்தில் நெருங்கின, தாரகை-நக்ஷத்ரங்களினுடைய, மின்ஞெளி - மிக்கதேஜஸ்ஸானது, சுருங்கி - குறைவுபட்டதுமன்றி, படரொளி - மிக்கவொளியையுடைய, பனிமதி-குளிர்ந்தசந்த்ரனும், பசுத்தனன்-கருகினன்; பா-பரந்த, இருள்-அந்தகாரமானது, அகன்றது-நீங்கிற்று; வைகறைமாருதம் - விடியற்காற்றானது, பை-பசுமையையுடைத்தான, பொழில் - சோலைகளிலுள்ள, கமுகின் - பாக்குமரங்களினுடைய, மடலிடைகீறி, மடலைக்கீறி அதனாலே, வண் - உதாரமான, பாளைகள் - பாளைகளானவை, நாற - பரிமளிக்க, அதின்பரிமளத்தை முகந்துகொண்டு, கூர்ந்தது-விஞ்சிறறு; அடல்-பெரியமிடுக்கையுடைத்தாய், ஒளிதிகழ்தரு-தேஜஸ்ஸாலேவிளங்காநின்றுள்ள, திகிரி-திருவாழியையுடைத்தாய், அம்-அழகையுமுடைய, தடம்-திருவாழி யாழ்வானுக்குஇடம் போரும்படியான, கை-திருக்கைகளையுடைய, அரங்கத்தம்மாபள்ளியெழுந்தருளாயே. (௩)

வ்யா.—(சுடரொளிபரந்தனசூழ்திசையெல்லாம்) சூழ்ந்ததிக்குகளெங்கும் சுடரொளியானது - ஆதித்யனுடைய தேஜஸ்ஸானது விஸ்த்ர்தமாய்த்து. "తేజసాంరాశిమూర్జితమ్" "தேஜஸாம்ராசிமூர்ஜிதம்" என்றும், "பரிதியும்சுடரொளி" என்றும் சொல்லுகிறபடியே தேவரீருடைய திருமேனி வொளியானது எங்குமொக்க விஸ்த்ர்தமாம்படியாகயுணர்ந்தருளலாகாதோவென்றுகருத்து. (துன்னியவித்யாதி) நெருங்கின நக்ஷத்ரங்களினுடைய பரஞ்செய்கிற தேஜஸ்ஸானது ஸங்குசிதமாய், விஸ்த்ர்தமானவொளியையுடைய குளிர்ந்த சந்த்ரனும். (பசுத்தனன்) விவர்ணனானன்-கருகினனென்றுகருத்து. "தாரகையின்புறந்தடவி யப்பால்மிக்கு" என்றும், "చన్ద్రకాన్తాననమ్రామమ్" "சந்த்ரகாந்தாநநம்ராமம்" என்றும்ஸர்வபதார்த்தங்களையும்தரிப்பிக்கப்பண்ணும் திருவடிகளையுடையராய், ஸகலகலாபரிபூர்ணராய், நிஷ்களங்கனானசந்த்ரனைப்போலேயிருக்கிறகுளிர்ந்ததிருமுகத்தையுடையதேவரீர் திருப்பள்ளியுணர்ந்தருளலாகாதோ.

---

வ்யா.—(சுடரித்யாதி) பார்த்தபார்த்த விடமெங்கும் ஆதித்யகிரணங்கள் பரம்பிற்று; அத்தாலே நக்ஷத்ராதிகளுடைய தேஜஸ்ஸு தோற்றுதபடியாயிற்று. அவ்வளவன்றிக்கே, (படரொளி இத்யாதி) இரவெல்லாம் ஸாம்ராஜ்யம்பண்ணின சந்த்ரனும் ஒளி மழுங்கினன்.

---

மூன்றாம்பாட்டு.—பரஞ்செய்கிற - ஆகாசத்துக்குப் பரபாகஞ்செய்கிற.

ஆகாசப்பரப்பெல்லாம்முத்துப்பந்தல்விரித்தாப்போலேயிருக்கிற நக்ஷத்ரங்களினுடைய தீப்தியும் மறைந்து இவற்றுக்கு நிர்வாஹகனான சந்த்ரனுடைய தீப்தியும்போய்த்து;தேவரீர் ௳ அமலங்களாக விழித்தருளாமையாலே,சந்த்ரன் தன்பரிகாரமுந்தானும்வேற்றுருக் கொண்டான். (பாயிருள்)வ்யாபித்தஇருள்.(அகன்றது)நிரஸ்தமாய்த்து.(பைம்பொழிலித்யாதி) கலக்கந்தெளிந்தால் தந்தாமுடைய போகம்ஒருக்குவாரைப்போலே(மடலிடைக்கீறிவண்பாளைகள்நாற) பாளைக்குவண்மையாவது - காற்றுக்குத்தன்பக்கலுள்ளத்தைக்கொடுக்கையிறே. (வைகறை) என்று விடியற்காலம்.(மாருதம்)காற்று; விடிகாற்றுவருகையும், கமுகிலுண்டான பாளைகள் விகஸிதமாகையும், இதிலுண்டான மணத்தைக் காற்றுக்கொண்டுவருகையாலேநாற்றம் விஞ்சிற்று. கூருகையாவது - மிகுகை. "மன்றாடு தென்றலுலா" என்று - பொதுவான காற்றன்றியே விடிந்தமைக் கடையாளம் தெரியவரச்செய்தேயும் கண்வளர்ந் தருளவேணுமோ. (அடலொளியித்யாதி) ஆதித்யர்கள் மின்மினியாம்படியிறே திருவாழியாழ்வானொளி. பெரியமிடுக்கையுடைத்தாய் ஒளிநிகழாநிற்பதாய்,தேஜஸ்ஸுவிளங்காநின்றுள்ளதிகிரியை யுடைத்தாய்வெறும்புறத்தில்ஆலத்தி வழிக்கவேண்டும்படியான வழகையுமுடைய திருக்கையிலே. (தடக்கை) திருவாழியாழ்வானுக்கு இடம்போரும்படியான திருக்கை. (அரங்கத்தம்மா) ஆர்த்தானூர்க்கு முகங்கொடுக்கவந்தவிடத்தே கிடந்துறங்குமத்தனையோ! தேவரீர் திருப்பள்ளி யுணர்ந்தருளவேணுமென்கிறார். ... ... (௧)

---

(பாயிருளகன்றது) அந்தசந்த்ரனுக்கு விகாஸஹேதுவாய்ப் பரம்பின இருளானது, மஹாராஜாக்கள் தோற்றினால் க்ரித்ரிமர் ஒளிக்குமாப்போலே மறைந்தது. (பைம்பொழில்கமுகினித்யாதி) பசுமையுடைத்தான சோலைக்கமுகுகளின் பாளைகளானவை விரிய அதின்பரிமளத்தை முகந்துகொண்டு விடிவோறைக்காற்றானது எங்கும் வ்யாபியாநின்றது. (அடலொளியித்யாதி)திருவாழியாலே ப்ரதிபக்ஷத்தைப்போக்கினாப்போலே கையுந் திருவாழியுமான வழகைக்காட்டி ஸஹஜஶத்ருவான இந்த்ரியபாரவச்யதையைப் போக்கி, தேவரீரழகை அநுபவிக்கும்படி திருப்பள்ளி யுணர்ந்தருளவேணுமென்கிறார். ... ... ... ... (௧)

---

முத்துப்பந்தல்-முத்துக்கட்டின மேற்கட்டி. ... (௧)

அ.—காலாம்பாட்டு. (மேட்டிளமேதிகளித்யாதி) "எருமை சிறுவீடு" என்கிறபடியே சிறுவீடன்றியே பெருவீடும் விடும்படியாய், இளங்கன்று மேய்க்கவொருப்பட்டு தலைவிடுகிற ஆயருதுகிற குழலின் ஓசையும் நாகின்மேலே செருக்கியோடுகிற விடையினுடைய கழுத்தில் மணியோசையும், திக்குக்களெங்கும் பரந்தது, மதுபாநம் பண்ணி வண்டுகள் ஆரவாரித்துக்கொண்டு கிளம்பிற்றின - ஆர்ப்பாரவமறப்போய் அதிக்ரமித்துச் செல்லாநின்றது; விரோதிநிரஸநசீலனாய் ஸர்வரக்ஷகனான தேவரீர் திருப்பள்ளியுணர்ந்தருள வேணுமென்கிறார்.

மேட்டிளமேதிகள் தளைவிடுமாயர்கள் வேய்ங்குழலோசையும் விடைமணிக்குரலும், ஈட்டியவிசைதிசை பரந்தனவயலுள் இரிந்தனசுரும்பின மிலங்கையர்குலத்தை, வாட்டியவரிசிலை வானவரேறேமாமுனி வேள்வியைக் காத்தவபிரதம், ஆட்டியவடுதிறலயோத்தியெம்மரசே அரங்கத்தம்மாபள்ளி யெழுந்தருளாயே. (௪)

ப-ரை.—மேடு-உயர்ந்திருப்பதாய், இளம்-இளையதான, மேதிகள்-எருமைகளும், தளைவிடும்-மேய்கைக்குக்கட்டவிழ்த்துவிடுகிற, ஆயர்கள்-இடையருதுகிற, வேய்ங்குழலோசையும்-வேயங்குழலினுடையஓசையும், பசுக்களின்நடுவில் விடப்பட்ட, விடை-ரிஷபங்களின்கழுத்தில்கட்டின, மணிக்குரலும்-மணியோசையும், ஈட்டியஇசை-இவ்விரண்டும் கூடினத்வநியானது, திசை-திக்குக்களெங்கும், பரந்தன-பரவின; வயலுள்-கழனியில் தடாகங்களிலுள்ள தாமரைசெங்கழுநீர் மலர்களில் மதுபாநம்பண்ணுகிற, சுரும்பினம் - வண்டுகளானவை, இரிந்தன-சிதறியோடின; துர்வர்க்கத்துக்கெல்லாம் புகலிடமான, இலங்கையர் குலத்தை - லங்கையிலுள்ள ராக்ஷஸர்க்குத்தலைவனான ராவணனுடைய குலத்தை, வாட்டிய-நிச்சேஷமாகமுடித்தவராய், வரி-தாசநீயமான, சிலை-ஸ்ரீசார்ங்கத்தையுடையராய, வானவரேறே-ப்ரஹ்மாதிதேவர்களுக்கு ஸ்வாமியானவராய், மா-ச்லாக்யராய், முனி - மஹாசீலரான விச்வாமித்ரருடைய, வேள்வியை-யாகத்தை, காத்து-ராக்ஷஸராலே ஒரு நலிவு வாராமே ரக்ஷித்து, அவபிரதமாட்டிய-அவப்ருதஸ்நாநம்செய்வித்தவராய், அடுதிறல்-விரோதிகளை நிரஸிக்கும் மிடுக்கையுடையராய், அயோத்தி எம்மரசே-தருவயோத்யையை ஆளுகையாலே எங்களுக்கு ஸ்வாமியாய், அரங்கத்தம்மா-திருவரங்கத்திலே பள்ளிகொண்டருளுமவனே, பள்ளியெழுந்தருளாய்-திருப்பள்ளியுணர்ந்தருளவேணுமென்கிறார். (௪)

வ்யா.—(மேட்டிளமேதிகள்) இளங்கன்றாயிருக்கச்செய்தேயோங்கியிருப்பனவான எருமைக்கன்றுகள். இவற்றினுடைய (தளைவிடுமாயர்கள்) தளைவிடுகையாவது-கட்டுவிடுகை. சிறுவீடன்றியேவிடிந்து மேய்கையாலேபாரகற்றுமேயுமே, பின்பு அவர்களுக்குப்பாரக்கற்றபடியாலே குழலூதுமித்தனையிறே.

---

அ.—காலாம்பாட்டு. சக்ரவர்த்தித் திருமகனாயவதரித்தருளி விரோதிநிரஸநபூர்வகமாக ஆச்ரிதஸம்ரக்ஷணம்பண்ணியருளினாப்போலே, த்வததநுபவ விரோதியைப்போக்கி அநுபவிக்கத் திருப்பள்ளியுணர்ந்தருளவேணுமென்கிறார்.

வ்யா.—(மேட்டிளமேதிகளித்யாதி) கொம்புகள் அங்குரியாநின்றுள்ள இளைதான எருமைகளும், அவற்றை நியமிக்கக் கடவ இடையருதுகிற குழலோசையும்.

(விடைமணிக்குரலும்) பசுக்களும்விட்டு இவற்றுக்குக்கடவ தான விடைமணியோசையும். "జ్ఞానేన హీనః పశుభిస్సమానః" "ஜ்ஞா னேந ஹீந: பசுபிஸ்ஸமாந:" என்னக்கடவதிறே. இப்படிக்கொத்த ஜ்ஞாநஹீநமான பதார்த்தங்கள் விட்டு ஸஞ்சரியா நின்றன. ஸர்வஜ்ஞரான தேவரீர் உணர்ந்தருள வேண்டாவோ. இப்படிப் பட்ட குழலோசையாலும் மணியோசையாலும் (ஈட்டியவிசை திசைபரந்தன) திரண்ட த்வநிகளானவை திக்குக்களெங்கும், பரந்தன - விஸ்த்ர்தமாய்த்து. (வயலுளிரிந்தனசுரும்பினம்) சோலைக் குள்ளிலன்றியே வெளிநிலமானவயலில் தடாகங்களிலுண்டானதா மரை செங்கழுநீரிலே மதுபானம்பண்ணி வண்டுகளானவை ஆரவா ரித்துக்கொண்டு சிதறிற்றின. (இலங்கையர்குலத்தை வாட்டிய) லங்கையிலுண்டான ராவணஸந்தானத்தைவாட்டிய. வாட்டுகை யாவது-நிச்சேஷமாகமுடிக்கை; கரியாக்குகை. "வாட்டிய" என் றால் கரியாகுமோவென்னில்; வீரபத்நியாகையாலே, "கிள்ளிக் களைந்தானை" என்னுமாப்போலே இவரும் தம்முடையவையாத்யத் தாலே விரோதித்தார் சொல்லுமபடியே அநாயாஸமாகச் செய்தப டியைக்கொண்டு"வாட்டிய" என்றதித்தனை. இவை, * எரிசிதறும் சரமாகையாலே- * தீப்தபாவக ஸங் காசீநகளாகையாலே-அவை கரியாக்கி யல்லதுவிடாதே. * నేయమస్తి-நேயமஸ்தி யிறே; * సీతా యాస్తేజసాదగ్ధా - ஸீதாயாஸ்தேஜஸாதக்தாவிறே.

---

அதுக்குமேலே மேயப்புறப்பட்ட பசுக்களின்நடுவில் ரிஷபங் களின்கழுத்தின் மணித்வநியுமாய் இசைபோலே திரண்டத்வநி எல்லாதிக்குக்களிலுள்ள வயலெல்லாமபரந்தன. (இரிந்தனசுரும் பினம்) அலருகிற காலபுஷ்பங்களில் மதுவை பாநம்பண்ணி வண் டுகளானவை சப்திக்கத்தொடங்கிற்றின. (இலங்கைய ரித்யாதி) துர்வர்க்கத்துக்கெல்லாம் புகலிடமான லங்கைக்குநிர்வாஹகனை ராவணனுடைய குலத்தை ஸபரிகரமாகமாய்த்த.

---

நாலாம்பாட்டு.—இரிந்தன - சிதறிற்றின. "சப்தம்வாட்டிய" என்றுசொல்லாநிற்க, தக்தமாக அர்த்தங்கொள்ளும்போது, இப் படி ஒன்றை யொன்றாகச் சொன்னவிடமுண்டோவென்ன; லங் கையும் ராவணனுமிருக்க, இல்லையென்று திருவடிசொன்னனென் கிறார் (నేయమస్తి-நேயமஸ்தியிறேயென்று.) தக்தமானதுக்கு ப்ரமா ணம் அருளிச்செய்கிறார் (సీతాయా-ஸீதாயா இத்யாதி.)

"ஹேமநிஷ்கஸ்ரமாகா:" "காஞ்சநபூஷணா:" என்னும்படியே. (வரிசிலை வானவரேறே) தர்சநீயமான வில்லையுடையவனானவரேறே. தாடகையை நிரஸித்து அநுகூலனை ஸ்ரீவிபீஷணாழ்வானை வைத்தாப்போலே இந்த்ரனுடைய அமராவதியை தரிப்பித்து இந்த்ரனுக்குஸ்வர்க்க லோகத்தையும் கொடுத்தபடி. (மாமுநியித்யாதி) முநிகளாகிறார்-மநநசீலரிறே. "நினைந்திருந்தேசிரமந்தீர்ந்தேன்" "ஏஹிபஶ்ய" "ஏஹிபஶ்யஶரீராணி" இத்யாதி. எங்கள்பக்கலுள்ளதெல்லாம்குறை சசரக்கு, உன்னம்புபார்த்திருந்தோமென்னவல்லவர்களிறே; அப்படிப்பட்ட ரிஷிகள்வந்தாலோபோகலாவது. (மாமுநிவேள்வியைக் காத்து) லங்கையையழிக்கக்கடியானவீரத்தைச்சொல்லுகிறார். தந்தாம்கார்யங்கள்தாந்தாமேமநநம்பண்ணுமவர்கள்முநிகள்; இவனுக்குமாமுநித்வமாவது-தன்னுடைய தபஸ்ஸையழியமாறி, அவர்களை ஶபித்து, தன்னுடைய பாரதந்த்ர்யத்தையு மழித்து, பகவத்ஸ்வாதந்த்ர்யத்தையுமழியாதே, சக்ரவர்த்தித்திருமகனைக்கொண்டே கார்யம் தலைக்கட்டிக்கொள்ளுகை. அத்வரத்ராணம்பண்ணி அவனைக்கொண்டே அவப்ர்தஸ்நாநம்பண்ணி அதுக்கீடான ப்ரதிபக்ஷத்தை முடிக்கைக்கடியான திறலையுடைய-பராபிபவநஸாமர்த்த்யமுடையருமாய்,

---

ஸ்ரீஶார்ங்கத்தை யுடையராய், ப்ரஹ்மாதிகளுடைய அபேக்ஷிதம் செய்யப்பெற்றோமென்னும் மேனாணிப்பையுமுடையவனே, விஶ்வாமித்ர பகவானுடைய யாகத்துக்கு விக்நகர்த்தாக்களுமாய் ராவணவதத்துக்கு அடியான தாடகாதாடகேயரை நிரஸித்து. (அவபிரதமாட்டிய) ஸமாராதநரூபமான கர்த்தவ்யம் தலைக்கட்டி சத்ருபக்ஷம் மண்ணுண்ணும்படியான மிடுக்கையுடையராய், திருவயோத்யைக்கு நிர்வாஹகராய்வைத்து அவ்வவதாரத்துக்குப் பிற்பாடரு, மிழக்கவேண்டாதபடி திருவயோத்யையிலுங்காட்டில் கோயிலைவிரும்பின ஸர்வாதிகரான தேவரீருணர்ந்தருளி அடிமை கொண்டருளவேணுமென்கிறார். ... ... (௪)

---

"ஹேமநிஷ்கஸ்ரமாகா:" "காஞ்சநபூஷணா:" என்று அம்புகளழகாயிருக்குமாப்போலே, வரிசிலையென்று-வில்லும்அழகாயிருக்குமென்றபடி. அமராவதி-இந்த்ரனுக்குப் பட்டணம். நினைந்திருக்கை-ரக்ஷகனைநினைக்கை. ரக்ஷகனை நினைத்திருப்பார்களோ வென்ன; அருளிச்செய்கிறார் (ஏஹிபஶ்ய-ஏஹிபஶ்யேத்யாதி.) அவனைக்கொண்டென்றது-பெருமாளுடைய திறலானது-பெருமானைக் கொண்டவனை அவப்ர்தஸ்நாநம் பண்ணுவித்ததென்று திறலுக்கு விசேஷணம். அப்படிப்பட்ட திறலையுடையவனென்றபடி. ... (௪)

"[Grantha]" "தஸவர்ஷஸஹஸ்ராணி" என்றுப்போலே நீர்த்தம்ப்ரஸாதிக்கையன்றிக்கேயிற்பாடராளரும் பெறும்படியான கோயிலிலே கண்வளர்ந்தருளுகிற இதுக்கு ப்ரயோஜனம்வேண்டாவோ, விரோதிநிரஸநம் பண்ணினோமாகில் இனியென்னென்று கிடக்கலாமோ; அப்படியே ராக்ஷஸராலே பீடிதரான தேவஜாதிகள் வந்தால் உங்களுக்கு நான் செய்தபடி யழகிதேயென்று வினவி யருளவேண்டாவோ வென்கிறார். "[Grantha]" "உத்திஷ்டநரசார்த்தூல" என்றுகொண்டு பண்டேயெழுப்பினரிஷிகள் வந்தெழுப்பினாலோ தேவரீர் உணர்ந்தருளப் பார்க்கிறது, அடியோங்களை ரக்ஷிக்கைக்காக எழுந்திருந்தாலாகாதோ. ... (௪)

அ.—(புலம்பினவித்யாதி) முன்னில்பாட்டிலே - "வயலுளிரிந்தன கரும்பினம்" என்றது; இப்பாட்டிலே - போதுவைகினால் உணரக்கடவதான பக்ஷிகளு முணர்ந்தனவென்கிறது. முன்னில் பாட்டில் உணர்ந்தவற்றுக்கும் இப்பாட்டிலுணர்ந்தவற்றுக்கும் பகவத்ப்ரவணர்க்கும் ஸமஸாரிகளுக்குமுள்ள வாசிபோருங்காணும். வயலிலுள்ளவைபோலன்றிறே; சோலையாய் அதிலேபூமபொழிலாயிருக்கச்செய்தே உணருகிறனவிறே; போதுவைகினபடி.

புலம்பினபுட்களும் பூம்பொழிலகளின்வாய் போயிற்றுக்கங்குல் புகுந்ததுபுலரி, கலந்ததுகுணதிசை கனைகடலரவங்களிவண்டுமிழற்றியகலம்பகம்புனைந்த, அலங்கலந்தொடையல்கொண் டடிபிணைபணிவான் அமரர்கள்புகுந்தன ராதலிலம்மா, இலங்கையர்கோன் வழிபாடுசெய்கோயில எம்பெருமான் பள்ளியெழுந்தருளாயே.

ப - ரை.—பூ - பூத்திருந்துள்ள, பொழில்களின்வாய் - திருச்சோலையிலுள்ள, புட்கள்-பக்ஷிகளானவை, புலம்பின-உணர்ந்து ஆரவாரியா நின்றன; கங்குல் - தமஸ்ஸுக்கு ஆச்ரயமான ராத்ரியானது, போயிற்று - சற்றும் தங்காமல் போயிற்று; புலரி - ஆராதநயோக்யமான விடியற்காலமானது, புகுந்தது - வந்தது; குணதிசை - கிழைத்திக்கிலே, கனை-கோஷிக்கையேஸ்வபாவமான, கடலரவம்-ஸமுத்ரகோஷமானது, கலந்தது-வ்யாபித்தது; களி-மதுபானம்பண்ணிக்களிக்கிற, வண்டு - வண்டுகள், மிழற்றிய-சப்திக்குமதாய், கலம்பகன்-நாநாவிதமான புஷ்பங்களாலே, புனைந்த - தொடுத்ததாய், அம் - அழகிதாய், அலங்கல் - அசையாநிற்பதான, தொடையல்கொண்டு - மாலைகளை

அ.—அஞ்சாம்பாட்டு. தேவஜாதியானது கற்பகங்களில் பூக்களெல்லாந் தொடுத்து மந்த்ரபுஷ்பம் பண்ணிப்பரிமாறுகைக்காக "அருள்பாடிடுவதுஎப்போதோ" என்று அவஸரப்ரதீக்ஷராய்வந்து நின்றார்கள்; ஜந்மாதிகளில்தாழ்வு ஏற்றம்பாராதே யடிமைகொண்டருளும் தேவரீருணர்ந்தருளி அடிமைகொண்டருளவேணுமென்கிறார்.

யேந்திக்கொண்டு, அமரர்கள்-தேவர்களானவர்கள், அடியிணைபணிவான்-தேவரீர் திருவடிகளில் பணியாறுகைக்கு, புகுந்தனர்-வந்துநின்றார்கள்; ஆதலில்-ஆகையாலே, அம்மா-ஸர்வஸ்வாமியாய், இலங்கையர்கோன்-லங்காதிபதியான ஸ்ரீவிபீஷணாழ்வான், வழிபாடுசெய்-தாஸவ்ருத்திபண்ணுகிற, கோயில்-திருவரங்கத்திலே, எம்பெருமான்-என்போல்வார்க்கு முகம்தாவிருக்கிறதேவரீர், பள்ளியெழுந்தருளாய்-திருப்பள்ளியுணர்ந்தருளி கடாக்ஷித்தருளவேணுமென்கிறார். (௪)

வ்யா.—(புலம்பினபுட்களும்) "வண்டினமுரலுஞ் சோலை மயிலின மாலுஞ்சோலை கொண்டல்மீதணவுஞ் சோலை" என்றிறே; அவையெல்லாம் ப்ரீதிப்ரகர்ஷத்தாலே சிலர் பாட சிலர் ந்ருத்தகீதவாத்யங்கள்பண்ண அதுக்கு இசையச் சிலராடச் சிலர் கொண்டாட விருந்ததிறே; இங்குச்சிலர், பெரியபெருமாள் இப்போது வைகவும் பள்ளிகொள்வதே! என்று கூப்பிடுமாப்போலே யிருக்கிறது. (போயிற்றுக்கங்குல்) முன்புபோலே அகன்றமாத்ரமேயன்றிக்கே ராத்ரியானது நிச்சேஷமாய்த்து; தமஸ்ஸு நேராகப்போனால் பின்பு ஸத்வமேயா யிருக்குமாப்போலே. ஆகையாலிறே "பகற்கண்டேன்" என்றது. (கலந்ததுகுணதிசைக்கனைகடலரவம்) கோஷமாத்ரமன்றிக்கேயெங்குமொக்க வ்யாபித்தது. (களிவண்டித்யாதி) உறவுமுறையாரைப் பட்டினிவிட்டு விருந்தாளைக் காலும் கலமும் வைத்தூட்டுவாரைப்போலேயிறே தேவரீர்படி.

---

வ்யா.—(புலம்பின வித்யாதி) திருச்சோலையில் பக்ஷிகளானவை உணர்ந்து ஆரவாரியா நின்றன. (போயிற்றுக்கங்குலித்யாதி) ஸர்வரையு மபிபவிக்கக் கடவ தமஸ்ஸுக் காச்ரயமான ராத்ரியானது வாஸனையோடே போய்த்து. (புகுந்ததுபுலரி) ஸத்வோத்தரமாகையாலே ஆராதநயோக்யமானகாலம் ஸந்நிஹிதமாய்த்து. (கலந்தகித்யாதி) கிழைதிக்கிலே கோஷிக்கையே ஸ்வபாவமான ஸமுத்ரகோஷம் எங்கும் வ்யாபித்தது. (களிவண்டித்யாதி) மதுபாநம்பண்ணிக் களிக்கிற வண்டுகளோடேகூடின நாநாவித புஷ்பங்களைத் தொடுத்துய்ந்த மாலைகளையேந்திகொண்டுதேவர்களுடைய, எல்லார்க்கும்நாதனானதேவரீர்திருவடிகளிலே சாத்துகைக்கு அருள்பாடிடுவது எப்போதோவென்று புகுந்து நின்றார்கள்.

---

அஞ்சாம்பாட்டு.—புலரி-விடிவு. விடிவென்றால் - ஜ்ஞாநத்தைக் காட்டுமோவென்ன; அருளிச்செய்கிறார் (ஆசையாலிறேயித்யாதி.) ஸமுத்ரம் மிகவும் த்வநிக்கை விடிவுக்கடையாளம். தமக்கு முகங்கொடாமல் ப்ரயோஜநாந்தரபரர்க்கு முகங்கொடுக்கையைப் பற்ற அருளிச்செய்கிறார் (உறவுமுறையா ரித்யாதி.) கால்-தாஸ்காலு; அம்மானுதல் . அம்மானாகையாலே மாலைசாத்த வேணும். ... ... ... ... ... ... (௫)

ப்ரயோஜநாந்தரபரரான தேவர்கள் தந்தாம்பதப்ராப்ஸம்வா ரமைக்காக, நன்றாய்ச் செறிந்து வண்டுகள் மதுபானம் பண்ணிக்களித்துப் பாடிக்கொண்டு ஸேவியா நிற்பதாய்க் கலம்பகனுமிருக்குமன்ன அந்தத் தொடை யலங்கல்கள்கொண்டு வந்தார்கள், அவர்களுக்காகிலும் முகங்கொடுத்தருளீரோவென்கிறார். (ஆதலிலம்மா) என்மாலை சாத்தாதபோது" என்னையன்" என்னவொண்ணாதிறே. இப்படி விண்ணப்பஞ்செய்யு மிவர்பேச்சு இனிதாயிருந்தவாறே பள்ளிகொண்டருள;(இலங்கையர்கோன் வழிபாடுசெய் கோயில்) பள்ளிகொண்டருளவேணு மென்றவன் தானே வந்து "எழுந்திரும்" என்றாலோ திருப்பள்ளி யுணர்ந்தருளுவது. வழிபாடுசெய்கையாவது - திருவுள்ளக் கருத்தறிந்து அடிமை செய்கையிறே. (இலங்கையர்கோன் வழிபாடுசெய்கோயில்) இதுவுமோரேற்றமிறேயிங்குத்தைக்கு. (எம்பெருமான்) ஆச்ரிதபராதீநரானதேவரீர் திருப்பள்ளி யுணர்ந்தருளவேணுமென்கிறார். (ரு)

அ.—ஆறும்பாட்டு. (இரவியரித்யாதி) தேவரீர்பணிக்கடைத்த ஆதித்யனேயன்றிக்கே, மற்றும் சோம்பி யிருக்கிற ஆதித்யர்களும் வந்தார்கள்.

இரவியர்மணிநெடுந்தேரொடுமிவரோ இறையவர்பதினொருவிடையருமிவரோ, மருவியமயிலினனறுமுகனிவனுமருதரும்வசுக்களும்வந்துவந்தீண்டிப், புரவியோடாடலும்பாடலுந்தேரும்குமரதண்டம்புகுந்தீண்டியவெள்ளம், அருவரையனையநின்கோயின்முன்னிவரோ அரங்கத்தம்மாபள்ளியெழுந்தருளாயே. (சு)

ப-ரை.—மணி - விலக்ஷணமாய், நெடும் - பெரிதான, தேரொடு - தேரையுடையரான, இரவியர் - த்வாதசாதித்யர்களும், இறையவர் - ஜகத்துக்குநிர்வாஹகரான, பதினொருவிடையரும்-ஏகாதசருத்ரர்களும், மருவிய-எப்போதும்

---

(ஆதலில்) ஆகையாலே பராவரேசரான தேவரீர். (இலங்கையர்கோ னித்யாதி) ராவணாநுஜனென்று பாராதே லங்காதிபதியான ஸ்ரீவிபீஷணாழ்வானாலே கொண்டாடப்பட்ட கோயிலிலே அஸ்மதாதிகளுக்குமுகந்தரவிருக்கிறதேவரீர்திருப்பள்ளியுணர்ந்தருளவேணுமென்கிறார். அதவா, ஸ்ரீவிபீஷணாழ்வானை யடிமைகொண்டாப்போலே அடியோங்களையு மடிமைகொண்டருளவேணுமென்கிறாராகவுமாம். ... ... ... (ரு)

அ.—ஆறும்பாட்டு. தேவலோகாபதியோடேகூட ஜகத்துக்கு நிர்வாஹகரானஸகலதேவதைகளும் ஸபரிகரராய்க்கொண்டு ஸ்வாமிமத ஸித்த்யர்த்தமாக ஆச்ரயிக்க வந்து நின்றார்கள்; தேவரீர் உணர்ந்தருளி விசேஷகடாக்ஷம்பண்ணியருளவேணுமென்கிறார்.

விட்டிறங்காத, மயிலினன் - மயில்வாஹநத்தை யுடையனாய், அறுமுகன்-ஆறுமுகங்களையுடையனான ஸுப்ரஹ்மண்யனும், மருதரும் - மருத்கணங்களான நாற்பத்தொன்பதின்மரும், வசுக்களும் - அஷ்டவஸுக்களும், வந்து வந்து - ஒருவர்க்கொருவர் முற்கோலிவந்து, ஈண்டி - நெருங்கி, இவர்களுடையவாஹநமான, புரவியோடு - குதிரைகளும், தேரும் - ரதங்களும், பாட்டும் - பாட்டுக்களும், ஆடலும் - ஆட்டங்களுமாய், குமரதண்டம்புகுந்து-ஸுப்ரஹ்மண்யனோடேவந்து, ஈண்டியவெள்ளம் - நெருங்கின்ற ஸேநாஸமூஹமானது, அருவரை - மஹாமேருவை, அனைய-ஒத்திருந்தள்ள,கோயில்-கோயிலில், நின்முன் - தேவரீர் திருக்கண்ணோக்கத்திலே ப்ரதமகடாக்ஷத்துக்காக வந்து நிற்கிறது; ஆகையால், அரங்கத்தம்மா - கோயிலிலே கண்வளர்ந்தருளுமவனே, இவர்-இவர்களைக்கடாக்ஷிக்கைக்காக, பள்ளியெழுந்தருளாய்-திருப்பள்ளியுணர்ந்தருளவேணுமெனகிறார். (௬)

வ்யா.—(இரவியரித்யாதி) "பஶூநாம்பதிஃ" "பஶுபதிஃ" என்கிறபடியே - பசுஸமரா யிருப்பார்க்கு நான் கடவேனாகவேணும்" என்றானிறே. (மருவியமயிலினன்) அவர்கள் தேர்களினின்றும் ரிஷபங்களினின்று மிழியவுங்கூடும், "இவனை மயிலோடேகூடக் கருப்பிடித்ததென்னும்படியா யிருக்கை. தேவஸேநாபதியிறே. (மருதரும் வசுக்களும் வந்துவந்தீண்டி) மருத்தேவதைகளும் அஷ்டவஸுக்களும்,முற்பட்டார்முற்பட்டபடியே வந்து திரண்டு. (புரவியோடித்யாதி) தேர்ப்ரஸ்துதமாகையாலே தேர்பூண்ட புரவியென்னவுமாம். அன்றியே, அவ்வவ ரேறிவந்த வாஹநமென்னவுமாம். (குமரதண்டம் புகுந்தீண்டியவெள்ளம்) "தேவஸேநாபதி" என்று முன்னே சொல்லுகையாலே, "குமரன்" என்று - அவன்பேராய், "தண்டம்" என்று- தண்டுக்குப்பேராய், இத்தால்-ஸேநாஸமூஹத்துககுப்பேராய், ஸேநாபதி வந்தால் ஸேனையும் வரக்கடவதிறே.

---

வ்யா.—(இரவியர் இத்யாதி) த்வாதஶாதித்யர்கள் தங்களுடைய விலக்ஷணமாய்ப்பெரிதான தேரோடேவந்தார்கள். (இறையவரித்யாதி) ஜகத்துக்கு நிர்வாஹகரான ஏகாதசருத்ரர்கள் தங்களுடைய வாஹநங்களான ரிஷபங்களும் தாங்களுமாக வந்துநின்றார்கள். (மருவியவித்யாதி) தேவஸேநாபதியான ஸுப்ரஹ்மண்யன் தன்வாஹநமான மயிலுந் தானுமாய் வந்து நின்றான். (மருதருமித்யாதி) தேவதாவிஶேஷமான மருத்கணங்கள் நாற்பத்தொன்பதின்மரும்,அஷ்டவஸுக்களும்,ஒருவர்க்கொருவர்முற்கோலிக்கொண்டுவந்து திரண்டது. (புரவியோடித்யாதி) தேவர்களுடைய வாஹநமானபுரவிபூண்டதேரும்,பாட்டுக்களும்ஆட்டமுமாய்,தேவஸேநாபதியான ஸுப்ரஹ்மண்யனோடேதிரண்டு, பரிச்சேதிக்கவொண்ணாதபடி திரளாய்க்கொண்டு.

---

ஆறும்பாட்டு.—"இறையவர்" என்பானென்னென்ன; அருளிச்செய்கிறார் (பஶூநாம்-பஶுபதிரித்யாதி.) தண்டம் - ஸமூஹமாதல்-ஆயுதமாதல். ... ... ... ... ...(௬)

அவையன்றியே, தேவஜாதியாகையாலே ஷோடசவயஸ்கராயிருப்பர்களிறே. இனி "தண்டம்" என்கிறது-அவ்வவருடைய பெரியதிரள். அவ்வவராயுத பேதங்களை யென்னவுமாம். (சண்டியவெள்ளம்) நால்வரிருவரோ, வெள்ளமாயன்றோ கிடக்கிறது. (அருவரை யித்யாதி) ‘அணியரங்கர் செம்பொனாய வருவரையனைய கோயிலிறே. த்வாதசாதித்யர்கள், ஏகாதசருத்ரர்கள், தேவஸேநாபதியான ஸுப்ரஹ்மண்யன், மருத்துக்களாகிற தேவதைகள், அஷ்டவஸுக்கள், மற்றுஞ் சொல்லிச்சொல்லாத தேவதைகளுடைய ஸபரிகரராய், தேவரீர் திருப்பள்ளி யுணர்ந்தருளும்போதில் ப்ரதமகடாக்ஷத்தை நினைத்து, "நான்முற்பாடன், நான்முற்பாடன்" என்று எல்லாரும் திரண்டுவந்துநின்றார்கள், திருப்பள்ளியுணர்ந்தருளி கடாக்ஷித்தருளவேணுமென்கிறார். (௬)

அ.—(அந்தரமித்யாதி) முன்னில் பாட்டில்-தேவஸேநாபதியானவன் தன்வாஹநத்தோடும பரிகரங்களோடும் வந்தமைசொல்லிற்று; இப்பாட்டில் - தேவஜாதிக்கு நிர்வாஹகனானவன்றான் தன்வாஹநத்தோடே ஸபரிகரனாய்வந்தபடி சொல்லுகிறது; தேவஜாதியை மெய்க்காட்டுகொள்ள தேவரீரிட்ட வகை செய்வானாய் வந்தானென்கிறது; "[illegible]" "பீஷாஸ்மாத்" இத்யாதிப்படியே.

அந்தரத்தமரர்கள்கூட்டங்களிவையோ அருந்தவமுநிவரும மருதருமிவரோ, இந்திரனானையுந்தானும்வந்திவனோ எம்பெருமானுன கோயிலின்வாசல், சுந்தரர்நெருக்கவிச்சாதரர்நூக்க இயக்கரும் மயங்கினர்திருவடித்தொழுவான், அந்தரம்பாரிடமில்லை மற்றிதுவோ அரங்கத்தம்மாபள்ளியெழுந்தருளாயே. ... (௭)

---

மஹாமேருவை யொத்திருந்துள்ள கோயிலில் திருக்கண்ணோக்கத்திலே ப்ரதமகடாக்ஷத்துக்காகவந்துநின்றார்கள, ப்ரயோஜநாந்தரபரரோடு அநந்யப்ரயோஜநரோடுவாசியற ஸர்வநிர்வாஹகராய்க்கொண்டு கோயிலிலே கண்வளர்ந்தருளுகிற தேவரீர் உணர்ந்தருளி விசேஷகடாக்ஷம் பண்ணியருளவேணுமென்கிறார். (௬)

அ.—ஏழாம்பாட்டு. முதல்பாட்டில் ஸங்க்ரஹேண சொன்னத்தை இப்பாட்டுத் தொடங்கி மேலில்பாட்டுகளாலுமாக விஸ்தரிக்கிறார். கீழ்ச்சொன்ன தேவதைகளுக்கு நிர்வாஹகனான இந்த்ரனும், வித்யாப்ரவசகரான ஸபதரிஷிகளும், திருப்பள்ளியெழுச்சி திருவடித்தொழ ஸபரிகரமாக ஆகாசாவகாசமிடமடையும்படி வந்து புகுந்தார்கள், திருப்பள்ளியுணர்ந்தருளி இவர்களை யடிமை கொண்டருளவேணுமென்கிறார்.

ப.ரை.—எம்பெருமான்—எங்களுக்கு ஸ்வாமியானவனே; உனகோயில் திருவாசல் உன் திருக்கோயில் வாசலிலே, இந்திரன்றானும் - தேவர்களுக்கு அதிபதியான இந்த்ரனும், ஆனையும்-அவனுடைய ஐராவதமென்கிறயானையும், வந்து-வந்திருப்பதுமன்றி, அந்தரத்தமரர்கள்-அண்டாந்தர்வர்த்திகளான தேவர்களும், கூட்டங்கள் - இவர்களுடைய பரிவாரங்களும், அரும் - ஒருத்தராலும் செய்து முடிக்கவொண்ணாத, தவம் - தபஸ்ஸையுடைய, முனிவரும் - ஸநகாதிமஹர்ஷிகளும், மருதரும் - மருத்கணங்களும், சுந்தரர் - கந்தர்வர்கள், நெருக்க-நெருக்கவும், விச்சாதரர்-வித்யாதரர்கள், நூக்க - தள்ள, இயக்கர் - யக்ஷர்கள், திருவடித்தொழுவான்-தேவரீர்திருவடிகளை ஸேவிக்கைக்காக, மயங்கினர்-நெருக்குண்டு மோஹியாநின்றார்கள்; அந்தரம்-ஆகாசமும், பார - பூமியும், இடமில்லை - விவரமறநெருங்கிறது; அரங்கத்தம்மாபள்ளியெழுந்தருளாயே. (எ)

வ்யா.—"இந்திரனையுந்தானும்வந்திவனோ" என்கிறபதம் அர்த்தக்ரமத்தாலே முதலாகக்கடவது; இப்படியாமோ வென்னில்; இப்பாட்டுக்குத்தாத்பர்யம் இந்த்ரன் வந்தபடிசொல்லுகையாலே முதலாகக்கடவது. அக்ந்யாஹிதவென்னக் கடவதாயிருக்கச்செய்தே சப்தசேர்த்தி அர்த்தசேர்த்திக்காக ஆஹிதாக்நியாவென்றதிறே. ப்ரணவம், சப்தத: ஆத்மஸ்வரூபஞ் சொல்லிற்றே யாகிலும் அர்த்தத: பகவத்ஸ்வரூபமிறே சொல்லுகிறது. "ராஜபுருஷன்" என்றால் புருஷன் விசேஷணமாய் ராஜாவின்பக்கலிலே ப்ராதாந்யம் கிடக்குமாப்போலே.

(அந்தரத்தமரர்கள் கூட்டங்களிவையோ) அந்தரம், அண்டம், ஆகாசமென்றும் - தேவலோகத்துக்குப்பேர். "கேசவன் தமர்" என்கிறதல்லவே, அவர்கள் வர்த்திக்கிற தேசத்தையிட்டுச் சொல்லுமித்தனையிறே. தேவர்கள் பன்மை - கூட்டங்களின் பன்மை. (அருந்தவமுனிவர்) ஸப்தரிஷிகளாகவுமாம்; 'பெறுதற்கரிய தபஸ்ஸைப்பண்ணி விரோதிநிவர்த்தி பண்ணினவர்களென்னவுமாம். (மருதருமிவரோ) மருத்தேவதைகள். "கூட்டங்கள்" என்கிறது மூன்றிடத்திலும் வைத்துக்கொள்ளலாம்.

---

வ்யா.—(அந்தரமித்யாதி) அபிமாநிகளான அந்தர ஜாதிகளுடையத் தங்களுடைய பரிகரமும் தாங்களும், பக்நாபிமாநராய் திரண்டு வந்து நின்றார்கள். இத்தால் - கீழ்ச்சொன்ன அதிகாரிகளான தேவதைகளை யொழிய அநுக்தமான தேவதாகணத்தை யருளிச்செய்கிறார். (அருந்தவமித்யாதி) ஒருத்தராலும் செய்து முடிக்கவொண்ணாத தபஸ்ஸையுடைய ஸநகாதிகளுக்கு ப்ரத்யாஸந்நரான மருதகணங்களும் வந்து நின்றார்கள். (இந்திரனித்யாதி.) ஸர்வாத்யக்ஷனான தேவேந்த்ரன் தன்வாஹநமான ஐராவதமும்தானுமாய் வந்துநின்றான்.

---

ஏழாம்பாட்டு.—அர்த்தம்வ்யுக்ரமமா யிருக்க, சபதம்சேர்க்கவிடமுண்டோவென்ன; அருளிச்செய்கிறார் (ஹ்ராஹிதா-அக்நி ஆஹிதேத்யாதி.) சப்தமொன்றாயிருக்க அர்த்த ப்ராதாந்யமாகச்சொன்னவிடமுண்டோ வென்ன; அருளிச்செய்கிறார் "ப்ரணவமித்யாதி"

(எம்பெருமானுனகோயிலின்வாசல்) அணைந்தார்கள், வந்தார்களென்றிறவளவல்ல,பார்த்தருளீர்! திருவாசலிலேவந்தார்கள். "பின்னிட்ட சடையானும் பிரமனு மிந்திரனும் துன்னிட்டுப்புகலரிய" என்னக்கடவதிறே. (சுந்தரர் நெருக்க) தேவஜாதியிலே பெருபேதம். "சுந்தரம்" என்று—அழகாய், அத்தாலே—பாடுவாரென்னவுமாம். சுந்தரரென்று - கந்தர்வர். (விச்சாதரர்நூக்க) அதிலே முன்கைவலியராயிருப்பார்சிலர். (இயக்கரும் மயங்கினர்) யக்ஷரென்றுகொண்டு ம்ர்துப்ரக்ர்திகளாயிருப்பார்சிலர். (மயங்கினர்) நெருக்கம் பொறுக்கமாட்டாமையாலே மோஹித்தார்கள். இவர்கள் இங்ஙனேபடவேணுமோவென்றால், தேவரீரைத் திருவடித்தொழுகையிலுள்ள நசையிருந்தபடி. உள்நெருக்கற்றவிடத்திலே கண்டாலோவென்றால் புறம்புதானே நெருக்கற்றிருக்கிறதென்கிறார் மேல் (அந்தரமித்யாதி) ஆகாசத்தோடு பூமியோடு வாசியறவிவரமறநெருங்கிற்று, தேவரீர் திருப்பள்ளியுணர்ந்தருளிப் பார்த்தருளீரென்கிறார். ... ... ... ... (எ)

அ.—(வம்பவிழ்தயாதி) முன்னில பாட்டில்-இந்த்ரன் ஸபரிகரனாய் வந்தபடி சொல்லிற்று; இப்பாட்டில் - திருப்பள்ளியுணர்ந்தருளினால் கண்டருளக்கடவ உபகரணங்களை மங்களார்த்தமாக அவரவர்கள் கொண்டுவந்து நின்றாகளென்கிறது.

(எம்பெருமானித்யாதி) ஸர்வேஶ்வரனானதேவரீருடையகோயிற்றிருவாசல். (சுந்தரர்நெருக்கவித்யாதி)கந்தர்வர்கள்நெருக்க அவர்களுடனேவித்யாதரரும்நூக்க யக்ஷருமொன்றாகத் திருப்பள்ளியுணர்ந்தருளும்போதையழகுகண்டு திருவடித்தொழுதுதிருப்பல்லாண்டுபாடுகைக்குண்டான ஆசையாலே ஒருவர்க்கொருவர் முற்கோலி மேல்மேலெனநெருக்குண்டுமோஹியாநின்றார்கள். (அந்தரமித்யாதி)ஆகாசத்திலும் பூமியிலுமிடமில்லாதபடியாய்த்து, அதயக்ஷராலுமதிற்கை யரிதாமபடி நெருக்குப்படாநின்றார்கள், ஸர்வஸ்வாமியான தேவரீருணர்ந்தருளி அடிமைகொண்டருள வேணுமென்கிறார். ... ... ... .. ... ... (எ)

அ.—எட்டாமபாட்டு. தேவரீர் திருவாராதநத்துக்கு அநுரூபமான ப்ராதக்காலமானது ஸந்நிஹிதமாயத்து; ஆராதநாங்கமாய்க் கண்டருளுகைக்கு ஸத்ர்ஶமான உபகரணங்கள்கொண்டு அநந்யப்ரயோஜநரான ரிஷிகள்வந்து நின்றார்கள்; திருப்பள்ளி யுணர்ந்தருளி அவற்றைக் கண்டருளவேணுமென்கிறார்.

---

விச்சாதரர்-வித்யாதரர்."அந்தரம், பார் - மற்று-இடமில்லை" என்றந்வயம். ... ... ... ... ... (எ)

வம்பவிழ்வானவர்வாயுறைவழங்கமாநிதிகபிலையொண்கண்ணாடிமுதலா, எம்பெருமான் படிமைக்கலங்காண்டற்கேற்பனவாயின கொண்டுநன்முனிவர், தும்புருநாரதர் புகுந்தனரிவரோதோன்றினனிரவியுந்துலங்கொளிபரப்பி, அம்பரதலத்தினின்றகல்கின்றதிருள்போய்அரங்கத்தம்மாபள்ளியெழுந்தருளாயே... ... (அ)

ப-ரை.—வழங்க - தேவரீருக்கு ஸமர்ப்பிப்பதற்காக, வம்பவிழ்-பரிமளிதமான, வாயுறை-புல்லும், மா - ச்லாக்யமான, நிதி - சங்கநிதி பத்மநிதிகளும், கையிலே யுடையராய்க்கொண்டு, வானவர் - ஸ்வர்க்கலோகத்திலே வர்த்திக்கக்கடவ தேவர்களும், கபிலை - கபிலாஸுரபிகளும், ஒண் - ஒளிபொருந்திய, கண்ணாடிமுதலாக - திருக்கண்ணாடி முதலாக, எம்பெருமான் - ஸர்வஸ்வாமியான தேவரீர், காண்டற்கு - கண்டருளுகைக்கு, ஏற்பனவாயின - தகுதியாயுள்ளனவான, படிமைக்கலம்கொண்டு - உபகரணங்களெல்லாங்கொண்டு, நல் - அநந்யப்ரயோஜநரான, முனிவர் - ரிஷிகளும், மங்களகீதம் பாடுகைக்கு, தும்புருநாரதர்-தும்புருநாரதர்களும், புகுந்தனர்-வந்து நின்றார்கள்; இவரோ-இவர்களன்றியும், இரவி - ஸூர்யனனவன, துலங்கு ஒளி - தன்னுடையமிக்க தேஜஸ்ஸை, பரப்பி-பரப்பிக்கொண்டு, தோன்றினன் - தோன்றினான்; இருள்-அந்தகாரமானது, அம்பர தலத்தினின்றும் - ஆகாசத்தினின்றும், போய்அகல்கின்றது - ஸவாஸமாகப்போயிற்று; ஆதலால, அரங்கத்தம்மாபள்ளி யெழுந்தருளாயே. (அ)

வ்யா.—(வம்பவிழ்வானவர்வாயுறைவழங்க) வானவர் - தேவஜாதி. நித்யமானயௌவநத்தையுடையவர்களென்னுதல்; ஸௌகந்த்யத்தை யுடையவர்கள. தந்தாம்பதங்களுக்குத் தக்க பூமலர்களையுடையவர்க ளென்னுதல். (வாயுறைவழங்க) "வாயுறைவழக்க" என்றத்தைமெலித்து, "வாயுறைவழங்க" என்றாக்கி, அவர்களுடைய நியமநப்ரகாரத்தை நினைக்கிறது. "வாயுறை" என்றது-அறுகம்புல். "வம்பவிழ்" என்றது - ஸச்ரத்தமாயிருக்கை. (மாநிதி) "நிதி" என்று-சங்கநிதி பத்மநிதியாகவுமாம்; நிதியென்று-நவரத்நாதிகளாகவுமாம். மாநிதியென்று மஹார்க்க மென்றபடி. நித்யதாநத்துக்குத் தநராசிகளைச் சொல்லிற்றாகவுமாம்.

---

வ்யா.—(வம்பவிழித்யாதி) பரிமளிதமான ஸ்வர்க்கத்திலே வர்த்திக்கக்கடவ தேவர்கள் கோக்ராஸங்களுங் கொண்டுவந்து நின்றார்கள். (மாநிதி யித்யாதி) சங்கநிதி பத்மநிதிகளும்,

---

எட்டாம்பாட்டு.—வம்பென்று - புதிதாய், யௌவநமாதல்; பரிமளமாதல். நியமநப்ரகாரம் - உத்தேஸ்யவிஷயத்தைக்கிட்டும் போதுகையும் அறுகம்புல்லுமாகக் கிட்டவேணுமென்கிற நியதி. (வம்பவிழ்) வாயுறைக்கு விசேஷணமாகவுமாம். வழக்கத்துக்கு-தகத்திற்குறிப்பாக.

(கபிலை) பசுக்களைவகைகடவதுமற வழக்கத்துக்குறுப்பாக, வாயுறை, மாநிதிகபிலை, மற்றும் - சொல்லிச்சொல்லாத வுபகரணங்களெல்லாம்வந்தன; கண்டருளுகைக்குறுப்பாகத் திருக்கண்ணாடி தொடக்கமானவையுமெல்லாம் வந்தன. (ஏற்பனவாயினகொண்டு) தேவரீர்க்கு, ஸத்ர்சமானவை - அநுரூபமானவை. (நன்முனிவர்) அத்தலைக்குப் பாங்கானவற்றையே மநநம் பண்ணுமவர்கள். (தும்புரு நாரதர் புகுந்தனரிவரோ) பெருமாள் பள்ளிகொண்டருளின பின்பு இசைகேட்டருளுமாப்போலே. (தோன்றினனிரவியுந் துலங்கொளிபரப்பி) அவ்வோபணிக்குக்கடவார்கள் எடுத்துவந்தார்கள், அவற்றைக் கண்டருளவேணுமென்று காட்டுவாரைப்போலே, ஸஹஸ்ரகிரணமாகிற பந்தத்தைக்கொண்டு ஆதித்யனும்வந்தான். (அம்பரதலத்திலித்யாதி) இருளானது ஒரு பயண மெழவாங்கிற்று என்றாப்போலேயிறே முன்புசொல்லிற்று. அவ்வளவல்ல. ஆகாசத்திலும் ஸஞ்சரிக்கவொண்ணாதபடி நிரஸ்தமானபடி சொல்லுகிறது. பாஹ்யமான இருளானது நிரஸ்தமானால் ஆந்தரமான விருளைப்போக்கியருளவேண்டாவோ; தேவரீர் திருப்பள்ளியுணர்ந்தருளி * அமலங்களாக விழித்தருளீரென்கிறார். ... (௮)

---

கபிலாஸுரபிகளும், திருக்கண்ணாடிமுதலாக ஸர்வஸ்வாமியானதேவரீர் கண்டருளுகைக்கு ஸத்ர்ஶமான உபகரணங்களடையக்கொண்டு அநந்யப்ரயோஜநரான ரிஷிகள்வந்து அவஸரப்ரதீக்ஷராய் நின்றார்கள். (தும்புருநாரதரித்யாதி) மங்களகீதங்கள் பாடுகைக்கு தும்புரு நாரதர்களும்வந்து நின்றார்கள். (தோன்றினனிரவியுமித்யாதி) மிக்க தேஜஸ்ஸையுடைய ஆதித்யனும் தன்தேஜஸ்ஸைப் பரப்பிக்கொண்டுவந்து தோன்றினான். (அம்பரமித்யாதி) ஆகாசத்திநின்றும்இருள்போயிற்று. பாஹ்யமான அந்தகாரமிறே அவனால் போக்கலாவது, ஸர்வரக்ஷகரானதேவரீர், ஆந்தரமான அந்தகாரத்தைப்போக்கத் திருப்பள்ளி யுணர்ந்தருளவேணுமென்கிறார். (௮)

௮.—ஒன்பதாம்பாட்டு. திருப்பள்ளியுணர்ந்தருளும்போதையழகு திருவடித்தொழவும் அழகோலக்க மிருக்கும்படி கண்டடிமை செய்யவும்வேணுமென்று, தந்தாமுடைய பரிகரமான மங்களவாத்யங்களும் வீணைகளுமாய்க் களித்துக்கொண்டு யக்ஷகந்தர்வாதிகள் வந்துநின்றார்கள்; அடியேனுக்காகத் திருப்பள்ளியுணர்ந்தருளியடிமைகொண்டருள வேணுமென்கிறார்.

---

“எம்பெருமான் காண்டற்கு படிமைக்கலமாவது-மற்றுமுண்டான உபகரண பதார்த்தம். இசைகேட்டருளுகை-தாலாட்டுக்கேட்டுகக்குமாப்போலே உணர்ந்தருளும்போதும் பாட்டுக்கேட்கைக்காகப் பாடவந்தார்களென்றபடி. ... ... (௮)

அ.—ஒன்பதாம்பாட்டு. (ஏதமிலித்யாதி) முன்னிற்பாட்டில்-நித்யதாஸத்துக்குறுப்பானவையும்மற்றும்கண்டருளக்கடவனவும் வந்தனவென்றது; இப்பாட்டில் - தேவரீர்திருப்பள்ளியெழுச்சிக்கு ஸ்த்யவாத்ய கீதங்களுக்குக் கடவரானவர்கள் வந்தார்களென்கிறது.

ஏதமில்தண்ணுமையெக்கம்மத்தளி யாழ்குழல்முழவமோடிசைதிசைகெழுமிக், கீதங்கள்பாடினர்கிந்நரர்கருடர்கந்தருவருமிவர்கங்குலுமெல்லாம், மாதவர்வானவர்சாரணரியக்கர் சித்தரும்மயங்கினாதிருவடித்தொழுவான், ஆதலி லவர்க்கு நாளோலக்கமருள வரங்கத்தம்மா ! பள்ளியெழுந்தருளாயே. ... (கூ)

ஏதமில-நிர்த்தோஷமான, தண்ணுமை - ம்ர்தங்கமும், எக்கம் - ஒருதந்தியையுடையவாத்யமும், மத்தளி - மத்தளமும், யாழ்-வீணையும், குழல்-வேய்ங்குழல் புல்லாங்குழல்முதலிய குழல்களுமாய், திசை-திககுக்களெங்கும்முழவமோடு - இவற்றின முழக்கததோடு, இசைகெழுமி - இசைகூட்டிப் பாடக்கடவரான, கிந்நரர் - கிந்நரர்களும், கருடர் - கருடர்களும், கந்தருவர் - கந்தர்வர்களும், இவர் - மற்றுள்ளவர்களும், கங்குலுமெல்லாம் - ராத்ரியெல்லாம், மாதவர் - மஹாதபஸ்ஸையுடையரான ரிஷிகளும், வானவர்- பகுத்துச்சொல்லப்படாத தேவர்களும், சாரணர் - சாரணர்களும், இயக்கர்-யக்ஷர்களும், சித்தரும்-ஸித்தர்களும், திருவடித்தொழுவான் - திருவடித் தொழுகையிலுண்டானதவலையாலே, மயங்கினர் - நெருக்காநின்றார்கள்; ஆதலில் - ஆகையாலே, அவர்க்கு - அவர்களுக்கு, நாள்-இந்தநாளிலே, ஓலக்கமருள-திருவோலக்க மருளும்படிக் கீடாக, அரங்கத்தம்மாபள்ளியெழுந்தருளாயே.— (க)

வ்யா.—(ஏதமில்தண்ணுமை) ஏதமென்று - குற்றம்; இல்லென்று-இல்லாமை. குற்றமற்ற வாத்யமென்கிறது. “தண்ணுமை” என்றது - சிறுபறை. ஒருதலைப்பறை. எக்கம் - தாளம். ஏகதந்த்ரியென்னவுமாம். மத்தளி-சிறுமத்தளி. “யாழ்” என்று – இசைக்குமுன்னேறட்டுக் கொள்வதொன்று. “குழல்” என்று - ஜாத்யேகவசநம். (முழவம்)பெருவாயன்; பெருமத்தளியென்றுமாம். இவற்றிலுண்டான நாதமானது திக்குக்கள்தோறும் கெழுமி. ஏதமில் தண்ணுமை, ஏதமிலெககமென்று எல்லாவற்றிலும் வைத்துச்சொல்லலாம். (கீதங்கள்பாடினர் கிந்நரர் கருடர்) எல்லாரும்விடிவோறே வருவாரும், விடிந்துவருவாருமிறே; இவர்களைத் திருவுள்ளம் பற்றியருளவேணும்.

---

வ்யா.—(ஏதமிலித்யாதி) நிர்த்தோஷமான மங்கள வாத்ய விசேஷங்களும். ஏகதந்த்ரீ – எக்கம்; மததளி என்னவுமாம்; ஒரு பறை விசேஷம். யாழ்விசேஷங்களும், குழல் விசேஷங்களுமாய்த் திக்குக்களெங்கும் முழங்கிக்கொண்டு மங்களமான கீதங்கள் பாடக்கடவரான.

(கிந்நரர்கருடாித்யாதி) மங்களாசாஸநம் பண்ணுவார். அதில் தலைவரான கந்தர்வர்களுள்ளிட்டவர்களைப்பார்த்தருளீர். (சுந்தரு லுமெல்லாம்) ராத்ரியெல்லாம்., (மாதவர்). மஹாதபஸ்ஸையுடைய ருஷிகள். (வானவர்) வைமாநிகரான தேவர்கள். (சாரணர்) தேவஜாதிதன்னிலே புலாவித்திரியுமவர்கள். (இயக்கர்) யக்ஷரென்று - தேவஜாதியிலே சிலர். (சித்தர்) ஸித்தர்கள். (சித்தரும்மயங்கினர் திருவடித்தொழுவான்) வைமாநிகரான தேவஜாதியோடு, பெரியதபஸ்ஸுக்களைப் பண்ணின மதிப்பரான ருஷிகளோடு, யக்ஷஸித்தசாரணரென்கிற தேவர்களோடு, கிந்நரர் கருடர்களென்கிற மங்களாசாஸநம் பண்ணுவாரோடு, இவர்களில் தலைவரான கந்தர்வரோடு வாசியற, சிறியார் பெரியாரென்றதே தேவரீர் திருப்பள்ளியுணர்ந்தருளும்போதில் ப்ரதம கடாக்ஷத்தை நினைத்து ஒருவர்க்கொருவர் முற்சோலிநெருக்குண்ணுநின்றார்கள்;- மங்களவாத்யங்கள், குழல்கள் இவைகொண்டு அடிமைசெய்யுமவர்களும் திருப்பள்ளியெழுச்சிக்கு உதவவந்தார்கள். (ஆதலிலித்யாதி) "நன்மணிவண்ணனூர்" என்கிறபடியே திருப்பள்ளியுணர்ந்தருளி யெல்லாரும் வாழும்படி கடாக்ஷித்தருளவேணுமென்கிறார். (கூ)

அ.—(கடிமலரித்யாதி) உபகரணமோபஸம்ஹாரங்கள் சேர்ந்திருக்கிறது எங்ஙனேயெனில்; "அடியேன்செய்யும் விண்ணபம்" என்று தொடங்கி, "மாமன்விண்ணப்பம் செய்த" என்றும் "நமக்கேபறைதருவான்" என்றுதொடங்கி, "அங்கப்பறைகொ

---

கிந்நராதிகளும், கந்தர்வர்களும், மஹாதபஸ்ஸையுடையரிஷிகளும், அநுக்தரான தேவர்களும், சாரணயக்ஷஸித்தர்களும மடையப் புகுந்து திருவடிதொழுகையில் ...ண்டான தவளையாலேநெருக்காநின்றார்கள்; ஸர்வரக்ஷகரானதேவரீர் உணர்ந்தருளி அழகோலக்கமாக இருந்து அடிமை கொண்டருளவேணுமென்கிறார்....(கூ)

அ.—பத்தாம்பாட்டு.—நிகமத்தில், முதலபாட்டுத் தொடங்கிச்சொன்ன தேவர்களோடுரிஷிகளோடு வாசியறதேவரீர்பக்கல்ஒரு ப்ரயோஜநங்கொண்டு மீளுமவர்கள்; அன்றிக்கே, தேவரீர்திருப்பள்ளியுணர்ந்தருளும்போதை முகவிகாஸமே ப்ரயோஜநமாயிருக்கிற அடியேனுக்காகத் திருப்பள்ளியுணர்ந்தருளவேணுமென்று பரார்த்தித்துமுடிக்கிறார்.

---

ஒன்பதாம்பாட்டு.—மயங்கினர் - நெருக்குண்டு மோஹியாநின்றார்கள். "நன்மணிவண்ணனூர்" என்றது - திருவேங்கடமுடையான் நாநாஜாதிகளையுங் கடாக்ஷிக்குமாப்போலே தேவரீரும் கடாக்ஷித்தருளவேணும். ... ... ... ... (கூ)

ண்ட" என்றும், "நாதாயநாதமுநயே" "நாதாயநாதமுநயே" என்று தொடங்கி பின்பு முடிக்கிறவிடத்திலும் "பிதாமஹம்நாதமுநிம்விலோக்ய" "பிதாமஹம்நாதமுநிம்விலோக்ய" என்றும் - உபக்ரமோபஸம்ஹாரங்கள் சேரக்கிடக்குமாப்போலே, இவரும் உபக்ரமோபஸம்ஹாரங்கள் சேரத்தலைக்கட்டாநிற்கச்செய்தே இவருக்கோரேற்றமுண்டு. இப்ப்ரபந்தந்தன்னில், பாட்டுக்குப்பாட்டு, போதுவைகினபடி சொல்லுகையாயிற்று-கருத்து. முதற்பாட்டிலேசெய்தது-ஆதித்யனானவன் உதயபர்வதத்தை வந்தணுகினான்: "தேசாந்தரம் போனபிள்ளைகள் வாராநின்றார்கள்" என்று கேட்டால், அவர்களுடன் ஸ்பர்சமுடைய மநுஷ்யருக்குமுகத்திலே விகாஸமுண்டாமாப்போலே, ஆதித்யனோடே தாமரைக்கு ஒரு சேர்த்தியுண்டிறே, அத்தாலே முன்புநின்றமாத்ரையில் சிறிது விகஸிக்கக்கோலி அது கட்டுநெகிழ்க்க அவ்வளவிலே சித்ரவழியே தேன்ப்ரவஹித்ததென்றிறே சொல்லிற்று. இதில்-அவ்வளவுமன்றியே, இத்தாமரையோடு சேர்த்தியுடையஆதித்யனுமுதித்துமேலேபோரான், தாமரைகளும் கழியவலர்ந்தனவென்று போதுவைகினபடி சொல்லுகிறது.

கடிமலர்க்கமலங்கள் மலர்ந்தனவிவையோ கதிரவன்கனைகடல் முளைத்தனனிவனோ, துடியிடையார்சுரிகுழல்பிழிந்துதறித்துகிலுடுத்தேறினர் சூழ்புனலரங்கா, தொடையொத்ததுளபமுங் கூடையும்பொலிந்து தோன்றியதோட் டொண்டரடிப்பொடியென்னு, மடியனையளியனென் றருளியுனடியார்க் காட்படுத்தாய் பள்ளியெழுந்தருளாயே. (௧௦)

ப-ரை.—புனல் - ஜலத்தாலே, சூழ் - சூழப்பட்ட, அரங்கா - கோயிலிலே கண்வளர்ந்தருளுமவனே!; கடி - பரிமளத்தையுடைய, கமலமலர்கள் - தாமரை புஷ்பங்களானவை, மலர்ந்தன - அலர்ந்தனநறை; கதிரவன் - அநந்தத்தாமரையமலர்த்தகடவா ஸூர்யனானவன், கனை-கோஷிக்கையேஸ்வபாவமாகவுடைய, கடல்-ஸமுத்ரத்திலே, முளைத்தனன்—உதயகிரியிலேவந்து தோன்றினான்; கண்டாரைப்பிச்சேற்றவல்ல, துடி-உடுக்கைபோன்ற, இடை யார்-இடையையுடையரானஸ்த்ரீகள், சுரி-சுருண்ட, குழல்-மயிர்முடியை, பிழிந்துதறி-பிழிந்து உதறிவிட்டு, துகில்உடுத்து - வஸ்த்ராம்பரியட்டங்களையுடுத்திக்கொண்டு, ஏறினர்-கரையேறினார்கள்; ஒத்த - தேவரீர்சாத்தியருளுகைக்குத்தகுதியான, துளபத்தொடை - திருத்துழாய்மாலையும், கூடையும்தோன்றிய - திருப்படலிகையுமாய்த்தோன்றின, தோள் - தோளையுடையனாய், தொண்டரடிப்பொடியென்னும் - தொண்டரடிப்பொடியென்றுபேரையுடையனான, அடியனை - அடியேனை, அளியனென்று - ஸ்நேஹிதனென்று, அருளி - க்ருபைபண்ணி, உன்னடியார்க்கு-தேவரீர்தாஸவர்க்கத்துக்கு, ஆள்படுத்தாய் - ஆள்படுத்துகைக்காக, பள்ளியெழுந்தருளாய் - திருப்பள்ளியுணர்ந்தருளவேணுமென்கிறார். (௧௦)

வ்யா.—(கடிமலர்க்கமலங்கள் மலர்ந்தனவிவையோ) கடியென்று-பரிமளம். கந்தமுண்டாகச் சொல்லவேணுமோ; "வாசஞ்செய் பூங்குழலாளுடைய வாஸஸ்தாநமன்றோ. (மலர்ந்தனவிவையோ) முன்பு சொன்னமாத்ரமேயல்ல, தேவரீர் கண்டருளவல்லவளம்பூ. (கதிரவன்கனைகடல்முளைத்தனனிவனோ)முன்பும் இவன் ப்ரஸ்துதனானவிடத்தில் "இவனோ" என்ற விடமில்லை, இவனை வினவியருளவேணும்; அவனுக்கு தாரகம் தேவரீர் குசலப்ரச்நம் பண்ணினாலன்றோ.

இவர்கள் தந்தாமுடைய ஸத்தாதாரக மிழக்குமளவல்ல,இவர்களை வினவியருளாதே தேவரீருடையஸத்தாதாரக மிழக்கப்புகாநின்றீரென்கிறார் (துடியிடையாரித்யாதி) "தோழியும்நானுந் தொழுதோம்""கோலங்கரியபிரானே குருந்திடைக்கூறை பணியாய்" என்கிற இந்தாஸமிழக்கப் புகாநின்றீர். இத்தால் - பழைய மடுவின் கரையையும், குருந்திலேறினபடியையும் நினைக்கிறது. * கோவலனாய் வெண்ணெயுண்டவாயனிறே பள்ளிகொள்ளுகிறவன். (சூழ்புனலரங்கா) நீர்ச்சீரையிட்டுக்கொண்டு கண்வளர்ந்தருளலாமோ.(தொடையொத்ததுளபமும்) திருமாலை யெடுத்தால் திருக்குழலுக்கும் திருமார்வுக்கு மளவாயிருக்கை. திருமாலையாயும், திருப்பரியட்டமாயும் நிற்கிறார் சேதநவர்க்கமிறே.

---

வ்யா.—(கடிமலரித்யாதி) ஊரிலே தாமரையாயுள்ளவையெல்லாம் அலர்ந்துதோன்றி மதுவெள்ளமிடாநின்றது. (கதிரவனித்யாதி) அந்தத்தாமரையை யலர்த்தக்கடவ ஆதித்யனும், கீழ்திக்கிலே கோஷிக்கையேஸ்வபாவமாகவுடைய ஸமுத்ரத்தில் உதயகிரியிலே வந்து தோன்றினான். (துடியிடையாரித்யாதி)கண்டாரைப் பிச்சேற்றவல்ல இடையையும், முடியையுமுடைய ஒருதரத்தில் பெண்களெல்லாம் நீராடித்தநதாம்பரியட்டங்கள்தாந்தாமே சாத்திச் சமைந்தார்கள். இததால்-பெரியபெருமாள்சிலட்கென்னவுணருகைக்காகப்பழையயமுனைநீராடடைஸ்மரிப்பிக்கிறார்,"பெரியபெருமாளாகிறார்-க்ர்ஷ்ணன்; நம்பெருமாள்-சக்ரவர்த்திதிருமகன்" என்றருளிச்செய்வர்.(சூழ்புனலரங்கா)விரஜையையும்,யமுனையையும், ஸரயுவையும், மறப்பிக்கும்படியான திருப்பொன்னியாலே ஆழ்வார்க்கு நிரூபகதர்ம மிருக்கிறபடி. சூழப்பட்ட கோயிலை நிரூபகமாகவுடைய தேவரீர். (தொடையொத்தவித்யாதி) தொடுக்கிறபோதே அங்குத்தைக்கு ஸதர்ஶமாம்படி தொடுத்ததிருமாலைகளும், திருப்படலிகையுமாய்.

---

பத்தாம்பாட்டு.—மேலில் பத்துக்கு அவதாரிகை யருளிச்செய்கிறார் (இவர்களித்யாதி.) திருமாலைகள் அங்குத்தைக்கு அநுரூபமாகக் கூடுமோவென்ன; அருளிச்செய்கிறார் (திருமாலையாயுமித்யாதி.) படலிகை-திருப்பள்ளித்தாமக்கூடை.

(கூடையும்பொலிந்துதோன்றியதோள்) "ஆழியும்சங்குமுடைய நங்களடிகள்" என்று-அவனுக்குசேஷித்வஸூசகமிறே. "ஸுசக்ர நக பூஷித ஸர்வாங்க:" "மஹாத்மநஸ்ஸங்கசக்ராஸிபாணே:" என்னுமாப் போலேயிறே சேஷபூதனானவனுக்கும்திருப்படலிகைஸூசகமாயி ருக்கிறபடி. "தநுர்தர:" "கநித்ரபிடகாதர:" இத்யாதி. (தொண்டரடிப்பொடி) [துளவத்தொண்டாய] திருத்துழாய்க்கெழுதிக்கொடுத்திருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கடியேனென்றிருக்குமவர், இவருடைய அடியாரடியாரிருக்கிறபடி. இப்படிப்பட்ட ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸ்ரீபாதரேணுவென்கிறார். (அடியனை) இவ்வாத்மாவினுடைய வார்ப்பைத்துடைத்தால் நிலைநின்றபேர்இதுவிறே. (அளியனென்றருளி) ஸ்நேஹியென்று திருவுள்ளம்பற்றி. அங்ஙனன்றியே, தேவரீர்அளிமிக்காரிறே; இஜ்ஜந்துவை க்ருபைபண்ணவடுக்கும் என்று திருவுள்ளம்பற்றி. எல்லாமற்றனென்று திருவுள்ளம் பற்றி. (உன்னடியார்க் காட்படுத்தாய்) உன்னளவிலே நிற்கில், முதல்நிலை; "உனக்காட்பட்டு நின்கட்பெறுவ தெதுகொலென்று பேதையேன் நெஞ்சம் மறுகல்செய்யும்" என்றதைபடி (அடியார்க் காட்படுத்தாய்) முதல்நிலையுமன்றியே, அவ்வருகில் ஸமஸாரமுமன்றியே, "தொண்டர் தொண்டா தொண்டர் தொண்டன் சடகோபன்" என்னுமாபோலே, எல்லை நிலத்திலே நிறுத்தினாய்; "ரத்நம்பட்டது, முத்துப்பட்டது" என்னுமாப்போலே. (பள்ளியெழுந்தருளாயே) அபிமதஸித்தியுண்டானாலு முறங்கு மிததனை யோ; தேவரீருடைய யோகநித்ரை பலபர்யநதமானாலு முறங்கு மித்தனையோ.

---

(தோன்றியவிதயாதி) ரக்ஷகரான பெருமாளுக்குக் கோயில் நிரூபகமானாப்போலே ஆழ்வாருக்கு நிரூபகதர்ம மிருக்கிறபடி. "தநுர்தர:" "கநித்ரபிடகாதர:" என்றும், "லக்ஷ்மீ ஸம்பந்ந:" "லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்ந:" என்றும் சொல்லுகிற இளைய பெருமாளைப் போலே சேஷபூதனுக்கு சேஷத்வபரிகரமே ஐஶ்வர்யமாகக்கடவதிறே. "தொண்டரடிப்பொடி" என்று இவருடைய ப்ரஸித்தி. ஜ்ஞாநாநந்த லக்ஷணமாகையன்றிக்கே ததியசேஷத்வபர்யந்தமாயிருக்கை. (அடியனையளியனென்றருளி) ஸ்நிக்தனென்று க்ருபைபண்ணியருளி, அச்சேஷத்வத்தின் எல்லையிலே நிறுத்தின தேவரீர் அடியேனுக்காகத் திருப்பள்ளி யுணர்ந்தருளி யடிமைகொண்டருளவேணுமென்கிறார். ... (கO)

---

சேஷத்வஸூசகமாகத் தரித்தபேருண்டோவென்ன; அருளிச் செய்கிறார் (தநு - கநித்ரேத்யாதி.) ஸ்நேஹியென்னுதல்; அளியனென்னுதல். ... ... ... ... ... (கO)

ஜீயர்திருவடிகளேசரணம்.

## திருப்பள்ளியெழுச்சி வ்யாக்யாநம்.

ஸம்பூர்ணம்.

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# பிள்ளைலோகஞ்சீயரருளிச்செய்த அமலனாதிபிரான் வ்யாக்யாநாவதாரிகை.

(ఆపాదచూడమ్-ஆபாதசூடமித்யாதி) இதில்-"கெருடவாகனும் நிற்க" என்றும், "அஞ்சிறைப்புட்பாகனை யென்றும் நான்கண்டது தென்னரங்கத்தே" என்றும் சொல்லுகிறபடியே-பெரியபெருமாளை ஸேவித்து அநுபவித்த முநிவாஹநரை மநஸ்ஸாலே அநுபவிக்கும்படி சொல்லுகிறது. சேஷசேஷியான கருடவாஹநத்வமும் சேஷசாயித்வமும் ச்ரியபதித்வமுமிறே ஸர்வாதிகவஸ்துவுக்கு உபலக்ஷணம்; இப்படி ஸர்வாதிகவஸ்துவினுடைய ஸர்வாவயவங்களையும் ஸக்ரமமாக அநுபவித்தபடி சொல்லுகிறது.

ఆపాదచూడమనుభూయ హరిం శయానం మధ్యేకవేరదుహితుర్ముదితాన్తరాత్మా।
అద్రష్టృతాం నయనయోర్విషయాన్తరాణాం యో నిశ్చికాయ మనవై మునివాహనం తమ్॥

வ்யாக்யாநம்.—(ఆపాదచూడమ్-ஆபாதசூடம்) * திருப்பாதகேசத்தை. (అనుభూయ-அநுபூய) * அமலனாதிபிரானடைவே யநுபவித்து. (హరింశయానమ్ - ஹரிம்சயாநம்) "శ్రీమాన్ సుఖం సుష్వాప పరన్తపః" "ஸ்ரீமாந்ஸுகம்ஸுஷ்வாப பரந்தப:" என்னும்படியாய்க் கிடக்கை. கிடந்த கிடையிலே * உட்குடையசுரருயிரெல்லா முண்டவரிறே. [హరతీతిహరిః - ஹரதீதிஹரி:] அநுகூலர் மநஸ்ஸையும் ப்ரதிகூலர் ப்ராணன்களையும் ஹரிக்குமவரென்கிறது. அநுகூலரை * దృష్టిచిత్తాపహారిణమ్ — த்ருஷ்டிசித்தாபஹாரம் பண்ணுமபடியாயிருக்கை. "கிடந்ததோர் கிடக்கைகண்டு மெங்ஙனம் மறந்துவாழ்கேன்" "ஏரார்கோலந்திகழக்கிடந்தாய்கண்டேன்" என்னும்படி தாபஹாரானவரை. அவர்தாம * அரவினணைமிசைமேயமாயனாரானமுகில் வண்ணருமிறே. இப்படி அநுகூல ப்ரதிகூல ரக்ஷண சிக்ஷணங்களைப் பண்ணுமவரானவரை. (కవేరదుహితుర్మధ్యే - கவேரதுஹிதுர் மத்யே) கவேரகந்யையான காவேரிமத்யே- * கங்கையிற் புனிதமாய காவிரிநடுவுபாட்டிலேயிறே படுகாடுகிடக்கிறது. * வண்பொன்னி * திரைக்கையாலடிவருட * திருவாளனினிதாக வாய்த்துத் திருக்கண்கள் வளருகிறது. இப்படி "కవేరదుహితుర్మధ్యే-శయానమ్ - హరిమ్-ఆపాదచూడమ్" என்றும், * குடதிசை முடியை வைத்துக் குணதிசை பாதம் நீட்டி, வடதிசை பின்புகாட்டித் தென்திசையிலங்கைநோக்கிக், கடல்நிறக் கடவுளெந்தை அரவணைத்துயில்மாகண்டு அநுபவித்தாரென்கை. ("ముదితాన్తరాత్మా - முதிதாந்தராத்மா) இப்படி அநுபவித்து ஹ்ருஷ்டமநாவானார் - அகமகிழப்பெற்றார். * உவந்தவுள்ளத்தரானார். ஸந்தோஷசித்தஸமாஹிதரானார். "மகிழ்ந்ததுசிந்தை" என்னக்கடவதிறே.

அவ்வளவில் நில்லாதே "అద్రష్టాంనయనయోర్విషయాన్తరాణామ్" "அத்ரஷ்டாம் நயநயோர்விஷயாந்தராணாம்" என்னும்படி காணாக்கண்ணை யுடையரானார். "அணியரங்கனென்னமுதினைக் கண்டகண்கள் மற்றொன்றினைக் காணாவே" என்றாய்த்து இவர் இவ்விஷயத்திலே அஸ்தமிதாந்ய பாவராயிருப்பது [ఏతదేవామృతంద్రష్ట్వాత్రుప్యన్తి - ஏததேவாம்ர்தம்த்ர்ஷ்ட்வாத்ர்ப்யந்தி] * அரங்கமாகோயில் கொண்ட கரும்பினைக் கண்டுகொண்டென் கண்ணிணை களிக்குமாறே; * రామంమేనుగతాదృష్టిః * నత్వాంపశ్యామి - ராமம் மேநுகதாதர்ஷ்டிः * நத்வாபச்யாமியிறே. ஸௌந்தர்யஸாகரத்திலேமக்நரானார்; இவர்க்கு அழகு அஜ்ஞாநத்தை விளைத்ததாய்த்து. அத்ர்ஷ்டம் த்ர்ஷ்டமாகையாலே த்ர்ஷ்டம் அத்ர்ஷ்டமாய்த்து. அன்றிக்கே, "சிந்தைமற்றொன்றின் திறத்ததல்லா" "భావోనాన్యత్రగచ్ఛతి - பாவோநாந்யத்ரகச்சதி" என்னும்படி பரத்வாதிகளாய்த்து பரோக்ஷவிஷயமாகிற தென்னுதல்; "கட்கிலீ" என்னும் வடிவையிறே கண்ணாற்கண்டநுபவித்தது. காணாதவையும் கண்டவஸ்துவிலே யுண்டிறே; இப்படி * மைப்படி மேனியை யநுபவித்து மற்ற விஷயங்களைக் காணாக்கண்ணா யிருக்குமவரைச் சொல்லுகிறது.

(యోగిభ్యాంయమనసావైమునివాహనంతమ్ - யோகிப்ஸிகாய மநஸை முநிவாஹநமதம்) என்று-யாதொருவர "கண்டகண்கள் மற்றொன்றினைக் காணாவே" என்று அருதியிட்டார், அப்படிப்பட்டி அந்த முநிவாஹநனை, మనసై - மநஸை - மநஸ்ஸாலே பரிதிபத்திபண்ணுகிறேனென்றபடி. "அயனலர்கொடுதொழுதேத்தி" என்னும்படி - ஹம்ஸவாஹநனான சதுர்முகன் பஹுமுகமாக வநுபவித்தாப்போலே முநிவாஹநரான இவரும் ஏகமுகமாக இரண்டுகண்ணாலும் கண்டநுபவித்தார். "కిరీటకేయూరకరత్నకుణ్డలం ప్రలమ్బముక్తామణిహేమభూషితమ్। విశాలవక్షస్థలశోభికౌస్తుభం శ్రియాసదేవ్యాభ్యుషితోరువిగ్రహమ్॥ ప్రతప్తచామీకరచారువాససం సుమేఖలానూపురశోభితాఙ్ఘ్రికమ్। సుబన్ధునీజాతమృణాళకోమలం పధానమచ్ఛచ్ఛవియజ్ఞసూత్రకమ్॥ భుజోపధానంప్రసృతాన్యహస్తం నికుఞ్చితోత్తానితపాదయుగ్మమ్। సుదీర్ఘమూర్వంసముదగ్రవేషం భుజఙ్గతల్పంపురుషందదర్శ" "கிரீடகேயூரகர்த்நகுண்டலம் ப்ரலம்பமுக்தாமணி ஹேமபூஷிதம்। விஸாலவக்ஷஸ்தலஸோபிகௌஸ்துபம் ஸ்ரியாசதேவ்யாத் யுஷிதோருவிக்ரஹம்॥ ப்ரதப்தசாமீகரசாருவ்ாஸஸம் ஸுமேகலாநூபுரஸோபிதாங்க்ரிகம்। ஸுபந்துநீஜாதம்ருணாளகோமளம்த। தாநமசசச்சவியஜ்ஞஸூத்ரகம்॥ புஜோபதாநம்ப்ரஸ்ர்தாந்யஹஸ்தம் நிகுஞ்சிதோத்தாநிதபாதயுக்மம்। ஸுதீர்க்கமூர்வம் ஸமுதக்ரவேஷம் புஜங்கதல்பம் புருஷம் ததர்ஸ" என்று, ப்ரஹ்மாவானவன் அபிமாநியாகையாலே, முடியே தொடங்கியநுபவித்தான்; இவர் அடியாராகையாலே அடியே தொடங்கி யநுபவித்தார்.

அவர் கண்ட வநந்தரம் விஷயங்களையும் கண்டான்; இவர் விஷயங்களைக் கண்டிலர். "திருக்கமலபாதம்வந்தென்கண்ணினுள்ளன" "கண்டகண்கள்மற்றொன்றினைக்காணாவே" என்றார். வீணையும் கையுமாய் ஸேவிக்கிற இவர்க்கு * சேமமுடை நாரதனாரும் ஒருவகைக்கு ஒப்பாவர்.

பெரியாழ்வார் அவதாரத்தி லநுபவம் இவர்க்கு அர்ச்சாவதாரத்திலே; அவர் "பாதக்கமலம்" என்றத்தை "திருக்கமலபாதம்" என்றார்; * பீதகச்சிற்றாடையொடும் – அரைச்சிவந்த வாடையின் மேல் என்றும் * அழகிய வுந்தி * அயனைப்படைத்ததோ ரெழிலுந்தி, * பழம் தாம்பாலார்த்தவுதரம் * திருவயிற்றுதரபந்தம்; * குருமாமணிப்பூண்குலாவித்திகழும்திருமார்வு * திருவாரமார்பன்; அண்டமும் நாடுமடங்கவிழுங்கியகண்டம் * முற்றுமுண்டகண்டம்; * நெய்த்தலை நேமியும் சங்கும் நிலாவியகைத்தலம் * கையினார் சுரிசங்குனலாழியர்; * செந்தொண்டைவாய் * செய்யவாய்; கண்களிருந்தவா * அப்பெரிய வாயகண்கள்; * உருவு கரிய வொளிமணி வண்ணன் * எழில் நீலமேனி * குழல்களிருந்தவா - * துளவவிரையார் கமழ் நீண்முடி: * கோவலனாய் வெண்ணெயுண்ட வாயனிறே பெரிய பெருமாள். ஆகையால அநுபவத்தில் இருவரும் ஸகோத்ரிகளாயாய்த்திருப்பது. இப்படி மநஃப்ரீதி பிறக்கும்படி அநுபவித்தஆழ்வாரை இங்கு மநஃப்ரீதி பிறக்கும்படி "मनसा-மநஸை" என்று-மநஸ்ஸாலே ஸேவிக்கும்படி சொல்லிற்று.

அ.—(காட்டவேகண்ட பாதகமலம்) பெரியபெருமாளை பாதாதிகேசமா யநுபவிக்கப் பெற்ற பாண்பெருமாளை ஸ்தோத்ரம் பண்ணி ஹர்ஷிக்கும்படி சொல்லுகிறது.

காட்டவேகண்டபாத கமலநல்லாடையுந்தி
தேட்டருமுதிரபந்தந் திருமார்வுகண்டஞ்செவ்வாய்
வாட்டமில்கண்கள்மேனி முனியேறித்தனிபுகுந்து
பாட்டினால்கண்டுவாழும் பாணர்தாள்பரவினோமே.

வ்யா.—(காட்டவே கண்டபாதகமலம்) "அரங்கத்தம்மான் திருக்கமலபாதம் வந்தென் கண்ணினுள்ளன வொக்கின்றவே" என்று "श्रीरङ्गेशयपादपङ्कजयुगम्" "ஸ்ரீரங்கேசயபாதபங்கஜயுகம்" என்று-* ஸ்ரீரங்கராஜ சரணாம்புஜங்களைச் சொல்லுகிறது. (நல்லாடை) "அரங்கத்தம்மான் அரைச்சிவந்தவாடை" என்று - ரங்கநாதனுடைய பீதாம்பரத்தைச் சொல்லுகிறது. (உந்தி) "அரங்கத்தரவினணையான் - அயனைப் படைத்ததோ ரெழிலுந்தி" என்று- விரிஞ்சிஜநிதாரமான நாபிபத்மத்தைச் சொல்லுகிறது.

(தேட்டருமுதரபந்தம்) * தேட்டரும்திறல்தேனின தென்னரங்கனுடைய தேடற்கரியவுதரபந்தம். "அரங்கத்தம்மான்திருவயிற்றுதரபந்தம்" என்று பட்டங்கில உதரபந்தமென்று சொல்லுகிறது. (திருமார்வு) "அரங்கத்தம்மான்திருவாரமார்பு" என்று-லக்ஷ்மீலளிதக்ருஹமான வக்ஷஸ்தலத்தைச் சொல்லுகிறது. (கண்டம்) "அரங்கநகர்மேயவப்பன் முற்றுமுண்டகண்டம்" என்று ஸ்ரீரங்கநேதாவின்கண்டத்தைச்சொல்லுகிறது. (செவ்வாய்) "அணியரங்கனார் - செய்யவாய்" என்று-"అధరమధురాంభోజమ్" "அதரமதுராம்போஜம்" என்று - அருணாதரபல்லவத்தைச் சொல்லுகிறது.(வாட்டமில்கண்கள்) க்ஷோஜ்வலமாய் அழலாணியை யுடைய தாமரைப்பூவில் வ்யாவர்த்தமாய், * సదైకరూప - ஸதைக ரூபமாய், "அரங்கத்தமலன்முகத்துக்கரியவாகிப்புடைபரந்து மிளிர்ந்துசெவ்வரியோடி நீண்டவப்பெரியவாயகண்கள்" என்று * విశాలస్ఫీతాయ త్రుటిరశ్మిరాతామ్రధవళ - விசாலஸ்பீதாயத்ருசிரஶ்மிஶிரா தாம்ர தவளமான ஸ்ரீரங்கப்ரணயி நயநாப்ஜங்களைச் சொல்லுகிறது. (மேனி) ஏவம்விதமான திவ்யமங்கள விக்ரஹத்தை. (முநியேறி) முநிவாஹநராய். (தனிபுகுந்து) இந்த மஹாபோகத்திலே தாம் ஏகராய் உள்புந்து. (பாட்டினால்) அநுபவத்துக்குப் பாசுரமிட்டுப்பேசின "அமலனாதிபிரான்" என்கிற ப்ரபந்தத்தின் பாட்டுக்களாலே, * அண்டர்கோனணி யரங்கனைக்கண்டு வாழுமவராய்த்து இவர், பின்பு இவ்வநுபவத்துக்கு பட்டர்மீதசிகரானார். (பாட்டினால் கண்டுவாழும்) காட்சியே வாழ்ச்சியாக வாழுகிற பாணர்தாள் - வீணாபாணியாய்ப் பெரியபெருமாள்திருவடிக்கீழே நிரந்தரஸேவை பண்ணிக்கொண்டுநிற்கிற திருப்பாணாழ்வார் திருவடிகளை ஸ்தோத்ரம்பண்ணினோம். அலப்யலாபமானது லபிக்கவும் பெற்றோம்; இனியொருகுறைகளு மில்லையென்கிறது.

பிள்ளைலோகஞ்சீயர் திருவடிகளேசரணம்.

———:0:———



ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

பெரியவாச்சான்பிள்ளையருளிச்செய்த

# அமலனாதிபிரான்வ்யாக்யாநாவதாரிகை.

ப்ரணவம்போலே அதிஸங்குசிதமாயிருத்தல், வேதமும் வேதோபப்ர்ம்ஹணமான மஹாபாரதமும்போலே பரந்து துறப்புக்கூடாயிருத்தல்செய்யாதே பத்துப் பாட்டாய் ஸங்க்ரஹமாய் ஸர்வாதிகாரமுமாயிருக்கும். "వేదోపబృంహణార్థాయ తావగ్రాహయత ప్రభుః" "வேதோபப்ர்ம்ஹணார்த்தாயதாவக்ராஹயதப்ரபு:" என்றும், "వేదానధ్యాపయామాస మహాభారతపంచమాన్" "வேதாநத்யாபயாமாஸ மஹாபாரதபஞ்சமாந்" என்றும் சொல்லுகிறபடியே - வேதோபப்ர்ம்ஹணமான மஹாபாரத ராமாயணங்களும், "నారాయణకథా మిమామ్" "நாராயணகதாமிமாம்" இத்யாதிகளைச் சொல்லிவைத்து பகவத்கதையல்லாதவற்றையும் சொல்லிவைத்தது.

---

ஸ்ரீமதேராமநுஜாயநம:.

## அழகிய மணவாளப்பெருமாள் நாயனாரருளிச்செய்த வ்யாக்யாநாவதாரிகை.

வேதம்போலே முதலாழ்வார்கள்மூவரும் பரத்வத்திலே மண்டி அர்ச்சையையும்தொட்டுக்கொண்டுபோந்தார்கள்; ஸ்ரீவால்மீகிபகவானைப்போலே ஸ்ரீகுலசேகரப்பெருமாள் ராமாவதாரத்திலே ப்ரவணராய்அர்ச்சாவதாரத்தையுமநுபவித்தார்; ஸ்ரீபராசரபகவானையும் ஸ்ரீவேதவ்யாஸபகவானையும்போலே, நம்மாழ்வாரும் * ஆழ்வார் திருமகளாரும் க்ர்ஷ்ணாவதாரத்திலேமண்டிஅர்ச்சாவதாரத்தையுமநுபவித்தார்கள்; திருமழிசைப்பிரான், "நான்முகனை நாராயணன் படைத்தான்" என்று தொடங்கி, "இனி யறிந்தேனீசற்கும் நான்முகற்குந் தெய்வம்" என்று-தேவதாந்தர பரத்வநிரஸநத்திலே தத்பரராயிருந்தார்; திருமங்கையாழ்வார், "தோரார்நிறைகதிரோன்மண்டலத்தைக் கீண்டுபுக்கு, ஆராவமுதமங்கெய்தி, அதில்நின்றும் வாராதொழிவதொன்றுண்டே, அதுநிற்க ஏரார்முயல்விட்டுக்காக்கைப்பின்போவதே" என்று-பரத்வத்தைக் காற்கடைக்கொண்டு அர்ச்சாவதாரத்திலே யிழிந்து அதுதன்னிலும் ஒரிடத்திலிரண்டிடத்திலன்றிக்கே, "நெருநற்கண்டது நீர்மலையின்றுபோய்க் கருநெல்சூழ் கண்ணமங்கையுள்காண்டும்" என்றும், * தானுகந்த வூரெல்லாம் தன்தாள் பாடிப் பரபரப்பாய்த் [திரி]ந்தார்.

அமலன்ப்ரவேசே; ப்ரபந்த வைலக்ஷண்ய மருளிச்செய்கிறார் (ப்ரணவமித்யாதி.) துறப்புக்கூடு-பதறும் கூளமுங்கூட்டித் தூற்றப்பொலி. துறப்புக்கூடானபடியெப்படியென்ன; அருளிச்செய்கிறார் (వేదోపబృంహణ - வேதோபப்ர்ஹ்மணேத்யாதி.)

திருவாய்மொழியும் "அமர்சுவையாயிரம்" "பாலோடமுதன்னவாயிரம்" "உரைகொளின்மொழி" என்றும் * ஏதமிலாயிரமாயிருந்ததேயாகிலும் அந்யாபதேச ஸ்வாபதேசமென்ன, ஸாமாநாதிகரண்யநிர்ணயமென்ன, த்ரிமூர்த்திஸாம்ய ததுத்தீர்ணத்வநிஷேதமென்ன, இவைதொடக்கமான அருமைகளையுடைத்தாயிருக்கும்; திருநெடுந்தாண்டகமும் பரப்பற்று முப்பதுபாட்டாயிருந்ததேயாகிலும் அதுக்கும் அவ்வருமைகளுண்டு; திருமாலைக்கு அவ்வருமைகளில்லையேயாகிலும் தம்முடைய லாபாலாபரூபமானப்ரியாப்ரியங்களை ப்ரதிபாதியாநிற்கும்; திருப்பல்லாண்டுக்கு இக்குற்றங்களில்லையேயாகிலும் அதுக்குமொரு குற்றமுண்டு; த்ரிவிதாதிகாரிகளுடைய குணாகுணங்களைப்ரதிபாதிக்கையாலே ப்ரணவம்போலே அதிஸங்குசிதமாய்துர்ஜ்ஞேயமாயிராமையாலே, "யதிஹாஸ்தி தத³ந்யத்ர யந்நேஹாஸ்தி ந தத் க்வசித்" "யதிஹாஸ்திததந்யத்ரயந்நேஹாஸ்திநதத்க்வசித்" என்கிறபடியே - ஆயிரத்திலொன்றும் கடலிற்குளப்படியும்போலே புறம்பில்லாதவையெல்லாம் இதிலேயுண்டாய் இதிலில்லாததொன்றும் புறம்பின்றியேயிருக்கும்.

---

பெரியபெருமாளையும் அல்லாததிருப்பதிகளோபாதி "கண்டியூரரங்கம்மெய்யங்கச்சிபேர்மல்லை" என்று * கோல்தேனுகவநுபவித்தாரித்தனையிறே; அதுதானும், "என்றசொற்கள்வந்தடியேன்மனத்திருந்திட" என்கிறபடியே - பெரியபெருமாளுடைய விபவதசையிற்பாசுரங்களுபதேசமாய்க்கொண்டு தந்திருவுள்ளத்திலே யூற்றிருக்க, "நின்னடியிணையடைந்தேன்" என்று - திருவடிகளையநுபவித்தவளவிறேயுள்ளது; ஸ்ரீதொண்டரடிப்பொடியாழ்வார் பெரியபெருமாளையநுபவியாநிற்கச்செய்தேதம்மையுணர்ந்தநுபவிப்பது, பரோபதேசம்பண்ணுவது, சபதபூர்வகமாகப் பெரியபெருமாளுடைய பரத்வஸ்தாபநம்பண்ணுவதாய், அந்யபராய்ப்போந்தார்; இவர்அங்ஙனன்றியே "பூர்ணம்" "பூர்ணம்" என்று சொல்லுகிறபடியேபரத்வாதிகளால் பூர்ணரான பெரியபெருமாளையே யநுபவிக்கிறார்; நம்மாழ்வார் தொடக்கமானவாழ்வார்களுக்கு பகவதநுபவம் நடவாநிற்கச்செய்தே முன்புள்ள ஜந்மபரம்பரைகளிலுண்டான துக்காநுபவஸ்மரணத்தாலும ஸ்வரூபாநுரூபமான பகவத்போகத்தினுடைய அலாபத்தாலும் க்லேசாநுபவம் கலசிநடவாநின்றது.

---

எல்லாவற்றிலும் பற்ற ஆதிக்யம் எத்தாலேயென்ன; அருளிச்செய்கிறார் (யதிஹாஸ்தி - யதிஹாஸ்தீத்யாதி.)

பலவ்யூஹவிபவங்களைப்ராதிபாதிக்கையன்றிக்கே அர்ச்சாவதார ரூபேண வந்தவதரித்து, * திருவரங்கப்பெருநகருள் தெண்ணீர்ப் பொன்னி திரைக்கையாலடிவருடப்பள்ளிகொள்ளும் கருமணியைக் கோமளத்தைக்கண்டுகொண்டு,*மணத்தூணேபற்றிநின்று வாயார வாழ்த்தினபிரபந்தமாகையாலே எல்லாப்ரபந்தங்களிலும் இப்ரபந்தத்துக்கு வைலக்ஷண்யமுண்டு. மற்றையாழ்வார்களிற்காட்டில் இவர்க்குவாசியுண்டு;—"பல்லாண்டு" "போற்றி" என்று பாவிக்க வேண்டிற்று-அவர்களுக்கு; அதுவேண்டாதே ஜந்மஸித்தமாய்த்து இவர்க்கு."குலங்களாய வீரிரண்டிலொன்றிலும் பிறந்திலேன்" என்கிறபடியே இவர்,தம்மைநாலுவர்ணத்திலும்புறம்பாகநினைத்திருப்பர்;பெரியபெருமாளும் அப்படியே நினைத்திருப்பர்; நித்யஸூரிகள் நாலுவர்ணத்திலுமுள்ளாரல்லரே. ஆழ்வார்கள் இருகரையரென்னும்படியிறேஸ்ரீதொண்டரடிப்பொடியாழ்வாரைகாந்த்யம்;அவரிலும் "இவர் பரோபதேசமும்இதரநிரஸநமும் அநுபவவிரோதி" என்று நம்பெருமாளையே அடித்தலை செவ்விதாக வநுபவிக்கிறார்.

---

ஜாத்யந்தனுக்குக்கண்ணைக்கொடுத்துக்கடலையிலக்காக்குமாப் போலேயும், அர்ஜுநனுக்குதிவ்யசக்ஷுஸ்ஸைக்கொடுத்து வைச்வரூப்யத்தைக்காட்டியநுபவிப்பித்தாப்போலேயும், அக்ரூரமாலாகாராதிகளுக்கு ஸௌந்தர்யஸௌசீல்யாதிகுணாவிஷ்காரத்தாலேயநுபவிப்பித்தாப்போலேயும், "ఏకైకస్మిన్ పరమవయవేనన్తసౌన్దర్యమగ్నం సర్వంచక్షుర్భవతిమిమధామామధామన్దచక్షుః। త్వాంసౌభ్రాత్రవ్యతికరకరం రఙ్గరాజాఙ్గకానాం తల్లావణ్యం పరిణమయితాఃశ్వపారీణవృత్తిః" "ஏகைகஸ்மிந்பரமவயவேநந்த ஸௌந்தர்யமக்நம் ஸர்வம்த்ரக்ஷோபகதமிதிமுதா மாமதாமந்த சக்ஷு:। த்வாம்ஸௌப்ராத்ர்வ்யதிகரகரம் ரங்கராஜாங்ககாநாம் தல்லாவண்யம்ப்ரிணமயிதாஸிச்வபாரீணவ்ருத்தி:" என்கிறபடியே - இவருடைய ஸத்யதையாலே அர்ச்சாரூபமாயிருக்கச்செய்தேயும் பெரியபெருமாள் தம்முடைய ஸௌந்தர்யத்தை ஆவிஷ்கரிக்க அந்தஸௌந்தர்ய ஸாகரத்தை லாவண்யமாகிற மரக்கலத்தாலே எங்கு மொகக வநுபவிக்கிறார். இன்னம் மற்றையாழ்வார்களிற் காட்டில் இவர்க்கு வாசி; -"பல்லாண்டு""போற்றி"என்று பாவிக்க வேண்டிற்றுஅவர்களுக்கு; அது வேண்டாதே இவர்க்கு அது ஜந்மஸித்தமாய்த்து."குலங்களாய வீரிரண்டிலொன்றிலும் பிறந்திலேன்"என்கிறபடியே-இவர் தம்மை நாலுவர்ணத்துக்கும் புறம்பாக நினைத்திருப்பர்; பெரியபெருமாளும் அப்படியே நினைத்திருந்தார்; நித்யஸூரிகள் நாலுவர்ணத்திலு முள்ளாரல்லரே. ஆழ்வார்கள் இருகரையரென்னும்படியிறே ஸ்ரீதொண்டரடிப்பொடியாழ்வாரைகாந்த்யம்; அவரிலும் இவர் "பரோபதேசமும் இதர நிராகரணமும் அநுபவவிரோதி" என்று வெறும்பெரியபெருமாளையே அடிக்கும தலைக்கும் செவ்விதாக வநுபவிக்கிறார்.

---

வக்த்ர்வைலக்ஷண்ய மருளிச்செய்கிறார் (மற்றையாழ்வார்களித்யாதி.)

[ஸ்நேஹோபூர்வம:-ஸ்நேஹோமேபரம:] "என்றனையன்றால் யானுடையவன்பு." [ராஜ்யம்ஸ்த்வயி-ராஜம்ஸ்த்வயி] இது தானும் என்னால் வந்ததன்று, அதுவுமவனதின்னருளே. [நித்யம்ப்ரதிஷ்டித:-நித்யம் ப்ரதிஷ்டித:] இன்றன்றாகில் மற்றொருபோது கொடுபோகிறோமென்ன; அங்ஙன் செய்யுமதன்று, தர்மியைப்பற்றிவருகிறதாகையாலே; "பின்னலாலிலேன்காண்" என்னுமாப்போலே. [பக்திஸ்சநியதா-பக்திஸ்சநியதா] ஸ்நேஹமாவதென், பக்தியாவதென்னென்னில்; பெருமாளையொழியச்செல்லாமைபிறந்து வ்யதிரேகத்தில்முடிந்த சக்ரவர்த்தி நிலை-ஸ்நேஹம்; பக்தியாவது-"நில்" என்ன, "குருஷ்வ" "குருஷ்வ" என்னும்படியாய் முறையறிந்துபற்றின இளையபெருமாள் நிலை. [வீர-வீர] தன்னைத் தோற்பித்ததுறை. உம்முடையவீரங்கொண்டுபுறம்பேவென்றீரொன்று இங்குவெல்லமுடியாது, தானும் வீரனாகையாலே தோற்பித்ததுறையைப் பிடித்துப்பேசுகிறான். [பாவோநாந்யத்ர கச்சதி-பாவோநாந்யத்ரகச்சதி] என்னை மீட்டீராகிலும் என்னுடைய நெஞ்சைமீட்கப்போகாது. "அந்யத்ர" "அந்யத்ர" என்கிறது - "மற்றாருமுண்டென்பார்" என்னுமாப்போலே கொடுபோக நினைத்ததேசத்தின்பேருங்கூடத்தனக்கு அஸஹ்யமாயிருக்கிறபடி. இப்படிராமாவதாரமல்லதறியாத திருவடியைப்போலேயாய்த்து இவரும், அவர் தேவரான பெரியபெருமாளை யல்ல தறியாதபடியும்.

---

[ஸ்நேஹோபூர்வம: - ஸ்நேஹோமேபரம:] "என்றனையன்றால் யானுடையவன்பு." [ராஜ்யம்ஸ்த்வயி-ராஜம்ஸ்த்வயி] இதுதானும்என்னால் வந்ததன்று, அதுவுமவனதின்னருளே. [நித்யம்ப்ரதிஷ்டித:-நித்யம் ப்ரதிஷ்டித:] இன்றன்றாகில் மற்றொருபோது கொடுபோகிறோமென்ன; அங்ஙன் செய்யுமதன்று தர்மியைப்பற்றி வருகிறதாகையாலே. "பின்னலாலிலேன்காண்" என்னுமாப்போலே. [பக்திஸ்சநியதா-பக்திஸ்சநியதா] ஸ்நேஹமாவதேது, பக்தியாவதேதென்னில்; பெருமாளையொழியச் செல்லாமைபிறந்து வ்யதிரேகத்தில் முடிந்த சக்ரவர்த்திநிலை - ஸ்நேஹம்; பக்தியாவது - நில்லென்ன, 'குருஷ்வ' "குருஷ்வ" என்னும்படி முறையறிந்துபற்றின இளையபெருமாள் நிலை. [வீர - வீர] தன்னைத்தோற்பித்ததுறை. [பாவோநாந்யத்ரகச்சதி-பாவோநாந்யத்ரகச்சதி] "மற்றாருமுண்டென்பார்" என்னுமாப்போலே கொடுபோகநினைத்த தேசத்தின்பேருங் கூடத்தனக்கு அஸஹ்யமானபடி. இப்படி ராமாவதாரமல்ல தறியாத திருவடியைப்போலே யாய்த்து-இவரும், அவர்தேவாரமான பெரிபெருமாளை யல்லது பரவ்யூஹ விபவங்களை யறியாதபடியும்.

---

பெருமாளையொழிய வேறொருஸ்தலாந்தரமறியாதது எப்படியிருக்கிறதென்ன; அருளிச்செய்கிறார் (ஸ்நேஹோ - ஸ்நேஹோமே மித்யாதி.)

ஸ்ரீவைகுண்டம் திருப்பாற்கடல் திருவவதாரஸ்தலம் உகந்தருளின திருப்பதிகள் இவையெல்லாம் பெரியபெருமாளே யானைப் போலே அவ்வவ்விடங்களிலுண்டான ஸௌந்தர்யகுணசேஷ்டிதங்களெல்லாம் பெரியபெருமாள்பக்கலிலே காணலாம். பெரியபெருமாளுடைய ஐச்வர்யமும் பரமபதத்திலே முகுளிதமாயிருக்கும்; அவதாரத்தில் எரிபோரும்; இங்கே வந்தபின்பு தழைத்தது. எங்ஙனேயென்னில்; - * பொங்கோதஞ்சூழ்ந்த புவனியும விண்ணுலகும் அங்காதும் சோராமே யாள்கின்ற வெம்பெருமான்! செங்கோலுடைய திருவரங்கச் செல்வனாரானையாலே அவ்வவ்விடங்களில் ஸங்குசிதமாயிருந்ததிறே.

அதுபாவ்யரான பெரியபெருமாள்தம்மைப்பார்த்தாலும், பரத்வம்போலே தேசவிப்ரகர்ஷ்டமாயிருத்தல், வ்யூஹம்போலே தத்ப்ராயமாயிருத்தல், விபவம்போலே காலவிப்ரகர்ஷ்டமாயிருத்தல், அந்தர்யாமித்வம்போலே அசக்ஷுர்விஷயமா யிருத்தல், அர்ச்சாவதாரங்கள்போலே * தெய்வமல்லால் செல்லவொண்ணாதிருத்தல், அங்குவர்த்திக்கும்பேர் * சிலைக்கைவேடரோயாய் பயங்கரமா யிருத்தல், பெரிய ஏற்றமேறவேண்டியிருத்தல், வருந்திப் பெருங் கூட்டத்தோடே போயேறினால * கானமும் வானரமும் வேடுமேயாய் * மேலைவானவரிற் மிக்கே யிருத்தல் செய்கையன்றிக்கே, இத்தேசத்திலே இக்காலத்திலே எல்லார் கண்ணுக்கும் விஷயமாய்க் கொண்டு, "பத்தர்களும பகவர்களும் பழமொழிவாய் முனிவர்களும் பரந்தநாடுஞ் சித்தர்களுந் தொழுதிறைஞ்சத் திசைவிளக்காய்நிற்கின்ற திருவரங்கம்" என்கிறபடியே - எல்லார்க்கும் நின்றநின்றநிலைகளிலே ஆச்ரயிக்கலாம்படி ஸர்வஸுலபருமாய் * "வன்பெருவானகம்" இத்யாதிப்படியே உபயவிபூதியையும் நிர்வஹித்துக்கொண்டுபோருகிற மேன்மையையுடையராய், இப்படி ஸர்வாதிகருமாய ஸர்வசேஷியுமாய் ஸர்வரக்ஷகருமாய் ஸர்வஸமாச்ரயணீயருமாய் நிரதிசயபோக்ய பூதருமாயிருப்பர். "శేషస్సురస్తాచ్ఛాలాయాం యానస్తేऽభిసీదతి" "சேஷேயபுரஸ்தாச் சாலாயாம்யாவந்மேகப்ரஸீததி" என்று - ஸ்ரீபரதாழ்வான் என்தலையிற்சுமைவாங்கினாலல்லது எழுந்திரேனென்று கிடந்தாப்போலே உங்கள்சுமைகளை என்றலையில்வைத்தாலல்லது எழுந்திரேன். "యోగక్షేమం వహామ్యహమ్" "யோகக்ஷேமம் வஹாம்யஹம்" என்று கிடக்கிறவரிறே. ஸ்ரீவைகுண்டம் திருப்பாற்கடல் திருவவதாரங்கள் உகந்தருளின திருப்பதிகளெல்லாம் பெரியபெருமாளே யானைப்போலே அவ்வோவிடங்களிலுண்டான ஸௌந்தர்யகுணசேஷ்டிதாதிகளெல்லாம் பெரியபெருமாள்பக்கலிலேகாணலாம்.

எல்லாஸ்தலங்களையும்விட்டுப் பெரியபெருமாளைப் பற்றுகைக்கு ஹேதுவேதென்ன; அருளிச்செய்கிறார் (ஸ்ரீவைகுண்டமித்யாதி.)

தன்னையுகந்தாரை யநுபவிக்கை யன்றியே, "தான்" என்றால் விமுகராயிருப்பாரும் கண்டநுபவிக்கலாம்படி யிருக்கையாலே நீர்மையினால்வந்த வேற்றுமிங்கேயுண்டு; குணாதிக்யத்தாலேயிறே வஸ்துவுக்கு உத்கர்ஷம்; குணம் விலைபெறுவது இங்கேயிறே; குணத்திலகப்பட்டார் இவ்விஷயம்போக்கி அறியார்களிறே. "யதோ வாசோ நிவர்த்தந்தே" "யதோவாசோநிவர்த்தந்தே" என்று-வேதங்களுக்கெட்டாத ஸர்வேச்வரனை, ஆற்றில்தண்ணீரோபாதி ஆற்றுக்குள்ளே கண்டநுபவிக்கலாம்படி யிருக்கிறவிடமிறே. * மழைக்கன்றுவரைமுன்னேந்தும் மைந்தனைமதுரவாறுன வவ்வாறு இவ்வாறாய்த்துக்காணும். இவர் தமக்கு ப்ராப்யரும் ப்ராபகரும் ருசிஜநகரும் விரோதிநிவர்த்தகரும் எல்லாம் பெரியபெருமாளே யென்றிருக்கிறார்.

---

பெரியபெருமாளுடைய வழகும் ஐச்வர்யமும் பரமபதத்தில் முகுளிதமாயிருக்கும்; அவதாரத்திலே ஈரிலைபொரும்; இங்கே வந்தபின்புதழைத்தது. எங்ஙனே யென்னில்;-*பொங்கோதஞ்சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்காதுஞ்சோராமே யாள்கின்றவெம்பெருமான் செங்கோலுடைய திருவரங்கச்செல்வனாராகையாலே அவ்வவ்விடங்களில் ஸங்குசிதமாயிருந்ததிறே; தன்னை யுகந்தாரநுபவிக்கை யன்றிக்கே "தான்" என்றால் விமுகராயிருப்பாருங்கூட வநுபவிக்கும்படி யிருக்கையாலே நீர்மையாலே வருமேற்றமிங்கேயுண்டு. குணாதிக்யத்தாலேயிறே வஸ்துவுக்கு உத்கர்ஷம்; குணம் விலைபெறுவதிங்கேயிறே. குணத்திலகப்பட்டார் இவ்விஷயம்போக்கி யறியார்களிறே. "யதோ வாசோ நிவர்த்தந்தே" "யதோவாசோநிவர்த்தந்தே" என்று-வேதங்களுக்குமெட்டாத ஸர்வேச்வரனை ஆற்றில் தண்ணீரோபாதி ஆற்றுக்குள்ளேகண்டநுபவிக்கலாம்படி யிருக்கிறவிடமிறே. * மழைக்கன்றுவரைமுன்னேந்தும் மைந்தனை மதுரவாறுனவவ்வாறு இவ்வாறாய்த்துக்காணும். ஆச்ரயணீயராகையாலேமேன்மையும், நீர்மையாலே உபாயபாவத்தையும், வீர்யாதிகளாலேவிரோதிநிரஸநத்தையும்ஸௌந்தர்யத்தையும் சொல்லுகையாலே போக்யதையும்சொல்லிற்றாகிறது. ப்ராபகஸ்வரூபம் அநுபவத்திலே மறைந்துபோய்த்து. இப்ரபந்தந்தான் ப்ரணவம்போலே அதிஸங்குசிதமாயிருத்தல், வேதமும்வேதோபப்ர்ம்ஹணமான மஹாபாரதம்போலே பரந்து துறுப்புக்கூடாயிருத்தல் செய்யாதே பத்துப்பாட்டாய் ஸங்க்ரஹமுமாய் ஸர்வாதிகாரமுமாய், "ப்ராப்யஸ்ய" "ப்ராப்யஸ்ய" இத்யாதியிற்படியே அர்த்தபஞ்சகப்ரதிபாதகமுமாயிருக்கும்.

---

அவ்வாறிவ்வாறென்றது-ரஸோக்தி. மேலே க்ர்ஷ்ணன்றானே வந்து இவ்வாற்றிலே கண்வளர்ந்தானென்றபடி.

"వేదోపబృంహణార్థాయ తావగ్రాహయత ప్రభుః" "வேதோபப்ர்ம்ஹணார்த்தாய தாவக்ராஹயதப்ரபு:" என்றும், "వేదానధ్యాపయామాస మహాభారతపంచమాన్" "வேதாநத்யாபயாமாஸ மஹாபாரத பஞ்சமாந்" என்றுஞ் சொல்லுகிறபடியே - வேதோபப்ர்ம்ஹணமான மஹாபாரத ஸ்ரீராமாயணங்களும், "నారాయణకథామిమామ్" "நாராயணகதாமிமாம்" இத்யாதிகளைச் சொல்லிவைத்து பகவத் கதையல்லாதவற்றையுஞ்சொல்லிற்று; திருவாய்மொழியும், * "அமர்சுவையாயிரம்" * "பாலோடமுதன்னவாயிரம்" "உரைகொளின்மொழி" என்று * ஏதமிலாயிரமாயிருந்ததேயாகிலும், அப்யாபதேச ஸ்வாபதேசமென்ன, ஸாமாநாதிகரண்ய நிர்ணயமென்ன, த்ரிமூர்த்தி ஸாம்ய ததுத்தீர்ண தத்வ விஷேதமென்ன, இவை தொடக்கமான அருமைகளை யுடைத்தாயிருக்கும்; திருநெடுந்தாண்டகமும் பரப்பற்று முப்பதுபாட்டா யிருந்ததேயாகிலும் அதுக்கும் அவ்வருமைகளுண்டு; திருமாலைக்கு அவ்வருமைகளில்லையே யாகிலும் தம்முடைய லாபாலாபமான ப்ரியாப்ரியங்களை ப்ரதிபாதியா நிற்கும். திருப்பல்லாண்டுக்கு இக்குற்றங்களொன்றுமில்லையே யாகிலும் அதுக்குமொரு குற்றமுண்டு த்ரிவிதாதிகாரிகளுடைய குணதோஷங்களை ப்ரதிபாதிக்கையாலே. இது ப்ரணவம்போலுமல்ல அதிஸங்குசிதமாய் துர்ஜ்ஞேயமா யிராமையாலே. "యదిహాస్తి తదన్యత్ర యన్నేహాస్తి న తత్క్వచిత్" "யதிஹாஸ்திததந்யத்ர யந்நேஹாஸ்திநதத்க்வசித்" என்கிறபடியே ஆயிரத்திலொன்றுங் கடலிற் குளப்படியும்போலே புறம்பில்லாதவையெல்லா மிதிலேயுண்டாய் இதிலில்லாததொன்றும் புறமபின்றியே யிருக்கும். பரவ்யூஹவிபவங்களை ப்ரதிபாதிக்கை யன்றியே அர்சசாவதாரூபேண வந்தவதரித்து, * திருவரங்கப் பெருநகருட் டெண்ணீர்ப்பொன்னி திரைக்கையா லடிவருடப் பள்ளிகொள்ளுங் கருமணியைக் கோமளத்தை * கண்ணாரக்கண்டு, * மணத்தூணேபற்றி நின்று வாயார வாழ்த்துகிற ப்ரபந்தமாகையாலே எல்லாப்ரபந்தங்களிலும் இப்ப்ரபந்தம் விலக்ஷணம். இவர், தமக்கு ப்ராப்யரும் ப்ராபகரும் ருசிஜநகரும் விரோதிநிவர்த்தகரும் எல்லாம் பெரியபெருமாளே யென்கிறார். பலபோக்த்ருத்வம் தம்மதாயிருக்க, "எல்லாமவரே" என்கிறபடி யெங்ஙனேயென்னில்; - ப்ரதம ஸுக்ருதமும் தானாய் இப்பேற்றுக்குவேண்டுவன நிர்வஹித்துப்போந்த ஸௌஹார்த்தமும் அத்தலையிலே கிடக்கையாலே பேற்றுக்கு இத்தலையிலுள்ளது சொல்லப் பாத்தம்போராதிறே. உள்ளதுண்டாகில் அவனநுக்ரஹத்தாலேயா யித்தனை.

---

ப்ரதிபாத்ய வைலக்ஷண்யத்தைச் சொல்லாநின்றுகொண்டு ப்ரபந்தத்திலுடைய அவதாரண க்ரமத்தை யருளிச்செய்கிறார் (இவர் தமக்கித்யாதி.)

பலபோக்த்ருத்வம் தம்மதாயிருக்க, "எல்லாமவரோ" என்கிறபடி யெங்ஙனேயென்னில்; ப்ரதமஸாக்ஷாத்காரமும்தானாய், பேற்றுக்கு வேண்டுவன நிர்வஹித்துப்போந்த ஸௌஹார்த்தமும் அத்தலையிலே கிடக்கையாலே, பேற்றுக்கு இத்தலையிலுள்ளது சொல்லப் பார்த்தம் போராதிறே; உள்ளதுண்டாகில் அவனநுக்ரஹத்துக்கு ஹேது வாமித்தனை. இதரவிஷயங்களில் அருசியும் பகவத்விஷயத்தில் அப்ரதிஷேதமும் விளைந்த இம்மாத்ரத்திலே பெரியபெருமாள் தம்முடைய ஸ்வரூப ரூப குண விபூதிகளைக்காட்டக்கண்டநுபவித்து ப்ரீதராகிறார். "ஆநயைநம் ஹரிஸ்ரேஷ்ட" "ஆநயைநம்ஹரிஸ்ரேஷ்ட" என்று-மஹாராஜனையிட்டு ஸ்ரீவிபீஷணாழ்வானை அருள்பாடிட்டாப்போலே, * தாழ்ச்சி மற்றெங்கும் தவிர்ந்து * உன்கடைத்தலையிருந்து வாழும் சோம்பராயிருக்கிற லோகஸாரங்க மஹாமுநிகளை அருள்பாடிட்டு, "நம்பாடுவானை யழைத்துக்கொண்டுவாரும்" என்ன; அவரும் "அருளபாடருள்பாடு" என்றுசொல்ல; இவரும், "அடிப்பாணனடிப்பாணன்" என்று இருக்க; இவரும், விடாதே தோள்மேலே யெழுந்தருளப் பண்ணுவித்துக்கொண்டுபோக வழியிலே ஒன்பது பாட்டுப்பாடித் திருப்பிரம்புக்குளளேநின்று பத்தாம் பாட்டுப்பாடித் தலைக்கட்டுகிறார்.

---

இதரவிஷயங்களில் அருசியும பகவதவிஷயத்தில் அப்ரதிஷேதமும் விளைந்த மாத்ரத்திலே பெரியபெருமாள் தம்முடைய ஸ்வரூபரூபகுண விபூதிகளைக் காட்டக்கண்டநுபவித்து ப்ரீதராகிறார். "ஆநயைநம் ஹரிஸ்ரேஷ்ட" "ஆநயைநமஹரிஸ்ரேஷ்ட" என்று - மஹாராஜனையிட்டு ஸ்ரீவிபீஷணாழ்வானை யருள்பாடிட்டாப்போலே, * தாழ்ச்சிமற்றெங்குந்தவிர்ந்து * கடைத்தலையிருந்து வாழுஞ் சோம்பரானலோகஸாரங்க மஹாமுநிகளை யருள்பாடிட்டு, "நம்பாடுவானை யழைத்துக்கொண்டுவாரும" என்ன; அவரும் "அருள்பாடருள்பாடு" என்று சொல்ல; இவரும் "அடிப்பாண னடிப்பாணன்" என்றுஇருக்க; இவரைவிடாதே தோளமேலேயேற்றிக்கொண்டு போக வழியிலே ஒன்பதுபாட்டுப்பாடித் திருப்பிரம்புக்குள்ளே நின்று பததாம்பாட்டுப்பாடித்தலைக்கட்டுகிறார். *

அ.—முதற்பாட்டில், பெரியபெருமாள் திருவடிகளி லழகு, தம்மையாட்கொண்டதென்கிறார். ஆகாசத்தினின்றும் ஸஹ்யத்திலே வர்ஷித்து அங்கு நின்றும் காவேரியாறாய்ப்போந்திழிந்து கால்களாய்ப்புகுந்துபோய் நாட்டார்க்கு உபயுக்தமாமாப்போலே பரமபதமாகிற பரமவ்யோமத்தினின்றும் திருமலையிலே வந்திழிந்து தெற்குநோக்கி வந்து பள்ளநாலியானகோயிலிலே தேங்கிக் கீழ்மேலாக்க் கண்வளர்ந்தருளுகிற பெரியபெருமாளாகிற மதுர வாற்றினிடைப்புகுந்தோடுகிறகாலை யநுபவிக்கிறார்.

---

அடிப்பாணன் - ஹீநன். திருப்பிரம்பு - பலகணிவாசல்.

* அ.—முதற்பாட்டு. பெரியபெருமாள் திருவடிகளிலழகு மேல் விழுந்து தம்மை யடிமைகொண்டதென்கிறார்.

அமலனாதிபிரானடியார்க்கென்னையாட்படுத்த
விமலன்விண்ணவர்கோன்விரையார்பொழில்வேங்கடவன்
நிமலனின்மலனீதிவானவனீண்மதிளரங்கத்தம்மான்திருக்
கமலபாதம்வந்தென்கண்ணினுள்ளனவொக்கின்றதே. (க)

ப-ரை.—அமலன்-பரிசுத்தனாய், ஆதி-ஜகத்காரணபூதனாய், பிரான்-எனக்கு உபகாரகனாய், என்னை - ப்ரகர்திபரவசனானவென்னை, அடியார்க்கு-தன்னுடைய தாஸபூதருக்கு, ஆள்படுத்த-அடிமையாக்குகையாலேவந்த, விமலன்-ஔஜ்வல்யத்தையுடையனாய், விண்ணவர்கோன் - * நித்யஸூரிகளுக்கு ஸ்வாமியாயிருக்குமவைத்து, லீலாவிபூதியிலுள்ளாரை யடிமை கொள்ளுகைக்காக, விரையார்-பரிமளம் நிறைந்திருக்குமவை, பொழில் - சோலையையுடைய, வேங்கடவன் - திருமலையிலேவந்து தங்கினவனாய், நிமலன்-நான் விரும்பாதிருக்க எனக்கு உபகரிக்கையாலே உஜ்வலனாய், நின்மலன் - தன்னடியார்க்கு என்னை யடிமையாக்குகையால் வந்த ஔஜ்வல்யத்தை யுடையனாய், நீதிவானவன் - "உடையவன், உடமை" என்கிற முறை தப்பாத நித்யவிபூதியிலே யுள்ளவனாய், நீள்-உயர்ந்த, மதிள்-திருமதிள்களையுடைய, அரங்கத்து-கோயிலிலே கண்வளர்ந்தருளுகிற, அம்மான - ஸர்வஸ்வாமியானவனுடைய, திரு-பெரியபிராட்டியாரும் கூசிப்பிடிக்கத்தக்கதாய், கமலம்-செந்தாமரைமலர்போன்ற, பாதம்-திருவடிகளானவை, வந்து-தானேவந்து, என்கண்ணினுள்ளன-என் கண்ணுக்கு இலக்காய்; ஒக்கின்றவே - பழைய நிலைமை குலையாதிருந்ததே! என்று ஈடுபடுகிறார்.

வ்யா.—(அமலன்) நித்யஸம்ஸாரியாய்த் தண்ணியராயிருக்கிற தாம் கிட்டுகை அத்தலைக்கு அவத்யமென்றிருந்தார்; வந்து கிட்டினபின்பு பெரியபெருமாளுக்குப்பிறந்த வைலக்ஷண்யத்தைக்கண்டு "அமலன்" என்று கொண்டாடுகிறார். அமலன் என்றது - ஹேயப்ரத்யநீகனென்றபடி. அபஹதபாப்மத்வாதிகுணங்கள் ஆத்மாவுக்குண்டாயிருக்கச்செய்தேயும் ஹேயஸம்பந்தாவஹமாய் பகவத்ப்ரஸாதத்தாலே உண்டாகவேண்டியிருக்கும். இவன் அங்ஙனன்றிக்கே யிருக்கை.

---

வ்யா.—(அமலன்) ஸ்ரீவால்மீகிபகவாந், "[illegible]" "கோ-குணவாந்" என்று ப்ரக்ரமம்பண்ண; "ഇക്ഷ്വാകുവംശപ്രഭവഃ" "இக்ஷ்வாகுவம்ஶப்ரபவ:" என்று சிலகுணத்தை முந்துறச்சொன்னாப்போலவும், நம்மாழ்வார் ஆநந்தவல்லியிலாநந்தகுணத்தை, "உயர்வற வுயர்நல முடையவன்" என்று ப்ரதமத்திலே யநுபவித்தாப்போலவும், இவரும் தம்முடைய நிஹீநதையைப்பாராதே மேல்விழுந்தபடியைக்கண்டு அவனுடைய ஹேயப்ரத்யநீகதையை முறபடவநுபவிக்கிறார். தம்முடைய ஜந்மாதிகளாலுண்டான நிகர்ஷாநுஸந்தாநத்தாலேயகல அதுதானே பற்றாசாகத் திருவுள்ளம் புண்பட்டு மேல்விழுந்தவிடத்திலும் அத்தலைக்கவத்யமின்றியிலே நிர்மலனாயிருக்கிறபடியைக்கண்டு "அமலன்" என்கிறார். "என்கண் பாசம்வைத்த பரஞ்சுடர்ச்சோதி."

(அமலன்) சுத்தனென்றபடி. இவன் சுத்தனாகையாவது-தன்னை வருந்தி சுத்தனாக்குகையன்று, தன்னோடு ஸம்பந்தித்தாரையும் சுத்தனாக்கவல்ல அடியுடைமை. * துயரறுசுடரடியிறே. "పావనస్సర్వలోకానాం త్వమేవరఘునన్దన" "பாவநஸ்ஸர்வலோகாநாம் த்வமேவர குநந்தந" என்னுமாப்போலே (அமலன்) என்கிறது. ஜந்மவ்ருத்தாதிகளால் குறையநின்ற தம்மை விஷயீகரித்தபின்பு தன்பக்கல் தோஷம் தட்டாதே, "అనశ్నన్నన్యోఅభిచాకశీతి" "அநஶ்நந்நந்யோ அபிசாகஶீதி" என்கிறபடியே விளங்குகிறபடி. "என்கண் பாசம் வைத்த பரஞ்சுடர்ச்சோதிக்கே."

---

(அமலன்) * అపహతపాప్మత్వాది - அபஹதபாப்மத்வாதி குணங்கள் ஆத்மாவுக்கு முண்டாயிருக்கச்செய்தேயும் ஹேயஸம்பந்தாவஹமாய் பகவத் ப்ரஸாதத்தாலேயுண்டாக வேண்டியிருக்கும் இவன் அங்ஙனன்றியே யிருக்கும். (அமலன்) சுத்தனென்றபடி. இவன் சுத்தனாகையாவது - தன்னை வருந்தி சுத்தனாக்குகையன்று, தன்னோடு ஸம்பந்தித்தாரையும் சுத்தராக்கவல்லவடியுடைமை. * துயரறுசுடரடியிறே. "పావనస్సర్వలోకానాం త్వమేవరఘునన్దన" "பாவநஸ்ஸர்வலோகாநாம்த்வமேவரகுநந்தந" என்னுமாப்போலே. (அமலன்) * అఖిలహేయ - அகிலஹேயப்ர்த்யநீகன். அசித்கதமான பரிணாமம், தத்ஸம்ஸ்ருஷ்டசேதநகதமான அஜ்ஞாநதுக்கங்கள்; முக்தகதமான ஜ்ஞாநஸங்கோசவிகாஸங்கள், நித்யஸித்தகதமான பாரதந்த்ர்யம், இவையாகிற ஹேயங்களுக்கு ப்ரத்யநீகனாயிருக்கும். பாரதந்த்ய்த்துக்குக் குறை யென்னென்னில்; தனக்கவ்வருகொருவனுளனாகில் வருமதேபாரதந்த்ர்யம்; அது ஈச்வரனுக்கு அவத்யமிறே. பரதந்த்ரனுக்கு ஶேஷித்வம் அவத்யமாமாப்போலே. புருஷனுக்கு ஸ்தநோத்பேதமும் ஸ்த்ரீகளுக்குச்மச்ருஸம்யோகமும்போலேகாணும அந்த மாறாட்டத்தாலே வருமவத்யம். ப்ரத்யநீகனாகையாவது - உக்தாவத்யங்கள் தன்னை ஸ்பர்சியாமலிருக்குமளவன்றிக்கே புறம்புள்ள அவத்யவங்களையும் அறுத்துக்கொடுக்க வல்லனாகை. தேஜஸ்திமிரங்கள் போலே ஹேயப்ரதிபடனென்கை. ஆகையிறே யிவனை யொழிந்தார்க்கடைய இவனே சுபாச்ரயமாயிருக்கிறது. (ஆதி)இப்படி நிஹீனரானவும்மைமேல் விழுந்து அங்கீகரிக்கைக்கடி யென்னென்னில்; பெற்றபாவிக்கு விடப்போமோ வென்கிறார்.

---

முதற்பாட்டு.—அமலத்வம் முக்தர்க்கு முண்டே யென்ன; அருளிச்செய்கிறார் (అపహతపాప్మా - அபஹதபாப்மேத்யாதி.) சுத்தனென்று அர்த்தாந்தரம். முந்தின வர்த்தத்திலே அருளிச்செய்கிறார் (ஜந்மவ்ர்த்தாதிகளித்யாதி.)

(ஆதி) "ஆதீயத இதி ஆதி:" -ஸ்ப்ருஹணீய னென்றபடி. தம்மைவிஷயீகரிக்கைக்கு அடியானென்று "ஆதி" என்னவுமாம். ஜகத்காரணத்வாதிகளைச்சொல்லவுமாம். ஆக இரண்டுபதத்தாலும்-ஹேயப்ரத்ய நீகத்வமும் கல்யாணகுணயோகமும் சொல்லுகிறது.

(பிரான்) இவ்வேரிலைகளை யெனக்கறிவித்த வுபகாரகன். (பிரான்) உபகாரத்தைச்சொல்லி, சொல்லப்பற்றுமே "எத்திறம்" என்கிறார். (அடியார்க்கு) "ரத்நஹாரீசபார்த்திவ:" என்கிறபடியே இவ்வஸ்துவின் சீர்மையாலே இது நம்மளவிலடங்காது, நம்மடியார்க்காமித்தனையென்று அவர்களுக்காக்கினானென்கிறார்.

---

(ஆதி) ஆதீயத இதி ஆதி. - ஸ்வரூபரூபாதிகளைக் கண்டு எல்லாரும் மேல்விழும்படி யிருக்கிற தான் இத்தலையில் நிஹீநதைபாராதே மேல்விழுந்தானென்கை. ஆதீயத இதி ஆதி:- தன்னை யநுபவித்தால் வேறொன்றிற்போகவொட்டாதபடியாயிருக்கும். (ஆதி) "பூர்வஜ" என்னுமாப்போலே என்னுடைய நிகர்ஷத்தைபபோக்கித் தன் பக்கலிலே சேர்த்துக்கொள்ளுகையாலே யென்பேற்றுக்கு முற்பாடனானவன். (ஆதி) அடியில் அழிந்த ஜகத்தை யுண்டாக்கினாப்போலே நானழித்துக்கொண்ட ஸ்வரூபத்தையுண்டாக்கினவன். இத்தால்-கல்யாணகுணயோகத்தைச்சொல்லிற்று. ஆகஇரண்டுபதத்தாலும் ஹேயபரத்ய நீகத்வமும் கல்யாணகுணயோகமும் சொல்லிற்று.

(பிரான்) கீழ்ப்பண்ணின வுபகாரத்தை நினைத்து "பிரான்" என்கிற தாதல்; மேல்பண்ணப்புகுகிற வுபகாரத்தை நினைத்து "பிரான்" என்கிறதாதல். (பிரான்) என் நிகர்ஷம் பாராதே என்னை விஷயீகரித்த உபகாரகன். (அடியார்க்கென்னை யாட்படுத்த விமலன்) "எனக்கு" என்றும், "பிறர்க்கு" என்றும் திரிந்த வென்னை, தனக்கும் தன்னடியார்க்குமாக்கின பரிசுத்தஸ்வபாவன். தலையைப்பிடித்துக் காற்கீழே யிட்டுக்கொண்டான். "ரத்நஹாரீசபார்த்திவ:" "ரத்நஹாரீசபார்த்திவ," என்னுமாப்போலே. நல்லது கண்டால் அவர்களுக்குஎன்றிறே அவனிருப்பது; ஸ்வவிஷய சேஷத்வத்தை யுண்டாக்கினவளவன்றிக்கே ததீயசேஷத்வபர்யந்தமாக்கி, தச்சேஷத்வம் நிலைநிற்கும்படிபண்ணினான். ஆத்மாவுக்கு நிலைநின்ற வேஷம்சேஷத்வமாகையாலே "அடியார்க்கு" என்கிறார்.

---

ஆதீயதே - ஆதாநம் பண்ணப்படுகை - ஸ்வீகரிக்கப்படுகிறானென்றபடி.

(அடியார்) தன்பக்கலிலே நிக்ஷிப்தபரரா யிருக்குமவர்கள். (என்னையாள்படுத்த விமலன்)தன்னிடையாட்டமு மறியாதவென்னைத் தன்னடியார்க்கு சேஷபூதனாக்கின சுத்தனென்கிறார். (என்னை) ப்ரக்ருதிக்கடிமைசெய்துபோந்தவென்னை; தன்திறத்தில் சீர்மை யறியாத வென்னை; (என்னை)தேஹாத்மாபிமாநிகள் தீண்டாத வென்னை. நன்மைக்குத் தனக்கவ்வருகில்லாதாப்போலே தீமைக்கு எனக்கவ்வருகில்லாத வென்னை. (ஆள்படுத்த)அவர்களோடே ஒப்பூணுண்ணவைத்திலன், அவர்களுக்கு சேஷமாக்கினான். பகவச்சேஷத்வத்தளவிலேநின்றால் மீள சங்கையுண்டு, பாகவதசேஷத்வத்தளவும்சென்றால் மீளப்போகாதே, உகப்பாலேவருமதாகையாலே. ஒருக்ஷேத்ரம்பத்தெட்டுக்ரயம்சென்றால் மீளவிரகில்லை. ஸ்ரீவிபீஷணாழ்வானுக்கு முதலிகளுடைய விஷயீகாரம் பெருமாளுடைய விஷயீகாரத்துக்கு முற்பட்டாப்போலே இவர்க்கும் ததீய விஷயீகாரம் முற்பட்டபடி. "ஸக்யு:" "ஆநயைநம்ஹரிஶ்ரேஷ்ட" "தத்ர்ஶ:" "ஆநயைநம்ஹரிச்ரோஷ்ட" அங்கு; இங்கு லோகஸாரங்க மஹா முநிகளைப்போய் ஆழ்வாரை யழைத்துக்கொண்டு வாருமென்றான்.

(அடியார்க்கு) இவர்களுக்கு * ஊரும்பேருந் தாருமாகிறது ஶேஷத்வமாய்த்து, சேஷத்வமிறே யிவ்வாத்மாவுக்கு ப்ரதம நிரூபகம்.(என்னை) தேஹாத்மாபிமாநிகளும் தீண்டாத வென்னை. ப்ரக்ருதிக்கடிமைசெய்து போந்த வென்னை. தந்தப்ததத்தின் சீர்மை யறியாத வென்னை. நன்மைக்குத்தனக்கவ்வருகில்லாதாப்போலே தீமைக்குஎனக்கவருகில்லாத வென்னை. (ஆட்படுத்த) † (அவரிவ வேறதித்தாலே) ஆதிக்யமேதென்னில்; பகவச்சேஷத்வத் தளவிலேநின்றால் மீள சங்கையுண்டு, பாகவத சேஷத்வத்தளவுஞ்சென்றால்மீளப்போகாதே; உகப்பாலே வருமதாகையாலே. ஒருக்ஷேத்ரம்பத்தெட்டு க்ரயம்சென்றால் மீளவிரகில்லை. ஸ்ரீவிபீஷணாழ்வானுக்கு முதலிகளுடைய விஷயீகாரம்பெருமாளுடைய விஷயீகாரத்துக்கு முற்பட்டாப்போலே இவர்க்கு ததீயவிஷயீகாரம் முற்பட்டபடி. "ஸக்யு:" "ஆநயைநம்ஹரிஶ்ரேஷ்ட" "தத்ர்ஶ:" ஆநயைநம் ஹரிச்ரோஷ்ட." (ஆட்படுத்த) ஶேஷித்வத்தினுடைய வெல்லையிலேநின்று என்னை ஶேஷத்வத்தினுடைய வெல்லையிலே வைத்தான்.

"பிரான்" என்றது-கீழைப்பற்றவாதல். (என்னை) தன் ஸத்பாவ மறியாத வென்னையென்னுதல்; தன் கல்யாணகுணமறியாத வென்னை யென்னுதல். ஆகநாலு அர்த்தம். "ஆட்படுத்த" என்றத்தால் ஆதிக்யமேதென்ன; அருளிச்செய்கிறார் (பகவச்சேஷத்வத்திலித்யாதி.)

† குண்டலித க்ரந்தத்துக்குச்சரியான பாடத்தைக் கோசாந்தரத்தில் கண்டுகொள்வது.

(அடியார்க்கென்னை ஆட்படுத்த) தான் சேஷித்வத்தினுடைய எல்லையிலே நின்றாப்போலே சேஷத்வத்தினெல்லையிலே யென்னை வைத்தான். (விமலன்) என்சிறுமை பாராதே ததீயர்க்கு சேஷமாக்குகையால் வந்த ஔஜ்வல்யம். எதிரிகள் தரம்பாராதே சீரியர் தந்தாமளவிலேயிறே கொடுப்பது.

(விண்ணவர்கோன்) ஆளில்லாதவனல்லன்கிடீர் இப்படி விஷயீகரித்தான். நித்யஸூரிகள் எடுத்துக் கைநீட்டும்படி யிருக்கிறவன்கிடீர் கதிரொப்பாருக்கிஜீவிப்பாரைப்போலே நித்யஸம்ஸாரியாயிருக்கிறவென்னை நித்யமுக்தரோடொக்கவிஷயீகரித்தான். இவ்வௌதார்யம் கற்றதும் அவர்களோடேகிடீரொன்றுமாம். "అస్మాభిస్తుల్యో భవతు" "அஸ்மாபிஸ்துல்யோபவது" என்றார்களிறே. (விண்ணவர்கோன்) இங்குத்தைக்குழாத்தையொழிய அங்குத்தைக்குழாத்தையும் காட்டித்தந்தான். "உடன்கூடுவதென்றுகொலோ" என்று இவர் ஆசைப்படவேண்டுவதில்லை. (கோன்) அவர்களாலும் எல்லைகாணவொண்ணாது.

---

(அடியார்க்கென்னையாட்படுத்த விமலன) அவர்களோடு ஸமபுத்திபண்ணியிராமே அவர்களுக்கு சேஷபூதனாக்கின பரிசுத்தஸ்வபாவன். ஐச்வர்யாத்ம ப்ராப்திகாமரும் தன்னைப் பற்றுவர்களிறே, இவ்வளவு புகுரநிற்றுதைக் கதிகாரிகளல்லர்களே யவர்கள், அநந்யப்ரயோஜநரிறே யிவருக்கு ஆவார், தாமும் அநந்யப்ரயோஜநராகையாலே, விசேஷித்து லோகஸாரங்கமஹாமுநிகளையிட்டு தம்மை விஷயீகரித்த படியைச்சொல்லுகிறார். தம்மை வஹித்தவளவில் தாம் சேஷபூதரானபடி யென்னென்னில்; திருத்துழாய் திருவபிஷேகத்திலே யிருந்ததென்று சேஷத்வங்கொலையாதே; "మయిప్రత్యేష్టితే దేవో నాజ్ఞాపయతికిం న్యృపః" "மயிப்ரத்யேஷ்டிதே தேவோ நாஜ்ஞாபயதிகிம்ந்ருப;" என்றானென்று அவனுடைய சேஷித்வங் கொலையாதாப்போலே. (விமலன்) என்சிறுமைபாராதே ததீயர்க்கு சேஷமாக்குகையால்வந்த ஔஜ்வல்யம். எதிரிகள் தரம் பாராதே சீரியர் தந்தாமளவிலேயிறேகொடுப்பது.

(விண்ணவர்கோன்) நிஹீநரானவும்மை இப்படி விஷயீகரித்தது ஆளில்லாமையாலேயோ வென்னில்; ஒருத்ரிபாத்விபூதியாகத் தன்னைத்தாலாட்ட விருக்கிறவன்கிடீர் என்னை விஷயீகரித்தானென்கை. இவ்வௌதார்யங்கற்றது அவர்களோடேகிடீரொன்றுமாம். "అస్మాభిస్తుల్యోభవతు" "அஸ்மாபிஸ்துல்யோபவது" என்றார்களிறே. இங்குத்தைக் குழாத்தையொழிய அங்குத்தைக்குழாத்தையுங்காட்டித்தந்தான். "உடன்கூடுவதென்றுகொலோ" என்று இவருக்கு ஆசைப்பட வேண்டுவதில்லை. (கோன்) அவர்களாலும் எல்லை காணவொண்ணாது.

(விரையார்பொழில் வேங்கடவன்) பரிமளம் நிறைந்திருந்துள்ள சோலையையுடைய திருவேங்கட மலையையுடையவன். பெரிய பெருமாளைப்பாடாநிற்கத் திருமலையிலேபோவானென்னென்னில்; ஒருவனைக் கவிபாடும்போது அவனுடைய வரத்துச்சொல்லியிறே கவிபாடுவது. "பரமபதத்தில் நின்றும் ஸ்ரீமதுரையிலே தங்கித் திருவாய்ப்பாடிக்கு வந்தாப்போலே, ஸ்ரீவைகுண்டத்தினின்றும் திருமலையிலேதங்கிக்காணும் கோயிலுக்கு வந்தது" என்று பட்டரருளிச் செய்யும்படி. அன்றியே, கோயில் போக்யதை தமக்கு நிலமல்லாமையாலே திருமலையிலேபோய் தரிக்கப்பார்க்கிறாரென்றுமாம். (விரையார்) நித்யஸூரிகளையுடையனானதுக்குமேலே ஔசர்வர்யம்.

---

(விரையார்பொழில்வேங்கடவன்) லீலாவிபூதியிலொருவரில்லாமையாலே உம்மை அங்கிகரிக்கலாமே யென்ன; "नावेवयान्तमुभयेवहन्ते" "நாவேவயாந்த முபயேவஹந்தே" என்றும் "चक्षुर्देवानामुतमर्त्यानाम्" "சக்ஷுர்த்தேவாநாமுதமர்த்யாநாம்" என்றும், "கண்ணாவானென்றும் மண்ணோர் விண்ணோர்க்கு" என்றுஞ் சொல்லுகிறபடியே இந்தலீலாவிபூதியிலுள்ள முமுக்ஷுக்களோடு பரமபதத்திலுள்ள நித்யமுக்தரோடு வாசியறத திருமலையிலே வந்து* சூட்டுநன்மாலைகளிற்படியே "வழுவிலாவடிமை செய்ய வேண்டுநாம்" என்று ப்ரார்த்திப்பார், "நல்கியாளென்னைக்கொண்டருளே" என்று ப்ரார்த்திப்பாராய் அடிமைசெய்ய அடிமை கொள்ளுகிற பூர்ணனென்கை. இப்படி உபயவிபூதியிலுள்ளாரும் அடிமைசெய்ய அடிமைகொள்ளுகிறபூர்ணன்கிடீர், தன்மேன்மை பாராதே என்னைவிஷயீகரித்தா னென்கை. (விரையார்பொழில் வேங்கடவன்) பரிமளம் நிறைந்த திருச்சோலையையுடைய திருமலையை யுடையவன். "सर्वगन्धः" "ஸர்வகந்த:" என்கிற வஸ்துவாகையாலே போலியான பரிமளங்கண்டு கால்தாழ்ந்தா னித்தனை. "कुशस्थलेनिवसति" "குஶஸ்தலேநிவஸதி" என்னுமாப்போலே பரமபதத்தில்நின்றும் கோயிலேறவருகைக் கென்று தங்குகிற தேசம் திருமலை. பிள்ளைதிருநறையூரரையரைச் சிலர், "பெரியபெருமாளையநுபவிக்க விழிந்தவர் திருவேங்கடமுடையான் பாடேபோவானென் என்ன; ஆற்றிலே யமிழ்ந்துகிறவன் ஒருகாலைத் தரையிலேயூன்றினால் பிழைக்கலாமோ வென்று கால்தாழ்க்குமாப்போலே, இவரும் பெரியபெருமா ளழகிலே யழுந்துகிறவராகையாலே திருமலையிலே கால்தாழ்ந்தார், அது மடுவாகிறதறிகிறிலர்: வேறே சிலர், "பெரியப்பெருமாளைப்பாடாநிற்க திருமலையிலே போவானென்" என்று "அவரைக்கேட்க"; "ஒருவனைக்கவிபாடும்போது அவனுடைய வரத்துசொல்லியிறே கவிபாடுவது, பரமபதததிலே நின்றும்ஸ்ரீமதுரையிலேதங்கி திருவாய்ப்பாடிக்குவந்தாப்போலே ஸ்ரீவைகுண்டத்தினின்றும் திருமலையிலே தங்கிக்காண்வந்தது" என்றருளிச்செய்தார். நித்யஸூரிகளையுடையனானதுக்கு மேலே யோரைச்வரயம்.

(விண்ணவர் கோன்விரையார்பொழில்வேங்கடவன) ஆற்றிலேயழுந்துவார் ஆழங்காலிலே யிளைப்பாறத் தேடுமாப்போலே அவர்களும் வந்து அடிமைசெய்யுமிடம். (வேங்கடவன்) அர்ச்சாவதாரத்துக்குப் பொற்கால் பொலிய விட்டவிடம்.

(நிமலன்)இத்தலையில் அர்த்தித்வமுங்கூட வின்றிக்கேயிருக்க இப்படி உபசரிக்கையால் வந்த ஔஜ்வல்யம். இவனும் ஓரடியிடப் பார்த்திராதொழிகை அசித்வ்யாவ்ர்த்தியாலே. ஓரடியிட்டாருண்டாகில், "பத்ப்யாமபிகமாச்சைவ ஸ்நேஹஸந்தர்சநேநச" "பத்ப்யாமபிசமாச்சைவ ஸ்நேஹஸந்தர்ஸநேநச."(நின்மலன்)இத்தலைக்கு உபகரித்தானாயிருக்கையன்றிக்கே தன்பேறாயிருக்கை. "அமலன்" என்று-தனக்காக்கினபடி; "விமலன்" என்று-தன்னடியார்க் காக்கினபடி; "நிமலன்" என்று - நான் பச்சையிடாதிருக்க என்கார்யம்செய்தானென்கிறார். "நின்மலன்" என்று-இது தன்பேறாகச் செய்தானென்கிறார். "க்ருதக்ருத்யஸ்ததாராம:" "க்ர்தக்ர்த்யஸ்ததாராம:" என்கிறபடியே.

---

(விண்ணவர்கோன் விரையார்பொழில் வேங்கடவன்) ஆற்றிலே யழுந்துவார் ஆழங்காலிலே யிளைப்பாறத் தேடுமாப்போலே அவர்களும் வந்தடிமைசெய்யுமிடம். (வேங்கடவன்) அர்ச்சாவதாரத்துக்குப்பொறகாற்பொலியவிட்டவிடம்.

(நிமலன்) (நிமலன்) நிர்ஹேதுகமாக விஷயீகரித்தசுத்தியோகத்தையுடையவன். (நிமலன்) தன்பேறாக விஷயீகரித்த சுத்தியையுடையவன். இத்தலையைப்பெறுகைக்குப்பச்சையிட்டானும் தானே. இத்தலையில அர்த்தித்வமின்றிக்கேயிருக்க விப்படி உபகரிக்கையால் வந்தஔஜ்வல்யம். இவனும் ஓரடியிடப்பார்த்திராதொழிகை. ஓரடியிட்டாருண்டாகில் "பத்ப்யாமபிகமாச்சைவ ஸ்நேஹஸந்தர்சநேநச""பத்ப்யாமபிகமாச்சைவஸ்நேஹஸந்தர்சநேநச." ஆபிமுக்யமடியாகஅங்கீகரித்து ஓரஞ்சலிமாத்ரமுங்கூட வுண்டாககமாட்டாதா னொருவன் (நிமலன்.) இத்தலைக்கு உபகரித்தானாயிருக்கையன்றிக்கே தன்பேறாயிருக்கை. "அமலன்" என்றது-இவரைத் தனக்காக்கினபடி; விமலன்" என்றது - தன்னடியார்க்காக்கினபடி; "நிமலன்" என்றது - நான் பச்சையிடாதிருக்க என் காரியஞ்செய்தானென்கிறார். (நின்மலன்) இது தன்பேறாகச்செய்தானென்கிறார். "க்ருதக்ருத்யஸ்ததாராம:" "க்ர்தத்யஸ்தாராம:" என்கிறபடியே. (நிமலன்) தான் உபகரித்தானாய், இத்தலை - "உதவிக்கைமாறென்னுயிர்" என்றாப்போலேப்ரத்யுபகாரந்தேடித்தடுமாறுதபடி, "ப்ரணஷ்டஸ்யயதாலாப:" "ப்ரணஷ்டஸ்யயதாலாப:" என்கிறபடியே- உடையவன் உடைமையைப் பெற்றானாகில் நமக் கென்னென்று, ஆத்மலாபந் தன்னதாம்படியிருக்கிற சுத்தியையுடையவன்.

---

"விண்ணவர்கோன்" என்கையாலே – சேஷித்வத்தினெல்லை. ஆழங்கால் - வ்யங்க்யம். சிலகுணமிகுதியாலே (ஆழங்காலென்கிறது.) இவனுடைய அத்வேஷாதிகளையும் பொறுக்கமாட்டானென்னுமத்தையருளிச்செய்கிறார் (பத்ப்யாமி - பத்ப்யாமித்யாதி.)

(வானவன்) சேஷ சேஷித்வங்கள் முறைமாறாத நித்ய விபூதியிலே யுள்ளவன்."ஈஶ்வரோஹம்"என்றெதிரிட்டிருக்குமிடமிறே யிவ்விடம். அங்குக்கலக்குவாருமில்லை,கலங்குவாருமில்லை; இங்குக்கலக்குவாருமுண்டு, கலங்குவாருமுண்டு. (நீண்மதிளரங்கத்தம்மான்) * நீதிவானவன் என்றார்; * நீண் மதிளரங்கத்தம்மானென்கிறார்; "அளப்பரியவாரமுதையரங்கமேயவந்தணனை" என்னுமாப்போலே. (நீண்மதிள்)ரக்ஷகத்வத்துக்குப்போரும்படியான மதிளையுடையபெரியகோயிலிலே கண்வளர்ந்தருளுகிறபரமசேஷி. (அம்மான்) ஈரரசுதவிர்த்தாலிறே சேஷித்வம் பூர்ணமாவது.திருமலையிலபோக்யதை நிலைநில்லாமையாலே மீளவும்கோயிலிலே புகுகிறார். வெள்ளத்தைக் கள்ளமடையாலே பள்ளத்தே விடுமாப்போலே, திருவேங்கடமுடையான் வடக்குத் திருவாசலாலே வந்து புகுந்தானத்தனை யென்றுமாம்.

(திருக்கமலபாதம்) செவ்வியும் குளிர்த்தியும் விகாஸமும் பரிமளமும் தொடக்கமானவை.

---

(நீதிவானவன்) இப்படிப்புகுராநிறுத்துகைக்கடி சேஷசேஷித்வங்கள்முறைகெடாமல் நடக்கும் நித்யவிபூதிவாஸனையென்கை. "ஈஶ்வரோஹம்" என்று - எதிரிட்டிருக்குமிடமிறே இவ்விடம். அங்குக் கலக்குவாருமில்லை, கலங்குவாருமில்லை;இங்குக்கலக்குவாருமுண்டு; கலங்குவாருமுண்டு. (நீண்மதிளரங்கத்தம்மான்) "நீதிவானவன்" என்று "நீண்மதிளரங்கத்தம்மான்" என்கிறார். "அளப்பரியவாரமுதை யரங்கமேயவந்தணனை" என்னுமாப்போலே. (நீண்மதிளரங்கம்) ரக்ஷகமாகப் போரும்படியான மதிளை யுடைய பெரியகோயிலிலே கண்வளர்ந்தருளுகிறசேஷி. இப்பாசுரம்கேட்டுப்போலேகாணும் திருமங்கையாழ்வார்திருமதிள்செய்தது; அழகியவாயாலே இதருளிச்செய்தபின்பாகாதே திருமாளிகைகளும் திருக்கோபுரங்களும்கனத்தது. (அம்மான்) அங்குள்ளாரோடொத்த ப்ராப்தி இங்குள்ளாரோடுண்டாகையாலேயிறே இங்குவந்து சாய்ந்தருளிற்று. (அம்மான்) ஈரரசுதவிர்ந்தாலிறே சேஷித்வம் பூர்ணமாவது. திருமலையில் போவது நிலமல்லாமே மீளவுங்கோயிலிலே புகுகிறார். வெள்ளத்தைக் கள்ளமடையாலே பள்ளத்தே விடுவாரைப்போலே, திருவேங்கடமுடையான் வடக்குத் திருவாசலாலே வந்து புகுந்தானத்தனையென்றுமாம.

(திருக்கமலபாதம்)பெருக்காற்றிலேயிழிவார் தெப்பங்கொண்டிழியுமாப்போலே ஒருதாமரைப்பூவை த்ருஷ்டாந்தமாக்குகிறார். செவ்வி குளிர்த்தி நாற்றம் விகாஸம் இவை தாமரைப்பூப்போலேயிருக்கையாலே.

---

கலக்கிறது-பரக்ருதி; கலங்குகிறான்-பத்தாத்மா. திரு-பூஜ்யமாதல்; பிராட்டியாதல்.

ஆதித்யனைக்கண்டாலிறே தாமரையலருவது, இத்தாமரைக்கு ஆதித்யன் இவர். பிராட்டி திருமுலைத்தடங்களிலும் திருக்கண்களிலும் ஒற்றிக்கொள்ளும் திருவடிகள். இவருடைய * தளிர்புரையும் திருவடிகளிருக்கிறபடி. (அம்மான் திருக்கமலபாதம்) தொடர்ந்து வருகைக்குப்ராப்தி. (வந்து) த்வீபாந்தரத்தில் சரக்குச்சேரவேண்டினால் பாதிப்பாதி வழியாகிலும் வருதல், ஒருதலைப்பற்றுதல் செய்யவேணுமிறே; அங்ஙனன்றியே, "வந்துனதடியேன் மனம் புகுந்தாய்" என்கிறபடியே-வழிவந்தானும் தானே, பற்றினானும் தானே யென்கிறது. (என்கண்ணினுள்ளன) (நீதிவானவன்-கமலபாதம் - என்கண்ணினுள்ளன) ஸதாதர்சநம் பண்ணுகிறவர்கள் கண்ணுக்கிலக்கானதுகிடீர் என்கண்ணுக்கிலக்காகிறது. வல்லதனை நாளும் விரோதம் பண்ணினேன், போக்கற்றவாறே கண்ணைச் செம்பளித்தேன், தொடர்ந்து செம்பளித்தகண்ணையிறுத்து, உள்ளேபுகுந்து நிற்கையாலே "என்கண்ணினுள்ளன" என்கிறார். அன்றியே தம்கண்ணாலேபார்க்கை அவத்யமென்று கண்ணைச் செம்பளித்தார், கண்ணினுள்ளே ப்ரகாசிக்கத்தொடங்கிற்று.

ஆதித்யஸந்நிதியிலே யலரும் தாமரைபோலேஆச்ரிதஸந்நிதியிலே யலருந்தாமரையாய்த்துத்திருவடிகள். பிராட்டி திருமுலைத்தடத்திலும் திருக்கண்களிலும் ஒற்றிக்கொள்ளும்திருவடிகள். இவருடைய * தளிர்புரையுந் திருவடியிருக்கிறபடி. "அம்மான் திருக்கமலபாதம்" என்கையாலே – ப்ராப்தமுமாய் ப்ராப்யமுமான திருவடிகளென்கை. "నారాయణచరణౌ" நாராயணசரணங்கள் என்றபடி. "வந்து" என்று - அதினுடைய உபாயபூர்த்தி சொல்லுகிறது. (வந்து) * "విధిశివసనకాద్యైర్ధ్యాతుమత్యన్తదూరమ్ - விதிசிவஸநகாத்யைர்த்யாதுமத்யந்ததூரமானதிருவடிகள்கிடீர் என்னளவும் வந்து விஷயீகரித்தது. த்வீபாந்தரத்தில் சரக்குச்சேரவேண்டினால் பாதிப்பாதிவழியாகிலும்வருதல், ஒருதலைப்பற்றுதல் செய்யவேணுமிறே; அங்ஙனன்றியே, "வந்துனதடியேன்மனம்புகுந்தாய்" என்கிறபடியே-வழிவந்தானுந்தானே, பற்றினானுந்தானேயென்கிறது. (என்கண்ணினுள்ளன) ஏத்தக்கண்டகண்களுக்கு இவை விஷயமாகிறன. (நீதிவானவன்-கமலபாதம்-என்கண்ணினுள்ளன) ஸதாதர்சநம்பண்ணுகிறவர்களுடைய கண்ணுக்கிலக்கானதுகிடீர் என் கண்ணுக்கிலக்காய்த்து. வல்லதனைநாளும் விரோதம் பண்ணினேன், போக்கற்றவாறே கண்ணைச் செம்பளித்துக்கண்ணை யிறுத்து, உள்ளே புகுந்து நிற்கையாலே என்கண்ணினுள்ளன. அன்றியே, தங்கண்ணாலேபார்க்கை அவத்யமென்று கண்களைச் செம்பளித்தார், கண்ணினுள்ளே ப்ரகாசிக்கத்தொடங்கிற்று. (ஒக்கின்ற) ப்ரயோஜநம் இரண்டுக்கு மொத்திராநின்றது. அங்குத்தைக்கு சீலஸித்தி; இங்குத்தைக்கு ஸ்வரூபஸித்தி.

---

"விண்ணவர்கோன்" என்று-த்வீபாந்தர வஸ்து கண்ணுக்கு விஷயமென்னுமல், "உள்ளன" என்பானென்னென்ன; அருளிச்செய்கிறார் (வல்லதனை நாளுமித்யாதி.)

(ஒக்கின்ற) ப்ரயோஜநம் இரண்டுதலைக்கு மொத்திராநின்றது; - அங்குத்தைக்கு சேஷித்தி; இங்குத்தைக்குஸ்வரூபஸித்தி. (ஒக்கின்ற) ப்ரத்யக்ஷஸமாநாகாரமாயிருந்ததென்னுதல்; என்கண்ணுக்கிலக்கான விடத்திலும் பழுதின்றி கொலையாயிருந்ததென்னுதல்; ஸம்ஸாரிகளைப்பார்த்து உங்களுக்கு மொக்குமோ வென்கிறாரதல்; இந்தலாபம் அத்தலைக்கு மொக்குமோ வென்கிறாரதல்.

(அமலன்) * உயர்வறவுயர்நலமுடையவன்; ஆதி - * யவன்; பிரான் - * மயர்வற மதிநல மருளினன்; அடியார்க்கு - * பயிலுஞ்சுடரொளி; விண்ணவர்கோன் - * அயர்வறுமமரர்களதிபதி; (வந்து) அவர் * தொழுதெழு என்றார்; இவர்க்கு அவைதானே வந்து நின்றன. ... ... ... ... ... (க)

அ.—இரண்டாம்பாட்டு. முதம்பாட்டில் - அவன் துடர்ந்து வந்தபடி சொன்னார்; இப்பாட்டில - தாம் மேல் விழுந்தபடிசொல்லுகிறார்.

---

(ஒக்கின்ற) என்கண்ணுக்கிலக்கானவுங்களுக்குமொக்குமென்கிறாரதல். "கண்ணினுள்ளன வொக்கின்றவே" என்று-ஒருபதமாய் என்கண்ணினுள்ளன வானுப்போலே யிராநின்றதே என்றபடி. ஒன்பதுபாட்டு வழியிலே யநுஸந்தித்து, பத்தாம்பாட்டிலே திருவடித்தொழுதாரென்கிற ஐதிஹ்யத்தின்படியே மாநஸஸாக்ஷாத்காரந் தான் கண்ணிட்டுக் கண்டாப்போலே யிருக்கை. அங்ஙனன்றிக்கே மாநஸஸாக்ஷாத்காரத்தோடு சேர்ந்திருந்ததீ! சக்ஷுர்விஷயமான திருவடிகளென்றுமாம்.

(அமலன்) * உயர்வற வுயர்நலமுடையவன்; ஆதி - யவன்; பிரான்-*மயர்வற மதிநல மருளினன்; அடியார்-*பயிலுஞ்சுடரொளி; விண்ணவர்கோன்- *அயர்வறுமமரர்களதிபதி; (வந்து) அவர் "தொழுதெழு" என்றார்; இவர்க்கு அவைதானே வந்தன. (க)

அ.—இரண்டாம்பாட்டு. (உவந்த) கீழிற்பாட்டிலே - அரங்கத்தம்மான் திருக்கமலபாதம் வந்தென்கண்ணினுள்ளன வொக்கின்றவே" என்று-திருவடிகள்தானே தம்மை விஷயீகரித்துத் தந்திருவுள்ளத்திலே ப்ரகாசித்தபடியைச் சொன்னார்; இப்பாட்டில்- "வந்துனதடியேன் மனம்புகுந்தாய் புகுந்த தற்பின் வணங்குமென்சிந்தனைக்கினியாய்" என்கிறபடியே-அவன் விஷயீகரித்துப் புகுந்தபின்பு, திருவடிகளளவன்றியே அத்தோடு சேர்ந்த திருப்பீதாம்பரத்தளவுஞ் செல்லத் தம்சிந்தை நசைபண்ணுகிறபடியைச்சொல்லுகிறார்.

---

"ஒக்கின்ற" என்கையாலே-நிலைகுலையாதிருக்கை. ... (க)

திருவடிகளிலே தொடர்ந்த திருவுள்ளம் திருப்பரியட்டத்தின்மேலே சேர்ந்தபடி யெங்ஙனேயென்னில்; தானறிந்து சேரில் விஷயத்தின் போக்யதைக்குக் குற்றமாம், ஆகையாலே போக்யதை யளவுபட்டது மல்ல, ஆசைதலைமடிந்தது மல்ல; கடலோதம் கிளர்ந்தலைக்கப்புக்கால் உள்ளே கிடந்ததொருதுரும்பு கடலை அளவிட்டல்லவேகரையேறுவது, ஒருதிரை ஒருதிரையிலே ஏற வீசுமத்தனையிறே.

உவந்தவுள்ளத்தனுயுலகமளந்தண்டமுற
நிவர்ந்தநீண்முடியனன்றுநேர்ந்தநிசாசரரைக் [னரைச்
கவர்ந்தவெங்கணைக்காகுத்தன்கடியார்பொழிலரங்கத்தம்மா
சிவந்தவாடையின்மேற்சென்றதாமெனசிந்தனையே. (உ)

---

ஈன்று அணித்தானதாகு, தன்கன்றுக்கு வாஸனையில்லாமையாலேமுதலில் தானே தன்முலையை அதின்வாயிலே கொடுக்கும்; பின்பு சுவடறிந்தால் கன்று தானே இதுகாற்கடைக்கொள்ளிலும் மேல்விழுமிறே. அப்படியே திருவடிகள்தானேவந்து போக்யமானபடி சொன்னர்—முதற்பாட்டில்; இதில் - தம்முடைய நெஞ்சு சுவடறிந்து மேல்விழுந்தபடி சொல்லுகிறுர். திருவடிகளிலே கிடந்த திருவுள்ளம் திருப்பரியட்டத்தின்மேலே சேர்ந்தபடி யெங்ஙனேயென்னில்; தானறிந்துசேரில் விஷயத்தின்போக்யதைக்குக் குற்றமாம்; ஆகையால் போக்யதை யளவுபட்டதுமல்ல, ஆசைதலைமடிந்ததுமல்ல, கடலோதங்கிளர்ந்தலைக்கப் புக்கால் உள்ளேகிடந்ததொருதுரும்பு கடலை யளவிட்டல்லவே கரையிலே யேறுவது, ஒருதிரையிலே ஒருதிரையேற வீசுமத்தனையிறே. கீழ்ப்பாட்டில்- "நிமலன் நின்மலன்" என்று அபேக்ஷாநிரபேக்ஷமாகவும் ஸ்வயம்ப்ரயோஜநமாகவும் தன்திருவடிகளையுபகரித்தானென்றிறே இவர் சொல்லிற்று; "ரக்ஷ்யாபேக்ஷாம் ப்ரதீக்ஷதே" "ரக்ஷயாபேக்ஷாம் ப்ரதீக்ஷதே" என்கிறபடியே ரக்ஷித்து இதினுடைய அபேக்ஷையைப் பார்த்திருப்பானொருவனன்றே; ஆகையால் இது உபபந்நமென்று தோற்றியிருந்ததில்லையீ! என்ன; இந்தலோகமாக மஹாபலியபிமாநத்திலேபுக்கு அந்யசேஷமாய்க் கிடக்க, இவர்களுடைய அர்த்தித்வநிரபேக்ஷமாக இவர்கள்தலையிலே தன் திருவடிகளைவைத்து, இது தானே ப்ரயோஜநமாக வுகந்து போருமாகாரம் அவனுக்கு அடியே பிடித்துஉள்ளதொன்றன்றே, இன்று புதிதாக வருகிறதொன்றே வென்கிறுர்.

---

இரண்டாமபாட்டு.—தானறிந்து சேரில்-திருவரையில் போக்யதையை யறிந்து கிட்டிலென்றபடி. விஷயத்தின்போக்யதை-திருவடிகளின்போக்யதை.

ப-ரை.—உவந்த உள்ளத்தனாய்-என்னையகப்படுத்துகையாலே ஸந்துஷ்ட சித்தனாய்க்கொண்டு, உலகமளந்து - மூன்றுலோகத்தையுமளந்து, அண்டமுற - அண்டகடாஹத்திலே செல்லும்படி, நிவர்ந்த - உயர்ந்தவனாய், நீண்முடியன் - ஆதிராஜ்ய ஸூசகமான திருவபிஷேகத்தை யுடையனாய், அன்று - ஜநஸ்தாநத்திலே யிருக்கிறவன்று, நேர்ந்த - எதிர்த்த, நிசாசரரை - காதுஷ்ஞராக்ஷஸருடைய ப்ராணன்களை, கவர்ந்த - க்ரஸித்த, வெம்-க்ரூரமான, கணை - திருச்சரங்களையுடையனாய், காகுத்தன் - கருஸ்தகுலோத்பவனாய், கடியார் - பரிமளம்மிக்க, பொழில் - சோலையாலே சூழப்பட்ட, அரங்கத்து-கோயிலிலே கண்வளர்ந்தருளுமவனான, அம்மான் - ஸர்வஸ்வாமியானவனுடைய, அரை - திருவரையில் சாத்திய, சிவந்தவாடையின்மேல் - திருப்பீதாம்பரத்திலே, என சிந்தனை - * சதிரிளமடவாருடைகளிலே ஆழங்கவ என் நினைவானது; சென்றதாம் - சென்றதே ! என்று ஆச்சர்யப்படுகிறார். (உ)

வ்யா.—(உவந்தவுள்ளத்தனாய்) ஆழ்வாரை யகப்படுத்து கையால் வந்தப்ரீதி. ஸர்வேச்வரனாய் ச்ரியபதியாய் அவாப்தஸமஸ்த காமனாயிருக்கிறவன் அர்த்தியாய்வந்து, தன்திருவடிகளைத் தலையிலே வையாநின்றால் " మదీయమూర్ధానమలఙ్కరిష్యతి " "மதீயமூர்த்தாநமலங்கரிஷ்யதி" என்று உகக்கவேண்டியிருக்க அவையறியாதிருக்க, ப்ரஜை பால்குடிக்கக்கண்டு உகக்கும் மாதாவைப்போலே உகந்த திருவுள்ளத்தை யுடையனாய்.

---

வ்யா.—(உவந்தவுள்ளத்தனாய்) ஆழ்வாரை யகப்படுத்துகையால்வந்த ப்ரீதி. ஸர்வேச்வரனாய் ச்ரியபதியாய் அவாப்தஸமஸ்த காமனாய், "అవాక్యనాదరః" "அவாக்யநாதர:" என்கிறபடியே பரிபூர்ணனான தான், "కదాపునశ్శఙ్ఖరథాఙ్గకల్పక ధ్వజారవిన్దాఙ్కుశ వజ్రలాఞ్ఛనమ్। త్రివిక్రమత్వచ్చరణామ్బుజద్వయం మదీయమూర్ధానమలఙ్కరిష్యతి" "கதாபுநஶ்ஶங்கரதாங்ககல்பக த்வஜாரவிந்தாங்குஶவஜ்ரலாஞ்சநம்| த்ரிவிக்ரம த்வச்சரணாம்புஜத்வயம் மதீயமூர்த்தாநமலங்கரிஷ்யதி" என்றும், "படிக்களவாகநிமிர்த்த நின்பாதபங்கயமே தலைக்கணியாய்" என்றும்-சிலர் அபேக்ஷியாதிருக்க, "పాదారున్తుదమేవపఙ్కజరజః" "பாதாருந்துதமேவபங்கஜரஜ:" என்னும்ஸௌகுமார்யத்தை யுடைத்தாய், பெரியபிராட்டியார் திருவடி வருடவும் பொறுத அந்தத் திருவடிகளைக் காடுமேடுகளென்று பாராதே சேதநாசேதநவிபாகம் பாராதே பரப்பினால்,இப்படி யுபகரிப்பதே! என்று இவர்கள் உகக்க ப்ராப்தமாயிருக்க,இவர்களறிவு கேட்டைஹேதுவாக விலக்காதொழியப்பெற்றோமே யென்றிரட்டிக்கப் புகுந்த திருவுள்ளத்தை யுடையனாய்.

---

(உகப்பு) ஆழ்வார்விஷயமாதல்; லோகவிஷயமாதல்.

இவற்றைப் பிரிந்தால் வ்யஸநமும் தன்னதேயிறே; "వ్యసనేషు మనుష్యాణాం భృశం భవతి" "வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ர்ஸம்பவதி" என்கிறபடியே. (உலகமளந்து) வகுத்த திருவடிகள் தலையிலே வந்திருந்தாலும் உகக்கவறியாதலோகத்தைக்கிடீர் தானும்விடாதே யளந்தது, உகக்கவறியாமைக்கு * வன்மாவையமிறே. குணாகுண நிரூபணம்பண்ணாதே எல்லார்தலையிலும் ஒக்கத் திருவடிகளை வைத்தபடியாலே, பக்திமாங்களும் பாதகிகளும் ஒக்க வாழ்ந்து போய்த்து.

(அண்டமுற நிவர்ந்தநீண்முடியன்) அண்டகடாஹத்திலே சென்றுசேர்ந்த திருவபிஷேகத்தை யுடையவன். அண்டகடாஹம் வெடித்து அது அடைக்க வேண்டும்படியிறே அபேக்ஷிதம் பெற்றுவளர்ந்தபடி. (அண்டமுற) "அண்டம்மோழையெழ."

---

"కృతకృత్యస్తదా రామో విజ్వరః ప్రముమోదహ" "க்ர்தக்ர்த்யஸ்ததா ராமோ விஜ்வரஃப்ரமுமோதஹ" என்று - தம்மோடும் தம்பியாரோடு மூண்டான வாஸனையாலே முடியை விளக்கிறேனென்று வெறுத்திருந்தபெருமாள், இவன்இசைந்து முடியை வைத்தபின்பு உகந்தாப்போலே, இத்தலையில் அத்வேஷமேஹேதுவாகத் திருவடிகளை வைக்கப் பெறுகையாலே மிகவும் ப்ரீதனாய். எதிர்த்தலை யறியாதிருக்கத் தானேயுகக்கிறது வாத்ஸல்யமிறே; உறங்குகிற ப்ரஜையைத் தாய்கட்டிக்கொண்டு கிடக்கிறது வாத்ஸல்யமன்றோ. இவற்றைப்பிரிந்தால் வ்யஸநமும் தன்னதேயிறே. "వ్యసనేషు మనుష్యాణామ్" "வ்யஸநேஷு மநுஷ்யாணாம்."

(உலகமளந்து) வஸிஷ்ட சண்டாளவிபாகம், ஸ்திரீ பும்விபாகம், ஜ்ஞாநாஜ்ஞாநவிபாகம் என்றவற்றைப்பாராதே, எல்லார்தலையிலு மொக்கத் திருவடிகளை வைத்தபடி. (உலகமளந்து) வைத்த திருவடிகள் தலையிலே வந்திருந்தாலும்உகக்கவறியாத லோகத்தைக்கிடீர் தான்விடாதேயளந்தது; உகக்கவறியாமைக்கு * வன்மாவையமிறே. குணாகுணநிரூபணம்பண்ணாதே யெல்லார்தலையிலு மொக்கத் திருவடிகளை வைத்தபடியாலே, பக்திமாங்களும் பாதகருமொக்கவாழ்ந்துபோய்த்து. (அண்டமுறநிவர்ந்தநீண்முடியன்) அண்டகடாஹத்திலே சென்று சேர்ந்த திருவபிஷேகத்தையுடையவன். அண்டகடாஹம்வெடித்து அடிபிடிக்கவேண்டும்படியிறே அபேக்ஷிதம் பெற்று வளர்ந்தபடி. (அண்டமுற) "அண்டம் மோழையெழ." "நிவர்ந்த" என்கிற சப்தம்-உயர்வென்றும் ஓங்கியென்றுங்காட்டும். உறவென்கையாலே - ஓங்கியென்றபடி.

---

உகக்கவறியாவிட்டால் வைப்பானென்னென்ன; அருளிச்செய்கிறார் (குணாகுணேத்யாதி.)

(நிவர்ந்த)பூவலர்ந்தாப்போலே. (நீண்முடியன்)உபய விபூதிக்கும் நிர்வாஹகனென்று தோற்றும்படி யிருக்கிற திருவபிஷேகத்தையுடையவன். ரக்ஷ்யவர்க்கத்தை நோக்கினவிறே ரக்ஷகன்முடி தரிப்பது. (அன்று) கண்ட காட்சியிலே "ஜிதம்" என்னவேண்டியிருக்கிறவன்று. எதிரிட்டவையல்களை முடிக்கைக்கு வெவ்விய சரத்தையுடைய சக்ரவர்த்தித்திருமகன்.

---

(நிவர்ந்த)பூவலர்ந்தாப்போலே. (நீண்முடியன்)முடிக்கு நீட்சியாவது-உபயவிபூதிக்கும் தரித்த முடியென்று தோற்றும்படியாயிருக்கை. "ஆதிராஜ்யமதிகம்புவநாநாமீஶ தேபிஶுநயந்கிலமௌளிঃ" "ஆதிராஜ்யமதிகம்புவநாநாமீஶதேபிஶுநயந்கிலமௌளிঃ" என்னுமாப்போலேரக்ஷ்யவர்க்கத்தைநோக்கிவிறே ரக்ஷகன் முடி தற்றரிப்பது. "ஒருகாலுங்காமருசீரவுணனுள்ளத்தெண்மதியுங்கடந்து"என்று-திருவடிகளுக்குவளர்த்திசொல்ல ப்ராப்தமாயிருக்கத் திருமுடிக்கு வளர்த்திசொல்லுகிறது, இத்திருவடிகள் அப்ராப்தமான திருவடிகளன்று,ப்ராப்தமான திருவடிகளென்று தோற்றுகைக்காக. தான் அர்த்தியாய்ச்சென்று அர்த்தித்வத்தை மாறாதே யவன் கொடுத்தபடியாலே உவந்த வுள்ளத்தனாய். அவன்றானறியவுகக்கவொண்ணாதே. (உலகமித்யாதி) திருக்கையில் நீர் விழுந்த வளவிலே அந்நீரோ பற்றாசாகவளர்ந்து அளந்துகொண்டான்;

ஆக இப்படிஅர்த்தித்வ நிரபேக்ஷமாக லோகத்தைஇருந்ததே குடியாகத்திருவடிகளாலே விஷயீகரித்தாப்போலே. உம்முடைய நிகர்ஷம்பாராதே, "அரவிந்தப்பாவையுந் தானு மகம்படி வந்து புகுந்து" என்று-நெஞ்சிலே வந்து புகுந்தானே யாகிலும், உம்முடைய சித்தமான துராகாதிதூஷிதமாயிருக்கையாலே, "நாஸ்பதி" "நாஸ்பதி" என்கிறபடியே அங்குக் கால் பொருந்தி யிருக்கமாட்டானே; ஆகையால் அத்தை நீர்போக்கப்பாரீரென்ன (அன்று நேர்ந்த நிசாசரரைக்கவர்ந்த வெங்கணைக்காகுத்தன்)கண்ட காட்சியிலே "ஜிதந்தே" "ஜிதந்தே" என்னவேண்டியிருக்கிறவனிறே. எதிர்த்தவையல்களை முடிக்கைக்கு வெவ்விய சரத்தையுடையவன். பெருமாளும், "ச்ரியாஸார்த்தம்" "ச்ரியாஸார்த்தம்" என்கிறபடியே பிராட்டியும், நித்யஸூரிகளோபாதி * சுற்றமெல்லாமான இளையபெருமாளுமாக தண்டகாரண்யத்திலே போய்ப்புக்கு, பரதன் அங்கேவந்து பின்தொட்டுகையாலே அங்கிருக்கமாட்டாதே ஜநஸ்தாநத்திலேபோய்ப்புக்கு அங்கு வர்த்திக்கிறரிஷிகளபாடே

---

அளப்பதற்குமுன்பு நீண்முடியில்லையோ வென்ன; அருளிச்செய்கிறார்(ரக்ஷ்யவர்க்கத்தை யித்யாதி.)

"ఆవాసన్త్వహమిచ్ఛామి ప్రదిష్టమిహకాననే" "ஆவாஸம் த்வஹமிச்சாமி ப்ரதிஷ்டமிஹகாநநே" என்று - எங்கள்ஸகாசத்திலே யிருக்கப் பாரா நின்றோமென்னு மிடம் தரவேணுமென்ன; அவர்களும் [ அங்கேயிருக்க அநுமதிபண்ணி நன்றாகப்பர்ணசாலையைச்சமைத்து வாஸ்துபலிகளுமிட்டு அங்கே யெழுந்தருளி யிருக்க; அவ்விருப்புக்கு விரோதிகளாய் வந்து கரதூஷணாதிகள் எதிர்க்க, அவர்களை நோக்கி அந்தரிஷிகள் தொடுத்ததோரம்புண்டோ; அவர்கள், "ఏహి పశ్య శరీరాణి" "ஏஹிபஶ்யஶரீராணி" என்னும்படி உருமாய்த்த அந்த ராக்ஷஸரை, தம்முடைய திருக்கைத் திருச்சார்ங்கங்களாலே * உருக்கெட வாளிபொழிந்த சக்ரவர்த்தித் திருமகன் என்னுடைய ராகாதிதோஷங்களை விவேகசரஜாலத்தாலே சமிப்பித்து, * அரவத்தமளியினோடும்-அரவிந்தப்பாவையினோடும் * பேரேனென்றென்னெஞ்சு நிறையும்படி புகுந்திருக்கிறவனென்கிறார்.

(அன்று) ஜநஸ்தாநத்திலே யிருக்கிறவன்று. ரக்ஷகனானவன் ரக்ஷ்யத்தைநோக்கக்கடவதாகவந்துநின்றவன்று. (நேர்ந்தநிசாசரரை) அகவாயிலிருட்சியே யன்றிக்கே, ஸர்ப்பம் உணர்த்தியற்ற ராத்ரியிலேபுறப்படுமாப்போலே பரஹிம்ஸைக்கு ஏகாந்தமான காலத்திலே வந்து யெதிர்ந்த கரதூஷணாதி ராக்ஷஸரை. "நேர்ந்த நிசாசரர்" என்கையாலே - விபீஷணாதிகளை வ்யாவர்த்திக்கிறது. (அன்று நேர்ந்த நிசாசரர்) "తేతం సోమమివోద్యన్తం దృష్ట్వా వై ధర్మచారిణః। మఙ్గళాని ప్రయుఞ్జానాః ప్రత్యగృహ్ణన్ దృఢవ్రతాః" "రామో రామో రామ ఇతి ప్రజానామభవన్ కథాః। రామభూతం జగదభూత్ రామే రాజ్యం ప్రశాసతి" "தேதம்ஸோமமிவோத்யந்தம் த்ருஷ்ட்வாவைதர்மசாரிண:। மங்களாநிப்ரயுஞ்சாநா: ப்ரத்யக்ருஹ்ணந்த்ருடவ்ரதா:" "ராமோராமோராமஇதி ப்ரஜாநாமபவந்கதா:। ராமபூதம்ஜகதபூத் ராமேராஜ்யம்ப்ரஶாஸதி" என்றும்- அநுகூலப்ரதிகூல விபாகமற இவனைக்கண்ட மநுஷ்யர் மங்களாசாஸநம் பண்ணுவார் அடைவுகெடவாய்புலத்துவாராநிற்கிற காலத்திலே, இவர்கள் இங்ஙனே சிலர்எதிர்த்து நசித்துப்போவதே! யென்றுவெறுக்கிறார்இவர். [రామో రామో రామ ఇతి-ராமோராமோராமஇதி] பாதம் தலைக்கட்டுகையாலே மீளுகிறதித்தனையென்றிறே நிர்வஹிப்பது. இத்தைவித்யத்துக்குப் பொருள் * రూపౌదార్యగుణైః * ரூபௌதார்யகுணங்களையென்ற வடிவழகும், அத்தை அநுபவிக்கக்கொடுக்கையும், கொடாநின்றால் இறுமாப்பற்றிருக்கையும், "పుంసాం తరుణ్యశ్చ" "பும்ஸாம்தருண்யஞ்ச" என்று ஸ்த்ரீபும்விபாகமற ப்ரவணராமாகாரமுண்டாயிருக்கையாலே வீதராகரைச் சொல்லுகிறது. ப்ராப்தவிஷய ப்ராவண்யமிறே ஜிதேந்த்ரியத்வமாகிறது.

(அன்று) ரக்ஷகனானவன் ரக்ஷ்யத்தை நோக்கக்கடவதாக வந்து நின்றவன்று. (நேர்ந்த நிசாசரரை) எதிரிட்ட நிசாசரரை: "நேர்ந்த நிசாசரர்" என்கிறது - திருப்பல்லாண்டு பாடவேண்டு மழகைக்கண்டும் எதிரம்பு கோப்பதே! என்று. நிசாசரர் - வெளியில் முகங்கண்டறியாத பையல்கள். (கவர்ந்த) புறப்படும்போது விநயத்தோடு புறப்பட்டு, வேட்டைநாய்களோடி மேல்விழுமாப்போலே மேல்விழுகை. (வெங்கணை) விடும்போது அம்பாய்படும்போது காலாக்நிபோலே யிருக்கை. "தீ³ப்தபாவகஸங்காஶைஶ்ஶரை:" "தீப்தபாவகஸங்காஶைஶ்ஶரை:" என்கிறபடியே - பெருமாள்கண்பார் முடித்தல்லது நில்லாதவெம்மை.

---

[ப்ரஜாநாம்-ப்ரஜாநாம்] மாதாபிதாக்களுக்கன்று, வஸிஷ்டாதிகளுக்கன்று, ஜநிதர்மாக்களுக்கு. [க³தா: - கதா:] லோகயாத்ரைக் குறுப்பாம் வார்த்தைகளும் பெருமாளைப்பற்றி யல்லதிராது. [ராமபூ⁴தம்ஜக³த³பூ⁴த் - ராமபூதம்ஜகதபூத்] ஜகத்தடைய ராமாத்வைதமாய்த்து. "ஐததா³த்ம்யமித³ம்ஸர்வம்" "ஐததாத்ம்யமிதம்ஸர்வம்" என்கிறபொதுவல்ல, "ராமபூ⁴தம்-ராமபூதம்" என்று ராமாத்வைதமாய்த்து. ப்ரஹ்மாத்வைதத்தை வ்யாவர்த்திக்கிறது. பெருமாள் சுண்டுவில்கொண்டு லீலாரஸமநுபவிக்கிற காலத்திலேயோ வென்னில்; [ராமேராஜ்யம்ப்ரஶாஸதி - ராமேராஜ்யம் ப்ரஶாஸதி] "த³ஹ, பச-தஹ, பச" என்கிற காலத்திலே.

(அன்று) இப்படி எல்லாருமொக்க ப்ரவணராகிறவன்று. (நேர்ந்தநிசாசரரை) இவ்வடிவழகிலேதோற்றுவிழாதே சரஸஸ்த்ரங்களைத் தூவிக்கொண்டுவந்தெதிர்ந்த ராக்ஷஸரை. (கவர்ந்த) மாரீச ஸுபாஹுத்வயத்துக்கிப்பால் ஒரிரைபெறாதே கிடக்கிற வையாகையாலே, இரைபெறாத ஸர்ப்பம்போலே எதிரிகள் மேலே விழுந்து க்ரஸித்தபடி. (வெங்கணை) அவன் றன்னைப்போலேயாய்த்து அம்புகளுமிருப்பது."தீ³ப்தபாவகஸங்காஶைஶ்ஶிதை: காஞ்சநபூ⁴ஷணை:" "தீப்தபாவகஸங்காஶைஶ்ஶிதைஃகாஞ்சநபூஷணை:" என்கிறபடியே - தொடுக்கிறபோது அம்பாய்,எதிரிகள் மேலே போய் விழும்போது எரிகிற காலாக்நிபோலே யாய்த்து விழுவது. "நத்வாமிச்சாம்யஹம்த்³ரஷ்டும் ராமேணநிஹதம்ஶரை:" "நத்வாமிச்சாம்யஹம்த்ரஷ்டும் ராமேண நிஹதம்ஶரை:" என்று- * தயரதன்பெற்ற மரதக மணித்தடத்திலே புக்கு சரமந்த்ரமாட்டாதேசாவக் காணமாட்டுகிறிலேன். * சரங்களாண்ட தண்டாமரைக்கண்ணனுக் கன்றி யென் மநம் தாழ்ந்து நில்லாதே" என்கிறபடியே நீயும் நானும் கூடி, * இலங்கை பாழாளாகப் படைபொருதானுக்குப் பல்லாண்டுகூறுவாராய் ஆள்படப்போகாதே! என்றானிறே விபீஷணன். (வெங்கணை) வெஞ்சிலையினின்றும் புறப்படுகிறவை யாகையாலே * வெங்கணையாயிருக்குமிறே. அவன் அநுகூலர்க்கு * புனலுருவாய், ப்ரதிகூலர்க்கு அனலுருவாயிருக்குமாப்போலே, பொன்னெழுதின பகழிகளுந் தானுமாயிருக்கையாலே, அநுகூலர்க்கு தர்சநீயமாய், அக்நிகோபமங்களாகையாலே ப்ரதிகூலர்க்கு பயங்கரமாயாய்த்திருப்பது இச்சரங்களும்.

(காகுத்தன்) குடிப்பிறப்பால் தாம் பாராதே விஷயீகரித்த படியும் வீரவாசியும்.

(கடியார்பொழில்). திருவுலகளந்தருளின விடமே பிடித்து அடியொற்றினான். ராவணவதம்பண்ணித்தெற்குத் திருவாசலாலே புகுந்து சாய்ந்தருளினான், இன்னமும் வேர்ப்படங்கிற்றில்லை. திருச்சோலையிற் பரிமளம் விடாயர்க்கு சிசிரோபசாரமானபடி. (அரங்கத்தம்மான்) அவதாரத்துக்குப் பிற்பாடர்க்கும் இழவுதீரக்கோயிலிலே வந்துகண்வளர்ந்தருளுகிறபடி. (அம்மான்) இங்கேவந்த பின்பு ஈச்வரத்வம் நிலைநிற்கை.

---

ஆக "உவந்த வுள்ளத்தனா யுலகமளந்தண்டமுற நிவர்ந்தநீண்முடியன்" என்று-"ஸௌசீல்யவாந்" "கோகுணவாந்" என்று ப்ரதமப்ரச்நமாய்ஆச்ரயணீயமான சீலாகுணத்தைச்சொன்னாராய், "அன்று நேர்ந்த நிசாசரரைக்கவர்ந்த வெங்கணைக்காகுத்தன்" என்று-அநந்தரமாக "வீர்யவாந்" "கச்சவீர்யவான்" என்று சொன்ன விரோதி நிரஸநத்துக்குறுப்பான வீரகுணங்களைச்சொல்லுகிறார். ஆக "மாம், அஹம்" என்கிற விரண்டினுடைய வர்த்தமும் அநுஸந்தித்தாராய் விட்டது. "உலகமளந்து" என்று - திருவடிகள் விக்ரமித்தபடி சொல்லி, "கவர்ந்த வெங்கணைக் காகுத்தன்" என்று – திருத்தோள்கள் பராக்ரமித்தபடி சொன்னார். (காகுத்தன்) இந்த விரண்டு குணமும் உபயவிபூதி நாதத்வப்ரயுக்தமன்று, ககுஸ்தவம்ஸத்திலே பிறந்து படைத்தானாகையாலே ஔத்பத்திகமென்றபடி. ஆக, கரதூஷணாதிகளை * சிலையால் வாளிபொழிந்தபடி சொல்லிற்று. (கடியார்பொழி லரங்கத்தம்மான்) திருவுலகளந்தருளினத்தால் வந்த ச்ரமமும் ஜநஸ்தாநத்தில ராக்ஷஸவதம்பண்ணின ச்ரமமும் ஆறுகைக்காக, பரிமளபரிதமான சோலையை யுடைத்தான கோயிலிலே வந்து, அந்தத்திருவடிகளையும் திருத்தோள்களையும் நீட்டிக கொண்டு சாய்ந்தான். பரிவராயிருப்பார், "கொடியார்மாடக்கோளூரகத்தும் புளிங்குடியும், மடியாதின்னே நீ துயில்மேவிமகிழ்ந்தது தான், அடியாரல்லல்தவிர்த்தவசைவோவன்றேலிப், படிதான் நீண்டு தாவியவசைவோ பணியாயே" என்று - நீயிங்குவந்து கண்வளர்ந்தருளுகிறது ஹிரண்ய ராவணாதிகளை நிரஸிததத்தால் வந்த ச்ரமந்தீரவோ, த்ரைலோக்யத்தையு மளந்துகொண்ட ஆயாஸத்தால்வந்த ச்ரமந்தீரவோ, பணியாய்-உன்ஸ்வரங்கொண்டு நாங்களறியும்படி சொல்லா யென்றார்களிறே. பிள்ளாய்! கிடக்கும் போது ஒருமூலையிலே ஒருவரறியாமற் கண்வளர்ந்தாலாகாதோ. இன்னமும் அவர்கள் மறுகிளைகிளைத்து, அவனெங்கேயென்று தேடிக்கொடுவரிலும் கொடிகட்டிக்கொண்டு கிடக்கவேணுமோவென்று வயிறுபிடித்தாரிறே; அதுபோலுமல்லகிடீர் இவன்கண்வளர்ந்தருளுகிறபடி யென்கிறாரிவர்.

---

(விஷயீகரிக்கை) விபீஷணாழ்வானை. (உ)

(அரைச்சிவந்த வாடை) * உடையார்ந்தவாடை; "செக்கர் மாமுகில்." திருமேனிக்கு பரபாகமான திருப்பீதாம்பரம். (சிவந்தவாடையின் மேல் சென்றதாம்) "சோற்றின்மேலே யெனக்கு மனஞ்சென்றது" என்னுமாப்போலே ஆச்சர்யப்படுகிறார். (எனசிந்தனையே) ஆருடைய கூறையுடையைக்கண்டு உகக்கக்கடவ நெஞ்சு இதிலேயகப்பட்டது. (எனசிந்தனை) திருவடிகளின் சுவடறிந்தபின்பு புறம்புபோகமாட்டாத நெஞ்சு. தீர்த்தமாடாநிற்கத் துறையிலே பிள்ளையைக் கெடுத்துத் திருவோலக்கத்திலே காண்பாரைப்போலே திருவடிகளில்நின்றும் திருப்பீதாம்பரத்திலே திருவுள்ளத்தைக்கண்டபடி.

---

கொடிகள் த்ர்ஷ்டிகோசர மாறுவிறே அவன் கிடக்கிறபடியறியலாவது, இது அங்ஙனன்றே;-"ஸுதூரத்ருஶ்யதே" "தூராத்கந்தோவாதி" என்கிறபடியே தூரஸ்தரையு மழைக்குமதிறே. * ஸர்வகந்தவஸ்து கண்வளர்ந்தருளுகையாலே * கடியார் பொழிலாயிருக்குமிறே. திருச்சோலையில்பரிமளம் விடாய்க்கு சிசிரோபசாரமாம்படி. (அரங்கத்தம்மான்) அவதாரத்துக்குப் பிற்பாடரானாரு மிழவாதபடி இங்குவந்து கண்வளர்ந்தருளுகிறதுப்ராப்தியாலேயிறே. ஆகவித்தால் - போக்யதை சொல்லிற்று. (அரைச்சிவந்த வாடையின்மேல்) * மேகஶ்யாமம் - மேகச்யாமமான திருவரைக்கு பரபாகரஸாவஹமான திருப்பீதாம்பரத்தின் மேலே. (சிவந்தவாடையின்மேல் சென்றதாம்) "சோற்றிலேயெனக்குமநஞ்சென்றது" என்னுமாப்போலே ஆச்சாயப்படுகிறார். (எனசிந்தனையே) ஆருடைய கூறையுடைகண்டு உகக்கக்கடவநெஞ்சு இதிலே யகப்பட்டது. த்ர்ஷ்டத்திலே லோககர்ஹிதமாய் அத்ர்ஷ்டத்திலே வெந்நரகிலே தள்ளவுங் கடவதான வுடைகளிலே ப்ரவணமான வென்மநஸ்ஸு, த்ர்ஷ்டத்தில் ஆகர்ஷகமாய் அத்ர்ஷ்டத்தில் * ஸதாபஶ்யந்தி - ஸதாபச்யந்திக்கு விஷயமான திருப்பீதாம்பரத்திலே விழுந்து நசைபண்ணுகின்றது. (எனசிந்தனை) திருவடிகளின் சுவடறிந்து பின்பு புறம்பு போகமாட்டாதநெஞ்சு. தீர்த்தமாடா நிற்கத் துறையிலே பிள்ளையைக் கெடுத்துத் திருவோலக்கத்திலே காண்பாரைப்போலே, திருவடிகள் நின்றும் திருப்பீதாம்பரத்தைக்கண்டபடி. மநஸ்ஸு என்னாதே "சிந்தனை" என்றது-சிந்தாவிசேஷத்தைப்பற்ற. இத்தால் - திருவுலகளந்தருளினத்தையும் ராமாவதாரத்தையும் பெரியபெருமாள்பக்கலிலே ஓரோவகைகளாலே காண்கிறார்.

இத்தால் - திருவுலகளந்தருளினத்தையும் ராமாவதாரத்தையும் பெரியபெருமாள்பக்கலிலே ஓரோவகைகளாலேகாண்கிறார்.()

அ.—மூன்றும்பாட்டு. திருப்பீதாம்பரத்தி னழகு திருநாபீகமலத்திலே வீசிற்று.

---

ஆக, கீழ் - "சமலபாதம்வந்தென் கண்ணினுள்ளன" என்று தானே முற்பாடனாய்வந்து விஷயீகரித்தபடியாலே-ஸாதநபாவஞ் சொல்லிற்று; "சென்றதாம்" என்று - தந்திருவுள்ளம் மேல்விழுந்ததாகச் சொல்லுகையாலே அதிகாரிஸ்வரூபம் சொல்லுகிறது. இங்கு; கீழ்-"நீண்மதிளரங்கம்" என்று - ரக்ஷகத்வம் சொல்லிற்று; "கடியார்பொழிலரங்கம்" என்று - போக்யதை சொல்லுகிறது. இங்கு; ஆகவிப்பாட்டால் - முதற்பாட்டிலே, "நிமலன் நின்மலன்" என்று - அபேக்ஷாநிரபேக்ஷமாக உபகரிக்கும் சுத்தியையுடையவனென்றதாய்த்து. சொன்னவர்த்தங் கூடுமோவென்ன; கூடுமென்னு மிடத்திற்கு உதாஹரணஞ்சொன்னாராய் நின்றது()

அ.—மூன்றும்பாட்டு. (மந்திபாய்) திருப்பீதாம்பரத்தி னழகின்மிகுதி திருநாபீகமலத்திலே வீசிற்று. முதற்பாட்டிலே "ஆதிபிரான்" என்று - ஜகத்காரணபூதனாய் ஸர்வஸ்மாத்பரனாயிருக்குமென்றுசொல்லக்கேட்டவர்கள், "బ్రహ్మవిష్ణుశివాత్మికామ్" "ப்ரஹ்மவிஷ்ணுசிவாத்மிகாம்" என்று - மூவர் ஜகத்காரணராகவொன்று ப்ரஸித்தமாயிருக்க இவனே ஜகத்காரணபூதனென் றறியும்படியென்னென்ன; சாஸ்த்ரமுகத்தாலே நம்முடைய காரணத்வத்தை ப்ரகாசிப்பிப்புதோமாகில் அது கர்மாதீநமான ருச்யநுகூலமாக கமுகின்நிழைபோலே அயதாவாக ப்ரகாசிக்குமென்றுபார்த்தருளி, "త్రయోదేవాస్తుల్యా స్త్రితయమిదమద్వైకమధికం త్రికాదస్మాత్తత్వం పరమితి తర్కాన్ విఘటయన్। ప్రభోర్నాభీపద్మోదధిశివనిదానం భగవత స్తదన్యద్భ్రూభఙ్గీ పరవదితి సిద్ధాన్తయతి నః" "த்ரயோதேவாஸ்துல்யா ஸ்த்ரிதயமிதமத்வைகம்மதிகம் த்ரிகாதஸ்மாத்தத்வம் பரமிதிவிதர்க்காந்விகடயந்| ப்ரபோர்நாபீபத்மோவிதிசிவநிதாநம் பகவதஸ்ததந்யத்ப்ரூபங்கீபரவதிதிஸித்தாந்தயதிந:"என்றும், "முதலாந்திருவுருவம்மூன்றென்பரொன்றே, முதலாகுமூன்றுக்கு மென்பர், முதல்வா, நிகரிலகுகாருருவா நின்னகத்ததன்றே, புகரிலகுதாமரையின்பூ" என்றும் சொல்லுகிறபடியே-தன்திருநாபிகமலத்திலே ஜகத்காரணபூதராக ப்ரஸித்தரான ப்ரஹ்மருத்ரர்களை ஸ்ருஷ்டித்துக்காட்ட, அந்த நாபீகமலம் அம்முகத்தாலே தன்னுடைய மேன்மையையும் அழகையுங் காட்டி, திருப்பீதாம்பரத்திலே துவக்குண்கிற வென்னுடைய மநஸ்ஸைத் தன்பக்கலிலே யிழுத்துக்கொள்ளாநின்ற தென்கிறார். அநுபாவ்யத்தை எல்லைகண்டுமீளுதல், தம்முடைய ஆதரம்மட்டமாய் மீளுதல் செய்கிறாரல்லரோ, தம்முடைய சாபல மடியாக இழுப்புண்கிறாரித்தனையிறே.

மந்திபாய்வடவேங்கடமாமலைவானவர்கள்
சந்திசெய்யநின்றானரங்கத்தரவினணையான் [தோரெழில்
அந்திபோனிறத்தாடையுமதன்மேலயனைப்படைத்த
உந்திமேலதன்றேவடியேனுள்ளத்தின்னுயிரே. (௩)

ப-ரை.—(மூன்றாம்பாட்டு)பலாக்கள் வேரோபிடித்துத் தலையளவும் பழுத்துக்கிடக்கையாலே, மந்தி - ஆண்குரங்குகளானவை, பாய் - ஒருகிளையினின்றும் மற்றொருகிளையில் இடைவிடாமல் பாய்ந்தபடியே யிருப்பதாய், வடக்கு - தமிழுக்கு வடவெல்லையும், திருவேங்கடம்-வேங்கடாத்ரியென்னும் திருநாமத்தையுமுடையதும், மாமலை - உயர்த்தியையும் விசாலத்தையு முடையதுமான திருமலையிலே, வானவர்கள் - நித்யஸூரிகள், சந்திசெய்ய நின்றான்-புஷ்பங்களைக்கொண்டு ஆராதிக்கும்படி நின்றவனாய், அரங்கத்து - கோயிலிலே, அரவினணையான் - திருவநந்தாழ்வான் மேலே பள்ளிகொண்டருளுமவனுடைய, அந்திபோல் நிறத்தாடையும் - செவ்வாநம்போன்ற நிறத்தையுடைய திருப்பீதாம்பரமும், அதனமேல் - அதுக்குமேலே, அயனைப்படைத்தது - ப்ரஹ்மாவுக்கு உத்பத்தி ஸ்தாநமானது, ஓரெழில் - அத்விதீயமான அழகையுடைய, உந்திமேலதன்றே - திருநாபீகமலத்தின்மேலதன்றே, அடியேனுள்ளத்து-அடியேனுடைய மநஸ்ஸிலிருக்கிற, இனஉயிர் - நறசீவன். (௩)

---

வ்யா.—(மந்திபாய் வடவேங்கடமாமலை வானவர்கள் சந்திசெய்ய நின்றா னரங்கத்தரவினணையான்) கீழ்ப்பாட்டிலே - "உலகமளந்தண்டமுற நிவர்ந்த நீண்முடியன் - கடியார்பொழிலரங்கத்தம்மான்" என்று-இந்தலோகங்களையடையத்தன்திருவடிகளாலே யளந்துகொண்டார் பெரியபெரிமாளென்றாரோ,அங்ஙனே சொல்லலாமோ; "அன்று ஞாலமளந்த பிரான் - சென்றுசேர் திருவேங்கடம்" என்றன்றோ நம்மாழ்வார்வார்த்தை; திருவேங்கடமுடையான்திருவடிகளைக்காணவேணுமென்று * வழிபாடுசெய்த ஸூரிகளும் "என்னாளே நாம் மண்ணளந்த விணைத்தாமரைகள் காண்பதற்கு" என்றன்றோ ப்ரார்த்தித்தது; ஆகையாலே இந்தபூமியையடையத் திருவடிகளாலே ஆக்ரமித்து, "அடிக்கீழமர்ந்து புகுந்தடியீர்வாழ்மின்" என்று - தன்திருக்கையாலே, * உலகமளந்த பொன்னடியைக்காட்டிக்கொடுநிற்கிறவனுமாய், "தானோங்கி நிற்கின்றான் றண்ணருவி வேங்கடம்" என்கிறபடியே - அண்டமுற நிவர்ந்த நீண்முடியனுமாய் நிற்கின்றான் திருவேங்கடமுடையானன்றோமவனன;,
கண்வளர்ந்தருளுகிற பெரியபெருமாளே யென்கிறார்.

(மந்திபாய் வடவேங்கடமாமலை)திருப்பீதாம்பரத்தினழகையநுபவிக்கச்செய்தே,திருநாபீகமலத்தினழகிலே தாமிழுப்புண்டசாபலத்துக்குப் போலியா யிருக்கையாலே குரங்குகளை நிதர்சநமாகச் சொல்லுகிறார்.

வ்யா.—(மந்திபாய்) திருமலையில் பலாக்கள் வேரேபிடித்துத் தலையளவும் பழுத்துக்கிடக்கையாலே அங்குத்தைக் குரங்குகள் ஜாத்யுசிதசாபலத்தாலே ஒருபழத்தை புஜிக்கப்புக மற்றமேலில் பழத்திலே கண்ணையோட்டி இத்தைவிட்டு அதிலே பாய்ந்து தாவாநிற்கு மத்தனையாய்த்து. பெரியபெருமாளுடைய திவ்யாவயவங்களிலேதாம் ஆழங்கால்படுகிறுப்போலேயாய்த்து அவைகளும். * கானமும் வாநரமும் வேடுமுடை வேங்கடமிறே. (மந்திபாய்) ஒன்றையொன்று பற்றி மாலையாக நாலாநிற்கும், திருச்சின்னக்குரல் கேட்டவாறே பாய்ந்தோடாநிற்கு மென்றுமாம். பரமபதமும் திருமலையும் கோயிலும் திருவயோத்யையும் அச்சோலையோபாதியா யிருக்கிறபடி. எங்கும் மாறிமாறித் தங்குகை. (மந்திபாய்) பலாக்கனிகள் வேரோடு நுனியோடு வாசியறப்பழுத்துக்கிடக்கையாலே ஒன்றிலும் வாய்வைக்கப்பெறுதேதான்வேண்டினபடி திரியும்.

(வடவேங்கடம்) தமிழ்தேசத்துக்கு எல்லைநிலம். (மாமலை) போக்யதை யளவற்றிருக்கை. உபயவிபூதியும் ஒருமூலையிலே யடங்குமென்றுமாம்.

---

(மந்திபாய்) திருமலையிலே பலாக்கள் வேரோபிடித்துத் தலையளவும் பழுத்துக்கிடக்கையாலே அங்குத்தைக்குரங்குகள் ஜாத்யுசிதசாபலத்தாலே யொருபழத்தை புஜிக்கப்புகுகிறவை மற்றைக்கொம்பிற் பழத்திலே கண்ணையோட்ட, இத்தைவிட்டு அதிலே தாவப்பாய்ந்து திரியுமாப்போலே யென்கை. பெரிய பெருமாளுடைய திவ்யாவயவங்களிலே தாம் ஆழங்காற்படுகிறுப் போலே. * கானமும் வாநரமும் வேடுமுடை வேங்கடமிறே. (மந்திபாய்) ஒன்றையொன்று பற்றி மாலையாக நாலாநிற்கும், திருச்சின்னக்குரல் கேட்டவாறே பாய்ந்தோடாநிற்குமென்றுமாம். பரமபதமும் திருமலையும் கோயிலும் திருவயோத்யையும் திருச்சோலையும் ஒருபோகியாயிருக்கிறபடி; எங்கும் மாறிமாறித் தங்குகை.

(வடவேங்கடம்) திருமலை என்னுதே "வடவேங்கடம்" என்கிறது-தமிழர்,தமிழுக்கெல்லைநிலம் அதுவாகச்சொல்லுகையாலே. வேதசப்தோப ப்ர்ஹ்மண சப்தங்களாலன்றிக்கே தம்முடைய ஜந்மாநுரூபமாகத் தாம் கவிபாடுகிறசப்தம் நடையாடுகைக்கு எல்லை அதுவாகையாலே சொல்லுகிறுர். (மாமலை) போக்யதையின் மிகுதியைச் சொல்லுகிறதாதல்; "பரன் சென்றுசேர்" என்றும், "மூன்ன மடைமினே" என்றுஞ் சொல்லுகிறபடியே சேஷியானவன் தன்னுடைய ரக்ஷகத்வ ஸித்திக்காகவும் சேஷபூதரானவர்கள் தங்கள்ஸ்வரூபஸித்திக்காகவும் வந்துசேருகையால் வந்த ச்லாக்யதையைச் சொல்லுகிறதாதல்.

---

மூன்றும்பாட்டில்.—தாத்பர்யத்தை யருளிச்செய்கிறுர் (பரமபதமுமித்யாதி.)

(வானவர்கள் சந்திசெய்ய நின்றான்) எத்தனையேனும் தண்ணியார்க்கும் முகங்கொடுத்து நிற்கிற அந்நீர்மையை யநுஸந்தித்து, நித்யஸூரிகள் வந்து படுகாடுகிடப்பது இங்கேயாய்த்து. மேன்மையை யநுபவிக்குமத்தனையிறே-அங்கு; சீலாநுபவம்பண்ணலாவது-இங்கேயிறே.

ஸூரிகள் பரமபதத்தினின்றும் திருவேங்கடமுடையானை யநுபவிக்கவரும்போது, தன்சிகரத்தில் இளைப்பாறி வரலாம்படியிருக்கிற வுயர்த்தியைச் சொல்லுகிறதாதல்; அன்றிக்கே, உபயவிபூதியும் ஒருமூலையிலே யடங்குமென்றுமாம்.

(வானவர்கள் சந்திசெய்ய) நித்யஸூரிகள் * சிந்துபூக்கொண்டு போகரூபமான ஸமாராதநத்தைப்பண்ண, அவன் பரமபதத்தினின்றும் தன்னீர்மை ப்ரகாசிக்கைக்காக ஆதியானதான் திருமலையிலே வந்தவாறே, * விண்ணவர்கோனை தன்னுடைய மேன்மையை யநுபவித்துக்கொண்டு போந்த ஸூரிகள், * விரையார் பொழில் வேங்கடவனை நீர்மையை யநுபவிக்கைக்காகத் திருமலையிலே வருவர்கள், அந்நீர்மைக்கடியான மேன்மையை யநுபவிக்கைக்காகத திருமலையினின்றும் பரமபதத்தேறப்போவர்கள். (நின்றான்) இந்நிலையாலே யோருத்யோகமுண்டென்று தோற்றும்படி நின்றான். பெருமாள், ருச்யமூகபர்வதத்திலே மஹாராஜர் தொடக்கமான வாநரஸேனைக்கும் இளையபெருமாளுக்கும் ஒக்கமுகங்கொடுத்துக்கொண்டு நின்றாப்போலே யாய்த்து - திருவேங்கடமுடையானும், குரங்குகளோடு ஸூரிகளோடு வாசியற அநுபவிக்கும்படி முகங்கொடுததுக்கொண்டு நிற்கிற நிலையும். "వానరాణాంనరాణాఞ్చ కథమాసీత్సమాగమః" "வாநராணாம்நராணாஞ்ச கதமாஸீத்ஸமாகமः" என்று - திருவடியைப் பிராட்டி, இங்கிதாகாரங்களறியாதே, குரங்குகளுக்கும் விலக்ஷணரான மநுஷ்யர்களுக்கும் கூட்டரவுண்டானபடி எங்ஙனே. [కథమాసీత్సమాగమః - கதமாஸீத்ஸமாகமः] தன்கடாக்ஷபாதமும் ஆபரணபாதமு முண்டென்றறியாதே நான் சேரவிட, பின்பு "தோழனீ" என்ன ப்ராப்தமாயிருக்க, நான்பிரிந்து இங்கே யிருக்கக் கூட்டரவுண்டானபடியென்னென்றுகேட்க; "రామసుగ్రీవయోరైక్యం దేవ్యేవంసమజాయత" "ராமஸுக்ரீவயோரைக்யம் தேவ்யேவம்ஸமஜாயத" என்று அவர்கள் சேர்ந்த ப்ரகார மறிந்திலேன், "అహంసర్వంకరిష్యామి" "அஹம் ஸர்வம்கரிஷ்யாமி" என்கிற இளையபெருமாளும் அருகே நிற்க அவர்பரிகரமான நான் இன்றுவந்து அந்தஃபுர பரிகரமாம்படி கூடினார்கள் என்றானிறே.

---

சந்திசெய்ய - கிட்டும்படி நின்றானென்னுதல்; ஆச்ரயியாநிற்கப் பராக்காய்நின்றானென்னுதல். முதற்பாட்டைக் கடாக்ஷித்து பரமபதத்தில்நின்றும் அடியொற்றுதல்; இரண்டாம்பாட்டைக் கடாக்ஷித்து ராமாவதாரத்திலே அடியொற்றுதல்.

நித்யஸூரிகள் திருமலையிலே நிற்கிற சீலவத்தையிலே யீடு பட்டுவந்து ஆச்ரயிக்க, குருடர்க்கு வைத்த தண்ணீர்ச்சாலையிலே விழிகண்ணர் புகுரலாமோவென்று, தான் ஆனைக்குப்பாடுவாரைப் போலே மந்திகள்பக்கலிலே திருவுள்ளத்தை வைத்தானென்று மாம்.

(அரங்கத்தரவினணையான்) அங்குநின்று மிங்கேசாய்ந்தபடி. பரமபதத்தினின்றும் அடியொற்றினான், திருமலையளவும் பயணமுண்டா யிருந்தது, அங்குநின்றும் வடக்குத் திருவாசலாலே கோயிலிலே சாய்ந்தான். ராமாவதாரத்திலேபிடித்து அடியொற்றினான், ராவணவதம்பண்ணித் தெற்குத்திருவாசலாலேவந்து சாய்ந்தவித்தனையாயிருந்ததென்றுமாம். (அரவினணையான்) திரிகிறவன் சாய்ந்தருளினால் உள்ளவழகு. (அரவு) நாற்றம், குளிர்த்தி, மென்மையும்.

---

(நின்றான்) நித்யஸூரிகள் திருமலையிலேநிற்கிற சீலவத்தையிலே யீடுபட்டுவந்தாச்ரயிக்க, குருடர்க்குவைத்த அறச்சாலையிலே மிளிர்கண்ணர் புகலாமோவென்று, தான் ஆனைக்குப்பாடுவாரைப் போலே மந்திகள்பக்கலிலே திருவுள்ளத்தை வைத்தானென்று மாம். "மங்குல்தோய்சென்னி வடவேங்கடத்தானைக், கங்குல் புகுந்தார்கள் காப்பணிவான், திங்கள், சடையேற வைத்தானும் தாமரைமே லானும், குடையேறத் தாங்குவித்துக் கொண்டு" என்கிறபடியே - ப்ரஹ்ம ருத்ராதிகள் ஸந்த்யாகாலங்களிலேவந்து ஸமாராதநம் பண்ணப் பெரியமேன்மையோடே நின்ற நிலையைச் சொல்லுகிறதாகவுமாம். (நின்றான்) இந்நிலையிலே ஒருத்யோக முண்டென்று தோற்றும்படிநின்றான். ஸூரிகள் அந்த வுத்யோகத்தை யடியொற்றினவாறே, வடக்குத்திருவாசலாலே வந்து புகுந்து, கோயிலிலே படுக்கையிலே சாய்ந்தவனாயிருந்தான், இவன் கிடக்கிறபடியைக்கண்டு, "நடந்தகால்கள் நொந்தவோ" என்றுவயிறு பிடிக்கவேண்டாதபடி, "நின்றிருந்து வெஃகணைக்கிடந்ததென்ன நீர்மை" என்கிறதிலே போரப்ரீதராய், இனி ஸம்ஸாரக்கிழங் கெடுத்தாலல்லது கிளபாவென்று மீண்டுபோனார்கள். "ఆస్తాంతే గుణరాశివద్గుణపరీవాహాత్మనాం జన్మనాం సఙ్ఖ్యాభౌమనికేతనేష్వపి కుటీకుఞ్జేషు రఙ్గేశ్వర। అర్చ్యస్సర్వసహిష్ణురర్చకపరాధీనాఖిలాత్మస్థితిః ప్రీణీషే హృదయాలుభిస్తవతతశ్శీలాజ్జడీభూయసే" "ஆஸ்தாந்தேகுணராசிவத்குணபரீவாஹாத்மநாம்ஜந்மநாம் ஸங்க்யாபௌமநிகேதநேஷ்வபிகுடீகுஞ்ஜேஷுரங்கேச்வர। அர்ச்யஸ்ஸர்வஸஹிஷ்ணுரர்ச்சகபராதீநாகிலாத்மஸ்திதிః ப்ரீணீஷேஹ்ருதயாலுபிஸ்தவததச்சீலாஜ்ஜடீபூயஸே."

(அரவினணையான்) புஷ்பஹாஸஸுகுமாரமான அவ்வடிக்குப் போராதபடி, காடுகளிலுங் கரைகளிலும் திருவடிகளைக்கொண்டுலாவினவிடாயெல்லாந்தீரும்படி, சைத்ய மார்த்தவ ஸௌரப்யங்களையுடைய திருவநந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளினான். (அரங்கத்தரவினணையான்) என்று - சீலத்தையும் மேன்மையையும் அழகையு மநுபவிக்கிறார்.

(அரங்கத்தரவினணையான்) [శేష్యేపురస్తాచ్ఛాలాయామ్ - சேஷ்யே புரஸ்தாச்சாலாயாம்] ஸ்ரீ பரதாழ்வானை வளைப்புக்கிடக்கவிட்டுப் போந்து கடற்கரையிலேவளைப்புக்கிடந்தாப்போலே ஸம்ஸாரிகளைப்பெற்றாலல்லது போகேனென்று வளைப்புக்கிடக்கிறான். சக்ரவர்த்தித்திருமகனைப்போலே முதலில்சரணம்புக்கு முகங்காட்டாவிட்டவாறே, "చాపమానయ" "சாபமாநய"என்று சீறுமவனல்லன், ஆற்றாமையைக்காட்டிச் சரணம்புக்குக்கிடக்குமவனிறே இவன். (அந்திபோல்நிறத்தாடையும்)ஸந்த்யாராகம்போலேயிருந்துள்ள திருப்பீதாம்பரமும். "அரைச்சிவந்தவாடை" என்றது பின்னாட்டுகிறபடி.

(அதன்மேல்) இவ்வழகினின்றும் கால்வாங்கமாட்டுகிறிலர். (அயனித்யாதி) சதுர்த்தசபுவநஸ்ரஷ்டாவான ப்ரஹ்மாவுக்கு உத்பத்திஸ்தாநமான திருநாபீகமலத்தின்மேலதன்றோ. சதுர்முகஸ்ரஷ்டிபூர்வகாலத்திலேயாயிருக்க,இப்போது ப்ரஹ்மாவுக்கு உத்பத்திஸ்தாநமென்றுகோள்சொல்லித்தாராநின்றது, திருநாபீகமலம்.

(அரங்கத்தரவினணையான்) "శేష్యేపురస్తాచ్ఛాలాయాంయావన్మే న ప్రసీదతి" "சேஷ்யேபுரஸ்தாச்சாலாயாம் யாவந்மேநப்ரஸீததி" என்று - ஸ்ரீபரதாழ்வானை வளைப்புக்கிடக்கவிட்டுப்போந்து கடற்கரையிலே வளைப்புக்கிடந்தாப்போலே, ஸம்ஸாரிகளைப்பெற்றாலல்லது போகேனென்று வளைப்புக்கிடக்கிறான். சக்ரவர்த்தித்திருமகனைப்போலே முதலிஸ்சரணம்புக்கு முகங்காட்டா விட்டவாறே, "చాపమానయ" "சாபமாநய" என்று சீறுமவரல்லர், ஆற்றாமையைக்காட்டி ஶரணம்புக்குக் கிடக்குமவர் இவர்.

(அந்திபோல் நிறத்தாடையும்) கீழ்ச்சொன்ன சிவந்தவாடை ஆபரணகோடியிலேயாய்க் கழற்றவுமாயிருக்கும்; இது ஸஹஜமென்கைக் குடலாக, "அந்திபோல் நிறத்தாடையும" என்கிறார். ஸந்த்யாராகரஞ்ஜிதமான மேகம்போலேயாய்த்துத் திருவரையும் திருப்பீதாம்பரமுமிருக்கிறபடி. திருமேனி மயிற்கழுத்துச சாயலாயிறே யிருப்பது. அத்தோடுசேர்ந்த திருப்பீதாம்பரம் ஸந்த்யாராக ரஞ்ஜிதமான காளமேகம்போலே ஆகர்ஷகமாயிறே யிருப்பது. * அரைச்சிவந்தவாடை பின்னாட்டுகிறபடியென்றுமாம்.

(அதன்மேல்) அவ்வழகுக்குமேலே. (அயனையித்யாதி) ஜகத்காரணபூதனாக ப்ரஸவித்தனை சதுர்முகனைத் தன்பக்கலிலே யுண்டாக்கி, அதடியாகவந்த மேன்மையாலுண்டான அத்விதீயமான வழகையுடைத்தாயாய்த்துத் திருநாபீகமலமிருப்பது. லோகத்தில் உத்பாதகருடைய வழகு ப்ரஸவாந்தமாயிருக்கும்; இவனை யுண்டாக்கினபின்பு ஒளியுமழகும் மிக்கதித்தனை. "యోబ్రహ్మాణంవిదధాతి-తం హదేవమ్" "யோப்ரஹ்மாணம் விததாதி-தம் ஹதேவம்" என்கிறபடியே-இவனை ஸ்ரஷ்டித்தபின்பிறே த்யோதமாநமாயிற்று.

(எழிலுந்தி) இளகிப்பதிக்கை. "ప్రసవాత్తుచ్ఛ్రయౌవనమ్" "பரஸவாந்தஞ்ச யௌவநம்" என்கிறபடியன்றிக்கேயிருக்கை.

(அடியேன்) "శేషం శేషస్య" "பதிம்விச்வஸ்ய" "యస్యాస్మి" "யஸ்யாஸ்மி" என்கிற ப்ரமாணத்தாலே அடியேன் என்கிறாரல்லர், அழகுக்குத்தோற்று "அடியேன்" என்கிறார். (அடியேனுள்ளத்தின்னுயிரோ) என்னுடையநற்சீவநமானது திருநாபீகமலத்ததன்றோ வென்கிறார்.

விடாமைக்குப்பற்றாசு; "மருடியேனும் விடேல்கண்டாய்" என்னுமாப்போலே. இப்பாட்டில் பெரிய பெருமாள் பக்கலிலே திருவேங்கடமுடையான்தன்மையுமுண்டென்கிறது. (௬)

---

(ஒழிலுந்தி) "సౌన్దర్యామృతసరిదురసిజః స్రోతస్య మధ్యావరుద్ధా స్థానాల్పత్వా ద్విషమగతిజావర్తగర్తాభనాభిః । ప్రాప్యప్రాప్తప్రథమజఘనం స్రస్తనాహస్తినాథస్రోతోభేదం భజతిభవతః పాదదేశాపదేశాత్" "ஸௌந்தர்யாம்ருதஸரிதுரஸிஜ ஸ்திர்யமத்யாவிருத்தாஸ்தாநால்பத்வாத் விஷமகதிஜாவர்த்தகர்த்தாபநாபி: | ப்ராப்யப்ராப்தப்ரதமஜகநம்விஸ்த்ர்தாஹஸ்திநாதஸ்ரோதேபேதம்பஜதிபவத:பாததேஶாபதேஶாத்" என்கிறபடியே-ஸௌந்தர்யமாகிற பெரியவாறானது, திருவடியாகிறமலைத்தலையினின்றும் அகன்றதிருமார்பாகிற தாழ்வரையிலேவந்து குதிகொண்டு, அங்கேபரந்துகீழ்நோக்கி யிழிந்து, இடை சிற்றிடையாகையாலே அங்கே யிட்டளப்பட்டு, பின்பு திருநாபியாய்ச்சுழியாறுபட்ட தென்னக்கடவதிறே.

(அடியேனுள்ளத்தின்னுயிரோ) அடியேனை வென்னுடைய அகவாயில்வர்த்திக்கிற ஹ்ருதயமானது. (உந்திமேலதன்றோ) அடியேன்என்று இப்போது இவர்ஸ்வரூபஜ்ஞாநம்பிறந்து, "శేషం శేషస్య" "యస్యాస్మి" "పరవానస్మి" "దాసభూతాః స్వతస్సర్వే హ్యాత్మానః పరమాత్మనః" "பதிம்விஶ்வஸ்ய" "யஸ்யாஸ்மி" "பரவாநஸ்மி" "தாஸபூதாஸ்ஸ்வதஸ்ஸர்வே ஹ்யாத்மாந:பரமாத்மந:" என்கிற ப்ரமாணங்களாலே "அடியேன்" என்கிறாரல்லர், * గుణైర్దాస్యముపాగతః குணைர்தாஸ்யமுபாகதராய்ச்சொல்லுகிறாருமன்று, அழகுக்குத்தோற்று"அடியேன்"என்கிறார். அதிலும் வடிவழகின் ஸாமாந்யத்தைப்பற்றச்சொல்லுகிற வார்த்தையுமன்று, ஓரவயவத்தினழகுக்குத்தோற்றுச்சொல்லுகிற வார்த்தை. "உயிர்" என்கிறது – மநஸ்ஸை. "ஊனில்வாழுயிர்" என்று கொண்டாடினாப்போலே, வடிவழகு தமக்கு ரஸித்து போக்யமாம்படி யிருக்கையாலே "இன்னுயிர்"என்கிறது. சிலரைஉண்டாக்குகிறதுகிடீர் என்னையழிக்கிறது.

---

உந்தியைப் பற்றாசாகப்பற்றினவிட முண்டோவென்ன; அருளிச்செய்கிறார் (மருடியேனுமித்யாதி.) ... ... (௬)

அந்தத்திருநாபீகமலம் அதிகாரிபுருஷர்களான ப்ரஹ்மாதிகளையுண்டாக்கும்; "அடியேன்" என்றிருப்பானை யழிக்கும். பிள்ளையழகிய மணவாளரரையர், பெருமாள்திருவடிகளிலே புக்கு, "நாயன்றே! அடியேன்திருவேங்கடமுடையானைத்திருவடித்தொழுது வரவேணுமென்று நினையாநின்றேன்" என்று விண்ணப்பஞ்செய்ய; "வாரீர்! அமலனுதிபிரானை யொருக்கால் இசைசொல்லிக் காணீர்" என்று திருவுள்ளமாக; பிள்ளையும் ஒருக்கால் இசையை விண்ணப்பஞ்செய்யக்கேட்டருளி, இனிப்போகிலும்போம், இருக்கிலு மிருமென்று திருவுள்ளமானார். முதலில் கண்படுவது திருநாபீகமலமிறே.

இப்பாட்டால் - பெரியபெருமாள்பக்கலிலே திருவேங்கடமுடையானதன்மையு முண்டென்கிறது. ... ... (க)

அ.—நாலாம்பாட்டு. திருநாபீகமலத்தோடே சேர்ந்த திருவுதரபந்தநத்தை யநுபவிக்கிறார். முதற்பாட்டிலே - ஜகத்காரணபூதனானவன், தம்முடைய அபேக்ஷாநிரபேக்ஷமாகத் தம்மை விஷயீகரித்து, தம்முடைய திருவுள்ளத்திலே திருவடிகள்தானே வந்து ப்ரகாசித்தபடியைச்சொன்னாராய், நிரபேக்ஷமாகச் செய்யக்கூடுமோ வென்கிற வபேக்ஷையிலே ஸோதாஹரணமாகச் சொல்லாநின்றுகொண்டு, தந்திருவுள்ளம் திருவரையும் திருப்பீதாம்பரமுமான சேர்த்தியிலே மேல்விழுந்து நசைபண்ணுகிறபடியைச் சொன்னார் - இரண்டாம்பாட்டில்; அவ்விரண்டாம்பாட்டிற் சொன்ன த்ரைவிக்ரமாபதாநம் ப்ரமாணோப பத்திகளாலே திருவேங்கடமுடையானுககே சேருமதன்றோ வென்கிற வபேக்ஷையிலே திருமலையில்நின்றும் திருவுலகளந்தருளினாரும் பெரியபெருமாளே யென்று கொண்டு, முதற்பாட்டில் "ஆதி" என்று சொன்ன வவனுடைய காரணத்வத்தைத் திருநாபீகமலத்திலே ப்ரஹ்மாவையுண்டாக்கி, அம்முகத்தாலே வெளியிடாநின்றுகொண்டு, அந்தத் திருநாபீகமலந்தான் திருப்பீதாம்பரத்திலே துவக்குண்கிற தந்திருவுள்ளத்தை ப்ரஹ்மோத்பாதகமான தன்மையையும் அழகையுங்காட்டித் தன்பக்கலிலே இழுத்துக்கொள்ள, அதிலே சுழியாறுபடுகிற படியையிறே மூன்றாம்பாட்டிற்சொல்லி நின்றது; தந்திருவுள்ளம் திருநாபீகமலத்திலே சுழியாறு படுகிறபடியைக்கண்டு, திருநாபீகமலத்துக்காச்ரயமான திருவயிறும், இந்தத் திருநாபீகமலத்துக்கு வெறும் ப்ரஹ்மா ஒருவனுக்கிருப்பிடமான மேன்மையும் அழகுமன்றோ வுள்ளது;

அ.—நாலாம்பாட்டு. திருநாபீகமலத்தோடே சேர்ந்த திருவுதரபந்தநத்தை யநுபவிக்கிறார்.

சதுரமாமதிள்சூழிலங்கைக்கிறைவன்றலைபத்
துதிரவோட்டியோர்வெங்கணையுய்த்தவனோதவண்ணன்
மதுரமாவண்டுபாடமாமயிலாடரங்கத்தம்மான்றிருவயிற்
றுதரபந்தநமென்னுள்ளத்துணின்றுலாகின்றதே. (ச)

ப-ரை.—சதுரம் - நற்சதுரமாய், மா-உயர்ந்திருக்கிற, மதிள்-மதிள்களாலே சூழப்பட்ட, இலங்கைக்கு - லங்காநகரத்துக்கு, இறைவன் - ராஜாவான ராவணனை, ஓட்டி-முதல்நாள் யுத்தத்திலே பின்னிட்டோடும்படி செய்து, பிறைநாளைப்பூசலிலே, தலைபத்து - அவனுடைய பத்துத்தலைகளும், உதிர-பனங்காய்கள்போலே யுதிரும்படி, ஓர் - அத்விதீயமாய், வெம் - க்ரூரமான, கணை-ப்ரஹ்மாஸ்த்ரத்தை, உய்த்தவன்-ப்ரயோகித்தவனாய், ஆச்ரிதவிரோதிபோகப் பெற்றோம் என்னும்ஹர்ஷத்தாலே, ஓதவண்ணன்-கடல்போலே குளிர்ந்த வடிவை யுடையனாய், வண்டு-வண்டுகளானவை, மதுரமா-இனிதாக, பாட-கானம் பண்ண, அதுக்குச்சேர்க்கபடி; மா - பெரிய சிறகையுடைய, மயில் - மயில்களானவை, ஆடு - நர்த்தநம்பண்ணுகிற, அரங்கத்து - கோயிலிலே கண்வளர்ந்தருளுகிற, அம்மான்-பரமசேஷியான அழகிய மணவாளனுடைய, திருவயிற்றுதரபந்தநம்-திருவயிற்றில் தரித்த வுதரபந்தநமானது, என்னுள்ளத்துள் - என்னெஞ்சிலே, நின்று-நிலைபெற்று, உலாகின்றதே - ஸஞ்சரியாநின்றதே! யென்று ஈடுபடுகிறார். (ச)

---

இதுக்காச்ரயமான நம்மைப்பார்த்தால், "త్రివిధచిదచిద్బృన్దం తన్త్వావలమ్బి వలిత్రయంవిగణయతివై శ్వర్యం వ్యాఖ్యాతి రఙ్గమహేశితుః ప్రణతవశతాం బ్రూతే దామోదరత్వకరకిణః తదుభయగుణాకృష్టం పట్టం కిలోదరబన్ధనమ్" "த்ரிவிதசிதசித்ப்ரப்ரதந்துந்தாவலம்பிவலித்ரயம்விதணயதிதவைச்வரயம்வ்யாக்யாதிரங்கமஹேசிது:பரணதவஶதாம்ப்ரூதேதாமோதரத்வகர: கிண: ததுபயகுணவிஷ்டம்பட்டம்கிலோதரபந்தநம்" என்கிறபடியே-பத்தமுக்தநித்யரூபமான த்ரிவிதசேதநர்க்கும், த்ரிகுணாத்மகமாயும் சுத்தஸத்வாத்மகமாயும், ஸத்வசூந்யமாயுமுள்ள அசேதநவர்க்கத்துக்கும் ஆச்ரயமான மேன்மையையும், ஆச்ரித்ர்க்குக்கட்டவுமடிக்கவுமாம்படி எளியோமான ஸௌலப்ய நீர்மையையுமுடையோமானவேற்றத்தாலேபட்டங்கட்டியன்றோநாமிருப்பதென்று, தனக்குத் திருநாபீகமலத்திலுண்டான வேற்றத்தைக்காட்டி, திருநாபீகமலத்திலே ஆழங்கால் படுகிற வென்னெஞ்சைத் தன்பக்கலிலே வர விசிக்க, அத்திருவயிற்றை யாச்ரயமாகப் பற்றிநிற்கிற திருவுதரபந்தநம் தன்பக்கலிலே வரவீர்த்து மேலிட்டுநின்று தந் திருவுள்ளத்திலே ஸ்வைர ஸஞ்சாரம்பண்ணுகிறபடியைச் சொல்லுகிறார். ... ... ... ... ... *

வ்யா.—(சதுரமாமதிளித்யாதி) கட்டளைப்பட்டிருக்கை.

---

வ்யா.—(சதுரமாமதிள்சூழ் லங்கைக்கிறைவன் தலைபத்துதிர வோட்டியோர் வெங்கணையுய்த்தவன்) இரண்டாம்பாட்டில் உக்தமான அபதாநங்களிரண்டில் பூர்வாபதாநத்தைப் பற்ற ஓரபேக்ஷையோடே அதுக்குத்தரம் சொல்லிற்றாய், மூன்றாம்பாட்டில் முற்கூறு, அதிலே அநந்தராபதாநத்தைப்பற்ற ஓரபேக்ஷையோடே அதுக்குஉத்தரமாயிருக்கிறது இதில் முற்கூறு. "அன்று நேர்ந்த நிசாசரரைக்-கவர்ந்த வெங்கணைக்காகுத்தன்" என்று-ஜநஸ்தாநத்திலே பெருமாளும் பிராட்டியும் இளையபெருமாளுமாய்ப் போய்ப் புக்கு, அங்குத்தைரிஷிகளை "ఆవాసస్త్వహమిచ్ఛామి" "ஆவாஸந்த்வஹமிச்சாமி" என்றபேக்ஷித்து, அவர்களநுமதியோடேயிருக்கிற காலத்திலே அவ்விருப்புக்கு விரோதிகளாய்வந்த ஜநஸ்தாந வாஸிகளான கராதிகளை நிரஸித்தாப்போலே, உம்முடைய ஹ்ருதயத்திலு மிருப்பேனென் றநுமதிபெற்றுவந்து புகுந்து, அங்கு விரோதிகளான ராகாதிகளை நிரஸித்தானென்றுசொன்னீர்; அந்தராகாதிகளாகிற சப்தாதி விஷய ப்ராவண்யமடியாக வருவதொன்று, அந்தப்ராவண்யந்தனக்கடி அஹங்காரமமகாரங்களாகிறமதிளையிட்டுக்கொண்டு நவத்வாரமானபுரத்திலேவர்த்திக்கிற "ఇన్ద్రియాణాం హి చరతాం యన్మనోఽనువిధీయతే" "இந்த்ரியாணாம்ஹிசரதாம்யந்மநோநுவிதீயதே" என்கிறபடியே சக்ஷுராதி கரணங்களோடே கூடினமநஸ்ஸன்றே, இந்தத் * திமனங்கெட்டாலன்றோராகாதிகள்போவது, அவை போனாலன்றோ அவன், "பேரேன்" என்றிருப்பது; அதுகிடக்கிடீர், அவன்றானே வந்து மேல்விழுந்து கிடக்கச்செய்தே, "சென்றதாமென சிந்தனை" என்றும், "உந்திமேலதன்றோ வடியேனுள்ளத்தின்னுயிர்" என்றும்உம்முடைய திருவுள்ளந்தானே மேல்விழாநின்றதென்று சொன்னீர், இது இப்படி மேல்விழும்போது அவ்வரணழிந்ததாகவேணும, அழிந்ததாரானொன்ன; அந்தஜநஸ்தாநவாஸிகளானகராதிகளுக்குக் குடியிருப்பாய் அரணோடேகூடின லங்கையை, ராவணனை யழிப்பதற்கு முன்னே, "నేయమస్తి పురీ లఙ్కా" "நேயமஸ்திபுரீ லங்கா" என்கிறபடியே அஸத்கல்பமாக்கி இவர்களுக்கதிஷ்டாந பூதனான ராவணனையும் ஸபரிகரமாக ஓரம்பாலேயுருட்டின சக்ரவர்த்தித்திருமகனே யிவ்வரணை யழித்து மநோராஜநீசரரை விவேக சரஜாலத்தாலே சமிப்பித்தானென்கிறார்.

(சதுரமாமதிள்சூழ்) சதுரச்ரமாய்க்கட்டளைப்பட்டு அரணாகப்போரும்படி ஓக்கத்தை யுடைத்தான மதிள்களாலே சூழப்பட்டிருக்கும். கட்டளைப்பட்டிருக்கையாகிறது - "வேலைசூழ்வெற்பெடுத்தவிஞ்சி சூழிலங்கை" என்கிறபடியே கடலைஅகிழாக வுடைத்தாய், அநந்தரம் காடாய்பர்வதமாய்அதின்மேலேமதிளாயிறேயிருப்பது.

---

நாலாம்பாட்டு. கட்டளைப்பாடு- துர்க்கசவரணையோடே கூடியிருக்கை;

(மாமதிள்) துர்க்கத்ரயம். "ஈச்வரன்" என்றறியச்செய்தே எதிர்க்கப்பண்ணின மதிள். (இலங்கைக்கிறைவன்) முழுஞ்சிலே ஸிம்ஹங்கிடந்ததென்னுமாப்போலே. "లఙ్కాం రావణపాలితామ్" "லங்காம்ராவணபாலிதாம்."

(இலங்கைக் கிறைவன்) ஸர்வேச்வரன் ஸ்ரீவைகுண்டத்தைக் கலவிருக்கையாகக்கொண்டுதிரிந்தாப்போலேகாணும் இவனும் இலங்கைக்கு ஈச்வரனென்றிருந்தபடி.

---

(மாமதிள) சந்த்ராதித்யர்களும்பின்னாட்டியேவரும்படியான ஓக்கத்தையுடைத்து. "భీషోదేతి" "பீஷோதேதி"என்னும்படியிறே யிருப்பது. ஈச்வரனோடெதிர்க்கவுமெதிரிடப்பண்ணினமதிளிறே. இவ்வழகையுமரணையும் விச்வஸித்திறே பையல், பெருமாளோடே யெதிரிட்டது. இது தானிட்ட மதிளென்றறிந்திலன். அரணுக்குள்ளே யிருக்கச்செய்தே பெருமாளோடே யெதிர்க்கையாலே இதுதான் அழிக்கைக்குடலாய்த்து; அவ்வரணைவிட்டுப் பெருமாள்தோளையே யரணாகப்பற்றின ஸ்ரீவிபீஷணாழ்வான் "ఖస్థఏవ వ్యతిష్ఠత" "கஸ்தஏவவ்யதிஷ்டத" என்று-ஆகாசத்திலே நிலைபெற்று நின்றானிறே.

(இலங்கை) குளவிக்கூடுபோலே பிறரை நலிந்துபுக்கு ஒதுங்குமிடம். ஸத்துக்களுக்கு ப்ரவேசிக்கவொண்ணாதபடி யிருக்கும் அரணும் மதிளுமென்கை. "ఇహసన్తో నవాసన్తి సతో వా నానువర్తసే। తథాహి విపరీతా తే బుద్ధిరాచారవర్జితా" "இஹஸந்தோநவாஸந்திஸதோவாநாநுவர்த்தஸே। ததாஹிவிபரீதாதே புத்திராசாரவர்ஜிதா." "సతో వా నానువర్తసే" "ஸதோவாநாநுவர்த்தஸே" என்னவே, "ఇహసన్తో నవాసన్తి" "இஹஸந்தோநவாஸந்தி" என்னுமர்த்தம் சொல்லிற்றாயிறே யிருப்பது, ஆனால் இது சொல்லிறதென்னென்னில்; மனக்கேடரில்லாமையோ, நீ உனக்கில்லாமையோவென்கை. நல்வார்த்தை சொல்லுவானொருவனுண்டாக, "త్వాన్తు ధిక్ కులపాంసనమ్" "த்வாந்துதிக்குலபாம்ஸநம்" என்று புறப்படவிட்டானிறே. * கல்லாதவரிலங்கையிறே.

திருவடிவர ராக்ஷஸர் வருவதற்கு முன்னே லங்கையிறே கண்டெடுத்தது. ஒருகைம்பெண்டாட்டிக்கும் அடைத்துக்கொண்டிருக்கலாம்படியிறே ஊருமரணுமிருப்பது. (இலங்கைக் கிறைவன்) "முழுஞ்சிலே ஸிம்ஹம்கிடந்தது" என்னுமாப்போலே. அதுக்குமேலே "లఙ్కాం రావణపాలితామ్" "லங்காம்ராவணபாலிதாம்" என்கிறபடியேபுலிகிடந்ததூறென்று அஞ்சுமாப்போலேஅஞ்சவேண்டும்படியிறே இதுக்கு நிர்வாஹகனான ராவணன்படி. (இறைவன்) ஸர்வேச்வரன் ஸ்ரீவைகுண்டத்தைக் கலவிருக்கையாகக்கொண்டு வீற்றிருந்தாப்போலே காணும் தானும் லங்கைக்கு ஈச்வரனென்றிருந்தபடி.

---

கிரிதுர்க்கம், வநதுர்க்கம், ஜலதுர்க்கம் ஆக துர்க்கத்ரயம்.

விரக்தனான திருவடியுங்கூட மதித்த ஐச்வர்யமிறே. "యస్య ధర్మోనబలవాన్ స్యాదయం రాక్షసేశ్వరః। స్యాదయం సురలోకస్య శక్రస్యాపి చరక్షితా" "யத்யதர்மோநபலவாந்ஸ்யாதயம்ராக்ஷஸேஶ்வர:।ஸ்யாதயம்ஸுர லோகஸ்யஶக்ரஸ்யாபிசரக்ஷிதா" என்றானிறே. யாவனொருவனுக் காக இவனை யழியச்செய்ய நினைக்கிறார், அவன்றன்னையே இவனுக் குக் காவலாக வைப்பர்கிடீர் அல்பமநுகூலித்தானாகில்.

(தலைபத்துதிர) பனங்குலை யுதிர்த்தாப்போலே யுதிர. அற க்கவறுக்க முளைத்த சடக்கு. (ஓட்டி) அநுகூலிக்குமாகில் அழி யச்செய்யவேண்டாவிறேயென்று பூசலிலே இளைப்பித்து விட்ட படி; "గచ్ఛానుజానామి" "கச்சாநுஜாநாமி" என்கிறபடியே.

(ஓர் வெங்கணையுய்த்தவன்) பிற்றைநாளைப்பூசலிலே ஜயாப ஜயங்கள வ்யவஸ்திதமன்றோவென்று ப்ரஹ்மாதிகள் கருதின வாறே, அத்தலைக்கு வேர்ப்பற்றான நெஞ்சிலே அத்விதீயமான ப்ரஹ்மாஸ்த்ரத்தை விட்டவன். அவனை ப்ராதிகூல்யத்தில் நின்றா னென்று அறிந்தபின்பு ப்ரஹ்மாஸ்த்ரத்தை விட்டபடி.

---

விரக்தனான திருவடியுங்கூட மதித்தஐச்வர்யமிறே. "యస్యధర్మోనబలవాన్ స్యాదయం రాక్షసేశ్వరః। స్యాదయం సుర లోకస్య శక్రస్యాపి చరక్షితా" "யத்யதர்மோநபலவாந் ஸ்யாதயம் ராக்ஷஸேஶ்வர:। ஸ்யாதயம் ஸுரலோகஸ்யஶக்ரஸ்யாபிசரக்ஷிதா." (இறைவன்) துர்வர்க்கங்க ளடையவொதுங்க நிழலாயிருக்குமவன். ஒருவன் ஸாத்விகனானால் அவன் பக்கலிலே ஸத்துக்களடைய வொதுங்குமிறே; அப்படியி றே எதிர்த்தலையும். யாவனொருவனைச் செய்ய நினைக்கிறார், அவன் தன்னையே யவ்வரனுக்குக் காவலாகவைப்பர்கிடீர் அல்பமநு கூலித்தானாகில்; தாயையும் தமப்பனையுஞ்சேரவிருக்கவொட்டாதே பிரித்த பையலிறே யிவன். "తేనసీతా జనస్థానాత్ హృతా హత్వా జటాయుషమ్" "தேநஸீதாஜநஸ்தாநாத்ருதாஹத்வாஜடாயுஷம்." ஹரணத்துக் கு பரிஹாரமுண்டு, ஹநநத்துக்கு பரிஹாரமில்லையிறே. இவர் திரு வுள்ளமும் பரிஹாரமில்லையென்று புண்பட்டிருக்குமிறேயிது.

(தலைபத்துதிரவோட்டி) இப்படி பகவதபசார பாகவதாபசா ராஸஹ்யாபசாரங்களுக்கு எல்லை நிலமான பையலுடைய வரபல த்தாலே பூண்கட்டின தலைகளைப் பனம்பழங்களைக் காற்றுதிர்க்கு மாப்போலே, முளைக்கிற தலைகள் விழுகிற தலைகளைக்காணும்படிநே டும்போது லீலாரஸமநுபவிக்க, இத்தைக்கண்டதேவர்கள் இங்ங னே முடிய நடத்துமாகிற் செய்வதென்" என்று அஞ்ச;இவனைக் கொல்லவென்றுவைத்த வம்புதன்னை வாங்கி உதிரும்படியாக ஓட் டி. அநுகூலிக்குமவன் பதிகூலித்தாற்சொல்லவேண்டாவிறே. பூசலிலே யிளைப்பித்துவைத்து ஓடவடித்தபடி; "గచ్ఛానుజానామి" "கச்சாநுஜாநாமி" என்கிறபடியே.

(ஓர் வெங்கணை யுய்த்தவன்) அமோகமாயிருக்கையும், நிரஸி த்தல்லது மீளாதிருக்கையும். (உய்த்தவன்) ப்ரயோகித்தவன்.

(ஓதவண்ணன்) ராவணவதம்பண்ணி ஸ்ரீவிபீஷணாழ்வானுக்கு முடிகொடுத்து க்ருதக்ருத்யனாய், ப்ரஹ்மாதிகள் புஷ்பவர்ஷ்டியும் ஸ்தோத்ரமும்பண்ணி வீரஸ்ரீதோற்ற ச்ரமஹரமானவடிவோடே நின்றநிலை.

(மதுரமாவண்டுபாட) வினையற்றவாறே ஆடல் பாடலுக்கு இடங்கொடுத்தபடி. சிலர் பாடினால் ஆடுவாரும் வேணுமே, மயில்கள் ஆடப்புக்கன. (மாமயில்) ஒருமயில் தோகைவிரித்தால் திருச்சோலைக்கு அணுக்கனிட்டாப்போலிருக்கை. ரிஷிகள் கொண்டைக்கோல்கொண்டாடுகைதவிர்ந்து மயில்கள் ஆடப்புக்கது. குரங்குகள்கூத்தாட்டாதல்; இவைகள்கூத்தாட்டாதல். என்றும் திர்யயோநிகளுக்கு நிலமாகை. (வண்டுபாட மாமயிலாட) ஸ்ரீவைகுண்டநாதன் பெருமாளானவாறே நித்யஸூரிகளும், வண்டும் மாமயில்களுமானபடி. "సర్వైః పరివృతో దేవైః వానరత్వముపాగతైః" "ஸர்வைஃ பரிவ்ர்தோதேவைஃவாநரத்வமுபாகதைஃ" என்னக்கடவதிறே. ராஜாவெள்ளைச்சட்டையிட்டால் அடியார் கறுப்புச்சட்டையிடுமித்தனையிறே.

---

மற்றைநாளைப்பூசலிலேஜயாபஜயங்கள் அவ்யவஸ்திதமன்றோ வென்று ப்ரஹ்மாதிகள் கருதினவாறே, அத்தலைகளுக்கு வேர்ப்பற்றான நெஞ்சிலே அத்விதீயமான ப்ரஹ்மாஸ்த்ரத்தை விட்டவன். அவன் ப்ராதிகூல்யத்திலே முதிரநின்றானென்றறிந்தபின்பு ப்ரஹ்மாஸ்த்ரத்தை விட்டபடி.

(ஓதவண்ணன்) ராவணவதாநந்தரம் மஹாராஜப்ரப்ருதிகளுடைய யுத்தச்ரமமடையப்போம்படி யொருகடற்கரையிலே நின்றாப்போலே யிருக்கை. ராவணனை நிரஸித்தானிதத்தனைபோக்கி, லங்கையி லொன்றும குறியழியாமல் லங்கைச்வாயமடையத் தன்னதாக்கினானிறே. அத்தை விபீஷணவிதேயமாக்கின ஔதார்யத்துக்கு, உதாரஸ்வபாவமான கடல்போலே யிருந்துள்ள ஸ்வபாவத்தை யுடையவனென்று, "ஓதவண்ணன்" என்கிறாராகவுமாம். அன்றிக்கே, "ஓதவண்ணன்" என்று-பெரியபெருமாளைச்சொல்லுகிறதாகவுமாம். இத்தால் - ப்ரதிகூலனை அம்பாலே யழிக்கும, அநுகூலனை யழகாலே யழிக்குமென்கை.

(மதுரமாவண்டுபாட மாமயிலாடரங்கத்தம்மான்) வினையற்றவாறேயாடல்பாடலுக் கிடங்கொடுத்தபடி. சிலர் பாடப்புக்கால் ஆடுவாரும் வேணுமிறே. மயில்களாடப்புக்கன. (மாமயில்) ஒருமயில்தோகைவிரித்தால்திருச்சோலைக்குஅணுக்கனிட்டாப்போலே யிருக்கை. "மாதலிதேர்முன்புகோல்கோள்ள — தொடுத்ததலைவன் வரவெங்குங்காணேன்" என்றுஎன்னோட்டையாளொருத்தியுடையவிரோதியானராவணனுடைய "தாய்தலையற்றற்று வீழும்படி சரவர்ஷத்தை யுண்டாக்கின அந்தவீரன் என்னுடைய விரோதியையும் போக்கிக் கொடுவரக்காண்கிறிலேனென்றுகண்மறையப் பார்த்துக்கொண்டிருந்தாளிறே ஒருத்தி.

---

அவன் மநுஷ்யனானால் இவர்கள் திர்யக்காகவேண்டுவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (ராஜாஇத்யாதி.)

(அரங்கத்தம்மான்) பெரியகோயிலிலேகண்வளர்கிறபாமசே ஷியுடைய. (திருவயிற்றுதரபந்தம்) ஆபரணத்துக்காபரணம். பெற்றவயிற்றுக்குப் பட்டங்கட்டினபடி. (என்னுள்ளத்துள் நின் றுலாகின்றதே) என்னெஞ்சினுள்ளே அழகுசெண்டேறுகின்றது. * நெஞ்ச நாடிறே; அகல நின்றாலும் பசையில்லை. இப்பாட்டில் - தசரதாத்மஜன்படியும் இங்கேயுண்டென்கிறார். (௬)

---

அப்படியிருக்கவேண்டாதபடி, "செருவிலே யரக்கர்கோனைச் செற்றநஞ்சேவகனர் மருவியபெரியகோயில்" என்கிறபடியே அந் தச்சேவகனர்தாமே ராவணவதாநந்தரம் அந்த யுத்தச்ரமமாறும் படி தெற்குத் திருவாசலாலேபுகுந்து கோயிலிலே சாய்ந்தருளி னர். கோயிலிற்சோலைகள் நித்யவஸந்தமாய் "மதுஸ்பீத மாயிருக் கையாலே, அந்தமதுவைக் கழுத்தேகட்டளையாகப் பாநம்பண் ணி, அந்த ஹர்ஷத்துக்குப் போக்குவீடாக வண்டுகளானவை கலவியால் வரும் அருமையில்லாமையாலே பாட்டுடைய மதுர மாம்படியாக "தென்னுதெனு" என்றுமுரலாநிற்க, சிந்துக்கா டுவாரைப்போலே, ச்லாகயமான மயில்களானவை, இவ்வூரிற் சோலை * கொண்டன்மீதணவுஞ் சோலையாகையாலே ஆலித்தாடா நிற்கும். இவ்வூரில்வர்த்திக்கு மவர்களுக்கு ஸாரஸ்யமும் செருக்கு மேயாயிருக்கு மித்தனை. பரவஸ்தனைபோது நித்யமுக்தரும் தன் னையநுபவித்து, "ஹாஉவு ஹாஉவு ஹாஉவு" "ஹாஂவு ஹாஂவு ஹாஂவு" என் றுகளிப்பார்கள். அவதீர்ணனைபோது "गायन्ति केचित्-नृत्यन्ति केचित्" "காயந்திகேசித்-ந்ர்த்யந்திகேசித்" என்றுமுதலிகள் ஆடுவதுபாடுவ தாவர்கள். அர்ச்சாரூபியாகக் கோயிலிலே கண்வளர்ந்தருளப் புக்கவாறே, வண்டுகளும் மயில்களும் பாடுவதாடுவ தாகாநிற்கும். ராஜா வெள்ளைச்சட்டையிட்டால் அடியார் கறுப்புச்சட்டையிடு மித்தனையிறே.

(அரங்கத்தம்மான்) ஸம்ஸாரிகளுக்காகக் கோயிலிலே சாய்ந் தருளி, தன்னுடைய ஸ்வாமித்வத்தை யுதறிப்படுத்தவனுடைய. அங்ஙனன்றிக்கே, "அம்மான்" என்று-ஸௌலப்யகாஷ்டையால் வந்த மஹத்தையைச் சொல்லுகிறாராகவுமாம். (திருவயிற்று தரபந்தம்) பண்டே திருவயிறுதான, "சிற்றிடையும்" என்கிற படியே வெறும்புறத்திலே ஆலத்தி வழிக்க வேண்டும்படியாயாய்த் திருப்பது; அதுக்கு மேலேயிறே * ஆபரணஸ்யா பரணமான திரு வுதரபந்தம். பெற்றவயிற்றுக்குப் பட்டங்கட்டினபடி. (என் னுள்ளத்துள்நின்றுலாகின்றதே) அந்தத்திருப்பீதாம்பரத்திலுஞ் செல்ல வொட்டாதே திருநாபீகமலத்தி னின்றும் வரவீர்த்து, இதுக்காச்ரயமான திருவயிற்றிலும் போகவொட்டாதே தான் மேல்விழுந்துரக்ஷித்து தன்னேற்றமடையத் தோற்றும்படி, மத்த கஜம்போலே செருக்காலே பிசுகிநின் றுலாவாநின்றது.

---

பெற்றவயிறு – அயனைப்படைத்தது. (அகலநின்றாலும்) தாம் அகலநிலமில்லை; அங்கும் வந்து ஸஞ்சரிக்குமென்றபடி.

"విశ్వస్యాయతనంమహత్" "விஶ்வஸ்யாயதநம்மஹத்" என்றும், "நெஞ்சநாடு" என்றுஞ் சொல்லுகிறபடியே - என்னுடைய பெரிய ஹ்ருதயத்திலேநின்று அழகுசெண்டேறாநின்றது. (௪)

அஞ்சாம்பாட்டு.—எனக்குப் பற்றாசான பெரியபிராட்டியாருடனே * திருவாரமார்பானது என்னை ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யத்தைக் கொண்டதென்கிறார். மூன்றாம்பாட்டிலே - திருநாபிகமலம் ப்ரஹ்மாவை தரித்துக்கொண்டிருக்கிற தனமதிப்பையும் அழகையுங் காட்டி, தம்முடைய திருவுள்ளத்தைத்திருப்பீதாம்பரத்தினின்றும் தன்பக்கலிலே யிழுத்துக்கொள்ள, அங்கே அது சுழியாறுபட்டபடி யிறே சொல்லிறறு; கீழ்ப்பாட்டில் - இத்தைக கண்ட திருவயிறானது ஸகல சேதநாசேதநங்களையும் தானே தரித்துக்கொண்டிருக்கிற மதிப்பையும், யசோதைப்பிராட்டி கட்டக் கட்டுண்ட தழும்பைக்காட்டி, தன்னுடைய ஸௌலப்யத்தையும் சிற்றிடையான வழகையுங்காட்டி, அத்திருநாபீகமலத்தினின்றுந் திருவுள்ளத்தைத் தன்பக்கலிலே யிசிக்க, அங்குப்போகவொட்டாதே அப்படிக்குப் பட்டங்கட்டி யிருக்கிறாப்போலே யிருக்கிற திருவுதர பந்தநம் மேலிட்டுநின்று ஸ்வைர ஸஞ்சாரம் பண்ணுகிறபடியையிறே சொல்லிற்று; அந்தத் திருவயிற்றுக்கு ஒரு காலவிசேஷத்திலே காதாசிதகமாக ஸகலாண்டங்களையும் வைத்தத்தாலுண்டான மதிப்பும் ஒருக்கால் யசோதைப்பிராட்டி கட்டஅத்தால்வந்த ஸௌலப்யமுமிறே யிருப்பது; அப்படியன்றே திருமார்பு;-"శ్రీవత్ససంస్థానధరమనన్తేచసమాశ్రితమ్-ప్రధానమ్" "ஸ்ரீவத்ஸஸம்ஸ்தாநதரமநந்தேசஸமாஶ்ரிதம்-ப்ரதாநம்" என்றும், "ఆత్మానమస్యజగతో నిర్లేపమగుణామలమ్। బిభర్తికౌస్తుభమణింస్వరూపంభగవాన్హరిః" "ஆத்மாநமஸ்யஜகதோ நிர்லேபமகுணாமலம் । பிபர்த்திகௌஸ்துபமணிம் ஸ்வரூபம்பகவாந்ஹரி:" என்றுஞ் சொல்லுகிறபடியே - ஸர்வகாலமும் சேதநாசேதநங்களை ஸ்ரீவத்ஸ கௌஸ்துப முகத்தாலே தரித்துக்கொண்டிருக்கிற பெரியமதிப்பையும், அவனுடைய ஸ்வரூபாதிகளுக்கு நிரூபகபூதையாய் நீர்மைக்கெல்லைநிலமாயிருக்கிற பெரியபிராட்டியாருக்குக் கோயிற்கட்டணமாயிருக்கிற வேற்றத்தையும், உபயவிபூதி நாதனென்றிட்ட தனிமாலையை தரித்துக்கொண்டிருக்கிற ஆகாரத்தையு முடைத்தாய், "அக்குவடமுடுத்தாமைத்தாலிபூண்ட வநந்தசயநன்" என்கிறபடியே-யசோதைப்பிராட்டி பூட்டின ஆபரணங்களையுமுடைத்தாயிறேயிருப்பது. ஆகையாலே அந்தத் திருமார்பானது திருவயிற்றிற்காட்டில் தனக்குண்டான ஆதிக்யத்தையும் ஸௌலப்யத்தையும் திருவாரமுள்ளிட்ட ஆபரணச்சேர்த்தியால்வந்தவழகையு முடையோம் நாமன்றோ, ஆனபின்பு பேர்கலமானநமக்குச் சிற்றிடையானதான் நிகரோவென்று

அ.—அஞ்சாம்பாட்டு. எனக்குப் பற்றுசான பெரிய பிராட்டியாரிருக்கிற திருமார்புகிடீர், என்னை ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யங்கொண்டதென்கிறார்.

பாரமாயபழவினைபற்றறுத்தென்னைத்தன்
வாரமாக்கிவைத்தான்வைத்ததன்றியென்னுள்புகுந்தான்
கோரமாதவஞ்செய்தனன்கொலறியேனரங்கத்தம்மான்திரு
வாரமார்பதன்றோவடியேனையாட்கொண்டதே. (ரு)

ப-ரை.—பாரமாய-மிகவும் பாரமாய், பழவினை - அநாதிகாலார்ஜிதமான பாபங்களை, பற்றறுத்து - ஸவாஸநமாகப் போக்கி, என்னை - பாபங்களுக்கு ஆகரமான வென்னை, தன் - தன்விஷயத்திலே, வாரமாக்கி வைத்தான் - பக்ஷபதிக்கும்படி பண்ணினான்; வைத்ததன்றி - அப்படி பக்ஷபதிக்கும்படி வைத்ததுக்கு மேலே, என்னுள் - என்ஹ்ருதயத்திலே, புகுந்தான் - ப்ரவேசித்தான்; இப்படி புகுருகைக் கடியாக, கோரம் - இந்த்ரியங்களை வருத்திச் செய்யத்தக்க, மாதவம் செய்தனன் கொல்-மஹா தபஸ்ஸைப்பண்ணினேனோ, அறியேன்-அறிகிறிலேன; அரங்கத்து - கோயிலிலே கண்வளர்ந்தருளுகிற, அம்மான் - ஸர்வஸ்வாமியான அழகிய மணவாளனுடைய, திரு - பெரியபிராட்டியாரையும், ஆரம் - முக்தாஹாரத்தையு முடைத்தான, மார்பதன்றோ - திருமார்பன்றோ, அடியேனை - அழகிலேயமிழ்ந்தவென்னை, ஆள்கொண்டது - அடிமைகொண்டதென்கிறார். (ரு)

வ்யா.—(பாரமாய)ஸர்வசக்தியான ஸர்வேச்வரனே தள்ளுமிடத்திலும் ஒருநிலைநின்றுதள்ளவேண்டும்படி யிருக்கை;ஸம்ஹரிப்பதும் நரகத்திலேயாய் ஸ்ர்ஷ்டிப்பதும் நரகத்திலே யாயிருக்கை.

---

தன்னிறுமாப்பைக் காட்டி, அத்திருவுதர பந்தநத்தினின்றுந் தன்பக்கலிலே யிசித்துக்கொள்ள, தம்முடைய நெஞ்சளவன்றிக்கே கரணியானதம்மையும் ஸ்வரூபஜ்ஞாநாதிகளைப் பிறப்பித்து அடிமைகொண்டபடியைச் சொல்லுகிறார்.

வ்யா.—(பாரமாய பழவினைபற்றறுத் தென்னைத் தன்வாரமாக்கிவைத்தான்) கீழ்ப்பாட்டிலே - ராகாதிதோஷங்களுக்கு அந்தர்ப்பூதமான * மநோரஜநீசரனைப் பெரியபெருமாள் கொடுத்த விவேகசரஜாலத்தாலே சமிப்பித்தபடியிறே சொல்லிற்று; அதிலே ஓரபேக்ஷையோட அதுக்கு உத்தரமாயிருக்கிறது - இப்பாட்டு. அவர் தந்த விவேகசரஜாலத்தாலே மநோரஜ நீசரனை வென்றோமென்றீர், அந்த விவேகஜ்ஞாநமாகிறது, "సత్త్వాత్సంజాయతే జ్ఞానమ్" "ஸத்வாத்ஸஞ்ஜாயதேஜ்ஞாநம்" என்கிறபடியே ஸத்வாபிவ்ருத்தியாலே யுண்டாமதின்றோ, அந்த ஸத்வந்தான் ரஜஸ்தமஸ்ஸுக்கள் தலைசாய்ந்தால் பிறக்குமதே, அந்த ரஜஸ்தமஸ்ஸுக்கள்தான் "[illegible]""கர்மவஶ்யாகுணஹ்யேதே" என்கிறபடியே

---

அஞ்சாம்பாட்டு. (பாரமாய) வினையினுடைய பாஹுள்யமாதல்; க்ரௌர்யமாதல்: இவற்றை வாக்யத்வயத்தாலே அருளிச்செய்கிறார் (ஸர்வஶக்தீத்யாதி.)

(பழவினை)காலமநாதி,ஆத்மாவோநித்யன்,அசித்ஸம்ஸர்க்கமு மனாதியென்றிறே.

---

கர்மவச்யங்களாயன்றோ விருப்பது, அப்படியிருக்கிற கர்மங் கள்தான், "ధర్మేణపాపమపనుదతి" "தர்மேணபாபமபநுததி" என்கிற படியே - நிவர்த்திகர்மாநுஷ்டாநத்தாலே போக்குமவையன்றோ, அந்தக் கர்மாநுஷ்டாநத்துக்கு யோக்யமான ஜந்மமே பிடித்தில் லாத வுமக்கு அந்த துஷ்கர்மங்கள் போனபடி யென்னென்ன; அநுஷ்டேயமான ஸாத்யகர்மங்களாலே போக்கிலன்றோ யோக்ய தையே பிடித்தின்றியிலே யொழிவது, "కృష్ణంధర్మంసనాతనమ్" "రామో విగ్రహవాన్ ధర్మః" "க்ர்ஷ்ணம்தர்மம்ஸநாதநம்" "ராமோவிக்ரஹ வாந்தர்ம:" "அறஞ்சுவராகிநின்றவரங்கனார்" என்கிறபடியே. ஸித்தஸ்வரூபனான வவன்றானே கைதொடானாய்ப் போக்கினா னென்கிறார்.

(பாரமாய) "வானக்கோனைக் கவிசொல்ல வல்லேன்" என் கிறபடியே * மலக்குநாவுடைய நம்மாழ்வாரும் வகைசொல்லமாட் டாதே," தொன்மாவல்வினைத்தொடர்" என்று திரளச்சொன்னாப் போலே, இவரும் "பாரமாய" என்கிறார். கர்மத்தினுடைய கனத் தினாலே அல்பசக்திகனான தான், ஸம்பாதித்ததா யிருக்கச்செய்தே யும் வகைசொல்லப்போகாதபடியா யிறே யிருப்பது. ஸர்வசக்தி யான அவன் போக்கும்போதும் வகையில் போக்கப்போகாது, தொகையில் போக்குமித்தனை. வகையாவன - தான்சதுர்வித தே ஹப்ரவேசத்துக்கு ஹேதுவாயிருப்பனவும் பரிக்ரஹதேஹத்திலே பிறக்கிற ருசிக்கு அடியாயிருப்பனவும், விஷயப்ராவண்யத்துக்கு அடியாயிருப்பனவும், தேவதாந்தரங்களுக்கு உத்தேச்யமென் றிருக்கும் புத்திக்கடியாயிருப்பனவும், ஈச்வரனைப்பற்றிநிற்க ப்ர யோஜநாந்தரங்களைக்கொண்ட கனுகைக்கு ஹேதுவாயிருப்பன வுமாக ஒருசுமையாயிறேயிருப்பது. அதுக்கு மேலே, விஹிதா நுஷ்டாநத்தாலும் நிஷித்தாசரணத்தாலும் பாபகர்மாக்களோட் டை ஸஹவாஸத்தாலுமாகத்ரிவிதமாய், அவைதான் மாநஸவாசி க காயிகரூபேண த்ரிவிதமாயிறே யிருப்பது. "యద్బ్రహ్మకల్పనియుతా నుభవేప్యనాశ్యంతత్కిల్బిషం సృజతిజన్తురిహక్షణార్ధే" "யத்ப்ரஹ்மகல்பநியுதா நுபவேப்யநாஶ்யம் தத்கிலபிஷம் ஸ்ருஜதிஜந்துரிஹக்ஷணார்த்தே" என்கிறபடியே பலாநந்த்யத்தை "பாரமாய" எனகிறதாகவுமாம். ஸம்ஹரிப்பதும் நரகத்திலேயாய், ஸ்ர்ஷ்டிப்பதும் நரகத்திலேயா யிருக்கை.இப்படி பாரமாகைக்கு ஹேதுசொல்லுகிறதுமேல் (பழ வினை)காலமோ அநாதி, ஆத்மவஸ்துவோநித்யம், அசித்ஸம்ஸர்க் கமும் அன்றேதொடங்கி அநுவர்த்திக்கிறவையிறே.

---

பழமையேதென்ன; அருளிச்செய்கிறார் (ஆத்மாவோ நித்ய னித்யாதி.)

இக்காலமெல்லாங்கூடக்கூடுபூரித்ததாயிருக்குமிறே. "ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" "ஸர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமி" என்றவன்றானே தள்ளவேண்டும்படியிருக்கை.

(பற்றறுத்து) விரகராயிருப்பார் அடியறுத்து நெடுஞ்சுவர் தள்ளுமாப்போலே ஸவாஸநமாகப்போக்கி. நித்யஸூரிகளுக்கு பாபசங்கையுண்டாகிலும் இவர்க்கில்லாதபடிபண்ணி.

(என்னை) பாபத்துக்குப் போக்கடியறியாத வென்னை. பாபம் படும் ஆகரமானவென்னையென்றுமாம். "அஹமஸ்ம்யபராதாநாம்" "அஹமஹோராததி:."

(தன்வாரமாக்கிவைத்தான்) "தான்" என்றால் பக்ஷபதிக்கும் படிபண்ணினான். என்கார்யம் தனக்குக்கூறாக என்பேரிலே தனக்கு இருப்பென்று தன்பேரிலே எனக்கிருப்பாக்கினபடி.

---

இக்காலமெல்லாம் கூடுபூரித்ததாயிருக்குமிறே. "ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" "ஸர்வபாபேப்யோமோக்ஷ யிஷ்யாமி" என்றவன்றானே தள்ளவேண்டும்படியிருக்கை.

(பற்றறுத்து) விரகரானவர்கள் அடியறுத்து நெடுஞ்சுவர் தள்ளுமாப்போலே ஸவாஸநமாகப்போக்கி. நித்யஸூரிகளுக்கு பாபசங்கையுண்டாகிலும் இவர்க்கு இல்லாதபடி பண்ணி. அஜ்ஞாநமும், தத்கர்தமானகர்மமும், அதடியான தேஹஸம்பந்தமுமென்று மூன்றாய், இவற்றை வாஸநாருசியோடேபோக்கி. அதாவது-அஜ்ஞாநமும், அஜ்ஞாநவாஸனையும், அஜ்ஞாநருசியும், கர்மமும் கர்மவாஸனையும், கர்மருசியும், தேஹமும் தேஹவாஸனையும் தேஹருசியுமறுத்து. க்ரமத்திலே யநுஷ்டிக்கும் ஸாத்ய கர்மமாகிலிறே அடைவேபோக்குவது, ஸித்தரூபனாகையாலே வாஸனையோடே கடுகப்போக்கினான்.

அநாதிகாலார்ஜிதமான கர்மங்களை ஸவாஸநமாகப்போகவிட்டவளவேயோ (என்னைத் தன்வாரமாக்கிவைத்தான்) "ஈச்வரோஹமஹம்போகீ" "ஈச்வரோஹமஹம்போகீ" என்றிருக்கிற நான், "தான்" என்றால் பக்ஷபதிக்கும்படி பண்ணினான். (என்னை) "அஹமஸ்ம்யபராதாநாமாலய:" "அஹமஸ்ம்யபராதாநாமாலய:" என்றும், "பாவமேசெய்து பாவியானேன்" என்றும் சொல்லுகிறபடியே-அபராதமே நிரூபகமாம்படியிருக்கிறவென்னை. இப்பாபத்துக்குப்போக்கடியறியாதவென்னை. பாபம்படும் ஆகரமென்றுமாம். "அஹமஹோராததி:" "அஹம்மஹோராததி:." இப்படி நோவுபட்டோமென்கிற வநுதாபமுமின்றிக்கே யிருக்கிறவென்னை.

(தன் வாரமாக்கிவைத்தான்) என்பாபம்தனக்குக்கூறாக என்பேரிலேஅவனுக்கிருப்பென்று தன்பேரில்எனக்கிருப்பாக்கினபடி.

---

வாரம்-ஸ்நேஹமாதல்; கடமையாதல். இவனிறுக்கு மிறையை தானிறுக்கிறேனென்று தன்பேரிலேயேயிட்டுக்கொள்ளுகை.

அன்றியே, விஷயாந்தரங்களைவிட்டுத் தன்னையே கூறுகப்பற்றும்படி பண்ணினான். (வைத்தான்) இச்சந்தாநச்சாபம்வைத்தான். (வைத்ததன்றி) ஸந்தாநபரம்பரையின் நன்மைகளுக்குமேலே. (என்னுள்புகுந்தான்) பின்னையும் தன்னாற்றாமையாலே, விடாய்த்தவன் தடாகத்தைநீக்கி உள்ளேமுழுகுமாப்போலே, என்னுள்ளம்புகுந்தான். வாலிபுக்கவிடத்தே மலையிட்டடைத்து, மஹாராஜரிருந்து குறும்பு செலுத்துமாப்போலே யாகவொண்ணாதென்று என்ஸ்வரூபஜ்ஞாநம்குலையாதபடியென்னெஞ்சிலேவந்துபுகுந்தான். "అనశ్నన్నన్యః" "அநஶ்நந்நந்யஃ" என்கிறபடியே இத்தோடொட்டாயிருக்குமவனுக்கு இத்தாலல்லதுசெல்லுகிறதில்லையென்கிறது.

(கோரமாதவமித்யாதி) இப்பேற்றுக்கடியென்னென்று பார்த்தார், இந்த்ரியங்களை யொறுத்து மஹாதபஸ்ஸைப் பண்ணினேனோ வறிகிறிலேன்; நானறியவொன்றுமில்லை.

---

அன்றியிலே, விஷயாந்தரங்களைவிட்டுத் தன்னைககூறுகப்பற்றும்படி பண்ணினான். (வைத்தான்) தம்முடைய நினைவன்றியிலே அத்தலையாலே வந்ததென்றுதோற்ற வைத்தானென்கிறார். * மாறுசெய்தவாளரக்கன் நாளுலப்ப-இறந்தகுற்றமெண்ணவல்லனே. ராவணனை ஸபரிகரமாகக்கொன்று வெற்றிகொண்டபிள்ளை. என்னைத் தம்மோடே யொருபோாகக்கூட்டுகையாலே யமாதிகளால் நினைக்கவொண்ணாதபடியானேன். (வைத்தான்) இச்சந்தாநச்சாபம் வைத்தான்.

(வைத்ததன்றியென்னுள் புகுந்தான்) என்னுடைய துஷ்கர்மங்களை ஸவாஸநமாகப்போக்கி, தானறிந்த * மதிநலத்துக்குத் தன்னையே விஷயமாக்கிவைத்ததுக்கு மேலே, நாம் ஸந்நிஹிதராவு தோமாகில் முன்புத்தை ருசிவாஸநைகள் மேலிட்டு, பழயபடியே துஷ்கர்மங்களைப் பண்ணி நானகலக்கூடுமென்று பார்த்து, அவை மேலிடாதபடியென்னெஞ்சிற் புகுந்து, தன்னுடையவாஸநாபலத்தாலேஅவை தேய்ந்தறும்படி பண்ணிஇருந்தான். (என்னுள்புகுந்தான்) "அடியேனுள்ளானுடலுள்ளான்" என்றும், "பேரேனென்றென்னெஞ்சுநிறையப்புகுந்தான்" என்றுஞ்சொல்லுகிறபடியே-எத்தனையேனு மளவுடையவர்க ளளவிற்செய்யுமத்தை, என்நிகர்ஷம்பாராதே வஸிஷ்டன் சண்டாளக்ரஹத்திலே புகுமாப்போலே புகுந்தான். (என்னுள்புகுந்தான்) "అనశ్నన్నన్యః" "அநஶ்நந்நந்யஃ" என்கிறபடியெ இத்தோடொட்டாயிருக்குமவனுக்கு இத்தாலல்லது செல்லுகிறதில்லையென்கிறது.

---

சாபம் - குட்டி. சத்ருக்களை-விரோதிகளையறுக்குமனாறும் ஸந்தாநத்துக்கு ஒருகுஞ்சைவைக்குமாப்போலே என் விரோதியைப் போக்கி ஸ்வரூபம் நசியாதபடி வைத்தானென்றபடி.

இப்படி சங்கிப்பானென்னென்ன; பெற்றபேறு அப்படிப்பட்டார்க்குக் கிடைக்குமதாகையாலே. அவன்றான் நதீதீரத்திலே கிடந்து தபஸ்ஸுபண்ணினேனோ வறிகிறிலேன். கோரமான தபஸ்ஸாகிறது-அத்தலைக்காகத்தம்மையழியமாறின பெரியவுடையாரைப்போலே யிருக்கை. "எந்நன்றி செய்தேனோ வென்னெஞ்சில்திகழ்வதுவே" என்னுமாப்போலே.

(அரங்கத்தம்மான்) இப்பேற்றுக்கு ஆற்றங்கரையைப்பற்றிக் கிடந்து தபஸ்ஸுபண்ணினானும் அவனாயிருந்தது. இச்சீரியபேற்றுக்கு வேறு உபாயமுண்டாகமாட்டாதே.

---

(கோரமா தவஞ்செய்தனன்கொல்) முன்பேகனத்திருந்தது, இப்பேறு ஸித்திக்கும்போது, "తపసావిన్దతేమహత్" "தபஸாவிந்ததேமஹத்" என்கிறபடியே நெடுங்காலம் அதிகோரமானபெரிய தபஸ்ஸுக்களைப்பண்ணினேனோ. "మహతాతపసారామ" "మహతాచాపికర్మణా" "மஹாதாதபஸாராம" "மஹதாசாபிகர்மணா," "తేతంసోమమివొద్యన్తమ్" "தேதம்ஸோமமிவோத்யந்தம்" என்னு மவனைப் பெறும்போது அதிகோரமான தபஸ்ஸைப் பண்ணவேணும்றே. (அறியேன்)அறிகிறிலேன். நானறியவொன்றுமில்லை. இப்படிசங்கிப்பானென்னென்னில்; பெற்றபேறு அப்படிப்பட்டார்க்குக் கிடைக்குமதாகையாலே. அவன்றான் நதீதீரத்திலேகிடந்து தபஸ்ஸைப் பண்ணினேனோ வறிகிறிலேன். கோரமானயுத்தத்திலே தம்மையழிய மாறின பெரியவுடையாரைப்போலே யிருக்கை. "எந்நன்றி செய்தேனோ வென்னெஞ்சிற்றிகழ்வதுவே" என்றும் தம்பக்கல் ஒருநன்மைகாணாமையாலே ஸம்சயிக்கிறார். நிர்ஹேதுகமாக இப்படி உபசரிப்பதே! என்றிறே இவர்வித்தராகிறது. இத்தால்-நிர்ஹேதுகமாக விஷயீகரித்தானென்றபடி. தம்மையும் தம்முடைமையையும் நமக்காக்கினவர்க்கு நம்மையும் நம்முடைமையையும் அவர்க்காக்கின முறை முதுகு தேய்ததோ மித்தனையன்றோ வென்று, எல்லாஞ்செய்தும் தான் ஒன்றுஞ்செய்திலனாயிறே அவனிருப்பது. "அடியார்க்கென் செய்வனென்றே யிருத்தி நீ" என்னக்கடவதிறே.

"அறியேன்" என்றவர்தாமே ஸர்வதா இக்கனத்த பேற்றுக்கு ஒரு ஹேதுவுண்டாக வேணுமென்று விசாரித்து, அறிந்தேனென்கிறார் மேல் (அரங்கத்தமமான் திருவார மார்பதன்றோ வடியேனை யாட்கொண்டதே)இவருடைய *கோரமாதவ மிருக்கிறபடி. (அரங்கத்தம்மான்) இவருடைய விரோதியைப் போக்கி உஜ்ஜீவிப்பிக்கைக்காகவாய்த்து இங்குவந்து சாய்ந்தருளிற்று. இவருடைய பேறு தன்னதாம்படி தாம்பண்ணுகைக்குண்டான ப்ராப்தியைச் சொல்லுகிறது. இப்பேற்றுக்கு ஆற்றங்கரையைப் பற்றிக் கிடந்து தபஸ்ஸு பண்ணினானும் அவனாயிருந்தது, இல்லையாகில் எனக்கு இக்கனவியபேற்றுக்கு வேறுபாயமுண்டாகமாட்டாதே.

(திருவாரமார்பதன்றோ) பெரிய பிராட்டியாரையும் ஹாரத்தையு முடைத்தான மார்வன்றோ. தமக்குப்பற்றாசாகத் தாய் நிழலிலே யொதுங்குகிறார். இவனைக்குறித்து, "तेन मैत्री भवतु" "தேநமைத்ரீபவது" என்றும் அவனைக்குறித்து, "न कश्चिन्नापराध्यति" "நகஶ்சிந்நாபராத்யதி" என்றும் சிறையிலே யிருந்தே சேரவிடப்பார்க்கிறவள், மார்பிலே யிருந்தால் சேரவிடச் சொல்லவேணுமோ. அழகியமார்விலாரம். ஆரத்துக்கு அழகு கொடுக்கவற்றாயிருக்கை. ஆரம் அழகை மறைக்கைக் குடலா மித்தனையிறே. "सर्वभूषणभूषार्हः" "ஸர்வபூஷணபூஷார்ஹ:" என்னுமாப் போலே.

(அடியேனை) முன்பெல்லாம் கூலிச்சேவகரைப்போலே அழகுக்குத்தோற்ற வடிமை; இது பிறந்துடையவடிமை. முந்துற "दूतो रामस्य" "தூதோராமஸ்ய" என்றவன், பிராட்டி கடாக்ஷம் பெற்றவாறே, "दासोऽहं कोसलेन्द्रस्य" "தாஸோஹம்கோஸலேந்த்ரஸ்ய" என்றானிறே. (ஆள்கொண்டது) இழந்த சேஷத்வத்தைத் தந்தது.

---

(திருவாரமார்பதன்றோ) பெரியபிராட்டியாரையும் ஆரத்தையுமுடைத்தான திருமார்பன்றோ. பெரியபெருமாள் தாமன்றோ. "हिरण्यवर्णाम्" "हिरण्यप्राकाराम्" "ஹிரண்யவர்ணாம்" "ஹிரண்யப்ராகாராம்" என்கிறபெரியபிராட்டியாருக்குக்கோயிற்கட்டணமாய், அதுக்கு ஹிரண்யமயமான திருமதிள்போலேயிருக்கிறதிருவாரத்தை யுடைத்தாயிறேதிருமார்பிருப்பது, அந்தத்திருமார்பன்றோ. இத்தால் - தமக்குப் பற்றாசாகத் தாய் நிழலிலே யொதுங்குகிறார். இவனைக்குறித்து, "तेन मैत्री भवतु" "தேநமைத்ரீபவது" என்றும், அவனைக்குறித்து, "न कश्चिन्नापराध्यति" "நகஶ்சிந்நாபராத்யதி" என்றும் சிறையிலேயிருந்தே சேரவிடப்பார்க்குமவள் மார்பிலே யிருந்தால் சேரவிடச்சொல்லவேணுமோ. அழகியமார்பிலாரம். ஆரத்துக்குஅழகு கொடுக்கவற்றா யிருக்கை. ஆரம் அழகை மறைக்கைக் குடலாயிருக்கு மித்தனை. "सर्वभूषणभूषार्हः" "ஸர்வபூஷணபூஷார்ஹ:" என்னுமாப்போலே.

(அடியேன்) முன்பெல்லாம் கூலிச்சேவகரைப்போலே யழகுக்குத் தோற்றவடிமை; இது பிறந்துடைய வடிமை. முந்துற "दूतो रामस्य" "தூதோராமஸ்ய" என்றவன் பிராட்டி கடாக்ஷம் பெற்றவாறே, "दासोऽहम्" "தாஸோஹம்" என்றானே. (அடியேனை) ஜ்ஞாநாநந்தங்களுக்கு முன்னே சேஷத்வம் ப்ரதமநிரூபகமான வென்னை யன்றோ. (ஆட்கொண்டது) இழந்த சேஷத்வத்தைத் தந்தது.

(அடியேனை யாட்கொண்டதே) ராஜ்யமிழந்த ராஜபுத்ரனை யழைத்து முடிசூட்டுவாரைப்போலே, அழகிலே யழிந்த வென்னை அவன்குணங்கிடீர் பிழைப்பித்த தென்கிறார். அழகிலே அழுந்தினாரை குணத்தைக்காட்டிப்பிழைப்பிக்கலாம், குணத்திலே யழுந்தினார்க்கு குணமேவேணும். நீரிலே யழுந்தினார்க்கு நீரையிட்டுப் பிழைப்பிக்கவிடுமித்தனையன்றோ வுள்ளது.

இப்பாட்டால் – அந்தர்யாமிப்ராஹ்மணத்தில் சொல்லுகிறபடியே ஸர்வ வ்யாபகத்வசக்தியும் இங்கே யுண்டென்கிறார். (ரு)

---

முடிகுரியவனை முடிசூட்டுமாப்போலே, என்னுடைய ஸ்வரூப விரோதியையும் ஆச்ரயண விரோதியையும் உபாய விரோதியையும் உபேயவிரோதியையும் போகவிரோதியையும் போக்கி, ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யத்தைக் கொண்டது. தன்னுடைய மேன்மையையும் அழகையுங்காட்டி என்னை அநங்யார்ஹமாம்படி பண்ணி, பெரியபிராட்டியாரை யிடுவித்து, "நகச்சிந்நாபராத்யதி" "நகஶ்சிந்நாபராத்யதி" என்னப்பண்ணி, பெரியபெருமானை யிடுவித்து என்னுடைய விரோதி பாபங்களை ஸவாஸநமாகப்போக்குவித்து, அவர்தம்முடையபோக்யதையை யென்னெஞ்சிலே ப்ரகாசிப்பித்துக்கொண்டு புகுருமபடி பண்ணி, என்னுடைய ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யத்தைக் கொண்டது அந்தத் திருமார்பன்றோ.

(அடியேனையாடகொண்டது - அந்ததிருமாரபன்றோ) என்னைப்போலே யிருப்பார், வேறே சிலரைத் திருத்தி யடிமைகொள்ளுகைக்கு, "பாயுநீரரங்கந்தனுள் பாம்பணைப் பள்ளிகொண்ட, மாயனார்திருநனமார்வும் மரகதவுருவுந்தோளும், தூயதாமரைக்கண்களுந் துவரிதழ்ப்பவளவாயும், ஆயசீர்முடியுந்தேசும்" என்று - தாம்கிடக்கிற வூருக்கு அலங்காரமான ஆற்றழகு தொடங்கிக்காட்ட வேண்டிற்று, எனக்கு மார்பொன்றுமேயமைந்தது. அழகிலே யழுந்தின வென்னை அவன் குணங்கிடீர் பிழைப்பித்த தென்கிறார். அழகிலே யழுந்தினாரை குணத்தைக்காட்டிப் பிழைப்பிக்கலாம், குணத்திலே யழுந்தினார்க்கு குணமேவேணும்; நீரிலேயழுந்தினார்க்கு நீரையிட்டுத்தெளிவிக்குமித்தனையிறே.

இப்பாட்டில் – அந்தர்யாமி ப்ராஹ்மணத்தில் சொல்லுகிறபடியே ஸர்வவ்யாபிசக்தியும் இங்கேயுண்டென்கிறார். ... (ரு)

---

திரு - அழகாகவுமாம், "ஸௌந்த்யமுமந்தராயம்" என்கிறபடியே-கைங்கர்ய விருத்தமான அழகிலே யீடுபட்ட வென்னை, ச்ரியப்பதித்வ குணத்தைக்காட்டி மீட்டாப்போலே, ச்ரியப்பதித்வ குணத்திலே அகப்பட்டாரை, ஸௌந்தர்யமாகிற வழகைக்காட்டி மீட்கலாகாதோ என்ன; "மார்பதன்றோ" என்றஉறைப்பைப்பற்ற அருளிச்செய்கிறார் (அழகிலே யழுந்தினாரிதயாதி.) (ரு)

அ.—ஆறும்பாட்டு. ஸர்வலோகத்தையும் அமுதுசெய்தருளி ன கண்டத்தினழகு என்னையுண்டாக்கிற்றென்கிறார். திருமார்பின ழகு திருக்கழுத்திலே யேறிட்டதென்னவுமாம்.

துண்டவெண்பிறையன்றுயர்தீர்த்தவனஞ்சிறைய
வண்டுவாழ்பொழில்சூழரங்கநகர்மேயவப்பன்
அண்டரண்டபகிரண்டத்தொருமாநிலமெழுமால்வரைமுற்று
முண்டகண்டங்கண்டீரடியேனையுய்யக்கொண்டதே. (௬)

அ.—ஆறும்பாட்டு. ஸர்வலோகத்தையு மமுதுசெய்தருளின கண்டத்தினழகு என்னையுண்டாக்கிற்றென்கிறார். திருமார்பினழகு திருக்கழுத்திலேறிட்டதென்றுமாம். கீழ்ப்பாட்டில்-திருமார்பான து ஹாராத்யாபரண சோபையையும் பெரியபிராட்டியாருக்குக் கோயில்கட்டணமாயிருக்கிறமேன்மையையுங்காட்டி, தம்மைத்திரு வயிற்றினின்றும்வரவீர்த்து எழுதிக்கொண்டபடியிறே சொல்லிற் று; இதில்-அந்தத் திருமார்புக்குமேலாய், "రమయతుసమాంకణ్ఠశ్రీరఙ్గనేతు రుదఞ్చితక్రముకతరుణగ్రీవాకమ్బుప్రలమ్బమలింరుచః। ప్రణయస్ఖలసల్లక్ష్మీ విశ్వమ్భరాకర కన్దళీకనకవలయక్రీడా సంక్రాన్తలేఖ ఇవోల్లసన్" "ரமயதுஸமாம்கண்டஸ்ரீரங் கநேதுருதஞ்சித க்ரமுகதருணக்ரீவாகம்பு ப்ரலம்பமலிம்ருச:। ப்ரணயவிலஸல்லக்ஷ்மீ விச்வம்பராகரகநதளீககவலயக்ரீடா ஸங் க்ராந்தலேக இவோல்லஸன்" என்கிறபடியே - கமுகக்கன்றின் கழுத்துப்போலே பசுகுபசுகென்றிருப்பதாய், ரேகாத்ரயாங்கித மாய், இரண்டருகும் நெருங்கி நடுவு பெருத்திருக்கையாலும், மொ சுகு மொசுகென்றிருக்கிற நாதத்தை யுடைத்தா யிருக்கையாலும் ஸ்ரீபாஞ்சஜந்யம்போலே யிருக்கிற திருக்கழுத்தானது; இந்தத் திருமார்புக்குள்ளது, "அலர்மேல்மங்கை யுறைமார்பா" என்கிற படியே பெரியபிராட்டியாருக்குக் கோயில் கட்டணமா யிருக்கிற ஆகாரமும், திருவாரத்தாலே அலங்க்ருதமான வாகாரமேயன்றோ; இவளைப்போலே *சங்குதங்குமுன்கை நங்கையாயிருப்பார் அநேக நாய்ச்சிமார் ஸாபரணமான தங்கள் கைகளாலே யணைக்கையாலே அவ்வாபரணங்களழுத்த அவற்றாலே முத்ரிதராயிருப்போமும் நாமல்லோமோ, ப்ரளயாபத்துவர ஸகலாண்டங்களையும் ததந்தர் வர்த்திகளையும் ரக்ஷித்தோமும் நாமல்லோமோ, அதுகிடக்க அவ ள்தான் மார்பிலேயிருந்தணைப்பதும் நம்மையன்றோ, அதுவுங்கிட க்க பாண்டவர்கள் தூதுவிடுகிறபோது கட்டிவிட்ட மடக்கோலை இன்று நம்பக்கலிலே யன்றோ கிடக்கிறது, அந்த ஹாரந் தனக் கும்தாரகம் நாமல்லோமோ என்றாப்போலே தன்னுடைய ஆப ரணசோபையையும் யௌவநத்தையும் ஆபந்நிவாரணத்வத்தை யுங் காட்டி என்னை ஸம்ஸாரமாகிற ப்ரளயத்தினின்று மெடுத்து உஜ்ஜீவிப்பித்ததென்கிறார்.

ப-ரை.—துண்டம் - கலாமாத்ரமாய், வெண் - வெளுத்திருந்துள்ள, பிறையன் - பிறையைஜடையிலே யுடையனான ருத்ரனுடைய, துயர்- பிக்ஷையெடுத்துத் திரிந்த பாதகத்தை, தீர்த்தவன் - போக்கினவனாய், அம் - அழகிய, சிறைய - சிறகையுடைத்தான, வண்டு - வண்டுகள், வாழ் - வாழா நின்றுள்ள, பொழில்சூழ் - சோலைசூழ்ந்த, அரங்கநகர் - கோயிலிலே, மேய - கண்வளர்ந்தருளுகிற, அப்பன் - பிதாவானவன், அண்டர் - அண்டாந்தர் வர்த்திகளான சேதனரையுடைய, அண்டம் - அண்டத்தையும், பகிரண்டம் - புறம்பிலுண்டான வண்டங்களையும், ஒரு - அத்விதீயமான, மாநிலம் - மஹாப்ருதிவியையும், பூமியையூடுவி நிற்கிற, எழு - ஏழுவகைப்பட்ட, மால்வரை - குலகிரிகளையும், முற்றும் - ஒன்றொழியாதபடி, உண்ட - அமுது செய்தருளின, கண்டங்கண்டோ - திருக்கழுத்துக் கிடீர், அடியேனை—, உய்யக்கொண்டது - ஸம்ஸாரத்திலகப்படாதபடி பண்ணிற்று. (சு)

வ்யா.—(துண்டவித்யாதி) கலாமாத்ரமாய் வெளுத்திருந்துள்ள பிறையை ஜடையிலே யுடையனான ருத்ரனுக்கு பிதாவுமாய் லோககுருவுமாயிருந்துள்ள ப்ரஹ்மாவினுடைய தலையை யறுக்கையால் வந்த ஆபத்தைப்போக்கினவன். சுமையரா யிருப்பார் சும்மாட்டுக்குள்ளே தாழை மடலைச் சொருகுமாப்போலே, ஸாதகனாயிருக்கச்செய்தே ஸுகப்ரதாநனாக அபிமாநித்திருக்குமாய்த்து. ஆனாலும் ஆபத்துவந்தால் அவனல்லது புகலில்லையே. சந்த்ரனுடைய க்ஷயத்தைப் போக்கினானென்றுமாம். அவனுடைய துரிதத்தைப்போக்கினாப்போலே தம்முடைய துரிதத்தையும் போக்குமென்று கருத்து.

---

வ்யா.—(துண்டவெண்பிறையன்றுயர்தீர்த்தவன்)கீழ்ப்பாட்டிலே-என்னுடைய அஜ்ஞாநத்தாலேஎன்னாலும்பிறராலும்பரிஹரிக்கவொண்ணாதபடி அநாதிகாலார்ஜிதமாய்*அவச்யமநுபோக்தவ்யமாய்,பிடரியைப்பிடித்துக்கொடுநிற்கிற துஷ்கர்மங்களை,பெரியபிராட்டியார் புருஷகாரமாக, "[illegible]" "தக்ஷணாதேவநச்யதி" என்கிறபடியே-பெரியபெருமாள்நசிப்பித்தாரென்றிறேசொல்லிற்று; இத்தைக்கேட்டவர்கள், * பாரமாயபழவினையடைய அவள் புருஷகாரமாகப் போக்கினானென்னுமிடம்ஆச்சர்யமாயிருந்ததீ!, இதுஉபபந்நமென்று நாங்களறியும்படி யென்னென்ன; என்னைப்போலே தன்னுடைய அஜ்ஞாநத்தாலே ஈச்வராபிமாநியான ருத்ரனானவன், லோககுருவுமாய்த்தனக்கு பிதாவுமான ப்ரஹ்மாவினுடைய சிரஸ்ஸை நகத்தாலே யறுத்து, இப்படித் தன்னாலும் பிறராலும் பரிஹரிக்கவொண்ணாதபடியான துயரை ஸம்பாதித்து,

---

ஆறும்பாட்டு. ஸாதகவேஷந்தோற்ற ஜடையை தரிக்கிறவனுக்கு சந்த்ரன் வேணுமோ வென்ன; அருளிச்செய்கிறார் (சுமையரா யிருப்பா ரித்யாதி.)

அதுபோகைக்காக க்ஷீராப்திநாதன் பாடேறவர, அவ்விடத்தே தானும் பெரியபிராட்டியாருமாய்த் தோன்றி, "శ్రియాకమలయా భిక్షాంప్రయాచితః" "ஸ்ரீமாந்மபாபிக்ஷாம்ப்ரயாசித:" என்கிறபடியே அபேக்ஷாநுகுணமாக அவள்புருஷகாரமாக அவனுடைய ப்ரஹ்மஹத்யையால் வந்த துயரைத் தீர்த்தாப்போலே, "సఖలుబ్రహ్మహత్యా బ్రహ్మహాభవేత్" "ஸகலுப்ரஹ்மஹத்யா ப்ரஹ்மஹாபவேத்" என்கிறவென்னுடையப்ரஹ்மஹத்யையையும்போக்கினனென்கிறார். இந்த சேதநன் மஹாபாதகாதி பாபங்களைப்பண்ணி மஹாரௌரவாதி நரகங்களிலே யமபடர் கையிலேத்துவிடுமளவும் அசித்கல்பனாய்க் கிடந்தநுபவித்து, அவர்கள்விட்டடித்தவாறே, முற்பட, "స్థావరక్రిమయోన్జాశ్చ పక్షిణశ్చసరీసృపాః" "ஸ்தாவரக்ரிமயோப்ஜாஸ்ச பக்ஷிணஸ்சஸரீஸ்ர்பா:" எனகிறபடியே - முற்பட ஸ்தாவராதி யோநிகளிலே பிறந்து, "మానుష్యంప్రాప్యలోకేస్మిన్ నమూకోబధిరోపివా। నాపక్రామతిసంసారాత్ సఖలుబ్రహ్మహాభవేత్" "மாநுஷ்யம் ப்ராப்ய லோகேஸ்மிந் நமூகோபதிரோபிவா । நாபக்ராமதி ஸம்ஸாராத் ஸகலுப்ரஹ்மஹாபவேத்" என்கிறபடியே மநுஷ்ய ஜந்மத்திலே பிறக்கவும்பெற்று, ச்ரோத்ராதிகரணங்களும் விதேயமாகப் பெற்றுவைத்து, இவற்றைக்கொண்டு ஈச்வரனைப்பற்றித்திருநாமஸங்கீர்த்தநமுகத்தாலே இந்த ஸம்ஸாரத்தைக் கடவானாகில் அவனை "ப்ரஹ்மஹா" வென்றதிறே. புழுநெருடுகிறவனுக்கும் ப்ராஹ்மணசரீரத்தை வதிக்கிறவனுக்கும் ஹிம்ஸையொத்திருக்கச்செய்தே ப்ராஹ்மணவதம் ப்ரஹ்மஹத்யையென்கிறது, அவனுடைய ஜந்ம வ்ருத்த ஜ்ஞாநங்களால்வந்த கௌரவத்தைப்பற்றவிறே. அப்படியே, "యస్యాత్మాశరీరమ్" "யஸ்யாத்மாசரீரம" என்கிறபடியே- பகவச்சரீரபூதமான ஆத்மாவை அபஹரித்து நாராயணத்வத்தையொறுவாய்ப் போக்குகிறவனை ப்ரஹ்மஹாவென்னத் தட்டில்லையிறே.

(துண்டவெண்பிறையன் றுயர்தீர்த்தவன்) "சலங்கலந்த செஞ்சடைக்கறுத்தகண்டன்-வாசநீர்கொடுத்தவன்" என்கிறபடியே - தீர்த்தஸேவையாலும் தன்தபஸ்ஸாலும் தன்சக்திமதையாலும் போக்கவொண்ணாதவலியதுயரை, பிராட்டிபுருஷகாரமாக, தன்மார்பில் வாசநீராலே போக்கினது, தம்முடைய துயரைப் போக்கினதுக்கு நிதர்சநமாயிருக்கையாலே அவனை உதாஹரணமாக்குகிறார். தாழைமடலைச்சூடி வருவாரைப்போலே ஒருகலாமாத்ரமான வெளுத்த சந்த்ரனை ஜடையிலே யுடையனான ருத்ரனுடைய பாபத்தைப்போக்கினவன். கலாமாத்ரமான சந்த்ரனை ஜடையிலே சூடிவந்தானென்கையாலே - இப்படி ஆபந்நனாய் வருகிறவிடத்திலும் அலங்காரத்தோடே தர்ப்தனாய் வந்தானென்கை.

வெண்மையாலே-சிவந்தஜடைக்கு பரபாகமாயிருக்கிறபடி. சுமையரா யிருப்பார் சும்மாட்டுக்குள்ளே தாழைமடல் சொருகுமாப் போலே, ஸாதகனாயிருக்கச்செய்தே ஸுகப்ரதாநனாய் அபிமாநித்திருக்குமாய்த்து. ஆனாலும் ஆபத்துவந்தால் அவனல்லது புகலில்லையிறே. இத்தால் - ஒருதேவதையை ஆபரணமாக வுடையனாகையால் வந்த மதிப்பும், போகப்ரதாநனென்னுமிடமும், முமுக்ஷு வல்லனென்னுமிடமும் சொல்லுகிறது.

(வெண்பிறையன்றுயர்) தனக்குத்தக்க வாதமிறே. லோகத்துக்கு சங்கரனாயிருக்கிறவனுக்குவந்த துக்கமிறே. இவன் தன்னுடைய கர்வத்தாலே ப்ரஹ்மசிரச்சேதநம்பண்ணின வநந்தரம் இவன்புத்ரத்வம்கொண்டாலும் தான்பிதாவானபடியாலே இவனை யழியாதே, செருக்குவாட்டுகைக்காக, "కపాలీత్వంభవిష్యసి" "கபாலீ த்வம்பவிஷ்யஸி" என்று - ப்ரஹ்மாசபிக்க, இவன்கையிலே, "முடையடர்த்த சிரமேந்தி மூவுலகும் பலிதிரிவோன்" என்கிறபடியே - கபாலத்தைக்கொண்டு பலிபுக்கான ஜயந்தனைப்போலே, * త్రీఀల్లోకాఀన్సంపరిక్రమ్య - த்ரீந்லோகாந்ஸம்பரிக்ரம்ய பண்ணிக்கொண்டு, திருப்பாற்கடலிலே சென்றவளவிலே, "இடர்கெடுத்த திருவாளன்" என்கிறபடியே - பிராட்டியுந் தானுமாய்வந்து துயரைத் தீர்த்தானிறே.

"సపిత్రాచపరిత్యక్త స్సురైశ్చసమహర్షిభిః। త్రీఀల్లోకాఀన్సంపరిక్రమ్య తమేవ శరణంగతః" "ஸபித்ராசபரித்யக்தஸ் ஸுரைஶ்சஸமஹர்ஷிபி: । த்ரீந் லோகாந்ஸம்பரிக்ரம்ய தமேவசரணங்கத:." [సః - ஸ:] பெருமாள் திருவுள்ளத்திலே திரக் கழிய அபராதத்தைப்பண்ண, அவர் குபிதராய் ப்ரஹ்மாஸ்த்ரத்தைவிட, அதுபின்துடர்ந்துகொடு திரிய, "ஆவாரார்துணை" என்கிறபடியே ரக்ஷகாபேக்ஷையுடையகாக மானது. [పిత్రాచపరిత్యక్తః - பித்ராசபரித்யக்த:] பெற்றவர்களுக்கு பரமன்றோ ரக்ஷிக்கையென்று பார்த்து, இந்த்ரன்பாடே சென்றான்; "ఇన్ద్రోమహేన్ద్రస్సురనాయకోవా త్రాతుంనశక్తాయుధిరామవధ్యమ్" "இந்த்ரோமஹேந்த்ரஸ்ஸுரநாயகோவா த்ராதும்நசக்தா யுதிராமவத்யம்" என்கிறபடியே எட்டுக்கதிரும் விட்டெரிகிற பெரியமதிப்புந் தானுமானாலும் ராமவத்யனை ரக்ஷிக்கை அரிதாகையாலே, "భూతానాంయోవ్యయఃపితా" "பூதாநாம் யோவ்யயபிதா" என்கிறபடியே - நிருபாதிகரான •தாய்க்கும் தமப்பனுக்குமாகாதே, ஸர்வபூத ஸுஹ்ருத்தான வவரளவிலே ப்ராதிகூல்யம்பண்ணி அவர்க்குவத்யனானவனன்றோ, இவன் இங்குப் புகுருகையாவதென். "సేన్ద్రాయ" "ஸேந்த்ராய" என்னிலோவென்னில்; பயப்பட்டு புத்ரமித்ரகளத்ரங்களோடேகூட வெல்லாருங்காண நாற்சந்தியிலே குடநீர் வழிந்துவிட்டான்.

[సుశ్రోణ్యా - ஸுஸ்ரோணிச] மாதா பிதாக்கள் கைவிட்டவளவிலும் இவர்களுக்குப்ரீத்யர்த்தமாக பந்துவர்க்கமான தேவதைகள் கொடு போய்ச் சீராட்டுக்கண்டுபோருமே, அந்தவாஸனையாலே அவர்கள் பாடே சென்றான்; "కస్యపిత్యతిదేవాశ్చ జాతరోషస్యసంయుగే" "கஸ்யபிப் யதிதேவாஸ்ச ஜாதரோஷஸ்யஸம்யுகே" என்கிறபடியே அபராதம் அதுவாகையாலும் பெருமாளுக்கு அஞ்சுகையாலும் மாதா பிதாக்கள் நேராகக்கைவிட்டார்களென்றறிகையாலும் அவர்களும் தள்ளிக் கதவடைத்தார்கள். [సమహర్షిభిః-ஸமஹர்ஷிபி:] இந்த்ரன் கைவிட்ட த்ரிசங்குவையு மகப்படத் தங்கள்தபஸ்ஸைப்பறியமாறி ரக்ஷித்து, * ஆந்ருஸம்ஸ்யப்ரதாநராயிருக்கும்ரிஷிகள்பாடே சென்றான், அவர்களும், வத்ய ! ஹிம்ஸையிலே பண்ணுவதோராந்ருஸம்ஸ்யமுண்டோவென்று கைவிட்டார்கள். [త్రీన్లోకాన్సంపరిక్రమ్య-த்ரீந்லோகாந்ஸம்பரிக்ரம்ய] தமப்பனுக்குச் செல்லும் தேசமாகையாலே ஆரேனுமொருத்தர் ஒருக்காலாகிலும் புத்திபேதம் பிறந்து பரிக்ரஹிக்கக்கூடுமோவென்று த்ரைலோக்யத்திலும் தச்சன் கூட்டின வாசல்கள்தோறும் ஒருக்கால் புக்காப்போலே ஒன்பதின்கால் புகுந்து திரிந்தான், அங்குரக்ஷகராவாரைப்பெற்றிலன். [తమేవశరణంగతః-தமேவஸரணம்கத:] கோபித்தாரேயாகிலும் நாராயணத்வப்ரயுக்தமான குடற்றொடக்குண்டாகையாலே அவர்கள் முகத்திற்காட்டில் அம்புவிட்டவர்முகமே குளிர்ந்திருக்கையாலும், "సకృదేవప్రపన్నాయ-తద్వ్రతంమమ" "ஸக்ருதேவப்ரபந்நாய-ஏதத்வ்ரதம்மம" என்றருளிச்செய்துவைக்கையாலும் அந்தச்சீறின பெருமாளேயமையுமென்று அவனையே தனக்கு உபாயமாகப் பற்றினான். "సర్వభూతేభ్యః" "ஸர்வபூதேப்ய:" என்கிற விடத்திலே, ஸர்வஸப்தம் அஸங்குசிதோக்தியாகையாலே-பிறரால்வரும் பயத்தையும், தன்னால் வரும் பயத்தையும், ரக்ஷகனென்றால் வரும் பயத்தையும் போக்கி ரக்ஷிக்கக்கடவனென்றபடி. இப்படி இக்காகம் பட்டதுபட்டு, * త్రీన్లోకాన్సమ్పరిక్రమ్య, தரீந்லோகாந்ஸம்பரிக்ரம்ய பண்ணித்திரிந்தானிறே. லோகத்துககாகஸம்ஹர்த்தாவாய்ப் பெரியமதிப்போடே கும்பிடுகொண்டு திரிந்து, ததாதர்சிதபந்தாவாய்க் கொண்டு தன்புத்யா ஒருவனை ஸம்ஹரிக்கப்புக்குப்பட்டபாடிறே இது. "తత్రనారాయణశ్శ్రీమాన్ మయాభిక్షాంప్రయాచితః। విష్ణుప్రసాదాత్ సుశ్రోణి కపాలంతత్సహస్రధా। స్ఫుటితంబహుధాయాతం స్వప్నలబ్ధధనంయథా" "தத்ரநாராயணஸ்ஸ்ரீமாந்மயாபிக்ஷாம்ப்ரயாசித: । விஷ்ணுப்ரஸாதாத்ஸுஸ்ரோணி கபாலம்தத்ஸஹஸ்ரதா । ஸ்புடிதம்பஹுதாயாதம்ஸ்வப்நலப்ததநம்யதா" என்று-துர்மாநியானவன் தானேதன்னபிமத விஷயத்தைப்பார்த்துச்சொல்லும்படியிறே அவனுடைய துயரைப்போக்கினபடி. [తత్ర - தத்ர] அந்தபரமபதத்திலே.

(அஞ்சிறையவித்யாதி)லோகத்தில் ப்ரதாநரானவர்கள் ப்ரஹ்மஹத்யை பண்ணி அலைந்துகொடுகிடக்கப் புக்கவாறே, "நாம் கடக்க நிற்கவொண்ணாது" என்று, அவர்கள் ரக்ஷணார்த்தமாக வந்து கண்வளர்ந்தருளுகிற வுபகாரகன். அழகிய சிறகை யுடைத்தான வண்டுகள் வாழாநின்ற சோலைசூழ்ந்த பெரியகோயிலிலே கண்வளர்ந்தருளுகிற பிதாவானவன்.

---

[నారాయణః - நாராயண꞉] அபராதம் பாராமல் ரக்ஷிக்கைக்கடியான பந்தவிசேஷத்தைச் சொல்லுகிறது. [శ్రీమాన్ - ஸ்ரீமாந்] அந்த பந்தவிசேஷம் கிடக்கச்செய்தே, "க்ஷமா" "க்ஷமாமி" என்று பொறுப்பிக்குமவள். [మయాభిక్షాం ప్రయాచితః - மயாபிக்ஷாம் ப்ரயாசித꞉] நாட்டையடையக் கும்பிடுகொண்டு அபேக்ஷிதபலப்ரதனை நான் இரந்தேன். [విష్ణుప్రసాదాత్ - விஷ்ணுப்ரஸாதாத்] அகவாயிலிருந்து என்னலமாப்பையடையவனுஸந்தித்துக்கொண்டுபோருகிறவனுடைய ப்ரஸாதமடியாக. [సుశ్రోణి - ஸுஶ்ரோணி] உன்னுடைய ஸௌபாக்யவிசேஷமிறே. [తత్ - కపాలమ్ - தத்-கபாலம்] ஒருக்காலும் நிரம்பாதே விடாதேகிடந்தது. [సహస్రధా - ஸஹஸ்ரதா] காணவொண்ணாதபடியாய்த்துக்காண். விரோதிபோக்குமிடத்தில் புகுந்துபோய்த் தென்று தெரியாதபடி வாஸனையோடே போக்குமிடத்துக்கு நிதர்சநமிறே.

(துண்டவெண்பிறையன் றுயர்தீர்த்தவன்) சந்த்ரனுடைய க்ஷயத்தைப் போக்கினனென்றுமாம். அவனுடைய துயரத்தைப் போக்கினாப்போலே என்னுடையதுரிதத்தையும் போக்குமென்று கருத்து.

(அஞ்சிறையவண்டு வாழ்பொழில்சூழ் அரங்கநகர்மேயவப்பன்) லோகத்தில் ப்ரதாநரானவர்கள் ப்ரஹ்மஹத்யையைப் பண்ணி அலைந்துகொடுகிடக்கப்புக்கவாறே தான் கடக்கநிற்கவொண்ணாதென்று அவர்களுடைய ரக்ஷணார்த்தமாக, கிட்டவந்து கண்வளர்ந்தருளுகிறஉபகாரகன். அழகிய சிறகையுடைத்தான வண்டு வாழா நின்றுள்ள சோலைசூழ்ந்த பெரியகோயிலிலே கண்வளர்ந்தருளுகிற பிதாவானவன். அந்தருத்ரன் * அலங்கல்மார்பில் வாசநீர்பெற்றுக் களித்தாப்போலே யாய்த்து, இந்தவண்டுகளும் அந்தச்சோலையிலே மதுபாநம்பண்ணினத்தால் பிறந்த ஹர்ஷம் சிறகிலே தொடைகொள்ளலாம்படி களித்துவாழுகிறபடி.

---

(வண்டுவாழ்பொழில்) வண்டுகள் அவன்பக்கல் செல்லாது, திருச்சோலையின்போக்யதையிலே இளமணல் பாய்ந்து கால்வாங்கமாட்டாதே நிற்கும் அவ்வண்டுகளைப்போலே தம்மையநுபவிப்பித்து விடாய் கெடுத்தானென்கிறார்.

(அண்டரண்டவித்யாதி)அண்டாந்தர் வர்த்திகளுடைய வண்டம். பகிரண்டம்-புறவண்டம்; அத்விதீயமானமஹாப்ர்திவி, பூமிக்கு ஆணியடித்தாப்போலே யிருக்கிற ஏழுவகைப்பட்ட குலகிரிகள், ஒன்றொழியாமே ஆடிக்காற்றில் பூளைபோலே பறந்து திருவயிற்றிலே புகும்படி யுண்ட கழுத்துக்கிடீர். இவற்றைத் தனித்தனியே சொல்லுவானென்னென்னில்; தனித்தனியே சொல்லுகை போக்யமாயிருக்கையாலே.

(வண்டுவாழ்பொழில்) வண்டுகள் அவன்பக்கல்செல்லத்திருச்சோலையின்போக்யதையிலே இளமணல்பாய்ந்து கால்வாங்கமாட்டாதே நிற்கும் அவ்வண்டுகளைப் போலே, தம்மையும் அநுபவிப்பித்து விடாய்கெடுத்தானென்கிறார். அங்ஙனன்றிக்கே,"ఉభాభ్యామేవపక్షాభ్యాం యథాఖే పక్షిణాంగతిః। తథైవజ్ఞానకర్మాభ్యాం ప్రాప్యతే పురుషోత్తమః" "உபாப்யாமேவபக்ஷாப்யா மாகாஸேபக்ஷிணாங்கதி:। ததைவ ஜ்ஞாநகர்மாப்யாம் ப்ராப்யதேபுருஷோத்தம:" என்கிறபடியே, "வண்டுகளோவம்மின்" என்கிற முமுக்ஷுக்களான ஸாத்விகர், ஸம்யஜ்ஞாந ஸத்கர்மங்களாகிற மோக்ஷபரிகரங்களைக்கொண்டுவாழுகிறபடியைச் சொல்லிற்றாகவுமாம். பெரியபெருமாளுக்கு ஆபரணமாய் ஊருக்கும்ஆபரணமா யிருக்குஞ்சோலை. சோலைக்கு ஆபரணமா யிருக்கும் வண்டுகள்; வண்டுகளுக்கு ஆபரணமாயிருக்கும் அழகிய சிறகென்கை.

ருத்ரனுனவன் வந்தபேக்ஷிக்க அவனொருவனுக்குஉதவினபடியைச் சொல்லிற்று - கீழ்; அபேக்ஷாநிரபேக்ஷமாக அநேகஜகத்தினுடைய ஆபத்தைப் போக்கிற்றன்றோ திருக்கழுத் தென்கிறார் மேல் (அண்டரண்டம்) அண்டாந்தர்வர்த்திகளான சேதநரையுடைத்தான இந்த அண்டம். (பகிரண்டத்து) பஹி:உண்டான வண்டங்கள். ஈத்ர்சங்களானபுறம்பிலுண்டான அண்டங்கள். (ஒருமாநிலம்) ஈத்ர்சமான அண்டங்களை தரித்துக்கொண்டிருக்கையாலே அத்விதீயமான மஹாப்ர்திவி. (எழுமால்வரை) இவ்வண்டங்களும் பூமியும் பாதாளத்தில் விழாதபடி சங்குஸ்தாபநம் பண்ணினாப்போலே இந்த பூமியை ஊடுருவிநிற்கிற குலபர்வதங்களேழும்.

(முற்றுமுண்டகண்டங்கண்டீர்) ஒன்றொழியாமே ஆடிக்காற்றில் பூளைபோலே, பெரியபெருமாள்திருக்கழுத்தைக் கண்டால் ப்ரளயாபத்திலே ஜகத்தை யெடுத்துத்திருவயிற்றிலே வைத்தமை தோற்றா நின்றதாய்த்து. விடுகாதுதோடிட்டு வளர்ந்த தென்று தெரியுமாப்போலே.

(அடியேனை உய்யக்கொண்டதே) முன்புபெற்ற கைங்கர்யத்துக்கு விச்சேதம் பிறவாதபடி நோக்கிற்று; என்னை ஸம்ஸாரத்தில் ஒருநாளும் அகப்படாதபடி பண்ணிற்று.

இப்பாட்டால்-ஆபத்ஸகனான ஸர்வேச்வரன்படியும் இங்கே யுண்டென்கிறார். ... ... ... ... (௬)

---

(முற்றுமுண்டகண்டங்கண்டீர்) இவற்றைத் தனித்தனியே சொல்லுவா னென்னென்னில்; தனியே சொல்லுகைதான் போக்யமா யிருக்கையாலே.பெரியபெருமாள்திருக்கழுத்தைக்கண்டவாறேஜகத்தையெடுத்துத்திருவயிற்றிலே வைத்தமை தோன்றா நின்றதாய்த்து. (உண்டகண்டம்) விடுகாது தோடிட்டு வளர்ந்த தென்று தெரியுமாப்போலே. (முற்றுமுண்டகண்டம்) பஹிரண்டாந்தர்வர்த்திசேதநரும்பாதாளாதிகளும்.(உண்டகண்டம்)சேஷபூதனுக்கு கைங்கர்யம் தாரகமாயிருக்குமாப்போலே, இவற்றினுடைய ரக்ஷணம் தனக்கு தாரகமா யிருக்கிறபடி. "అత్తాచరాచరగ్రహణాత్" "యస్యబ్రహ్మచక్షత్రఞ్చ ఉభేభవతఓదనమ్" "அத்தாசராசரக்ரஹணாத்" "யஸ்யப்ரஹ்மசக்ஷத்ரஞ்சஉபேவதஓதநம்" என்னக்கடவதிறே. (அடியேனை யுய்யகொண்டதே) ஸ்வரூபஜ்ஞாநத்தையும் பிறப்பித்து ஸம்ஸாரார்ணவத்தி னின்றுமெடுத்து அக்கரையேற்றி "సన్తమేనమ్" "ஸந்தமேநம்" என்னும்படி பண்ணிற்று இப்படிப்பட்ட திருக்கழுத்தன்றோ.

இப்பாட்டில் - ஆபத்ஸகனான ஸர்வேச்வரன்படியும் இங்கே யுண்டென்கிறார். ... ... ... ... (௬)

அ.—ஏழாம்பாட்டில்,திருவதரத்தி லகப்பட்டபடி சொல்லுகிறார்.நீஞ்சப்புக்குத்தெப்பமிழந்தேனென்னுமாப்போலே. கீழ்ப்பாட்டில் - "முற்றுமுண்டகண்டங் கண்டீரடியேனை யுய்யக்கொண்டது" என்று திருக்கழுத்தானது தன்னுடைய ஆபதஸகத்வாதிகளைக் காட்டித்தம்மையெழுதிக்கொண்டபடியையிறேசொல்லிற்று;இதுக்குமேலான*திருப்பவளச்செவ்வாயானது,"உலகமுண்டபெருவாயன்" என்கிறபடியே ஆபத்ஸகத்வத்திலும் முற்பாடர் நாமல்லோமோ,ஆச்ரிதரக்ஷணதசிக்குமுப்பாக,"సర్వభూతేభ్యోదదామ్యేతద్వ్రతంమమ" "మిత్రభావేనసంప్రాప్తంనత్యజేయంకథఞ్చన" "సర్వపాపేభ్యోమోక్షయిష్యామి" "ஸர்வபூதேப்யோததாம்யே தத்வ்ரதம்மம" "மித்ரபாவேநஸம்ப்ராப்தம் நத்யஜேயம்கதஞ்சந" "ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி"

என்றாப்போலே சொல்லுகிற * மெய்ம்மை பெருவார்த்தைக்
கெல்லாம்ப்ரதாநகாரணம் நாமல்லோமோ, ஓராபரணத்தால்இடுகி
வப்பன்றிக்கே ஸ்வாபாவிகஸௌந்தர்யமுடையோமும்நாமல்லோ
மோ, "கருப்பூரம் நாறுமோ கமலப்பூநாறுமோ திருப்பவளச்செவ்
வாய்தான் தித்தித்திருக்குமோ" என்று-தேசிகரைக் கேட்கும்படி
யானஸௌகந்த்யஸாரஸ்ய முள்ளிட்ட போக்யதையை யுடையோ
மும்நாமல்லோமோவென்றாப்போலே தன்னுடைய ஏற்றத்தைக்
காட்டி, தம்முடைய திருவுள்ளத்தை அந்தக்கழுத்தினின்றும் தன்
பக்கலிலேவர விசித்துத்துவக்க, "செவ்வாய்முறுவலோ டெனது
ள்ளத்திருந்த, அவ்வாயன்றியானறியேன்" என்கிறபடியே-அந்தத்
*திருப்பவளச்செவ்வாயிலேதாம் அபஹ்ருதஹ்ருதயராயகப்பட்டபடி
யைச்சொல்லுகிறார். ஆனால் "செய்யவாயையோ வென்னைச்சிந்தை
கவர்ந்தது" என்னவமைந்திருக்க, கீழில் விசேஷணங்களால் செ
ய்கிறதென்னென்பதென்னில்; கீழ் அநுசாமபாட்டில் - "பாரமாய
பழவினைபற்றறுத் தென்னைத் தன்வாரமாக்கிவைத்தான்" என்று-
அநேக ஜந்மார்ஜிதமான பாபராசியையுடைய, இத்தலையில் ஒரு
ஹேதுவின்றிக்கே யிருக்கச்செய்தே என்னுடைய நிகர்ஷம் பாரா
தே ஸவாஸநமாகப் போக்கினானென்று சொல்லி, அது கூடுமோ
என்கிற அபேக்ஷையிலே, ஈசவராபிமாநியாய் துர்மாநியான ருத்ர
னுடைய துயரை அவன்தண்மைபாராதே போக்கினாப்போலே,
என்னுடைய நிகர்ஷம் பாராதே பாபங்களையும் போக்கினானென்
று ருத்ரனை த்ருஷ்டாந்தமாகச்சொன்னாராயிற்று கீழ்ப்பாட்டில் நின்
றது; இத்தைக்கேட்டவர்கள் இதுவிஷமோதாஹரணங்காணும்; அ
ந்தருத்ரனாகிறான் "తదాదిష్ఠ స్థానా సృష్టిసంహారకారకౌ" "ததாதர்சித ப
ந்தாநௌஸ்ருஷ்டிஸம்ஹாரகாரகௌ" என்கிறபடியே - ஸம்ஹார
மாகிற தொழிலிலே புருஷோத்தமனாலே நியுக்தனுகையாலே அதி
காரி புருஷனுமாய் அவனுக்கு ப்ரஹ்மசிரச்சேதநத்தாலே வந்த
ஆபத்துத்தானும் ப்ராமாதிகமாக ஒருக்கால் பிறந்த தாகையாலே
* தன்னலங்கல் மார்பில் வாசநீர் மாத்ரத்தாலே போக்கலாம், நீரா
கிறீர், "శ్రుతిస్మృతిర్మమైవాజ్ఞా" "ஶ்ருதிஸ்ம்ருதிர்மமைவாஜ்ஞா" என்
கிறபடியே பகவதாஜ்ஞாரூபமான வேதவைதிகமர்யாதையை யதி
க்ரமித்தவருமாய், அதுக்குமேலே, அக்ருத்யகரணக்ருத்யாகரண
ரூபமானபாபங்களை அநாதிகாலம்கூடுபூரித்தவருமாயன்றோ விருப்
பது, ஆனபின்பு உம்முடையபக்கல் ஒரு கைம்முதலின்றிக்கேயிரு
க்க உம்முடைய பாபங்களை அப்படிப்போக்கப்போமோ, அதுகிட
க்கஅந்தருத்ரன்றான் தேவர்களுக்குமேலாயிருக்கையாலே ஆனைமே
லேயிருந்தார் ஆனைமேலேயிருந்தார்க்குச் சுண்ணம்பிடுமோ பாதி

அ.—ஏழாம்பாட்டு. திருவயிற்றிலே அகப்பட்டுச் சொல்லு கிறார்; நீஞ்சப்புக்குத் தெப்பத்தையிழந்தேனென்னுமாப்போலே.

கையினார்சுரிசங்கனலாழியர்நீள்வரைபோல்
மெய்யினார்துளபவிரையார்கமழ்நீண்முடியெம்
மையனாரணியரங்கனாரரவினணைமிசைமேயமாயனார்
செய்யவாயையோவென்னைச்சிந்தைகவர்ந்ததுவே. (எ)

ப. ரை.— கையின் - திருக்கைகளிலே, ஆர் - அழகு நிறைந்த, சுரி - சுரியையுடைத்தான, சங்கு - ஸ்ரீ பாஞ்சஜந்யத்தையும், கனல் - சத்ருக்கள் பேரில் அனலையுமிழ்கிற, ஆழியர் - திருவாழியையுமுடையராய், வரைபோல்- பர்வதம்போலே, நீள் - அழகுமிக்கிருந்துள்ள, மெய்யினார் - திருமேனியையுடையராய், கமழ் விரையார் - பரிமளம் மிக்கிருந்துள்ள, துளபம் - திருத்துழாய் மாலையாலே அலங்க்ருதமாய், நீள் - உயர்ந்திருந்துள்ள, முடி - திருவபிஷேகத்தையுடையராய், எம் ஐயனார் - எனக்குபிதாவானவராய், அணி- ஸம்ஸாரத்துக்கு ஆபரணமான, அரங்கனார்-கோயிலிலேவந்து,அரவினணைமிசை- திருவநந்தாழ்வானாகிற திருப்பள்ளியிலே, மேய - கண்வளர்ந்தருளுகிற, மாயனார் - ஆச்சர்யச் செய்கைகளையுடையரான அழகிய மணவாளனுடைய, செய்யவாய்-சிவந்த திருப்பவளமானது, ஐயோ!—, என்னை - ஸ்த்ரீகளுடைய சிவந்த அதரத்தில் ஈடுபட்டிருந்த வென்னுடைய, சிந்தை - மநஸ்ஸை, கவர்ந்தது- தன்பக்கலிலே யிழுத்துக்கொண்டது. (எ)

வ்யா.—(கையினாரித்யாதி)வெறும்புறத்திலேபடவடிக்கவல்ல கையிலே அழகு நிறைந்து சுரியையுடைத்தான ஸ்ரீபாஞ்சஜந்யம்,ப்ரதிபக்ஷத்தின்மேலே அனலையுமிழாநின்றுள்ள திருவாழி, இவற்றையுடையராயிருக்கை.

---

அவன் க்ரௌர்யம் செய்யக்கூடும், மநுஷ்யர்களுக்கும் கீழாயிருக்கிற வும்முடைய பாபங்களைப்போக்கக்கூடுமோ, அதுகிடக்க "𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌃𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌯𑌜𑍍𑌯𑍇𑌷𑍍𑌠𑌾𑌯" "ப்ரஹ்மணஃபுத்ராயஜ்யேஷ்டாய" என்கிறபடியே-ப்ரஹ்மாவுக்கு ஜ்யேஷ்டபுத்ரனானபடியாலே தனக்கு பௌத்ரனென்றிட்டு அவன் கார்யம் செய்யலாம், அப்படியிருப்பதொருபந்த விசேஷம் உமக்கில்லையே, அதுவுங்கிடக்க அந்த ருத்ரன்றான் "மூவுலகும் பலிதிரிவோன்" என்கிறபடியே திருப்பாற்கடலிலே செல்ல,பின்பன்றோ வவனுடைய துயரைப்போககிற்று, நீரும் அப்படி போனீரோவென்ன; அவற்றுக்கு அடைவே உத்தரமாயிருக்கிறது.

வ்யா.—(கையினார்சுரிசங்கனலாழியா)"கரிமுனிந்தகைத்தலம்" என்றும், "𑌪𑌰𑌿𑌘𑍋𑌪𑌮𑌾𑌃" "பரிகோபமா:" என்றும-வெறும்புறத்திலே விரோதிகளை நிரஸிக்கவற்றாயிருக்கச்செய்தே அசிந்த்யசக்திகளானதிவ்யாயுதங்களை தரித்துக்கொண்டு,* எப்போதுங்கைகழலா நேமியானாயிருக்கிறது நம்மேல்வினைகடிகைக்கன்றோவெனகிறார்.

---

ஏழாம்பாட்டு. இங்கு, தெப்பம்-அநுபவபரிகரமான நெஞ்சு. படவடிக்கை - ஈடுபடுத்துகை.

ஸ்ரீபாஞ்சஜந்யத்துக்கு சுரிஸ்வபாவமானாப்போலே திருவாழியாழ்வானுக்கும் ப்ரதிபக்ஷத்தின்மேலே அனலுமிழ்கை ஸ்வபாவம். திருக்கோட்டியூரிலே அநந்தாழ்வான், பட்டரை, "ஸ்ரீ வைகுண்டநாதன் த்விபுஜனோ, சதுர்ப்புஜனோ" என்று கேட்க; "இரண்டுமழகியதே; த்விபுஜனாகில் பெரிய பெருமாளைப்போலே யிருக்கிறது, சதுர்ப்புஜனாகில் பெருமாளைப்போலே யிருக்கிறது "என்றார்.

ஸ்ரீ பாஞ்சஜந்யத்துக்குச் சுரிஸ்வபாவமானாப்போலே திருவாழிக்கு ப்ரதிபக்ஷிகள் மேலே கனலுமிழ்கையும் ஸ்வபாவமிறே. வெறும்புறத்திலே படவடிக்க வல்லதையிலே அழகு நிறைந்து சுரியையுடைத்தான பாஞ்சஜந்யம், ப்ரதிபக்ஷத்தின்மேலே நெருப்பை யுமிழாநின்றுள்ள திருவாழி இவற்றை யுடையரா யிருக்கை. "సఘోషో ధార్తరాష్ట్రాణాం హృదయాని వ్యదారయత్" "ஸகோஷோதார்த்தராஷ்ட்ராணாம் ஹ்ருதயாநிவ்யதாரயத்" என்றும், "தீயவசுரர் நடலைப்படமுழங்கும்" என்றுஞ் சொல்லுகிறபடியே விரோதிவர்க்கத்தை தன் த்வநியாலே தானே நிரஸிக்கவல்லஸ்ரீ பாஞ்சஜந்யத்தையும், "கருதுமிடம்பொருது" எனகிறபடியே விரோதிவர்க்கத்தை, "கூறாய் நீறாய் நிலனாகி" என்கிறபடியே யழியச்செய்யுந் திருவாழியையும் தரித்துக்கொண்டிருக்கிறது என்னுடைய*அறுக்கலாப்பாபங்களைப்போக்குகைக்கன்றோ. பட்டர் திருக்கோட்டியூரிலே யெழுந்தருளியிருககிறகாலத்திலே ஒருவிசேஷ திவஸத்திலன்று கோளரியாழ்வானைப்பார்தது தெற்காழ்வார் சொன்னவார்த்தையை ஸ்மரிப்பது. திருக்கோட்டியூரிலே யெழுந்தருளியிருக்க அனந்தாழ்வான், பட்டரை, ஸ்ரீ வைகுண்டநாதன் த்விபுஜனோ சதுர்ப்புஜனோ வென்றுகேட்க; சதுர்ப்புஜனாக வடுக்குமென்ன; இரண்டிலும் அழகிய தேதென்ன; த்விபுஜனாகில் பெரியபெருமாளைப்போலே யிருக்கிறது, சதுர்ப்புஜனாகில் பெருமாளைப்போலே யிருக்கிறதென்றார். (கையினார்சுரிசங்கனலாழியர்) நம்மைப்போலன்றிக்கே தெளியக்கண்டவர்கள் பெரியபெருமாளையும் சதுர்ப்புஜராயிறே யநுபவிப்பது.

"சுரி" என்று - சுக்தியாய், அத்தால் - துளையென்றபடி. "சங்கு" என்றவிடத்தில் குறைந்து, கடைக்குறைச்சலாய் சங்குகனல் என்றாய், "கனலாழி" என்று - நெருப்பையுமிழுகிற திருவாழியென்றபடி. பெரியபெருமாள் சதுர்ப்புஜரா யிருக்கச் செய்தேயும் ஆப்தர்க்கு மேலேத்விபுஜராய்த்தோற்றுகிறாப்போலேபரமபதநாதனும் சதுர்ப்புஜனா யிருக்கச்செய்தேயும் ப்ரமாணாந்தரங்களாலே த்விபுஜராய்த் தோற்றினாகில், பெரியபெருமாள் மறைத்துக் காட்டுகிறாப்போலே ப்ரமாணங்களும் மறைத்துச் சொல்லுகிறதென்று பட்டர்க்குக் கருத்து.

(நீள்வரை) மலையையும் கடலையும் ஒப்புச்சொல்லுமித்தனையி றே. நீட்சி–போக்யதாப்ரகர்ஷம். *பச்சைமாமலைபோல்மேனி, அதுக்குமேலே யொப்பனையழகு.

(துளபவிரையார்கமழ்நீண்முடி) பரிமளம் மிக்கிருந்துள்ள திருத்துழாய்மாலையாலே அலங்க்ர்தமாய் ஆதிராஜ்யஸூசகமான திருவபிஷேகத்தை யுடையருமாய். (எம்மையனார்) உறவுதோற் றுகை. எனக்கு ஜநகரானவர்.

(அணியரங்கனார்) ப்ராப்தவிஷயமாயிருக்கக் கடக்கவிராதே ஸம்ஸாரத்துக்குஆபரணமான கோயிலிலேவந்து அண்ணியருமா யிருக்கிறபடி.

---

(நீள்வரைபோல் மெய்யினார்) திவ்யாயுதங்கள்தானும் மிகையென்னும்படி மேருமந்தரமாத்ரமான வென்னுடைய பாப ராசிகளை, மலையையிட்டு மலையை நெரித்தாப்போலே நெரிக்கவற் றான பெரியமலைபோலே திண்ணிதான வடிவையுடையவர். மலை யைக் கடலை ஒப்பாகச் சொல்லுமித்தனை. நீட்சி - போக்யதாப்ர கர்ஷம். [பச்சைமாமலைபோல் மேனி] இந்த வடிவை யநுபவிப் பார்க்கு ப்ரகாசரூபமாயாய்த் திவர்களிருப்பது; அதுக்குமேலே ஒப்பனையழகு.

(துளபவிரையார் கமழ்நீண்முடி) பெரியவர்கள்காரியஞ்செ ய்தவன் உம்முடையகாரியஞ்செய்யப் புகுகிறானோ வென்ன; வெ றும் ப்ரஹ்மருத்ராதிகளுக்கே ஸேஷியென்றன்றே வவன்முடிக வித்திருக்கிறது, "ஸிநஸௌதுமே" "பிஸாகயந்கிலமௌளிஃ" "ஸம் ஸ்ஸ்ய" "பதிம்விச்வஸ்ய" என்றுஞ் சொல்லுகிறபடியே உபய விபூதிநாதனென்றன்றோ. (துளபவிரையார்கமழ்) * ஸர்வகந்த வஸ்துவுக்குத் தன்கந்தத்தாலே மணங்கொடுக்கவற்றாய் மேன் மைக்குடலாயிருக்கிறபடி. (நீண்முடி) என்னளவும் வந்து என்னை விஷயீகரித்தமுடி. (எம்மையனார்) ருத்ரனுக்கு பௌத்ரனாயிருப்ப தொருபந்தவிஸேஷமுண்டே,உமக்குஅதில்லையேயென்றுசொன் னதுக்குஉத்தரஞ்சொல்லுகிறார்;-அவனுக்கு பௌத்ரத்வநிபந்தந மொன்றுமேயன்றோ வுள்ளது, "மாதா பிதா ப்ராதா" "மாதாபிதாப்ரா தா" இத்யாதிப்படியேஸர்வவிதபந்துத்வமுமுள்ளது எனக்கேயன் றோ.(எம்மையனார்) என்னைப்பெற்ற தமப்பனார். "தேவபுத்ரஸ்ய" "பி தேவபுத்ரஸ்ய" இத்யாதியிற்படியே இத்தலையிற் குற்றங்களைப் பொறுக்கவேண்டும்படியான பந்தமுடையவனன்றோ.

(அணியரங்கனார்) அந்த ருத்ரன் க்ஷீராப்தியளவும் போய வன்றோ காரியங்கொண்டது, நீர் அவ்வளவும் போந்திலீரோயென்ன; அதுக்கு உத்தரமாக அவன் *மூவுலகும் பலிதிரிவோனுகையாலே

(அர்வினணைமிசை) ரத்நங்களையெல்லாம் தங்கத்திலே புதைத்துக் காட்டுமாப்போலே, தன்னழகுதெரியத் திருவனந்தாழ்வான்மேலே சாய்ந்து காட்டுகிறபடி. (மேயமாயனார்) மின்மினி பறக்கிறபடி. [𑌸𑌮𑌯𑌾𑌭𑍋𑌧𑌿𑌤𑌶𑍍𑌶𑍍𑌰𑍀𑌮𑌾𑌨𑍍 - ஸமயாபோதிதஶ்ஸ்ரீமாந்] எல்லார்க்கும் ஒன்றிலே சாய்ந்தவாறே பொல்லாங்கு தெரியும், இங்குப் பழையவழகும் கிறம்பெறும்.

---

போய்க் காரியங்கொள்ள சக்தனானன், * அழுங்குழவியா யிருக்கிற வென்போல்வாரை ரக்ஷிக்கைக்கன்றோ, ப்ரஜைகிணற்றிலே விழுந்தால் கூடக் குதிக்குந்தாயைப்போலே இங்குவந்து சாய்ந்தருளிற்று. (அணியரங்கனார்) "𑌮𑌾𑌤𑌾𑌪𑌿𑌤𑌾𑌭𑍍𑌰𑌾𑌤𑌾 𑌨𑌿𑌵𑌾𑌸𑌶𑍍𑌶𑌰𑌣𑌂𑌸𑍁𑌹𑍃𑌦𑍍𑌗𑌤𑌿𑌰𑍍𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌃" "மாதாபிதாப்ராதா நிவாஸஶ்ஶரணம்ஸுஹ்ருத்கதிர் நாராயண:" என்கிறபொதுவன்று, "திருவரங்கத்துளோங்கும்" இத்யாதிப்படியே- பெரியபெருமாள்தாமேயென்கிறார். (அணியரங்கனார்) அலங்காரமான கோயிலிலேவந்து சாய்ந்தவர். ஆபரணமானது பூண்டவனுக்குநிறங்கொடுக்கிறது, இவ்வூரும்ரக்ஷகனுக்கு நிறங்கொடுக்கிறதாகையாலே சொல்லுகிறது. (அணியரங்கனார்) ப்ராப்திவிஷயமாயிருக்கக்கடக்கவிராதே ஸம்ஸாரத்துக்கு ஆபரணமானகோயிலிலேவந்து அண்ணியருமாயிருக்கிறபடி.

(அரவினணைமிசைமேயமாயனார்) இவ்வளவேயோ வுள்ளது, "𑌯𑌤𑍍𑌰 𑌰𑌾𑌮𑌸𑍍𑌸𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑌣𑌃" "யத்ரராமஸ்ஸலக்ஷ்மண:" என்றும், "நாகணைமிசைநம்பிரான்சரணே சரண்நமக்கு" என்றுஞ் சொல்லுகிறபடியே புருஷகாரபலமுண்டென்கிறார். (அரவினணைமிசைமேய) ரத்நஙகளையெல்லாம் சாடியிலே பாரித்துக் காட்டுமாப்போலே தன்னழகுதெரியாதார்க்குத் திருவனந்தாழ்வான்மேலேசாய்ந்துகாட்டினபடி. (அரவினணைமிசைமேய) தான் புருஷகாரமாகச் சிலரைக் காட்டிக்கொடுத்தால் அவர்களை அவன் ரக்ஷியாதேவிடில் தானும் அவனையெடுத்து உதறிப்போகும். (அரவிணணைமிசைமேயமாயனார்) "𑌸𑌮𑌯𑌾𑌬𑍋𑌧𑌿𑌤𑌶𑍍𑌶𑍍𑌰𑍀𑌮𑌾𑌨𑍍 𑌸𑍁𑌖𑌸𑍁𑌪𑍍𑌤𑌃 𑌪𑌰𑌨𑍍𑌤𑌪𑌃" "ஸமயாபோதிதஶ்ஸ்ரீமாந்ஸுகஸுப்த:பரந்தப:" என்கிறபடியே-தானெழுந்திருந்து ஒரு வ்யாபாரம்பண்ணவேணுமோ, புலிகிடந்த தூறென்றால் மிருகங்களெல்லாம் காடுபாய்ந்து போமாப்போலே ஆச்ரிதருடையவிரோதிவர்க்கமடையத் தான்கிடக்கிறபடியைக்கண்டபோதே "காணேவொருங்கிற்றுக்கண்டிலமால்" என்னும்படி கிடக்கிற ஆச்சர்யபூதன். (மாயனார்) மின்மினி பறக்கிறபடி. [𑌸𑌮𑌯𑌾𑌬𑍋𑌧𑌿𑌤𑌶𑍍𑌶𑍍𑌰𑍀𑌮𑌾𑌨𑍍-ஸமயாபோதிதஶ்ஸ்ரீமாந்] எல்லார்க்கும் ஒன்றிலே சாய்ந்தபோதேபொல்லாங்குசன் தெரியும், இங்குப் பழைய வழகும் நிறம்பெறும்.

---

கிடையழகு வாசாமகோசரமாய் ஆச்சர்யமாயிருக்கையாலே "இதம் இதம்" என்னப்போகாமல் மின்மினிபறக்கிறதென்றபடி.

(செய்யவாய்) ஸ்த்ரீகளுடைய பொய்ச்சிரிப்பிலே துவக்குண்டார்க்கு இச்சிரிப்புக்கண்டால் பொறுக்கப்போமோ.

(ஐயோ) திருவதரமும் சிவப்பும் அநுபவிக்க அரிதாய் "ஐயோ!" என்கிறார். (என்னை) பண்டே நெஞ்சுபறி கொடுத்த வென்னை அந்யாயம் செய்வதே! என்று கூப்பிடுகிறார். கல்லை நீராக்கி, நீரையும் தானே கொண்டது.

இப்பாட்டில் - ஸ்ரீ வைகுண்ட நாதன்படியும் இங்கே காணலாமென்கிறார்... ... ... ... ... (எ)

---

(மாயனார்) அங்ஙனன்றிக்கே, "கிடந்ததோர் கிடக்கைகண்டு" எனகிறபடியே இன்று நாமுஞ்சென்றநுபவிக்கப் பார்த்தாலும் ஒருக்கடித்தென்னவொண்ணாதே மல்லாந் தென்னவொண்ணாதேயிருக்கிற ஆச்சர்யத்தைச் சொல்லிற்றாகவுமாம். (மாயனார் செய்யவாயையோ வென்னைச் சிந்தை கவர்ந்ததுவே) ஸ்வநிகர்ஷாநுஸந்தாநத்தாலே பிற்காலிக்கிறவென்னை, ஸ்வாபாவிகஸௌந்தர்யத்தையும் போக்யதையையுமுடைய திருப்பவளமானது தன்னுடைய ஸ்மிதத்தைக்காட்டி, அருகே சேர்த்துக்கொண்டு என்னுடைய மநஸ்ஸை அபஹரித்தது. (என்னைச் சிந்தைகவர்ந்தது) உழக்கைக்கொண்டு கடலின் நீரை யளக்கப்புக்கது தன்னையும் பறிகொடுத்தேன். (என்னைச் சிந்தைகவர்ந்தது) * துவர்த்தசெவ்வாயினார்க்கே துவக்கறத்துரிசனானவென்னைக்கிடீர் இப்படி அகப்படுத்திற்றென்கிறார். (செய்யவாய்) ஸ்த்ரீகளுடைய பொய்ச்சிரிப்பிலே துவக்குண்டார்கரு இச்சிரிப்புக்கண்டால் பொறுக்க வொண்ணுமோ. (ஐயோ) திருவதரமும் சிவப்பும் அநுபவிக்க வரிதாய்"ஐயோ" என்கிறார்.

(ஐயோ) அவரும் தம்மை முழுககவநுபவிப்பிக்கப்பார்த்தார், நானும் முழுக்கவநுபவிப்பேனாகப்பாரித்தேன், இத்தை, திருவதரம் ஒட்டாதே யிடையிலே இறுஞ்சிக்கொள்வதே! ஐயோ வென்கிறார். (என்னை) கல்லை நீராக்கி நீரையும் தானே கொண்டது. சித்தாபஹாரத்தைப்பண்ணி ஆத்மாபஹாரத்தை யழித்தது. ப்ரதாநசேஷியைக் கண்டவாறே த்வாரசேஷியளவில் நில்லாதிறே.

இப்பாட்டில் - ஸ்ரீ வைகுண்டநாதன் படியும் இங்கே காணலாமென்கிறார். ... ... ... ... ... (எ)

---

நெஞ்சுபறிகொடுக்கை - இரண்டாம்பாட்டிலே; அங்கே கல்லான நெஞ்சை நீராக்கி, இங்கே அந்தநீரையும் அபஹரித்ததென்றபடி. ... ... ... ... (எ)

அ.—எட்டாம்பாட்டு. திருக்கண்கள் என்னை அறிவுகெடுத்த தென்கிறார்.

---

அ.—எட்டாம்பாட்டில், திருக்கண்கள் என்னை அறிவுகெடுத்த தென்கிறார். கீழ்ப்பாட்டிலே-"செய்யவாயையோ வென்னைச் சிந்தைகவர்ந்தது" என்று திருப்பவளத்திலே இவர் அபஹ்ருதஹ்ருதயராகிறபடியைக் கடைக்கணித்துக்கொண்டுகிடக்கிற திருக்கண்களானவை, "செய்யவாயையோ" என்று இவர் தாமேசொன்னார், அப்படியே சிவப்பால்வந்த அழகொன்றுமேயன்றோ அந்தத்திருவதரத்துக்குள்ளது, சிவப்பும் கறுப்பும் வெளுப்புமான பரபாகத்தாலுள்ள வழகுடையோமா யிருப்போமும் நாமல்லோமோ, "మిత్రభావేన సంప్రాప్తం నత్యజేయమ్" "மித்ரபாவேநஸம்ப்ராப்தம் நத்யஜேயம்" என்றாப்போலே சொல்லுகிற வார்த்தைகளுமெல்லாம் ஜீவிக்கையாகிறது, "జాయమానం హి పురుషం యం పశ్యేత్" "ஜாயமாநம் ஹி புருஷம் யம்பச்யேத்" என்று - ஜாயமாநதசையில் நாம்கடாக்ஷித்தபின்பு ஸாத்விகனாய் முமுக்ஷுவான வளவிலே யன்றோ, அதுகிடக்க அந்த வார்த்தைதான் "ஆயுதமெடேன்" என்று ஆயுதமெடுத்தாப்போலே யன்றிக்கே, "மெய்ம்மைப்பெருவார்த்தை" என்று விச்வஸித்திருக்கலாம்படி வாத்ஸல்யமடியாகப் பிறந்த வார்த்தையென்று அந்த அகவாயில் வாத்ஸல்யத்துக்கு ப்ரகாசகமா யிருப்போமும் நாமல்லோமோ, அதுகிடக்க, "యథా కప్యాసం పుణ్డరీకమేవమక్షిణీ" "யதாகப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ" என்றும் "அனைத்துலகமுடையவரவிந்தலோசநன்" என்றும் சொல்லுகிறபடியே மேன்மைக்கு ப்ரகாசகமா யிருப்போமும் நாமல்லோமோ, அதுக்குமேலே, "పుణ్డరీకాక్ష రక్షమామ్" "புண்டரீகாக்ஷ ரக்ஷமாம்" என்றும், "పుణ్డరీకాక్ష నజానే శరణం పరమ్" "புண்டரீகாக்ஷ நஜாநே சரணம்பரம்" என்றும் சொல்லுகிறபடியே தந்தாமுடைய ஆபந்நிவாரணத்துக்கு உபாயமாகப் பற்றுவதும் நம்மை புரஸ்கரிக்கையாலே உபாயபாவத்தைப்பூரிக்கிறோமும்நாமன்றோ, "தாமரைக்கண்ணனை விண்ணோர் பரவும் தலைமகனை" என்று அவனுக்கு போக்யதாப்ரகர்ஷமுண்டாகிறது நம்மோட்டைச்சேர்த்தியாலன்றோ வென்றாப்போலே தங்களுடைய ஏற்றத்தைக்காட்டி, "அல்வாயன்றியானறியேன்" என்றிருக்கிற தம்மை, "தாமரைக் கண்களுக்கு அற்றுத்தீர்ந்து" என்னும்படி பண்ணிக்கொண்டபடியைச்சொல்லுகிறார். "செங்கனிவாயின்திறத்ததாயும் செஞ்சுடர்நீண்முடி தாழ்ந்ததாயும் சங்கொடுசக்கரம் கண்டுகந்தும்" என்றவளவும் சொன்னார் - கீழ்; * தாமரைக்கண்களுக்கு அற்றுத் தீர்ந்தபடி சொல்லுகிறார் - இதில்.

பரியனாகிவந்தவவுணனுடல்கீண்டவமரர்க்
கரியவாதிப்பிரானரங்கத்தமலன்முகத்துக்
கரியவாகிப்புடைபரந்துமிளிர்ந்துசெவ்வரியோடிநீண்டவப்
பெரியவாயகண்களென்னைப்பேதைமைசெய்தனவே. (அ)

ப-ரை.—பரியனாகி - வரபலங்களாலே பருத்த சரீரத்தை யுடையனாய், வந்த - "பரதத்வமுண்டு" என்ற ப்ரஹ்லாதனை நலிகைக்குவந்த, அவுணன் - அஸுரனான ஹிரண்யகசிபுவினுடைய, உடல் - சரீரத்தை, கீண்ட - கிழித்துப் பொகட்டவனாய், அமரர்க்கு - ப்ரஹ்மாதி தேவர்களுக்கு, அரிய - கிட்டவரியனாய், ஆதிகாரணபூதனாய், பிரான் - தான் முற்கோலிவந்து உபகரிக்குமவனாய், எல்லார்க்கு முதவுகைக்காக, அரங்கத்தமலன் - கோயிலிலே வந்து கண்வளர்ந்தருளுகையால் வந்த சுத்தியையுடையனான அழகியமணவாளனுடைய, முகத்து - திருமுகமண்டலத்திலே, கரியவாகி - கறுத்து, புடைபரந்து - விசாலமாய, மிளிர்ந்து - சலித்து, செவ்வரியோடி - செவ்வரிபடர்ந்து, நீண்ட - காதளவும் நீண்ட, அ - அப்படிப்பட்ட, பெரியவாய - பெரியனவாகிய, கண்கள் - திருக்கண்களானவை, என்னை - கல்நெஞ்சனானவென்னை, பேதைமைசெய்தன - தனபக்கலிலே பக்ஷபதிக்கும்படி பண்ணிற்று. (அ)

---

"பாரமாயபழவினை பற்றறுத்து" என்று - தம்முடைய அஜ்ஞாநாஸக்தர்மாதி நிகர்ஷம் பாராதே, பெரியபெருமாள், பெரிய பிராட்டியார் புருஷகாரமாக, தாம் அநாதிகாலமார்ஜித்த பாபங்களை யடையப்போக்கினபடியைச் சொன்னாராய், அது கூடுமோ வென்கிற அபேக்ஷையிலே கூடுமென்னுமிடத்துக்கு ருத்ரனை த்ருஷ்டாந்தமாகச் சொன்னாராய், அநந்தரம் விஷமத்ருஷ்டாந்தமென்று சிலஹேதுக்களைச் சொல்ல அவற்றுக்கு அடைவே உத்தரஞ்சொன்னார் - கீழிற்பாட்டில்; இதில் - அந்த "பாரமாய" என்கிற பாட்டைப்பற்ற ஓரபேக்ஷை யெழும்ப அதுக்கு உத்தரமாயிருக்கிறது. அதாகிறது - அநாதி காலார்ஜிதமானவும்முடைய பாபங்களை யடையப்போக்கினுனென்றீர், அது மறுகிளையெழாதபடி போய்த்ததாவது - அவித்யாஸஞ்சித கர்மமென்றும், அநாத்யவித்யா ஸஞ்சித புண்யபாபகர்மப்ரவாஹ ப்ரவர்த்தமென்னும் சொல்லுகிறபடியே அந்தகர்மத்துக்கு ஹேதுபூதையான அவித்யைபோனாலன்றோ அதுபோய்த்ததாவது, அதுபோய்த்ததோவென்கிற அபேக்ஷையிலே, அந்த அவித்யையாவது தன்னோடு அநுஸம்பந்தித்தாரை பகவத்ப்ரவணராக்கவொட்டாதே விபரீதங்களை அநுஷ்டிப்பிக்குமதிறே; அப்படியே தன்னோடநுபந்தித்த ப்ரஹ்லாதனை பகவத்ப்ரவணனாகவொட்டாதே விபரீதங்களை யநுஷ்டிப்பிக்கத் தேடின ஹிரண்யனை, "తమో హిరణ్యరూపేణ పరిణామముపాగతమ్" "தமோ ஹிரண்யரூபேண பரிணாமமுபாகதம்" என்கிறபடியே-தமோகுணம் ஹிரண்யனென்று ஒருவடிவுகொண்டதாயிறே யிருப்பது; அப்படியே யிருக்கிறவனை, "அங்கப்பொழுதே யவன் வீயத்தோன்றிய" என்கிறபடியே ந்ருஸிம்ஹரூபியாய் வந்து தன்திருக்கையி லுகிராலே கிழித்துப்பொகட்டாப்போலே, * ஞானக்கையாலேஎன்னுடைய அவித்யையைக்கிழித்துப்பொகட்டானென்கிறார்.

வ்யா.—(பரியனாகிவந்த) பகவத்குணங்களை யநுஸந்தித்து நைந்திராமே, சேஷத்வத்தை யறிந்து மெலிந்திராமே, ஸர்வேச்வரனை ஆசைப்பட்டுத் தளர்ந்த வுடம்பாயொசிந்திராமே. (பரிய) நரஸிம்ஹத்துக்கும் பிற்காலிக்கவேண்டும்படி யிருக்கை. ஊட்டி யிட்டுவளர்த்தபன்றிபோலேஉடம்பைவளர்த்தானித்தனை (வந்த) இப்போது தாம் வயிறுபிடிக்கிறார்.

(அவுணனுடல்கீண்டு) நரஸிம்ஹத்தினுடைய மொறாந்த முகமும், நாமடிக்கொண்ட வுதடும், செறுத்து நோக்கின நோக்கும், குத்தமுறுக்கினகையும். கண்டபோதே பொசுக்கின பன்றி போலே மங்குநாரைக்கிழிக்குமாப்போலே கிழித்தபடி.

---

வ்யா.—(பரியனாகி) பகவத்குணததை யநுஸந்திதது நைந்திராமே சேஷித்வத்தை யறிந்து மெலிந்திராமேஸர்வேச்வரனையாசைப்பட்டுத் தளர்ந்த வுடம்பா யொசிந்திராமே நரஸிம்ஹத்துக்கும் பிற்காலிக்கவேண்டும்படி யிருக்கை. ஆத்மவஸ்துவென்று ஒன்றுளது, அதுக்கு 'அவனே சேஷியாயிருக்கையாலே அந்த சேஷியானவனை நம்முடையசேஷத்வமாகிற ஸ்வரூபஸித்திக்காகப் பெறவேணுமென்று, * நினைந்து நைந்துள்கரைந்துருகி உடம்பையிளைக்கப்பண்ணுகிறானன்றே. அங்ஙனன்றியிலே பரமாத்மாவை யநுபவிக்க வாசைப்பட்டுப் பெறாமையாலே பச்திதலைமண்டையிட்டு, "தின்பாலன்பாயே - அடியேனுடலம் - நீராயலைந்து கரையவுருக்குகின்ற நெடுமாலே" என்கிறபடியே சரீரத்தை இளைப்பித்து மெலிந்திருக்கிறானன்றே; "பரமேச்வரஸம்ஜ்ஞோஜ்ஞகிமன்யோமயயபவஸ்திதே" "பரமேச்வரஸம்ஜ்ஞோஜ்ஞகிமந்யோமயயபவஸ்திதே" என்கிறபடியேதன்னுடையஅஹங்காரமமகாரங்களாலேபூண்கட்டி, "பலவாந்ப்ரஹ்மராக்ஷஸ:" "பலவாந்ப்ரஹ்மராக்ஷஸ:" என்னுமாப்போலே பருக்கப்பண்ணின சரீரமிறே.ராஜாக்களுக்குச்சிலர்ஊட்டியிட்டுச் சிலகாவற்பன்றிவளர்த்துவைக்குமாப்போலே, நரஸிம்ஹத்தினுக்கு இரைபோரும்படிதேவர்கள்வரங்களாலேயூட்டியிட்டுவளர்த்துவைத்தார்கள்; மேல் இத்தால் வரும் அநர்த்தமு மறியாமையாலே வரங்கொடுத்து பருக்கவளர்த்தார்கள்;இதுதானேதாங்களிளைக்கைக்கு உறுப்பாய்த்து.(வந்த) இப்போது தாம்வயிறுபிடிக்கிறார். இன்றும் வருகிறானாகக் காணும் இவர்க்குத் தோற்றுகிறது. அநுகூலனாய் வருகையன்றிக்கே பகவத்தத்வமில்லையென்றும் உண்டென்கிறவனை நலிகைக்கென்றும்வந்த க்ரௌர்யத்தை நினைத்து பயப்படுகிறார்.

(அவுணன்) இப்படி பகவத்பாகவத விஷயமென்றால் அவன் இவட்கென்கைக்கு ஹேதுவென்னென்னில்; * ஆஸுரீம் யோநிமாபந்நா ஆஸுரீம் யோநிமா பந்நனாய் மூட்டுகையாலே யென்கிறார்.

(அமரர்க்கரிய ஆதிப்பிரான்) தேவர்களுக்கு உத்பாதகனை மாத்ரமென்னை; ஆளாய்நிற்பது ஆச்ரிதர்க்கு. சிறுக்கனுக்கு உதவிநிற்கிற நிலைதன்னிலே ப்ரஹ்மாதிகளுக்குபரிச்சேதிக்கவொண்ணாதபடி நிற்கிற ப்ரதாநன். "క్వాహంరజఃప్రకృతిరీశ తమోధికే౽స్మిన్ జాతస్సురేతరకులేక్వతవానుకమ్పా। నబ్రహ్మణో నచభవస్య నవైరమాయాయోమే౽ర్పితశ్శిరసిపద్మకరప్రసాదః" "க்வாஹம்ரஜப்ரக்ருதிரீஶதமோதிகேஸ்மிந்ஜாதஸ்ஸுரேதரகுலேகவதவாநுகம்பா। நப்ரஹ்மணோநசபவஸ்யநவைரமாயாயோமேர்ப்பிதஶ்ஶிரஸிபத்ம கரப்ரஸாத꞉."

---

(உடல்கீண்டு) திருவாழியாழ்வானுக்கும்பிற்காலிக்கவேண்டும்படியிறே*ஊன்மல்கிமோடுபருத்திருக்கிறபடி. அப்படியிருக்கிறஹிரண்யசரீரமானது நரஸிம்ஹத்தினுடைய மோருந்தமுகமும் நாமடிக்கொண்டவுதடும், இருத்துநோக்கினநோக்கும்குத்தமுறுக்கினகையும் கண்டபோதே பொசிக்கின பன்றிபோலே உலர்ந்த தாழைநாரைக்கிழித்தாப்போலே கிழித்தபடி. (உடல்கீண்ட) தன்னதான ஆத்மவஸ்துவுக்கு அழிவுவாராமல் "கிள்ளிக் களைந்தான்" என்னுமாப்போலே, அஹங்காரஹேதுவான தேஹத்தைக் கிழித்துப் பொகட்டான்.

(அமரர்க்கரிய) இப்படிப்ரஹ்லாதனுக்குஎளியனாய்நிற்கிற அவ்வளவுதன்னிலேப்ரஹ்மருத்ராதிகளுக்குக்கிட்டவரியனாயிருக்கும். "క్వాహంరాజఃప్రకృతిరీశతమోధికే౽స్మిన్ జాతస్సురేతరకులేక్వతవానుకమ్పా। నబ్రహ్మణో నచభవస్య తవైరమాయా యో మే౽ర్పితశ్శిరసిపద్మకరప్రసాదః" "க்வாஹம்ராஜ꞉ப்ரக்ருதிரீசதமோதிகேஸ்மிந் ஜாதஸ்ஸுரேதரகுலேக்வதவாநுகம்பா। நப்ரஹ்மணோநசபவஸ்யதவைரமாயாயோ மேர்ப்பிதஶ்ஶிரஸிபத்மகரப்ரஸாத꞉." ஸ்வஸாமர்த்யங்கொண்டுகிட்டநினைப்பார்க்குதயைபண்ணுமளவிலும்கிட்டவரிதாயிருக்கும்; அநந்யப்ரயோஜநர்க்குச சிற்றத்திலும் கிட்டலாயிருக்கும். அங்ஙனன்றியிலே, தேவர்களுக்கு அரியனாயிருக்கிறவன் தமக்கு எளியனாயிருக்கிறபடியைச் சொல்லுகிறார். அதாவது - தம்முடைய நிகர்ஷம் பாராதே தம்மையே விஷயீகரித்துத் தம்முடையதுஷ்காமங்களையடைய ஸ்வாஸநமாகப் போக்கி, தம்மை முழுக்கவநுபவிப்பித்துக்கொண்டிருக்கிறபடியைச் சொல்லுகிறார்.

இப்படி தேவர்களுக்கரியனாயிருக்கிறவன் உமக்கு எளியனாயிருக்கைக்கடியென்னென்னென்னில் (ஆதி) காரணபூதன். பஹுபுத்ரவானானவன் விகலகரணனான புத்ரன்பக்கலிலே போரவத்ஸலனாயிருக்குமாப்போலே, இவனும் ஜகத்காரணபூதனாயிருக்கச்செய்தேயும் என்னுடைய அஜ்ஞாநாசக்திகளைத் திருவுள்ளம்பற்றி என்னளவிலே போரவத்ஸலனாயிருக்கும். (ஆதி) தான்முற்கோலி உபகரிக்குமவன்.

(ஆதிப்பிரான்) தான் முற்கோலி உபகரிக்குமவன். (பிரான்) ப்ரஹ்லாதனுக்கு எளியனான நிலையும் ப்ரஹ்மாதிகளுக்கு அரியனான நிலையும் இரண்டும் தமக்கு உபகாரமாயிருக்கிறது.

(அரங்கத்தமலன்) எல்லார்க்குமுதவும்படி கோயிலிலேவந்து கண்வளர்ந்தருளுகையாலே வந்தசுத்தி. ஒருக்கால் தோற்றிப்போதல், அவதாரம்போலே தீர்த்தம்ப்ரஸாதித்துப்போதல் செய்யாமையாலே வந்த சுத்தியாகவுமாம்.

---

(அமரர்க்கரிய வாதிப்பிரான்) தமக்கு உபகரித்தபடியை நினைத்து "பிரான்" என்கிறாரல்லர், தேவர்களுக்குக்கிட்ட வரியனாயிருக்கச்செய்தே ப்ரஹ்லாதனுடைய விரோதியை, முற்பாடனாய்ச்சென்றுபோக்கின உபகாரத்தைநினைத்துச்சொல்லுகிறார். (ஆதிப்பிரான்)ப்ரஹ்லாதன் "ஸர்வகாரணம்" என்ன; ஹிரண்யன் அதுக்குப்பொறாமல் "இந்தத்தூணிலுண்டோ அந்தகாரணபூதன்" என்று தூணைத்தட்டிக்கேட்க; ப்ரஹ்லாதனும் "ஸர்வாந்தராத்மாக்காண் அவன், ஆகையாலே இதிலுமுண்டு" என்ன; "அங்கப்பொழுதே" என்கிறபடியே-அவன் தட்டின தூணிலேவந்து நரஸிம்ஹரூபமாய்த்தோன்றி அவன் தட்டின கையைப்பிடித்து, "பொன்பெயரோன்வாய்தகர்த்து மார்பிடந்தான" என்கிறபடியே அவனைக கதுப்பிலே யடித்து அவன்மார்பைக்கிழித்து ப்ரஹ்லாதனுடைய ப்ரதிஜ்ஞா வாக்யத்தை க்ரயஞ்செலுத்தி, தன்னுடைய காரணத்வத்தையும் ஈச்வரத்வத்தையும் நிலைநிறுத்தின உபகாரத்தைப் பற்றச் சொல்லுகிறாராகவுமாம்.

(அரங்கத்தமலன்) நரஸிம்ஹ வ்யாவ்ருத்தி. அதாவது - ஒரு கால்விசேஷத்திலே ஒருதூணின் நடுவேவந்துதோன்றி, ப்ரஹ்லாதனொருவனுக்கு வந்த விரோதியைப்போக்கின வளவிறே-அங்குள்ளது; இங்குக் கிடக்கிறகிடை, எல்லாக்காலத்திலும் எல்லாருடைய விரோதிகளையும் போக்குகைக்கு அணித்தாகவர்து இரண்டு தூணுக்கும் நடுவேகிடக்கிறகிடையாகையாலே வ்யாவ்ருத்தமாயிருக்குமிறே. (அரங்கத்தமலன்) ப்ரஹ்லாதனாகிறான் பகவத்ஸந்நிதியுண்டானவளவிலே, "𑌯𑌾 𑌪𑍍𑌰𑍀𑌤𑌿𑌰𑌵𑌿𑌵𑍇𑌕𑌾𑌨𑌾𑌮𑍍" "யாப்ரீதிரவிவேகாநாம்" என்று-பகவத்விஷயப்ரேமத்தை யபேக்ஷிக்கையாலும், மலைகளாலே கடலிலேயமுக்குண்டபோது ஸ்தோத்ரங்களைப் பண்ணுகையாலும், "𑌮𑌯𑌿 𑌭𑌕𑍍𑌤𑌿𑌸𑍍𑌤𑌵𑌾𑌸𑍍𑌤𑍍𑌯𑍇𑌵" "மயிபக்திஸ்தவாஸ்த்யேவ" என்றவநந்தரமேஜ்ஞாநபக்திகளையுடையனாகையாலே அவனளவிற்பண்ணின உபகாரம் அப்படியாகையாலேவருவதொருமாலிந்யமுண்டு அங்கு; இங்கு-"ஏழை யேதலன்கீழ் மகனென்னாதிரங்கி" என்கிறபடியேநிகர்ஷாநுஸந்தாநம்பண்ணிப்பிற்காலிப்பாரளவிலும் அந்த நிகர்ஷம்பாராதேமேல்விழுந்து விஷயீகரித்துவிரோதிகளையும்போக்கி பரமபுருஷார்த்தத்தைக் கொடுக்கையாலே கீழ்ச்சொன்ன மாலிந்யம் பெரியபெருமாளுக்கில்லையென்றிட்டு, "அரங்கத்தமலன்" என்கிறார்.

---

எட்டாம்பாட்டு. (ஆதி) காரணபூதனாதல்; ப்ரதாநனாதல்; முந்துறவாதல்; ஆக மூன்றர்த்தம்.

(முகத்து) அவனுடையமுகத்து. (கரியவாகி) விடாய்த்தார் முகத்திலே நீர்வெள்ளத்தை வெட்டிவிட்டாப்போலே யிருக்கை.

அஸ்மதாதிகளும் திருமுகத்திலே விழித்து அவித்யா சௌசம்போய் சுத்தராம்படியான அமலத்வம்; என்னையுமா ளாம்படி லோகஸாரங்க மஹாமுநிகளோடே கூட்டின அமலத் வம். எல்லார்க்கு முதவும்படி கோயிலிலே கண்வளர்ந்தருளுகை யால்வந்தசுத்தி. "சிட்டனேசெழுநீர்த்திருவரங்கத்தாய்" என்னக் கடவதிறே. ஒருக்கால் தோற்றிப்போதல், அவதாரம்போலே தீர்த்தம் ப்ரஸாதித்தல் செய்யாமையால்வந்த சுத்தியாகவுமாம். விரோத்யசம்கழிந்துசுத்தரானால் அநுபவவிஷயஞ் சொல்லுகிறது மேல்(அரங்கத்தமலனித்யாதி)இவையோரொன்றேயமையும்என் னைப் பேதைமைசெய்யவென்கிறார்.''வண்டினமுரலும்'' இத்யாதி ப்படியே. * அண்டர்கோனும்,பரமபதம் முதலான வாஸஸ்தாநங் களையும் விட்டு படுகாடு கிடக்கும்படியாயாய்த்து இவ்வூரின் போ க்யதையிருப்பது; அதுக்குமேலேகண்வளருகிறவருடைய அமலத் வம். "[Telugu script]" "மித்ரபாவேநஸம்ப்ரா ப்தம்நத்யஜேயம்கதஞ்சந" என்று-விபீஷண விஷயமான வார்த் தையை க்ரயஞ்செலுத்துகைக்காக * செல்வவிபீடணற்கு வேறாக நல்லனாய், * தென்றிசை யிலங்கைநோக்கிக் கண்வளர்ந்தருளுகி றானத்தனை. ஸர்வப்ரகாரநிக்ர்ஷ்டனானவென்போல்வாரையும்சுத் தராக்குகைக்காகவாகையால் கிடக்கிற ஸௌலப்யம், அதுக்குமே லே ஒன்றிறே முகம்.

(முகத்து) "[Telugu script]" "ஸக்யம்ப்ய்ரதக்ர்ஷ்ணஸ் யமுகம்" என்றும்,"உன்முகம்மாயமந்திரந்தான் கொலோ" என் றுஞ்சொல்லுகிறபடியே - வெறும்முகந்தானே ஆகர்ஷகமாயிறே யிருப்பது. கீழ்-தாமநுபவித்த திருப்பவளத்தின் வைலக்ஷண்யம் பின்னாட்டுகையாலே அந்தத்திருவதரத்தையுடைத்தான திருமுக த்தைப்பிரித்துச் சொல்லுகிறார். அதுக்குமேலே, "[Telugu script]" "அத்யருணேக்ஷணம்" என்கிறபடியே இரண்டாழங்காலாய்த்து. சந்த்ரமண்டலத்திலே இரண்டுதாமரை பூத்தாப்போலேயும் ஒரு தாமரையிலே இரண்டுதாமரை பூத்தாப்போலேயு மிருக்கிற திருக் கண்கள்.

(கரியவாகி) புண்டரீகம்போலே வெளுத்திருக்கிற திருக்கண் களுக்கு பரபாகமாம்படி இரண்டு கருவிழியையுடைத்தாய். அங் ஙனன்றிக்கே, அஞ்ஜநத்தாலே கறுத்திருத்தல்; கண்களைக் கண்ட போதேதாபத்ரயதப்தருடைய ஸகலதாபங்களும் போம்படி குளி ர்ந்திருக்கு மென்னுதல். விடாய்த்தார்முகத்திலே நீர்வெள்ளத் தை வெட்டிவிட்டாப்போலே யிருக்கை.

(புடைபரந்து) கடலை தடாகமாக்கினுப்போலே இடமுடைத்தாயிருக்கை.

(மிளிர்ந்து) திரைவீசிக் கரையாலும்வழிபோகவொண்ணுதிருக்கை. (செவ்வரியோடி) ச்ரியஃபதித்வத்தாலும் வாத்ஸல்யத்தாலும் சிவந்திருக்கை. (நீண்ட) செவியளவும் அலையெறிகை.

---

(புடைபரந்து) கடலைத்தடாகமாக்கினுப்போலே இடமுடைத்தாயிருக்கை. ஸ்வதஃகாண்கிறவளவுக்கவ்வருகே இரண்டுபார்ச்வமுமிடுங்கியிராதே, பரந்து இடமுடைத்தாய், அவித்யாதிகளைப் போக்கி யநுபவிப்பிக்கும் காரியங்களைப்பற்ற வருகிற பரப்பு.

(மிளிர்ந்து) ச்ரபாபரிதமாயிருக்கையாலே கரையருகும் வழிபோகவொண்ணுதபடி அலையெறிந்து திரைவீசுகை. காணவேணுமென்கிற விவருடைய த்வரையிற்காட்டிலும் இவரை விஷயீகரிக்கையிலுண்டான கண்களின் த்வரையைச்சொல்லுகிறது.(செவ்வரியோடி) ச்ரியஃபதித்வத்தாலும் வாத்ஸல்யத்தாலும் சிவந்திருக்கை. ஐச்வர்யத்தாலும் வாத்ஸல்யத்தாலும் சிவந்திருக்குமென்னவுமாம். (நீண்ட) ஒழுகுநீண்டிருக்கையும், தம்மளவும் கடாக்ஷம்வந்து விஷயீகரித்தபடியும். "కృపయాపరయాకరిష్యమాణే సకలాఙ్గ్కలసర్వదోషశాన్తే। ప్రథమంశ్రవసీసమాస్త్రణాతే ఇతి దైర్ఘ్యమవాదనత్రఙ్గనేత్రః" "க்ர்பயாபரயாகரிஷ்யமாணே ஸகலாங்கங்கிலஸர்வதோஷிநேத்ரே । ப்ரதமம்ச்ரவஸீஸமாஸ்த்ர்ணுதே இதி தைர்க்யேணவித்ந்திரங்கநேதுஃ." பெரியபெருமாளுடைய திருக்கண்களானவை திருச்செவியளவுஞ்செல்ல நீண்டிருக்கிறபடிக்கு ஒரு நினைவுண்டென்கிருர் பட்டர். அதாவது—பெரியபெருமாளுடையதிருக்கண்களானவைமீறுக்குத் தண்ணீர்வார்ப்பாரைப்போலே நித்யஸூரிகளுக்கு முகங்கொடுத்துக்கொண்டிருக்கிற ஸ்ரீ வைகுண்டநாதனுக்கும் கண்களிரண்டாய், ராமக்ர்ஷ்ணுத்யவதாரம்பண்ணி குஹாதிகள் விதுராதிகள் தொடக்கமானுர்சிலர்க்கு அல்பகாலம் முகங்கொடுத்து விஷயீகரித்து வந்தாப்போலே, வெறுங்கையோடே போனவர்களுக்குங் கண்ணிரண்டாய், ஸம்ஸாரம் கிழங்கெடுத்தாலல்லது எழுந்திரேனென்றுகோயிலிலேஅர்ச்சாரூபியாய் அவ்வவர் நிகர்ஷங்களைப்பாராதேமுகம்கொடுத்துக்கொண்டுகிடக்கிறபெரிய பெருமாளுக்கும் கண்ணிரண்டா யிருக்கவோ, இவருடைய க்ர்பையைப்பார்த்தால் உடம்பெல்லாம் கண்ணுக வேண்டாவோ வென்று பார்த்து,எல்லாமண்டலங்களும் தங்களுக்கே யாகவேணுமென்றிருக்கும் ராஜாக்கள்,மூற்படத்தங்களுக்குப்ரத்யாஸந்நமான வன்னியரை யழியச்செய்யுமாப்போலே, பெரியபெருமாளுடைய அவயவாந்தரங்களடையநாமேயாகவேணுமென்று, பார்ச்வஸ்தங்களா யிருக்கிறன திருச்செவிகளாகையாலே அவற்றை வென்று அவ்வருகே போவதாகமுற்பட, அவற்றுடனேயலையெறிகிறுப்போலேயாய்த்துத்திருக்கண்கள் செவிகளளவும் நீண்டிருக்கிறபடி.

(அப்பெரியவாயகண்கள்) பின்னையும் போக்தாவினளவன்றிக்கேயிருக்கையாலே, "அப்பெரியவாயகண்கள்" என்கிறார். "இது" என்ன வொண்ணாதே பரோக்ஷநிர்த்தேசம் பண்ணவேண்டும்படியிருக்கை. (என்னை) பெரியமனிச்சன்கிடீர்நான். என்வைதக்த்யத்தைப் பறித்துப் பொகட்டு மௌக்த்யத்தைத் தந்தவன். ஒருவன் எய்தத்தை மற்றவனும் எய்யுமாப்போலே.

(பேதைமைசெய்தனவே) ராமசரம்போலே முடிந்து பிழைக்க வொட்டுகிறனவில்லை.

இத்தால் - நரஸிம்ஹாவதாரத்தின்படியும் இங்கேயுண்டென்கிறார். ... ... ... ... ... (அ)

(அப்பெரியவாயகண்கள்) பின்னையும்போக்தாவினளவன்றிக்கேயிருக்கையாலே "அப்பெரியவர்யகண்கள்" என்கிறார். இதுவென்னவொண்ணாதே பரோக்ஷ நிர்த்தேசம் பண்ண வேண்டும்படியிருக்கை. கீழ் "பரந்து நீண்டு" என்று - ஆயாம விஸ்தாரங்களைச் சொல்லுகையாலே, இங்கு - போக்யதாப்ரகர்ஷத்தைச் சொல்லுகிறது. போக்யதாதிசயத்தாலே, "அப்பாஞ்சசன்னியம்" என்னுமாப்போலே முகத்தைத் திரியவைத்துச் சொல்லுகிறார். (என்னை) அறப்பெரிய மனிச்சன்கிடீர் நான், என்வைதக்த்யத்தைப் பறித்துப்பொகட்டு மௌக்த்யத்தைத்தந்தனன். ஒருவனெய்ய அவனை மற்றையவனு மெய்யுமாப்போலே.

(பேதைமைசெய்தனவே) ராமசரம்போலேமுடிந்து பிழைக்கவொட்டுகிறனவில்லை. (என்னைப் பேதைமைசெய்தனவே) கீழ்ப்பாட்டிலே-"என்னைச்சிந்தைகவர்ந்ததுவே" என்று, ஜ்ஞாநப்ரஸரத்வாரத்தை அபஹரித்தபடியைச் சொல்லிற்று; இங்கு - ஜ்ஞாநத்தை அபஹரித்தபடியைச் சொல்லுகிறது. ஜ்ஞாநாபஹாரமாவது - அழகிலே அலமர்கை. * மாதரார்கயற்கணென்னும் வலையுள்பட்டழுந்துவேனை, தன் பக்கலிலே ஆதரத்தைப் பிறப்பித்து, *மதியெல்லாமுள்கலங்கும்படி பண்ணிற்று. (என்னைப் பேதைமைசெய்தனவே) அவன் அக்கண்களாலே "அமலங்களாக விழிக்கும்" என்றிருந்த கடாக்ஷங்களுக்கு இலக்கானார்க்குத் தெளிவைப் பிறப்பிக்கக் கடவதாயிருக்க, எனக்குள்ளவறிவு தன்னையுமழித்தது. இனி "தாமரைக்கண்களால் நோக்காய்" என்பார்க்கெல்லாம் அழகிதாக ப்ரார்த்திக்கலாம்.

இப்பாட்டில் - நரஸிம்ஹாவதாரத்தின்படியும் இங்கேயுண்டென்கிறார். ... ... ... ... (அ)

பெரியமனிச்சன் - ஒன்றுக்கும்கரையாத கல்நெஞ்சன். "கண்கள்" என்கிறத்விவசநத்தைப்பற்ற அருளிச்செய்கிறார் (ஒருவனெய்யவித்யாதி.) ... ... ... ... ... (அ)

அ.—ஒன்பதாம்பாட்டு. ஊரழிப்பூசல்போலே திருமேனியின் நிறமானது எல்லாவற்றையுங் கூடக்கொண்டுவந்து என்னெஞ்சைக் கொள்ளைகொண்டதென்கிறார்.

ஆலமாமரத்தினிலைமேலொருபாலகனாய்
ஞாலமேழுமுண்டானரங்கத்தரவினணையான்
கோலமாமணியாரமும்முத்துத்தாமமும்முடிவில்லதோரெழில்
நீலமேனியையோநிறைகொண்டதென்னெஞ்சினையே. (௯)

ப - ரை.—மா - பெரிய, ஆலமரத்தினிலைமேல் - ஆலமரத்தின் சிற்றிலையிலே, ஒரு-அத்விதீயமான, பாலகனாய் - பாலனாகி, ஞாலமேழும் - பூமிப்பரப்பையடைய, உண்டான் - தன்திருவயிற்றிலே வைத்தவனாய், அரங்கத்து- கோயிலிலே, அரவினணையான் - திருவநந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளுகிற அழகிய மணவாளனுடைய, கோலம் - அழகிதாய், மா - பெருவிலையுடைத்தான,

---

அ—ஒன்பதாம்பாட்டில்-ஊரழிபூசல்போலே நிறமானது எல்லாவற்றையுங்கூட்டிக்கொண்டுவந்து என்னெஞ்சைக் கொள்ளைகொண்டதென்கிறார். கீழ்ப்பாட்டில்-"கண்களென்னைப் பேதைமைசெய்தனவே" என்று "బ్రహ్మదణ్డప్రకాశానాం విద్యుత్సదృశవర్చసామ్। స్మరన్ రాఘవబాణానాం వివ్యధే రాక్షసేశ్వరః" "ப்ரஹ்மதண்டப்ரகாஶாநாம் வித்யுத்ஸத்ருஶ வர்ச்சஸாம்| ஸ்மரன்ராகவபாணாநாம் விவ்யதே ராக்ஷஸேஶ்வர:" என்கிறபடியே - ராமசரம்போலே யிருக்கிற அந்தகடாக்ஷபாதங்களாலே, "கடைக்கணென்னுஞ் சிறைக்கோலால் நெஞ்சூடுருவவேவுண்டு நிலையுந்தளர்ந்து நைகேனை" என்றாப்போலே இவர் படுகிறபாட்டைக்கண்ட திருமேனியானது, தனிப்பூச்சூடுவாரைப்போலே நம்முடைய அவயவஸௌந்தர்யத்தைத் தனித்தனியே யநுபவித்தாரித்தனையன்றோ, இவர் கலம்பகன்மாலை சூடுவாரைப்போலே இந்த அவயவங்களுக்கு ஆச்ரயமான நம்மை அவற்றோடேகூடவநுபவிக்கப்பெற்றிலரோ; இனி மற்றையாழ்வார்போலே பரக்கப்பேசிநின்று அநுபவிக்கவும் வல்லரல்லர், ஆனபின்பு இந்த வவயவங்களோடும் ஆபரணங்களோடு மாகச் சேர்ந்த சேர்த்தியால்வந்தவழகும் ஸ்வாபாவிக ஸௌந்தர்யத்தால் வந்த வழகுமான நம்முடைய ஸமுதாயசோபையை இவரை யநுபவிப்பிக்க வேணுமென்று பார்த்து, ராஜாக்களூரூபூசலாய்க் கொலையிலே பரந்து தங்களுடையசதுரங்கபலத்தையும்சேர்த்துக்கொண்டு அணியணியாகச்சிலர்மேலேயேறுமாப்போலே, இந்தத் திருமேனியானது அவயவங்களையும் ஆபரணங்களையுஞ்சேர்த்துக்கொண்டு, தன்னுடைய ஸமுதாயசோபையைக்காட்டி, * உய்விடமேழையர்க்கு மசுரர்க்கு மரக்கர்கட்கும் எவ்விடமென்று கொண்டு மேல் விழுந்து தம்முடைய திருவுள்ளத்தைத் தன்பக்கலிலே யிழுத்துக்கொள்ள, தாம் அதிலேயகப்பட்டுநெஞ்சழிந்தபடியைச்சொல்லுகிறார்.

மணிரத்நங்களால்செய்யப்பட்ட,ஆரமும்-ஹாரமும், முத்துத்தாமமும்-முக்தா ஹாரமும் விளங்குமதாய், முடிவில்லது - அவதிகாணவொண்ணாத, ஓர் - அத்விதீயமான, எழில் - அழகையுடைய, நீலம் - கருநெய்தல் மலரையொத்த, மேனி - திருமேனியானது, என்னெஞ்சினை - என்மநஸ்ஸிலுண்டான, நிறைகொண்டது - அடக்கத்தையழித்தது, ஐயோ—,என்கிறார். (க)

வ்யா.--(ஆலமாமரமித்யாதி)கீழைந்துபாட்டாலே-தம்முடைய துஷ்கர்மங்களை ஸவாஸநமாகப் போக்கினபடியைச் சொல்லி; எட்டாம்பாட்டாலே - "பரியனாகிவந்தவவுணனுடல்கீண்ட" என்று-பிறந்த கர்மங்களுக்கடியான அவித்யையை,தமோரூபமான ஹிரண்யனைக் கிழித்துப் பொகட்டாப்போலே *ஞாநக்கையாலே நிரவித்தானென்றுமிறே இவர்சொல்லி நின்றது; இத்தைக் கேட்டவர்கள், இந்ததேசமாகிறது * இருள்தருமாஞாலமாகையாலே *தெளிவிசும்பினின்றும் ஸர்வேச்வரன் தானே யவதரிக்கிலும்அவனுக்கும் சோகமோஹங்களையுண்டாக்கு மதாயிருக்கும், காலத்தைப்பார்த்தவாறே, "அப்ரஜ்ஞாதண்டலிங்காநி" "அப்ராஜ்ஞாதண்டலிங்காநி" என்கிறபடியே – உள்ளவறிவையுமழித்து விபரீதாநுஷ்டாநத்துக்குடலான லிங்கங்களையு முடைத்தாயிருக்கும், தேஹத்தைப் பார்த்தால் "பகவத்ஸ்வரூபதிரோதாநகரீம்" "பகவத்ஸ்வரூபதிரோதாநகரீம்" என்கிறபடியே - பகவத்ஸ்வரூபத்தை மறைத்து விபரீதஜ்ஞாநத்தைப் பிறப்பிக்குமதாயிருக்கும், வேதாந்தஜ்ஞாநத்தாலல்லது அஜ்ஞாநம் போகாது, உமக்கு அந்த வேதாந்தச்ரவணத்துக்கு அதிகாரமேபிடித்தில்லை,"வேதாந்தவிஜ்ஞாநஸுநிச்சிதார்த்தா:" "வேதாந்தவிஜ்ஞாநஸுநிச்சிதார்த்தா:" என்றாப்போலே சொல்லுகிற வேதாந்தஜ்ஞாநமுடைய பெரியவர்கள்பாடேசென்று உபஸத்திபண்ணி, அவர்களுக்கு அந்தேவாஸியாயிருந்து இவ்வர்த்தங்களைக் கேட்டறியவொண்ணாதபடி நீ ஹீநஜந்மத்திலேபிறந்தவராயிருந்தீர், ஆகதேசமிது,காலமிது,தேஹமிது,உம்முடை ஜந்மமிது, இப்படியிருக்க பக்வனான கீதோபநிஷதாசார்யன்கீதைபதினெட்டோத்திலும்*நெறியெல்லாமெடுத்துரைக்க, "தைவீம்ஸம்பதமபிஜாத" *தைவீம்ஸம்பதமபிஜாதனான அர்ஜுநன் இத்தைக்கேட்டு,"நஷ்டோமோஹ: ஸ்ம்ருதிர்லப்தா:" "நஷ்டோமோஹ: ஸ்ம்ருதிர்லப்தா:" என்றுஞ் சொன்னாப்போலே நீர் உம்முடைய அஜ்ஞாநாதிகளடையப்போய் ஜ்ஞாநம் பிறந்ததாகச்சொல்லாநின்றீர், இது அகடிதமாயிருந்ததீ! என்ன; ப்ரளயகாலத்திலே இந்தஜகத்தாகநோவுபடப்புக,இத்தையடையத் தான் அதிசிசுவாயிருக்கத் தன்சிறியவயிற்றிலே வைத்து, "ஆலன்று வேலைநீருள்ளதோவிண்ணதோமண்ணதோ சோலைசூழ்குன்றெடுத்தாய் சொல்லு" என்னும்படியிருக்கிற ஓராலிலோடடைக் கொட்டை போராதாயிருப்பதோராலந்தளிரிலேகண்வளர்ந்துஇந்தஜகத்தையடைய ரக்ஷித்தருளின அந்த அகடிதகடநாஸாமர்த்ய முடையவனுக்கு என்னுடைய விரோதியைப்போக்கி எனக்கு ஜ்ஞாநத்தைப் பிறப்பித்தவிது சால அகடிதமாயிருந்ததோவென்கிறார்.

வ்யா.—(ஆலமாமரத்தினித்யாதி) பெரிய ஆலமரத்தினுடைய சிற்றிலையிலே யசோதாஸ்தநந்தயமும் பெரிதென்னும்படி அத்விதீயனான பாலனாய். (ஒருபாலகனாய்) யசோதாஸ்தநந்தயனை க்ர்ஷ்ணனும் முரணித்திருக்கும்படி இவனுடைய பால்யம். செம்பால்பாயா நிற்கும் பால்யம்.

(ஞாலமித்யாதி) சிறுப்ரஜைகள் புரோவர்த்திபதார்த்தங்களை யெடுத்து வாயிலிடுமாப்போலே பூமிப்பரப்படைய வயிற்றிலே வைத்தானாய்த்து. பிள்ளைத்தநம். ப்ரளயத்தில் தன்னகடித கடநத்தோடொக்கும் என்னையகப்படுத்தினபடியும்.

---

(ஆலமாமரத்தினிலைமேல்) "பாலாலிலை" என்கிறபடியே ஆலமாமரத்திலேநெரியில்பால்பாயும்படியிருக்கிறஇளந்தளிரிலே."மாமரம்" என்று-விபரீதலக்ஷணையாய்ச் சிறியமரமென்றபடி. "இலைமேல்"என்கையாலே-அந்தஇலைக்குள்ளேயடங்கும்படியாயாய்த்து வடிவின்சிறுமையிருப்பது. (ஒருபாலகனாய்) யசோதாஸ்தநந்தயம் ப்ரௌடதசை யென்னும்படி அத்விதீயனான பாலனாய். யசோதாஸ்தநந்தயமான க்ர்ஷ்ணனும் முரணித்திருக்கும்படி இவருடைய பால்யம் செம்பால் பாயாநிற்கும்.

இந்தபால்யத்தை உபபாதிக்கிறார்மேல் (ஞாலமேழு முண்டான்) சிறுப்பிள்ளைகளா யிருப்பார், புரோவர்த்திபதார்த்தங்களையடைய வெடுத்து வாயிலிடுமாப்போலே, "மஞ்சாடுவரையேழும்-ஈசன்" என்கிறபடியே-ஸப்தலோகங்களையும் இவற்றைச் சூழ்ந்த கடல்களேழையும் குலபர்வதங்களேழையும் மற்று முள்ளவையடைய வெடுத்துஅமுதுசெய்தான். தேவதிர்யங்மநுஷ்யஸ்தாவரரூபமான ஜகத்தையடைய வமுது செய்யாநிற்க, ஒருஸ்தாவரமுண்டாய் அதின்தளிரிலே இடம்வலங்கொண்டு கண்வளர்ந்தருளுகையாகிற விந்த அகடிதங்களைச்செய்தவனுக்கு அந்த தேசகால தேஹ ஜந்மங்களாலுண்டானநிகர்ஷம்பாராதே எனக்கு ஜ்ஞாநத்தைப் பிறப்பித்து, இதுக்கு விரோதிகளான அஜ்ஞாநாதிகளைப் போக்குகை சால அகடிதமா யிருந்ததோ, என்றுபோக்கிக்கொள்வதன்றோ வரிது, அவனுக்கரியதுண்டோ. ப்ரளயத்தில் அகடித கடநத்தோடொக்கும் என்னையகப்படுத்தினபடி. (அரங்கத்தரவினணையான்) ஸம்ஸார ப்ரளயத்தினின்று மெடுக்கக் கிடக்கிறபடி. அவ்வாலினின்றும் இங்கேவரச் சருக்கினவித்தனை. இப்ப்ரமாதத்தோடேகூடினசெயலைச்செய்தானென்று பயப்படுமவர்கள் அச்சங்கெடும்படி கிடக்கிறபடி.

---

ஒன்பதாம்பாட்டு. செம்பால் பாய்கை – கேவலரத்தப் பசையாயிருக்கை.

(அரங்கத்தரவினணையான்) ஸம்ஸாரப்ரளயத்தினின்றும் எடுக்கிறபடி; அந்த ஆலில் நின்றும் இங்கேவரச் சருக்கின வித்தனைகாணும். அந்தவுறவொன்றுமே இவரச்சங்கெடுக்கிற வித்தனைகாணும். இப் ப்ரமாதத்தோடே கூடின செயலைச் செய்தானென்று பயப்படுமவர்கள அச்சம்கெடும்படி கிடக்கிறவிடம்.

(அரவினணையான்) ப்ரளயத்தில் தன்வயிற்றிலே புகாவிடில் ஜகத்து ஜீவியாதாப்போலே, ஸம்ஸாரிகள் தன்முகத்தே விழியாவிடில் தனக்குச்செல்லாதானபடி.

(அரவினணையான்) அந்தப்ரளயஜலதியிலே இந்தஜகத்தையடையத் தன்திருவயிற்றுக்குள்ளே வைத்து, தான் அத்யந்தம் சிசுவாய், ஆலிலையென்றுபேர்மாத்ரமானதோரிளந்தளிரிலே இடம் வலங்கொண்டு கண்வளரா நின்றான். இப்படி பெரிய ஜகத்தையெல்லா மமுதுசெய்தால் அறுதொழிதல, அமுதுசெய்த அண்டத்தின் பெருமையாலும் அவற்றின்சிறுமையாலும் வயிறுவிரிதல், ஆலமிளந்தளிரிலே யிடம்வலங்கொள்ளப்புக்கால்கடலிலே புக்குப்போதல் செய்யிற்செய்வ தென்னென்று வயிறுபிடிக்கவேண்டாதபடியிறே * திருவரங்கப்பெருநகராகிற பெரியகோயிலிலே, * இருளிரியச்சுடர், அனந்தனென்னு மரவணையென்கிற பெரிய படுக்கையிலே மொசுமொசென்று வளர்ந்த பெரியவடிவுந் தாருமாய்ப் பெரியபெருமாள் கண்வளர்ந்தருளினபடி. அங்குப்பரிவரில்லையென்கிற குறையு மில்லையிறே. படுக்கையான விவன்றான், "[Grantha text]" "சிந்தாமணிமிவோத்வாந்த முத்ஸங்கேநந்தபோகிந:" என்கிறபடியே-ஜகதுபாதாநமாயிருப்பதொரு சிந்தாமணியையுமிழ்ந்துஇத்தையாரோனுமொருவர் இருயுஞ்சிக்கொள்ளிற் செய்வதென்னென்று தன்படியிலே வைத்துக் கரண்டகமிட்டுக்கொண்டு கிடக்கிறப்போலே யிருக்க, "தீமுகத்து நாகணை" என்றும், "ஆங்காரவாரமது கேட்டழலுமிழும் பூங்கா ரரவணை" என்றுஞ் சொல்லுகிறபடியே-இவ்வஸ்துவுக்கு என்வருகிறதோ வென்று தன்னுடைய பணமண்டலங்களாலே விஷாக்நியையுமிழ்ந்துகொடு நோக்கிக்கொண்டுபோருகையாலே அவாந்தரப்ரளயத்திலே யகப்பட்டவர்களை, தன் திருவயிற்றில் வைத்து ரக்ஷித்தான்; ஸம்ஸாரமாகிற மஹாப்ரளயத்திலே புக்கவர்களை, "[Grantha text]" "ஸ்ரீமாந்ஸுகஸுப்த:" என்றும், "கிடந்ததோர் கிடக்கை" என்றுஞ் சொல்லுகிற தன்கிடையழகைக் காட்டி ரக்ஷித்தான்.

---

பதச்சேர்த்திக்கு தாத்பர்யத்வயமருளிச்செய்கிறார் (ஸம்ஸார ப்ரளயேத்யாதி வாக்யத்வயத்தாலே.) அச்சங்கெடுகை - கீழ்ஸமுத்ரமாய் மேல்ஆலிலையாயிருக்கையன்றிக்கே, கோயிலிலே திருவனந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளுகை.

(கோலமாமணியாரமும்) அழகியதாய்ப் பெருவிலையனாயிருந்துள்ள ரத்நங்களாலே செய்யப்பட்ட ஆரமும். (முத்துத்தாமமும்) முத்துமாலையும். (கோலம்) இதுபெருமாளைச் சொல்லுகிறது.

(முடிவில்லதோரெழில்நீலமேனி) அவதிகாணவொண்ணாத வழகையுடைய நெய்த்த திருமேனி.

(ஐயோ) பச்சைச்சட்டையுடுத்துத்தனக்குள்ளத்தையடையக்காட்டி எனக்குள்ளத்தையடையக்கொண்டான்.

(நிறைகொண்டதென்னெஞ்சினையே) எனக்கு அகவாயில் காம்பீர்யத்தைப் போகவடித்தது.

இப்பாட்டால்-வடதளசயநமும் பெரியபெருமாள்பக்கலிலேயுண்டென்கிறார். ... ... ... (௯)

இப்படி கண்வளர்ந்தருளுகிற பெரியபெருமாளவடிவிருக்கிறபடியைச் சொல்லுகிறார் மேல் (கோலமாமணியாரமும்) ஸ்ரீகௌஸ்துபம்போலே மஹார்க்கமாய்ப்பெருவிலையனான மாணிக்கங்களாலே யமுத்தப்பட்டுத் திருமேனிக்கு அலங்காரமான ஹாரத்தையும். (முத்துத்தாமமும்) த்ரிஸரம் பஞ்சஸரம் ஸப்தஸரம் என்றாப்போலே சொல்லுகிற திருமேனியின்மார்த்தவத்துக்கு அநுரூபமான குளிர்த்தியையுடைய முத்துவடங்களையும்.

(முடிவில்லதோரெழில்நீலமேனி) அவதிகாணவொண்ணாத அழகையுடைய நெய்த்த திருமேனி. அபரிச்சேத்யமாய் அத்விதீயமான ஸமுதாயசோபையையுடையதுமாய். (நீலமேனி) இந்த ஆபரணங்களாலும் ஸமுதாயசோபையாலும் ஒரழகுவேண்டாதபடி இவைதனக்கு நிறங்கொடுக்கும்படி, "மல்குநீலச்சுடர்தழைப்ப" என்கிறபடியே* మధ్యస్థా-నీలతోయద-విద్యుల్లేఖాకల్ప *மத்யஸ்தாநீலதோயதவித்யுல்லேகாகல்ப மானவடிவு. "ద్రుతకనకగిరిపరిమళదుద్ధిప్రచలితలహరివత్" "த்ருதகநககிரிபரிமளதுதிப்ரசலிதலஹரிவத்" என்கிறபடியே அந்தத்திருமேனிதன்னைப் பார்த்தாலும் அறப்பளபளத்து, அத்தைநீக்கி யுள்வாயிலே கண்ணையோட்டிப் பார்த்தால் காண்கிறவன் கண்களிலே குளிர அஞ்ஜநத்தை யெழுதினாப்போலே யிறே யிருப்பது,அவனுக்குஆநந்தத்துக்கவதியினறிக்கேயொழிகிறதும் வடிவின்வைலக்ஷண்யததாலே யிறே.

(நிறைகொண்டதென்னெஞ்சினையே) என்னுடைய ஹ்ருதயத்திலுண்டான பூர்த்தியை யபஹரித்தது - என்னகவாயில் காம்பீர்யத்தையும் போகவடித்தது. இந்தஜகத்து காண்கவளேபரங்களை இழவாமல் தன்திருவயிற்றிலேவைத்துக் காத்தவனாயிருக்க அவனுக்கபிமதமானவவ்வடிவு என்னுடைய காணத்தையபஹரித்தது.

ஆரம்-பதக்கம். கோலம் என்றது - ஆபரணச்சேர்த்தி. அழகியமணவாளப் பெருமாளுக்கு. நிறை-மென்னுதல்; அடக்கமென்னுதல். ... ... ... ... ... (௯)

(ஐயோ) பச்சைச்சட்டையிட்டுத்தனக்குள்ளத்தைக் காட்டி எனக்குள்ளத்தையடையக்கொண்டான். நான் எல்லாவற்றையு மநுபவிக்கவேணுமென்றிருக்க எனக்குஅநுபவபரிகரமான வென்னெஞ்சைத் தன்பக்கலிலே இழுத்துக்கொள்வதே! ஐயோ! என்கிறார். ... ... ... ... ... (௬)

அ.—நிகமத்தில். இவ்வாழ்வார், இவ்வூருக்குப் புறம்புள்ள தேசங்களிலுள்ளாரடைய ரஜஸ்தம ப்ரசுரராய் சப்தாதிவிஷயப்ரவணராய் அதுதானும் நேர்கொடுநேர் கிடையாமையாலே அர்த்தார்ஜநாதிகளிலே யிழிந்து * பெரியதோரிடும்பை பூண்டிருக்கிறபடியையும், இவ்வூரிலுள்ளார் பரமஸாத்விகராய் நிரதிசயபோக்யபூதரா யிருக்கிற பெரியபெருமாளை யநுபவித்துக்கொண்டு * தொண்டுபூண்டமுதமுண்டு களித்திருக்கிறபடியையுங்கண்டு, "పరంహుతవహజ్వాలా పఞ్జరాన్తర్వ్యవస్థితిః। నశౌరిచిన్తావిముఖజనసంవాసవైశసమ్" "பரம்ஹுதவஹஜ்வாலா பஞ்சராந்தர்வ்யவஸ்திதிః। நஶௌரிசிந்தாவிமுக ஜநஸம்வாஸவைசஸம்" என்று - புறம்புள்ளாரோடு பொருத்தமின்றிக்கே, இவ்வூரைப் பார்த்தால் "సర్వపుణ్యమయో దేశః" "ஸர்வபுண்யமயோதேஶः" என்கிறபடியே "పవిత్రాణాం హి గోవిన్దః పవిత్రం పరమః" "பவித்ராணாம் ஹிகோவிந்தःபவித்ரம்பரமः" என்றும் பரமபாவநரான பெரியபெருமாள் தாமும், "சிட்டனே செழுநீர்த்திருவரங்கத்தாய்" என்று இவ்வூரோட்டை ஸம்பந்தத்தாலே பாவநபூதரென்னும்படியான வைலக்ஷண்யத்தை யுடைத்தா யிருக்கையாலே, நாம் இவ்வூரிலே புகுருகை இவ்வூருக்கு மாலிந்யாவஹமென்றுபார்த்து, "அங்குற்றேனல்லே னிங்குற்றேனல்லேன்" என்கிறபடியே-பிறருடைய நைச்யத்தாலே அங்குப்போகவும்மாட்டாதே தம்முடைய நைச்யத்தாலே இஙகுப்புகவும் மாட்டாதே ஆந்தராளிகராய், "ఉత్తరం తీరమాసాద్య ఖస్థ ఏవ వ్యతిష్ఠత" "உத்தரம்தீரமாஸாத்ய கஸ்தஏவவ்யதிஷ்டத" என்ற ஸ்ரீ விபீஷணாழ்வானைப்போலே * அகமகிழுந் தொண்டர்வாழும்படி * அன்பொடு தென்றிசை நோக்கிக்கொண்டு கண்வளருகிற பெரியபெருமாளுடைய த்ர்ஷ்டிபாதமான தென்னாற்றங்கரையைப்பற்றி நின்றார். பெரியபெருமாளும் "ఈశ్వరోహమహం భోగీ నాన్యోస్తి సదృశో మయా" "ஈச்வரோஹமஹம்போகீ நாந்யோஸ்திஸத்ர்சோமயா" என்றுதேசமாக அஹங்கார க்ரஸ்தராய் சப்தாதிவிஷயப்ரவணராய் நோவுபடாநிற்க, இவர் இப்படியாவதே! என்று மநஸ்ஸிலே போரயுகந்து, "నిమగ్న ఆపః ప్రణవః" "நிமக்நஆபःப்ரணவः" என்கிறபடியே - இவரளவிலே திருவுள்ளம்போரமண்டி, * நிஹீநாநாம்முக்யம் சரணமான திருவடிகளைக்கொடுவந்து இவருடைய திருவுள்ளத்திலே "என்கண்ணினுள்ளன வொக்கின்றவே" என்று ப்ரத்யக்ஷஸமாநாகாரமாக

ப்ரகாசிக்கும்படி வைக்க, அந்தத்திருவடிகளை யநுஸந்தித்து, தம்முடைய மநஸ்ஸானது ஜ்ஞாநாஸ்பதமாகையாலே அந்தத்திருவடிகளுக்கு மேலான திருப்பீதாம்பரமும் திருவரையுமான சேர்த்தியை மடிபிடித்தநுபவித்து, இப்படி காரணமும் நாமும் யநுபவிக்கும்படி நம்மையுண்டாக்கிற்றுத் திருநாபீகமலமன்றோவென்று அத்தை யநுபவித்து, மேன்மைக்கும் ஸௌலப்யத்துக்கும் பட்டங்கட்டியிருக்கிறோம் நாமல்லோமோ வென்று திருவுதரபந்தநம் தன்பக்கலிலே வாஸிக்க அத்தை யநுபவித்து, அதுக்குமேலாயிருக்கிற திருமார்பானது தன்னுடைய ஹாராத்யாபரணங்களையும் பெரியபிராட்டியாருக்குக் கோயிற்கட்டணமான மேன்மையையுங் காட்டியிசித்துக்கொள்ள அந்தத்திருமார்பையநுபவித்து, அந்தப் பிராட்டிக்கும் ஹாராத்யாபரணங்களுக்கு மாச்ரயமான திருக்கழுத்தை யநுபவித்து, அதுக்குமேல், வாயில், "సర్వభూతేభ్యో-అభయం దదామి" "ஸர்வபூதேப்யோ - அபயம்ததாமி" என்றாப்போலே சொல்லாநிற்கச்செய்தே அநுபவிக்கிற நாய்ச்சிமார்க்ககப்பட, "வாயழகர் தம்மையஞ்சுதும்" என்று கண்களைச் செம்பிளித் தநுபவிக்கும்படி ஸ்வாபாவிக ஸௌந்தர்யத்தை யுடைத்தான திருவதரத்தை யநுபவித்து, இப்படி அவயவங்களை யநுபவியா நிற்கச் செய்தே இடையில் திவ்யாயுதங்களும இருஞ்சிக்கொள்ள அவற்றை யநுபவித்து, "అభయం-దదామి""அபயம்-ததாமி"என்றாப்போலே சொல்லுகிறவார்த்தைகளை மேலெழுந்திட்டுக் கொடுக்கிற குளிர்ந்தகடாக்ஷங்களையுடைத்தான திருக்கண்களை யநுபவித்து, பாலும் பழமும்கண்ட சர்க்கரையுமானரஸவஸ்துக்களைச் சேர்த்து புஜிப்பாரைப்போலே இந்த அவயவங்களோடுண்டான சேர்த்தியால்வந்த வழகையும் ஸ்வாபாவிகமான வழகையுடைத்தான திருமேனியின் பசுங்கூட்டான ஸமுதாயசோபையையு மநுபவித்தாராயிற்றே கீழ்நின்றது.

இவருடைய இப்படிப்பட்ட மாநஸாநுபவத்தையும்மநபூர்வகமான வாசிகாநுபவத்தையுங்கண்டபெரியபெருமாள், இப்படி குணாவிஷ்டரா யநுபவிக்கிற படியைக்கண்டு, "ద్రష్టవ్యస్సర్వదేహిభిః" "த்ரஷ்டவ்யஸ்ஸர்வதேஹிபி:" என்கிறபடியே அவரையழைத்துக்கொண்டிருக்க வேண்டும்படி அவரளவிலே அபிநிவிஷ்டராகையாலும் "క్షణేఽపి తే యద్విరహోఽతిదుస్సహః" "க்ஷணேபி தேயத்விரஹோதிதுஸ்ஸஹ:" என்கிறபடியே தம்மையொருக்கால் காணவேணுமென்னு மாசையுடையாரை க்ஷணகாலமும் பிரிந்திருக்கமாட்டாமையாலும் அவரை யழைப்பித்துக்கொள்ள வேணுமென்று பார்த்தார்; இனி, நாம்போய்க்கொடுவரவென்றால் "అసంకేతమనాలయం" "அஸங்கேதமநாலயம்" என்றாப்போலே சொல்லுகிற

ஸங்கல்பத்தைக் குலைக்கவேண்டுகையாலே அதுசெய்ய வொண்ணுதாயிருந்தது; இனி இவர்தாமே வரவென்ருல் அதுவும்தமக்கு ஸ்வரூபஹாநியா யிருந்தது, ஆனபின்பு அந்த விபீஷணனை மஹா ராஜனையிட்டு, "ఆనయైనమ్" "ஆநயைநம்" என்ருப்போலே இவ ரையும் ஒருவரையிட்டழைப்பிக்க வேணுமென்று பார்த்தார்; அந் தவிபீஷணன் ராஜ்யகாங்க்ஷியா யிருக்கையாலே அருகு நிற்கிற இளைய பெருமாள் நிற்க, ராஜ்யகாங்க்ஷியாய் ஹரிச்ரேஷ்டரான மஹாராஜனையிட்டழைத்துக் கொண்டாப்போலே, "சென்றதா மென சிந்தனையே" "அடியேனுள்ளத்தின் னுயிரே" "என்னுள் ளத்துள் நின்றுலாகின்றதே" "நிறைகொண்டதென் னெஞ்சினை யே" என்ருப்போலே இவர் மநநபரராயிருக்கையாலே, மநநபர ராய் ச்ரேஷ்டரா யிருப்பா ரொருவரையிட்டழைப்பித்துக் கொள் ளவேணுமென்று பார்த்து, அருகே ஸேவித்திருக்கிற லோகஸார ங்க மஹாமுநிகளைப்பார்த்து, "ఆనయైనమ్" "ஆநயைநம்" என்று திருவுள்ளமாக, அவரும் எப்போதும் பெரியபெருமாளை ஸேவித் திருக்கையாலே, பெரியபெருமாள் அபிஜநவித்யா வ்ருத்தங்களால் பூர்ணராயிருப்பாரைப்பார்த்தருளி, ஏகாந்தங்களிலே "இழிகுலத்த வர்களேனு மெம்மடியார்களாகில் தொழுமினீர் கொடுமின்கொண் மின்" என்று உபதேசிக்கக் கேட்டிருக்கையாலும், "நின்திருவெட் டெழுத்துங் கற்றுநானுற்றது முன்னடியார்க் கடிமை" என்றும், "ஆரொண்ணும் நெஞ்சுடையாரவ ரெம்மையாள்வாரே" என்றும், "பங்கயக்கண்ணனைப் பயிலுந் திருவுடையார்யவரேனு மவர் கண் டீர், பயிலும் பிறப்பிடைதோறெம்மையாளும் பரமரே" என்ருப் போலே ஆழ்வார்களருளிச் செய்யக்கேட்டிருக்குமவராகையாலே கடுகப்போய் அவரை அருள்பாடிட்டுத் தாம் சிரஸாவஹித்துக் கொண்டுவர, இவரும் பெரியபெருமாளுடைய கௌரவத்தைக் குலைக்கவொண்ணுதென்றுமுநிவாஹநராய் வந்துபுகுந்துபெரிய பெருமாளைத் திருவடித்தொழ, பெரிய பெருமாளும் "ఆవిర్బభూవ భగ వాన్ పీతాంబరధరో హరిః" "ஆவிர்ப்பபூவபகவாந் பீதாம்பரதரோ ஹரி:" என்றுஸ்தோத்ரபரனுன ப்ரஹ்லாதனுக்கு வந்து ஆவிர்ப்ப வித்து அபேக்ஷிதங்களைக்கொடுத்து, அவன்ராஜ்யாதிகளிலேபோது போக்கவல்லனுகையாலே அவன்பார்த்துக் கொடு நிற்கச் செய்தே "తత్రైవాంతరధీయత" "தத்ரைவாந்தரதீயத" என்றுபோக, பின்பு அந்தராஜ்யாதிகளாலே ப்ரஹ்லாதனும் போது போக்கி யிருந்தா னிறே; இவர் அவனைப்போலே யன்றிக்கே, அநந்யஸாதநராய் அந ந்ய ப்ரயோஜநரா யிருக்கையாலே, நம்விச்லேஷம்பொறுக்கவல்லவ ரல்லரென்று பார்த்தருளி, தம்முடைய ஸ்வரூபாதிகளைக் காட்ட இவரும் ப்ரீதரான வளவிலே இவர்மாநஸாநுஸந்தாநம்பண்ணுகிற

அ.—நிகமத்தில். இவ்வளவும் ஜ்ஞாநஸாக்ஷாத்காரம்; மேல் லோகஸாரங்க மஹாமுநிகள்தோளில்வந்துபுகுந்து விண்ணப்பஞ் செய்கிறார்; - பெரியபெருமாளழகைக்கண்ட கண்கள் மற்றொன் றினைக்காணாவென்கிறார்.

கொண்டல்வண்ணனைக்கோவலனாய்வெண்ணெய்
உண்டவாயனென்னுள்ளங்கவர்ந்தானை
அண்டர்கோனணியரங்கனென்னமுதினைக்
கண்டகண்கண்மற்றொன்றினைக்காணாவே. (கo)

ப-ரை.—கொண்டல் வண்ணனை - நீருண்டமேகம்போலே யிருக்கிற திருநிறத்தையுடையனாய், கோவலனாய் - இடைக்குலத்திலே வந்து திருவவதரித்து, வெண்ணெயுண்ட - வெண்ணெயையமுது செய்த, வாயன் - திருப்பவளத்தை யுடையனாய், என்னுள்ளம் கவர்ந்தானை - * சதிரிளமடவாரை மதித்துப் போந்த என்மநஸ்ஸை அபஹரித்தவனாய், அண்டர்கோன் - அண்டாந்தர்வர்த்திகளான ஆத்மவர்க்கத்துக்கு நிர்வாஹகனாய், அணி - ஸம்ஸாரத்துக்கு ஆபரணமான, அரங்கன் - கோயிலிலேவந்து கண்வளர்ந்தருளுமவனாய், என்னமுதினை - எனக்கு அம்ருதம்போலே பரமபோக்யனானவனை, கண்டகண்கள் - காணப்பெற்ற கண்களானவை, மற்றொன்றினைக்காணாவே - வேறொன்றைக்காணாவென்கிறார். (கo)

தசையிலே, "ஆதி" "விண்ணவர்கோன்" "நீதிவானவன்" "அரங்கத்தம்மான்" என்றும், "உலகமளந்தண்டமுற நிவர்ந்தநீண்முடியனன்று நேர்ந்த நிசாசரரைக் கவர்ந்தவெங்கணைக் காகுத்தன்" என்றும், "விரையார்பொழில்வேங்கடவன்" என்றாப்போலே தம்முடைய பரவ்யூஹவிபவார்ச்சாவதாரங்களையும் தம்பக்கலிலேயநுஸந்திக்கையாலே இவற்றைத்தனித்தனியே யநுபவிக்கவேணுமென்கிற அபேக்ஷை இவர்க்கில்லையென்கிறவிடம் ஹ்ருதயஸ்தனாய்க்கொண்டு,*உள்ளுவாருள்ளிற்றெல்லாமுடனிருந்தறியாநிற்கச்செய்தேயும்இவரைச்சோதிக்கைக்காக இவற்றையும இவர்க்குத் தனித்தனியேகாட்டி இவரநுபவிக்கும்படிபண்ணுவோமென்று பார்த்தருளி, அது செய்யுமிடத்து புருஷார்த்தமாகவேண்டுகையாலே இவருடைய வபேக்ஷை யறிந்து செய்யவேணும், இல்லையாகில் இவர் நாமத்தை ப்ரகாசிப்பிக்கக்கொள்ள, "ஏரார்முயல்விட்டுக் காக்கைப்பின் போவதே" என்னும் திருமங்கை யாழ்வாரைப்போலே நிந்தித்தல், ஸ்ரீதொண்டரடிப் பொடியாழ்வாரைப்போலே, "அச்சுவைபெறினும் வேண்டேன்" என்று காற்கடைக் கொள்ளுதல் செய்வரோ, அறியவேணுமென்று தந்திருவுள்ளத்திலே முன்னோரடிக்கொண்டத்தை யறிந்து,இவர்,கடலிலே குளப்படி யுண்டாமாப்போலே "பூர்ணம்" "பூர்ணம்" என்கிறபடியே பெரியபெருமாள்பாடே எல்லாமில்லையோ, ஆனபின்பு எனக்குப் பெரியபெருமானையொழிய வேறொருவரை யநுபவிக்க ச்ரத்தையில்லை, எனக்குண்டானாலும் அவரையநுபவித்தவென் கண்கள்மற்றொன்றினைக் காணாவேயென்கிறார்.

வ்யா.—(கொண்டல்வண்ணனை) தாபத்ரயத்தாலேவிடாய்த்த தம்விடாய்தீரும்படியாய், “అద్రౌశయాఞ్జరివశీతళకాళమేఘః” “அத்ரௌசயாஞரிவசீதளகாளமேகஃ” என்கிறபடியேவர்ஷோந்முகமான காளமேகம்போலேயிருக்கிற திருநிறத்தையுடையவன். பன்னீர்க்குப்பிபோலே உள்ளுள்ளவையெல்லாம்புறம்பேநிழலிட்டபடி.

(கோவலனாய் வெண்ணெயுண்டவாயன்) இடையனாய் வெண்ணெயுண்ட திருப்பவளத்தையுடையவன். சக்ரவர்த்தித் திருமகனாகில் வெண்ணெயுண்ணவொட்டார்களென்று கருத்து. (கோவலனாய்) ஆபிஜாத்யம் பெருமானுக்கு; கட்டுண்பது அடியுண்பதாகக் கிடைக்குமோ.

---

வ்யா.—(கொண்டல்வண்ணனை) கண்களுக்கு விஷய மிருந்தபடி. “నమాంసచక్షురభివీక్షితేతమ్” “నచక్షుషాపశ్యతికశ్చనైనమ్” “நமாம்ஸசக்ஷுராபிவீக்ஷதேதம்” “நசக்ஷுஷாபஶ்யதிகஶ்சநைநம்” என்கிற இலச்சினையை யழித்துத் தன் வடிவைக் காணும்படி பண்ணின உபகாரத்தை யநுஸந்தித்துச் சொல்லுகிறார். அங்ஙனன்றிக்கே, தம்முடைய பரவ்யூஹவிபவார்ச்சாவதாரங்களை இவரையநுபவிப்பிப்பதாகத் திருவுள்ளத்திலே பாரிக்கிறபடியை யநுஸந்தித்து இதென்ன வௌதார்யமென்று அந்த ஔதார்யகுணத்தை நினைத்து “கொண்டல் வண்ணன்” என்கிறார். அன்றிக்கே, ஸாம்ஸாரிகமான தாபத்ரயத்தாலே விடாய்த்தவிடாய் தீரும்படியாய், “అద్రౌశయాఞ్జరివశీతళకాళమేఘః” “அத்ரௌசயாஞரிவ சீதளகாளமேகஃ” என்கிறபடியே வர்ஷோந்முகமானகாளமேகம்போலேயிருக்கிறநிறத்தையுடையவனென்கிறாராதல், ச்ரமஹரமானவடிவைநினைத்து, “கொண்டல்வண்ணன்” என்கிறாராதல். “வண்ணம்” என்று—ஸ்வபாவமாதல்; நிறமாதல். நம்மாழ்வாரும், “முகில்வண்ணனடியையடைந்தருள்சூடி யுய்ந்தவன்” என்றாரிறே.

(கோவலனாய் வெண்ணெயுண்டவாயன்) அந்தமேகமானால் ஆகாசத்தே கடக்கநின்று நீரைவர்ஷித்துப்போமித்தனையிறே; அங்ஙனன்றிக்கே இடையரோடு இடைச்சியரோடுவாசியற ஒருநீராகக் கலந்து தன்வடிவழகை அவர்களுக்கு ஸர்வஸ்வதாநம் பண்ணினபடி. (கோவலனாய் வெண்ணெயுண்டவாயன்) பராவஸ்தனாய்வந்து வெண்ணெ யமுதுசெய்யில் மாளிகைச்சாந்துநாறுமே, சக்ரவர்த்தித் திருமகனாய்வந் தவதரித்த வவஸ்தையில் மேன்மையாலே ராஜாவாக்கிச்சிலர் சீராட்டுகையாலே, வந்துவெண்ணெய்களவு காணவொண்ணாதே, அதுக்காக (கோவலனாய் வெண்ணெயுண்டவாயன்) சக்ரவர்த்தி, தன்னுடைய ராஜைச்வர்யத்தைபுஜிக்கைக்கு “எனக்கொருபிள்ளைவேணும்” என்று, “మహతాతపసా-மஹ தாதபஸா” என்கிறபடியேநோற்றுப்பெருமாளைப்பெற்றாப்போலே ஸ்ரீநந்தகோபரும் “காணாயர்கடிமனையிற்றயிருண்டு நெய்பருகநந்தன்பெற்ற வானாயன்” என்கிறபடியே திருவாய்ப்பாடியில்கவ்யஸம்ருத்தியடையப் பாழ்போகவொண்ணாதென்று இத்தைபுஜிக்கைக்காக நோன்புநோற்றுப் பெற்றபிள்ளையாய்த்து க்ருஷ்ணன்.

(வெண்ணெயுண்டவாயன்) களவு கண்டு ஒளித்துவந்துகிடக்கிறவன். பெரியபெருமாள்கொறுட்டை மோர்ந்துபார்த்தால் இப்போதும் வெண்ணெய் நாறாநிற்கும்.

(என்னுள்ளங்கவர்ந்தானை) என்னெஞ்சை அபஹரித்தவனை. கோவலனாய் வெண்ணெயுண்டாப்போலேகொண்டல்வண்ணனாய் என்னுள்ளங் கவர்ந்தவனை. யசோதைப்பிராட்டியுடைய வெண்ணெயிலே பண்ணினச்ரத்தை என்னெஞ்சிலே பண்ணி புஜித்தவனை. குறியழியாதிருக்க வெண்ணெய்குடிபோனாப்போலேயாய்த்து இருவருடம்பிருக்க அகவாய் குடிபோனபடி.

---

(வெண்ணெயுண்டவாயன்)பெரியபெருமாள்கொறுட்டைமோந்துபார்த்தால்இப்போதும்வெண்ணெய்நாறாநிற்கும். (வெண்ணெயுண்டவாயன்) ஆச்ரிதருடைமையாகையாலே தத்ஸ்பர்சமாகாதென்றுஇன்றுமகப்பட அந்தக்குணுங்குநாற்றம் வாயிலேதோன்றும்படியிறே பெரியபெருமாள் கண்வளர்ந்தருளுவது. "கருப்பூரம் நாறுமோ கமலப்பூநாறுமோ" என்று ஸந்தேஹிக்கவேண்டாதபடியாய்த்து இன்றுமகப்பட வாய்குணுங்கு நாறும்படி.

(வெண்ணெயுண்டவாயனென்னுள்ளங்கவர்ந்தானை) கோவலனாய்வெண்ணெயுண்டாப்போலேகொண்டல்வண்ணனாயென்னுள்ளங்கவர்ந்தவனை. யசோதைப்பிராட்டியுடையநெஞ்சிலே பண்ணின ச்ரத்தையை என்னெஞ்சிலேபண்ணி புஜித்தவனை. அந்தத் திருவாய்ப்பாடியிற்பெண்கள் உறிகளிலே வெண்ணெயைவைத்துக் கள்ளக்கயிறுருவிப்பிட்டு வைத்துப்போவர்கள், அந்த உறிகளின் குறியழியாதிருக்க அந்தவெண்ணெய்களை வெறுந்தரையாக்கினாப் போலே யாய்த்து, * அரங்கந்தன்னுட்கள்வனார், நான்குறியழியாதிருக்க என்னுடைய சிந்தையையபஹரித்தபடி. (என்னுள்ளங் கவர்ந்தானை) வைத்த குறியழியாதிருக்க * வெண்ணெய் விழுங்கி வெறுங்கலமாக்கினாப்போலே, என்னுடைய சரீரங்குறியழியா திருக்க என்னுடைய மநஸ்ஸை அபஹரித்தான். கலமிருக்க வெண்ணெய் குடிபோனாப்போலே யாய்தது இவருடம்பிருக்க அகவாய் குடிபோனபடி. (என்னுள்ளங்கவர்ந்தானை) * దైవీంసమ్పదభిజాత - தைவீம்ஸம்பதமபிஜாதரான பெரியவர்களகப்படத் தந்தாமுடைய மநஸ்ஸை இவன்பக்கலிலே வைக்கவேணுமென்று பார்த்து, அதுசெய்யப்போகாமல், "చఞ్చలంహిమనఃకృష్ణ" "சஞ்சலம் ஹிமநக்ருஷ்ண" என்றாப்போலே - பெருங்காற்றைத் தாம்பிட்டுப் பிடிக்கலாம், என் மநஸ்ஸை யொருவளவாக்கப்போகிற தில்லையென்னும்படியிறே மநஸ்ஸினுடைய சஞ்சலத்வம். திமிறும்படியான மிடுக்கும் அப்படி * நின்றவா நில்லாதமநஸ்ஸை என்பக்கல் அபேக்ஷையின்றிக்கே யிருக்க நானும் அறியாதபடி அபஹரித்துத் தன் பக்கலிலே சேர்த்துக்கொண்டான்.

(அண்டர்கோன்)திருவாய்ப்பாடியிடைக்குலத்துக்கு நிர்வாஹகனென்னுதல்; அண்டாந்தர்வர்த்திகளான ஆத்மவர்க்கத்துக்கு நிர்வாஹகனென்னுதல்.(அணியரங்கனென்னமுதினை)தேவர்களுடைய் உப்புச்சாறுபோலன்று இவருடையவம்ர்தம்.

(என்னமுதினை) ப்ரஹ்மாதிகளுக்குச்சாகாமல்காக்குமம்ர்தமாயிருக்கும். (கண்டகண்கள்) சுவையறிந்த கண்கள். ச்ரவணேந்த்ரியமாத்ரமன்றியே விடாய்தீரக்கண்ட கண்கள்.

(மற்றொன்றினைக் காணாவே) * ஶ்ரீஶாஸ்த்ரஶ்ரேஷ்டம் - பாவோநாந்யத்ரகச்சதிபோலே கண்களுக்குப் பச்சையிட்டாலும் வேறொரு அர்ச்சாவதாரம் அவதார விசேஷம் இவற்றை இப்படி விரும்பி போக்யமென்று கருதாது, காட்சியொழிய வேறொருபலம் சொல்லாவிட்டதும் பலமும்காட்சியேயாகையாலே. முக்தப்ராப்யமென்றஒருதேசவிசேஷத்திலே போனாலும் * ஸதாபஶ்யந்திறே.

---

(அண்டர்கோன்)இப்படி இடையரோடுமிடைச்சிகளோடும் அவர்களிலும் தண்ணியரான வும்மோடும்வாசியற வந்து கலந்து வெண்ணெயையும்மநஸ்ஸையும் அவன்களவுகண்டது,புறம்பு ஆளில்லாமையாலும் தன்குறையாலுமோவென்ன; * சூட்டுநன்மாலைகள் தூயனவேந்திவிண்ணோர்கள் நன்னீராட்டி யந்தூபந்தரா நிற்கச்செய்தேகிடீர் ஈட்டியவெண்ணெய் தொடுவுண்ணப்போந்தவதரித்ததென்கிறார். அன்றியிலே, "அண்டர்" என்று - இடையனென்னுதல்;அண்டாந்தர்வர்த்திகளென்னுதல்.(அணியரங்கன்) என்னெஞ்சை அபஹரித்து * சேணுயர்வானத்திலே போயிருக்கையன்றிக்கே, கண்ணிட்டுக் காணலாம்படி ஸம்ஸாரத்துக்கு ஆபரணமான கோயிலிலேவந்து கண்வளர்ந்தருளுகிறவன். ஸம்ஸாரிகளறவைத்தனப் படாதபடியாலே யிறே இக்கிடைகிடக்கிறது. (அணியரங்கனென்னமுதினை) தேவர்களம்ர்தம்போலே உப்புச்சாறுயிட்டாகிலத்திலேயிருக்குமதன்றிறே இவருடையவம்ர்தம்.

(அண்டர்கோனணியரங்கனென்னமுதினை) "அளப்பரியவாரமுதை யரங்கமேயவந்தணனை" என்கிறவம்ர்தமிறே. (அமுதினைக்கண்டகண்கள்) இந்தக்கண்கள் இவனைக்காணுதொழியப்பெற்றதாகிலும் புறம்பேபோகலாய்த்து, காட்சிதான் அரைவயிறாய்த்ததாகிலும் புறம்புபோகலாய்த்து, அங்ஙனன்றிக்கே, பூர்ணாநுபவம் பண்ணினகண்கள்.

(கண்டகண்கள் மற்றொன்றினைக்காணாவே) அம்ர்தபானம் பண்ணினாரைப்பாலையுஞ் சோற்றையுந் தீற்றப்போமோ. (மற்றொன்றினைக்காணாவே) * ஶ்ரீஶாஸ்த்ரஶ்ரேஷ்டம் - பாவோநாந்யத்ரகச்சதிபோலே இந்தப்பெரியபெருமாள் தம்மை கேசாதிபாதாந்தமாகவநுபவிக்கவேணுமென்று பார்த்தாலும்சக்தனன்று.

---

பச்சையிடுகை - இவனையொழிந்தவர்கள் ஸ்வஸ்வ குணங்களைக்காட்டி வசீகரிக்கப் பார்த்தாலு மென்றபடி.

தம்மைச் சொல்லுதல்;, பாட்டுக்கு ஸங்க்யை யசொலலுதல. செய்யில் அக்கரைமேலே யிருக்கிறஅல்லர்தஆழ்வார்களோடொப் பர். * அஸ்தமிதாந்யபாவ - அஸ்தமிதாந்ய பாவமாம்படி அழகிலே யீடு பட்டுத் தம்மை மறந்தார். "நோபஜநம் ஸ்மரந்நிதம் சரீரம்" "நோபஜநம் ஸ்மரந்நிதம் சரீரம்"என்கிறபடியே முக்தப்ராப்யமான புருஷார்த் தத்தை அநுபவித்தாரென்கையாலே எல்லாம் அவன்சொல்லே யாய்விட்டது. 45690

இப்பாட்டில் - கர்த்தனுடைய படியும் இங்கே யுண்டென் கிறார். ... ... ... ... (க0)

அடி வரவு - அமலனு வந்த மந்தி சதிரம் பாரம் துண்டம் ரண்டல் கண்ணி.

வாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

ள்ளங்கவர்ந்தான்" என்கையாலே - சித்தாபஹாரம் படியைச்சொன்னார்; "கண்டகண்கள் மற்றொன்றினைக் என்கையாலே - த்ருஷ்டயாபஹாரம் பண்ணினபடி சொல்லுகிறார். அல்லாதார்திருநாமப்பாட்டுப்போலே தம் மைச் சொல்லிற்றிலர்; "விஸ்மாரதாத்மாநம்" "விஸ்மாரததாத்மாம்" எனகிறபடியேதாம் போகப்ரவணராய் தம்மைமறக்கையா லே,பலம * ஸதாபச்யந்தி யாகையாலே அது இங்கே ஸித்திக்கை யாலே பலத்துக்கு பலம் வேணுமோவென்றுசொல்லிற்றிலர், இந் தக்கண்கள் புறம்பேசிலவற்றைக் காணவேண்டுவது இங்கே சில குறையுண்டாகிலன்றோ.

இவர்பக்கல் ஔதார்யமில்லையென்று போகவோ, வடிவிற் பசையில்லையென்று போகவோ, ஸௌசீல்யமில்லை யென்று போ கவோ, நெஞ்சுக்குப்பிடித்திருந்ததில்லையென்று போகவோ, மேன் மையில்லை யென்று போகவோ, ஸௌலப்ய மில்லையென்று போக வோ, போக்யதையில்லையென்று போகவோ, அநுபவத்திற் குறை யுண்டென்று போகவோ. ... ... .. . (க0)

அழகியமணவாளப்பெருமாள்நாயனாருளிச்செய்த

அமலனாதிபிரான் வ்யாக்யாநம்

ஸம்பூர்ணம்.

---

ஸங்க்யை சொல்லாமைக்கு ஹேதுவருளிச்செய்கிறார் (நோப ஜநம் - நோபஜநமித்யாதி.) ... ... ... (க0)